இங்கிலாந்து தேசத்து வியாபாரிகள் பலமான கூட்டுறவு சங்கங்கள் ஏற்படுத்தினார்கள். கிழக்குக் கண்டங்களில் பெருத்த வியாபாரஞ் செய்ய ஆரம்பித்தனர். அப்படிச் செய்த சங்கங்களில் 1599-ம் வருஷத்தில் எலிஜபெத் மஹாராணியிடம் பட்டயம் வாங்கி, நமது இந்திய தேசத்தில் ஏக தேச பாத்தியத்தோடு வியாபாரம் செய்யத் தொடங்கின ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் முக்கியஸ்தரானார்கள். வியாபாரத்திற்காகப் பூர்வீக ஹிந்து, மஹம்மதிய அரசர்களிடம் கம்பெனியார் இடங்கள் கேட்டு வாங்கி, அவைகளைக் காப்பதற்குக் கோட்டைகள் கட்டித் துருப்புகள் வைத்து, தங்கள் லாபத்தைப் பெருக்கி வந்தார்கள். அக்காலத்தில் இந்நாடு சீர்கெட்டிருந்த ஸ்திதியையும், அங்கங்கே துணிவுடன் புகுந்து பலத்திலும், ஆண்மையுள்ள பரிவாரத்திலும் சிற்சிறிய அரசுகளை ஸ்தாபித்துக்கொண்ட தலைவர்களையும் நோக்கி, கம்பெனியாரின் முக்கிய அதிகாரிகள் தங்கள் கம்பெனியாருக்கும் அம்மாதிரி ராஜாங்கங்கள் இந்திய தேசத்தில் ஸ்தாபித்துக் கொள்ளுவது தகுமென்பதையும், ஸுலபமென்பதையும் வற்புறுத்தலானார்கள். அந்த மார்க்கத்திலேயே கொஞ்சங் கொஞ்சமாய்ச் சென்று, ஜில்லாக்களையும் மாகாணங்களையும் அவர்கள் கைவசப்படுத்தி வந்தார்கள். அவற்றின் ஆளுகையையும் கம்பெனியார் பார்த்துவந்த வழியில், பிரிட்டிஷ் தேசமன்னர்களும் அவர்கள் மந்திரிகளும் இங்கிலாந்தில் இந்த இந்தியா தேசத்தின் ஸ்திதியை கவனிக்கலானார்கள். 1767-ம் வருஷம் முதல், பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் பார்லிமெண்டு சபைமூலமாய், இனி தங்கள்மேல் பார்வைக்கும் அதிகாரத்திற்கும் உட்பட்டே கம்பெனியார் சகல நிர்வாகமும் நடத்திவர வேண்டுமென்ற நிர்ப்பந்தத்தையும் நாளடைவில் ஏற்படுத்திவிட்டார்கள். பிறகு இந்நாட்டிலிருந்த குழப்பத்தில், பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் ஒருவரே இப்பெரிய கண்டத்தில் அமைதியும் க்ஷேமமும் ஏற்படுத்தக் கூடியவர்களென்று அவர்கள் பிரதிநிதிகளாகிய கவர்னர் ஜெனரல்கள் வித்தாரஞ் செய்துகொண்டதால் இரண்டு மூன்று தலைமுறைக்குள் இந்தப் பரத கண்டம் முழுவதும் பிரிட்டிஷ் ராஜாங்கத்தாரின் நேர் ஆளுகையிலாவது அல்லது அவர்களுக்குட்பட்ட தேசிய ராஜாங்கத்தாருடைய ஆளுகையிலாவது உட்படுத்தப்பட்டு, தற்காலம் சுமார் இரண்டு தலைமுறைக்கு மேல் ஒருவித கலவரமும் குழப்பமும் இல்லாமல் அமைதியுடனும், முன்னேற்றத்துடனும் பிரிட்டிஷ் ராஜ்ய பரிபாலனத்தில் வாழ்ந்து வருகின்றது.

## பிரிட்டிஷாரின் ராஜீயக் கொள்கைகள்.

இந்த ராஜ்ய பரிபாலனத்தில், மேல்நாட்டு முறைப்படி ஏற்படவேண்டிய அங்கங்கள் பலவும் ஒவ்வொன்றாய் ஏற்பட்டு வந்திருக்கின்றன. அவற்றைப் படிப்படியாய் விவரித்துச் சொல்லுமுன், பிரிட்டிஷ் அரசியலின் ஸித்தாந்தம் பொதுவில் எவ்வாறுளதென்பதை முதலில் அறியவேண்டியது அவசியமாகிறது.

## சட்டங்களே பிரமாணம்.

பிரிட்டிஷ் ராஜாங்கத்திலும், பிரிட்டிஷ் ராஜ்யரீதியை அநுசரித்த வேறு பல மேல்நாட்டுத் தேசங்களிலும், ராஜ்ய நிர்வாஹத்தில் மேலான அதிகாரம், சட்டங்களை விதிக்கப் பாத்தியமுள்ள சபைகளிடத்தில் வைக்கப்பட்டுள்ளது. அச்சபைகளால் விதிக்கப்படும் சட்டங்களுக்கு, மகுடாபிஷேகம் பெற்ற அரசர் ஒருவர் தவிர, மற்றும் அவர் குடும்பத்தினர் அவர் மந்திரிகள் உள்பட யாவரும் கீழ்ப்படிந்து, அவற்றில் கட்டளையிட்டபடி நடந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆகையினால், ராஜாவின் மந்திரிகள் சட்டசபையின் விதிகளை மீறி நடப்பார்களாகில், அவர்கள் பேரில் வியாஜ்யம் தொடர்ந்து, ராஜ

வால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் கோர்ட்டுகளில் யாரும் பரிஹாரம் தேடிக் கொள்ளலாம். கோர்ட்டிலுள்ள நியாயாதிபதிகள் சட்டங்களை யார் பேரிலும் பாரபக்ஷமன்னியில் நிறைவேற்றும்பொருட்டு அவர்களை நியமித்த பிறகு அரசருங்கூட சட்ட சபையின் சம்மத மன்னியில் வேலையை விட்டு அவர்களை நீக்க முடியாமல் செய்திருக்கிறார்கள். ஆதலின், ராஜ்யத்தில் சட்டங்களே எல்லாக் காரியங்களுக்கும் பிரமாணம் என்பது முதன்மையான பிரிட்டிஷ் ராஜ்ய சித்தாந்தமாகும்.

### ஜனப்பிரதிநிதிகளைக் கொண்டே வரி விதிக்கவேண்டும்.

இரண்டாவது சித்தாந்தம் யாதெனில், ராஜாவின் மந்திரிகள் ராஜ்ய நிர்வாஹத்தைச் சட்டத்துக் குட்பட்டு உசிதப்படி தாங்கள் நடத்த அதிகாரம் பெற்றிருந்தபோதிலும், ராஜ்ய நிர்வாகத்தை நடத்துவதற்கு முதல் சாதனமாகிய திரவியம் சேகரிப்பதில் ஜனங்கள் சம்மதம் வேண்டுமென்பது. அதில்லாமல், வரி வசூலிக்கக்கூடாது என்பதும், அவர்கள் சம்மதத்தை அவர்களுடைய பிரதிநிதிகள் மூலமாய் அறிய வேண்டுமென்பதும் புராதனமாய் ஏற்பட்ட சித்தாந்தமாக இருக்கிறது.

### நியாய ஸ்தலங்களில் பரிஹாரம் கிடைக்கவேண்டும்.

மூன்றாவது சித்தாந்த மென்னவென்றால், ராஜ்யத்தில் பிரஜைகள் ஒவ்வொருவருக்கும் சட்டமே பிரமாணமென்னும் விதியால் ஏற்படும் பாத்தியங்களுக்கு நியாய ஸ்தலத்தில் பரிஹாரம் அடையலாம் என்பது. ஒவ்வொரு பாத்தியத்திற்கும் பரிஹார முண்டென்பதும், பரிஹாரமில்லாத விடத்தில் பாத்தியமுமில்லை யென்பதும் பிரிட்டிஷ் ஏற்பாட்டின் முக்கிய கருத்துகளில் ஒன்று.

### ஜனங்களின் சுதந்திரங்கள்.

அப்படிப்பட்ட பாத்யங்களுள் ஒவ்வொரு பிரஜையின் தேக ஸ்வதந்திரமும், சொத்துக்களின் ஸ்வதந்திரமும் முதன்மையானவை. ஆனதினால் ஒரு மனுஷ்யனுடைய சரீரஸ்வாதீனத்தைச் சட்டத்தின் மூலமாய் நியாயஸ்தலத்தில் குற்றஞ் சுமத்தித் தண்டனைக்கு உள்ளாக்கினாலொழிய, மற்ற எவ்வழியாலும் எவராலும் குறைக்கவோ, பாதிக்கவோ கூடாதென்பதும், அப்படிச் செய்வது குற்றமாகுமென்பதும், அப்படிச் செய்யாமலிருக்கும்படி நியாயாதிபதிகள், அதிகாரியையோ, சாமானியனையோ, எவனையும் தங்கள் முன்பாக வரவழைத்துத் தடுத்துவிடக் கூடுமென்பதும்—பிரிட்டிஷ் ராஜாங்கத்தில் சாதாரணமாய் அனுஷ்டானத்திலிருக்கும் முறைமையாயிருக்கிறது.

எந்த ஜனங்கள் சட்டத்தை மீறித் தண்டனைக் குள்ளாக்கிக் கொள்ளுகிறார்களோ அவர்கள் செய்த குற்றத்தை நியாய ஸ்தலத்தில் அவர்கள் போன்ற பொது ஜனங்களின் ஜூரிகளைக்கொண்டு விசாரித்து நிர்ணயிக்க வேண்டுமென்பது இத்துடன்கூட அனுசரிக்கப்படும் ஆதி விதியாகும். அதே மாதிரி ஒவ்வொரு பிரஜையின் சொத்துக்களையோ ஒப்பந்தங்களையோ சட்டத்திற்கு விரோதமாகவாவது, அதிகார பலத்தினாலாவது, பலாத்காரமாயாவது, மோசமாகவாவது, எவராகிலும் குறைத்துவிடும் பக்ஷத்தில் அதற்கு நியாய ஸ்தலங்களில் பரிஹாரம் கொடுக்கப்படும்.

### இந்தியாவுக்குக் கொடுத்திருக்கும் சுதந்திரங்கள்.

மேற் சொல்லிய இந்த மூன்று சித்தாந்தங்களும் பலவாறாக ஜனங்களின் ஸ்வதந்திரத்திற்கும், ஸ்வய ஆக்ஷிக்கும் மூலகாரணங்களாக நின்று, இங்கிலாந்திலும், மற்றும் இங்கிலாந்திலிருந்து போன ஜனங்களின் குடியேற்ற நாடுகளிலும், ஸ்வராஜ்ய ஸ்தாபனங்கள்

வென்மேலும் விருத்திக்கு வரும்படியான ஸ்திதியை உண்டுபண்ணி வைக்கின்றன. இந்தியாவில் பிரிட்டிஷ் ஜனங்கள் செய்திருக்கும் நிர்வாஹ ஏற்பாடுகள் எப்படி இந்த சித்தாந்தங்களை அனுஸரித்திருக்கின்றன வென்பதும், எதுவரையில் ஸ்வராஜ்ய ஸ்தாபனங்களுக்கு இடம் கொடுக்கின்றன வென்பதும் கவனிக்கத்தக்கதாகும்.

### சட்டங்களின் பிரமாணம்.

சட்டங்களே பிரமாணமென்னும் விதி இந்தியாவிலும் உள்ளது என்று சொல்லலாம். ஆனால், ஒன்றிரண்டு முக்கிய விஷயங்களில் அதை அனுசரித்து வருவதாகச் சொல்லக் கூடவில்லை. நிலத்தீர்வை வசூலிப்பதில் இந்தியாவின் புராதன வழக்கத்தைச் சட்டபன்னியில் அனுசரிப்பதாகச் சொல்லப்படுகிறது. ராஜ்யக் குழப்பத்தை முன்னிட்டுச் சிற்சில வேளைகளில் குறிப்பிட்ட மனுஷ்யர்களை விசாரணையன்னியில் காவலில் வைக்கலாமென்ற சட்டமும் இருக்கிறது. என்றாலும், நிர்வாக அதிகாரத்திற்கு மேற்பட்ட அதிகாரம் நியாய ஸ்தலங்களுக்கு உண்டென்பதும், நியாயாதிபதிகள் சட்ட சபைகளால் விதிக்கப்படும் சட்டங்களை நிராக்ஷேபணையாய் நிறைவேற்ற வேண்டுமென்பதும் இந்தியாவிலும் ஏற்படுத்தப்பட்ட சித்தாந்தங்களென்று அறிவது அவசியமாகும்.

### வரி விதிக்கும் சுதந்திரமில்லை.

மேற் சொல்லியுள்ள இரண்டாவது சித்தாந்தமோ இந்தியா தேசத்தில் அனுஷ்டானத்திலிருப்பதென்று சொல்லுவதற்கில்லை. வரிவிதிப்பதிலும், வசூலிப்பதிலும், செலவுசெய்வதிலும், ஜனங்கள் சம்மதத்தை ராஜாங்கத்தார் பெறவேண்டுமென்னும் விதி இந்தியாவில் இன்னும் அனுஷ்டிக்கப்படவில்லை. ஆனால் பிரிட்டிஷ் தேசத்தார் அனுபோகத்தில் இந்தக் கோட்பாட்டையும் மற்ற இரண்டுடன் சேர்ந்து அனுஷ்டித்து வந்ததினால்தான் அவர்களுக்குப் பலவிடங்களிலும் சுயஆட்சி சித்தித்ததென்று சரித்திரங்கள் மூலமாய் விளங்குகின்றது. இந்த வரி விதிக்கும் கோட்பாடு இந்தியாவில் அனுஷ்டானமில்லாமையால்தான், இந்த தேசத்து அரசாங்கம் தற்போது சுய ஆட்சி உற்றதல்லவென்றும், சுய ஆட்சி கிடைப்பதற்கு, வரி விதிக்கும் அதிகாரமே அவசியமென்றும் தேச பக்தர்களில் பெரும்பாலோர் கொண்ட அபிப்பிராயமாகும்.

ஆனால், இதன்றியில் நாளடைவில் ஜனங்களின் பிரதிநிதிகளுக்குப் பலவிடங்களிலும் பல பொது வேலைகளிலும் அதிகாரமும் அந்தஸ்தும் ராஜாங்கத்தார் கொடுத்துவந்திருப்பது முடிவில் ஸ்வராஜ்யத்தை நிர்வஹிப்பதற்குச் சரியான பழக்கத்தை உண்டாக்கக் கூடும். ஆதலால், நமது ராஜ்ய நிர்வாகத்தின் அங்கங்களைக் கவனிக்கும்போது அவைகளில் ஜனப்பிரதிநிதிகளின் ஸம்பந்தம் எந்தமட்டிலும், எவ்விதமாயும் இருக்கிறதென்பதையும் நாம் கூடவே கவனிப்பது அவசியமாகும்.

### பார்லிமெண்ட் ஸபையும், நிர்வாஹ அதிகாரமும்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் ஐந்து கண்டங்களிலிருக்கும் எல்லா ப்ரதேசங்களுக்கும் பிரிட்டிஷ் சக்கரவர்த்தி அதிபதியாவர். ஆனால், அவர் தம் ஆதிபத்தியத்தைப் பிரபுக்கள், சாமான்யர்கள் என்ற இரு கூட்டத்தாரும் அடங்கிய பார்லிமெண்ட், மஹா சபையின் யோசனையையும், சம்மதத்தையுங் கொண்டே நடத்தக் கடமைப் பட்டவரென்பது பிரிட்டிஷ் அரசாக்ஷி முறையில் நீடூழி காலமாக ஏற்பட்ட அரசியல். அப்படி பார்லிமெண்ட் சபையால் சொல்லப்படும் யோசனைகள் அரசருடைய அனுமதியைப் பெற்றவுடன் யாவரையும் கட்டுப் படுத்தக்கூடிய சட்டங்களாய் விடுகின்றன. இந்த அரசரின் அனுமதி வெகுகாலமாய் மரியாதைக்

கிரமத்தில் கொடுத்து வரப்படுகிறதேயொழிய, பார்லிமெண்ட் மஹாசபை மூலமாய் வெளியான ஜனங்களின் அபிப்பிராயத்திற்கு விரோதமாய் உபயோகப்படுத்தப்பட்டு வெகு நூற்றாண்டுகள் ஆய்விட்டன. சட்டம் விதிக்கும் அதிகாரமே எல்லாவற்றிற்கும் பிரமாணமாயிருப்பதால், அரசருடன் இம்மாதிரி சம்பந்தப்பட்ட பார்லிமெண்ட் மஹா சபையின் அதிகார வலிமை பிரிட்டிஷ் ஏகாதிபத்ய தேசங்களிலெங்கும் நிராக்ஷேபணையாய்ச் செல்லத்தக்கது. பிரிட்டிஷ் சட்ட சித்தாந்தங்களின்படி பார்லிமெண்ட் மஹாசபை செலுத்தக்கூடாத அதிகாரம் ஒன்றுமில்லை. ஒரு பிறநாட்டு ராஜ்ய மந்திரி சொல்லியிருப்பதுபோல், பிரிட்டிஷ் பார்லிமெண்ட் ஸபை ஆணைப் பெண்ணாக்கவும், பெண்ணை ஆணாக்கவும் கூடாதேயொழிய மற்றெதையும் செய்யக்கூடும்.

### குடியேற்ற நாடுகளில் சுய ஆக்ஷி.

ஆனால், இப்படிப்பட்ட நிகரில்லா அதிகாரத்தை பார்லிமெண்ட் ஸபை பெற்றிருந்தபோதிலும், அந்த அதிகாரம் பிரிட்டன், ஐர்லாந்து தேசங்களாகிய யுனைடெட் கிங்க்டம் என்ற நாடுகளில் மாத்திரம் நேரில் நடத்தப்பட்டு வருகிறது. இந்தத் தீவுகளுக்கு வெளிப்பட்ட ஏராளமான பிரிட்டிஷ் பிரதேசங்களில் பார்லிமெண்ட் ஸபையின் அதிகாரம் அவர்களுக்குட்பட்ட பிரதிநிதிகள் மூலமாய் நடத்தப்பட்டு வருகின்றது. வளமையும், பலமும் அமைந்த முக்கியமான பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில், அவற்றின் ஜனங்கள் தாமே ஸ்வய ஆக்ஷி ஸ்தாபிப்பதற்கு முயற்சித்ததால், அதற்குப் பார்லிமெண்ட் சபையும் பிரிட்டிஷ் தேசத்தாரும் நாளடைவில் இடங்கொடுத்ததும், ஸ்வராஜ்யம் நடத்தக்கூடிய சிறு பார்லிமெண்டுகள் ஆங்காங்கு ஏற்பட்டுவிட்டன. இப்படியானதும், பிரிட்டிஷ் பார்லிமெண்ட் ஸபையின் அதிகாரத்தைச் செலுத்த இடமில்லாமல் போய்விட்டதுந்தவிர, அவைகளுக்கு விரோதமாய் சாதாரணமாய் செலுத்துவதில்லை என்ற அநுஷ்டானமும் ஏற்பட்டுவிட்டது.

மற்றக் குடியேற்ற நாடுகளிலும், இந்தியா போன்ற சார்பான நாடுகளிலும் பார்லிமெண்டின் அதிகாரம், அதின் மந்திரிகளால் நியமிக்கப்பட்டு அவர்கள் பரிசீலனையிலிருக்கும் உத்தியோகஸ்தர்களால், அவர்களுக்கு உதவியாயிருக்கும் சிற்சில பிரதிநிதிகளடங்கிய சட்டசபைகளுடன், நடத்தப்பட்டுவருகின்றது. பிரிட்டிஷ் வெளிநாடுகளின் நிர்வாக கிரமங்கள் பலவிதமாய் விஸ்தரித்திருப்பினும் மேற்சொல்லியபொது அங்கங்களைத் தரித்து வருகின்றனவென்பதை மட்டில் இப்போது அறிவது அவசியமாகும்.

### இந்தியா மந்திரியும் அவருடைய சபையும்

ஆதலின், இந்திய நிர்வாஹத்தில், பார்லிமெண்ட் மஹாஸபை நேராக ஆக்ஷி புரியும் அதிகாரத்தை வஹித்து வருவதே நம்முடைய ராஜாங்கத்தின் முதல் அங்கமாகக் கொள்ளவேண்டும். ஸ்வய ஆக்ஷி பெற்ற குடியேற்றநாடுகளுக்கும் இந்தியாவுக்குமுள்ள தாரதம்யம் இதுதான். பார்லிமெண்ட் ஸபையிலுள்ள இந்தியா மந்திரி இந்தியாவின் பரிபாலன விஷயமாய் எல்லா முக்யமான தீர்மானங்களையும் உத்தரவுகளையும் நேராகப் பிறப்பிவிக்கிறார். குடியேற்ற நாடுகளின் மந்திரியோ அந்தந்த நாடுகளில் ஏற்பட்டிருக்கும் ஸ்வய ஆக்ஷி ஸபைகளின் அபிப்பிராயங்களை மட்டும் பார்லிமெண்டிற்குத் தெரிவித்து அவர்களிடம் சற்றேறக்குறைய ஸமமான மரியாதையைப் பாவிக்கிறார். இப்படி இந்தியா மந்திரிக்கு நேரில் நடத்தும் நிர்வாஹத்தில் அநுபோகமும் ஆராய்ச்சியும் புகட்டும் வண்ணம் இந்தியா கௌன்ஸில் என்னும் ஒரு சிறு ஸபை அவருக்கு ஒத்தாசையாக ஏற்பட்டிருக்கிறது. இச்சபைக்குச் சொந்த அதிகாரம் ஒன்றுமில்லையாயினும், அவர்களுள் பெரும்பாலோர் இந்தியாவில் வெகு

நாள் காலங்கழித்ததை நக்கொண்டு அவர்கள் சொல்லும் வார்த்தைக்குத் தாக்ஷிண்யமுள்ள இந்தியா மந்திரி எவரும் இணங்கிவிடுவது ஸாதாரணம். இப்படி, இந்தியா மந்திரிக்குக் கௌன்ஸிலும் பார்லிமெண்ட் ஸபைக்கு நேராகச் செலுத்தும் அதிகாரமுமிருந்தும், இந்தியாவின் விஷயங்களும் குறைகளும் இங்கிலாந்தில் கவனம் அடைவதாக யாரும் சொல்லுவதற்கில்லை. நல்லரசாக்ஷியைவிட ஸ்வய அரசாக்ஷியே மேலென்று சொல்லப்படும் வாக்குக்கு இதுவே ஒரு நிதர்சனமாகும். தவிர, பிரிட்டிஷ் தேசத்தாரின் காரியங்கள் அவர்களுக்கே தலைக்குமேல் ஏற்பட்டிருக்க, உலகத்தில் ஐந்தில் ஒரு பங்கு ஜனங்களடங்கிய இந்தியா தேசத்தின் யோகக்ஷேமத்தை அவர்கள் எப்படி திருப்திகரத்துடன் கவனிக்கக்கூடும்? ஆகையால், இந்தியாவுக்கு நல்லரசாக்ஷி மூலமாய் முன்னேற்றம் ஏற்படுவதற்கு, இந்தியாவிலேயே ஏற்பட்டிருக்கும் நிர்வாஹ அங்கங்கள் சீர்திருத்தப்பட்டு அவைகளை ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களாக அமைத்துவிடுவதுதான் ஸரியான மார்க்கமென்றும், பிரிட்டிஷ் தேசத்திலுள்ள இந்தியா மந்திரியின் விசேஷ சக்தியினாலாவது, அவருக்குக்கொடுத்திருக்கும் சிறிய ஸபையின் விருத்தியினாலாவது முன்னேற்றம் ஏற்பட நியாயமில்லையென்றும் தேசபக்தர்கள் நம்புகிறார்கள். ஆகையால் இந்தியாவிலிருக்கும் ஸ்தாபனங்களையே நாம் முக்கியமாய் கவனிக்கவேண்டும்.

## இந்தியாவிலிருக்கும் ஸ்தாபனங்கள்.

இந்தியாவின் அரசாக்ஷிக்காக விதித்திருக்கும் சட்டத்தின் 34-வது பிரிவின்படி, இந்தத் தேசத்தின் பாதுகாப்பையும் பரிபாலனத்தையும் சரிவர நடத்திக் கிரமமான மார்க்கத்தில் செலுத்தி, மேல் விசாரணை செய்து வரும் அதிகாரம் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் உள்பட அமைத்திருக்கும் நிர்வாஹ ஸபையினிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், அவரும் அந்த ஸபையும் மேற்சொல்லிய இந்தியா மந்திரியின் எல்லா உத்தரவிற்கும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும்.

## கவர்னர் ஜெனரல்.

இந்த கவர்னர் ஜெனரலென்னும் உத்தியோகம் நமது இந்திய ராஜாங்கத்தில் எல்லாவற்றிற்கும் மேலான அந்தஸ்துள்ள பதவியாகும். ஒரு விதம் நோக்குங்கால் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்திலேயே அதற்கு ஸமமான பதவி மற்றொன்றிருப்பதாகச் சொல்லுவதற்கில்லை. இந்த கவர்னர் ஜெனரல் இந்தியா தேசம் முழுவதிலும் சக்ரவர்த்தியின் ப்ரதிநிதியாயிருந்து ராஜ்ய தந்திரம் நடத்திவருகிறார். ஆனால் அவருடைய அதிகாரத்தை அவருக்கு ஏற்படுத்தியிருக்கும் ஸபை மூலமாய் நடத்திவரவேண்டுமென்பதே பிரிட்டிஷ் ஏற்பாட்டில் ஆதியாயிருக்கும் ஒழுங்கு. இப்படி ராஜ்யாதிகாரம் முழுதும் கவர்னர் ஜெனரல் நிர்வாஹ ஸபையின்கண் அடங்கியிருப்பதை ஏற்கனவே நாம் பகுத்துக் காட்டியபடி மூன்று விதமாக நடத்தப்படவேண்டியிருப்பதால், அவ்வதிகாரங்கள் படிப்படியாய் மூன்று விதமாக இந்த நிர்வாஹ ஸபையிலிருந்தே பிரிந்தனவென்று சொல்லவேண்டும்.

## நிர்வாஹப் பிரிவினை.

ஆதியில் கவர்னர் ஜெனரலின் நிர்வாஹ ஸபையே சட்ட நிர்மாண ஸபையாக ஏற்படுத்தப்பட்டது. தவிர, நியாய விசாரணைக்காக ஏற்படுத்தப்பட்ட நியாயாதிபதிகளும், கோர்ட்டுகளும் முதலில் இந்த நிர்வாஹ ஸபைக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகளாகவே நியாயம் செலுத்திவந்தார்கள். ஆனால், கிரமமான ஆக்ஷியை கம்பெனியார் தங்களுக்குட்பட்ட பிரதேசங்களுக்கு ஏற்படுத்திய சிறிது காலத்திற்குள், பிரிட்டிஷ் அரசர்களால் நேராக ஏற்படுத்தப்பட்ட கோர்ட்டுகளில் தான் தங்களு

க்கு நியாயம் கிடைக்க வேண்டுமென்ற பிரிட்டிஷாரின் எண்ணத்தைப் பூர்த்தி செய்வதற்காக நேராக ராஜதானிப்பட்டணங்களில் பிரிட்டிஷ் அரசரின் கோர்ட்டுகளை ஏற்படுத்தினார்கள். அவைகளே பிற்காலம் ஹைகோர்ட்டுகளாக விரிந்து தற்போது ஜனங்களுக்கு நியாயம் கொடுத்து வருகின்றன.

### சட்ட ஸபைகளின் நிர்மாணம்.

அதே மாதிரியாக, நிர்வாஹ அதிகாரத்திற்கும் சட்ட நிர்மாண அதிகாரத்திற்கும் பிரிவினை நாளடைவில் ஏற்பட்டது. வெகுகாலம் வரையில் இரண்டும் ஒன்றாக நடத்தப்பட்டு வந்தபோதிலும், பெரும்பாலும் நிர்வாஹ காரியங்கள் கவர்னர் ஜெனரல், கவர்னர்கள், இவர்களுடைய ஸபைகளுக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர்களாலேயே நடத்தப்பட்டு வந்தமையால், அந்த ஸபைகளால் ஏற்படுத்தப்பட்ட சட்டங்கள் நிர்வாஹ காரியங்களுக்குக் கூடிய மட்டில் ஸௌகர்யமுள்ள விதிகளாக இருந்து வந்தன. மேலும், இந்திய ஜனங்களுக்கு வெகுகாலம் வரையில் அவரவர்கள் மதாசாரப்படிக்குள்ள விதிகளைக் கோர்ட்டுகளில் நியாயாதிபதிகள் நிறைவேற்றி வந்ததாலும், இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் ஜனங்களுக்கு இங்கிலாந்தில் புராதனமாய் ஏற்பட்டுள்ள சட்டக் கோட்பாடுகளை அனுஸரித்து நியாயம் செலுத்தி வந்ததாலும், புதுச் சட்டங்களின் நிர்மாணம் குறைவாகவும், அவற்றின் அவசியம் அதிகமாக அழுந்தாமலும் இருந்து வந்தது. ராஜ்யம் விஸ்தரித்து, ஜனங்களும் விருத்தியடைந்தபோது, நியாயம் செலுத்துவதற்குச் சட்ட ஸித்தாந்தம் அவசியமானதென்று கருதி, நிர்வாஹ ஸபையில் சட்ட நிர்மாண அதிகாரத்தைப் பலப்படுத்தினார்கள். சட்ட நிர்மாணஞ்செய்யுங் காலத்தில், அதில் யோசனைக்காக மெம்பர்களையும் அதிகப்படுத்தி வரலானார்கள். அப்பால், மேல் நாட்டு முறைகளை அனுஸரித்து, ஜனங்களின் இஷ்டத்தையும் கவனித்து, இப்படிச்சட்ட நிர்மாணத்திற்காக விரிவாக்கப்பட்ட கவர்னர், கவர்னர் ஜனரல் இவர்களின் கௌன்ஸில் ஸபைகளில், ஜனங்களால் ஒருவாறு தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளையும் சேர்க்கலானார்கள்.

### நிர்வாக சபையும் சட்ட சபையும்.

இவ்வாறு, சட்ட ஸபைகள் விருத்தியடைந்து தற்போது சட்ட நிர்மாண விஷயத்தில் மேலான அதிகாரங்கள் பெற்றிருந்தபோதிலும், அவற்றில் நிர்வாஹ ஸபை மெம்பர்கள் தங்களுடைய அந்தஸ்தைக் கொண்டே மெம்பர்களாயிருக்கிறார்கள். தவிர, தாங்களும் அந்த ஸபைகளுக்குத் தங்களால் நியமிக்கப்படும் இதர உத்தியோகம் வஹித்த மெம்பர்களும் ஒன்று சேர்ந்து பிரதிநிதி மெம்பர்களுக்குத் தனியான எவ்வித செல்வாக்குமில்லாமல் செய்யக்கூடிய ஒழுங்குகளை ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். மேலும், சட்ட சபையில், சட்ட நிர்மாணத்தைத் தவிர மற்ற எந்த விஷயம் விவாதிக்கப்பட்டபோதிலும், பிரதிநிதி மெம்பர்களின் அபிப்பிராயங்கள் எவ்வளவு ஒற்றுமையாயிருந்தபோதிலும், கவர்ன்மெண்டாரை, நேராகவோ நிர்வாக ஸபை மூலமாகவோ, கட்டுப்படுத்த ஸாத்தியமில்லை. சட்ட நிர்மாண விஷயத்திலுங்கூட நிர்வாஹ அதிகாரம் பெற்ற கவர்ன்மெண்டார் அச்சபையில் தீர்மானிக்கப்படும் சட்டங்களை நிறுத்திவிட அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். ஆதலின், எல்லாவற்றிற்கும் மேலாயுள்ளதும் இந்தியா முழுமையும் செல்லத்தக்கதுமான சட்ட நிர்மாண அதிகாரம் அமைக்கப்பட்டிருந்தும், அதை கவர்னர் ஜெனரலும் நிர்வாஹ ஸபையும் யதார்த்தத்தில் சட்ட ஸபை மூலமாய்ச் செலுத்துகிறார்களே தவிர, அந்த ஸபையில் இருக்கும் ஜனப்பிரதிநிதிகள் செலுத்துவதில்லையென்று சிலர் சொல்லுகிறார்கள். இவர்கள் செய்யக்கூடியது யோசனைகள் சொல்வதும், ஆக்ஷேபணைகள் எடுத்துக் காட்டு

வதும், ஜனங்களுக்காக ஸமாசாரங்கள் அறிவதும், அறிவிப்பதுமே யல்லாமல், வாஸ்தவத்தில் இவர்கள் ராஜாங்கம் நடத்துவதில் பாகம் பெற்றுப் பொறுப்புடன் நடத்தக்கூடும் அதிகாரம் ஏற்றிருப்பதாகக் காணப்படவில்லை. என்றாலும், இந்த ஸ்வதந்திரங்கள் முன்னிருந்த ஸ்திதியைவிட மேலான ஸ்திதிக்கு மார்க்கமாவதால், அவற்றை லேசாக நினைப்பதும் பிசகாகும். ஆகையால், நிர்வாஹ அதிகாரத்திலேயே சட்ட நிர்மாண அதிகாரமும், முடிவில் லயப்பட்டு விடுவதால் ராஜப்ரதிநிதியும் அவர் ஸபையும் செலுத்தும் நிர்வாஹ அதிகாரங்கள் இன்னவையென்றும் இன்ன மாதிரியாக நடத்தப்படுகின்றன வென்றும் அடுத்தபடி விசாரிப்போம்.

### நிர்வாக சபையின் கோட்பாடுகள்.

முதன்மையாக ராஜப்ரதிநிதி, அவருடைய நிர்வாக ஸபை இவ்விருவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள், நமது தேசத்திற்கு வெளியிலிருந்து அபாயம் நேரிடாமலும், உள்ளிலும் ஜனங்களுக்கு துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் கிடைக்கும்படிக்கும் செய்வதற்கென்று ராஜாங்க அமைப்புச் சட்ட விதிகளில் கண்டிருக்கின்றன. ஆகையால், வெளி தேசத்து ராஜாக்களுடன் நடவடிக்கைகள் நடத்தும் அதிகாரமும், தேசத்தின் எல்லைகளைக் காக்கவும், உட்கலகமில்லாமல் தடுக்கவும் தயார்செய்யப்பட்டிருக்கும் ஸைன்ய ராணுவாதிகாரமும் ராஜப்ரதிநிதியினுடையதே. ஆனால், ராணுவாதிகாரத்தை ராஜப்ரதிநிதியின் ஸபையில் ஒரு மெம்பராகிய ஸேனாதிபதி ஸர்வ அங்கங்களுடன் நடத்திவருகிறார். அச்சபையின்மற்ற மெம்பர்களும் தனித்தனியே ராஜ்ய நிர்வாகத்திற்குள்ள பற்பல இலாகா வேலைகளையும் ஸபையின் பொது அதிகாரத்திற்குட்பட்டு நடத்தி வருகிறார்கள். முக்கியமான விஷயங்களில் எந்த இலாகாவிலும், முடிவான தீர்மானத்தை ஸபை கூடி ஆலோசித்துத் தான் செய்ய வேண்டும். சாதாரண விஷயங்களில மாமூலை யனுஸரித்துப் பொது நோக்கங்களுக்கும் நலத்திற்கும் தக்கபடி அந்தந்த இலாக்காத் தலைவர்கள் நேரே நடக்கவேண்டிய கார்யங்களை வழி காட்டி மேல் விசாரணை செய்துவருகிறார்கள். இப்படிப் பிரித்திருக்கும் இலாக்காக்களின் விபரங்கள் இரண்டாவது பாகத்தில் இந்திய ராஜ்ய ரீதியென்ற பகுதியின்கீழ் காணலாம்.

### ராஜப்பிரதிநிதியின் பொறுப்பு.

பொதுவில் ராஜப்ரதிநிதியும் அவர் ஸபையும் செலுத்தக்கூடிய அதிகாரமும் அவர்கள் ஏற்றிருக்கும் பொறுப்பும் மிகவும் ஏராளமானதென்பதில் ஸந்தேகமில்லை. அவற்றை "அதிகாரப்பிரிவினை கமிஷன்" என்ற விசாரணை சங்கத்தார் சில வருஷங்களுக்கு முன் அடியிற் கண்டவாறு எடுத்துரைத்திருக்கிறார்கள்.—

"இந்தியா கவர்ன்மெண்டின் பொறுப்பானது இங்கிலாந்தைவிட அதிகமானது. நிலவரும்படியின் ஒரு பாகத்தைக் கவர்ன்மெண்ட் தனக்கு அக்குள்ளதெனக் கொண்டு, வங்காளத்தின் ஸ்திர நிலத் தீர்வையைக் காப்பாற்றுகிறது. இன்னும் தனது பாகத்தின் ரொக்க பெருமானத்தைப் புனர்தீர்வை செய்யஅதிகாரஞ் செலுத்துகிறது. வருமானத்தீர்வை சம்பந்தமாக, நிலத்தின் சரியான ஸர்வேயையும் நிலத்தின் பாத்திய தஸ்தாவேஜியையும், வைத்துக்கொண்டிருக்கிறது நிலச்சுவான்தார்கள் தங்கள் நிலங்களை வாரத்திற்கு விடுபவர்களிடம் அதிகத் தொகையை வசூல் செய்யாதிருக்குமாறு கவர்ன்மெண்ட் விவசாயிகளைக் காப்பாற்ற முன் வருகிறது. மத்திய மாகாணத்தில் நிலச்சுவான்தார்கள் விவசாயிகளிடமிருந்து பெறும் வாரத்தில் ஒரு பகுதியை கவர்ன்மெண்டு பெற்றுவருகின்றது. பஞ்சாப் மாகாணத்தில் பயிரிடுபவர்களுக்கும் நிலங்களுக்குமுரியபாத்தியதை கூடுமானவரை நிர்ப்பந்தத்திலேயே வைக்கப்பட்டிருக்கிறது. நிலங்களின்சொந்தக்காரன் நிலங்களைத் தக்கமாதிரி ஆதீனப்படுத்திப் பரிபாலனஞ் செய்துவராமலிருந்தாலும், மைனர், ஸ்திரீகள், கடன்காரர்கள் முதலானோ

ரிடத்திலுள்ள நிலங்களை நிர்வகிக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளுகின்றது. பஞ்ச காலங்களில் பஞ்ச நிவாரணத்திற்காகப் பெருத்த வேலைகளைச்செய்ய முன் வருகின்றது. பெரிய காட்டையும், உப்பு, அபினித் தொழில்களையும் நடத்தி வருகின்றது. நாட்டின் பல விடங்களிலுள்ள ரெயில்வேக்களை மேல்பார்வையிட்டு நடத்தி வருகின்றது. நாட்டின்கண் நீர்ப் பாசனத்திற்குரிய அநேக வழிகளைச் செய்கிறது. தபால் தந்தி இலாகாக்களை நடத்தி வருகின்றது. நோட் செலாவணி பொறுப்பையும், நாணயச்சாலைகளையும் வேறொருவரின்றி தானே நடத்துகின்றது. மாகாண பாங்கிகளுக்கு அப்போதைக் கப்போது திரவியம் உதவுகிறது. இங்கிலாந்திலுள்ள மந்திரியுடன் கலந்து வியாபாரங்களைக் கவனிக்கின்றது. இந்தியாவுடன் வியாபாரஞ் செய்யும் அன்னிய நாடுகளின் வியாபாரங்களையுங் கவனிக்கின்றது. முனிசிபாலிடிகளுக்கும், கிராம போர்டுகளுக்கும் விவசாயிகளுக்கும் பண உதவி செய்கின்றது. சாராயக் கடைகளையும், அவைகளின் லைஸென்ஸ் முதலியவைகளையும் கொடுக்கும் பொறுப்பைப் பெற்றிருப்பதுடன் சாராய விற்பனைக்குரிய சகல காரியங்களின் அதிகாரங்களையும் வகித்திருக்கின்றது. கல்வி, சுகாதாரம், பொதுக் காரியங்கள், வைத்தியம் முதலிய விஷயங்களில் இங்கிலாந்தைவிட இந்தியாவில் அதிகப் பொறுப்புக்கு இடமுண்டு. இந்தியாவின் மூன்றில் 1-பங்கு விஸ்தீரணங் கொண்ட தேச சமஸ்தானங்களுடன் நெருங்கின பாத்தியதை கொண்டு பார்வையிட்டு வருகின்றது. 18,00,000 சதுர மைல் விஸ்தீரணங் கொண்ட நாட்டில் 30,00,00,000 ஜனத்தொகையையும், அவர்களின் கைத்தொழில் வியாபாரங்களையும், கல்வி சம்பந்தமான விஷயங்களையும் நானாவித பாஷைகளையும், நடையுடை பாவனைகளையுமறிந்து பரிபாலிப்பது மிகவும் பிரயாசையே.

### இந்தியா மந்திரியின் மேலதிகாரம்.

ஆனால், இப்படி அளவற்ற அதிகாரமும் பொறுப்பும் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு—ராஜப்பிரதிநிதியையும் அவருடைய ஸபையையும் சேர்த்து, "இந்தியா கவர்ன்மெண்டு" என்று சுருக்கமாய்ப் பெயரிடப்பட் டிருக்கிறது—இருந்தும், அவர்கள் பார்லிமெண்டின் சலுகைபெற்ற இந்தியாமந்திரிக்கு எவ்விதத்திலும் கீழ்ப்பட்டிருப்பதுந்தவிர, பலமுக்கிய விஷயங்களில்அவருடைய முன் அனுமதியைப் பெற்று நடவடிக்கைகள் நடத்தக் கடமைப்பட்டுமிருக்கிறார்கள். சட்ட நிர்மாண ஸம்பந்தமான எல்லாக் காரியங்களையும் இந்தியா மந்திரிக்கு முன்னால் அறிவித்து, அவர் ஆக்ஷேபித்தால், அதைமேல்நடத்தாமல் இந்திய கவர்ன்மெண்டார் நிறுத்திவிடவேண்டும். வரி வசூல் விஷயத்திலும் அரை லக்ஷம் ரூபாய்க்கு மேற்பட்டசெலவுகள் செய்யும் விஷயத்திலும், 250 ரூபாய்க்கு மேற்பட்ட மாதச் சம்பளமுள்ள புது உத்தியோகங்கள் ஏற்படுத்தும் விஷயத்திலும், மற்றும் பற்பல பெரிய உத்தியோக நியமனங்களிலும், இன்னும் அநேக நிர்வாக அமிசங்களிலும், இந்தியா கவர்ன்மெண்டார் இந்தியா மந்திரியின் அபிப்ராயத்தை முன்னறிந்தும், உத்தரவுகளை முன்னால் பெற்றுமே, காரியங்களை நிறைவேற்ற வேண்டும். ஆகையால், இந்திய ராஜாங்கத்தின் சட்டவிதிகள் எப்படியிருந்தாலும் அனுஷ்டானத்தில் இந்தியா மந்திரி இஷ்டப்பட்டால் தம் உத்தரவுகளையே ராஜப்பிரதிநிதிக்கு அனுப்பி எல்லா விஷயங்களையும் நிறைவேற்றும் படியாகச் செய்யலாம். ஆனால், இந்தியா மந்திரி, ராஜப்பிரதிநிதி இவர்கள் ஒருவருக்கொருவர் இருக்கும் வலுவைப் பொறுத்தே இந்தியாமந்திரியோ ராஜப்ரதிநிதியோ இந்தியாவின் நிர்வாகத்தைத் தாங்களேநடத்துபவராவார்கள். வலுவும் பிடிவாதமும் உள்ள ஒரு ராஜப்ரதிநிதி தாம் ஸ்தலத்திலிருப்பதாலும் நேராகப் பொறுப்பு வகிப்பதாலும், வலுவில்லாதஇந்தியாமந்திரியிடம்தாம் சொல்லுவதையே அவர் அங்கீகரிக்கவேண்டுமென்று தம் இஷ்டப்படியே

சாதித்துக் கொண்டு போகலாம். இந்தியா மந்திரியானவர் வலுவும் பிடிவாதமும் உள்ளவராயிருப்பின், அடக்கமுள்ள ராஜப்ரதிநிதி யொருவரைக் கொண்டு தாம் சொல்வதையே செய்யும் படிக்கும், முடிவில் இந்தியாவின் மேலான அதிகாரம் பார்லிமெண்டினுடைய தாகையால் அந்த ஸபையின் முன் தாம் பொறுப்பேற்றுக்கொள்ளவும், அதின் நோக்கப்படி தீர்மானிக்கவும், தாமே கடமைப்பட்டிருப்பதாவும், தம்முடைய வழியே ராஜப்ரதிநிதி போகவேண்டுமென்றும் சுலபமாய்க் கட்டாயப் படுத்தக்கூடும். மொத்தத்தில், இவ்விருவருக்கும் உள்ள ரீதி ஒரு ஸ்திரமான வழியை எப்பொழுதும் அநுசரித்ததாகச் சொல்வதற்கில்லை. அப்போதைக்கப்போது அந்தந்த அந்தஸ்துகளை வகித்துவந்த மனுஷ்யர்களைப் பொறுத்ததாக இருந்திருக்கிறது. இது எவ்வாறாயினும், பிரிட்டிஷ் தேசத்தாரின் பிரதிநிதி ஸபையாகிய பார்லிமெண்டு, அவர்களுடைய தேசத்து ஜனங்களுக்கோ, வியாபாரத்திற்கோ முக்கியமான எந்த விஷயத்திலும் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டால்அது இந்தியாவின் நன்மைக்கு என்ன விரோதமாயிருந்தாலும் இந்தியா மந்திரிமூலமாய் நிறைவேறிவிடு மென்பதில் ஸந்தேகமில்லை.

### மாகாண கவர்ன்மெண்டுகள்.

இந்தியா மந்திரியின் மேற்பார்வைக்குட்பட்டு இந்தியா கவர்ன்மெண்டார் நடத்தும் அரசாக்ஷி, அவர்களுக்கு ஏற்படுத்தியிருக்கும் சட்ட நிரூமாண ஸபைகளாலும் ஆங்காங்கு ஏற்படுத்தியிருக்கிற சக்கரவர்த்தியின் ஹைகோர்ட்டுகளுடைய ஆதாரவின் பேரிலும் நடத்தப்பட்டு வருகிறது. ஆனால், இத்தேசமுழுதும், இந்தியா கவர்ன்மெண்டாராவது, சட்ட சபையாராவது, நேராக ஆக்ஷி புரிவது அஸாத்யமாகையால், மாகாண கவர்ன்மெண்டுகளும் மாகாண சட்ட ஸபைகளும் அங்கங்கே ஏற்படுத்தப்பட்டுத் தம் தம் அதிகாரப்படி ராஜ்ய விஷயத்தில் தங்கள் கடமையை நிறைவேற்றி வருகின்றன. இப்படி மாகாண ஆட்சியிருக்கும் அவைகளுக்கு மேலாக ஏற்பட்டிருக்கிற இந்தியாவின் ஆட்சியிலும் உள்ள வியவஸ்தைகளைப் பொதுவில் அறியவேண்டும்.

ஆதியில், மாகாணங்களின் நிர்வாகம் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாமல் ஏற்பட்டிருந்த போதிலும், 1833-ம் வருஷம் முதல் அவைகளெல்லாம் இந்தியா கவர்ன்மெண்டின் அதிகாரத்திற்கு முற்றிலும் கீழ்ப்பட்டு நடக்க வேண்டுமென்று பார்லிமெண்டாரால் இந்திய நிர்வாஹச் சட்டங்களில் விதிக்கப்பட்டது. பிறகு 1861-ம் வருஷத்தில் அந்தந்த மாகாணத்துக்குத் தனித் தனியே சட்ட ஸபைகள் ஏற்படுத்துங்காலத்தில், அவைகளின் அதிகாரங்களும் வேலைகளும் இந்தியா முழுவதிற்கும் ஏற்படுத்தப்பட்ட சட்ட ஸபைக்கு எவ்விதத்திலும் உட்பட்டு நடக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டது. ஆதலின், மாகாண சட்டஸபைகளால் விதிக்கப்படும் சட்டம் எதுவும் இந்தியா சட்டஸபையின் சட்டங்களுக்கு வேற்றுமையாயிருப்பின் அது செல்லத்தக்கதல்ல வென்றும், மற்றும் பல நிர்ப்பந்தங்களும் நிபந்தனைகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அதேமாதிரி நிர்வாக அதிகாரத்திலும் சட்டங்களின் மூலமாய், கவர்னர்கள், அவர்களின், நிர்வாகசபை கௌன்ஸில்கள், பேரில் பலநிபந்தனைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன, தவிர இந்திய நிர்வாக விஷயத்தில் பல முக்கியமான காரியங்களை இந்தியா கவர்ன்மெண்டாராலேயே நேரில் நடத்திவரப்படும் ஏற்பாடுகளும் அநுஷ்டானங்களும் விதிகளும் இருந்து வருகின்றன. பொதுவில், ஒவ்வொரு மாகாண கவர்ன்மெண்டும், இந்தியா கவர்ன்மெண்டாரின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியது மல்லாமல், அவர்

களுக்கு அப்போதைக்கப்போது தாங்கள் நடத்தும் நடவடிக்கைகளை அறிவித்து, அவர்களுடைய மேல் பார்வைக்கும் அதிகாரத்திற்கும் உட்பட்டிருக்கவேண்டும் என்பது முக்கியமான விதி. இப்படி மாகாண கவர்ன்மெண்டுகளின் ரீதியைக் கவனிக்கும் இந்தியா கவர்ன்மெண்டார் தாங்கள் நேராக நடத்தும் நிர்வாக ரீதியையும் அப்படி அல்லாது நடத்தும் மேல்பார்வை ரீதியையும் சற்று விசாரிப்போம்.

### இந்தியா கவர்ன்மெண்டின் மேற் பார்வை.

முக்கியமாக ராணுவ விஷயங்களையும், வரவுசெலவில் பிரதானமான அம்சங்களையும், சுதேசிய ராஜாக்களுடன் இருக்கும் நடவடிக்கைகளையும் அநேகமாய் இந்தியா கவர்ன்மெண்டாரே நேரில் நடத்திவருகிறார்கள். இதைத் தவிர தேசம் முழுதும் புதிதாக ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் ரெயில்வேக்களையும் தந்தி தபால் இலாகாக்களையும் நேராகவே இந்தியா கவர்ன்மெண்டார் நிர்வகித்துவருகிறார்கள். இதர இலாகாக்களிலும் தங்கள் மேல்பார்வையை சரிவரச் செய்யும் பொருட்டுத் தங்களுக்கும் மாகாண கவர்ன்மெண்டாருக்கும் இடையே டிபார்ட்மெண்டு அதிகாரிகள் சிலரை ஏற்படுத்திக்கொண்டு அவர்கள் மூலமாய் விஷயங்களை அறிந்து தங்கள் அபிப்ராயங்களை மாகாண கவர்ன்மெண்டுகளுக்கு அனுப்பி வைக்கிறார்கள்.

### நிர்வாகப் பிரிவினை

இப்படி ஏராளமான வேலைகளை இந்தியா கவர்ன்மெண்டார் நடத்துவதற்குத் தங்கள் நிர்வாக ஸபையில் தகுந்த ஏற்பாடுகள் செய்து, தாங்கள் முடிவுகள் செய்யவும், செய்யும் முடிவுகளை வெளிப்படுத்தி அவை நிறைவேறும்படி கவனிக்கவும், அந்தந்த இலாகாவுக்கு ஸெக்ரெடரிகளும், அவர்களுக்குக் கீழ்ப்பட்ட சிப்பந்திகளும் வைத்துக் காரியங்களை நடத்தி வருகிறார்கள். நிர்வாக ஸபைக்குள்ளாகவே ஒவ்வொரு விஷயத்திற்கும் ஸபை முழுதும் கலந்து ஆலோசித்து தீர்மானங்கள் செய்வதில் காலதாமதமாவதையும், அநாவசியமாயிருப்பதையும் உத்தேசித்து அவர்களுக்குள் தனித்தனியே வேலைகளைப் பிரித்து, சாதாரணக் காரியங்களை ஒவ்வொரு டிபார்ட்மெண்டுக்கு ஒவ்வொரு மெம்பராகப் பங்கிட்டு நடத்தி வருகிறார்கள். ஆனால், இப்படிப்பங்கிட்டு நடத்தி வருவதில், ராஜ்ய பரிபாலனத்தில் நல்லரசாக்ஷிக்குப் போதுமான ஆதாரங்கள் இருக்கின்றனவா வென்பதைப்பற்றியும் ஏற்கெனவே இருந்த ஆதாரங்கள் இதன் மூலமாய் விலக்கப்பட்டு விட்டனவா வென்பதைப் பற்றியும் கவனிப்பது அவசிய மாகும்.

### அதன் கருத்து

ஆதியில், இந்தியாவில் கவர்னர்களும் ராஜப்ரதிநிதிகளும் அதிகாரத்தை நிர்வாக ஸபையுடன் செலுத்தவேண்டுமென்று ஏற்படுத்திய நிபந்தனையின் காரணம் யாதெனின், ஒரேமனிதன் நிராக்ஷேபணையாக அதிகாரம் வகிப்பதில் அபாயம் உண்டாகலாமென்பதும், யோசனை சொல்லும் ஸபையுடன் கலந்து விவாதித்துத் தீர்மானிப்பது எவ்விதத்திலும் ஜனங்களுக்கு ஹிதமாகுமென்பதும், ஜனங்கள் அபிப்ராயத்தை அறிவிக்கும்ஸபைகள் இல்லாதவிடங்களில் இம்மாதிரி அதிகாரத்தை மூவர் அல்லது நால்வர்களிடம் பொதுவில் வைத்து நடத்துவது அந்த மட்டில் ஜனங்களுக்குக் குணமேற்படுமென்பதுமாகும். இந்த நம்பிக்கையைப் பாராட்டி இந்த நிர்வாக ஸபைகள் ஏற்பட்டது உண்மையேயாயினும், பலர்கூடிப் பெருங்கார்யங்களை முடிப்பதில் பலதொந்தரவுகளும் உண்டு. முதலாவது, தீவிரமாகக் காரியம் ஆகாது; அவஸரமாக நடவடிக்கைகள் நடத்தவே முடியாது; ரகஸ்யமாகத் தீர்மானங்கள் நிறைவேற்றுவதும் கஷ்டமாகும். இந்த தர்ம ஸங்கடம் இந்தியாவின் நிர்வாகத்தில் பல ஸமயங்களில் நேரிட்

டதினுல்தான் இப்போதிருக்கும் ஏற்பாடு அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரப்பட்டது. இதில், ஸாதாரண காரியங்களை மேற்சொல்லியபடி மெம்பர்கள் தங்கள் ஸெக்ரெடரிகள் மூலமாய்ப் பிரித்து நடத்திவிடுகிறுர்கள். முக்கியமான காரியங்களில் எல்லா மெம்பர்களும் கூடி நேரில் பேசியோ, ஒருவர்க்கொருவர் அபிப்பிராயங்களை எழுதித்தெரிவித்தோ, முடிவுசெய்து வருகிறுர்கள். இதுதவிர கவர்னர்ஜனாலும், அதேமாதிரியாக மாகாண கவர்னர்களும், ராஜ்ய நிர்வாகத்தில் முக்கியமாக தாங்கள் நேரில் பொறுப்பு ஏற்பவர்களாதலால், அவர்கள் அப்பொறுப்பைவகிக்கும்படி அவர்களிடம் பிரத்தியேகமான அதிகாரமும் வைக்கப்பட்டிருக்கின்றது. எந்தக் காலங்களில் அவர்கள் அபிப்ராயத்தில் ராஜாங்கத்தின் க்ஷேமத்தையும் நன்மையையும் உத்தேசித்துத் தங்களுடைய நிர்வாக ஸபை மெம்பர்கள் அபிப்ராயத்திற்கு விரோதமாக முடிவு செய்ய வேண்டுமென்று தோன்றுகிறதோ, அந்தக்காலங்களில் அந்தந்த விஷயங்களில் அவர்கள் அப்படியே செய்து, இந்தியாமந்திரிக்கு விபரத்தைத் தெரிவித்து, அவருடைய அனுமதியை எதிர்பார்த்திருக்கலாம். தவிரவும், ஸாதாரணமாய் பல நிர்வாககாரியங்களில் நிர்வாக ஸபை மெம்பர்களை விட அதிகமாக நேர் அதிகாரமுண்டு. இத்துடன் அந்தஸ்துப், சக்கரவர்த்தியின் ப்ரதிநிதியாக இருக்கும் பொறுப்பும் அவருக்கிருப்பதால் இந்தியாவின் ராஜ்ய நிர்வாகத்தில் சாமர்த்தியமும் தைர்யமுமுள்ள ராஜப்ரதிநிதி இந்தியாவுக்கு நன்மை செய்யும் வழிகளும் முன்னேற்றத்தை விருத்தி செய்யும் மார்க்கங்களும் ஏராளமாய் இருக்கின்றன வென்பதில் ஸந்தேகமில்லை.

### எழுத்து மூலமான நிர்வாகம்.

ஆனல், இப்போது ஏற்பட்டிருக்கும் சட்டங்களைப்பற்றிய மட்டில் இந்தியா கவர்ன்மெண்டார், அதாவது, ராஜப்ரதிநிதியும் அவர் நிர்வாஹ ஸபையும், இந்தியாவிலே மற்றெவராலும் கட்டுப்படுத்தக்கூடாத ஸர்வாதிகாரத்தை வகித்து நடத்திவருகிறுர்கள் என்பது கவனிக்கத் தக்கது. சட்ட நிர்மாண அதிகாரம் அவர்களின் அதிகாரத்திற்கு மேலானதாயிருப்பினும், சட்ட நிர்மாண ஸபையுடன் நிர்வாக ஸபையார் கலந்து அவர்களுடையஒத்தாசைக்கு இதர உத்யோகஸ்தர்கள் மெம்பராகவிருந்து தங்களிஷ்டப்படியேசட்டங்களை யெல்லாம் நிர்மித்து நிறைவேற்றும்படியான இயல்பைப் பெற்றிருக்கிறுர்கள். ராஜப்ரதிநிதியின் சட்ட ஸபையில் இந்தியா கவர்ன்மெண்டாரின்பலமே வோட்டுகள் மூலமாய் அதிகரித்திருக்க வேண்டுமென்பது சில வருஷங்களுக்கு முன்செய்த சீர்திருத்தங்களின் முக்கிய கொள்கையென ஏற்கெனவே எடுத்துக்காட்டப் பட்டிருக்கின்றது. ஆதலின், சட்டஸபையில் ஜனப்ரதிநிதிகளின் செல்வாக்கும் அதிகாரமும் குறைவு என்பது யாவரும் அறிந்தவிஷயம். நிர்வாகம் செலுத்தும் இந்தியா கவர்ன்மெண்டார் ஜனங்களை ஸரியாகப் பரிபாலனம் செய்யவேண்டுவதற்கான பலங்கள் இன்னவிருக்கின்றனவென்று கவனிக்குமளவில், அவைகள் இப்போது பிரதிநிதிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சிற்சில பாத்யங்கள் மாத்திரம் சொல்வது பிசகாகும். ஆதிமுதல் இருந்துவரும் வேறொரு முக்கியமான பலத்தைக் குறிப்பிடுவது அவசியமாகும். அதாவது, இந்தியாராஜாங்கம் இதர ஏகாதிபத்யம் போல் மனம்போல் நடத்தும் ராஜாங்கமல்லவென்பதும், நிர்வாக காரியம் ஒவ்வொன்றிலும் கவர்ன்மெண்டார் தீர்மானங்களைத் தஸ்தாவேஜிகளில் தெளிவாக எழுதி அவைகளைஎவ்விதத்திலும் எழுத்து மூலமாகவே பிரேரேபித்து நிறைவேற்றிவருவது என்ற கோட்பாடும் ஆகும். இது ஜனங்களின் நல்லாசாக்ஷிக்கு ஆதிகாலம் முதல்

ஏற்பட்ட முக்கிய ஆதாரமாக இருந்திருக்கிறது. மனம்போல் அரசு செலுத்துவோர் முன்பின் விரோதமான வாய்மொழி அமுல் நடத்தியும் ஸமயத்துக்குத் தகுந்தபடி கீழ் அதிகாரிகளுக்கு அவர்கள் இஷ்டப்படி உத்ரவுகளை நிறைவேற்றவோ, மாற்றவோ நிறுத்தவோ இடங் கொடுத்தும், ராஜாங்கத்தில் நிச்சயமான வழியாவது, ஜனங்களுக்கு நிச்சயமான நம்பிக்கையாவது இல்லாமல் செய்துவிடுவது வழக்கம். இந்த வழக்கத்தைவிட்டு பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் ஆதிமுதல் நடவடிக்கைகளை தஸ்தாவேஜிமூலமாக நடத்தியதே அவர்களிடத்தில் ஜனங்களுக்கு ஏற்பட்ட நம்பிக்கைக்குக் காரணமாகும். என்றாலும், அந்த நம்பிக்கையினின்றும் இந்திய நல்லசாக்ஷியினின்றும் இந்தியாவிருத்திக்கு வந்து ஜனங்கள் தன்மதிப்படைந்து, மற்ற நாகரீகம் பெற்ற மேல் நாட்டார் போல் தங்கள் தேசத்து ராஜாங்கத்தில் தங்கள் அபிப்ராயத்தை அனுஸரித்து நடத்தவேண்டுமென்னும் எண்ணம் கொண்டிருக்கும் காலத்தில், சட்டஸபைகளிலும் நிர்வாக ஸபைகளிலும் தேசத்தாரின் பிரதிநிதிகளே இருந்து ராஜ்யநிர்வாகம் நடத்தவேண்டுமென்ற அவர்களின் வேண்டுகோள் பலப்பட்டுக் கொண்டே வருகிறது.

ஸ்வய ஆட்சி நிர்வாகமும் முன்னேற்றமும்.

இந்திய ராஜாங்கம் விருத்திக்கு வரவேண்டுமென்ற எண்ணங்கொண்டு பிரிட்டிஷ் தேசத்தாரும் இந்தியாவின் போக்கை நுட்பமாகக் கவனித்து அதின் முன்னேற்றத்திற்காக அப்போதைக்கப்போது நடவடிக்கை நடத்தப் பிரயத்தனஞ் செய்து ராஜாங்கத்தில் ஸ்வய ஆக்ஷி அங்கங்கள் கொஞ்சங்கொஞ்சமாக ஏற்படுத்திவருகிறார்கள் என்பது பலருக்கும் தெரிந்தவிஷயம். ஆனால் அப்படிச் செய்துவருவதில் இன்னும் ஜனங்களின் வாக்கு ராஜாங்கத்தில் எந்தவிதத்திலும் போதுமான வலிமை பெறவில்லையாயினும், அந்தந்த நிர்வாக அங்கங்கள் ஸ்தாபித்திருப்பதின் மூலமாய் முடிவில் ஸ்வய ஆக்ஷி வந்துவிடும் என்ற பூர்ண நம்பிக்கை நமது ஜனங்களுக்கு உண்டாகிவிட்டதென்றே சொல்லவேண்டும். அப்படி உண்டாயிருப்பதே இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் நிரந்தரமாக நிற்பதற்கு முக்கியமான காரணமாக ஏற்பட்டுவிட்டது.

ஆனால், தற்போது ஜனப்ரதிநிதிகள் ராஜ்யநிர்வாக அங்கங்களில் ஆங்காங்கு பெற்றிருக்கும் ஸ்தானங்களையும் அதிகாரங்களையும் கொண்டு, கவர்ன்மெண்டாருக்கிருக்கும் தீர்மானிக்கும் அதிகாரங்களையாவது, நாள்தோறும் நடத்தும் அலுவல்களையாவது, கட்டுப்படுத்தவோ, அல்லது எவ்விதத்திலும் மாற்றிவிடவோ ஸாத்தியமில்லாமலிருக்கிறது. ராஜப்ரதிநிதியின் சட்டஸபையிலாவது, மாகாண சட்டஸபைகளிலாவது ஜனப்ரதிநிதிகளுக்கு ஸமாசாரங்கள் அறிவிக்கவும், அறியவும் ராஜ்ய நிர்வாக விஷயங்களை விவாதிக்கவும், மற்றும் பாத்யங்கள் ஏற்பட்டிருக்கின்றனவே யன்றி அவற்றின்பேரில் முடிவொன்றும் செய்ய அதிகாரம் இல்லை. ஆனால், சட்டஸபை நிர்மாணத்தைப் பின்பு விவரிக்குமிடத்தில் இவ்விஷயங்களெல்லாவற்றையும் பற்றி கவனிப்போம்.

மாகாண கவர்ன்மெண்டுகளின் பிரிவுகள்.

மேற்சொல்லிய கவர்ன்மெண்டுகளின் நிர்வாக அதிகாரம் இந்தியா முழுமையும் நேராக ஏற்பட்டிருக்கிறவைகளைத் தவிர, மற்ற ராஜ்ய பரிபாலனக் கிரமங்கள், மாகாண கவர்ன்மெண்டுகள் மூலமாய் ஆங்காங்கு ஜில்லாக்களில் பிரிக்கப்பட்டு, அவற்றில் ஜில்லா அதிகாரிகள் அமைக்கப்பட்டு, அவைகளினின்றும் தாலுக்கா அதிகாரிகள் பட்டணங்களின் அதிகாரிகள் கிராமாதிகாரிகள் என்று இவ்வாறு பலவிதமாய்ப் பிரிவுபட்டுள்ளன. அவைக

ளின் போக்கைக் கவனித்துப் பொதுவான அம்சங்களைச் சுருக்கிச் சொல்வது ஸாத்யமல்ல. குறிப்பாய்க் காணப்படும் சில விஷயங்களை மட்டில் இங்கு அறிவோம்.

### அவைகளின் அதிகாரக் கிரமங்கள்.

மாகாண கவர்ன்மெண்டுகளின் பிரிவுகளும், அவைகளின் அமைப்பு, விஸ்தீர்ணம் முதலிய விபரங்களும், இவற்றின் பின்னால் அடங்கியிருக்கும் அநுபந்தத்தில் காணலாம். இவ்விடத்தில் நாம் அவற்றைப்பற்றிக் கவனிப்பது யாதெனில், அவைகளுள் சிலவற்றில் கவர்னரும் அவருடைய நிர்வாக ஸபையும், சிலவற்றில் லெப்டினெண்ட் கவர்னரும் அவருடைய நிர்வாக ஸபையும், சிலவற்றில் லெப்டினெண்ட் கவர்னர் அல்லது அவருக்குத் தாழ்ந்த அதிகாரம்பெற்ற சீப் கமிஷனர்மட்டும் ஏற்படுத்தப்பட்டு, அந்தந்த மாகாணங்களில் நல்ல ஆக்ஷி நன்ருய் நடக்க அவரவர்கள் கவனித்துவருகிருர்கள். இவ்வதிகாரிகளுள் ஒவ்வொருவருக்கு இருக்கும் தாரதம்மியங்களும் அந்தஸ்துகளும் கவனிக்கத்தக்கவை. கவர்னராயிருப்பவர் சக்ரவர்த்தியால் நேராக நியமிக்கப்பட்டு, ஸாதாரணமாய் மேல்நாட்டிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டு வருபவர். அவரும் அவருடைய நிர்வாக ஸபையும் இந்தியா கவர்ன்மெண்டாருக்குக் கட்டுப்பட்டவர்களானாலும் நேராக இந்தியா மந்திரிக்கு விஷயங்கள் அறிவித்துக்கொள்ளவும் அவருடன் தபால் போக்குவரத்து செய்யவும் பாத்யம்பெற்றவர். லெப்டினெண்ட் கவர்னரோ ராஜப்ரதிநிதியின் சிபார்சின் பேரில் இந்திய மந்திரியால் நியமிக்கப்படுபவர். அவர் அநேகமாய் இந்தியாவில் ஸிவில் ஸர்விஸ் உத்தியோகங்களிலிருந்து உயர்ந்துவந்தவராவர். சீப் கமிஷனரோ, ராஜப்ரதிநிதியே நேராக நியமிக்கும் அதிகாரியாவர். இந்த ஏற்பாட்டிற்குத் தக்கபடி அவரவர்களின் அதிகாரங்களும் வரிசைக் கிரமமாய் ஏற்றத் தாழ்வுடையவை.

சீப் கமிஷனர் இந்தியா கவர்ன்மெண்டாரின் வேலைக்காரராகவே எல்லா முக்ய கார்யங்களையும் அந்தந்த மாகாணங்களிலிருந்து நடத்திவருபவரென்று சொல்லப்படும். பல முக்கிய கார்யங்களை அப்போதைக்கப்போது அவர் முன் உத்தரவுபெற்று நடத்திக்கொள்ள வேண்டும். லெப்டினெண்ட் கவர்னர்கள் நிர்வாக ஸபைகள் இருப்பினும் இல்லாவிடினும் குறிப்பிட்ட கார்யங்களில் மாத்திரம் மேலான உத்திரவுகளைப் பெறவேண்டுமே யொழிய மற்றப்படி பொதுவான மேற்பார்வைக்குட்பட்டுத் தாங்களே நடத்தக்கூடியவர்கள்.

### ஸ்தல நிர்வாகங்களின் ரீதி.

கவர்னராயிருப்பவர்களுக்கு மேற்சொல்லியபடி இந்தியா மந்திரியுடன் கலந்துகொள்ளும் சலுகையைத் தவிர பொதுவாகவே இந்தியா கவர்ன்மெண்டின்முன் உத்தரவுகளால் தடுக்கப்படாத எந்தக் கார்யங்களையும் தாங்களே நடத்தும் அதிகாரம் இருக்கிறது. ஆனுல் சட்ட ஸபைகள் ஆங்காங்கு ஏற்பட்டிருப்பதால, அவைகளால் இயற்றப்படும் சட்டங்களின் நிர்ப்பந்தங்களுக்கு முதலில் கட்டுப்படவேண்டும். பொதுவில், தேசத்தில் மாகாண கவர்ன்மெண்டுகளும் இந்தியா கவர்ன்மெண்டும் நடத்தும் அவரவர்கள் அமுலில் ஒன்றுக்கொன்று குறுக்கிடாமல் நடப்பதற்கு நிர்ணயமான ஸித்தாந்தம் எதுவும் இருப்பதாகச் சொல்வதற்கில்லை. ஆதியில் கம்பெனியார் அதிகாரம் செலுத்திய நாளிலேயே, கீழ் அதிகாரிகள் செலுத்தும் அதிகாரத்தில் மேல் அதிகாரிகள் அடிக்கடி பிரவேசித்து நிர்ப்பந்திப்பதால் பொதுநலத்திற்குக் கெடுதல் உண்டாகிவிடுமென்றும், கீழ் அதிகாரிகள் போகும் வழியிலேயேவிட்டுக் கவனிக்காமலே யிருந்துவிட்டால் ராஜ்ய

பரிபாலனம் சீர்குலைந்துவிடுமென்றும், இவ்விரு கெடுதலும் உண்டாகாமல் நடுத்தரமான ஒரு மார்க்கத்தை மேல் அதிகாரிகள் அனுஷ்டிக்க வேண்டுமென்றும் அறிவித்திருக்கிறார்கள். விவகாரத்திலும், அனுபோகத்திலும் இது எப்படிச் செய்யக்கூடுமென்பது அப்போதைக்கப்போது தீர்மானிக்கப்படுவதுந் தவிர விவாதிக்கப்படுவதாகவுமிருக்கிறது. ஆனால், ராஜ்ய நிர்வாகத்தின் காரியங்கள் நாளுக்கு நாள் அதிகரித்தே வருவதால், அதிகாரங்கள் மேலிருந்து நடத்துவதை அடிக்கடி பிரிவினை செய்து ஸ்தல அதிகாரங்களைப் பெருக்குவது எவ்விதத்திலும் அவசியமாய் விடுகிறது. ஆங்காங்குள்ள ஸ்தலங்களில் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களின் அதிகாரங்களைப் பெருக்கி, மேல் அதிகாரத்தின் பிடிப்பைக் குறைத்தும், குறைந்து வரும்படி விட்டும் விடுவதில், ஜனங்களுக்கு உத்யோகஸ்தர்கள் அமுல் நடத்துவதால் உண்டாகும் பிசகுகளையும் தீங்குகளையும் திருத்துவதற்கு மார்க்கங்கள் குறைந்து போகின்றன. படிப்படியாயிருக்கும் மேல்அதிகாரிகளிடம் மனுக்கள் மஹஸர்கள் செய்துகொண்டாலுங்கூட இவ்வளவு ஏராளமான காரியங்களை நேரில் கவனிக்க அவர்களுக்கு ஸாத்யமில்லாமல் போய்விடும், பரிகாரங்கள் கொடுப்பதும் மிகவும் ஸ்வல்பமாய் விடுகிறது.

**ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களின் அவசியம்.**

ஆதலின், நாகரீகம் வாய்த்த தேசங்களில், இந்த நிலைமைக்கு ஸ்தல அதிகாரங்களை வரத்தப்பட்டமட்டில் ஜனங்களால் நியமிக்கப்படும் கௌரவ அதிகாரிகளாலும் ஸபைகளாலும் நடத்தச் செய்வதே மேலான உபாயமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஜில்லாக்கள், பட்டணங்கள், கிராமங்கள் இவைகளின் நிர்வாகத்திலும் ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களை ஏற்படுத்தி, கிராமஸபைகளான பஞ்சாயத்துகள் முதல் ஜில்லா ஸபைகளான போர்டுகள், கௌன்ஸில்கள் வரை ஏற்படுத்தப்படும் பொதுஜன ஸ்தாபனங்களுக்கு, சட்ட நிர்மாண அதிகாரம் இல்லாமல், சட்டத்திற்குட்பட்ட நிர்வாக அதிகாரத்தைத் தாங்களாகவோ அல்லது தங்களால் நியமிக்கப்பட்ட உத்யோகஸ்தர்கள் மூலமாயாகவோ கொடுத்து, அவைகளைக்கொண்டு அப்போதைப்போது ஜனங்களின் குறைகளைக்கவனித்து, ஊழல்களைத் திருத்தி ஸ்தல பரிபாலனம் செய்து வருவது மேல்நாடுகளில் முற்றிலும் அனுஷ்டானத்தில் வந்துவிட்டது. அப்படிப்பட்ட ஸ்தாபனங்களில் ராஜாங்கத்தார் ஜனங்களால் நல்லாக்ஷி நடத்தப்படும் நிமித்தம் பலவிதமாய் மேற்பார்வை பார்த்து வரவும், அதற்காக மிகுந்த பண உதவி பொதுவரிகளிலிருந்து புரியவும் ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். இப்படி ராஜாங்கத்தாரின் மேற் பார்வையும் பணஉதவியும் கூடியிருப்பதனால் உத்தியோகஸ்தர்களின் உள் ஸம்பந்தம் அநேகமாய் இருப்பதில்லை. அவர்களால் நிர்ப்பந்தமுமில்லை. இது காரணம் பற்றியே ஜனப்ரதிநிதிகளுடைய வாக்குக்கும் யோசனைக்கும் எப்போதும் மதிப்பும் செல்வாக்கும் ஏற்படுகின்றன.

**ஸ்தல ஸ்வய ஆக்ஷியின் நோக்கங்கள்.**

இந்தப் பிரகாரம் ஸ்தல ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்கள் ஏற்பட்டுப் பொது நிர்வாகம் நடத்துவதின் நோக்கம் மூன்று விதமாகும். முதலாவது, ராஜாங்க நிர்வாகம் எந்த ஜனங்களின் நன்மைக்காக ஆங்காங்கு நடத்த வேண்டுமோ அந்த ஜனங்களின் ப்ரதிநிதிகளினுடைய உதவியைக் கொண்டு ஆங்காங்கு அவை நேராக நடத்துவதால் நிர்வாகம் செம்மைப்பட்டு நன்மையை அதிகரிக்கத் தக்கதாயிருக்கிறது. இரண்டாவது, உத்யோகஸ்தர்களை ஏராளமாய் எணிபோல் ஏற்படுத்தி நிர்வாகம் செய்யச் சொல்வதில், சம்பள சிப்பந்திகளின் செலவு தாங்க முடியாமற் போவதுந் தவிர,

படிப்படியே கடைசிவரையில் நிர்வாக அதிகாரத்தைக் கவனித்து அந்தந்த ஸ்தலங்களில் மூலை முடுக்குகள் உள்பட ஸரிவர நடக்கிறதா வென்று பார்த்து வருவதும் அஸாத்யமாய்விடும். ஜனங்களின் பொது வாழ்வு அதிகரிப்பதினாலும், ஜனங்கள் பெருகி அவர்களின் செல்வமும் ஸுகமும் விருத்தியாகிப் புதிது புதிதான நிர்வாஹ க்ரமங்கள் அதிகமாகி வருவதாலும், தலைப்பிலுள்ள ராஜாங்கத்தார் ஒவ்வொன்றையும் நேரில் கவனிப்பது குறைந்துகொண்டே வரும். ஆதலால், நிர்வாக அதிகாரம் பெருகி வரும்போதே, கூடவே ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களையும் பெருக்கி அவைகளின் அதிகாரங்களை விருத்திசெய்து வருவது மேலான ராஜ்ய தந்திரம் என்றே கொள்ளப்பட்டிருக்கின்றது. இப்படி, ஸ்தலங்களில் ஜன ஸ்தாபனங்களை ஏற்படுத்தி, அவைகள் ராஜாங்க நடவடிக்கைகளில் அதிகாரம் செலுத்திப் பொறுப்பு வகித்துவரும்படியாகச் செய்வதற்கு மூன்றுவதும், முக்கியமானதுமாகியகாரணம் உண்டு. அது தற்போது இந்தியா தேசம் இருக்கிற ஸ்திதியில் முக்யமாகப் பாராட்டத்தக்கது.

### இந்திய உத்தியோகஸ்தர்களின் அவசியம்.

நமது தேசத்தில் இம்மாதிரி நிரந்தரமாக பிறரின் ஆளுகை நடப்பது ஸாத்யம் அல்லவென்பதை பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் அறிந்து ஆதிமுதல் எவ்விதத்திலும் இந்திய ஜனங்களுடைய ஒத்தாசையைக்கொண்டே ராஜாங்கத்தை நடத்துவது நலமென்ற முறையை அனுஷ்டித்துவந்திருக்கிறார்கள். முதலில், இந்த ராஜ்யத்தில் ஸைன்யங்களை வைத்துப் பிரிட்டிஷ் மாகாணங்களை சத்துருக்களின் ஹிம்ஸையினின்று ரக்ஷிக்க முயலும்போதும், அவர்கள் பேரில் படையெடுத்து யுத்தஞ் செய்யும்போதும் இந்தியர்களையே சிப்பாய்களாகப் படைகளில் சேர்த்து, மேல்நாட்டு ஆயுதங்களையும் யுத்த முறைகளையும் அவர்களுக்குப் பழக்கி, ஐரோப்பியர்களின் தலைமையின்கீழ் அவர்களை யுத்தத்திற்கனுப்பி, இந்திய ராஜ்யம் முழுதும்பெரும்பாலும் பிரிட்டிஷார் ஆக்ஷிக்குள்கொண்டுவந்தது யாவரும் அறிந்த விஷயம். அதே மாதிரியாக, உள்ளே ராஜாங்கம்நடத்துவதிலும், மேல் அதிகாரத்தைத் தாங்களேவகித்துக் கீழாக உள்ள ராஜாங்கவேலைகளை எல்லாம் இந்தியர்களைக் கொண்டு செய்வித்து ராஜ்ய தந்திரம் நடத்தி வந்திருக்கிறார்கள். ஆதலின், இந்தியர்களின் ராஜாங்கம் இந்தியர்களைக்கொண்டு நடத்த வேண்டும் என்ற கொள்கைக்கு மேற்சொல்லியவைகள் ஆதாரமாக விருக்கின்றனவென்று சிலர் நினைக்கலாம். ஆனால் இது அப்படியல்ல. இந்தியர்கள் இந்திய ராஜாங்கத்தைநடத்துவதுஎன்பது நிர்வாகத்தைநடத்துவது என்ற கொள்கையாமேயல்லாது பிரிட்டிஷார் நிர்வாகத்தின்கீழ் சில்லரை வேலைசெய்வது என்பது அல்ல. இந்தநிர்வாக அதிகாரமும் இந்தியர்களுக்குக் கொடுக்கப்பட்டு விருத்தியாகி வரவேண்டுமென்பதற்கு மேலே நாம் கூறிய ராஜ்ய தந்திர கோட்பாடு போதுமான காரணமாகும்.

### ஸ்தல ஸ்வய ஆக்ஷியின் நன்மைகள்

தவிரவும், இந்த வ்யாஸத்தின்முதல் பகுதியில் சொல்லியிருக்கிறபடி, நல்லாக்ஷிக்கு ஸ்வயஆக்ஷியே முக்கியஸாதனமாகுமாயினும், ஸ்தலங்களில் நடக்கவேண்டிய நல்லாக்ஷியை முதலில் ஏற்படுத்தவேண்டியது அவசியமாகிறது. ஜனப்பிரதிநிதிகள் மூலமாய் ஜனங்களின் நன்மையை அறிந்து, ராஜாங்கம் நடத்துவதால் ராஜ்யநிர்வாகம் செழிப்புற்றோங்குமென்பதுவாஸ்தவமாயிருந்தால், அவ்வாறு அந்தந்த ஸ்தலங்களில் முதலில் ஏற்பாடுகள்செய்வதால், ஸ்தல ஸ்வய ஆக்ஷியும் நல்லாக்ஷியும் ஒன்று சேர்ந்து ஜனங்களுக்கு நன்மை விளைவிக்கும். மேலும், இப்படி ஸ்தலங்களில்

ஸ்வய ஆக்ஷி ஏற்படுத்துவதற்கு எல்லா வற்றையும்விட முக்கியமான காரணம் என்னவெனில், முடிவில், பிரிடிஷ் ஏகாதிபத்தியத்தின் கீழ் இந்தியர்கள் மேலான அங்கங்களில் அதிகாரம் பெறும்பக்ஷத்தில், அந்த அதிகாரத்தை ஸரிவர வகித்து நடத்துவதற்கு முதலில் ஸ்தல ஆட்சி ஸ்தாபனங்களில் அப்பேர்ப்பட்ட அதிகாரநிர்வாகத்தைச் சிறுகச் சிறுகப் பயின்று கற்றுக்கொள்வது மிகுந்த அவசியமென்பதே ஆகும்.

### பொது விஷயப் பழக்கம்.

ஒருவர் தன்னுடைய கிராம காரியத்திலும் ஜில்லா காரியத்திலும் பிரவேசித்து, ஜனங்களின் நன்மைக்கு உழைப்பதில் தேர்ச்சியும் தகுதியும் பெறாவிடில், மாகாண ஆக்ஷியிலும், இந்தியா முழுமையும் நடத்திவரும் ஆக்ஷியிலும், எப்படித் தேர்ச்சிபெற்றவராய் இருக்கக்கூடும்? ஸ்தல ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களில் முன்பழக்கமில்லாமல், பெரிய ராஜாங்க ஸ்தாபனங்களில் திடீரென்று பிரவேசித்து, மற்றவர்களுடன் கலந்து அதிகார நிர்வாகத்தை ஒருவனை நடத்தச்சொல்வதானது அந்த நிர்வாகத்தின் வலுவைக் குறைக்கக்கூடியதாகும். எப்போதும் சம்பளம் பெற்ற பிறநாட்டு அதிகாரிகளுக்குட்பட்டு, அவர்கள் மூலமாகவே எல்லாப் பொதுக் காரியங்களையும் நடத்தப்பெற்று வந்த ஜனங்கள் திடீரென ஸ்வய ஆக்ஷி அதிகாரத்தை மேல்பதவியில் மட்டும் பெறும்பக்ஷத்தில் பலன் மிகவும் குறையக் கூடும்.

### ராஜாங்க நிர்வாகப் பயிற்சியின் நன்மைகள்.

ஆனால், இப்படி ஸ்வய ஆக்ஷி, ராஜ்ய நிர்வாகத்தில் பழக்கம், பொது நன்மைக்கு உழைப்பு, என்ற காரியங்களைப் பற்றி நமது தேசத்தில் இப்போது கவனமேற்பட்டு, அதின் மூலமாய்த் தேசத்தின் க்ஷேமத்தையும், வலிமையையும், முன்னேற்றத்தையும் தேடுவதில் அவைகளினால் கிடைக்கக் கூடியவை லௌகிக ஸாதகங்கள் மட்டுமென்றே நினைப்பது பிசகாகும். எப்படி கல்வியினால் ஒரு மனுஷ்யனுடைய குணங்களும் நடத்தையும் அவனுடைய இஹ பர ஸாதகங்களுக்கு நன்மையாக ஏற்படுகின்றனவோ, அதே மாதிரி ராஜ்ய நிர்வாஹத்தில், கிராமம் முதல் தேசம் வரையில் ஏற்படும் பழக்கம், அதினால் ஏற்படும் பொறுப்பு, அதற்காக ஒவ்வொருவரும் செய்யவேண்டிய தியாகம், அந்தப் பொதுவாழ்வை அனுஸரிப்பதினால் நமக்கு உண்டாகும் ஜனாபிமானம், அதனால் நம்மைப்போன்ற இதர மனுஷ்யர்களுக்குச் செய்யக்கூடிய நன்மை, ஸ்திதியை அவர்கள் விருத்திக்குக் கொண்டுவரக் கூடிய தர்மம்—இம்மாதிரி இன்னும் பல நற்குணங்கள் ஆகிய இவைபெருக, ஒவ்வொரு மனுஷ்யனுடைய ஞானத்தையும், தர்மசிந்தனையையும், ஜனாபிமானத்தையும், புண்ய மார்க்கத்தையும் விருத்திசெய்து, அவனுக்குக் கிடைக்கக்கூடிய இஹபர ஸுகங்களுக்கு இந்தப் பொது வாழ்க்கையே முக்கியமான ஸாதனமாய்விடுகிறது. இப்படி, நமது ஜனங்களுக்குப் புராதனமாயுள்ள நோக்கங்களுக்கு இந்தப் பொது வாழ்வும் ஸ்வய ஆக்ஷிப் பழக்கமும், பொதுநன்மை உழைப்பும் ஏற்படுமாதலின், அவற்றை நம்மவர்கள் இப்போதைவிட இன்னும் பலமாகக் கைப்பிடித்து உறுதியுடன் சிரமப்பட்டு விருத்திக்குக் கொண்டுவர வேண்டுமென்பதைநாம் சொல்லவேண்டுமோ?

தற்போது, இந்தியாவின் ராஜாங்க ரீதியிலே மேல் நிர்வாஹங்களில் எப்படி ஸ்வய ஆக்ஷிக்கு இடம் ஸ்வல்பமாக நாளடைவில் ஏற்பட்டு வந்ததாகவிருக்கிறதோ அதேமாதிரியாக ஸ்தல நிர்வாஹங்களிலும் ஸ்வயஆக்ஷி ஸ்தாபனங்கள் காலக்கிரமத்தில் மெதுவாகவே ஏற்பட்டு வந்துகொண்டிருக்கின்றன. ஆனால், ராஜாங்கநிர்வாஹம்பெருகி வருங்காலத்தில், அதிகாரப் பிரிவினை செய்வது அவசியமென்பதை நமது

பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் சுமார் 35 வருஷத்திற்குமுன் தெரிந்துகொண்டு அதற்கு ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களை ஏற்படுத்துவதுதான் வழி யென்று கண்டுகொண்டார்கள். ஆதலின், தலைமை நிர்வாஹங்களில் ஸ்வய ஆக்ஷி பாத்தியங்கள் கிடைப்பதற்கு வெகு காலம் முன்னமேயே, ஸ்தல நிர்வாஹங்களில் ஸ்வய ஆக்ஷி ஸ்தாபிக்கும் ஏற்பாடுகள் துவக்கப்பட்டன. அப்படிச் செய்வதற்கு முக்கிய பிரயாஸை எடுத்துக்கொண்டு நமது தேசத்திற்குப் பரம பந்துவாயிருந்த லார்ட் ரிப்பன் ராஜப்பிரதிநிதியாக இருந்த காலத்தில், அவருடைய பிரேரணையின் பேரில் இந்த ஸ்தல ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களைக்கொண்டு ஸ்தல நிர்வாஹம் சரிவர நடத்தி வருவது மாத்திரம் அவைகளின் முக்கிய கருத்தல்லவென்று தீர்மானித்தார். இந்திய ஜனங்களுக்குப் பொதுஜன வாழ்க்கையையும் ராஜாங்க நிர்வாஹத் திறமையையும் விருத்திசெய்யவும், அதின்மூலமாய் அவர்கள் மேன்மேலும் தங்களுடைய தேச நிர்வாஹத்தில் தாங்களே பிரவர்த்தித்து, ஸ்வய ஆக்ஷி நடத்துவதே தேசத்திற்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கும்மேலான நோக்கமாகுமென்று அவர் ஸித்தாந்தப் படுத்தி, அம்மாதிரியே ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களை ஏற்படுத்த முயன்றார். ஆனால், அவர், நமது தேசத்தை விட்டுவிலகியதும் அவருடைய பெரு நோக்கங்களை அவருக்குப் பின் வந்தவர்கள் அசட்டைசெய்ததினால், நமது தேசத்தில் ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்கள் எவ்விடத்திலும் ஏற்படுத்தியிருந்த போதிலும், அவைகளின் பெயருக்குரியபடி ஸ்வய ஆக்ஷியாய் இப்போது அவைகள் நிர்வாஹம் நடத்தி வருவதாகச் சொல்வது உபசார வார்த்தையாகுமே யொழிய வாஸ்தவமாகாது. இந்த ஸ்தாபனங்களின் அமைப்பையும் காரியங்களையும் கவனிக்குமுன், வாஸ்தவத்தில் ஸ்தல நிர்வாஹத்தையும் நடத்திவரும் ஸர்க்கார் அதிகாரிகளின் அமைப்பைச்சற்று நோக்குவோம்.

### ஜில்லா அதிகாரமுறை.

இவ் வதிகாரிகள் இன்னின்னவர்களென்றும், அவர்களின் வேலைகள் இன்னவை யென்றும், அதிகாரப் பிரிவினைக் கமிஷனின் ரிப்போர்ட்டில் அடியில்வருமாறு காணப்பட்டிருக்கிறது.

பிரிட்டிஷ் இந்தியாவில் 250 ஜில்லாக்களிருக்கின்றன. ஒவ்வொரு ஜில்லாவின் விஸ்தீரணம் சராசரி 4430 சதுர மைல். ஒவ்வொரு ஜில்லாவின் ஜனத்தொகை சராசரி 9,31,000. ஒவ்வொருஜில்லாவும் கலெக்டரின் அதிகாரத்திற் குட்பட்டிருக்கிறது. கவர்ன்மெண்டின் பிரதிநிதியான இவர் ஜனங்களின் விஷயத்தைக் கவனிக்க பொறுப்புள்ளவரா யிருக்கின்றனர். இவர் ஜில்லா மாஜிஸ்டிரேட்டுமாவர். ஜில்லாவைச் சேர்ந்த வருமான விஷயங்களையும் இதர விவகாரங்களையும் அப்போதைக்கப்போது கவர்ன்மெண்டாருக்குத் தெரியப்படுத்தவும், தீர்வை முதலிய பணங்களை கவர்ன்மெண்டாரிடம் செலுத்தவும், கடமைப்பட்டிருக்கிறார். ஜில்லாவைச் சேர்ந்த நில ஏற்பாடு, சுகாதாரம், கல்வி, போலீஸ் முதலிய சகல இலாகாவிற்கும் போதுமான பொறுப்பைக் கொண் டிருக்கிறார். விவசாயிகளுக்குப் பண உதவிசெய்தல், விவசாய சம்பந்தமான சர்வ கணக்குகளையும் பதிவு செய்தல், மைனர் ஜமீன்தாரர்களின் சொத்துக்களைப் பரிபாலனஞ் செய்தல், ஜனங்களின் விருத்திக்குரிய சகல கைத்தொழில்களையும் மேற்பார்வையிடல் முதலிய சகலமானவைகளையுஞ் செய்ய கலெக்டரே பாத்தியப்பட்டவராவர். இவர் ஜில்லாவிற்குரிய விசேஷ சம்பவங்களையும், தெரியப்படுத்த வேண்டும். கவர்ன்மெண்டாரால் ஏற்படுத்தப்படும் புதியசட்டங்களைப் பற்றி, கலெக்டர் தன் ஜில்லாவை அனுசரித்துத் தன் அபிப்பிராயத்தை வெளிப்படுத்தவேண்டும். ஜில்லாமாஜிஸ்டிரேட் அதிகாரத்தினால், ஜில்லாவின் பந்தோபஸ்திற்கு ஏற்பட்டிருக்கும் போலீஸ் உத்தியோகஸ்தர்களைச் சீர்திருத்தவும், மேல்பார்வையிடவும், சட்டத்தீர்ப்பு முதலியனயாவும் செய்யவும் கடமைப்பட்டிருக்கிறார். இக்கலெக்டர் இந்தியன் ஸிவில் உத்தியோகத்தைச் சேர்ந்தவராவர். ஒவ்வொரு ஜில்லாவும் 5,6 டிவிஷன்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு டிவிஷனும் ஒருதாலூக்கா வென்றபெயருடன்

வழங்கிவருகின்றது. சென்ற 50 வருடங்களாக, கல்வி, போலீஸ், காடு, வைத்தியம், ஜெயில், சுகாதாரம் முதலிய விஷயங்களுக்குத் தனித்தனி இலாகா இருப்பதோடு, அவ்விலாகாவிற்குத் தனித்தனி உத்தியோகஸ்தரும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

கலெக்டர், மாஜிஸ்டிரேட்டாக இருப்பதுடன், ஜில்லா போர்டுக்கு அத்தியட்சகராகவுமிருப்பர். முனிசிபாலிடியைச் சேர்ந்த விஷயங்களில்இவருக்குப் பொறுப்புஉண்டு. இதல்லாமல், விவசாயம், சுங்கம், வருமானம் முதலிய இலாகாக்களுக்கும் தனித்தனியே ஒவ்வொரு உத்தியோகஸ்தர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இத்தகைய உத்தியோகஸ்தர்களின் பொறுப்பினாலும் கலெக்டரின் அதிகார முறைமையினாலும், ஒவ்வொருஜில்லாவின் ஆட்சியும்நடந்துவருகின்றது. கலெக்டருடன் அந்தஜில்லாவில் இதரஇலாகாவைச் சேர்ந்தவர்களுமுண்டு. கல்வி இலாகாவின் ஏற்பாடுகளைப் பார்வையிடவும், அப்போதைக்கப்போது செய்யவேண்டிய நிபந்தனைகளைச் செய்யவும் பிரத்தியேகமாக டைரக்டர் என்னும்உத்தியோகஸ்தர் ஒருவர் இருக்கிறார். பொது வேலைகளான ரோட்டுகளை மராமத்துசெய்தல்,புதிய ரோட்டுகள் போடுதல், ஏரி, குளம் முதலியவைகளுக்குக் கரைகள் போடல், கட்டட நிர்மாணஞ் செய்தல் முதலிய வேலைகளைச் செய்யும் இலாகாவிற்கு எஞ்சினீயர்களுண்டு. இந்த எஞ்சினியர்கள் நீர்ப்பாசன வேலைகளையுஞ் செய்யக்கூடும். காட்டிலாகாவிற்குக் கன்ஸர்வேடர் என்பவரொருவரிருக்கிறார். இவரே, ரிசர்வ் காடுகளின் ஏற்பாடுகள், காடுகளின் வியாச்சியங்கள் முதலிய சகல காரியங்களையுஞ் செய்யக் கடமைப்பட்டவர். போலீஸ் இலாகாவின் ஏற்பாடுகளை அடிக்கடி மேல்பார்வையிட்டுப் போலீஸ் உத்தியோகஸ்தர்களின் வேலை மாற்றம், புதிய நியமனம் முதலியவைகளைச்செய்யவும், ஜில்லாவிலுள்ள போக்கிரிகள், கொள்ளைக்காரர் முதலிய துஷ்ட ஜனங்களை அடக்கவும் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்பவரொருவருண்டு. இதல்லாமல் வைத்திய இலாகாவிற்குரிய ஆஸ்பத்திரிகள், மருந்துக் கடைகள்,இன்னும் இதர வைத்திய சம்மந்தமானஎல்லாவற்றையும் பரிசோதிக்க ஜில்லா ஸர்ஜன் என்று ஒருவர் உண்டு. இவருடன் சுகாதார பரிசோதகரான ஸானிடரி கமிஷனர் ஒருவருமுண்டு. இதல்லாமல், விவசாய டைரக்டர், நில ரிக்கார்டுகளின் டைரக்டர், ரெவினியூ செட்டில்மெண்ட் ஆபீசர் முதலியவர்களுமிருக்கின்றனர். இவர்களனைவரும் இந்தியன் ஸிவில் உத்தியோகத்தைச் சேர்ந்தவர்களாவர். மேற்கூறிய உத்தியோகஸ்தர்களின் விசாரணைகளைக் கொண்டே மாகாண கவர்ன்மெண்டும், மாகாண கவர்ன்மென்டைக்கொண்டே இந்தியா கவர்ன்மெண்டும் நடந்து சிறப்புற்று வருகின்றன.”

## நிர்வாகத்தில் நான்கு பிரிவுகள்.

ராஜாங்க நிர்வாகத்திலும் பரிபாலனத்திலும் நாம்மேலே விவரித்தபடி, அதிகாரம் பெற்ற உத்தியோகஸ்தர்களையோ ஸ்தாபனங்களையோ, நான்கு விதமாய்ப் பிரிக்கக்கூடும். அவற்றுள், இந்தியா கவர்ன்மெண்டார் எல்லாவற்றிற்கும் தலைமையானவர். அவர்கள் தாங்களே நேராகப் பரிசீலனைசெய்து நிர்வகித்து வரும் சில அதிகாரங்களைத் தவிர மற்றவைகளை மாகாண அதிகாரிகளுக்கு ஒப்புவித்திருக்கிறார்கள். அப்படி நேராகப் பரிசீலனை செய்யும் அதிகாரங்கள் இன்னவையென்று ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கின்றன. ஸாதாரணமாய்த் தினந்தோறும் நடத்தும்ஸர்க்கார் அதிகாரத்தை மாகாண கவர்ன்மெண்டார் ஏற்றுக்கொண்டு அதைத் தங்களுக்குக் கீழ்ப்பட்டு ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஜில்லா அதிகாரிகளைக் கொண்டும்,ஜில்லா அதிகாரிகளால்மேற்பார்வைபார்க்கப்பட்டுள்ள ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களைக் கொண்டும் நடத்தி வருகிறார்கள். இப்படி அதிகாரங்களை நிறைவேற்றிவருவதில், அவைகள் எம்மாதிரி பிரிவினையாகின்றனவென்பதும், எம்மாதிரி ஒன்றுக்கொன்று ஸம்பந்தப்படுகிறதென்பதும் ஒரு குறிப்பிட்ட ஸித்தாந்தத்தில் அடங்கியனவல்ல. அந்தந்த ஸ்தலகாரியங்களை அந்தந்த ஸ்தல அதிகாரிகள் நிறைவேற்றவேண்டுமென்று சொல்லக்கூடியதைத் தவிர,எந்தமட்டில் அவர்கள் தாங்களே காரியங்களை நிறைவேற்றலாம்,எதற்கு மேல்பட்டு அவர்கள் மேலதிகாரிகளின் முன் அனுமதி பெறவேண்டும், எந்தக் காரியங்களில் மேலதிகாரிகள் கீழ் அதிகாரிகளின் தீர்மானங்களையும் நடவடிக்கைகளையும் பின்பு மாற்றக்

கூடும்—என்ற பலவற்றையும் பற்றி விரிவான விதிகளும் உத்தரவுகளும் ஏற்பட்டிருப்பினும், அவற்றைச் சுருக்கமாகக் கண்டெழுதுவது ஸாத்தியமல்ல. மொத்தத்தில், இந்திய ராஜாங்கத்தில் மேலதிகாரமும் மேற் பார்வையும் ஜாஸ்தியென்றும், ஸ்வய ஆக்ஷியும் ஸ்வேச்சாதிகாரமும் குறைவு என்றும் யாரும் எளிதில் சொல்லக்கூடும்.

## சுயஆக்ஷி ஸ்தாபனங்களின் இனங்கள் விவரங்கள்.

ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்கள் படிப்படியே பெற்றிருக்கும் அதிகாரங்களையும் அடைந்திருக்கும் முன்னேற்றத்தையும் எடுத்துச் சொல்ல இங்கு முயல்வது ஸாத்தியமல்ல. அவைகள் சுமார் சென்ற 35 வருஷங்களாக ஏற்பட்டிருந்தும், நிஜமான ஸ்வய ஆக்ஷி இன்னும் பெறவில்லை யென்பதை மட்டும் யாவரும் கவனிப்பது அவசிய மாகும். அப்படி அவை பெறாததற்குக் காரணங்கள் எவ்வாறாயினும், அவைகள் அமைப்பில் ஸ்வய ஆக்ஷி யென்னும் சொல்லுக்கு விரோதமாயுள்ள ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களின் சேர்க்கையும், ஸர்க்காரால் நியமிக்கப்பட்டுள்ள மெம்பர்களின் சேர்க்கையும் இன்னும் இருந்து வருவதை முக்கியமாக கவனிக்கவேண்டும். இது விஷயத்தில் அதிகாரிகளுக்கும் ஜனத் தலைவர்களுக்கும் இருக்கும் கக்ஷி அந்யோந்ய ஆச்ரயம் என்னும் தத்வத்திற்கு உட்பட்டதாக இருக்கிறது. ஜனங்களுக்கு ஸ்வய ஆக்ஷியானது செய்யப்போதுமான ஸாமர்த்தியம் இல்லையாதலால், ஸர்க்காரின் சேர்க்கை இருப்பது அவசிய மென்பது ஒரு கக்ஷி. ஸர்க்காரின் கலப்பு இருப்பதினால் ஜனங்களுக்கு ஸ்வய ஆக்ஷி இல்லாமல் போய் விடுவதுந் தவிர, அவர்கள் ஸ்வய ஆக்ஷித் திறமையைக் காட்டவும் விருத்தியாக்கவும் இடமில்லாமல் போய்விடுகிறதென்பது மற்றொரு கக்ஷி. ஸர்க்கார் சம்பந்தத்தை விலக்கினால் ஆக்ஷியின் வலிமை குறைந்துவிடுமென்பது ஒரு கக்ஷி. அதைவிலக்காவிடில், ஸ்வய ஆக்ஷி வலிமை ஏற்படாதென்பது மற்றொரு கக்ஷி. இந்த ஸ்திதியில் ஒரு விதமாகப் பரீக்ஷை பார்த்துத்தான் ஸ்வய ஆக்ஷியை விருத்தி செய்யவேண்டுமென்ற ஜனத் தலைவர்களின் வேண்டுகோளைப் பொதுவில் ஸர்க்கார் ஒப்புக் கொண்டாலும், அனுஷ்டானத்தில் இடங் கொடுப்பது மிகவும் ஸ்வல்பமாகவே யிருந்து வருகிறது. 35 வருஷங்களுக்குமுன் லார்ட் ரிப்பன் இப்படி, பரீக்ஷை பார்த்தே ஜனங்களுக்குப் பழக்கம் செய்ய வேண்டுமென்று சொல்லி யிருந்தும், அனுபோகத்தில் அப்படி யாகவில்லை யென்றே லார்ட் மார்லி 1909-ம் வருஷம் தெளிந்த அபிப்ராயத்தைக் கண்டெழுதி, இந்த ஸ்திதியைத் திருத்த வேண்டுமென்று தாம் இந்திய மந்திரியாக இருந்த காலத்தில் பிரேரித்தார். அதன் மேல் கவர்ன்மெண்டார் பல படிகளிலும் சென்ற 5, 6 வருஷங்களாக யோசனை செய்து, இனி மேல் தான் அதற்குத் திருத்த மசோதாக்கள் கொண்டு வருவதாக இருக்கிறார்கள். ஆனால் ஏற்கனவே சிலமாகாணங்களில் அப்படித் திருத்தச் சட்டங்கள் கொண்டுவந்திருப்பதை நோக்கின், இந்த ஸ்தாபனங்களின் அமைப்பில் ஸ்வய ஆக்ஷியான பிரதிநிதிகளுடைய பாகத்தை விரிவாய் விசாலிப்பதாகக் காணப்படவில்லை. ஆனால், ஸ்வய ஆக்ஷி நிர்வாஹத்தில் ஸர்க்கார் தற்போது பிரவேசித்து உள்ளும் புறமுமாக இருவகையிலும் அமுல் செய்து வருகிறார்களென்பது அவற்றில் பழகினவர்களுக்குத் தெரிந்த விஷயம். ஸர்க்கார் நியமன மெம்பர்கள் உள்ளே ஏராளமாயிருப்பதுந் தவிர, அந்த ஸ்தாபனங்கள் செய்யக்கூடிய ஒவ்வொரு முக்ய கார்யங்களையும் ஸர்க்கார் வெளியிலிருந்து திருத்தவும் மாற்றவும் அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். தவிரவும் ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களுக்கு எந்தத் தேசத்திலும் ஸர்க்காரின் பண

உதவி அவசியமாதலால், அப்போதைக்கப்போது அந்தப் பண உதவியை ஸர்க்கார் செய்யும் காலங்களில் அதைச் செலவிடும் வகைகளில் பல விதிகளும் நிர்ப்பந்தங்களும் ஏற்படுத்தி, அதன் மூலமாய் ஸ்தல ஸ்வய ஆக்ஷி நிர்வாஹத்தில் ஏராளமான அதிகாரம் அடையக் கூடியதாயும் இருக்கிறது. இப்படிப் பலவகையில் ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்கள் ஸர்க்காருக்கு ஈடுபட்டிருப்பதைத் திருத்தும் வண்ணம் சீக்கிரத்தில் என்ன சட்ட மாறுதல்கள் செய்யப்படுமென்பதை யாவரும் ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள். இப்போதுள்ள ஸ்தல ஸ்வய ஆக்ஷிஸ்தாபனங்களின் அமைப்பு பின்வருமாறு:

"கிராமமே தேசநிர்வாகத்தில் ஆதியென நமக்கு நன்கு விளங்குகின்றது. தற்கால கிராம நிர்வாகங்களுக்கு, கிராமாதிகாரி, கணக்கன், தலையாரி ஆகிய இம்மூவர்களே முக்கியஸ்தர்களாக விருக்கின்றனர். இம்மூவரும் கவர்ன்மெண்டார் நியமிக்கப்படுகின்றனர்.

மாகாண கவர்ன்மெண்டார் மத்திய ஸ்தானத்தி லிருந்துகொண்டு, ராஜதானியைச் சேர்ந்த எல்லா பெரிய பட்டணங்களிலுள்ள ஜனங்களின் சுகாதாரங்களைக் கவனிப்பது கஷ்டமாகையால், கிராமயூனியன், முனிசிபாலிடி, தாலூகா போர்டு, ஜில்லா போர்டு முதலிய ஸ்தாபனங்களை ஏற்படுத்தி, அந்த ஸ்தாபனங்களின் உதவியைக்கொண்டு அப்பெரிய பட்டணங்களின் நிர்வாகங்களை நடத்தி வருகிறார்கள்.

கிராமயூனியன்:—இந்த யூனியன் என்ற சபையானது கிராமத்தி லுள்ள ஜனத்தொகைக்குத் தகுந்தாப்போல் மேஜர் யூனிய னென்றும், மைனர் யூனியனென்றும் இருவகைப்படும். ஜனப் பிரதிநிதிகளே இச்சபை மெம்பர்களாக விருக்கின்றனர். இச்சபை மெம்பர்களுக்குள்ளாகவே, இச்சபைக்குத் தலைமை அதிகாரியான சேர்மென் நியமிக்கப்படுகிறார். இச்சபை லோகல் போர்டின் சட்டப்படி மாதம் ஒரு முறை கூடுகின்றது.

கிராமத்திலுள்ள தெருக்களை சுத்திசெய்வதும், இராக்காலங்களில் லாந்தர் ஸ்தம்பங்களில் விளக்குப் போடுவதும், சாக்கடைத் தண்ணீர் முதலியன, தெருக்களில் ஓடாமலும், ஜனங்களின் பானத்திற்கு உபயோகமுள்ள குளங்களில் அசுத்தம் செய்யப்படாமல் பாதுகாப்பதும், இந்தயூனியன் சபையின் வேலைகள். மேற்கூறிய விஷயங்களின் நிர்வாகத்திற்கு வேண்டிய செலவிற்காக வீட்டுவரி யென்றும், கடைவரி என்றும், வண்டிவரி என்றும், வசூலிப்பதுடன், கிராம எல்லைக்குட்பட்ட பட்டுப்போன மரங்களை விற்றும், கிராமத்தில் சேரும் குப்பைகளை நிலங்களின் சொந்தக் காரர்களுக்கு எருவாகவிற்றும், அதனால் கிடைக்கக்கூடிய தொகையைக் கொண்டு பரிபாலனஞ் செய்துவருகின்றனர்.

## தாலூகா போர்டு.

இரண்டு மூன்று தாலூகாக்களுக்கு தாலூகா போர்டு என்ற ஒரு சங்கம் ஏற்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு தாலூகாவிலுள்ள முக்கிய மனிதர்களெல்லாரும் இச்சபைக்கு மெம்பர்களாக விருக்கின்றனர். இச் சபையின் முக்கிய அதிகாரிக்கு பிரஸிடெண்டு என்று பெயர். இவருக் கடுத்தபடியிலுள்ள உத்தியோகஸ்தருக்கு வைஸ் பிரஸிடெண்டு என்று பெயர்.

இப்போர்டு தன் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்ட பள்ளிக்கூடங்களைக் கட்டி அவைகளுக்குத்தேவையான சாமான்களைத் தயார் செய்துகொடுக்கவேண்டும். ரஸ்தாக்களைப் போடுவதும், மராமத்து செய்வதும், ஆஸ்பத்திரிகளை மேற்பார்வை பார்ப்பதோடு, பழைய மராமத்து வேலைகள், பாலங்கள் கட்டுவதும், கிராமத்திலுள்ள சாலைகளின் இரு புறத்திலும் பிரயாணிகளுக்கு நிழலைக் கொடுக்கக் கூடிய மரங்கள் வைத்துப் பயிர் செய்தல் முதலிய எல்லாக் காரியங்களையும் சரிவரச் செய்வதற்காகவே இப் போர்டு ஏற்படுத்தப் பட் டிருக்கின்றது.

பள்ளிக்கூடங்களில் வசூலாகும் சம்பளங்களின் வரும்படியையும், சாலையோரத்தில் அவர்களால் வைக்கப்படும் மரங்களைக் கொண்டு கிடைக்கும் வரும்படியையும், சுங்கங் கேட்வரி முதலிய வருமானத்தையும் கொண்டு இப் போர்டார் தங்களுக் கேற்பட்ட வேலைகளை நடத்திவருகின்றனர்.

கொஞ்சகாலமாகத் தான் பட்டணங்களை விருத்திசெய்யும் பொருட்டு தாலூகா போர்டு நியமனம் ஏற்பட்டிருக்கின்றது. 1858ம் வருடத்திற்குமுன் தாலூகாபோர்டு நியமனமே கிடையாது. சென்னையிலும், பம்பாயிலும் ஸ்தல விருத்தியின்பொருட்டு ஜனங்களிடமிருந்து பண்டு சேர்க்கப்பட்டது. ஆனால் ஐக்கியமாகாணங்களிலும், வங்காளத்திலும் அம்மாகாணங்களிலுள்ள பள்

விக்கட்டங்களையும், ரஸ்தாக்களையும், ஆஸ்பத்திரிகளையும் நிர்வகிக்கும்பொருட்டு செலவிடப்படும் பண விஷயங்களில், யோஜனை சொல்லும் கமிட்டியார் (Consultative Committee) ஜில்லா போர்டாருக்கு யோஜனை சொல்லி வந்தனர். ஆனால் 1871-ம் வருடம் லார்டு மேயோவின் ஆளுகை காலத்தில் ஏற்பட்ட அதிகாரப் பிரிவினை கமிஷனுடைய வேலைகளாலும் ஸ்தல நன்மைக்காக ஏற்படுத்தப்பட்ட சட்டங்களினாலுமே, தேசம் முக்கியமாய் முன்னுக்கு வந்திருக்கின்றது. மறுபடியும் லார்டு ரிப்பன் காலத்தில் ஸ்தல சுயஆட்சியின் தன்மையின் பொருட்டு சில திருத்தங்கள் செய்யப்பட்டன.

தாலுகா போர்டுகளெல்லாம் ஜில்லா போர்டின் அதிகாரத்துக்குட்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு தாலுகா போர்டாரும், எல்லாருக்கும் பொதுவாக இருக்கக்கூடிய சட்டங்களைத் நிர்மாணிப்பதற்காக, தங்கள் போர்டிலிருந்து ஓர் பிரதிநிதியைத் தெரிந்தெடுத்து ஜில்லா போர்டுக்கு அனுப்புகிறார்கள். 1883-85-ம் வருடங்களில் ஏற்பட்ட சட்டங்களினால் இப்போர்டு அதிக மாறுதலடைந்திருக்கின்றது.

ஜில்லா போர்டு.

அநேக தாலுகாக்கள் சேர்ந்த ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு ஜில்லாபோர்டு ஏற்பட்டிருக்கின்றது. இப்போர்டில் சுமார் 40-மெம்பர்கள் வரையிலிருக்கின்றனர். இப்போர்டைச் சேர்ந்த மெம்பர்கள், பிரமுகர்களாயும், கல்வி அறிவு உள்ளவர்களாயும், பெருத்த வியாபாரிகளாயும் இருக்கின்றனர். அநேகமாய் இப்போர்டைச் சேர்ந்த மெம்பர்கள் தாலுகா போர்டுகளாலும், கவர்ன்மெண்டாராலுமே நியமிக்கப்படுகின்றனர். இப்போர்டுக்குத் தலைமை உத்தியோகஸ்தர் ஜில்லா கலெக்டரே.

இச்சென்னை ராஜதானியிலுள்ள ஒவ்வொரு ஜில்லாவும் அநேக வட்டங்களாகவும், ஒவ்வொரு வட்டமும் அநேக சிறிய வட்டமாகவும் பிரிக்கப்பட்டு தாலுகாக்களுக்கும் தாலுகா போர்டு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. இத்தாலுகா போர்டுக்குமேல் அதிகாரியாக, ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு டிஸ்டிரிக்ட் கவுன்ஸில் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. பர்மாதேசத்தில் இவ்வித ஜில்லா போர்டு நியமனம் கிடையாது. ஆனால் ஒவ்வொரு டிவிஷனுக்கும் சுயேச்சையாக, வேண்டிய காரியங்களை நடத்தக்கூடிய போர்டுகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஸ்தல சுயஆட்சியின் நன்மையின் பொருட்டு, 1882ம் வருடம் லார்டு ரிப்பனால் கொண்டுவரப்பட்ட சட்டப் பிரகாரம், பர்மா தேசத்தில், ஜில்லா போர்டு ஸ்தாபனம் ஏற்படுத்தப்பட்டது. அந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்த மெம்பர்கள் ஒவ்வொருவரும் சரியான முயற்சி எடுத்துக்கொள்ளாததினால், இவ்வேற்பாடு சரிவர நடைபெறவில்லை.

இப்போர்டு மெம்பர்களைத் தெரிந்தெடுத்தனுப்பும் ஏற்பாடுகள், ஒவ்வொரு ஜில்லாவிலும் மாறுபாடாயிருக்கின்றன. வடமேற்கு எல்லை மாகாணத்தைத் தவிர மற்ற எல்லா மாகாணங்களிலும், ஜனங்கள் மெம்பர்களைத் தெரிந்தெடுத்தனுப்பும் வழக்கம் ஏற்பட்டிருக்கின்றது. ஆனால் வடமேற்கு எல்லை மாகாணத்தில் இவ்வழக்கத்தை கையாண்டுவருவது 1903ம் வருடத்துடன் நின்றுபோய்விட்டது. இச்சென்னை ராஜதானியில், ஜனங்கள் ஜில்லாபோர்டு ஒன்றுக்கே, பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்தனுப்பி வந்தார்கள். ஆனால் மறுபடியும் 1909ம் வருடத்தில் தாலுகா போர்டுக்கும் பிரதிநிதிகளை அனுப்பலாம் என்று ஏற்பாடாயிற்று. ஐக்கிய மாகாணங்களிலும் மத்திய மாகாணங்களிலும் உள்ள ஜில்லாபோர்டு, தாலுகா போர்டு முதலியவைகளின் மெம்பர்களில், ஜனப்பிரதிநிதிகளே அதிகமாக இருக்கின்றனர்.

ஜில்லா போர்டு பிரஸிடெண்டை கவர்ன்மெண்டார் நியமிப்பது, அல்லது ஜனங்கள் தெரிந்தெடுப்பது, என்னும் விஷயங் கவர்ன்மெண்டாரின் இஷ்டத்தைப் பொறுத்ததாயிருக்கின்றது. அநேக மாகாணங்களில் ஜில்லா கலெக்டரே, ஜில்லா போர்டு பிரஸிடெண்டாக இருக்கிறார். ஆனால் மத்திய மாகாணங்களில் உத்தியோகஸ்தர் அல்லாத ஒருவரையே, ஜனங்கள் பிரஸிடெண்டாக நியமனஞ் செய்கிறார்கள். ஐக்கிய மாகாணங்களில், இந்நியமன விஷயம் கவர்ன்மெண்டாரின் இஷ்டத்தைப் பொறுத்திருக்கிற படியால் அநேகமாய் ஜில்லா கலெக்டரே, பிரஸிடெண்டாக நியமிக்கப்படுகிறார். தாலுகா போர்டுகளெல்லாம், ஜில்லா போர்டின் அதிகாரத்துக்குட்பட்டேயிருக்கின்றன. ஆனால் இச்சென்னை ராஜதானியிலுள்ள தாலுகா போர்டுகளோ ஜில்லா போர்டின் அதிகாரத்துக்குட்பட்டிருந்தபோதிலும், அதிக முக்கியமில்லாத ரஸ்தாக்கள், சுகாதார ஏற்பாடுகள், சிறிய வேலைகள், ஆரம்பக் கல்விபோதிக்கும் பாட-

சாலைகள் முதலியவைகளை சுயேச்சையாகத் தங்களிஷ்டப்பிரகாரம் நடத்தி வருகின்றன.

சென்னை, அஸ்ஸாம் இவ்விரண்டு இடங்களைத் தவிர மற்ற இடங்களில் டிஸ்டிரிக்ட் போர்டு இல்லாததால், குறிப்பிட்ட வேலைகளுடனும், பொறுப்புடனும், நகர போர்டு பரிபாலன ஸ்தாபனம் ஒன்று ஏற்படுத்த வேண்டுமென்று அதிகாரப் பிரிவினைக் கமிஷன் சங்கத்தார் சொல்லி இருக்கின்றனர்.

இப்போர்டார், போர்டு பாடசாலைகளையும், மிருக வைத்திய சிகிச்சை சாலைகளையும், சுகாதார விஷயங்களையும், சத்திரங்களையும், ரஸ்தாக்களையும், இருப்புப் பாதைகளையும், ஆறுகளுக்குப் பாலம் கட்டுவதையும் கவனித்து வருகின்றனர்.

மேற்கூறிய நிர்வாகங்களை ஜில்லா போர்டார் மார்க்கட்டுகளில் கிடைக்கும் வாடகையைக்கொண்டும், சுங்கங்கேட் வரிகளைக் கொண்டும், சுகாதார வைத்தியத்தைக் கொண்டும் கிடைக்கும் வருமானத்திலுல் நடத்திவருகிறார்கள்.

முனிஸிபாலிடி.

இந்த ஸ்தாபனங்கள் நகர பரிபாலன ஸ்தாபனங்களெனப்படும். இந்த சங்கங்களின் மெம்பர்கள் ஜனப்பிரதிநிதிகளாயும், கவர்ன்மெண்டாரால் நியமிக்கப் படுபவர்களாயுமிருக்கின்றனர். இச்சங்கத்தின் தலைவருக்கு "சேர்மென்" என்று பெயர். இச்சேர்மென் என்ற உத்தியோகஸ்தர் சில சமயங்களில் பிரதிநிதிகளாலும், மற்றும் சிலசமயங்களில் கவர்ன்மெண்டாராலும் நியமிக்கப்படுகின்றனர். ஆனால் பெரும்பான்மையும் சேர்மெனாக நியமிக்கப்படுவோர்களெல்லாம் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களாகவே யிருக்கின்றனர்.

இவ்வாறு ராஜதானியிலுள்ள ஒவ்வொரு பெரிய பட்டணத்திற்கும், தனித்தனி நகர பரிபாலன ஸ்தாபன மிருந்தபோதிலும், 1842ம் வருடத்திற்குமுன் ஒருவித சட்டமும் ஏற்படாததால், முனிசிபாலிடி நிர்வாகம் சரிவர நடக்கவில்லை. ஆனல் 1850ம் வருடம் ஏற்படுத்தப்பட்ட சில சட்டங்கள் முனிசிபல் நிர்வாகங்களை சரிவர நடத்தக்கூடிய சில கமிஷனர்கள் நியமிப்பதற்கு இடங்கொடுத்தது. இவ்வாறு நியமிக்கப்பட்ட கமிஷனர்களுக்கு, வரி விதிக்கக்கூடிய அதிகாரமும் ஏற்பட்டிருந்தது. 1870-ம் வருஷம் லார்டு மேயோவின் ஆட்சி காலத்தில் மாகாண வரவு செலவு திட்டத்தை ஏற்படுத்துவதற்காகக் கொண்டுவரப்பட்ட மசோதாவில், படிப்பு விஷயமாயும் சுகாதார விஷயமாயும், வைத்திய சிகிச்சை சம்பந்தமாயும், மற்றும் பொதுவேலைகள் சம்பந்தமாயும் செலவு செய்யப்படும் பண விஷயங்களில், பொது ஜனங்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமெனத் தெரிவிக்கப்பட்டிருந்தது. 1871-74-ம் வருஷங்களில் ஏற்படுத்தப்பட்ட முனிசிபல் சட்டங்கள், பொதுஜனப் பிரதிநிதி நியமனத்தை விருத்திசெய்தன. மறுபடியும் 1881-82-ம் வருஷம் லார்டு ரிப்பன் காலத்தில் ஸ்தல சுய ஆட்சியை முன்னுக்குக் கொண்டுவரும் பொருட்டு சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. இவ்வாறு செய்யப்பட்ட சீர்திருத்தங்கள், முனிசிபல் ஸ்தாபனங்களையும் அவைகளுக்குரிய வேலைகளையும், அதிகாரங்களையும் மாற்றியதல்லாமல், பிரதிநிதி நியமனத்தையும் அதிகப்படுத்தி, கமிட்டியின் தலைமை உத்தியோகத்தை வகிக்க சேர்மென் ஒருவரை நியமிக்கவும் இடங்கொடுத்தன.

முனிசிபல் நிர்வாக ஸ்தாபனங்கள் பல இடங்களில் ஏற்பட்டிருக்கின்றன. முனிசிபல் கமிட்டியைச் சேர்ந்த ஜனப்பிரதிநிதிகள் 1901-1902-ம் வருஷங்களில் குறைவாக இருந்தபோதிலும், 1911-12ம் வருஷத்தில் அக்கமிட்டியைச் சேர்ந்த மெம்பர்களில் பாதிக்கு மேலாகவே இருந்தார்கள். உத்தியோகஸ்தர்களல்லாத வர்களும் இந்தியர்களும் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்படும் வழக்கம், 1901-ம் வருஷத்தில் ஜாஸ்தியாகவே இருந்தபோதிலும், பிரதி வருஷமும் அதிகப்பட்டுக்கொண்டே வந்திருக்கிறது. பம்பாய், சென்னை, இரங்கூன், வங்காளம், பீஹார், ஒரிஸா, ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்கள் முதலிய இடங்களில் ஜனப்பிரதிநிதிகளதிகமாகவே யிருக்கின்றனர். ஆனல் வடமேற்கு எல்லை மாகாணம், பெலுஜிஸ்தானம் முதலிய இடங்களில் பிரதிநிதி மெம்பர்களே கிடையா. பர்மா தேசத்திலோ ஜனப் பிரதிநிதிகள் மிகவும் சொல்பமாக விருக்கின்றனர். இரங்கூனைத் தவிர மற்ற இடங்களிலுள்ள முனிசிபல் ஸதாபனங்களின் பிரதிநிதிகளில் உத்தியோகப்பற்றில்லாதவர்கள், உத்தியோகஸ்தர்களைக் காட்டிலும் அதிகமாயும் இந்தியர்கள் ஐரோப்பியர்களைக் காட்டிலும் அதிகமாயு மிருக்கின்றனர். ஒவ்வொரு முனிசிபல் ஸ்தாபனங்களாகப் பார்த்துவருவோமானல், அநேகமாய் அந்த ஸ்தாபனங்களைச் சேர்ந்த கமிஷனர்களெல்லாருஞ் ஜனங்களால் தெரிந்தெடுக்கப் பட்டவர்களாகவே

யிருக்கின்றனர். பெரிய முனிசிபாலிடிகளுக்கு முனிசிபல் வார்டைச் சேர்ந்தவர்களாலும் அல்லது ஜனங்களின் தனித்தனி வகுப்பைச் சேர்ந்தவர்களாலும், சிற்சில இடங்களில் அவ்விரு இனத்தைச் சேர்ந்தவர்களாலும் பிரதிநிதிகள் அனுப்பப்படுகிறார்கள். வோட்டுக்கொடுக்க அதிகாரமுள்ளவர்கள் இவ்வளவு வயதுக் குட்பட்டிருக்க வேண்டுமென்றும், இன்ன அந்தஸ்துள்ளவர்களாயு மிருக்கவேண்டு மென்றும் சில நிபந்தனைகளிருக்கின்றன. இம்முனிசிபல் சங்க அதிகாரியாகிய சேர்மென் சில சமயங்களில் அந்தந்த கவர்ன்மெண்டாராலும், பெரும்பான்மை முனிசிபல் கமிஷனர்களாலும் நியமிக்கப்படுகிறார். சென்னை, மத்திய மாகாணம், கிழக்கு வங்காளம், மேற்கு வங்காளம் முதலிய மாகாணங்களில் தான், உத்தியோகஸ்த ரல்லாதவர்களே பெரும்பாலும் சேர்மெனாக நியமிக்கப்பட்டிருக்கின்றனர். ஆனால் பம்பாய் ராஜதானியிலும், வரவர உத்தியோகஸ்தரல்லாதவர்களே நியமிக்கப்படுகின்றனர். பணவிஷயமாயுள்ள காரியங்களிலெல்லாம், கவர்ன்மெண்டாரின் அதிகாரமே மேற்பட்டிருக்கின்றது. உதாரணமாக முனிசிபல் வரவு செலவு திட்டம், வரி விஷயமாய் ஏற்பட வேண்டிய மாறுதல்கள் முதலியனவெல்லாம் கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டுதான் செய்யப்பட வேண்டியிருக்கின்றன. முனிசிபாலிடிகளுக்கு அதிக சுதந்திரங்கள் கொடுக்கப்பட வேண்டுமென்று, அதிகாரப் பிரிவினை கமிஷன் சங்கத்தார் தெரிவித்திருக்கிறபடியால், சுதந்திரங்கள் கொடுப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

இந்தியாவிலுள்ள சேர்மென் 695 பேரில், கமிஷனர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட 222 பேர் உத்தியோகஸ்தரல்லாதவர்களாயும், 248 பேர் உத்தியோகஸ்தர்களாயும், 51 பேர் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தரல்லாதவர்களாயும், 174 பேர் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களாயுமிருக்கின்றனர். முனிசிபல் நிர்வாகத்திற்காக உத்தியோகஸ்தரல்லாதவர்களே, நியமிக்கப்பட வேண்டுமென்று இந்திய ராஜீய வாதிகள் சொல்லுகிறபடியால் சுதேச கவர்ன்மெண்டார் கூடியவரையிலும் உத்தியோகஸ்த ரல்லாதவர்களையே நியமித்துவருகின்றனர். இன்னும் சிற்சில முனிசிபல் ஸ்தாபனங்களில் சேர்மெனையே நியமித்து அச்சேர்மெனுக்கு சம்பளமும் கொடுத்துவருகின்றனர் இவ்வித ஏற்பாட்டினால் முனிசிபல் நிர்வாகம் சரிவர நடைபெற்று வருகிறது.

இப்பரிபாலன சங்கத்தின் வேலைகளாவன:—பொது ஜனக்காபந்து, சுகாதாரம், கல்விபோதனை, ரஸ்தாக்கள் போடுவது, ரஸ்தாக்களில் அசுத்தமின்றிப் பார்த்துக் கொள்ளுதல், இரவில் ஜனங்களின் போக்குவரத்து நன்மையை உத்தேசித்துத் தெருக்களில் விளக்குகள் போடுவது, முனிசிபல் ஸ்தாபனத்தைச் சேர்ந்த கட்டிடங்களை மேல்பார்வை செய்தல், தெருக்களில் சாக்கடைத் தண்ணீர் வழிந்து பாயாவண்ணம் சாக்கடை கட்டுதல், தண்ணீர் சப்ளை செய்தல், கொள்ளை நோய்கள் பரவவொட்டாமல் தடுத்தல் முதலியனவாம்.

மேற்கூறிய இந் நிர்வாகங்களை, மார்க்கெட் வாடகையைக் கொண்டும், கசாப்புக் கடைவரி, வீட்டுவரி, சொற்ப நிலவரி, வெளியூர்களிலிருந்து கொண்டு வரப்படும் சாமான்களின் தீர்வை, உத்தியோகவரி, வியாபாரவரி, வண்டி லைசென்ஸ், தண்ணீர் வரி, சுங்கவரி, ஆறுகளிலும், கால்வாய்களிலும் செல்லும் படகுகளுக்குப் போடப்படும் வரி, முதலான வரிகளினால் கிடைக்கும் பணத்தைக்கொண்டும் நடத்துகின்றனர். 1911-12-ம் வருஷத்தில் பிரிட்டிஷ் இந்தியாவில் போடப்பட்ட முனிசிபல்வரியானது சராசரி ஆள்ஒன்றுக்கு 2·95-ரூபாய். ஆனால் அவ்வருஷத்தில் சென்னையில் போடப்பட்ட முனிசிபல்வரி ஆள் ஒன்றுக்கு 1·35 ரூபாயும், குடகு தேசத்தில் போடப்பட்ட வரி ஆள் ஒன்றுக்கு 1·02 ரூபாயுமாக இருந்தபோதிலும், வடமேற்கு எல்லை மாகாணத்தில் ஆள் ஒன்றுக்கு 3·08 ரூபாயும் பஞ்சாப் மாகாணத்தில் ஆள் ஒன்றுக்கு 2·38 ரூபாயும் போடப்பட்டிருக்கின்றன.

## மாகாண சபைகள்.

ஸ்தலங்களில் ஸ்வய ஆட்சி ஸ்தாபன முறைமை இப்படியிருக்க, அவைகளுக்கு மேல் மாகாணங்களில் ஏற்பட்டிருக்கும் சபைகளின் ரீதியை இப்போது விசாரிப்போம். அதிகாரவிபாகத்தில் முக்கியமாய், ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் மாகாணஸ்தாபனங்களுக்கும் ஒரு முக்கிய வித்தியாசமுண்டு. ஸ்தல ஸ்தாபனங்கள் நிர்வாகத்திற்காக மட்டும் ஏற்படுகின்றனவே யொழிய,

கோட்பாடுகளையோ சட்டங்களையோ ஏற்படுத்தி,வரிகளை விதித்து அவற்றை யெல்லாம் அதிகாரிகளைக்கொண்டு நிறைவேற்றி வைக்கும் பொறுப்பை வகிப்பதில்லை. மாகாண ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்களோ சட்ட நிர்மாணம் செய்வதற்கும் வரிவிதிப்பதற்கும் அதிகாரம்பெற்று, அவ்வதிகாரங்களை ஆகவேண்டிய ராஜ்ய தந்திரத்தில் செலுத்தி வருகின்றன. ஆனால், சட்ட நிர்மாண அதிகாரமும் நிர்வாஹ அதிகாரமும் வெவ்வேறானாலும், நாம் இதற்கு முந்தி யெடுத்துக் காட்டியபடி, சட்ட நிர்மாண அதிகாரம் எல்லாவற்றிற்கும் மேலானதுந் தவிர, நிர்வாஹ அதிகாரம் சட்டங்களை நிறைவேற்றுவதும் அவற்றிற்குட்பட்டு நடத்துவதுமே ஆகும். என்றாலும், நிர்வாக அதிகாரம் இப்படிச் சட்ட நிர்மாண அதிகாரத்திற்கு உட்படுவது எப்படி என்பதை, மேல்நாடுகளில் பல நூற்றாண்டுகளாக அனுபோகத்தில் கண்டுகொண்டபடி இருவகையாய்ப் பிரித்திருக்கின்றனர். நிர்வாஹ அதிகாரம் தாழ்ந்ததாக வெளிப்படையாயில்லாவிடினும்,அவ்வதிகாரத்தை அந்தரங்கத்திலும், முடிவிலும் சட்ட நிர்மாண ஸபைகளின் அதிகாரத்திற்குக் கீழாகவே அமைத்து விடுவதே நலமென்பது பிரிட்டிஷ் ராஜாங்க அனுபவத்தில் முக்கியமானதாகும். அமெரிக்கா, ஜெர்மனி முதலிய இதர தேசங்களில் இவ்விரு அதிகாரத்தையும் தனித்தனியே பிரித்து வைத்து, அவைகளுக்குள் நேரிடும் விவாதங்களைத் தெளிவிப்பதற்கு, ராஜ்ய ரீதிக்காக ஏற்பட்டிருக்கும் மூலாதார சட்டத்தைக்கொண்டு தீர்மானம்செய்யும்படி மேலான நியாய ஸ்தலத்திற்கு அதிகாரம் கொடுத்து நடத்துவது ஸரியாகுமென்று கொள்ளப்பட்டிருக்கிறது. இது விஷயத்தின் தத்துவத்தையும் நியாயத்தையும் நாம் இங்கு விசாரிக்க ஸாத்தியமில்லை. ஆனால், பிரிட்டிஷ் முறைமையை அனுஸரித்த இந்தியாவில் சட்ட நிர்மாண ஸபைகள்ஏற்பட்டிருந்தும், அச்சபைகளில் நிர்வாக அதிகாரம் பெற்ற கவர்ன்மெண்டாரே முற்றிலும் நடவடிக்கைகளை தங்கள்வழியில்கொண்டு வரக்கூடிய சக்தியை வைத்துக்கொண்டிருப்பதால், முடிவில் நிர்வாக அதிகாரமே மிகவும் வலுவடைந்ததாக விருப்பதை நாம் கவனிக்கவேண்டும். நமது சட்ட சபைகளின் அமைப்பையும் அவைகளின் சரித்திரத்தையும் அடியில் சுருக்கமாகக் காணலாம்:—

### சட்ட நிருமாணப்பொறுப்பு.

இந்நாட்டின் சட்டதிட்டங்களின் ஏற்பாடுகளை நோக்குமிடத்து, சட்டங்கள் மாகாண அரசாங்க சட்ட நிருமாணிகளாலேயே அமைக்கப்பட்டிருக்கின்றன வென்பது தெரியவரும். சென்னை, பம்பாய் மாகாணங்களைச் சேர்ந்த சட்ட சபைகளின் அதிகார நிர்மாணப் பொறுப்புகளனைத்தும், இதற்கென்று நியமிக்கப்பட்டிருக்கும் மெம்பர்களின் முன்னிலையில் தீர்மானிக்கப்படும். 1861-ம் வருஷத்திய இந்தியன் கவுன்ஸில்களின் சட்டப்படி, சட்ட சபையின்றி புதிய லெப்டினண்ட் கவர்னர்களை நியமிக்கக்கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது. 1861,1892, 1909-ம்வருடங்களின் இந்தியன் கவுன்ஸில் சட்டப்படி இந்தியாவிலுள்ள சட்ட சபைகளின் பொறுப்பும், அதிகாரமும் நடந்து வருகின்றன. சட்ட சபைகளில், ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்ட மெம்பர்களும், சர்க்காரால் நியமிக்கப்பட்ட மெம்பர்களும் இருக்கின்றனர். கவர்ன்மெண்டார் கொண்டுவரும் ஒவ்வொரு சட்டமும் நன்றாக வாதிக்கப்பட்ட பின்னரே, தீர்மானிக்கப்படுகின்றது. சர்க்காரால் நியமிக்கப்பட்டமெம்பர்களோ, சட்டதீர்மானமானது நாட்டுக்காவது, பொது ஜனங்களுக்காவது நன்மையைச் செய்யுமா செய்யாதா என்பதை யோசிக்காமலேயே, கவர்ன்மெண்டாரால் கொண்டுவரப்படும் ஒவ்வொரு தீர்மானத்தையும் ஆமோதிக்கின்றனர். பொது ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்ட மெம்பர்களனைவரும் ஒருங்குகூடி, சிற்சில தீர்மானங்களைக்கண்டனஞ்செய்து, அவைகள் நாட்டிற்குதவா வென்று கூறினும், பிரயோசனப்படவில்லை. ஏனெனில், இந்தியா சட்ட சபையில் சர்க்கார் மெம்பர்களின் சங்கியை அதிகமாயிருப்பதினால், அவர்களின் மெஜாரிடி அதிகமாகி, பொது

ஜன மெம்பர்களின் வாக்கானது, கடலிற் கரைத்த புளிபோலாகின்றது. மாகாண சட்டசபைகளுக்குக் கவர்னர்களே அக்கிராசனாதிபதியாகவும், ராஜப்பிரதிநிதியின் சட்டசபைக்கு ராஜப்பிரதிநிதியான கவர்னர் ஜெனரலே அக்கிராசனாதிபதியாகவும் இருக்கின்றனர். சர்க்கார் மெம்பர்களிற் சிலர், சட்ட சபையில் என்ன தீர்மானிக்கப்படுகிறது, யார் வாதஞ்செய்கிறார், என்றசங்கதிகளில் யாதொன்றையுமே யறியாது, சர்க்கார் பக்கம் சேர்வதே கடமையாகக் கொண்டிருக்கிறார்கள். தவிர தங்கள் மனதிற்குத் தோன்றும், நன்மை தீமைகளைப்பற்றி யோசனை செய்யாமல், தீர்மானங்களை ஆமோதிக்கின்றனர்.

இனி பொது ஜனங்களால் தெரிந்தெடுக்கப்படும் மெம்பர்கள் இங்கிலீஷ் தெரியாதவர்களாயு மிருக்கலாம். பிறர் கொண்டுவரும் தீர்மானங்கள் முதலிய சகல நடவடிக்கைகளையும் தர்ஜமா செய்து இவர்களுக்குத்தங்கள் சுயபாஷைகளிலேயே அச்சிட்டுக் கொடுக்கப்படும். இதைக்கொண்டு அவர்கள் தங்கள் ஸ்வய அபிப்பிராயங்களைக் கொடுக்கலாம். பொதுஜனப்பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்படும் மெம்பர்கள் கடன்காரர்களாகவும், தண்டனை யடைந்தவர்களாகவும், ஸ்திரீகளாகவும், யுக்த வயது வாராத மைனர்களாகவும், பைத்தியம் பிடித்தவர்களாகவு மிருக்கக்கூடாது. இத்துடன் சர்க்கார் உத்தியோகத்தினின்றும் தள்ளுபடியானவர்கள், இதர தேசத்தவர்கள், தள்ளுபடியான வக்கீல்கள், நோயாளிகள், பொதுஜன அபிப்பிராயத்திற்கு மாறான செயல்களைக் கொண்டவர்கள் ஆகிய இத்தன்மையோர் சட்டசபை மெம்பர்களாக மாட்டார்கள். மகம்மதிய சமூகப் பிரதிநிதி மெம்பர்கள், பெருத்த பண்ணையார்களின் பிரதிநிதி மெம்பர்கள், ஆகிய இவர்களும் மாகாண மெம்பர்களாக சட்ட சபையைத் தழுவி யிருக்கின்றனர். சட்ட சபைகளில் உட்கார்ந்து, சட்டங்களைத் தீர்மானிப்பது சாதாரணமான காரியமல்ல. இந்தியாவைச் சேர்ந்த எல்லா ஜனங்களுக்கும், எல்லா நியாயங்களுக்கும் எல்லா விடங்களுக்கும் சட்டங்கள் ஏற்படுத்தவும், பிரபஞ்சத்தின் காணுபாகங்களிலுமுள்ளபிரிட்டிஷ் ஸ்வதேச குடிகளுக்குச் சட்டங்கள் ஏற்படுத்தவும், இந்தியாவிலும் இந்தியாவின் வெளிப்பாகங்களிலும் வசிக்கும் எல்லா கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்களுக்கும், பிரிட்டிஷ் ஆங்கிலேய குடிகளுக்கும் சட்டங்கள் ஏற்படுத்தவும், இந்தியாவிலே இராணுவத்தைச் சேர்ந்தவர்களுக்கும், கடல் படையைச்சேர்ந்தவர்களுக்கும்சட்டங்களேற்படுத்தவும், சட்டசபை மெம்பர்கள் அதிகாரமுள்ளவர்களாகின்றனர். இந்தியாவைச் சேராத எந்த ஆங்கிலேய சட்டங்களும் இந்தியாவில் அனுஷ்டிக்கப்பட மாட்டா. இந்தியன் கவர்ன்மெண்டால் தீர்மானிக்கப்படும் சிற்சில சட்டங்களை ரத்துசெய்யவும் சீர்திருத்தவும் சட்டசபையாருக்கு அதிகாரமில்லை. பார்லிமெண்டால் கொண்டுவரப்படும் சட்டங்களைக் கண்டனஞ் செய்யவும் இங்கிலாந்திலுள்ள சட்டங்களைக் கண்டனஞ் செய்யவும் சட்ட சபைக்கு அதிகாரமில்லை. இந்தியா கவர்ன்மெண்டைச்சேர்ந்த செக்ரிடெரியின் உத்தரவின்றி யாதொரு சட்டங்களையுஞ்செய்யவொண்ணாது. இதன்றி, பிரிட்டிஷ் ஆங்கிலேயர்களுக்கு மரண தண்டனை விதிக்கவும், ஹைகோர்ட்டுகளை எடுக்கவும், இச்சட்ட சபைக்கு அதிகாரமில்லை. இம்மாதிரியான நிலைமையிலேயே இந்நாட்டின் சட்டசபைகள் நடந்தேறிவருகின்றன.

## உத்தியோகஸ்தர்களும் சுய ஆக்ஷியும்.

பொதுவாக ஸ்வய ஆக்ஷி ஸ்தாபனங்கள் செய்யக்கூடிய காரியங்களுக்கும், சம்பளம் பெற்ற சர்க்கார் அதிகாரிகள் செய்யக்கூடிய காரியங்களுக்கும் உள்ள வியவஸ்தையை, மேல் நாடுகளில் அடிக்கடி வாதித்து நிர்ணயம் செய்திருக்கின்றார்கள். ஆனால், பிரிட்டிஷ் தேசங்களில், இதைப்பற்றிக் கொண்டிருக்கும் கொள்கைகள் நமது தேசத்தில் பிரஸ்தாபத்திற்குவந்திருக்கின்றனவே யன்றி, அனுஷ்டானத்திற்கு வந்திருப்பதாகச் சொல்வதற்கில்லை. பிரிட்டிஷ் தேசங்களில் ஒவ்வொரு விதத்திலும், ஜனங்களின் நிர்வாகங்களை ஜனங்களுடைய பிரதிநிதிகள் நடத்திவரவேண்டுமென்பது ஸ்திரமான ஸித்தாந்தம். நாம்இதன் முதலில் விவரித்தபடி, சட்ட நிர்மாணஞ்செய்வதிலும் ராஜாங்க வரிவிதித்துச் செலவு செய்வதிலும், வோட்டு மூலமாய்த் தெரிந்தெடுக்கப் பட்ட ஜனப்பிரதிநிதிகளின் அனுமதி அவசியமென்பது இந்த சித்தாந்தத்தின்

முதலிரண்டு பிரிவுகளாகும். தேசத்தின் நியாய விசாரணைகளிலும் தண்ட நீதியிலும் ஜனங்களின் பிரதிநிதிகளை ஜூரிகளாக ஏற்படுத்தி நியாயம் செலுத்துவதென்பது மூன்றாவது பாகமாகும். இதைத்தான் மேல் நாடுகளில், "ஜூரிமார்களுடன் கோர்ட்டு விசாரணைகள் செய்வது" என்று சொல்வது வழக்கம். ஒருவனைத் தண்டிக்கு முன், அவனைப் போலொத்த மனுஷ்யர்களை ஒரு மத்தியஸ்த ஜூரியாகச் சேர்த்து, அவன்பேரில் சுமத்தியிருக்கும் குற்றத்தை அவர்கள் முன் ருஜுப்படுத்தி, அவன் தண்டனைக்குள்ளாவானா, ஆகமாட்டானா, என்னும் அபிப்பிராயத்தை அவர்கள் வெளியிட்டபிறகே அவனுக்கு சிக்ஷை விதிக்கவேண்டுமென்பது பிரிட்டிஷ் ஆக்ஷியில் ஆதிமுதல் ஏற்பட்ட கொள்கை. ஆனால், கோர்ட்டு விசாரணைக்கு ஏற்படும் பிரதிநிதிகள், சட்ட நிர்மாணத்திற்கும் வரி விதிப்பதற்கும் ஏற்படும் பிரதிநிதிகளைப்போல் தெரிந்தெடுக்கப்படுவதில்லை. அவர்களின் பெயர்களைக் குலுக்கிப் போட்டோ, அல்லது கூட்டத்தில் கண்டெடுத்தோ, நியமிப்பது வழக்கமாயும் ஒழுங்காயும் இருக்கிறது. ஏனெனில், நியாய விசாரணையையும் முடிவையும் வோட்டு மூலமாய்ச் செய்வது பிசகாகும். ஆதலின், எவ்விதத்திலும் ஜன நிர்வாகத்தில், ஜனங்களின் வாக்கு ஸித்தாந்தமாக ஏற்படுவது பிரிட்டிஷ் ராஜ்ய அமைப்புகளுக்கு ஒத்ததாகிறது.

இந்தப்படி எல்லா ராஜ்ய காரியங்களிலும் ஜனாபிப்பிராயங்களை முன்னிட்டு ராஜாங்க நிர்வாகம் செய்துவருவது இந்தியாவில் பிந்திய நடவடிக்கையாய் ஏற்பட்டதால், ஆதிமுதல் சம்பளம் பெற்ற அதிகாரிகளால் ஆங்காங்கு ஸ்தலங்களிலும் ஜில்லாக்களிலும் நிர்வாஹ அதிகாரம், நியாயாதிகாரம் முதலியவைகள் நடத்திவரப்பட்டு, அந்த ஏற்பாடுகள் இன்னும் பெரும்பாலும் அனுஷ்டானத்தில் இருந்தே வருகின்றன. அப்படிப்பட்ட அதிகாரங்கள் இன்னின்ன இலாக்காகளில் இன்னின்ன விதமாய் நடைபெற்று வருகிறதென்றும் பின்னால் அறிவிக்கப்பட்டிருக்கிறது. அதில் இங்கு நாம் முக்கியமாக எடுத்துரைக்க வேண்டிய அம்சங்கள் மேற்சொல்லியவைகளைத் தவிர வேறொன்றும் இந்தச் சிறிய ஆராய்ச்சிக்கு அவசியமாகத் தோன்றவில்லை. ஆனால் பிரிட்டிஷ் ஆக்ஷி முறைமையில், நீதிபரிபாலனமுறையின் சிரேஷ்ட குணங்கள் நமது இந்தியாவில் ஆதிமுதலிருந்து வருவதால், அதன் முக்கிய அம்சங்களையும், கோர்ட்டுகளின் நீதிமுறையையும், அடியில் குறிப்பிட்டிருக்கிறோம்:—

### சட்டங்களும் நியாயபரிபாலனமும்.

ஒரு நாட்டின் இராஜாங்க முறையை யறிவதற்குச் சட்டமே அத்தாட்சி. சட்டமின்றி நியாய பரிபாலனஞ் செய்தல்முடியாது. பிரபஞ்சத்தில் மனிதர்கள் குற்றஞ் செய்யாமலிருப்பது சட்டத்தின் பயத்தினால் தான். சட்டமே, அர்த்தத்தையும், தர்மத்தையும், காமத்தையும் காப்பதினால், இதற்குத் திரிவர்க்கம் எனப்படும். நல்லோர்களை இரட்சிப்பதும், தீயோர்களைத் தண்டிப்பதும், இச்சட்டமே. இச் சட்டத்தின் மாட்சியினாலேயே நாடு சீர்திருந்துவதும், நாட்டினர் சத்சனர்களாவதும் சுபாவமாயிருக்கின்றன. இந்நாட்டில் வெகு காலமாக சட்டங்கள் ஏற்பட்டு வருகின்றன. அன்னிய நாடுகள் நாகரீகமின்றி மிருகப்பிராயமா யிருந்த காலத்தில், இந்நாடு கல்வி கேள்விகளிலும் சட்ட திட்டங்களிலும் உயர்ந்த பதவியை யடைந்திருந்ததென்பதற்கு மனுஸ்மிருதி முதலான சட்ட சாஸ்திரங்களே சான்றாகும். இம் மனுஸ்மிருதியைக் கொண்டே இந்நாட்டில் இன்றைக்கும் சட்டத் தீர்ப்பு நடந்து வருகின்றது. கிரீக் தேசத்தவரான

மெகஸ்தீனிஸ் என்பவரும் சீன தேசத்தவர்களான பாயியான், ஹியோன் ஸங் என்பவர்களும், பதினெட்டாவது பத்தொன்பதாவது நூற்றாண்டுகளில் வசித்த சாஸ்திர நிபுணர்களான ப்னினி, மாக்ஸ் முல்லர், மாக்ஸ்டன்கர், மானிங் அம்மை, ஸர் வில்லியம் ஜோன்ஸ், ஸர் வில்லியம் ஹண்டர், ஸர் மானியர், மானியர் வில்லியம்ஸ் ஆகிய இவர்களும் இந்நாட்டு சட்ட சாஸ்திரங்களை வெகு கௌரவமாகக் கொண்டாடி, அவைகள் வெகு சாதுர்யமாயும், நாகரீகமாயும் செய்யப்பட் டிருக்கின்றனவென்று கூறியிருக்கின்றனர். இந்நாட்டில் இந்து ராசாக்கள் ஆண்ட காலத்திலும், மகம்மதியர்கள் ஆண்ட காலத்திலும், அவரவர்களின் சாஸ்திரங்களை யொட்டியும் ஆசாரங்களை யொட்டியுமே சட்டங்கள் நிர்மாணிக்கப்பட்டன. இங்கிலாந்திலுள்ள சட்டங்களுக்கும் தற்பொழுது இந்தியாவிலுள்ள சட்டங்களுக்கும் வெகு வித்தியாசமுண்டு. சென்னை, பம்பாய், வங்காள மாகாணங்கள் தனித்தனியே சட்டங்களை ஏற்படுத்திக்கொண் டிருந்தன. இச்சட்டங்களுக்குரிய சர்வாதிகாரத்தையும் கவர்னர் ஜெனரலென்பவரே வகித்திருந்தார். இவர் முதல் முதலில் வங்காளத்திற்கு மட்டும் சட்டங்களை ஏற்படுத்தும் பொறுப்பைப் பெற்றிருந்தார். ஆனால் 1834-ம் வருடத்திய சாஸன சட்டப்படி அன்று தொட்டு இன்றுவரை பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள எல்லா பாகங்களுக்கும் சட்டத்திற்குரிய அதிகாரங்களை கவர்னர் ஜெனரல் பெற்றிருக்கிறார். இது முதற்கொண்டு சட்டங்களில் அநேக சீர்திருத்தங்க ளுண்டாயின.

### பார்லிமெண்டின் ஏற்பாடுகள்.

1773-ம் வருடத்திய சட்டத்தின் பிரேரணையால், சட்ட சபையொன்று ஸ்தாபிக்கப்பட்டது. ஈஸ்டு இந்தியா கம்பெனியைச் சேர்ந்திராத பிரபுக்கள் நால்வரைச் சட்டசபை மெம்பர்களாக நியமிக்கவேண்டுமென்றும், இராணுவ சேனாதிபதியையும் சட்ட சபை மெம்பராகச்செய்யவேண்டுமென்றும், மசோதா ஒன்று பிறந்தது. இதல்லாமல், ஹைகோர்ட்டைச் சேர்ந்த பிரதான ஜட்ஜியொருவரும், சாமானிய ஜட்ஜியொருவரும் சட்டசபை மெம்பர்களாக நியமிக்கப்பட்டார்கள். சென்னை, பம்பாய், வங்காளம்,வடமேற்கு மாகாணம் முதலிய இராஜதானிகளிலுள்ள கவர்னாவர்களின் நியமனத்தினால் ஆங்காங்குள்ள பிரபுக்கள் கவர்னர் ஜெனரலின் சட்டசபைக்கு மெம்பராக நியமிக்கப்படுவார்கள்.

### இந்தியாவில் சட்ட நிர்மாணம்.

இவ்வேற்பாடு 1861-ம் வருஷ வரையில் நடந்தேறி வந்தது. அப்பால் இந்திய சட்டசபையின் புதிய சட்டப்படி வங்காளம், பம்பாய், சென்னை முதலிய மாகாணங்களில் தனித்தனியே அந்தந்த மாகாண கவர்னரின்கீழ் சட்டசபைகள் ஸ்தாபிக்கப்பட்டன. சட்டசபையின் மெம்பர்களில், இராஜப்பிரதிநிதி, சேனாதிபதி, ஆகிய இவர்களும், இந்தியன் ஸிவில் ஸர்விஸ் உத்தியோகத்தைச் சேர்ந்தவர்களாவது அல்லது இந்தியன் வைத்திய உத்தியோகத்தைச் சேர்ந்தவர்களாவது மூன்று மெம்பர்களும், 5 வருட அனுபோகமுள்ள பாரிஸ்டர் ஒருவரும், அரசிறை கணக்குக்குரிய மெம்பர் ஒருவரும், பொது இலாகாவைச்சேர்ந்த மெம்பர் ஒருவருமாக 6 மெம்பர்களும், இதல்லாமல், இன்னும் 6 மெம்பர்களுக்குக் குறையாமல் 12 மெம்பர்களுக்கு அதிகப்படாமலிருக்கும் சர்க்கார் உத்தியோகமில்லாத வேறு மெம்பர்களுமாக யிருக்கின்றனர். முதல்முதல் இச்சபைக்குரிய மெம்பர்களின் தொகை 20. நிர்வாக சபையை ஏழு இலாகாவாகப்பிரித்து ஒவ்வொரு இலாகாவிற்கும் தனித்தனி மெம்பரொருவரைப் பொறுப்புள்ளவாக நியமிக்கப்பட்டிருக்கிறது. இங்கிலாந்திலுள்ள சகல இலாகாவிற்கும் இந்தியாவிலுள்ள எல்லா இலாகாவிற்கும் எங்ஙனம் மாறு

பாடுகளிருக்கின்றனவோ அங்ஙனமே சட்ட இலாகாவிற்கும் வித்தியாசங்களிருக்கின்றன. (1) இங்கிலாந்தில் இந்தியாவைப்போல் சட்ட நிரூபண சபையொன்று பிரத்தியேகமாக ஸ்தாபிக்கப்படவில்லை. (2) சட்ட சபைக்குரிய இந்திய மெம்பர்களுக்கு சட்ட ஏற்பாடுகளை ஆமோதிக்க அதிகாரமுண்டேயல்லாது, இராஜாங்க நிர்வாகத்திற்குரிய அதிகாரங்களை வகிக்க இடமில்லை. (3) உயர்தர உத்தியோகங்களை வகிக்கும் சிற்சில இந்திய மெம்பர்களுக்குச் சட்டசபையில் மெம்பர்களாக இருப்பதற்குக் குறித்த காலம் 5 வருடம் ஏற்பட்டதினாலே, நாட்டிற்குரிய சட்டங்களை அப்போதைக் கப்போது பிறப்பிப்பதினால் இம்மெம்பர்களுக்குச் சட்ட நிர்வாகங்களைச் செய்யப் போதுமான சௌகரியங்க ளில்லாமையால், இந்திய மெம்பர்கள் கொண்டுவரும் புதிய சட்டங்கள் ஈடேறாமற் போகின்றன. இன்னும் யோசிக்குமிடத்து, சட்ட இலாகாவானது, இந்திய கவர்ன்மெண்டைச் சேர்ந்ததாகத் தெரியவில்லை. இங்கிலாந்திலுள்ள ஹோம் கவர்ன்மெண்டிலுள்ள செக்ரிடெரிகளுக்குச் சட்டங்களை ஏற்படுத்த வேண்டுமென்றிருந்தால், அவர்கள் சட்டங்களை ஏற்படுத்தவும், இந்திய கவர்ன்மெண்டார் ஆமோதிக்கவுமாக இருப்பதே தவிர, இந்திய நாட்டின் நிலைமையையறிந்து, இந்தியர்களைக் கொண்டு சட்டங்களை ஏற்படுத்துவதாகத் தெரியவில்லை.

### சட்ட நிர்மாண ரீதி.

இக்கோளாறுகளை லார்ட் மேயோவும், ஸர் ஹென்றி மெயின் பிரபுவும் அறிந்து, சிற்சில பரிகாரங்களைச் செய்ய முன் வந்தார்கள். நாட்டைச் சேர்ந்த சிலபாகங்களில் மசோதாக்களை ஏற்படுத்துவதா யிருந்தால், அப்பாகங்களுக்குரிய ஸ்தல கவர்ன்மெண்டின் அபிப்பிராயத்தைக் கொண்டே அம் மசோதாக்களை இந்திய கவர்ன்மெண்ட் ஏற்படுத்துகிறது. பொது ஜனங்களின் அபிப்பிராயங்களையும், மனோபாவங்களையுங் கொண்டு மசோதாக்களை ஏற்படுத்தவேண்டுமென்றிருந்தாலும், அத்தகைய ஆசாரம் அனுஷ்டானத்திற்கு வருகிறதில்லை. ஆகவே இம்மாதிரியாக இந்தியாவில் சட்ட ஸ்தாபனஞ் செய்யப்பட்டுவருகின்றது. சட்ட இலாகாவானது நாட்டைச்சேர்ந்த பொது ஜனங்களின் அபிப்பிராயத்தைக்கொண்டு நடத்தப்படாம லிருப்பதினாலும், ஆங்கிலேயர்களின் சௌகரியத்திற்காக இங்கிலாந்தில் வழங்கும் சட்டங்களையே இந்தியாவில் நிர்மாணஞ் செய்வதினாலும், சட்ட இலாகாவை எடுத்துவிடவேண்டு மென்பதாகச் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இந்தியாவிலுள்ள சட்டங்களைப்பற்றிய மாறுபாடானஎண்ணம் அநேகருக்குக் கிடையாதென்றாலும், சட்டமானது ஒரு சார்புடைத்தா யிருக்கலாகாதென்று கூறுகின்றனர். சட்டமானது சமன்செய்து சீர்தூக்குங்கோல்போன்றிருக்கவேண்டு மென்பார். கவர்ன்மெண்டார் தங்களிஷ்டப்படி அதிகாரத்தைச் செலுத்தாமலிருக்கப் பிரதான கோர்ட்டுகள் ஸ்தாபிக்கப்பட்டன. இத்தகைய ஸ்தாபனத்தினால் அநேக இந்தியன் ஸிவில் உத்தியோகத்தைச் சேர்ந்தவர்கள், நாட்டின் சட்டத்தை மூடமந்திரம் போலவும், இந்திய வக்கீல்களை விரோதிகள்போலவும், நினைக்கின்றனர். சிற்சில உடுப்புகள் சரியாக வெட்டப்படாமையினால், நாட்டிலுள்ள தையற்காரர்களை யெல்லாம் தொலைப்பது சரியாகாததுபோல், சிற்சில சட்டங்கள் நமது மனதிற்கிசையாமற்போனால், அவைகளை ரத்துசெய்யவேண்டுமென்று கூறல் ஒவ்வாது. நாட்டில் ஏற்பட்டிருக்கும் சட்டங்களை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவராமலிருப்பின், அச்சட்டங்கள் சட்டமாக மாட்டா.

### சட்டங்களும் நீதி பரிபாலனமும்.

சட்டத்தைக் கொண்டே நியாயந் தீர்க்கவேண்டுமா, அல்லது சட்டமின்றி நியாயாதிபதியின் புத்திக்

கேற்ற பிரகாரம் நியாயத் தீர்ப்பு செய்யவேண்டுமா வென்றும், ஜனங்களின் ஆசார சம்பிரதாயங்களுக்கும் நடையுடை பாவனைகளுக்கும் ஒத்ததாயிருக்கும் சட்டங்களை அவலம்பிக்க வேண்டுமா, அல்லது அவைகளைத் தழுவி நடவடிக்கைக்கு வருவதற்குரிய சௌகரியமான வழிகளுண்டாவென்றும் இத்தியாதி அபிப்பிராயங்கள் பிறக்கின்றன. சட்டமின்றியிருத்தல்முடியாது. கவர்ன்மெண்டால் ஏற்படுத்தப்படும் சட்டங்களே, ஜனங்களின் தனத்தையும், உயிரையும், சுதந்தரத்தையும் காப்பாற்றுகின்றன. பூர்வம் கிராமப் பஞ்சாயத்து சபை இந்தியாவில் ஏற்பட்டதானது கிராமங்களில் கோளாறுகள் நடக்காமலிருப்பதற்கேயாகும். சட்டங்கள் ஏற்படுவதினால் பிரஜைகள் தங்கள்தங்கள் நித்திய வாழ்க்கைக்குரிய கடமைகளை வழுவாமல் செய்துவருவர். இவை மதக்கோட்பாடுகளை யொத்திருக்கும். சட்டமின்றி அபிப்பிராயத்தினாலேயே ஆள்வதாவது வெறும் வாய்வார்த்தையேயல்லாமல் நடவடிக்கையன்று. ஆகவே நாட்டில் சட்ட ஏற்பாடு இன்றியமையாதது. இது பற்றி இந்தியாவின்கண் தோன்றும் பெருத்த ஜனத்தொகையார்களான ஹிந்து மஹம்மதியர்களின் வகுப்பை யொட்டியே சட்டமானது உற்பத்தியாயிற்று. இச்சட்டங்கள் வெகுவாய் அவரவர்களின் மதங்களின் வழியாகவும், ஆசார நடவடிக்கைகளின் வழியாகவுமே யிருக்கின்றன. முதல் முதல் ஆங்கிலேயர் இச் சட்டங்களைப் பொதுவாக்க வேண்டு மென்னும் எண்ணத்தைக் கொண்டு, 1773-ம் வருடத்திலே கல்கத்தாவில் மேல்கோர்ட்டொன்று ஸ்தாபித்து, அதின் வாயிலாக எல்லா சட்டங்களையும் பொதுப்படையாக ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் ஒன்றாகச் செய்து வெளிப்படுத்தினார்கள். ஆனால் இத்தகைய பிழையானது 1780-ம் வருடத்திய டிக்ளரேடரி ஆக்டுபடி இந்துக்களுக்கு இந்துக்களின் சட்டப்பிரயோகமும், மகம்மதியர்களுக்கு மகம்மதிய சட்டப் பிரயோகமும் முறையே பிரயோகிக்கப் படவேண்டுமென்பதாகப்பார்லிமெண்டில் பிரேரிக்கப்பட்டது. ஹிந்து சாஸ்திரம் மகம்மதிய கொரான் இவைகளின் ஆசாரணைகளில் சற்றே திருத்தஞ் செய்யப்பட்டன. 1829-ம் வருடத்திய வங்காள உடன்கட்டையேறும் சட்டமும், 1843-ம் வருடத்திய இந்திய அடிமைச் சட்டமும், 1850-ம் வருடத்திய ஜாதிப்பிரதிபந்த சட்டமும், 1856-ம் வருடத்திய இந்து விதவைகளின் புனர்விவாகச் சட்டமும், இன்னும் இதர சட்டங்களும் மசோதாக்களும் பழைய இந்து மகம்மதிய சட்டங்களினின்றும் திருத்தப்பட்டன. ஆங்கிலேய சட்டங்களிற் சில இன்றைக்கும் பெரிய இராஜதானி நகரங்களில் காணப்படுகின்றன. பரம்பரையாய்த் தோன்றின சட்டங்களன்றி இதர சட்டங்கள் அப்போதைக்கப்போது இங்கிலாந்திலுள்ள வெஸ்ட் மினிஸ்டர் சபையிலிருந்தாவது அல்லது இந்திய கவர்ன்மெண்டாரின் சட்ட சபையிலிருந்தாவது வெளித்தோன்றும்.

### சட்ட நிர்ணயம்.

இந்தியாவானது கம்பெனியார்களிடமிருந்து துரைத்தனத்திற்கு மாற்றப்பட்ட காலத்திற்குமுன் சட்டமானது அதிக தாறுமாறாகவிருந்தது. சட்டமானது அதிக ஆபாசமாய், தாறுமாறாய், இலட்சணமற்றதாய், சிக்குள்ளதாயிருந்ததென்று ஸர் ஹென்றி கன்னிங்காம் கூறுகிறார். 1833-ம் வருடத்தில் முதல் முதல் சட்ட நிர்ணயஞ் செய்ய ஆரம்பிக்குங் காலத்தில் லார்ட் மெக்காலே என்பவர், பினல் சட்டத்தைத் தயாரித்தார். இச்சட்டம் ஸ்திரமாவதற்கு முன்னர் இருபத்திரண்டு வருடகாலம், கல்கத்தா மேல்கோர்ட்டு நியாயாதிபதியான ஸர் பார்னஸ் பீகாக் முதலான இன்னும் அநேக சட்ட மெம்பர்களால் அடிக்கடி பரிசோதிக்

கப்பட்டது. 1860-ம் வருடத்தில் பினல் சட்டம் ஸ்திரமாகி, 1861-ம் வருடத்தில் கிரிமினல் வியாஜ்ஜிய சட்டமொன்றும் வெளிவந்தது. பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள சகல கிரிமினில் சட்டங்களும் இவ்விரண்டு புத்தகங்களிலேயேயுள்ளன. இந்திய பினல் சட்டமானது தாறுமாறின்றி வெளிப்படையாய் யாதொரு சிக்கலுமில்லாமல் வெகு அழகாய் அமைந்திருக்கிறதென்று சிறந்த லாயரான ஸர் ஜேம்ஸ் ஸ்டீபன் கூறியிருக்கிறார். இந்தியன் பினல் சட்டமானது அப்போதைக்கப்போது சீர்திருத்தப்பட்டு வந்தது. ஸிவில் வியாஜ்ஜிய சட்டம் 1908-ம் வருடத்திலும், கிரிமினல் வியாஜ்ஜிய சட்டம் 1898-ம் வருடத்திலும் மறுபடி உருவாக்கப்பட்டன. இச்சட்டங்களே இப்பொழுது ஆசாரத்திற் குட்பட்டிருக்கின்றன.

### சட்ட வேறுபாடு.

கிரிமினல் சட்டமானது எல்லா ஜாதியார்களுக்கும் பொதுவாக ஏற்பட்டிருந்தபோதிலும், ஐரோப்பியர்களுக்குச் சற்றே மாறுபாடுள்ளதாயிருக்கின்றது. 1872-ம் வருடம் வரையில் ஹைகோர்ட்டு ஜட்ஜிகளாலேயே ஐரோப்பிய பிரிட்டிஷ் குடிகள் விசாரிக்கப்பட்டு வந்தனர். அப்பால், நியாய இலாகாவைச் சேர்ந்த மாஜிஸ்டிரேட்டுகள், ஜட்ஜிகள் ஆகிய இவர்கள், பிரிட்டிஷ் குடிகள் செய்யும் குற்றத்தை விசாரணை செய்யலாமென சட்டமேற்பட்டது. சட்டம் ஒரு சார்பாயுள்ளதெனக் கூறுமலிருக்குமாறு, 1883-ம் வருடத்தில் கவர்ன்மெண்டார் ஒரு பொதுச் சட்டத்தைப் பிறப்பித்தனர். இதனால் ஐரோப்பியர்கள் ஒருவாறு குழப்பஞ்செய்ய வாரம்பித்தார்கள். ஐரோப்பிய குற்றவாளிகளை விசாரணை செய்ய ஐரோப்பியர்களே வேண்டுமென்பது நீங்கவே, ஐரோப்பியர்கள் ஒருவாறு அதிருப்தி கொண்டார்கள். ஆனால் 1884-ம் வருடத்திய மூன்றாவது சட்டப்படி, முன் சட்டமானது சற்று மாற்றப்பட்டது. ஆனால் இந்திய ஜட்ஜிகளின் நிலைமை மட்டும் அங்ஙனமே யிருந்தது. ஐரோப்பியர் மீதுகுற்றஞ் சாட்டப்படின், அவர்களை எத்தகைய மாஜிஸ்டிரேட்டுகளும் விசாரிக்கலாமென்றும், ஸெஷன்ஸ் கோர்ட்டுகளில் ஜூரர்களாக வருபவர்களில் பாதிப் பங்கு ஐரோப்பியர்களாகவாவது அமெரிக்கர்களாகவாவது இருக்க வேண்டுமென்றும், இத்தியாதிமாறுதல்கள் டிஸ்டிரிக்ட் மாஜிஸ்டிரேட்டுகளுக்கு ஏற்பட்டதன்றி, இதர மாஜிஸ்டிரேட்டுகளின் நிலைமையும் அதிகாரமும் முன்னுள்ள மாதிரியாகவே யிருந்தன. ஆனால் 1836-ம் வருட முதற்கொண்டு ஸிவில் கோர்ட்டுகளில் மட்டும் யாதொரு ஜாதி வித்தியாசமின்றி ஒரே சட்டம் இந்தியா முழுமையும் ஏற்படுத்தப்பட்டது.

### கோர்ட்டுகள்—ஹைகோர்ட்டு

இந்தியாவில் ஹைகோர்ட்டே உன்னத நியாய ஸ்தலமாகும். 1861-ம் வருடத்திய இந்தியன் ஹைகோர்ட்டு சட்டத்தின்படி, சென்னை, பம்பாய், வங்காள மாகாணங்களிலும், அப்பால் ஐக்கியமாகாணத்திலும் முக்கிய கோர்ட்டுகள் ஏற்பட்டன. ஜட்ஜிகள் நியமனம் பெறுவது துரைத்தனத்தாராலேயே தான். சக்ரவர்த்தியின் இச்சையினாலேயே ஜட்ஜி உத்தியோகம் பெறப்படுகிறது. ஹைகோர்ட்டு ஜட்ஜிகளாக நியமனம் பெறுபவர்களில் மூன்றில் ஒருபங்கு பாரிஸ்டர்களாகவும், மற்றொருபங்கு இந்தியன் ஸிவில் ஸர்விஸ் உத்தியோகஸ்தர்களாகவும், பின்னொருபங்கு இந்திய வக்கீல்மார்களாகவு மிருக்கவேண்டும். ஹைகோர்ட்டுகளில் ஒரிஜனல் கிரிமினல் கேஸுகளுக்கு ஜூரிகள் நியமனமுண்டு. ஆனால் ஸிவில் கேசுகளில் ஜூரிகள் கிடையா. இந்தியாவின் இதர பாகங்களில் ஹைகோர்ட்டு என்னும் பெயரல்லாமல், இதர பெயரையுடையனவாய் சில கோர்ட்டுகள் இருக்

கின்றன. பஞ்சாபிலும் பர்மாவிலும் சீப் கோர்ட்டொன்று மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஜட்ஜிகளுடன் நடந்துவருகின்றது. இன்னும் இதர மாகாணங்களில் ஜூடிஷெல் கமிஷனரென்ற நியாயாதிபதியும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றார். ஜில்லாக்களினின்றும் வரும் அப்பீல் கேஸுகள் இக்கோர்ட்டுகளில் நடைபெறும். இக்கோர்ட்டுகளே உன்னத நியாயஸ்தலம். பார்லிமெண்டாருக்கு அனுப்பும் அப்பீல் தவிர ஏனைய அப்பீல்கள் யாவும் ஹைகோர்ட்டுகளிலேயே நடந்தேறும். கீழ்க் கோர்ட்டுகளைப் பரிசோதிக்கவும், அவ்விடத்திலிருந்து வரும் கேசுகளின் போக்குகளையும் இதர விஷயங்களையும் ஆராய்ச்சி செய்யவும், கண்டிக்கவும், மாற்றவும் ஹைகோர்ட்டுக்கு அதிகாரமுண்டு.

### கீழ்க் கோர்ட்டுகள்.

கீழ்த்தர கிரிமினல் கோர்ட்டுகளான ஸெஷன்ஸ் கோர்ட்டுகளும் மாஜிஸ்ரேட் கோர்ட்டுகளும் முறையே கிரிமினல்புரொஸீஜர்சட்டத்தைத்தழுவியே நிற்கும். ஒவ்வொருமாகாணமும்இராஜதானி பட்டணங்களுக்கு வெளியே ஸெஷன்ஸ் டிவிஷன்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இந்தஸெஷன்ஸ் டிவிஷனானது ஒன்று அல்லது இரண்டு ஜில்லாக்கள் சேர்ந்ததாய், ஒரு ஸெஷன்ஸ் ஜட்ஜியின் கீழ் விடப்பட்டிருக்கின்றது. சட்டத்தில் விதிக்கப்பட்டதற்கு மாறுகச்செய்யும்ஒவ்வொருவனையும் விசாரித்து, அவனுக்குத் தண்டனை விதிக்கப்படும். இக்கோர்ட்டுகளுக்கே ஸெஷன்ஸ் கோர்ட்டு எனக் கூறுவர். தூக்கு தண்டனைக்கு மட்டும் உயர்தர கோர்ட்டுகள் தீர்ப்பு செய்யக்கூடுமேயன்றி, கீழ்த்தர கோர்ட்டுகளுக்கு அதிகாரமில்லை. மாஜிஸ்டிரேட் கோர்ட்டுகள் மூவகையாகும், அவையாவன இராஜதானி பட்டணங்களிலுள்ள இராஜதானி மாஜிஸ்டிரேட்டு கோர்ட்டுகள், பெரிய பட்டணங்களிலுள்ள கௌரவ (ஆனரெரி) மாஜிஸ்டிரேட்டு கோர்ட்டுகள், பெஞ்சி மாஜிஸ்ட்ரேட்டு கோர்ட்டுகளாம். சாமானிய கேசுகளை பெஞ்சி மாஜிஸ்டிரேட்டுகளும், சற்று பெரிய கேசுகளை இராஜதானி (பிரஸிடென்ஸி) மாஜிஸ்டிரேட்டுகளும், இவர்களுக்கு உபகாரமாக ஆனரெரி மாஜிஸ்டிரேட்டுகளும் முறையே நடத்தி வருகின்றார்கள். ஸெஷன்ஸ் கோர்ட்டுகளிலே விசாரணை காலங்களில் ஜூரிகளாவது அல்லது அஸெஸர்களாவது இருக்கவேண்டும். அஸெஸர்கள் ஜட்ஜிகளுக்கு உபகாரஞ்செய்யலாமே தவிர, இவர்களுடைய தீர்ப்பு ஜட்ஜியைக் கட்டுப்படுத்தாது. ஜூரிகளின் அபிப்பிராயங்கள் ஜட்ஜிகளைக் கட்டுப்படுத்தும். இந்தியசட்டம்அநேக அப்பீல்களுக்கு இடங் கொடுக்கின்றது. தூக்கு தண்டனை கேஸுகளுக்கு மட்டும் கடைசி அப்பீல் ஸ்தலமானது இராஜப் பிரதிநிதி சபையேயாகும். ஜில்லாவைச் சேர்ந்த ஸெஷன்ஸ் ஜட்ஜிகள் முக்கியமாக இந்தியன் ஸிவில் ஸர்விஸ் உத்தியோகத்தினின்றுமே நியமிக்கப்படுவார்கள். இத்துடன் மாகாண ஸர்விஸ் உத்தியோகத்தினின்று எடுப்பது முண்டு. ஜில்லா ஜட்ஜிகளுக்குக் கீழ்ப்பட்ட சப் ஜட்ஜி, முன்சீப் முதலிய நியாயவாதிகள் அநேகமாக இந்தியர்களாகவேயுளர். இஃது ஸிவில் விஷயங்களைச் சேர்ந்தது. இது தவிர அநேக ஸ்மால்காஸ் கோர்ட்டுகளுமிருக்கின்றன. இக்கோர்ட்டுகளில் 500 ரூபாய் மதிப்புள்ள கேசுகளுக்கு மேல், விசாரணை செய்யக்கூடாது. பெரிய இராஜதானி நகரில் ஹைகோர்ட்டுடன் கலந்திருக்கும் ஸ்மால்காஸ் கோர்ட்டுகள் 2000 ரூபாய் மதிப்புள்ள கேசுகளை விசாரணை செய்யலாம். சென்னை, பம்பாய், கல்கத்தா முதலிய இராஜதானி நகரங்களிலுள்ள இன்சால்வென்ஸிகோர்ட்டுகள் அங்குள்ள ஹைகோர்ட்டுகளுள் சேர்ந்தவை. வெளியூர்களில், 1906-வது வருடத்திய இன்ஸால்வென்ஸிசட்டப்படி இன்ஸால்வென்ஸி

கேசுகளை டிஸ்டிரிக்ட் கோர்ட்டுகள் விசாரிக்க அதிகாரம் பெற்றிருக்கின்றன. கல்கத்தா, பம்பாய் நகரங்களில் மட்டும், துர் மரண பரிசோதகர்களென்று சிலர் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இதர இடங்களில் போலீஸ் உத்தியோகஸ்தர்களும் மாஜிஸ்டிரேட்டுகளுமே விசாரணை செய்கிறார்கள்.

## சட்டத்தொழிலை அனுசரிப்பவர்

இந்தியாவில் சட்டத்தொழிலை அனுசரிப்பவர்களில், பாரிஸ்டர்கள், அட்வொகேட்டுகள், வக்கீல்கள், அடர்ணிகள், பிளீடர்கள், முக்தியார்கள், ரெவினியூ ஏஜண்டுகள் என ஏழு வகையார் உளர். பாரிஸ்டர்களும் அட்வொகேட்டுகளும் ஒவ்வொரு ஹைகோர்ட்டுகளிலும் அதைச்சேர்ந்த கீழ்க்கோர்ட்டுகளிலும் சட்டத்தை அவலம்பிக்க ஆஜராகலாம். சாசன ஒப்பந்தமான சில ஹைகோர்ட்டுகளில் ஒரிஜினல் விஷயத்தில் ஆஜராக இவர்களுக்கு அதிகாரமுண்டு. வக்கீல்கள் அந்தந்த ஹைகோர்ட்டுகளிலும், அதைச்சேர்ந்த கீழ்க்கோர்ட்டுகளிலும் ஆஜராகலாம். அடர்ணிகள் முதல் முதல் கோர்ட்டுகளில் ஆஜராவதற்கு முன்னர், சட்டத்தை அவலம்பிக்கத்தக்கவர்களென அங்கீகாரப் பத்திரம் பெற வேண்டும். இதுபெற்ற பின்னரே ஹைகோர்ட்டுகளில் ஆஜராகலாம். இவர்கள் பாரிஸ்டர்களுடன் சேர்ந்து ஒரிஜினல் கேசுகளில்தான் பிரவேசிக்கக் கூடும். வெளியூர்களிலுள்ள கீழ்க்கோர்ட்டுகளை பிளீடர்கள் அனுசரிப்பார்கள்.

## சட்ட உத்தியோகஸ்தர்கள்.

இந்திய கவர்ன்மெண்டானது சட்ட சபையில் தங்களுக்கென்று ஒரு சட்ட மெம்பரை நியமித்திருக்கிறது. கவர்ன்மெண்டின் சட்டங்கள் ஒவ்வொன்றும் இச்சபையிலேயே ஏற்படுத்தப்படும். சட்ட சபைக்கு வெளியே இந்தியா கவர்ன்மெண்டுக்கு முக்கிய சட்ட உத்தியோகஸ்தர், வங்காளத்திலுள்ள அட்வொகேட் ஜெனரலேயாவர். இவர் கவர்ன்மெண்டாரால் ஏற்படுத்தப்படுபவர். சட்டத்தை அவலம்பிப்பவர்களில் முதன்மையாயுள்ளவர்களையே இவ்வுத்தியோகத்திற்கு நியமனஞ்செய்வார்கள். கல்கத்தாவில் இவருக்கு உதவி செய்ய கவர்ன்மெண்டு அடர்ணியொருவரும் ஒரு சிறிய சபையாருமுளர். பம்பாய், சென்னை நகரங்களில் அட்வொகேட் ஜெனரலும் கவர்ன்மெண்டு அடர்ணிகளுமிருக்கின்றனர். பம்பாயில், இந்தியன் ஸிவில் ஸர்விஸ் உத்தியோகத்தைச் சார்ந்த பிரிவு ஒன்று சட்ட நிர்ணயத்திற்கென்று ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. வங்காள கவர்ன்மெண்டானது வங்காள அட்வொகேட் ஜெனரலையும் அவரைச்சார்ந்த சட்ட உத்தியோகஸ்தர்களையும், ஐக்கிய மாகாணமானது சட்ட நிர்வாகமுள்ள ஸிவிலியன் ஒருவரையும் அவரைச்சார்ந்த கவர்ன்மெண்ட் அட்வொகேட்டுகளையும், பஞ்சாப் பர்மா இவைகள் அட்வொகேட்டுகளையும், சட்ட செக்ரிடெரிகளையும், முறையே சட்ட விஷயங்களில் அப்போதைக்கப்போது ஆலோசிக்கின்றன. கல்கத்தா, சென்னை, பம்பாய் ஹைகோர்ட்டுகளுக்கு ஷேரிப் என்பவர்களுமுளர். இவர்கள் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்படுவார். சர்க்கார் உத்தியோகஸ்தரல்லாதவர்களையே கவர்ன்மெண்டார் நியமிப்பார்கள். இவருக்குக் கீழ் உப ஷெரிபுகள் கோர்ட்டுகளில் உத்தியோகஸ்தர்களாய் அநேக வேலைகளைப் புரிந்துவருகிறார்கள்.

# இந்தியா ராஜாங்கத்தின் வரவு செலவு ஏற்பாடுகள்.

[அர்த்த சாஸ்திரம் ஆராய்ந்தவர் எழுதியது.]

### வரவு செலவின் அதிகாரிகள்.

இந்திய ராஜாங்க ரீதியை சித்தாந்தப் படுத்தி யிருக்கும் பார்லிமெண்டு சபையின் சட்டப் பிரகாரம், இந்தியாவில் சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானங்களையெல்லாம் அரசரின்பெயாலேயே வசூலித்து, இந்திய ராஜாங்கத்தின் காரியங்களுக்கு மட்டில் செலவிட வேண்டுவதாகும். ஆகவே, ராஜாங்கத்தின் வரவு செலவெல்லாம் அரசரின் அதிகாரம் பெற்றவரும், பார்லிமெண்டு சபையிடம் பொறுப்பு வகித்தவருமான இந்திய மந்திரியின் அதிகாரத்துக் குட்பட்டிருப்பதுடன், அவருடைய ஆலோசனை சபையின் சம்மதத்தையும் எதிர்பார்த்ததாகவிருக்கிறது. இந்திய மந்திரியின் அதிகாரமானது பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபைக்கு முற்றிலும் உட்பட்டதாகவிருக்கினும், அச்சபை தன் அதிகாரத்தை இரண்டுவிதமாகச் செலுத்துகின்றது:—(1) ஒவ்வொரு வருஷத்திய வரவு செலவு திட்டமும் பிரதி வருஷம் பார்லிமெண்டு சபையில் தாக்கல் செய்யப்பட்டு, அச்சபை மெம்பர்களால் பார்வையிடப்படவேண்டும், (2) இந்தியாவின்மேல் அன்னிய தேசத்தவர்கள் படையெடுக்காவண்ணம் காப்பதற்கும், அல்லது இந்தியாவுக்குள் கலகம் ஏற்பட்டால் அக்கலகத்தை அடக்குவதற்கும் வேண்டிய செலவைத் தவிர, இந்தியாவின் வருமானத்திலிருந்து பார்லிமெண்டு சபையின் உத்தரவன்னியில் மற்ற எவ்விதத்திலும் இந்தியாவின் எல்லைக்கு வெளிப்பட்ட பிரதேசங்களின் மேல் படையெடுப்புக்காக செலவு செய்யக்கூடாது.

பொதுவாகச் சொல்லுங்கால், இவ் வரவு செலவு அதிகாரங்களை நான்கு இனத்தார் நடத்துகிறார்கள். அவர்களாரெனில்:—(1) இந்தியா கௌன்ஸிலின் தலைமை அதிகாரியான இந்தியா மந்திரி, (2) கவர்னர் ஜெனரல் உள்பட அவருடைய கௌன்ஸில் (3) மாகாண கவர்ன்மெண்டார், 4) லோகல் போர்டார், முனிசிபல் போர்டார். இந்தியா மந்திரிக்கு அதிகாரம் எந்த ஆதாரத்தின்மேல் கிடைத்திருக்கிறதென்று ஏற்கனவே சொல்லி யுள்ளோம். கவர்னர் ஜெனராலுக்கு ராஜாங்க வரவு செலவிலுள்ள அதிகாரங்களெல்லாம் இந்தியா மந்திரியிடமிருந்து அவருக்குக் கிடைத்திருப்பதே; மாகாண கவர்ன்மெண்டாருக்குள்ள அதிகாரங்களோ, இந்தியா மந்திரியின் அனுமதியின் பேரில் இந்தியா கவர்ன்மெண்டாருடன் அவர்கள் செய்து கொண்டிருக்கும் ஒப்பந்தங்களின் மூலமாய்க் கிடைத்திருக்கின்றன. லோகல் முனிசிபல் போர்டுகளுக்குள்ள அதிகாரங்கள் இந்தியாவில் ஏற்படுத்தப்பட்ட சட்டங்களினால் அவர்களுக்குக்கிடைத்திருக்கின்றன.

பொது ஜனங்களின் சௌகரியம், சுகாதாரங்கள், வைத்திய சிகிச்சை, ஆரம்பப்படிப்பு, போக்குவரத்து சாதனங்கள், முதலிய வேலைகளைக் கவனித்து வருவதே லோகல் முனிசிபல் போர்டுகளுக்கு, முக்கிய வேலைகளாயிருக்கின்றன. இப்போர்டுகளின் வரவு செலவு கணக்குகளெல்லாம் பிரத்தியேகமாகவே யிருக்கின்றன. ஆகவே, இந்தியா மந்திரி, கவர்னர் ஜெனரல், மாகாண கவர்ன்மெண்டார், ஆகிய ராஜாங்கத் தலைவர்களின் கணக்கு

களுக்கும், லோகல் முனிசிபல் போர்டு களின் கணக்குகளுக்கும், யாதொரு விதமான சம்பந்தமும் கிடையாது.

இந்த கவர்ன்மெண்டுகளின் காரியங் களில் சற்று கவனத்தைச் செலுத்திப் பார்ப்போமானால், பணச் செலவெல் லாம் இங்கிலாந்திலாவது ஏற்படுகின் றது, அல்லது இந்தியாவிலாவது ஏற் படுகின்றது. இங்கிலாந்தில் ஏற்படும் செலவுகளெல்லாம் இந்தியா மந்திரி யின் உத்தரவின் பேரிலும், இந்தியா வில் ஏற்படும் செலவுகளெல்லாம் இந் தியா மந்திரியின் அனுமதியின் பேரில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் நிர்வாக விதி களின்பேரிலும் நடந்துவருகின்றன.

## செலவின் பிரிவுகள்.

இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஆகிற செலவுதொகைகள்கீழே குறிக் கப்பட்டிருக்கின்றன:—

| | 1914–15 கணக்குப் படி வரவு செலவுகள் | 15–16 திருத்தப் பட்ட மதிப்புத்திட்டம் | 16–17 முதல் வரவுசெலவு மதிப்பு |
|---|---|---|---|
| | பவுன் | பவுன் | பவுன் |
| இந்தியா ... | 62,784,338 | 64,874,700 | 65,839,900 |
| இங்கிலாந்து ... | 20,208,598 | 20,245,300 | 19,863,000 |
| மொத்தம் ... | 82,942,936 | 85,120,000 | 85,702,900 |

செலவுகளெல்லாம் இந்தியா கவர்ன் மெண்டாரோ அல்லது மாகாண கவர்ன்மெண்டாரோ செய்வதாகும். அதாவது, இந்தியா கவர்ன்மெண்டுக் குட்பட்ட இலாகாக்களுக்காகவும், அல்லது மாகாண கவர்ன்மெண்டு களுக்குட்பட்ட இலாகாக்களுக்காக வும் செய்யப்படுகின்றன. இந்தியா கவர்ன்மெண்டார் செய்யும் செலவு களுக்கும், மாகாண கவர்ன்மெண்டார் செய்யும் செலவுகளுக்கும் உள்ள தார தம்மியம் கீழே காணப்படும் ஸ்டேட் மெண்டில் குறிக்கப்பட்டிருக்கின் றது:—

| | 1914–15. கணக்குப் படி வரவு செலவு. | 1915–16 திருத்தப் பட்ட மதிப்பு | 1916–17. முதல் வரவு செலவு மதிப்பு |
|---|---|---|---|
| | பவுன். | பவுன். | பவுன். |
| இந்திய கவர்ன்மெண்ட். | 52,554,248 | 54,388,100 | 55,099,300 |
| மாகாண கவர்ன்மெண்ட். | 30,388,688 | 30,731,900 | 30,603,600 |
| மொத்தம்.... | 82,942,936 | 85,120,000 | 85,702,900 |

## வருமானத்தின் பிரிவுகள்.

ஆகையால், ஒரே இனத்திலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்து சர்க் கார் செலவு செய்வதற்கு தலைமையாக மூன்று அதிகாரிக ளிருக்கின்றனர். அநேகமாய் வருமானமெல்லாம் இந்தி யாவிலிருந்தே கிடைக்கின்றன. இங்கி லாந்திலிருந்து கிடைக்கும் வருமானம் மிகவும் சொற்பமாக இருக்கின்றபடி யால், அதைக் கணக்கில் சேர்ப்பது அவசியமாகாது. இவ்விரண்டு தேசங் களிலிருந்தும் கிடைக்கக்கூடிய வரு மானம் கீழே குறிக்கப்பட்டிருக்கும் ஸ்டேட்மெண்டிலிருந்து நமக்கு நன்கு விளங்கும்:—

| | 1914-15. கணக்குப்படி | 1915-16. திருத்தப் பட்ட திட்டம் | 1916-17. முதல் திட்டம் |
|---|---|---|---|
| | பவுன். | பவுன். | பவுன். |
| இந்தியா | 80,474,924 | 82,620,400 | 85,732,800 |
| இங்கிலாந்து | 682,742 | 705,400 | 795,100 |
| மொத்தம் | 81,157,666 | 83,325,800 | 86,528,600 |

இவ்வாறு மேலேகுறிக்கப்பட்டிருக்கும் வருமானமானது இந்தியா கவர்ன்மெண்டு மாகாண கவர்ன்மெண்டுகள் இவ்விரு அதிகாரிகளாலும் கீழே குறிக்கப்பட்டிருக்கிற விதம் வசூல் செய்யப்படுகின்றது:—

| | 1914-15 ரிவேஷ் | 1915-16. வருமான திட்டம். | 1916-17. வரவு செலவு திட்டம். |
|---|---|---|---|
| | பவுன். | பவுன். | பவுன். |
| இந்தியா கவர்ன்மெண்டு | 50,768,978 | 52,593,900 | 55,925,000 |
| மாகாண கவர்ன்மெண்டுகள் | 30,388,688 | 30,731,900 | 30.603,600 |

மாகாண கவர்ன்மெண்டுகளுடன் ஒப்பந்தங்கள்.

மேற்காட்டிய ஸ்டேட்மெண்டிலிருந்து இந்தியாவிலுள்ள தலைமை கவர்ன்மெண்டுகள் நிர்வாகம் செய்யும் வரவு செலவில், மூன்றில் ஒரு பங்குக்குச் சிறிது அதிகமாகத் தான் மாகாண கவர்ன்மெண்டுகள் இந்தியா கவர்ன்மெண்டாரிடமிருந்து பெற்றுவருகின்றன. 1870-ம் வருஷம் வரையில் எல்லாப்பொது வரவு செலவும் நேராக இந்தியா கவர்ன்மெண்டாரின் அதிகாரத்துக்குட்பட்டே இருந்தது. அக்காலத்தில் தங்கள் நிர்வாகங்களை மாகாண கவர்ன்மெண்டார் செலுத்திவருகையில் அடிக்கடி செலவுகளைப்பற்றி இந்தியா கவர்ன்மெண்டாருக்குத் தெரிவித்து, அவர்களுடைய ஆக்ஞைப்படி நடப்பது அவசியமாயிருந்தது. அப்படியிருந்ததனால் இந்தியா கவர்ன்மெண்டார் மாகாணங்களின் அவசியமான தேவைகளை சரியாக உணர்ந்து, அவற்றிற்குவேண்டிய தொகைகளைக் கொடுத்து உதவி செய்யக்கூடவில்லை. ஆனால், மாகாண கவர்ன்மெண்டார்களோ, மாகாணங்களின் அபிவிருத்தியில் ஆவலுள்ளவர்களாய், பொருளாதார நிலைமையைக்கவனிக்கவில்லை. ஆதலின் அக்காலத்தில் ராஜப்பிரதிநிதியாகவிருந்த லார்டு மேயோபிரபு, மாகாண கவர்ன்மெண்டாருடன் வரவு செலவு விஷயமாக ஒப்பந்தம் செய்துகொண்டால், மாகாண கவர்ன்மெண்டார் தங்களது செலவை செட்டாகச் செய்வார்களென்றும், மாகாண வருமானத்தை விருத்தி செய்வார்களென்றும் நினைத்து, அவர்களுடன்சிலஒப்பந்தங்கள்செய்துகொண்டார்; அந்த ஒப்பந்தப் பிரகாரம் ஜெயில், பத்திரப்பதிவு, போலீஸ், கல்வி, வைத்தியம், அச்சுப் பதிவு, ராணுவத்துக்கு வேண்டாத நியமிய ஸ்தலங்கள், முதலிய கட்டடங்கள், இந்த இலாகாக்கள் சம்பந்தமான செலவுக ளெல்லாம் மாகாண கவர்ன்மெண்டாரிடம் ஒப்புவிக்கப்

பட்டன. மேற்கூறிய வேலைகளை எல்லாம் மேற்படி இலாகாக்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டும், இந்தியா கவர்ன்மெண்டாரின் பொக்கிஷத்திலிருந்து ஸ்திரமாகக் கொடுக்கும் பணத்தைக் கொண்டும் நடத்திவந்து, போதாத பக்ஷத்தில் சொந்தமாக புதுவரி விதித்தும், மாகாண கவர்ன்மெண்டார்கள் நடத்தும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், 1877-ம் வருஷத்தில் இவ்வேற்பாட்டில் சில மாறுதல்களேற்பட்டன. இம்மாறுதல்களினால், மாகாண கவர்ன்மெண்டார், யாதொரு விதமான புதிய செலவுள்ள காரியங்களையும் இந்தியா கவர்ன்மெண்டாரின் முன் உத்தரவன்னியில் செய்ய ஒப்புக்கொள்ளக்கூடாதென்றும், இந்தியா கவர்ன்மெண்டாரின் அனுமதியில்லாமல் மாகாணங்களில் வரியும் விதிக்கக்கூடாதென்றும் விதிக்கப்பட்டதுமல்லாமல், அவர்களுக்கு ஸ்திரமாகக்குறிப்பிட்டுக் கொடுக்கப்படும் பணமும் நிறுத்தப்பட்டு, அதற்குப் பதிலாக உள்நாட்டுச் சாக்குகளுக்கு விதிக்கப்படும் காப்புத் தீர்வை, முத்திரைக் காகிதங்களால் விதிக்கப்படும் தீர்வை, இவைகளின் வருமானங்கள் கொடுக்கப்பட்டன.

**மாகாண ஒப்பந்தங்களின் சரித்திரம்.**

பிறகு 1882-ம் வருஷத்தில் இந்த ஏற்பாடு மறுபடியும் மாற்றப்பட்டது. அதுமுதல், இந்த ஒப்பந்தங்கள் எல்லாம் 5-வருஷத்திற்கு ஒரு முறை மறுபடி திருத்தி புதுப்பித்துக் கொள்ளலாமென்றும் நிச்சயிக்கப் பட்டது. இந்த ஏற்பாடுகள்ஸ்திரமில்லாமலிருந்தனவாதலால், மாகாண கவர்ன்மெண்டாருக்கு அம்மாகாணத்தைச் சேர்ந்த வரவுசெலவில்செட்டாக இருப்பதிலும், மாகாணத்தின் வருமானத்தை விருத்தி செய்வதிலும் அச்சிரத்தையை உண்டுபண்ணியதன்றி, 5-வது வருஷக் கடைசியில் இந்தியா கவர்ன்மெண்டாருக்கும், மாகாண கவர்ன்மெண்டாருக்கும் வாக்கு வாதத்தையும் விவகாரத்தையும் உண்டுபண்ணி வந்தது. பிறகு, அநேகம் மாறுதல்களுண்டாகி இப்பொழுதுள்ள ஏற்பாடு அமுலுக்கு வந்தது. இவ்வேற்பாடு ஸ்திரமென்று சொல்லப் படுகிறது. இந்த ஏற்பாட்டின்படி சேனை, அந்நியதேச சம்பந்தமானவிஷயங்கள், இங்கிலாந்தில் செய்யவேண்டிய செலவுகள், ரயில்வேக்கள், தபால், தந்தி முதலிய இந்தியா முழுதிற்கும் பொதுவாக விருக்கும் வேலைகளின் செலவெல்லாம் இந்தியாகவர்ன்மெண்டார் செய்கிறதென்றும், உள்நாட்டு நிர்வாகம், அதாவது பொது ஆட்சி, பத்திரப்பதிவு, சட்டம், நியாயம், போலீஸ், ஜெயில், கல்வி, வைத்தியம், முதலிய இலாகாக்களின் நிர்வாகங்களுக்குத் தேவையான செலவுகளெல்லாம் மாகாண கவர்ன்மெண்டுகள் செய்ய வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. வருமானங்களில் முக்கியமாய், அபின், உப்பு, ஏற்றுமதி இறக்குமதி சாமான்களின் வரி, நாணயச்சாலைகள், ரயில்பாதைகள், தபால் ஆபீஸ், தந்தி ஆபீஸ், தேச சமஸ்தான ராஜாங்கங்களால் செலுத்தப்படும் கப்பங்கள், முதலிய முக்கிய வரும்படிகள் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு ஏகதேசத்திலும், காடுகளிலிருந்துகிடைக்கும் வருமானம், மாகாண கவர்ன்மெண்டுகளுக்கு ஏகதேசத்திலும், நிலத் தீர்வை, வருமானவரி, முத்திரைக் கடுதாசிகள் முதலியவைகளிலிருந்து கிடைக்கும் வருமானம், இந்திய கவர்ன்மெண்டாருக்கும், மாகாண கவர்ன்மெண்டாருக்கும் சரிபாகமாகவும் சேரவேண்டுமென்றும் ஏற்பட்டது. இதல்லாமல் கவர்ன்மெண்டார்களில் ஒவ்வொருவரும் தத்தம் அதிகாரத்துக் குட்பட்ட இலாகாக்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தைத் தாங்களே அடைகின்றனர். மாகாண கவர்ன்மெண்டாருடைய பணமாக இந்தியா கவர்ன்மெண்டாரிடம் எவ்வளவு கையிருப்பு இருக்க வேண்டுமென்று ஏற்பட்டிருக்கிறதோ அதுவும், மாகாண கவர்ன்மெண்டா

ருக்குத் தனியாகச் சேரவேண்டிய தாக, இந்தியா கவர்ன்மெண்டாரிடம் தொகையிருந்தால் அதுவும் தவிர்த்து, தங்கள் தங்கள் வரவுக்குமேல் செலவேற்படும்படி மாகாண கவர்ன்மெண்டு திட்டமேற்படுத்தக் கூடாது. ஒருக்கால் இந்தியா கவர்ன்மெண்டாரிடமிருந்து மாகாண கவர்ன் மெண்டாருக்குக் கிடைக்க வேண்டிய பணமெல்லாம் செலவாகிப் போய், மிகவும் முக்கியமான வேலைகள் செய்யப் பட வேண்டி யிருந்தால், அவைகளின் நிமித்தம் மாகாண கவர்ன்மெண்டார் இந்தியா கவர்ன்மெண்டாரிடமிருந்து வேண்டிய தொகையைக் கடனாக வாங்கி அக்கடன் தொகையின் மேல் வட்டி கொடுத்துவரவேண்டும். அப்படிச் செய்த பின்னும் மாகாண கவர்ன்மெண்டாருக்குச் சேரும்பணம் போதாதென்று தெரியும் பக்ஷத்தில், மாகாணத்தில் அவரவர்கள் மாகாண வரிகள் ஏற்படுத்த இந்தியா கவர்ன் மெண்டாருடன் யோசனை செய்வது அவசியமாகும் என்று இந்த ஏற்பாட்டில் முடிவு செய்யப் பட்டிருக்கிறது.

**தற்போதைய ஸ்திரமான ஒப்பந்தம்.**

இவ்வித "ஸ்திரமான" ஒப்பந்தம் 1911-ம் வருஷம் உண்டாயிற்று. இதை நிர்ணயிப்பதில் ஒவ்வொரு மாகாணத்தின் செலவுக்கு எது தகுந்த ஏற்பாடாகும் என்று முடிவு செய்யப் பட்டதே யல்லாமல் அந்தந்த மாகாணங்களிலிருந்து இந்தியா கவர்ன் மெண்டுக்கு எவ்வளவு கொடுக்க வேண்டுமென்பதைப் பொறுத்து ஏற்பாடு செய்யப்படவில்லை. ஒப்பந்தக் காலத்தில் எந்த மாகாண கவர்ன் மெண்டாரிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கும் செலவுகளை யெல்லாம் அம்மாகாணத்திற்கு ஏற்பட்டிருக்கும் வருமானத்தைக்கொண்டு செய்ய முடியாதென்று தெரிந்ததோ, அந்த மாகாண கவர்ன்மெண்டாருக்கு இந்தியா கவர்ன் மெண்டார் குறிப்பிட்ட தொகை கொடுத்து அக்குறைவை நிவர்த்தி செய்துவருகிறார்கள். எந்த மாகாணங்களில் மாகாண செலவைக்காட்டிலும், மாகாண வருமானம் அதிகமாகத் தெரிந்ததோ, அங்கே அம்மாகாண செலவுபோக,பாக்கியிருக்கும் தொகையைக்குறிப்பிட்டு அதை அம்மாகாண கவர்ன்மெண்டார் இந்தியா கவர்ன் மெண்டாரிடம் பொக்கிஷத்தில் சேர்த்துவிடவேண்டியது. இவ்வாறு மாகாண கவர்ன்மெண்டாருக்கு எவ்வளவு செலவு இருக்கிறதோ அதற்குத்தேவையானபணம் மாத்திரம் தான் கொடுக்கப்படுகின்றது. மாகாணத்தில் அதிகச்செலவுசெய்யப்படவேண்டியிருக்குமானால்,அவ்வதிகச் செலவிற்காக அம் மாகாண கவர்ன்மெண்டாரிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கும் இலாகாக்களினின்றும் கிடைக்கும் வரும்படியை விருத்திசெய்து, அதனால் கிடைக்கும் பணத்தை அவர்கள் எடுத்து உபயோகித்துக்கொள்ளவேண்டியது. இவ்வாறு ராஜாங்கச் செலவுபோக மீதமாகும் துகைக்கும், அல்லது செலவிற்குப் போதாமல் பாக்கி வகை செய்ய வேண்டிய துகைக்கும்,இந்தியாகவர்ன் மெண்டாரே பொறுப்புப் பேற்றிருப்பதால், அதை மாகாண கவர்ன்மெண்டாரிடம் பங்கிட்டுக் கொடுக்கவோ, வசூலிக்கவோ, பாத்தியமிருப்பினும், அவர்களே வகித்து வருகிறார்கள்.

**வரவு செலவு திட்டங்கள் ஏற்படுத்தும் விதம்.**

ஆகையால், இந்தியா கவர்ன்மெண்டின் வரவு செலவு திட்டத்தில், மாகாண கவர்ன்மெண்டாரின் வரவு செலவு திட்டமும், இந்தியா மந்திரியின் வரவு செலவு திட்டமும், சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவ்வரவு செலவு திட்டம், பிரதி வருஷமும் மார்ச்சு மாதத்தில் ராஜப்பிரதிநிதி சட்ட சபையில் ஆஜர் செய்யப்படுகின்றது. மார்ச்சுமாதம் முதல்தேதியன்று வரவு செலவு மெம்பர், வரும் வருஷத்தின் வரவு செலவு சம்பந்தமாக சர்க்காரின் ஏற்பாடுகளைக் குறிப்பிட்டு ஒரு

"ஸ்டேட்மெண்டு" மூலமாய் ராஜப் பிரதிநிதி சட்டசபையில் விரிவாக எடுத்துரைக்கிறார். அந்த ஸ்டேட்மெண்டு செய்த ஒரு வாரத்திற்குப் பின் (1) வரி விஷயங்களில் செய்யவேண்டிய மாறுதல்கள், (2) புதிதாக வாங்கப்படவேண்டிய கடன், (3) மாகாண கவர்ன்மெண்டுக்குச் செய்யப்பட வேண்டிய பண வுதவி முதலிய விஷயங்களைக் குறித்து அச்சபை மெம்பர்கள் மறு மீட்டிங்கில் விவரித்துத் தீர்மானங்களைப் பிரேரணை செய்யலாம். சட்டசபை மெம்பர்களின் தீர்மானங்கள் முடிந்தபிறகு, வருமானத்தையும், செலவுகளையும் பற்றித் தனித்தனி இனங்களாகப் பிரித்து வாதம்செய்யப் படுகின்றது. இவ்வாறு வாதம் செய்த பிறகுங்கூட அவைகள் சம்பந்தமாகப் பிரேரணைகளைச் செய்யலாம். இத்துடன் இந்த வரவு செலவு திட்டங்களைப் பற்றிய மட்டில் சட்டசபையின் வேலைமுடிந்து கடைசியாகத் திருத்தப்பட்டு ஆஜர் செய்யப்படும். சட்டசபையில் ஏதாவது தீர்மானங்கள் முடிவாயிருந்தால் ஒப்புக்கொண்ட பிரேரணைகளை அனுசரிப்பதற்கும், நிராகரிப்பதற்கும், ராஜப்பிரதிநிதிக்கும் அவருடைய நிர்வாக சபைக்கும் பூர்ண அதிகாரம் உண்டு. இவ்வாறு மாறுதல்கள் செய்யப்பட்டபிறகு வரவு செலவு திட்டம் "பட்ஜட்" பெயருடன் முடிவாகச் சட்டசபையில் மார்ச்சுமாதக்கடைசியில் தாக்கல் செய்யப்படுகிறது. இச்சமயத்தில் அச்சட்டசபை மெம்பர்கள் இத்திட்டத்தின் நன்மை தீமைகளைப் பற்றியும், மற்றும் பொதுவான தேச விஷயங்களைப் பற்றியும், பேசலாமே தவிர, அத்திட்டத்தில் எவ்வித மாறுதல்களும் செய்யச்சொல்ல முடியாது.

**மாகாண திட்டங்களின் ஏற்பாடுகள்.**

ஆனால்மாகாணங்களின்வரவுசெலவு திட்டத்தைத் தயாரித்து சட்ட சபையில் தாக்கல் செய்து விவாதம் செய்வதில் மேற்சொல்லிய முறை சில மாறுதல்களுடன் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஜனவரி மாதஆரம்பத்தில், கவர்னர், சட்ட சபை மெம்பர்களிற் சிலரை வரவு செலவு கமிட்டியாக ஏற்படுத்துகின்றார். இக்கமிட்டி மெம்பர்களில் பாதிபேர்கள், மாகாண சட்ட சபையிலிருக்கும் உத்தியோகஸ்தர்களல்லாத மெம்பர்களால் தெரிந்தெடுக்கப்படுகின்றனர். அக்கமிட்டி முன்பாக வரும் வருஷத்திய மாகாண வரவு செலவு திட்டம் ஜனவரிமாத மத்தியில் ஆஜர் செய்யப்படுகிறது. பிறகு அக்கமிட்டியார் ஜனவரிமாத முடிவுக்குள், இன்ன திருத்தங்கள் வேண்டுமென்று மாகாண கவர்ன்மெண்டாருக்கு சிபார்சுகள் செய்கின்றனர். மாகாண கவர்ன்மெண்டார் அத்திருத்தங்களை நன்கு ஆலோசித்து, அத்திருத்தங்களில் ஏதேனும், அங்கீகரிக்கவேண்டுமென்றால், அப்படியே செய்து அந்த திட்டத்தைஇந்தியாகவர்ன்மெண்டாருக்கு அனுப்புகின்றனர். இந்தியாகவர்ன்மெண்டார் உத்தரவு கொடுத்தபின், அத்திட்டஜாப்தா மறுபடியும் மார்ச்சு மாதம் 15-ந்தேதிக்குள் சட்டசபையில் ஆஜர் செய்யப்படுகின்றது. சட்டசபை மெம்பர்கள் அத் திட்டத்தைத் தீர ஆலோசித்து தங்களுக்குத் தோன்றும் திருத்தங்களைப் பிரேரணை செய்கின்றனர். ஆனால் மாகாண திட்டத்தில், சில இனங்களைப் பற்றி விவாதம் செய்ய அவர்களுக்கு அதிகாரமில்லை. சட்ட சபை அங்கீகரித்த தீர்மானங்களை கவர்னரின் நிர்வாகசபை அங்கீகரிக்கலாம், அல்லது மறுக்கலாம். மார்ச்சு மாதக் கடைசியிலாவது ஏப்ரல் மாத ஆரம்பத்திலாவது முடிவுதிட்டம் மறுபடியும் சட்டசபைக்கு ஆஜர் செய்யப்படுகின்றது. இச்சமயத்தில் சபை மெம்பர்கள் இதைக் குறித்துப் பொதுவாய்ப் பேசலாமே தவிர, அதில்எவ்விதமாறுதல்களும்செய்யும்படிகேட்கமுடியாது.

வரவு செலவு திட்டக் கணக்குகளின், அம்சங்களை இப்போதுகவனிப்போம். அதின் பொருட்டு 1916-17-வருஷத்திற்கு ஏற்படுத்தி யிருக்கும் விகிதங்களை அடியில் கண்டிருக்கிறோம்:—

## இந்திய கவர்ன்மெண்டாரின் 1916-17-ம் வருஷத்திய வரவு செலவு திட்டங்கள்.

### I. வருஷ வருமானத்தைப் பொருத்த திட்டங்கள்.

| வருமானமும் செலவும். | 1914-15 வருஷத்திய கணக்கு. | | 1915-16ம் வருஷத்திய திருத்தப்பட்ட மதிப்பு. | | 1916-17ம் வருஷத்திய வரவுசெலவு திட்டம். | |
|---|---|---|---|---|---|---|
| | வரவு. | செலவு. | வரவு. | செலவு. | வரவு. | செலவு. |
| வருமான பாபத்துகள். | பவுன். | பவுன். | பவுன். | பவுன். | பவுன். | பவுன். |
| (1) நீர்ப்பாசன வருமானமுள்பட நில வருமானம். | 16,520,926 | | 17,065,500 | | 17,142,500 | |
| (2) அபின் ... ... ... ... | 912,793 | | 777,700 | | 1,329,400 | |
| (3) உப்பு ... ... ... ... | 3,280,283 | | 2,829,500 | | 3,319,300 | |
| (4) ஸ்டாம்புகள் ... ... ... | 4,900,286 | | 5,200,800 | | 5,271,800 | |
| (5) தீர்வை ... ... ... ... | 8,288,063 | | 7,949,600 | | 7,954,200 | |
| (6) மாகாண வரிகள் ... ... ... | 37,468 | | 39,200 | | 28,300 | |
| (7) ஏற்றுமதி இறக்குமதி சாமான்களின் தீர்வை. | 5,892,781 | | 5,417,500 | | 7,279,000 | |
| (8) வருமான வரி ... ... ... | 1,987,313 | | 1,997,300 | | 2,861,500 | |
| (9) காடுகள் ... ... ... ... | 753,410 | | 735,400 | | 759,200 | |
| (10) பத்திரப்பதிவு இலாகா ... ... | 226,453 | | 249,000 | | 256,600 | |
| (11) கப்பங்கள் ... ... ... | 402,882 | | 399,600 | | 408,100 | |
| மொத்தம் ... | 43,202,663 | | 42,661,100 | | 46,609,900 | |

செலவு பாபத்துகள்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) கடன் தொகைகளுக்கு வட்டி ... ... | | 167,950 | | 39,400 | 185,600 | |
| சர்க்காரின் தொழில் வேலைகள், — போஸ்டு, தந்திகள் ... ... | 339,710 | | 543,800 | | 373,400 | |
| சர்க்காரின் தொழில் வேலைகள், — ரயில் பாதைகள் ... ... | 2,158,034 | | 3,748,500 | | 2.737,900 | |
| சர்க்காரின் தொழில் வேலைகள், — நீர்ப்பாசனம் ... ... | 926,701 | | 1,000,500 | | 1,066,500 | |
| மராமத்து வேலைகள் ... ... ... | | 6,888,990 | | 5,169,000 | | 4,474,500 |
| நாணய சாலை ... ... ... ... | | 72,184 | | 12,000 | | 17,400 |
| ஸிவில் டிபார்ட்மெண்டுகள் ... ... | | 17,404,857 | | 17,573,900 | | 17,790,100 |
| உபகாரச் சம்பளம் ... ... ... | | 3,266,499 | | 3,269,900 | | 3,315,700 |
| பலவிதராஜாங்க நிர்வாக செலவுகள். — பென்ஷன் நாணய மாறுதல் ... | 1,729 | | 86,700 | | | |
| பலவிதராஜாங்க நிர்வாக செலவுகள். — சில்லரை ... ... | | 165,132 | | 170,100 | | 310,500 |
| பலவிதராஜாங்க நிர்வாக செலவுகள். — இதர பாபத்துகள் ... ... | | 1,203,732 | | 1,122,800 | | 1,092,000 |
| பஞ்ச நிவர்த்தியும் அதன் ஜாமீன் பண்டும். — பஞ்ச நிவர்த்தி ... | | 279,885 | | 40,000 | | 46,300 |
| பஞ்ச நிவர்த்தியும் அதன் ஜாமீன் பண்டும். — மற்ற பாபத்துகள் ... | | 720,115 | | 960,000 | | 953,700 |
| ராணுவ இனங்கள். — சேவகத்திலிருப்பவர்களுக்காக ... | | 16,108,952 | | 17,802,100 | | 18,052,200 |
| ராணுவ இனங்கள். — சேவகத்திற்குவரக் கடமைப்பட்டவர்களுக்காக ... ... | | 3,131,416 | | 3,154,700 | | 3,123,500 |
| ராணுவ இனங்கள். — கடற்படை ... ... | | 265,255 | | 325,400 | | 525,100 |
| ராணுவ இனங்கள். — ராணுவ மராமத்துகள் ... | | 915,689 | | 744,200 | | 778,300 |
| ராணுவ இனங்கள். — பிரத்யேக காபந்துகள் ... | | 13,603 | | 16,300 | | 20,900 |
| மொத்தம் ... | | 3,975,422 | | 2,359,200 | 473,100 | |
| மாகாண வரவு செலவினால் — மிகுதி ... ... ... / குறைவு ... ... ... | 2,190,152 | | 565,000 | | 352,600 | |
| மொத்தம் ... | | 1,785,270 | | 1,794,200 | 825,700 | |

## II. திட்டங்களின் ரொக்கப்பத்து வரவு செலவு வழிகளும் இனங்களும்.

| வருமானமும் செலவும். | 1914-15 வருஷத்திய கணக்கு. | | 1915-16ம் வருஷத்திய திருத்தப்பட்ட மதிப்பு. | | 1916-17ம் வருஷத்திய வரவு செலவு திட்டம். | |
|---|---|---|---|---|---|---|
| | வரவு. | செலவு. | வரவு. | செலவு. | வரவு. | செலவு. |
| | பவுன். | பவுன். | பவுன். | பவுன். | பவுன். | பவுன். |
| மிகுதி ... | | | | | 825,700 | |
| குறைவு ... | | 1,785,270 | | 1,794,200 | | |
| முதலுக்கான கணக்குகள். வரி வருமானக் கணக்கில் சேராத ரயில் பாதைகள் நீர்ப்பாசனங்கள் முதலிய வைகளின் மூலதனம்:— | | | | | | |
| சர்க்கார் ரயில்பாதைகளுக்கு கம்பெனிகள் மூலமாய் வாங்கப்பட்ட கடன் தொகைகள். ... | 2,368,577 | | 3,499,300 | | 3,000 | |
| சமஸ்தான ரயில்பாதைகளுக்காக, சுதேச சமஸ்தானங்களால் கொடுக்கப்பட்ட முதல் ... | 66,666 | | 66,700 | | 66,700 | |
| ரயில்வே கம்பெனிகளால் வைப்பாக வைக்கப்பட் டிருக்கும் முதல் ... | 1,967,490 | | 494,100 | | 671,900 | |
| நீர்ப்பாசன வேலைகளுக்காக ஏற்பட்டிருக்கும் முதல் ... | | 1,123,180 | | 892,000 | | 900,000 |
| சர்க்கார் ரயில்பாதைகள் போடுவதில் முதல் செலவு ... | | 10,509,858 | | 4,793,200 | | 2,801,900 |
| டில்லி கட்டடத்திற்காக ஏற்பட்டிருக்கும் முதல் செலவு ... | | 360,361 | | 333,300 | | 266,700 |
| கம்பெனிகளின் ரயில்பாதைகள் போடுவதில் முதல் செலவு ... | | 1,342,253 | | 870,700 | | 951,100 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கடன்கள் வைப்புத் தொகைகள் முன் பணங்கள் அனுப்பிய பணங்கள் | ஸ்திரமான கடன்கள் ... | 2,727,294 | | 2,336,400 | | 3,822,100 | |
| | கைமாத்துக் கடன்கள் ... ... | 14,333,333 | | | 3,000,000 | | 1,500,000 |
| | ஸ்திரமாக்காத கடன்கள் ... ... | | 5,002,280 | 852,500 | | 254,700 | |
| | இந்தியா கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்பட்ட கடன்களும், முன் பணமும் ... | 4,553 | | 159,700 | | | 44,700 |
| | மாகாண கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்பட்ட கடன்களும், முன் பணமும் ... | | 343,125 | 155,900 | | 431,300 | |
| | ரயில்பாதைகள் போடுவதற்காக லோகல் போர்டாருக்கு கொடுக்கப்பட்ட கடன்கள். | 7,411 | | 7,700 | | 8,000 | |
| | டிபாஸிட்டுகளும் முன்பணங்களும் ... | | 2,095,408 | 7,970,000 | | 1,037,700 | |
| | அனுப்பிய பணங்கள் ... | | 536,911 | | 164,700 | 59,100 | |
| | இந்திய மந்திரியின் உண்டியல்கள் மூலமாய் கிடைத்த பணங்கள் வரவு ... | 7,147,940 | | 4,061,000 | | 3,885,000 | |
| | இந்திய மந்திரியின் உண்டியல்களுக்காக கொடுக்கப்பட்ட பணங்கள் ... | | 6,598,033 | | 4,570,300 | | 3,885,000 |
| | லண்டன் பில்களைக்கொண்டு வரவு ... | | | | | | |
| | லண்டனில் சவரன் உண்டியல்களுக்குக் கொடுத்தது ... ... ... | | | 4,668,000 | 4,668,000 | | |
| | | 28,623,264 | 29,696,679 | 24,321,300 | 21,086,400 | 11,065,200 | 10,349,400 |
| ரொக்கக் கையிருப்பு. | வருஷ ஆரம்பத்தில் கையிருப்பு ... | 23,765,985 | | 22,692,570 | | 25,927,470 | |
| | வருஷ முடிவில் கையிருப்பு ... | | 22,692,570 | | 25,927,470 | | 26,643,270 |
| | மொத்தம். ... | 52,389,249 | 52,389,249 | 47,013,870 | 47,013,870 | 36,992,670 | 36,992,670 |

மேலே காட்டிய ஸ்டேட்டுமெண்டுகளில், கடந்த 1914-15-ம் வருஷத்தின் கணக்குப்படி வரவு செலவு தொகைகளும், 1915-16-ம் வருஷத்திய திருத்தப்பட்ட திட்டமும், 1916-17-ம் வருஷத்திய உத்தேச திட்டமும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதம் குறிக்கப்படுவதால், வருஷத்திற்கு வருஷம் ஏற்படும் மாறுதல்கள் எல்லோருக்கும் நன்கு தெரிவதுடன், திட்டங்களில் ஒன்றுக் கொன்றிருக்கும் மாறுபாடுகளுக்குக் காரணங்களை கவர்ன்மெண்ட் மெம்பர்கள் எடுத்துச் சொல்லும் படியாகவு மிருக்கின்றது. சர்க்கார் வருஷம் என்பது எப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து மார்ச்சு மாதம் 31-ந்தேதியுடன் முடிவுபெறும்.

வரவு செலவு திட்டங்களின் அமைப்பை நன்றாக அறியவேண்டுமானல், அதன் மேலே காட்டிய இரண்டு அம்சங்களையும் நன்றாக கவனிக்கவேண்டும். அவையாவன:—(1) வருமானமும், அதற்காக ஏர்படும் செலவும் திட்டப்படுத்தியிருப்பது; (2) அந்த திட்டங்களின்படி நிறைவேற்றுவதிலும், நிறை வேற்றுவதற்கு ஆகவேண்டிய ரொக்கபத்து வரவின் வழிகளும், சர்க்காரின் கடன் தொகைகளை வரவு செலவு செய்வதற்காக செய்ய வேண்டிய ஏற்பாடுகளும் கண்டிருப்பது.

நிலவருமானம்.

வரவுசெலவு திட்டங்களில் நிலவருமானவரி எவ்வாறு விதிக்கப்படுகின்றதென்றும், எவ்வாறு வசூலிக்கப்படுகின்றதென்றும், இந்த வருஷ நூலின் மற்றொரு பாகத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றது. பாசனத்தினுல் கிடைக்கும் நிலவரியும் அந்த இனத்துக்கு ஏர்படும் நிர்வாகச்செலவும் இந்த ஸ்டேட்மெண்டில் குறிக்கப்படவில்லை. பாசனத்தால் கிடைக்கும் நிலவரியைத் தவிர, நில வருமானம் 1914-15 வருஷத்தில் 21,221,539 பவுன்; அதற்காக செலவு, 4,700,603 பவுன்; இவ்வருமானங்களுள் தேச சமஸ்தானங்களால் கட்டப்படும் கப்பத்தைத் தவிர, சட்ட சம்பந்தமில்லாத வருமானத்தில், நில வருமானமே, முக்கிய அம்சமாகவிருக்கின்றது.

அபின் வருமானம்.

அபின் வருமானம் சீனுதேசத்துக்கு அச்சரக்கை சர்க்காருக்கு ஏக தேசச் சொந்தமாய் ஏற்றுமதி செய்யப்பட்டு, அதை விற்பனை செய்வதனுல் கிடைக்கின்றது. கசகசாப் பயிரிடுவதையும், அதிலிருந்து அபின் செய்வதையும் தனி இலாக்கா கவனித்து வருகின்றது. லைசன்ஸ் பெற்றே கசகசா பயிர் செய்யப்படவேண்டும். அவ்வாறு பயிர்செய்யப்படும் கசகசாவை, பயிர் செய்பவர்கள் அதை அபின் இலாகாவுக்கு விற்றுவிடவேண்டும். இவ்வருமானம் பருவ நிலைப்படி அதிகப்பட்டும் குறைந்தும் வந்திருக்கிறது. ஆனுல் சொற்பகாலமாக இதன் வருமானம் அதிகக்குறைவாக இருக்கின்றது. 1911-ம் வருஷத்தில் சீனு தேசத்தில் எவ்வளவுக் கெவ்வளவு கசகசா பயிரிடுவதை நிறுத்துகின்றனர்களோ அவ்வளவுக்கவ்வளவு இந்தியாவிலிருந்து சீனுதேசத்திற்கு ஏற்றுமதி செய்யப்படும் அபினைக் குறைத்துவிடவேண்டுமென்று ஓர் ஏற்பாடு செய்து கொள்ளப்பட்டது. ஆகையால் இன்னும் கொஞ்சகாலத்தில் கசகசா பயிர் செய்வதே நின்றுபோய் இதனுல் கிடைத்துவரும் வருமானமும் கிடைக்காதென்பது நிச்சயம். அபின் விலை ஏலத்தில் நிரம்பவும் அதிகமாயிருக்கிறபடியால், அபின் ஏற்றுமதி குறைந்துவிட்டாலும், அதிலிருந்து உண்டாகும் நஷ்டம் ஓரளவு ஈடாயிருக்கிறது. அன்றியும் தற்காலம் நடக்கும் யுத்தத்தின் காரணமாக, மருந்திற்கு அபின் அதிகத் தேவையாக இருக்கின்றபடியால், அதன் விலை, நிரம்பவும் அதிகமாகியிருக்கின்றது.

### உப்பு வரி.

உப்பு செய்யும் சுதந்தரம் கவர்ன் மெண்டாருக்கு ஏகதேசத்தில் சொந்தம். கவர்ன்மெண்டாரே நேராக உப்பு செய்கிறார்கள். அல்லது லைசன்ஸ் பெற்றவர்களைக்கொண்டு உப்பு செய்யச் சொல்லுகின்றனர். அளத்திலிருந்து உப்பை வியாபார நிமித்தம் எடுத்துக்கொண்டு போவதற்குமுந்தி அந்த உப்புக்கு தீர்வை விதிக்கப்படுகின்றது. 1888-ம் வருஷமுதல் 1902-ம் வருஷம் வரையில் உப்பு வரி மணங்கொன்றுக்கு ரூ. 2—8—0 ஆக இருந்தது. ஆனால் 1903-ம் வருஷம் அவ்வரி ரூ.2—0—0 ஆகவும், 1905-ம் வருடம் ரூ. 1-8-0 ஆகவும், 1907-ம் வருடம் 1 ரூபாயாகவும் குறைக்கப்பட்டது. ஆனால், இந்த 1916-17ம வருஷத்தில் யுத்தநிமித்தம் வேண்டிய செலவிற்காக உப்பு வரியை 1-ரூபாயிலிருந்து 1—4—0 ரூபாயாக உயர்த்தியிருக்கின்றனர். இவ்வருஷத்தில் உப்பிலிருந்து 40 லட்சம் பவுன் அதாவது 6 கோடி ரூபாயாவது கிடைக்குமென்று நம்பப்படுகின்றது. இவ்வித அதிக வரியை ஏழைகள் கூடக் கொடுக்கும்படியாயிருக்கிறது. ஏனெனில், உப்பில்லாமல் ஒருவரும் காலட்சேபம் செய்யமுடியாது.

### லாகிரி சாராயத் தீர்வை.

இத்தேசத்தில் செய்யப்படும் பண்டங்களுக்கு விதிக்கப்படும் எக்ஸைஸ் என்ற தீர்வைவருமானம்,சாராயங்கள், கஞ்சா மருந்து, இத்தேசத்திலேயே செலவாகும் அபின் முதலியன செய்யப்படும் பொழுதும், அவைகளை விற்பனை செய்யப்படும்பொழுதும், வசூலிக்கப்படுகின்றது. மேற்கூறிய சாமான்களிலிருந்து (1916-17) வருஷத்தில் மொத்த வருமானம் 8,551,300 பவுன் கிடைக்குமென்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. நில வருமானத்திற்கடுத்தபடி எக்ஸைஸ் தீர்வை வருமானமே அதிக வரும்படியைத் தருகின்றது.

### ஏற்றுமதி இறக்குமதி வரிகள்.

ஏற்றுமதி இறக்குமதி சாமான்களுக்கு விதிக்கப்படும் கடல் சுங்கத் தீர்வை 1857-ம் வருஷத்திற்கு முந்தி சாமான்களின் கிரயத்தில் 100-க்கு 5 ரூபாயாக வீதம் ஏற்பட்டிருந்தது. ஆனால் அவ்வருஷத்திற்குப் பிறகுஅவ்வரி சிலசாமான்களுக்கு 10 ரூபாயாகவும் சிலசாமான்களுக்கு 20 ரூபாயாகவும் உயர்த்தப்பட்டது. மறுபடியும் 1875வருஷத்தில்அவ்வரி 5 ரூபாயாகக் குறைக்கப்பட்டது. 1882-ம் வருஷம், இங்கிலாந்திலுள்ள பருத்தி நெசவுக்காரர்கள், கவர்ன்மெண்டாரிடம் முறையிட்டுக் கொண்டதின்பேரில், ஏற்றுமதி இறக்குமதித் தீர்வையே இல்லாமல் போயிற்று. ஆனால், பிறகு பணத்தேவை அதிகமாயிருந்தபடியால், 1894-ம் வருடத்தில், பருத்தினூல், பருத்தி வஸ்திரங்கள் இவைகளைத்தவிர மற்ற சாமான்களுக்கு 100-க்கு 5 வீதம் வரி விதிக்கப்பட்டது. மறுபடியும் பணத்தேவை அதிகமாயிருந்தபடியால், பருத்தி சாமான்களுக்கும் இறக்குமதி வரி விதிக்கவேண்டியது அவசியமாயிற்று. ஆகையால், இறக்குமதியாகும் பருத்தி வஸ்திரங்களுக்கு 100-க்கு $3\frac{1}{2}$ வீதம் வரி ஏற்படுத்தப்பட்டது. ஆனால் இங்கிலாந்திய நெசவுக்காரர்களின் தூண்டுதலின்பேரில் இந்தியாவில் நெசவாகும் பருத்தி வஸ்திரங்களுக்கும் 100-க்கு $3\frac{1}{2}$ வீதம் எதிர் தீர்வை ஏற்படுத்தப்பட்டது. இவ்விதம் வரி விதிப்பது நியாயமாகாது என்று இந்தியா கவர்ன்மெண்டாருக்கும் ஜனங்களுக்கும் தெரிந்தபோதிலும், ஆங்கில வியாபாரிகளுக்கு இந்தியா மந்திரியிடத்திலுள்ள செல்வாக்கினால் அவ்வரியைத் தள்ள வேண்டியதற்காகச் செய்யப்பட்ட முயற்சிகளெல்லாம் வீணாய் விட்டன.

ஆனால் தற்காலம் ஏற்பட்டிருக்கும் யுத்தம் காரணமாக பணம் அதிகமாகத் தேவையாக இருக்கின்றபடியால், இந்த

வருஷத்தில் பொதுவாக சாமான்களுக்கெல்லாம் 100-க்கு 5 ரூபாயாக இருந்த தீர்வை, 7½ ரூபாயாக உயர்த்தப்பட்டது. தவிரவும் இறக்குமதியாகும் சர்க்கரைக்கு விதிக்கப்பட்டிருக்கும் தீர்வையோ 100-க்கு 10 ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது. இதற்கு முன்னால் வரி ஏற்படாமலிருந்த சாமான்களுக்கெல்லாம் இப்பொழுது வரி ஏற்பட்டிருக்கின்றது. கவர்ன்மெண்டார் வேறு சில சில்லரைத் தீர்வைகளையும் உயர்த்த உத்தரவு செய்திருக்கின்றனர். இவ்வருஷம் வரையிலும் ஏற்றுமதி செய்யப்பட்ட அரிசிக்கு மாத்திரம் மணங்கு ஒன்றுக்கு 3 அணா வீதம் தீர்வை போடப்பட்டு வந்தது. ஆனால் 1916-17-ம் வருஷம் இரண்டு புதிய ஏற்றுமதித் தீர்வைகள் போடப்பட்டன. அதாவது (1) ஏற்றுமதியாகும் தேயிலைக்கு 100 பவுண்டுக்கு 1½ ரூபாய் வீதமும், (2) திரிக்கப்படாத சணலுக்கு 400 பவுண்டுக்கு 2¼ ரூபாய் வீதமும், சணல் செடிக்கு ஒரு கட்டுக்கு 10 அணா வீதமும், தள்ளுபடியான சணலுக்கு 1½ ரூபா வீதமும், கோணியாக செய்யப்பட்ட சணலுக்கு டன் 1 க்கு 10 ரூபா வீதமும், சணலினால் செய்யப்பட்ட உடுப்புகளுக்கு டன் 1 க்கு 16 ரூபா வீதமும் தீர்வை விதிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விதம் ஏற்பட்டிருக்கும் தீர்வைகளிலிருந்தும், மற்ற இனங்களிலிருந்தும், 1916-17-ம் வருஷத்தில் 3 கோடி ரூபாய்க்கு மேல் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

### வருமான வரி.

இன்கம்டாக்ஸ் என்னும் வருமான வரி விவசாயத் தொழிலைத் தவிர மற்ற விதமாகக் கிடைக்கும் வருமானங்களின் பேரில் விதிக்கப்படுகின்றது. இவ்வரி முதல் முதல் 1860-ம் வருஷத்தில், 500 ரூபாய்க்கு மேற்பட்ட வருமானத்திற்கெல்லாம் ரூபா 1-க்கு 8 பை வீதம் போடப்பட்டது. நிலத்திலிருந்து கிடைக்கும் சிற்சில வருமானங்களின்பேரிலும் வரி ஏற்பட்டிருந்தது. பிறகு, இவ்வரி சுத்தமாய் நின்று போய்விட்டது. பல மாறுதல்களுக்குப் பிறகு, 1886-ம் வருஷத்தில் இப்பொழுதுள்ள வருமானவரிச் சட்டம் ஏற்படுத்தப்பட்டது. அச்சட்டத்தினால் நிலவரும்படிக்கு வருமானத் தீர்வை இல்லையென்றும் ஏற்பட்டது. 500 ரூபாய்க்குக் குறைந்த வருமானங்களுக்கெல்லாம் வரி கிடையாதென்றும், அதற்கு மேற்பட்ட தொகைக்கு வருமான வரி உண்டென்றும் ஏற்பட்டது. 1903-ம் வருஷத்தில் ரூபாய் 1,000க்குக் கீழ்பட்ட வருமானங்களின் பேரில் வரி நிவர்த்திக்கபபட்டது. 1000 ரூபாய்க்கு மேற்பட்டு 1999 ரூ. வரையிலும் ரூபாய் 1-க்கு 4 பை வீதம் வருமான வரி விதிக்கலாமென்றும், ரூ. 1999 மேற்பட்ட தொகைக்கு ரூ. 1-க்கு 5 பைவீதம் வரிவிதிக்கவேண்டுமென்றும் ஏற்பட்டது. ஆனால் இந்த 1916-17 வருஷத்தில் அச்சட்டத்தில் சிலமாறுதல்கள் செய்யப்பட்டன. அம்மாறுதல்களினால்—(1) 5000 ரூபாய்க்கு மேற்பட்டு 9999 ரூ. வரையிலும் கிடைக்கும் வருமானங்களுக்கு ரூபாய்க்கு 6பைவீதம் வரி செலுத்தவேண்டுமென்றும், (2) 10000 ரூபாய்க்கு மேற்பட்டு ரூ. 24999 வரையிலும் வருமானமுள்ளவர்கள் ரூபாய் 1-க்கு 9 பை வீதம் வரி செலுத்த வேண்டுமென்றும் (3) 24999 ரூபாய்க்கு மேற்பட்ட வருமானமுள்ளவர்கள் ரூபாய்க்கு 1 அணா வீதம் வரி செலுத்த வேண்டுமென்றும் விதித்திருக்கிறது.

இவ்விதம் அதிகமாக விதிக்கப்பட்டிருக்கும் வரி எல்லாம், பணக்காரர்களிடமிருந்து அதிக வரி பெறவேண்டியதற்காகவே ஏற்பட்டவை. 1916-17-ம் வருஷத்தில் இவ்வருமானத்திலிருந்து 9 லட்சம் பவுன் அதிகமாய்க் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

### ரயில் வருமானம்

மற்றசர்க்கார் வரவு செலவு இனங்களில், கவர்ன்மெண்டாருக்கு முக்கியமாய் வரும்படியைத்தரும் இரண்டு இனங்களிருக்கின்றன. அவை (1) ரயில் பாதைகள் (2) நீர்ப்பாசனம் என்பனவாம்.

கவர்ன்மெண்டிடமிருந்து வட்டிக்கு உத்தரவாதம் பெற்ற ரயில் பாதைகளும், தங்களுக்கே சொந்தமான ரயில் பாதைகளும் சென்ற 5 வருட காலத்தில் கவர்ன்மெண்டாருக்குக் கொடுத்திருக்கும் வரும்படியைக் கீழே குறிப்பிட்டிருக்கின்றோம்:—

### ரயில் வருமான ஸ்டேட்மெண்டு.

| வருஷங்கள். | பவுன். | ரயில் பாதைகளின் மைல். |
|---|---|---|
| 1912–13 | 4,825,916 | 25,200 |
| 1913–14 | 4,705,684 | 25,437 |
| 1914–15 | 2,272,558 | 26,106 |
| 1915–16 | 3,871,800 | 26,369 |
| 1916–17 | 2,914,100 | 26,511 |

1916-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31வ வரையில் இந்த ரயில் பாதைகளுக்காக கவர்ன்மெண்டார் செலவு செய்திருக்கும் பணம் 240,361,722 பவுன். மேலேசொன்ன தொகைகளில் அப் பணத்திற் குள்ள வட்டி சேர்க்கப்படவில்லை.

### தண்ணீர்த் தீர்வை.

நீர்ப்பாசனத்திலிருந்து கிடைத்திருக்கும் வருமானம் சுமார் 1,000,000 பவுன்தான். நீர்ப்பாசன வேலைகளுக்காகச் செலவிடப்பட்டிருக்கும் முதலோ 1916-17-ம் வருஷக் கடைசியில் 65,78,93,309 ரூபாய் ஆகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது:—

| இனவாரி | ரூபாய். |
|---|---|
| (1) ரெவின்யூ இனத்தில் பத்துளழுதப்படாமல் நீர்ப்பாசனத்திற்கு செலவாயிருக்கும் முதல்... | 54,54,76,170 |
| (2) நீர்ப்பாசனத்தின் பாதுகாப்பு வேலைகளுக்கு ஏற்பட்டிருக்கும் முதல் ... | 9,43,00,547 |
| (3) சாதாரண வருமானத்திலிருந்து செலவு செய்யப்பட்டிருக்கிற மற்ற வேலைகளுக்கு ஏற்பட்டிருக்கும் முதல் ... | 1,80,62,592 |

### ராணுவச் செலவு.

கவர்ன்மெண்டார் ராணுவ விஷயத்திலும் அதிகப் பணம் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. தற்கால யுத்தத்திற்கு முந்தி, அதாவது, 1914-ம் வருஷம் மார்ச்சு மாதம்31-ந்தேதிக்குமுன் ராணுவத்திற் கேற்பட்ட மொத்தச் செலவு 19,896,113 பவுன். 1914-15-ல் ராணுவத்திற்கேற்பட்ட செலவு 20,434,714 பவுன் வரையில் உயர்ந்தது. பிறகு 1915-16-ம் வருஷத்தின் திருத்தப்பட்ட திட்டப்படி 22,042,700 பவுனுகுமென்றும், நடக்கும் வருஷத்திற்கு 22,500,000 பவுன் வரையிலும் ஆகுமென்றும் மதிப்பு போடப்பட்டிருக்கிறது.

### ராஜாங்கத்தின் ரொக்கப் பத்து வரவு வழிகள்.

மேலே காட்டப்பட்டிருக்கும் வரவு செலவு திட்டங்களின் தொகைகளை வசூலித்து செலவு செய்வதற்காக இன்னவிதமாக ரொக்கப்பத்து வரவு செய்யப்படுகிறதென்பது இரண்டாவது ஸ்டேட்மெண்டில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதை விவரமாய் உணருவதற்குச் சில முக்கிய அம்சங்களை நாம் கவனிக்கவேண்டும்.

இந்தியா கவர்ன்மெண்டார் ஒவ்வொரு வருஷத்திலும் சாதாரணமாய் ராஜாங்க நிர்வாகத்திற்காக வரி வசூலித்துச் செலவு செய்வதுந் தவிர, ஏராளமான முதல் தொகைகளையும் கடன் வாங்கி, அத்தொகைகளை ரயில்பாதைகள் போடுவதிலும், நீர்ப்பாசன வசதிகள் உண்டாக்குவதிலும், புதிய ராஜதானியாகிய டில்லி நகரத்தை நிர்மாணிப்பதிலும், தேசிய ராஜாங்கத்தாருக்கும், விவசாயம் செய்பவர்களுக்கும் கடன் கொடுப்பதிலும் உபயோகப் படுத்துகிறார்கள். ஆதலின், இந்த பாபத்துகளில் ஏற்படும் பத்து வரவு இரண்டும் அதினாலுண்டாகும் வட்டி வருமானமும் வட்டிப் பொறுப்பும், கடன் பத்து வரவுக் கணக்கில் சேரும் இப்படிக் கவர்ன்மெண்டாரின் கடன், முதல் வகையறு பத்து வரவுக்கும் வருஷாந்தர வரி வருமான நிர்வாகச் செலவுக்கும் சம்பந்த மில்லையாயினும், ரொக்கத்தில் இந்த இரண்டு வழியிலும் அப்போதைக் கப்போது வரவும் வந்து செலவும் செய்யப்படுகிறது. உதாரணமாக—கவர்ன்மெண்டார் கடன் வாங்கும் தொகைகளுள் (1) கம்பெனிகளாலோ, தேசிய ராஜாங்கங்களாலோ கவர்ன்மெண்டு ஜவாப்தாரியின் பேரில் போடப்படும் ரயில் பாதைகளுக்காக வேண்டிய மூலதனம், (2) தபாலாபீஸ் சேவிங்க்ஸ் பாங்கிகள் மூலமாயும் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களின் பிராவிடெண்டு பண்டு மூலமாயும், கவர்ன்மெண்டார் வசம் இருக்கும் தொகைகள், ஆகிய இவ்விரண்டும் அவர்களால் வட்டிப் பொறுப்பின்பேரில் வாங்கப்பட்ட கடன்களாகும்.

### இந்திய கவர்ன்மெண்டாரின் கஜானா வேலைகள்.

தவிரவும், இந்தியா கவர்ன்மெண்டார் மாகாண கவர்ன்மெண்டார்களுக்கும், சுய ஆக்ஷி ஸ்தாபனங்களுக்கும் பொக்கிஷதாரர்களாக இருந்து வருவதால், அவரவர்களுக்குத் தேவையுள்ள பணத்தை அங்கங்கே கஜானாக்களில் வரவழைத்து வைத்து அப்போதைக்கப்போது அவரவருக்கு வேண்டிய செலவுக்குத் தங்குதடை யன்னியில் கொடுத்து வருகிறார்கள். இந்தக் கஜானா நிர்வாகமும், அதன் வேலைகளும் இந்தியா கவர்ன்மெண்டார் வசம் நேரில் இருக்கிறது. அதன் வேலைகள் மிகவும் நுட்பமாகவும் முக்கியமாகவும் விருக்கின்றன. சாதாரணமாய், இந்தியா முழுதிலும் ஜனவரி மாதம் முதல் ஏப்ரல் மாதம் வரைக்கும் நிலத்தீர்வை கிஸ்திகள் ஏராளமாகக் கஜானாக்களில் செலுத்தப்படுகின்றன. இந்த மாதங்களில் கஜானாக்களில் நிரம்ப பணம் குவியும். மே மாதம் முதல் டிசம்பர் மாதம் வரையில் மாதா மாதம் கஜானாக்களில் வரும் ஸர்க்கார் பணங்கள் அந்தந்த மாதங்களில் நேரும் செலவுகளுக்குக் குறைவாகவே இருக்கும். ஆனால், டிசம்பர் மாதத்தில் ஸர்க்கார் கஜானாக்களில் மொத்தம் தொகை எப்படியும் 10 கோடி ரூபாய்க்குக் குறையக்கூடாதென்பது ஸர்க்காரின் கொள்கையாதலால், டிசம்பர் மாதத்தில் இப்படி தொகை குவியும்பொருட்டு, ஏப்ரல் மாதம் முதல் தேதியிலேயே—புது வருஷம் ஆரம்பிக்கும் காலத்தில்—ஏராளமான கையிருப்புடன் கவர்ன்மெண்டார் கணக்குகளை முடித்து புது வருஷக் கணக்குகளை துவக்குகிறார்கள். மேலும் கவர்ன்மெண்டாரின் செலவு

பலவிடங்களிலும் பரவி தேசம் முழுதிலும் வியாபித்திருக்கிறபடியா லும், ஆங்காங்கு போக்குவரத்துக் கஷ்டமா யிருப்பதாலும், லேவாதேவி சாதனங்கள் பலவிதத்தில் குறைவா யிருப்பதாலும், கவர்ன்மெண்டார் தங்களுக்குச் செலவு நேரிடும் ஒவ்வொரு இடத்திலும் தொகைகளை ரொக்கமாகவே தயார்செய்து வைத்துக்கொண்டிருப்பது அவசியமாக விருக்கிறது. ஆகையால்ஆங்காங்கு தாலூக்கா ஷகர்களில் ஒவ்வொரு கஜானாவிலும் தகுந்த ரொக்கக் கையிருப்பு இருக்கும்படியாகப் பணப் போக்குவரத்து செய்வது கஜானா நிர்வாகத்தில் ஒரு முக்கிய காரியமாகும். ஆகவே, ஒரு இடமிருந்து மற்றொரு இடத்திற்கு நாணயங்களை அனுப்பவோ, வரவழைக்கவோ அப்போதைக் கப்போது செய்யப்படும் ஏற்பாடுகள் மிகவும் நுட்பமானவை. தவிர, வருமானம் சில காலங்களில் ட்டும் வருவதாலும், செலவுகள் ஏகமக்லத்திலும் ஒரே நிதானமாக ஏற்பட்டிருப்பதாலும், வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டும் வேலை நிரம்பவும் உஷாருடனும் கவலையுடனும் செய்யப்படுகின்றது. இப்படி ரொக்கப் பத்து வரவு செய்து அடுத்த வருஷத்து திட்டங்களையும் நிதானித்து முடித்தபிறகு தான், கைக்கு வரும் தொகைகளுக்கு மேல் பாண்டுகள் மூலமாக இந்தியாவில் இவ்வளவு கடன் வாங்க வேண்டுமென்று கவர்ன்மெண்டார் நிச்சயிக்கிறார்கள்.

## இங்கிலாந்தில் இந்தியா கொடுக்கும் பணம்.

ஆனால் இப்படிக் கஜானா நிர்வாகமும் ரொக்கப் பத்துவரவும்இந்தியா கவர்ன்மெண்டார் செய்வதில் மிகவும் முக்கியமான மற்றொரு வேலை உண்டு. அதைத்தனியே குறிப்பிட்டு விவரிப்பது அவசியமாகும், அது யாதெனில் நமது இந்தியா ராஜாங்கத்தாருக்கு இங்கிலாந்தில் ஆகவேண்டிய செலவுகளும் அதற்காக ஏற்படும் ரொக்கப் பத்து வரவுக் கணக்குகளுமேயாம். இதற்குக்கவர்ன்மெண்டு கணக்குகளில் "ஹோம் சார்ஜஸ்" என்று காணப்படுகின்றது. 1916-17ம் வருஷத்து திட்டங்களில் இந்தியா கவர்ன்மெண்டாரால்இங்கிலாந்தில் கொடுபட வேண்டிய தொகைகளா ஆகிற "ஹோம் சார்ஜ்ஸ்" அடியில் வருமாறு:—

| | பவுன் |
|---|---|
| (1) வருமானத்தி லிருந்து நேராகச் செலவுசெய்ய வேண்டியது ... | 96,600 |
| (2) ரயில் பாதைகள், நீர்ப் பாசனங்கள் இவைகளைத் தவிர மற்ற வேலைகளில் செலவாகியிருக்கும்பணத்தின் வட்டி ... | 22,27,300 |
| (3) தபால், தந்தி | 3,24,000 |
| (4) நாணய சாலை | 5,100 |
| (5) ஸிவில் டிபார்டுமெண்டுகளின் செலவுகளுக்கும் சம்பளங்களுக்கும் | 424,000 |
| (6) ரஜாகாலச் சம்பளமும் ஸிவில் சம்பந்தமான சில்லரைச் செலவுகளும் | 24,24,800 |
| (7) பஞ்ச நிவர்த்தி முதலிய வேலைகளுக்காக | 21,100 |
| (8) கடனுக்கு வட்டி ஜீவனாம்சம் முதலிய ரயில் பாதை அம்சங்களில் | 94,81,300 |
| (9) நீர்ப்பாசனம், அதைக் காவல் செய்வதற்காக செய்யப்பட்ட வேலைகள், அவ் வேலைகளில் செலவாகியிருக்கும் பணத்திற்கு வட்டி | 1,27,600 |
| (10) மற்ற பொது வேலைகள் | 39,500 |
| (11) ராணுவத்தின் செலவு | 46,91,700 |
| மொத்தம். | 19,863,000 |

இப்படி இரண்டு கோடி பவுன் வரையில் இந்திய கவர்ன்மெண்டாருக்கு இங்கிலாந்தில் செலவு இருக்கை

யில், சுமார் எட்டு லக்ஷம் பவுன் மட்டில் தான் அவர்களுக்கு அங்கே கிடைக்க வேண்டிய தொகைகளாக இருக்கின்றன. பாக்கி 190 லக்ஷம் பவுனுக்கு மேலுள்ள துகைகளை நமது தேசத்தில் வசூலாகும் வரித் துகைகளிலிருந்து வருஷாவருஷம் இங்கிலாந்தில் செலுத்தும்படியாக விருக்கின்றது. இந்தத் தொகை ரொக்கமாக இங்கிலாந்தில் செல்லாகும்படி செய்வதற்கு சாதனமும் உபாயமும் நாளது வரையில் ஏற்பட்டிருப்பதைச் சற்று சுருக்கமாகக் காணுவோம்.

### இந்திய மந்திரியின் உண்டியல்களும் இந்திய நாணயமும்

நமது தேசத்திலிருந்து மேல் நாட்டிற்கு தான்யமுதலிய சரக்குகள் எவ்வளவு ஏற்றுமதி யாகிறதோ அதன் பெறுமானத்திற்குக் குறைவாகத்தான் நமது தேசத்திற்குச் சரக்குகள் வெளி நாட்டிலிருந்து இறக்குமதி யாகின்றன. ஆதலின், சாதாரணமாய் எப்பொழுதும் நமது தேசத்திற்கு மேல் நாட்டிலிருந்து மிகுதியாய்ப் பணம் கிடைக்க வேண்டியதாகவே யிருக்கிறது. இப்படிக் கிடைக்கவேண்டிய தொகை, உலகம் முழுதுக்கும் நாணயக் களஞ்சியம் போலிருக்கும் லண்டன் பட்டணத்து 'மணிமார்க்கெட்டின்' மூலமாய் அப்போதைக்கப்போது வகை செய்யப்படுகிறது. அப்படி வகை செய்வதின் மூலமாகவே நமது தேசத்திற்குச் செல்லாகவேண்டிய தொகைகளை இந்திய மந்திரி லண்டனில் பற்றிக்கொண்டு இந்தியா கவர்ன்மெண்டாருக்காகத் தான் இங்கிலாந்தில் கொடுக்க வேண்டிய தொகைகளை ரொக்கப்படுத்திச் செலுத்தி விடுகிறார். அது எப்படியென்பதை கவனிப்போம்.

இந்திய மந்திரி செய்வதென்னவெனில், லண்டன் நகரத்தில் நாணய பஜாரில் தான்செலுத்துவதற்காகத் தேவையிருக்கும் தொகைகளுக்கு அப்போதைக்கப்போது இந்தியாவிலிருக்கும் இந்திய கவர்ன்மெண்டாரின் கஜானாவின் பேரில் உண்டியல்கள் தயார் செய்து, அதை லண்டனிலிருக்கும் வியாபாரிகளிடம் ரொக்க விலைக்கு ஏலத்திலோ அல்லது ஒப்பந்தத்திலோ கொடுக்கிறார். இந்தியாவிலிருந்து சரக்குப் பெற்று அதற்கு இந்தியாவில் தொகை செலுத்தவேண்டிய வியாபாரிகள், ரொக்கம் அனுப்புவதைவிட இந்த உண்டியல்களைவாங்கியனுப்புவது சாதகமென்பதை முன்னிட்டு, அப்போதைக் கப்போது இவைகளை ரொக்கங் கொடுத்து வாங்கி இந்தியாவுக்கு அனுப்பி விடுகிறார்கள். இந்த உண்டியல்களைப் பெற்றுக்கொள்ளும் இந்தியாவிலிருக்கும் வியாபாரிகள் அவைகளை ஸர்க்கார் கஜானாவில் கொடுத்தவுடன் ரொக்கம் பெற்றுக்கொண்டு விடுகிறார்கள். இந்திய மந்திரி உண்டியல்களுக்காகப் பெற்ற ரொக்கங்களைத் தான் கொடுக்கவேண்டிய பாபத்துகளுக்கு உபயோகித்து விடுகிறார். இவ்விதம் பணப்போக்கு வரத்து அன்னியில் இந்திய கவர்ன்மெண்டாரின் தேவைகளை இந்திய மந்திரி இங்கிலாந்தில் ஈடு செய்து விடுகிறார்.

### இந்திய நாணயங்களின் செலாவணி.

ஆனால், இங்கிலாந்தில் கொடுபடவேண்டிய தொகைகள் பவுன்நாணயத்திலும், இந்தியாவில் கொடுபடவேண்டிய தொகைகள் ரூபாய் நாணயத்திலும் செல்லுபடியாக வேண்டியிருப்பதால், இந்த நாணயங்களுக்கு ஒன்றிற்கொன்று மாற்றப்படுவதற்கு ஏற்படும் வட்டம் இன்னவென்றும் கவனிக்க வேண்டும். இது இரண்டு மூன்று அம்சங்களைப் பொறுத்திருக்கிறது.

முதலில், இங்கிலாந்து வியாபாரிகளால் இந்தியாவில் ஏராளமாகப் பணம் சில கெடுக்களில் கொடுபடவேண்டியிருந்து, அந்த ஸமயம் இந்திய மந்திரியால் இங்கிலாந்தில் கொடுபட வேண்டிய பணம் குறைவாக விருந்தால், இந்திய மந்திரியின் உண்டியல்களுக்கு சாதாரணமாய் வியாபாரிகள் வட்டம் கொடுத்துப் போட்டியின்

பேரில் வாங்கி விடுவார்கள். இதற்கு நேர் விரோதமாக, இந்திய மந்திரியின் தேவை அதிகமாயும் வியாபாரிகளின் தேவை குறைவாயும் இருந்தால், இந்திய மந்திரி வட்டம் கழித்தே உண்டியல்களை விற்கவேண்டியது அவசியமாய் விடும். வியாபாரிகள் தேவை அதிகமாக விருக்கும் காலத்தில் ரூபாய் நாணயத்தைப்பவுன் நாணயத்திற்கு மாற்றுவதில் வட்டம் மிகவும் குறைந்துவிடும். ஸர்க்காரின் தேவை அதிகமாயிருக்கும் பக்ஷத்தில் வட்டம் அதிகரித்துவிடும். ஆனால் இந்தமாதிரி ரூபாய் நாணயத்திற்கும் பவுன் நாணயத்திற்கும் இருக்கும் வட்டத்தின் வாசியோ குறைவோ எல்லைகடந்து போகச் சாத்திய மில்லை. அந்த எல்லை யாதெனில், ஒருவர்க்கொருவர் கொடுக்க வேண்டிய தொகைகளை, பத்து வரவு மூலமாயும் உண்டியல் மூலமாயும் வட்டங் கொடுத்து வகைசெய்வதைவிட, பவுனையோ அல்லது தங்கப்பாளங்களையோ ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்திற்கு அனுப்புவதற்கு என்ன கட்டணம் செலுத்தவேண்டுமோ அந்தக் கட்டணத்திற்கு, மேற்பட்டு வட்டம் கொடுக்கவோ கிடைக்கவோ நேரிடாது. ஏனெனில், அந்த வட்டம் கொடுத்து உண்டியல்கள் அனுப்புவதைவிட, பவுனையோ தங்கத்தையோ அனுப்பி விடுவது லாபமாய் விடுமாதலால், வியாபாரிகள் அப்படியே செய்து விடுவார்கள். ஆனால் இப்படி இந்தியா கவர்ன்மெண்டார் கொடுக்க வேண்டிய தொகைகளுக்கு வியாபாரிகள் உண்டியல்களை வட்டம் கொடுத்தோ கொடுக்காமலோ வாங்கி அனுப்பவேண்டிய அவசியம் சில சமயங்களில் இல்லாமல்போய் விடும். இந்தியாவில் க்ஷாமம் நேரிட்டு சரக்குகளின் ஏற்றுமதி மிகவும் குறைந்துவிடும் பக்ஷத்தில், அச்சமயம் இந்திய கவர்ன்மெண்டார் இங்கிலாந்தில் தாங்கள் செலுத்த வேண்டும் தொகைகளுக்கு வேறு ஏற்பாடு செய்கிறார்கள். அதாவது, இந்தியாவில் மேல்நாட்டிலிருந்து சரக்குகள் இறக்குமதி செய்து அவைகளுக்கு இங்கிலாந்தில் தொகை செலுத்தத் தேவையிருக்கும் வியாபாரிகளுக்கு, இங்கிலாந்தில் இந்திய மந்திரியிடம் பவுனில் ரொக்கம் பெற்றுக்கொள்ளும் படியான உண்டியல்களைக் கொடுத்து அவர்களிடம் தங்கள் தொகைகளை இந்தியகஜானாக்களில் பெற்றுக்கொண்டு, தங்களுக்கும் இந்திய மந்திரிக்குமுள்ள ரொக்க வரவு செலவுகளை நேர்செய்து விடுகிறார்கள்.

### இந்திய மந்திரி வசமிருக்கும் நிதிகள்.

இப்படி இவர்களிடமும் இந்திய மந்திரியிடமும் கையிருப்பிருக்கும் தொகைகளைப் பணப் போக்குவரத்தில்லாமல் நேர்செய்து விடுவதற்கு, சில சாதனங்களை ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். ஏனெனில், இந்திய மந்திரியிடம் இருக்கும் தொகைகள், இந்திய கவர்ன்மெண்டாரின் உண்டியல்கள் ரொக்கத்தில் செலுத்துவதற்குப் போதுமானபடியிருக்கும் பொருட்டும், இந்தியா கவர்ன்மெண்டாரால் இந்திய மந்திரியின் உண்டியல்களுக்கு அப்போதைக் கப்போது பணம் கொடுப்பதற்கும், ரொக்கங்கள் கையிருப்பிருக்க வேண்டியதற்கும், ஒருவருக்கொருவர் அப்போதைக் கப்போது தெரிவித்து, அவரவர்கள் கையிலிருக்கும் நிதிகளைச் சேகரம் செய்து வைத்து வருகிறார்கள். தவிர, வெள்ளி நாணயத்திற்கும் தங்க நாணயத்திற்கும் ஏற்பட்டிருக்கும் பெறுமானம் ஒரே நிதானமாய், ஒரு பவுன் 15 ரூ. விழுக்காடு, செலாவணியாகும்படிக்கும் அந்தப் பெறுமானப்படி வெள்ளி நாணயச் செலாவணி குறையாமலிருக்கும் படிக்கும் இந்திய கவர்ன்மெண்டாருக்காக இங்கிலாந்தில் இந்திய மந்திரியிடம் பவுன் நாணயங்களிலேயே 30 கோடிக்குமேல்பட்டு 40 கோடி பவுன் வரையிலுள்ள ஒரு நிதி குவிக்கப்பட்டு அவர் வசம் இருக்கிறது.

மேலும், இந்திய கவர்ன்மெண்டாரால் கர்ரன்ஸி நோட் என்னும் காகித நாணயத்தைச் செலாவணி செய்வதற்காகச் சேகரித்து வைத்திருக்கும் நிதியின் ஒருபாகத்தையும் இங்கிலாந்தில் இந்திய மந்திரி வசம் வைக்கப்பட்டிருக்கிறது. ஆதலின், இவ்விரண்டு நிதிகளும் இந்திய மந்திரியிடம் இருப்பதால், ரூபாயின் செலாவணி தங்கத்தில் நிராக்ஷேபணையா யிருக்கும்படிக்கும், ரூபாய், பவுன் இவ்விரண்டு நாணயங்களிலும் மேல் நாடுகளுக்கும் இந்தியாவுக்கும் நடக்கும் பதது வாவில் கொடுக்கப்பட வேண்டிய வட்டம் அதிசமாகாம லிருக்கும்படிக்கும், இந்திய மந்திரி செய்வது சுலபமாய்விடுகிறது. எப்படி யெனில், நாணயத் தட்டோ, கிராக்கியோ ஏற்படும் காலங்களில் இந்திய மந்திரி இந்த இரண்டு நிதிகளிலு மிருக்கும் ரொக்கங்களைத் தன் தேவைகளுக்காகவும் வியாபாரிகளின் தேவைகளுக்காகவும் தாராளமாய் உபயோகப் படுத்தக் கூடியதாகிறது. அப்படி அவர் அடிக்கடி செய்வது அவசிய மில்லாவிடினும், சிற்சில அபூர்வ காலங்களில் செய்யவேண்டி யிருக்கிறது. ஆனால் இந்தத் தொகைகள் அவர் கையிலிருக்கிறதென்பதே இந்திய மந்திரியின் நாணயத்துக்கும் செல்வாக்குக்கும் விரிவான ஆதாரங்களா யிருக்கின்றன. ஆனால் இப்படிப்பட்ட நிதிகள் நமது தேசத்திலேயே ஸர்க்காரிட மிருந்து, இந்திய கவர்ன்மெண்டாரே இந்திய மந்திரியைப்போல் நாணயத்தின் வட்டத்தையும் கவர்ன்மெண்டார் தேவைகளையும் ஒழுங்கு செய்வது சரியாகுமென்றும், இங்கிலாந்தில் அவைகளை வைத்திருப்பதில் மேல்நாட்டு வியாபாரிகளுக்கும் லண்டன் ஸாவகார்களுக்கும் அனுவசியமான சாதகமும் சௌகர்யமும் ஏற்பட்டு விடுகிறதென்றும், அந்நிதிகளை நமது தேசத்திலேயே வைத்துப் பரிபாலித்துவரும் பக்ஷத்தில் நமது தேச வியாபாரத்திற்கும், நாணயத்திற்கும் மிக்க நன்மை தருமென்றும் தேசபக்தர்கள் அடிக்கடி எடுத்துக்காட்டி யிருக்கின்றார்கள்

ராஜாங்கக் கடன்.

இந்திய ராஜாங்கத்தில் ஸர்க்காரால் வாங்கப்பட்டிருக்கும்கடன்கள் பெரும்பாலும் விவசாய விருத்திக்கான நீர்ப்பாசன சாதனங்களையும் வியாபார விருத்திக்கான ரெயில் பாதைகளையும் கட்டி நிர்வகித்து வரவேண்டும் நிமித்தமாக வாங்கப்பட்டிருக்கின்றன. இம்மாதிரி நேராக பலன் கொடுக்கக் கூடாத ஸர்க்கார் கடன்களும், அவைகளின் பொறுப்பும் இந்திய ராஜாங்கத்தாருக்கு சுவல்பமாகவேதா னிருக்கிறது.

பலன் கொடுக்காத கடன்.

யுத்தம் முதலிய ராணுவச் செலவு, மற்றும் யுத்தக் கப்பல்கள் கட்டுவது, கோட்டைகள் பலப்படுத்துவது, முதலிய தளவாடச் செலவுக்காக ஸர்க்காரால் வாங்கப்படும் கடன் பிரதிப்பிரயோஜன மற்றதென்று சொல்வது வழக்கம். ஏனெனில், இந்த விஷயங்களுக்காகச் செலவாகும் பணம் திரும்பக் கிடைக்காமல் அழிவதற்கென்றே உபயோகப் படுவதால் அதை பலனற்ற செலவென்று சொல்வது தகும். ஆனால், இப்படிப்பட்ட செலவு செய்வது, தற்போதைய ஜனங்களுக்கு மட்டுமல்லாமல் பின்புவரும் தலைமுறைகளுக்கும் ராணுவ வலுவைக்கொண்டு ராஜாங்கத்தார் தேசத்தைக் கட்டிக் காத்து உள்ளில் அமைதியும் வெளியில் பயமின்மையும் உண்டு பண்ணுவதால், அதின் பளுவை இப்போதிருப்பவரும் பின்பு வருபவர்களும் சமமாக ஏற்றுக்கொள்ள வேண்டியது நியாயமாகும். ஆகையால், ஸர்க்காரில் இச்செலவை முதல் செலவாகக் கொண்டு அதின் வட்டிப் பொறுப்பையும் மூல கடன்களை யழிக்கும்பொறுப்பையும் அவர்களுள் நிரவி விடுகிறார்கள். இதை இப்படிச் செய்வது எல்லா

ராணுவச் செலவுக்கும் யுத்தச் செலவுக்கும் வகை செய்யவேண்டிய விதிகளுக்கு ஒத்ததாகுமா வென்பதைப்பற்றி மேல்நாட்டு அர்த்த சாஸ்திரிகளுள் அபிப்பிராய பேதங்களுண்டு.

### பலன் கொடுக்கும் கடன்.

ஆனால், ஜனங்களின் அபிவிருத்திக்காக வெளிநாடுகளில் கடன்வாங்கிச் செலவு செய்யப்படுகிற மேல் சொல்லிய மற்றொரு இனத்தைப்பற்றி அபிப்பிராய பேதங்கள் இருந்தாலும், அவைகளின் நன்மையைப்பற்றி யாரும் ஆக்ஷேபணை சொல்வதற்கில்லை. நல்ல வருமானம் வரக்கூடிய ரெயில்கள் போடுவதிலும், நல்ல விளைவு அதிகரித்து ஸர்க்காருக்கு அதிகத்தீர்வை வரக்கூடிய நீர்ப்பாசனங்கள் கட்டுவதிலும் கடன் வாங்கிப் பணம் உபயோகப்படுத்துவதினால் அதிலிருந்து கிடைக்கும் லாபத்தினின்று வட்டி செலுத்தியது போக ஈவாக நிற்கும் பணம் ஸர்க்காருக்குப் பலவித பொதுநன்மை காரியங்களுக்கு உபயோகப்பட்டு வருகின்றது.

இவைகளுக்கு வேண்டிய மூலதனங்களைப் பிரதி வருஷம் வசூலிக்கப்படும் வரி வருமானத்திலிருந்து வகை செய்வது பிசகாகும். ஏனென்றால், இந்த முதல் செலவினால் உண்டாகும் பிரயோஜனங்களை இப்போது வரி கொடுப்போர் மட்டுமெல்லாமல் அவர்களுக்குப் பின் வரும் தலைமுறைகளும் அடைகிறார்கள். ஆகவே அந்த நன்மைகளை யடையும் எல்லோரும் அதின் செலவைப் பொறுக்கும் பொருட்டு, இந்த மூலதனங்களைக் கடனாக வாங்கி அதன் வட்டியை நிரந்தரமாய் லாபமடைய பாத்தியப்பட்டவர்கள் செலுத்திவருவதுதான் சரியான உபாயமென்று ராஜ்ய தந்திர நிபுணர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

### ராஜாங்க கடனின் இனங்கள்.

அப்படி நமது தேசத்தில் இந்த மாதிரி காரியங்களை நடத்துவதற்காக ராஜாங்கத்தாரால் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ரூபாய் நாணயத்திலும் பவுன் நாணயத்திலும் கடன்கள் வாங்கப்பட்டிருக்கின்றன. அத்தொகைகள் நாளிடையில் அதிகரித்து வந்திருப்பதை பின் வரும் ஸ்டேட்மெண்டினால் அறியலாம்:—

| | ரூபாய்க் கடன் | பவுன் கடன். |
|---|---|---|
| 1820—21 | 2,72,477,630 | 5762888 |
| 1850—51 | 4,54,287,550 | 3920592 |
| 1880—81 | 8,59,597,460 | 71429133 |
| 1890—91 | 1,027,465,550 | 10,4408208 |
| 1900—01 | 1,153,319,058 | 13,3435377 |
| 1910—11 | 1,380,972,155 | 17,7998335 |
| 1915—16 | 1,538,936,400 | 18,2657257 |

இந்த மொத்தக் கடன் தொகைகளை இனவாரியாகப் பின் வருமாறு பிரிக்கலாம்:—

| | பவுன். |
|---|---|
| ரயில்பாதைகள் | 211,838,819 |
| நீர்ப்பாசனம் | 37,552,030 |
| சாதாரணச் செலவு | 24,898,777 |
| டில்லி நிர்மாணச் செலவு | 119,866 |

வட்டித்தொகையாகிய 10,165,596 பவுன், கீழ்கண்டவாறு பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | பவுன். |
|---|---|
| ரயில்பாதைகள் | 7,072,548 |
| நீர்ப்பாசனம் | 1,282,513 |
| சாதாரணம் | 1,169,047 |
| மற்ற வேலைகளுக்கு | 641,488 |

மேலே காட்டியிருக்கும் தொகைகளைக் கவனிக்குமளவில், முக்கியமாக ரெயில்பாதைகள் போடுவதிலும் நீர்ப்பாசனங்கள் கட்டுவதிலும்தான் அதிகச் செலவாயிருக்கிறதென்பது தெரியவரும். ஆனால், ரயில் பாதைகளிலிருந்தும் நீர்ப்பாசனங்களிலிருந்தும் அவைகளுக்காக வாங்கின கடனின் வட்டிக்கு மேற்பட்டு மொத்தம் 40 லட்சம் பவுனுக்குமேல் ராஜாங்கத்தாருக்கு பிரதி வருஷம் லாபம் கிடைப்பதென்பதையும்கவனிக்க வேண்டும்.

## மாகாண கவர்ன்மேண்டுகளின் வரவு செலவு.

இந்தியா கவர்ன்மெண்டார் நேராக நிர்வகித்து வரும் ராஜாங்க வரவு செலவு ஏற்பாடுகள் மேலே விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறதை யனுசரித்து, அந்த மாகாண கவர்ன்மெண்டார்கள் அவரவர்களுக்கிருக்கும் அதிகாரத்திற்குட்பட்டு நடத்தி வரும் வரவு செலவு நிர்வாகத்தையும் இவ்விடத்தில் விரிவாகக் குறிப்பிட சாத்தியமில்லை. ஆனல், அடியில்வரும் ஸ்டேட்மெண்டைக் கொண்டு ஒவ்வொரு மாகாண கவர்ன்மெண்டாரின் பண நிலைமையும் அவர்கள் செய்யும் வரவு செலவின் தாரதம்யமும் நன்கு விளங்கும்:—

| மாகாணங்கள். | வருஷ ஆரம்பத்தில் கையிருப்பு. | மொத்தச் செலவு. | வருஷ முடிவில் கையிருப்பு. |
|---|---|---|---|
| சென்னை ... | 8,27,235,000 | 77,314,000 | 9,921,000 |
| பம்பாய் ... | 89,525,000 | 75,410,000 | 14,115,000 |
| வங்காளம் ... | 87,894,000 | 61,797,000 | 26,097,000 |
| ஐக்கிய மாகாணங்கள் ... | 82,071,000 | 68,097,000 | 13,974,000 |
| பஞ்சாப் ... | 53,367,000 | 47,826,000 | 5,541,000 |
| பர்மா ... | 63,074,000 | 57,402,000 | 5,672,000 |
| பீஹார், ஒரிஸ்ஸா ... | 43,816,000 | 32,571,000 | 11,245,000 |
| மத்திய மாகாணங்கள் ... | 37,358,000 | 28,916,000 | 9,442,000 |
| அஸ்ஸாம் ... | 16,499,000 | 15,009,000 | 1,490,000 |
| மொத்தம்... | 5,61,839,000 | 4,64,342,000 | 97,497,000 |

முக்கியமாய் மாகாண கவர்ன்மெண்டாருக்கு வரும் வருமானமும், அவர்களால் செய்யப்படும் செலவும், அவர்களுக்கும் இந்தியா கவர்ன்மெண்டாருக்கும் ஏற்பட்டிருக்கும் புரொவின்ஷியல் ஸெடில்மெண்டு என்னும் ஒப்பந்தப்படி நடந்தேறி வருகின்றன என்பது ஏற்கனவே அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஒப்பந்தமானது 1911-ம் வருஷம் ஏப்ரல் மாஸம் 1-ந் தேதிமுதல் ஸ்திரமாக ஏற்படுத்தப்பட்டிருப்பதாக வழங்கி வருகிறது. மாகாண கவர்ன்மெண்டாருக்கும் இந்தியா கவர்ன்மெண்டாருக்கும் இம்மாதிரி ஒப்பந்தத்தின்பேரில் வரவு செலவு செய்ய வேண்டியதின் காரணமென்னவெனில், நமது மாகாண கவர்ன்மெண்டார்களுக்கு ஸ்வேச்சையாய் வரிபோடவும் செலவு செய்யவும் அதிகாரம் இல்லாததுதான். இந்தியா தேசத்தின் நிர்வாகச் சட்டம் 1858-ம் வருஷத்தில் ஏற்படுத்திய காலத்தில் நமது தேசத்தின் ஸர்க்கார் வருமானமும் அதின் செலவும் முழுதும் இந்திய சக்கரவர்த்தியின் பேரால் இந்தியா கவர்ன்மெண்டாரிடமே ஒப்புவிக்கப்பட்டு அவர்களால் இந்தியா தேசத்தின் காரியங்களுக்கே உபயோகப் படுத்தப்பட வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருப்பதை முதலில் சொல்லியிருக்கிறோம். தவிர, மாகாண கவர்ன்மெண்டாரால் நடத்தப்படும் சாதாரணமான ஆக்ஷியிலும் சட்ட நிர்மாணத்திலும் ஸர்க்கார் நிர்வாகத்திலும் இந்தியா கவர்ன்மெண்டாரின் உத்திரவுகளுக்கும் மேற்பார்வைக்கும் கீழ்ப்பட்டு நடத்த வேண்டுமென்று அதே சட்டத்தில் ஏற்பட்டிருக்கிறது. ஆனதால் இந்த வரி வகையறு வரவு செலவு திட்டங்களும் இந்தியா கவர்ன்மெண்டாரின் நேர்ப் பார்வையிலேயே இருந்து வருகின்றது. மற்ற நிர்வாக விஷயங்களில் இவ்விரு பிரிவார்களுக்கும் அதிகாரப் பிரிவினை செய்வதின் அவசியத்தை அடிக்கடி காட்டியும்

செய்தும் இருந்தபோதிலும், இந்தியா கவர்ன்மெண்டாரின் அதிகாரம் எவ்விதத்திலும் பண விஷயத்தில், மேல்பட்டே யிருக்கிறது. இந்த ஏற்பாட்டில் நமது மதராஸ் கவர்ன்மெண்டாரின் திரவிய நிலைமை எப்படியிருக்கிறதென்று சற்றுக் கவனிப்போம்.

நாம் ஏற்கனவே இந்தியா கவர்ன்மெண்டின் கணக்குகளைப் பற்றிக் காட்டியிருப்பதுபோல மாகாணக் கணக்குகள் மூன்று பகுதிகளின் கீழ் தயாரித்துத் தாக்கல் செய்யப்படுகின்றன. அதாவது 1914-15-ம் வருஷத்திய முடிவான கணக்குகளும், 1915-16,ம் வருஷத்திய முடிவடையப் போகும் கணக்குகளும், 1916-17-ம் வருஷத்தில் வரப்போகும் திட்டங்களும், தனித்தனியாய் அந்தந்தத் தலைப்பின் கீழ்எடுத்துரைக்கப்படும். இந்தத் திட்டங்களை ஏற்கனவே சட்ட சபையின் ஒரு சிறு கம்மிட்டியாருக்குத் தெரியப்படுத்தி, அவர்களுடைய யோசனையையும் சிபார்சுகளையும் கவனித்த பிறகு கவர்ன்மெண்டார் முடிவுசெய்து பிறகு வெளிப்படையான மீட்டிங்கில் விவாதத்திற்குக் கொண்டு வருகிறார்கள். ஆயினும், இந்தக் கமிட்டியாருக்காவது அல்லது முழு சட்ட சபைக்காவது, அல்லது மதராஸ் கவர்ன்மெண்டாருக்கே யாவது ஸ்வாதீனத்துடன் இந்தத் திட்டங்களை மாற்றிவிட அதிகார மில்லை. அவைகளைத் திருத்தும் விஷயத்திலும், புதிய செலவுகள் செய்யும் விஷயத்திலும் புதிய வருமானங்களுக்கு வகை செய்யும் விஷயத்திலும், இந்தியா கவர்ன்மெண்டார் கடுமையான நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்த நிர்ப்பந்தமான விதிகள் முதலில் கணக்குகளும் திட்டங்களும் நேர்மையாக இருப்பதற்கான விதிகளாகும். மற்றொரு பகுதி இந்தியா கவர்ன்மெண்டின் வரவு செலவுகளுக்கும், அவர்களுடைய திரவிய ஸ்திதிக்கும் ஒருபாதகமும் உண்டாகாமலிருப்பதற்காக ஏற்பட்ட விதிகளாகும். மாகாண கவர்ன்மெண்டார்கள் புதுவரிகள் போட்டால் இந்தியா கவர்ன்மெண்டார் தங்களுக்குத் தேவையாயிருக்கும்போது அதற்குமேல் புது வரி சுமத்துவது கஷ்டமாக இருக்குமாதலால், அதில் நிர்ப்பந்தம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்தியா கவர்ன்மெண்டார் பொது ஜனங்களிடம் கடன் வாங்கவேண்டி யிருப்பதால், தங்கள் நாணயத்திற்கும் சௌகரியத்திற்கும் போட்டியாகத் தங்களுக்கும் அதேமாதிரி நாணயம் வேண்டுமென்று மாகாண கவர்ன்மெண்டுகள் பொது ஜனங்களிடத்தில் போகக்கூடாதென்ற நிர்ப்பந்தமும் ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. இதேமாதிரியாக, செலவுகளிலும் தாராளமாக இருக்கக்கூடாத நிர்ப்பந்தங்கள் இருக்கின்றன. பணங்களின் போக்கு வரத்தும் கையிருப்பும் இந்தியா கவர்ன்மெண்டாரிடமே யிருப்பதால் அதில் ஒருவித சுணக்கமும் ஏற்படாமலிருக்கும்படி, மாகாண கவர்ன்மெண்டாருக்குப் பாத்தியமா யிருக்கும் தொகைகளைக்கூட அவர்கள் செலவு செய்யும் வகையில் இந்தியா கவர்ன்மெண்டாரின் சௌகர்யத்திற் குட்பட்டு நடந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது.



# சென்னை ராஜதானியில் நிலத்தீர்வை ஏற்பாடுகள்.

[ஆனரபிள் ராவ்பகதூர் வ. கி ராமாநுஜாசாரியார் எழுதியது.]

இந்த மாகாணத்தில் சர்க்காருக்கு வருகிற நிலவரும்படி நான்கு வகைப்படும்.—(1) பேஷ்கஷ், (2) சுரோத்திரியம் ஜோடி (3) ரயத்வாரி ரெவினியு (4) சில்லரை.

பேஷ்கஷ்:-ஆங்கிலேயர் இத் தேசம் சேர்ந்து இந்தமாகாணம் அவர்கள் வசம் வந்தபோது, நிலத்தீர்வையை சிலர் குடிகளிடமிருந்து வசூல்செய்து சர்க்காருக்குக் கட்டிக்கொண்டு வந்தார்கள். அந்த ஏற்பாட்டை நிலை நிறுத்தி, அவர்கள் அதிகாரத்துக்குட்பட்ட நிலங்களுக்கு அவர்களைச் சொந்தக்காரர்களாகச்செய்து, அவர்கள் கொடுக்கும் தீர்வைக்குமேல் ஒரு காலத்திலேயும் கேட்பதில்லை யென்று சட்டம் செய்யப்பட்டது. இவர்களுக்கு ஜமீன்தார்களென்று பெயர். சிலர் சிற்றரசர்களாயிருந்து சண்டைக் காலத்தில் மனுஷ உதவியைச் செய்துவந்தனர். இவ்விதமான உதவி வேண்டாமையால் அந்த உதவிக்கு வேண்டிய பொருளைத் தீர்வையாகக் கொடுக்கும்படி அவர்கள் விஷயத்தில் சர்க்கார் ஏற்பாடு செய்தார்கள். இந்த வகுப்பில், வெங்கடகிரி, காளஹாஸ்தி, கார்வெட் நகர், இராமனுதபுரம், சிவகங்கை முதலான ஜமீன்கள் சேர்ந்தன. இந்த இரண்டுவிதமும் ஏற்படாதவிடங்களிலும், இதே ஏற்பாட்டை அமுலுக்குக் கொண்டுவர சில கிராமங்களை ஒன்றுகச்சேர்த்து, அவற்றை மிட்டாக்கள் என்று பெயரிட்டு, சிலருக்கு ஏலத்தினுல் சர்க்காரார் கொடுத்தார்கள். அப்படி மிட்டாவில் வரக்கூடிய நிலத் தீர்வையை 3 பங்கு பண்ணி, அதில் ஒரு பாகத்தை மிட்டாதாருக்கு விட்டு இரண்டு பாகத்தை சர்க்காரார் கிஸ்தியாகச் செய்தார்கள். இவ்விதமாய் நிலமடைந்தவர்களுக்கு மிட்டாதாரென்று பெயர். இவர்கள் என்ன பேர் அடைந்திருந்தாலும் அவர்கள் சர்க்காருக்குக் கொடுக்கிற தீர்வையை அதிகப்படுத்த முடியாது. இவர்களாலே சர்க்காருக்கு வருஷம் ஒன்றுக்குக் கிடைப்பது. ரூ. 49,89,000.

சுரோத்திரியம் ஜோடி:—முன் இராஜாக்களினுலே பிராமணர்களுக்கு ஜீவனத்துக்காக அநேக கிராமங்கள் தீர்வையில்லாமலோ, அல்லது சொல்ப தீர்வையின்பேரிலோ கொடுக்கப்பட்டிருந்தன. அவைகளுக்கு சுரோத்திரியமென்று பெயர். சில கிராமங்கள் முன் செய்திருந்த உபகாரத்தின் பொருட்டோ அல்லது பிறகு செய்யவேண்டிய ஊழியத்திற்காகவோ, சிலருக்கு இனுமாகக் கொடுக்கப்பட்டன. இவைகளுக்கு ஜாகீர் என்று பெயர். இவைகளை ஜாகீர்தாரர்கள் அனுபவிப்பதில் சில குறைகளிருந்தன. யாருக்கு கிராமம் கொடுபட்டிருந்ததோ அவர்களும் அவர்கள் சந்ததிகளும் மட்டில் அந்த நிலங்களை அனுபவித்துக் கொள்ளலாம். வார்சு இல்லாவிட்டால் ஜாகீர் சர்க்காருக்குத் திரும்பிவந்துவிடவேண்டியது. வேலை செய்வதற்காகக் கொடுக்கப்பட்ட கிராமமும் வேலை செய்யாதிருந்து விட்டாலும் அல்லது வேலை வேண்டாமென்று போனுலும் சர்க்காருக்குத் திரும்பிவர வேண்டியது தான். இந்தக் குறைகளை நீக்கி நிலத்தை சொந்த நிலம்போல் அனுமதி கொடுத்து ஏற்பாடு செய்வதற்காக இனும் கமிஷனர் என்று ஒரு உத்தி

யோகஸ்தரை சர்க்காரில் நியமித்தார்கள். அவர் விசாரித்து சில தொகையை வருஷா வருஷம் ரெவினியுவாக ஏற்பாடு செய்து இனும்தாருக்கு டைடில்டிட் (மூல சாசனம்) கொடுத்தார். இந்தப்பிரகாரம் சர்க்காருக்குக் கொடுக்கும் தீர்வைக்கு சுரோத்திரியம் ஜோடி என்று பெயர். இவைகளால் சர்க்காருக்குக் கிடைக்கிறது வருஷம் ஒன்றுக்கு ரூ. 75,56,000.

இந்த வகுப்பார் கொடுக்கும் தீர்வையையும் அதிகப்படுத்துவதில்லை என்று சர்க்காரால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

ரயத்வாரி ரேவினியூ:—இது தான் இந்த மாகாணத்தில் சர்க்காருக்கு அதிகத் தீர்வையைக் கொடுக்கிறது. இந்திய ராஜாக்கள் அரசாண்டு வந்த போது ஒவ்வொருவனும் தன் வரும்படியில் ஆறில் ஒருபாகம் சர்க்காருக்குக் கொடுத்து வந்தான். பிறகு மகம்மதியர்வந்து சண்டையும் கலகமும் உண்டான காலத்தில் மகம்மதிய அரசர்கள் அந்தந்த காலத்தில் ஆறில் ஒன்றுக்குமேல் தனித்தனியாய் வரிகள் வசூல்செய்து வந்தார்கள். அவையெல்லாம் சேர்ந்து ஒருவன் வரும்படியில் பாதியாக விருந்தது. இதை ஆங்கிலேயரும் ஒப்புக்கொண்டு ஜனங்களிடத்தில் வசூல்செய்து வந்தார்கள். பிற்பாடு தொகை மிகக் கடுமையாயிருக்கிறதென்றும் குடிகளால் கொடுக்க முடியாதென்றும் கண்டு அதை சில ஜில்லாக்களில் வரவரக் குறைத்தும் வந்திருக்கிறார்கள். இதுநிற்க, சேலம் ஜில்லாவில் அஸிஸ்டெண்ட் கலெக்டராயிருந்து பிறகு இந்த மாகாணம் கவர்னராக வந்த சர் தாமஸ் மன்ரோ என்பவர் மிட்டா ஏற்பாட்டை ஒப்புக்கொள்ளாமல், ஒவ்வொரு குடியினிடத்திலும் சர்க்கார் நேராக ஏற்பாடு செய்யவேண்டுமென்று, சொல்லி ரயத்வாரி ஏற்பாட்டை சேலம் ஜில்லாவில் வழக்கத்துக்குக் கொண்டுவந்து அந்த ஏற்பாட்டால் சர்க்காருக்கிருக்கிற லாபத்தை எடுத்துக் காண்பித்தார். அவர் செய்த ஏற்பாடுகளினால் ஒவ்வொரு ஸ்தலத்திற்கும் ஸ்திரமான தீர்வையைப் போட வேண்டியது அவசியமெனத் தீர்மானமாயிற்று. அதை ஒப்புக்கொண்டு அந்த நிலத்தை சாகுபடி செய்தால், அப்படி சாகுபடி செய்பவன் அதின் தீர்வையைக் கவர்ன்மெண்டாருக்குக் கொடுக்க வேண்டியது. அந்த நிலத்தை விட்டு விட்டால் சர்க்காருக்குத் தீர்வைகொடுக்க வேண்டியதில்லை. இதுதான் ரயத்வாரி ஏற்பாட்டின் ஸாராம்சம். ஒரு குடி தனக்கு வேண்டிய நிலங்களை சாகுபடிக்குக் கேட்பதை தர்க்காஸ்து செய்கிறதென்றும், வேண்டாதநிலங்களை விட்டு விடுவதற்கு ராஜினமா கொடுப்பதென்றும் சொல்வது வழக்கம். அனேக ஜில்லாக்களில் மட்ட நிலங்களை இவ்வாறு சாகுபடி செய்வதையும் இரண்டொரு வருஷங்களுக்குப் பிறகு விட்டுவிடுவதையும் பார்க்கலாம். இந்தக் காலத்தில் எந்த நிலத்தையும் வேண்டாவிடில் விட்டுவிடலாம். கொஞ்ச காலம் மட்ட நிலங்களை மாத்திரம் விட்டுவிடக் கூடாது. அவ்வாறு விட்டுவிடுவதாக இருந்தால் அதோடு கூட சில நல்ல நிலங்களையும் விட்டுவிட வேண்டும் என்ற ஏற்பாடு இருந்தது. அது ஜனங்களுக்காவது சர்க்காருக்காவது அனுகூலமில்லையென்று தெரிந்து சர்க்கார் அந்த ஏற்பாட்டைவிட்டு விட்டார்கள்.

கைப்பற்று:—ஆதிமுதல் சாகுபடி செய்யப்பட்ட நிலங்களுக்குத் தான் தீர்வை செலுத்தவேண்டியதென்றும், பயிரிடாவிட்டால் தீர்வை கிடையாதென்றும் ஏற்பட்டிருந்தது. சர்க்காருக்குத் தீர்வை குறையாமலிருப்பதற்காக ஒவ்வொரு தாசில்தாரும் குடிகளைக் கொண்டு இவ்வளவு விஸ்தீரணமுள்ள நிலம் சாகுபடி செய்யப்பட வேணுமென்று ஏற்பாடுசெய்து வந்தார்கள். இதற்குத் திட்டம் என்று பெயர். இட்டப்படி அநேக காரணங்க

ளாலே சாகுபடி செய்ய முடியாமலும் ஜனங்கள் பூரா திட்டப்படி தீர்வையைக் கொடுக்க முடியாமலும் தீர்வையைத் தள்ளிக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டும் வந்தார்கள். இவ்வாறு தள்ளிக்கொடுப்பதற்கு வஜாசெய்து கொடுப்பதென்று சொல்லுகிறது. இப்படித் தீர்வையைத் தள்ளிக் கொடுப்பதில் வெகு கஷ்டமிருப்பதைக் கண்டு அந்த திட்டத்தை மாற்றி நடைமுதலிலிருக்கும் ஏற்பாட்டை சர்க்காரார் செய்துவந்தனர். அது முதற்கொண்டு ஒவ்வொரு குடியும், தன்னிடம் இருக்கும் எல்லா நிலங்களையும் கட்டாயம் பயிரிடவேண்டியதென்றும் பயிரிட முடியாவிட்டால் அவைகளை விட்டுவிடலா மென்றும் விடாமல் வைத்துக்கொண் டிருந்தால் அவைகளைப் பயிரிட்டாலும் இடாவிட்டாலும் தீர்வையைக் கொடுக்கவேண்டியதுதான் என்றும் ஏற்பட்டதன்றி வஜா கொடுக்கப்படமாட்டாதென்றும் ஏற்பட்டது. புன்செய் நிலங்களுக்கு பாய்ச்சல் உண்டுபண்ணுவதற்கு சர்க்கார் கட்டுப்படுவதில்லை யாகையால் மழை இல்லாமல் சாகுபடி யாகாவிட்டாலும் சர்க்கார் வஜா கொடுக்கிறதில்லை. நன்செய் நிலங்களின் பாய்ச்சலுக்கு மாத்திரம் சர்க்காரார் கட்டுப்பட் டிருக்கிறார்க ளாகையால் சர்க்கார் குற்றத்தினால் தண்ணீரில்லாமல்போனாலும் அதிக வெள்ளத்தினால் நஷ்டம் வந்தாலும் வஜாகொடுத்துவருகின்றனர். குடியின்குற்றத்தால் நஷ்டம் ஏற்பட்டால் சர்க்கார்வஜா கிடையாது. இது இப்போது அனுஷ்டானத்திலிருந்துவருகிறது. இவைகளில் எல்லாரும் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்று உண்டு. வருஷாவருஷம் போர்ட்டார் பிரசுரம் செய்கிற ஜமாபந்தி ரிபோர்ட்டைப் பார்த்தால் 100 ஏகரா புன்செய் நிலங்களில் சுமார் 28 ஏகரா தரிசாகவிருக்கிறது. அவைகளில் சில நிலங்கள் வருஷா வருஷம் பயிரிடத் தகுந்தவையாக இல்லை. மற்றவைகளுக்கு மழை கிடையாது. கொஞ்ச காலத்துக்கு முன் நடந்து வந்த செட்டில்மெண்டில் கால ஸ்திதிக்குத் தகுந்தாற்போல 100-க்கு 10-முதல் 25-வரையில் மொத்த நிலவரும்படியில்தள்ளுபடியாயிருக்கிறது. ஆனால் அது போதாது. ஒரு வருஷத்தில் பூரா திட்டத்திற்கு மாசூல் குறைவதற்கு மாத்திரம் இது போதுமேயல்லாமல் முழுவதும் சாகுபடி ஆகாமலிருப்பதற்கு இது போதுமானதாக எண்ணக்கூடாது.

சர்வே (Survey) ரயத்வாரி ஏற்பாட்டில் ஒவ்வொரு ஸ்தலத்திற்கும் தீர்வை ஏற்படுவதால் அதின் விஸ்தீரணத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாயிருந்தது. முதல்முதல் 33 ஜாதி அடிக்கோலால் கிழக்கேயிருந்து மேற்கேயும் தெற்கேயிருந்து வடக்கேயும் அளந்து அத்தொகைகளைப் பெருக்கி விஸ்தீரணத்தைத் தெரிந்து கொண்டார்கள். கிழக்குமேற்கிலாவது தெற்கு வடக்கிலாவது ஒரு அளவு போதாவிட்டால் இரண்டு மூன்று அளவு எடுத்து அவைகளைக்கொண்டு சராசரி விஸ்தீரணத்தைக் கண்டுகொண்டார்கள். இதற்கு பைமாஷ் அளவு என்று பெயர். இந்த அளவு நாற்பது ஐம்பது வருஷம் அனுஷ்டானத்திலிருந்த பின்பு அதில் ஏதோ பிசகு இருப்பதாக எண்ணி 1850-ம் வருஷத்திற்குமேல் புதிதாக சர்வே செய்யத் தொடங்கினார்கள். பைமாஷ் அளவில் இரண்டு குறைகளிருந்தன. ஒருஸ்தலத்திற்கும் மற்றொன்றிற்கும்உள்ள எல்லையைவரப்பினாலும்மண்மேடுகளினாலும்மரங்களினாலும் காட்டியிருந்தார்கள். இவைகள் நிலையுள்ளவையல்லாமையால் ஒரு சர்வே நம்பர் இன்ன விடத்திலுள்ளது என்பதைக் கண்டுகொள்ள முடியாம லிருந்தது. கிராமங்களில் சர்வே நம்பரைக் காட்டும் பிளானும் கிடையாது. அளவும் சுமாராக விருந்தது. புது சர்வேயில் இந்தக் குறைகளை நீக்க முதலில் கருங்கல்லால் டிமார்க்கேஷன் (எல்லைக் குறிப்பு) செய்து, ஒவ்வொரு நம்பரையும் முக்கோணங்களாகப் பிரித்து அவைக

ளின் பக்கங்களை அளந்து, விஸ்தீரணத்தை சரியாகத் தெரிந்துகொண்டு, கிராம பிளானும் தயார்செய்து, குடிகளும் ரெவினியு உத்தியோகஸ்தர்களும் லேசுவாக சர்வே நம்பரைக் கண்டு பிடிக்கும்படி செய்தார்கள். இதின் பக்கத்தில் காட்டியிருக்கும் நம்பரில் மூன்று முக்கோணம்செய்து மூன்றின் மொத்த விஸ்தீரணத்தை சர்வே நம்பரின் விஸ்தீரணமாய் எடுத்துக்கொள்வது வழக்கம்.




ஒவ்வொரு சர்வேநம்பரும் இவ்வளவுக்குக் குறையக்கூடாதென்ற ஒரு எல்லையை நியமனம்செய்ததால், இரண்டு மூன்று அல்லது அதற்கும் மேற்பட்ட நிலங்களை ஒரு சர்வே நம்பரில் சேர்த்தார்கள். அதனால் ஒவ்வொரு குடிகளின் நிலத்தையும் சப்டிவிஷன் (உட்பிரிவு) செய்தார்கள். அந்த சப்-டிவிஷனுக்கும் டிமார்க்கேஷன் வேண்டியதென்று எண்ணி சர்க்காரில் கல்லை முதலில் நட்டுப் பிறகு குடிகளிடம் அதன் விலையை வசூல் செய்தார்கள். இது கொஞ்ச நாள் நடந்தது. பிறகு வேலை மிகத் தாமசமாய் நடக்கிறதென்று கண்டு அதைக் கூடிய சீக்கிரம் முடிக்க வேண்டுமென்று அந்தந்த காலத்தில் இருந்த சர்வே தலைமை உத்தியோகஸ்தர் அபிப்பிராயப்படி ஏற்பாடு செய்துவந்தார்கள். பிறகு அந்தஏற்பாடுகளினால் சரியான விஸ்தீரணங்கள் தெரியவில்லை என்றும், ஒழுங்கான பிளான்கள் தயார் செய்ய முடியவில்லை என்றும் சர்க்காரார் அறிந்து கொண்டு அதற்குவேண்டிய பரிகாரங்களை இப்போது செய்துவருகிறார்கள். அதாவது, ஒருதரம் சர்வே செய்த விடங்களையே மறுபடியும் சர்வே செய்துவருகிறார்கள். சர்வே செய்து 30-வருஷமான பிறகு மறுசெட்டில்மெண்டு செய்கிற காலத்தில் ஏற்கெனவே செய்யப்பட்டிருக்கும் சர்வேயானது உபயோகமில்லை யென்று தெரியவருகிறது. டிமார்க்கேஷன் செய்த கல்லுகள் அநேக விடங்களில் எடுபட்டுப்போய் சர்வே நம்பர் இன்னதென்று தெரிந்துகொள்ள முடியாமலிருக்கின்றது. ஒவ்வொரு சர்வே நம்பரிலும் சப் டிவிஷன்கள் அதிகமாயும் ஏற்கெனவே இருந்த சப் டிவிஷன்கள் மாறி இருந்தபடியாலும் சப் டிவிஷன்கள் ரெவினியூ கணக்குகளுக்கு வேண்டி யிருந்தாலும் புதிதாய் அளக்க வேண்டியது அவசியமாகஇருந்தது. சிலது ஜில்லாக்களில் முன்போலவே சர்வே பூராவாக மறுபடியும் செய்யப்பட்டது. இதற்கு மறு சர்வே என்று பெயர். சில விடங்களில் பூராவாக சர்வே செய்யாமல், போனது வந்தது இவைகளைப் பார்த்தால் போதுமென்று அதைமாத்திரம் சர்வே செய்தார்கள். இதற்கு ரிவிஷன் சர்வே என்று பெயர். இந்த இரண்டு வித சர்வேக்களும் இன்னும் நடந்து வருகின்றன.

லாண்டு ரிகார்ட்ஸ்(Land Records)- இப்படி ஒருதரம் சர்வே செய்தவிடத்தை மறுபடியும் சர்வே செய்வதினால் அதிகப்பணம்செலவாகிறதென்று சர்க்கார் லாண்டு ரிகார்டு டிபார்ட் மெண்டு ஒன்றை உண்டுபண்ணினார்கள். டிமார்க்கேஷன் கல்லினால் சர்வே நம்பரைத் தெரிந்து கொள்ளக்கூடு மாதலால் சர்வேகல்லுகளைக் கவனித்துப் பார்க்க வேண்டியதென்றும், எடுபட்டுப்போனவைகளை மறுபடியும் நாட்ட வேண்டியதென்றும் அதனால் உண்டாகும் செலவைக் குடிகளிடம் வசூல்செய்ய வேண்டியதென்றும் இந்த டிபார்ட்மெண்டார் ஏற்பாடு செய்தனர். இதற்காக ஒவ்வொருஜில்லாவுக்கும் ஒவ்வொருதாசில்தாரும், ஒவ்வொரு தாலுக்காவுக்கும் ஒவ்வொரு ரிவின்யூஇன்ஸ்பெக்டரும், நாலைந்து ஜில்லாக்களுக்கு ஒவ்வொரு சூபரின்டெண்டும்நியமித்தார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் செய்யவேண்டியவேலை கர்ணனைச்சேர்ந்தது. அவ்வேலைகளை ரெவினியூ இன்ஸ்பெக்டர் மேன்பார்வை செய்யவேண்டு மென ஏற்பாடாயிற்று. இந்த ஏற்பாடு வந்த

காலத்தில் இது ரொம்பவும் நல்ல ஏற்பாடென்றும் சர்வேயில் செலவாகும் பணம் குறையுமென்றும் எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள். ஆனால் அனுபோகத்தில் அநேக கஷ்டங்களிருப்பதாகத் தெரிகிறது. முதல் சர்வே முடித்துக் கொஞ்சகாலமானபடியால் அநேக கற்கள் இருந்தவிடம் தெரியாமல் போய்விட்டன. அவைகளைச் சரியான விடத்தில் நடவேண்டிய கஷ்டம் ஒன்று. இரண்டாவது கிராமக்கணக்கர்கள் இதில் அதிக கவனம் செலுத்தாததினால் கல்லுகள் நடவேண்டிய வேலை பாக்கி விழுந்து விட்டது. அவர்கள் வேலையைப் பரிசீலனை பண்ண ரிவினியூ இன்ஸ்பெக்டர்கள் போதாதென்றும் தெரியவந்தது. இவைகளைப்பற்றி சர்க்காரில் ஆலோசித்து ஒரு நம்பரில் அடங்கிய சப் டிவிஷன்களை டிமார்க்கேஷன் செய்ய புதுக் கல் போடவேண்டியதில்லை யென்றும், போட்ட கல்லை கர்ணம் கவனிக்க வேண்டியதில்லை என்றும் உத்தரவு பிறப்பித்தார்கள். அந்த சப் டிவிஷன்களில் புறம்போக்கு நிலம் இருந்தால் மாத்திரம் டிமார்க்கேஷனை நிறுத்துகிறதில்லை என்றும் உத்தரவு பிறப்பித்தார்கள், கொஞ்ச காலத்துக்கு முன் இந்த சங்கதியை ஆலோசித்த சர்வே கமிட்டியார் இன்னும் கல்லின் தொகையைக் குறைப்பதற்குச் சிபார்சு செய்கிறார்கள்.

செட்டில்மெண்டு (Settlement):--ஸர் தாமஸ் மன்ரோகாலம் முதல் ரயத்வாரி நிலங்களுக்குத் தீர்வை ஏற்பட்டு பிறகு அது அதிக கடுமையா யிருந்ததென்று தீர்வை விகிதங்களை சில ஜில்லாக்களில் குறைத்தும் வந்தார்கள். சர்வே செய்த காலத்தில் தீர்வையையும் சரியாகக் கண்டுவிதிக்க வேண்டியதென்று ஒரு புது ஏற்பாடு அமுலுக்குக்கொண்டுவரப்பட்டது. அது முதல் நிலங்களைப்பார்த்து அவைகளின் மண்ணின் நிலைமையைப்பரிசோதித்து வெவ்வேறு வகுப்பாகப் பிரித்துவந்தார்கள். இவ்வாறு பிரிக்கப் பட்டவைகளில், ஒரு வகுப்பு வண்டல்மண் மற்றொன்று செவ்வல். வேறொன்றுகரிசல் அல்லது கருப்புமண். இன்னும் சில சுண்ணாம்பு கலந்த மண். மற்றும் சில சமுத்திர மணல்போன்றவைகளாக விருந்தன. இவைகளைப் பார்ப்பதினாலேயே நாம் தெரிந்து கொள்ளலாம். ஒவ்வொரு வகுப்பிலும் களி என்றும், மணல் என்றும் இரண்டும் கலந்தவை என்றும் மூன்று உட்பிரிவுகள் ஏற்பட்டுள்ளன. இவைகளில் ஒரு கட்டி மண்ணை ஜலத்தில் கரைத்து வைத்திருந்தால் அடியில் மணலும் மேலே களியும் இருப்பதைக்கண்டு இன்ன உள் வகுப்பு என்று தெரிந்துகொள்ளலாம். இந்த ஒவ்வொரு உட்பிரிவையும் ஐந்துதரமாக (Sorts) பிரித்தார்கள். அந்த உட்பிரிவில் முதல் தரமானது உயர்ந்தது. அதற்கு அடுத்தபடி இரண்டாவது. இதே மாதிரி படிப்படியாய் மற்றவைகளையும் வகுத்தார்கள். இந்த உயர்ந்த தரமும் மட்டமான தரமும் கண்ணால் பார்ப்பதாலும் ஜலத்தில் மண்ணைக் கரைப்பதாலும் கண்டுகொள்ளமுடியாது. ஆனால் வகுப்புப் பிரிக்கிறபோது உத்தியோகஸ்தர்கள், முன் இருந்த தீர்வையையும் தங்களபிப்பிராயத்தில் எவ்வளவு அதை உயர்த்தலாமென்பதையும் கவனித்து ஏற்படுத்துவது வழக்கம். செட்டில்மெண்டு வகுப்புப் பிரிப்பது சாஸ்திரப்படி என்று சொன்னபோதிலும் கைத்திட்டமென்றே நம்பலாம். அடியில், வகுப்புகள், உள் வகுப்புகள், தினுசுகள் முதலியன காட்டப்பட்டிருக்கின்றன.

| | தினுசு | | தினுசு |
|---|---|---|---|
| I. வண்டல் - களி | 1, 2, 3, 4, 5 | II. வண்டல்-மணல் களி கலந்தது | 1, 2, 3, 4, 5 |
| III. கரிசல் - களி | 1, 2, 3, 4, 5 | IV. கரிசல் - மணல் களி கலந்தது | 1, 2, 3, 4, 5 |

| | தினுசு | | தினுசு |
|---|---|---|---|
| V. கரிசல் - மணல் | 1, 2, 3, 4, 5 | VI. செவ்வல் களி | 1, 2, 3, 4, 5 |
| VII. செவ்வல் - மணல் களி கலந்தது | 1, 2, 3, 4, 5 | VIII. செவ்வல் - மணல் | 1, 2, 3, 4, 5 |

மற்றவையும் இப்படியே

இதற்கு அடுத்தபடி செய்த வேலை என்னவெனில், ஒவ்வொரு வகுப்பு, உள் வகுப்பு, சார்ட்டுசேர்ந்த நிலங்களுக்கு நன்செய்யானால் ஏகராவுக்கு எவ்வளவு நெல் விளையும், புன்செய்யானால் ஏக்ரா 1-க்கு புன்செய்தானியங்கள் எவ்வளவு விளையும் என்று கண்டுபிடிப்பது. இதற்காக அநேக ஸ்தலங்களில் மாசூலை யறுத்து, கூடவிருந்து சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் கண்டு முதல் செய்துவந்தார்கள்.

தஞ்சாவூர் ஜில்லாவில் ஏற்பட்ட கண்டு முதலை கீழே காட்டி யிருக்கிறது.

தஞ்சாவூர் நன்செய் நிலங்கள்

| தாரம். | வகுப்பு. தினுசு | கண்டுமுதல் பட்டணம் படி |
|---|---|---|
| 1. | II-1, | 1125 |
| 2. | II-2, I-1 | 1000 |
| 3. | II-3, I-2, IV-1 | 900 |
| 4. | II-4, I-3, IV-2 III-1, VII-1 | 800 |
| தாரம். | வகுப்பு. தினுசு | கண்டுமுதல். பட்டணம் படி. |
| 5. | II-5, I-4, IV-3, III-2. V-1, VII-2, VIII-1, XII-1 | 700 |
| 6. | I-5, IV-4, III-3, V-2, VII-3 VIII-2, XII-2, XIII-1 | 600 |
| 7. | III-4, IV-5, V3, VII-4, VIII-3, XII-3, XIII-2, XIV-1 | 500 |
| 8. | III-5, V-4, VII-5 VIII-4, XIII-3, XIV-2 | 450 |
| 9. | V-5, VIII-5, XIV-3 | 400 |

மழை தண்ணீர்ஒத்துக்கொள்ளாமல் சில வருஷங்களில் மாசூல் அதிகமாயும் சில வருஷங்களில் குறைந்தும் போகிறது. இதற்காக 100-க்கு இவ்வளவென்று கண்டு முதலில் குறைத்து பாக்கியை எடுத்துக்கொண்டார்கள். வயல்களில் வரப்பு வாய்க்கால் பாதைகளைச் சேர்த்து அளந் திருப்பதினால், காலஸ்திதியை உத்தேசித்துத் தள்ளிக் கொடுத்திருப்பது போதுமா என்று செட்டில்மெண்டு செய்த காலங்களில் விவாதங்கள் நடந்தன. இப்படிக் கண்டுபிடித்து, தள்ளிக் கொடுக்கப்பட்டு, மிகுந்த தானியத்துக்கு விலை ஏற்படுத்த வேண்டியது அடுத்த விஷயம். ஒரு காலத்தில் செட்டில்மெண்டுக்கு முன் 20 வருஷங்களில் எந்த வருஷத்தில் விலைகுறைந்ததோ அதை எடுத்துக் கொண்டார்கள். இது வெகுநாளாய் மாறிப் போய், தற்காலம் 20 வருஷத்து சராசரியை எடுத்துக் கொள்ளுகிறார்கள். இந்த 20 வருஷத்தில் எப்போதாவது பஞ்சம் உண்டாயிருந்தால் அந்த வருஷத்தை விலக்கி விடுகிறார்கள். ஆரம்பத்தில் எந்த மாசத்தில் குடிகள் தங்கள் தானியங்களை விற்கிறார்களோ அந்த காலத்து விலையை உசிதமென்று எடுத்துக் கொண்டார்கள். பிறகு இது வேண்டியதில்லை, வருஷ சராசரியை எடுத்துக் கொண்டால் போதுமென்று அபிப்பிராயப் பட்டார்கள். இதுதான் இப்போது அனுஷ்டிக்கப் பட்டுவருகிறது. இந்த விலையானது பட்டணத்தில் விற்கிற விலையிலிருந்து கணக்குப் பண்ணப்படுவதால் கிராம விலை தெரிவதற்காக பட்டண விலையிலிருந்து வண்டிச் சத்தம், வர்த்தகர்களுடைய லாபம் இவைகளைக்குறைக்கவேண்டியது அவசியமாகவிருந்தது. இதற்காக ஏற்பட்ட விலையிலிருந்து 100-க்கு 15வீதம் தள்ளி அதை செட்டில்மெண்டுக்குவேண்டிய விலை என்று எடுத்துக்கொண்டார்கள். அதற்குக் கம்முயுடேஷன்(மாற்று வரி) என்று பெயர். இந்த கம்முயுடே

ஷன் ரேட்டைக் கொண்டு கண்டுமுத லுக்கு விலையைக் கணக்கிட்டு அதில் சாகுபடி செலவைத் தள்ளி வந்த தொகையில் பாதியை சர்க்கார் தீர்வை யாக விதித்தார்கள். இப்படி கணக்கு இடுவதை அடியில் காட்டியிருக்கிறது:-

**தஞ்சாவூர் நஞ்சை நிலங்கள்.**

| தரம். | கண்டு முதல் பட்டணம் படி. | விலை கரிசை 1-க்குரூ. 128 ஆக. | | | கால ஸ்திதிக்கு தள்ளுபடி. | | | சாகுபடிச் செலவு. | | | பாக்கி. | | | இதில் பாதி. | | | தீர்வை. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | ப. | ரூ. | அ. | ப. | ரூ. | அ | ப. | ரூ. | அ. | ப. |
| 1 | 1,125 | 45 | 0 | 0 | 6 | 12 | 0 | 14 | 0 | 0 | 24 | 4 | 0 | 12 | 2 | 0 | 12 | 0 | 0 |
| 2 | 1,000 | 40 | 0 | 0 | 6 | 0 | 0 | 13 | 8 | 0 | 20 | 8 | 0 | 10 | 4 | 0 | 10 | 0 | 0 |
| 3 | 900 | 36 | 0 | 0 | 5 | 6 | 5 | 12 | 4 | 0 | 18 | 5 | 7 | 9 | 2 | 9 | 9 | 0 | 0 |
| 4 | 800 | 32 | 0 | 0 | 4 | 12 | 10 | 11 | 0 | 0 | 16 | 3 | 2 | 8 | 1 | 7 | 8 | 0 | 0 |
| 5 | 700 | 28 | 0 | 0 | 4 | 3 | 2 | 9 | 12 | 0 | 14 | 0 | 10 | 7 | 0 | 5 | 7 | 0 | 0 |
| 6 | 600 | 24 | 0 | 0 | 3 | 9 | 7 | 8 | 8 | 0 | 11 | 14 | 5 | 5 | 15 | 3 | 6 | 0 | 0 |
| 7 | 500 | 20 | 0 | 0 | 3 | 0 | 0 | 7 | 4 | 0 | 9 | 12 | 0 | 4 | 14 | 0 | 5 | 0 | 0 |
| 8 | 450 | 18 | 0 | 0 | 2 | 11 | 2 | 6 | 0 | 0 | 9 | 4 | 10 | 4 | 10 | 5 | 4 | 8 | 0 |
| 9 | 400 | 16 | 0 | 0 | 2 | 6 | 5 | 5 | 4 | 0 | 8 | 5 | 7 | 4 | 2 | 9 | 4 | 0 | 0 |

இந்த மாதிரி கவர்ன்மெண்டாரைக் கட் டுப்படுத்தல் சரியல்லவென்று, அந்த ரூலை ரத்துசெய்து விட்டார்கள். ஜமீன் கிராமக் குடிகளும் சர்க்கார் குடிகளும் ஒரே ஸ்திதியி லிருக்கிறார்கள். ஜமீன் குடிகளின் நிலங்களுக்குத் தீர்வையை உயர்த்த வேண்டியதானல் 100-க்கு $12\frac{1}{2}$-க்குமேல் உயர்த்தக்கூடாதென்று சட்டமிருக்கிறது. அப்படியே சர்க் கார் குடிகளுக்கும் ஒரு எல்லை விதிக்க வேண்டுமென்று ஜனங்கள் பிரதிநிதி கள் ஆலோசனை சபையில் கேட்ட போது, செட்டில்மெண்டு காலத்தையும் 30வருஷத்திலிருந்து 20 வருஷமாகக் குறைக்க வேண்டாமாவென்று கௌன் சில் மெம்பர் ஒருவர் கேட்டார். அப் படிச்செய்வதில் இருக்கிற சௌகரியங் களை நிலமுடையவர்கள் ஆலோசிக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது.

புது செட்டில்மெண்டில் மற்றொரு சங்கதிசொல்லவேண்டியது அவசியம். தானிய விலையைக்கொண்டு தீர்வையை உயர்த்துவதானல், தானிய விலையுடன் மற்ற பதார்த்தங்களின் விலையும் உயர் வதாலே, சாகுபடிச் செலவு என்னமாக விருக்குமென்றும், அதிக விலைப்படி தானிய விலையில் சாகுபடிச் செலவை தள்ளினல் நிலமுடையவருக்கு எவ்வ ளவு மிகுதியாகலாமென்பதையும் கவ னிக்கவேண்டியது அவசியம். வட ஆற் காடுஜில்லா செட்டில்மெண்டைப் புதுப் பிக்கும்போது இதை சர்க்கார் ஒப்புக் கொண்டனர். ஆனல் மதுரை ஜில்லா செட்டில்மெண்டில் இதைத் தள்ளிவிட் டார்கள். இந்த விஷயத்தில் முடிவு இன்னும் ஏற்படவில்லை.

### குடிகளும் செட்டில்மெண்டும்.

இப்படி நிலமுடையவர்களிட மிரு ந்து சாகுபடிச் செலவுபோக பாக்கி வரும்படியில் பாதியை சர்க்கார தீர் வையாக எடுத்துக்கொள்வதினல், குடி களுக்கு ஏதாவது வருத்தமுண்டா என்றும்பார்க்கவேண்டியது அவசியம். பெரிய குடித்தனக்காரர்களுக்குள்ளாள மான வரும்படி வருவதனல், அவர் களைப்பற்றிவருமையின் விசாரம் இல்லை. சொல்ப நிலமுள்ளவர்களுக்கு எவ்வ ளவு பணம் மிகுதியாகிறது என்று கவ னிக்கவேண்டியது அவசியம். சர்க்கா ருக்கு மொத்தத்தில் வருஷம் ஒன்று க்கு ரூ. 30 தீர்வை செலுத்துபவர் களை மாத்திரம் இப்போது எடுத்துக் கொள்வோம். சர்க்கார் கணக்குப்படி க்கு சர்க்கார் தீர்வைபோக அவர்களு

க்கு வருஷம் ஒன்றுக்கு ரூ. 30 மிகுதியாகும். அதாவது, மாசத்திற்கு ரூ. $2\frac{1}{2}$ ஆகிறது. அடிக்கடி சர்க்காரில் இந்த விஷயம் ஆலோசனைக்கு வரும்போது, தீர்வை எவ்வளவோ அதைப்போல் ஐந்துபங்கு மொத்த வரும்படி நிலமுடையவர்களுக்குக் கிடைக்கிறதென்று சர்க்கார் உத்தியோகஸ்தர் சொல்லுகிறார்கள். அதையே ஒப்புக்கொண்டாலும் தீர்வை ரூ. 30 ஆனால் அவர்கள் கணக்கின்படி மொத்த வரும்படி வருஷம் 1-க்கு ரூ. 150; தீர்வை போக ரூ. 120 ஆகிறது. அதாவது மாசம் ஒன்றுக்கு ரூ. 10; இதைக் கொண்டு நிலக்காரனும் அவன் குடும்பமும் சாப்பிட்டுப் பிள்ளைகளைப் படிக்க வைத்து, நிலங்களையும் சீர்படுத்தவேண்டும். இவைகளை எல்லாம் உத்தேசித்து இவ் வரும்படி போதாதென்றே சொல்லவேண்டும். வருஷம் ஒன்றுக்கு ரூ. 30-க்கு குறைந்து சர்க்கார் தீர்வை கட்டுகிறவர்கள் அனேகர். அவர்கள் பலருக்கு இன்னும் குறைந்த வரும்படியான படியால் அவர்கள் கஷ்டம் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் இன்கம் டாக்ஸ் விஷயத்தில் ஒருகுறித்த எல்லைக்குக் குறைந்தவர்களுக்குஎப்படி தீர்வை இல்லையென்று ஏற்பட்டிருக்கிறதோ, அதே மாதிரி நிலவரும்படி யுள்ளவர்களுக்கும் ஒருவிதமான எல்லை ஏற்படுத்தினால் குடிகளுக்கு மிகுந்த க்ஷேமமுண்டாகும். இப்படி யிருக்கையில் இந்தத் தீர்வையை மறுபடியும் உயர்த்தினால், ஜனங்கள் கஷ்டப்பட மாட்டார்களா? விலை வாசியினால் தீர்வையை உயர்த்துங் காலத்தில் விலை எவ்வளவு உயருகிறதோ அவ்வளவு தீர்வையை உயர்த்துகிறதில்லை. ஆதலால் சாகுபடிச் செலவைக் கணக்கிடுவதில் உயர்ந்த நிலங்களுக்கு மாத்திரம் கணக்கிடுவது வழக்கம். மற்ற நிலங்களுக்கு வரும்படியின் குறைவை கவனித்து கைத்திட்டமாய் கணக்குப் பண்ணுவதும் வழக்கம். இப்படி கணக்குப் பண்ணுகிறது பிசகு என்றும், நிலத்தின் வளம் குறையக் குறைய சாகுபடிச் செலவு அதிகப்படுமென்றும், அநேகர் அபிப்பிராயப்பட்டு கவர்ன்மெண்டாருக்கும் தெரிவித்திருக்கிறார்கள். அவர்களில் தஞ்சாவூர் ஜில்லா கலெக்டரா யிருந்து கடைசியாக கௌன்சில் மெம்பராகவும், ஆக்டிங் கவர்னராகவு மிருந்த ஸர் ஜேம்ஸ் தாம்ஸன் என்பவர் ஒருவர். சமீபத்தில் நடந்த மறு செட்டில்மெண்டில் சாகுபடிச் செலவை கணக்கிடுவதில் சில மாறுபாடுகள் ஏற்பட்டன. ஒவ்வொரு குடியும் தன் தன் நிலத்தைத் தானே பயிர் செய்ய வேண்டுமென்றும் அவனும் அவன் வீட்டுக்காரர்களும் வேலைசெய்வதைக் கணக்கில் சேர்க்கக்கூடாதென்றும் அன்னியர்களைக் கூலியாக வைத்துக்கொண்டால் மட்டில் அவர்கள் கூலியைச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்றும் போர்டார் அபிப்பிராயப்பட்டார்கள். அதை ஜனங்களின் பிரதிநிதிகள் ஆக்ஷேபித்ததால் அதையும் சர்க்காரில் ஒத்துக்கொண் டிருக்கிறார்கள்.

மேலே சொன்னபடி செட்டில்மெண்டு ஏற்பாடு மேலுக்கு நன்றாகத் தோன்றினாலும், உள்ளூரப்பிசகுவருவதற்கு இடம் அதிகமாக கொடுக்கிறது. முதலில் நிலங்களை வகுப்பாகப் பிரிப்பது. இரண்டாவது காலஸ்திதியை உத்தேசித்து சாகுபடி செய்யத் தகாத நிலங்களைச் சேர்த்திருப்பதற்கும் தள்ளிக்கொடுத்தல். தானிய விலையில் வண்டிச் சத்தம் வர்த்தக லாபம் இவைகளுக்காகத் தள்ளிக்கொடுத்தல், சாகுபடிச்செலவைக்கணக்கிடுதல் முதலிய விஷயங்களில் பல பிசகுகள் ஏற்படக்கூடியதாக விருக்கிறது. முதல் விஷயம் வகுப்பு ஏற்படுத்துகிறவர் எண்ணத்தை ஒத்திருக்கிறதென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். மற்ற மூன்று விஷயங்களிலும் கிராமத்துக்கு கிராமம் வேறுபாடுகள் இருக்கின்றன. ஒவ்வொரு தாலுக்காவு

க்குமட்டும் தீர்வை ஏற்படுத்தினல்குடிகளுக்குக் கொஞ்சம் அனுகூலமாயிருக்கும். ஜில்லாமுழுமையும் ஒரே ஏற்பாடு செய்வதில் சிலருக்குக் கடுமைபாகவும் சிலருக்கு சௌகரியமாகவும் இருக்கும். ஆனல் ஐரோப்பியர்களுக்குச் சராசரி என்பதில், அதிக கௌரவம்தான்.

இந்த ஏற்பாட்டில் சாசுவதமான பாகமும், அடிக்கடி வேறுபடுகிற பாகமும் இருக்கிறது. புது செட்டில்மெண்டில் நிலங்களை வகுப்பு செய்தல், கண்டு முதல் பார்த்தல் முதலானவைகளைச் செய்கிறதில்லையென்றும் முன் விலைக்கும் புது செட்டில்மெண்டு விலைக்கும் வாசியைக் கண்டு புதுத் தீர்வை விதிக்கிறதென்றும் கொஞ்சகாலம் ஒப்புக் கொள்ளப்பட்டது. அப்படி ஒப்புக்கொள்ளுவது கவர்ன்மெண்டாருடைய அதிகாரத்தைக் குறைக்கக் கூடியவைகளா யிருக்கிறதென்று எண்ணி இந்திய கவர்ன்மெண்டார் ஒப்புக்கொள்ள மாட்டோம் என்று சொல்லிவிட்டார்கள். ஆனபோதிலும் வெகுவாய் விலை வாசியைக் கவனித்துத்தான் புது செட்டில்மெண்டு செய்கிறார்கள். முன் ஏற்பட்ட நிலவகுப்பை மாற்றாமலும், கண்டு முதலை உயர்த்தாமலுமிருந்தால் தீர்வை சாசுவதமென்றே சொல்லலாம். தானிய விலையைக் குறித்துத் தீர்வை வீதத்தை மாற்றுகிற பாகத்தில் மட்டும் அது சாசுவதமல்ல. விலை அடிக்கடி மாறுமாகையால் 30 வருஷத்திற்கொருமுறை விலை வாசியைக் கவனித்து ரொக்கமாகச் செலுத்தும் தீர்வைத் தொகையை மாற்றுகிறதென்ற ஏற்பாடு தீர்மானமாய் நடந்துகொண்டு வருகிறது. புது செட்டில்மெண்டில் முன்தீர்வை வீதத்தை எவ்வளவு உயர்த்தலாமென்று ஒரு காலத்தில் விசாரிக்கப்பட்டு, 100-க்குப் பதினைந்துக்குமேல்உயர்த்தக்கூடாதென்ற ரூல் பிரகாரம், புதுத்தீர்வை கொடுத்து கொஞ்சம் கையில் பணம் மிகுதியாகலாமென்று சொல்லலாம். சாகுபடிச் செலவு விலை வாசி யவ்வளவு உயராமலிருந்தால் தான் இது மிகுதியாகலாமென்று சொல்லக்கூடும். இது தீர்க்கமாய் ஆலோசிக்கவேண்டிய விஷயம்.

அதிக வரும்படியில்லாத குடிகளின் கஷ்டத்தை, கவர்ன்மெண்டுக்குத் தெரிவிக்குங் காலத்தில், குடிகள் நிலவரும்படியைக் கொண்டே பிழைக்கிறதில்லை என்றும் பக்கங்களில் கூலி வேலை செய்து, நில வரும்படியுடன் அந்த வரும்படியையும் சேர்த்து, அவ்விரண்டினாலும் பிழைக்கிறார்கள் என்றும் சொல்வது வழக்கம். நிலமுள்ளவன் தன் கிராமத்தைவிட்டுபட்டணங்களில் போய் வேலை தேடமுடியாது. நிலமுள்ளவன் தன் கிராமத்தில் கூலியாட்களை வேண்டுவது நடவுகாலத்திலும் அறுப்புக்காலத்திலும் தான். இந்த இரண்டு காலத்திலும் சில்லரை நிலமுடையவனுக்கும் தன்னுடைய நிலங்களில் வேலை செய்ய வேண்டியது அவசியமாக விருக்கிறபடியால் அக்கூலிவேலை செய்வதற்கும் இடமில்லாமலிருக்கிறது. 1878-வது வருஷப் பஞ்சத்திற்குப் பிறகு சர்க்காருக்குப்பயிரிடும் குடிகளுக்கும் நடுவில் ஒருவகுப்பார் ஏற்படுவதுகுடி களின்க்ஷேமத்திற்கு விரோதமானதென்று சர்க்காருக்கு ஒரு எண்ணமுண்டாயிருக்கிறது. ஏதோ பூராவாய் வசூலிக்க வேண்டிய தீர்வையை வசூல் செய்யாததனல், பணம் வைத்துக்கொண்டிருக்கும் சிலர் நிலங்களை வாங்குவதாகவும், அவர்கள் குடிகளிடம் பூராப் பகுதியைப் பெற்றுக் கொள்வதாலே, அந்தக் குடிகள் கஷ்டப்பட்டு, பஞ்சகாலத்தில் சர்க்காரிடம் வேலைக்கு வருவதாயும் எண்ணினார்கள். சித்தூர் ஜில்லா செட்டில்மெண்டைப்பற்றிப் பேசுங்காலத்தில் கவர்ன்மெண்டு செக்ரெடரி ஒருவர் குடிகளைப் பற்றித்தான் தங்களுக்கு அதிக கவனமிருப்பதாயும் மரங்களில் புல்லுருவிகள் நிருப்பதுபோல் ஒட்டிக் கொள்பவர்கள் ...ம்கவனமில்லை என்றும் சொன்னார். ஒரு ஜில்லா உத்தியோகஸ்தர் குடிகளிடம அதிக பணத்தை விட்டுவிட்டால்,

அவர்கள் கள்ளுக்கடைகளிலும் சாராயக்கடைகளிலும் அதை செலவழித்துவிடுகிறார்களென்று சொல்லி, இன்ன வழியால் தீர்வையை உயர்த்தலாமென்று சிபார்சு செய்தார். இந்த விஷயத்தில் சர்க்காருடைய அபிப்பிராயம் இன்னதென்று அவர்கள் தெரிவிக்கவில்லை. அவர்கள் அபிப்பிராயம் இன்னதென்று ஜனங்களுக்குத் தெரிந்தால் நன்றாயிருக்கும். நிலமுடையவர்கள் தாங்களே பயிர் செய்யவேண்டியது. பிறரிடம் பயிரிடக் கொடுக்கக் கூடாதென்ற அபிப்பிராயமிருந்தால் அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்ய வேண்டும். அப்போது நிலம் வாங்கினவர்களுக்கு அந் நிலத்தின் விலையைக் கொடுத்து அந் நிலத்தைச் சர்க்காரில் வாங்கிக்கொள்ள வேண்டிய தவசியம். நேரில் பயிரிடும் நிலக்காரர் தவிர வேறு ஒருவரும் பயிர் செய்யக் கூடாது என்று ஏற்பட்டால் ஒரு நிலத்தை வாங்கவும் விற்கவும் கூடாதென்று சட்டம் செய்யவேண்டியது அவசியம். அப்படிச் செய்வதனால் குடிகள் நல்ல ஸ்திதியில் இருப்பார்களா, அல்லது நிலத்தை ஒருவரும் வாங்காமையால் வேண்டிய செலவுக்குப் பணம் அகப்படாமல் வருந்துவார்களா என்பதை விசாரிக்க வேண்டும்.

இங்கிலாந்தில் வெகுவாக நிலங்கள் சொல்ப தொகையுள்ள ஜனங்களிடத்தில் இருப்பதினாலேயும் அவர்கள் அதில் சில பாகங்களை வேட்டையாடும் நிலமாகவும், மேய்ச்சல் தரையாகவும் செய்வதினாலே பயிரிடுபவர்களுக்கு நிலம் அகப்படுவது அரிதாக விருக்கிறது. பகுதியும் ஏராளமாக விருக்கிறது. ஆகையால் அனேகம் பேர்கள், "நிலமானது ஒருவராலும் உண்டுபண்ணப்படவில்லை. எல்லாருக்கும் பொதுவானது; எல்லாருக்கும் அதின் லாபம் கிடைக்கவேண்டியது" என்றும், எல்லா நிலங்களையும் சர்க்காரில் வாங்கி, சர்க்கார் நிலமாகப் பண்ணி நிலங்களைத் துண்டு துண்டாகக் குடிகளுக்குக் கொடுக்க வேண்டுமென்றும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இந்த சங்கதி தெரிந்து ஆங்கிலேயர் இங்கிலாந்து நிலம் முழுமையும் சர்க்காருடையதாகச் செய்ய வேண்டுமென்று சொல்லுகையில், இந்திய தேசத்தில் "சர்க்காருடையதாக எண்ணப்பட்ட நிலத்தைக் குடிகளுடையதாக எண்ணலாமா? சர்க்காருக்கு ஏராளமான வரும்படியைக் கொடுக்கிற ரயத்வாரி செட்டில்மெண்டை மாற்றலாமா"? என்றும் கேட்கிறார்கள். ஆனால் மேல்நாட்டில் நிலமுடையவர்கள் கொஞ்சமாயும் நிலம் வேண்டியவர்களுக்கு நிலம் அகப்படாமலுமிருப்பதால் இந்த விசாரம் உண்டாயிற்று. நம்முடைய தேசத்திலோ நிலமுள்ளவர்கள் லக்ஷக்கணக்கா யிருக்கிறார்கள். நிலமோ வேண்டியது இருக்கிறது. ஆகையால் வேறு தேசத்துக்கு அனுகூலமான சங்கதி இந்த தேசத்திற்கும் வேண்டியதென்று எண்ண இடமில்லை. இங்கிலாந்தில் நிலமானது மூத்த பிள்ளைக்கே வருமாகையால் சேகரித்த சொத்து அனேகமாய் அப்படியே இருக்கிறது. இந்துதேசத்திலோ தகப்பன் சொத்தைப் பிள்ளைகள் சமபாகங்களாய்ப்பிரித்துக் கொள்வதினால், சில்லரை சில்லரையாக நிலங்கள் பிறிந்து போய் விடுகின்றன.

இங்கிலாந்தில் மற்றொரு எண்ணம் சர்க்கார் வரும்படியை விருத்தி பண்ணக்கூடியதா யிருக்கிறது. அதாவது பட்டணங்களில் வீடு கட்டத் தகுந்த நிலத்தின் விலையானது வரவர உயருகிறது. இது ஜன நெருக்க மதிகரிப்பதினாலேயே ஒழிய ஜனங்கள் நிலத்தை விருத்தி செய்வதனால் உண்டானது அல்ல. ஆகையால் அவர்கள் வாங்கின விலைக்கும், அதைவிற்றால் அதில்கிடைக்கும் விலைக்கும் வாசியைக்கண்டு அதில் ஒருபாகம்சர்க்காருக்குத்தீர்வையாக வாங்கலாமென்று சட்டம் செய்திருக்கிறார்கள். ஆனால் அந்தசட்டம்தெளிவாய்மாத்திரம் ஏற்பட்டதேயல்லாமல், கிராமங்களில் சாகுபடிக்குத் தகுந்த

நிலங்களில் இந்த சட்டத்தை பிரயோகிக்ககூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. இது தெரியாமல் சிலர் சாகுபடிநிலங்களுக்கும் இச்சட்டம் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரப்படுகிறதென்று எண்ணுகிறார்கள். ஆகையால் எவ்விதத்திலும் நமது மாகாணத்தின் நிலத் தீர்வை ஏற்பாட்டை முற்றிலும் மாற்றவேண்டியது அவசியமாக இருக்கிறது. இப்போது வரும்படியில் ஒரு பாகம் சர்க்கார் தீர்வையாக வசூலிக்கப்படுகிறது. அதை விட்டு விட்டு நிலத்தை விற்றால் என்னவிலை யென்று பார்த்து, குறித்த வருஷத்தில் ஏற்பட்ட விலையைத் தெரிந்துகொண்டு இரண்டுக்கும் இருக்கும் வாசியைக் கண்டு, அதில் 100-க்கு அரை அல்லது ஒன்று என்று தீர்வை வசூலிப்பது நல்லது. இப்படிச் செய்யாமல் இந்த ஏற்பாட்டை மனதில் வைத்துக் கொண்டு இருக்கிற தீர்வையை ஒவ்வொரு செட்டில்மெண்டிலும் உயர்த்துவது உசிதமல்ல.

நிலத் தீர்வையின் தொகை (Land Revenue Amount.)—ரயத்வாரி நிலங்களால் சர்க்காருக்கு வருஷம் 1-க்கு வரவு 51,138,000 ரூபாய்; தண்ணீர்த் தீர்வை 3,272,000 ரூபாய்; வஜா கொடுத்தது 1,720,000; போக பாக்கி வரவு 52,690,000 ரூபாய்.

சில்லரை (Miscellaneous)—இதுவரையில் ரயத்வாரி ரெவினியூவைப் பற்றி எழுதினோம். கடைசியாக சில்லரை ரெவின்யூவைப் பற்றிச் சொல்லவேண்டியது அவசியம். அநேக விதமான வரும்படிகள் சேர்ந்ததற்கு சில்லரைரெவின்யூவென்று சொல்லுகிறது. அதில் ஒன்று இனும் குவிட்ரெண்டு (quit rent) என்று சொல்லப்படும். பூராகிராமங்கள் இனுங்களாகக் கொடுக்கப்பட்டதென்றும், அவைகளில் சில குறைகளிருந்ததென்றும், அந்தக் குறைகளை தீர்த்து இனும் பட்டா கொடுத்து சொல்ப வரியை கவர்ன்மெண்டார் வாங்கிக்கொண்டாரென்றும் முன்னே சொன்னோம். பூரா கிராமமில்லாமல் ஒரு கிராமத்தில் துண்டு நிலங்களாக இனும் கொடுக்கப்பட்ட விஷயத்திலும் இதேமாதிரி நடந்து குவிட்ரெண்டு (quit rent) ஏற்பட்டிருக்கிறது. இதன் மூலமாய் கவர்ன்மெண்டாருக்கு வருஷம் 1-க்கு வரும்படி ரூ. 23,04000.

இரண்டாவது வரும்படி தண்ணீர் வரி. புன்செய் நிலங்களுக்கு சர்க்கார் தண்ணீரை பாய்ச்சுவதற்கும், நன்செய் நிலங்களில் ஒருபோகமாக ஏற்பட்ட நிலங்களில் இருபோகம் சாகுபடி செய்வதற்கும் இத்தீர்வையை சர்க்காரில் வசூல் செய்கிறார்கள். இந்தவரி போடுகிற காலத்தில் ஒரு சட்டம் செய்தார்கள். அதில் சர்க்கார் பணச்செலவு செய்து பாய்ச்சல் ஏற்பட்டால் தண்ணீர்த் தீர்வை விதிக்க கவர்ன்மெண்டிற்கு பாத்தியம் உண்டு என்று கண்டிருக்கிறது. சர்க்கார் பணச்செலவு செய்யாத இனங்களிலும், தண்ணீர்த் தீர்வை வசூல் செய்கிறார்கள்.

ரயத்வாரி நிலங்களில் பட்டாவில் சேர்க்கப்பட்ட நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதாலே ஏற்படுகிற தண்ணீர் வரியை ரயத்வாரி வரும்படியில் சேர்ப்பது வழக்கம். இப்படி வசூலாகிற தண்ணீர்த் தீர்வை வருஷம் ஒன்றுக்கு ரூ 32,72,000. ஜமீன்தாரி, இனும் கிராமங்களிலிருந்து வசூல் செய்கிற தண்ணீர்த் தீர்வை சில்லரையில் கட்டப்படுகிறது. அதன் தொகை வருஷம் ஒன்றுக்கு ரூ. 34,77,000. இந்தத் தண்ணீர் தீர்வை விஷயத்தில் ஜலங்களுக்கும் ஜமீன்தாரர்களுக்கும் விவாத முண்டாகி முடிவு பெருமலிருக்கிறது. ரயத்வாரி நிலங்களின் வழியாய் ஓடி ஜமீன் கிராமத்திற் சென்று அதிலிருந்து மறுபடி ரயத்வாரி கிராமத்துக்கு வருகிற ஜீரோடுகாலில் ஜமீன்தார்கள் தங்கஎல்லையில் ஓடும் ஜலத்தைத் தங்களுடையதென்றும், அதற்காக வரி கொடுப்பதில்லை யென்றும் சொல்லுகிறார்கள். இதற்கு ஆதாரமாக ஹைகோர்ட்டு தீர்மானங்களுமிருக்கின்றன.

1865-ம் வருஷத்தில் தண்ணீர்த் தீர்வை வசூல் செய்ய ஏற்பட்ட சட்டத்தில் சர்க்கார் செலவு செய்து பாய்ச்சல் ஆகிற நிலங்களுக்கு மாத்திரம் தண்ணீர்த் தீர்வை வசூல் செய்ய அதிகாரம் உண்டென்று காணப்பட்டிருக்கிறது. இது நிற்க மழைபெய்து வருகிற ஜலத்தை ஓடாமல் வரப்புப் போட்டுத் தடுத்து நன்செய் சாகுபடி செய்தால் அதற்குத் தண்ணீர்த் தீர்வை போடவேண்டியதென்று கவர்ன்மெண்டார் சொல்லுகிறார்கள். இந்த ஜலத்தைத் தடுக்காவிட்டால் வழிந்தோடி கடைசியாக ஒரு ஆற்றில் விழுந்து, சர்க்காருக்குத் தண்ணீர்த் தீர்வை வர உதவுமாதலால் அதைத் தடுப்பதற்குத் தீர்வை போடலாமென்று அபிப்பிராயப்படுகிறார்கள். இப்படிப் போடுகிற வரம்புகளுக்கு செங்கல்பட்டு ஜில்லாவில் அச்சுக்கட்டு என்று பெயர்.

மற்றொரு விஷயம் ஜனங்கள் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். கோதாவரி, கிருஷ்ணா ஜில்லாக்களில் கால்வாயிலிருந்து ஊற்றமாக ஜலம்பாய்ந்து சாகுபடியானால் தண்ணீர்த் தீர்வை போடவேண்டியது என்று தீர்வையை சர்க்காரில் வசூல் செய்தார்கள். குடிகள் தாங்கள் தண்ணீரை வேண்டியதில்லை என்றும் ஊற்று நீரானது தங்கள் நிலத்தைக்கெடுத்துவிட்டதென்றும், ஏதாவது சாகுபடி செய்ய வேண்டியபடியால் நன்செய் சாகுபடி செய்ததாகவும் தண்ணீர்த் தீர்வை கொடுக்க வேண்டியதில்லையென்றும் மன்றாடினார்கள். இந்த விவாதம் ஹைகோர்ட்டு வரையில் போய் குடிகளுக்கு அனுகூலமாக முடிந்தது. அதன்பேரில் 1865-ம் வருஷத்துச் சட்டத்தைத் திருத்தினார்கள். ஜனங்கள் வேண்டினாலும் வேண்டாவிட்டாலும் ஊற்றத்தால் (Percolation) வருகிற ஜலத்தைப் பாய்ச்சுவது போதுமானதாயும் லாபகரமாயும் இருந்தால் தண்ணீர்த் தீர்வை வசூல் செய்யலாகுமென்ற அதிகாரம் சர்க்காருக்குக் கொடுக்கப்பட்டது. தண்ணீரானது ஊற்றத்தினால் ஓடிவந்து பாயாமல் இருக்கையில் ஊற்றத்தினால் ஒரு ஸ்தலத்தின் மண் நனைந்திருந்தால் அதற்கும் தீர்வை வசூல் செய்யலாமென்றும், ஆனால் கவர்ன்மெண்டு உத்தரவில்லாமல் புன்செய்ப் பயிர்களுக்குத் தண்ணீர்த் தீர்வை விதிக்கக்கூடாதென்றும், நெல், கரும்பு, வாழை, மஞ்சள் முதலான நன்செய்ப் பயிர்களுக்குத் தண்ணீர்த் தீர்வை வசூல் செய்யலாமென்றும் கவர்ன்மெண்டார் உத்தரவு செய்து தண்ணீர்த் தீர்வை வசூலித்து வருகிறார்கள். இதற்குச் சட்டத்தில் ஆதாரமிருப்பதாகத் தெரியவில்லை.

ஆறுகள், குளங்களிலிருந்து தண்ணீர் பாய்ச்சுவதற்கும் சர்க்கார் சட்டம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதற்கு விரோதமாய் தண்ணீர் பாய்ச்சிக்கொண்டால் அதற்கு மடங்குத் தீர்வை சர்க்காரார் வசூல் செய்கிறார்கள். இப்படிமடங்குத் தீர்வையால் சர்க்காருக்கு வருஷம் ஒன்றுக்கு ரூ 4,1,4000 வருகிறது.

புன்செய் நிலங்களில் சில மட்டமாயும், வருஷா வருஷம் சாகுபடி செய்யத் தகாததாயும் இருக்கிறதென்று சொன்னோம். அவைகளுக்கு மனு செய்து கொள்ளாமலே குடிகள் போய் அவைகளை ஒரு வருஷம் சாகுபடி செய்து மறு வருஷம் விட்டு விடுகிறது வழக்கம். இப்படிசாகுபடியாகும் நிலங்களின் தீர்வையை வசூல்செய்து சில்லரைக் கணக்கில் காண்பிப்பது வழக்கம். அப்படி சாகுபடி செய்வதால் சர்க்காருக்குக் கிடைக்கும் தீர்வை ரூபா 8,49,000.

கிராமங்களில் நிலங்களோரமாய் வாய்க்கால்களும் பாதைகளும் இருப்பதை நன்றாய்த் தெரியாமல் ஒரு அடி இரண்டு அடி சேர்த்து சாகுபடி செய்கிறார்கள். கணக்கர்கள் ஒரு கல்லுக்கும் மற்றொன்றுக்கும் நூல் பிடித்து அந்த நூலுக்கு வெளியில் இருப்பதை ஆக்கிரமிப்பு (Encroachment) என்று

கணக்குக் கொடுத்து விடுகிறார்கள். இதற்கு B பாரம் என்று பெயர். ஒரு காலத்தில் ஜமாபந்தி உத்தியோகஸ்தர்கள் இஷ்டப்படி மடங்குத் தீர்வை போட்டுக்கொண்டு வந்தார்கள். அப்படிச்செய்ய சர்க்காருக்கு அதிகாரமில்லை என்று ஹைகோர்ட்டு தீர்ப்பு செய்ய, அதன்பேரில் நில ஆக்கிரமிப்பு ஆக்ட் (Land Encroachment Act) என்று புதிதாய் சட்டம் ஏற்படுத்தினார்கள். இந்தச் சட்டத்தின்படி வருஷம் ஒன்றுக்கு சர்க்காருக்கு வரும்படி ரூ. 5,62,000 வருகிறது. குடிகளிடத்தில் இப்படித் தீர்வையை வசூல் செய்யாமல் அவர்களுக்கு நோட்டீஸ் கொடுத்து ஆக்கிரமிப்பு சரியாகவிருந்தால் அதை விட்டுவிடும்படி செய்ய வேண்டியதாயிருக்க ஏழைக்குடிகளிடத்தில் பணம் வசூல்செய்வது உசிதமல்லவென்று ஜனங்களுடைய பிரதிநிதிகள் கவர்ன்மெண்டாருக்குச் சொல்லியும் இது வரையில் பலன் கிடைக்கவில்லை.

கோதாவரி முதலான ஆறுகளில் விழுகிற திட்டுக்களுக்கு லங்கா (Lanka) என்று பெயர். அவைகளை சாகுபடி செய்யப் பகுதிக்குக் கொடுப்பதனாலே சர்க்காருக்கு வருஷம் ஒன்றுக்கு ரூ. 2,90,000 வருகிறது. சில விடங்களில் நிலம் தரிசாயிருந்து அதில் மரங்களிருந்தால் அதில் மரப்பட்டா என்று பட்டாக்கொடுத்து மரத்தீர்வை வசூல் செய்கிறார்கள். பட்டாநிலங்களிலும்மரங்களிலிருந்து நிலத்தீர்வையைக் காட்டிலும் மரத்தீர்வை அதிகப்பட்டால் மரத்தீர்வையே வசூல் செய்கிறார்கள். இவ்விதமாய் சர்க்காருக்கு வருஷம் ஒன்றுக்கு ரூ. 2,48,000 வருகிறது. ஒரு காலத்தில் நிலத்துக்கு ஒருவன் பேரில்பட்டாவும்,மரத்துக்கு வேறொருவன்பேரில் பட்டாவும் இருந்தது. இதை மாற்றி மரக்காரன் நிலக்காரனுக்கு மரத்தீர்வையை கொடுப்பதென்று உத்தரவு பிறந்திருக்கிறது. நிலக்காரன் சர்க்காருக்குத் தீர்வையைச் செலுத்துகிறான்.

சென்னப் பட்டணத்திலும், மற்ற பட்டணங்களிலும் வீடு கட்டக்கூடிய விடங்களில் சர்க்கார் குவிட்ரெண்டு (quit rent என்றும் நிலவரி, (ground rent) என்றும் பெயர் வைத்து ரூ. 1,55,000 வசூல் செய்கிறார்கள். மொத்தத்தில் சில்லரைத் தீர்வையானது வருஷம் ஒன்றுக்கு ரூ. 92,15,000 ஆகிறது.

---

# இந்தியாவில் பண லேவாதேவி.

[இந்தியன் பாங்கி செகிரிடரி மிஸ்டர் வித்யாஸாகர பாண்டியர எழுதியதை மொழி பெயர்த்தது.]

ஒரு தேசத்தின் க்ஷேமலாப விருத்தியில் கருத்துடையவர்கள் அனைவரும், அத்தேசத்திலுள்ள மூலதனத்தைச் சரிவர உபயோகப்படுத்துவதில் முக்கியமாய் கவனஞ் செலுத்தவேண்டும். இச்சமயத்தில்இந்தியாவிலே மூலதனத்தை சரிவர சேகரித்து உபயோகப்படுத்த வேண்டுமென்பதைக் கவனிப்பது மிகவும் அவசியமாகும். இந்தியாவிலே தொழிலும் வியாபாரமும் முன்னேற்றமடைய வேண்டுமாயின், மூலதனத்தை நன்கு உபயோகிக்க வேண்டும். விவசாய விஷயத்திலும் அப்படியே. இந்திய விவசாயிக்குக் கிரமமானவட்டியில் பணம் கிடைக்க வேண்டிய சாதனங்களே மிகத் தேவையாக இருக்கின்றன. அவ்விதம் கிரமமான வட்டிக்குப் பணம் கிடைக்கக்கூடிய சாதனங்கள் இருந்தால் தான் சாகுபடி செய்யும் நிலத்திலிருந்து தகுந்த ஆதாயமும்,தான் செய்யும் வேலைக்குஏற்ற ஊதியமும் விவசாயிக்குக் கிடைக்கும். ஆகவே, இந்தியாவில் செல்வ அபிவிருத்தி ஏற்படுவதற்கு மூலதனத்தை ஒழுங்கு படுத்தி உபயோகிக்க வேண்டுமென்பது இன்றியமையாத காரியமாகிறது.

இந்தியாவிலுள்ள ஜனங்கள் செட்டாய் வாழ்பவர்கள்என்பதைச்சொல்ல வேண்டுமோ? விலைவாசிகள் ஏறியிருக்கும் இக்காலத்தில்கூடஏழைவிவசாயி பஞ்சத்தையும் துன்பங்களையும் சமாளிப்பதற்காக, கையில் மிச்சம் பிடித்து வைக்கமுடியாத சமயத்தில் வருமானத்தில் மிச்சம்பிடிக்க முயலுகிறான். ஓர் இந்தியன் தான் மிச்சம் பிடிக்கக் கூடிய அற்பத் தொகையை, பாங்கியில் வட்டிக்குப் போட்டு வைப்பதற்கான சௌகரியம் இல்லாதிருக்கும் பொழுது அத்தொகைக்கு வெள்ளியிலும் தங்கத்திலும் நகைகள் செய்து விடுகிறான். அப்பால், ரொக்கம் வேண்டியிருப்பின், அந்நகைகளை உபயோகித்துக் கொள்ளுகிறான். இதர தேசஜனங்கள் தங்களிடம் மிச்சமாகும் பணத்தினால் எப்படிப் பலனடைய விரும்புகின்றனரோ அப்படியே இந்தியரும் விரும்புகின்றனரென்பதை அனைவரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆகவே, பத்திரமாய் வட்டிக்குப் போட்டு வைப்பதற்கான சாதனம் ஏற்பட்டால், அதை இந்தியர் பாராட்டுகின்றனர். இந்தியாவிலே தனமானது உபயோகிக்கப் படாமல் தூங்கிக் கிடக்குமாறு வைக்கப் படுகிறதென்றும், முதல் பணத்தை உபயோகிக்காமல் தூங்கிக் கிடக்கும்படி வைப்பது பாம்பரையாக இந்தியரின் வழக்கமென்றும், கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்கள், ஆங்கிலோ இந்தியர்கள் ஆகிய இவர்கள் பலமாக எண்ணியிருக்கின்றனர். தொழிலிலோ, வியாபாரத்திலோ,ஐரோப்பியர் பணத்தைப் போட்டு வெகுவாய் முயற்சி செய்வதைப் போல் இந்தியர் முயற்சி சிறிதும் செய்வதில்லை என்பதும், தற்காலம் தேசத்தின் நன்மையை ஒட்டிப் பணத்தை நன்கு உபயோகிக்குமாறு செய்வதில்லையென்பதும் உண்மையாக இருக்கலாம். ஆனால், அவ்விதம்இருப்பதின் காரணமென்னவென்றால்:-(1) பல நூற்றாண்டுகளாக இந்தியாவிலே ராஜ்ய விஷயங்கள் திட்டமாகாமல் அமைதியற்றும் அமளியுற்று மிருந்ததால் இந்தியர் அவநம்பிகையும் சந்தேகமும் வெகுவாய்க் கொண்டிருக்கின்றனர்.

(2) பாங்கியில் பணத்தை வட்டிக்குப் போடுவதற்கான சாதனங்கள் இல்லா திருப்பதால், கையிருப்பில் ஏராளமான பணத்தை வைத்திருக்கும்படியாயிருக்கிறது. (3) பத்திரமாகவும் நல்லவட்டி தரத்தக்கதாகவுமுள்ள சௌகரியம் இல்லாதிருப்பதால் ஒருவன் தன்னுடைய பணத்தைத்தானே தன்கையிருப்பில் வைத்துக் கொள்ளும்படியாகிறது. (4) ஜனங்களில் பெரும்பாலோர் படிப்பின்றி யிருக்கின்றனர்.

பணத்தை உபயோகிக்காமல் தூங்கிக் கிடக்கும்படி வைத்திருக்கும் தன்மையானது நிலைபெற்றிராது. ஜனங்களுக்குள் படிப்புவிருத்தியாவதுடன் காரண காரியங்களில் உணர்ச்சியும் ஏற்பட்டவுடனே நின்று போய்விடும். ஆகையால், பணத்தை எவ்வாறு லாபகரமாய் உபயோகிக்கலாமென்பதைக்குறித்து அறிவைப் பரவச்செய்யவேண்டும். இன்னின்ன காரியங்களில் பணத்தை லாபத்திற்கு உபயோகப் படுத்தலாமென்று போதிக்கும்படியான வரவு செலவுஸ்தாபனங்களும் ஏற்பாடுகளும் உண்டாவதற்குள்ள மார்க்கங்களையும் தேடவேண்டும்.

மிராசுதாரர்கள், உத்தியோகஸ்தர்கள், பலவிதமான தொழிலாளிகள், வேலையாட்கள் ஆகிய எவரிடமும் வட்டிக்குக் கொடுக்க சிறிதளவேனும் கையிருப்பில் பணமுண்டு. பணம்வேண்டுவோன் தனக்குக்கடன் கொடுக்கக் கூடியவர் யாவர் என்பதைப் பல சமயங்களில் அறிய முடியாதபடி கஷ்டப்படுகிறான். பணத்தை வைத்திருப்பவனும் பணத்தைக் கடனாகப் பெறக் கூடியவனை அறியாது கஷ்டப்படுகிறான். ஆகவே, மூலதனத்தை ஒழுங்குபடுத்தி உபயோகமாகுமாறு செய்ய வேண்டியதில் பாங்கிகளும் லாவாதேவிக்காரர்களும் மத்திய புருஷர்களாக இருக்கிறார்கள். எப்படியென்றால், வட்டிக்குப்போட்டு வைக்க யாரிடம் பணமிருக்கிறதோ அவர்களிடமிருந்து பணத்தைப் பெறவேண்டும்; கடன் வேண்டியவர்களுக்கு அத்தொகையை வட்டிக்குக் கொடுக்க வேண்டும்; தற்காலத்தில் பாங்கிகள் பலவிதமான வேலைகளைச் செய்த போதிலும், பணமுள்ளவர்களிடமிருந்து பணத்தைப் பெறுவதும், பணம் வேண்டியவர்களுக்குப் பணத்தைக்கொடுத்தலுமே அப்பாங்கிகள் செய்யும் முக்கியமான வேலையாகும்.

பணமுள்ளவர்களிடமிருந்து பணத்தைச் சேகரிக்க பாங்கிகள் என்ன செய்கின்றனவென்றால்:—வட்டிக்குப்பணம் கொடுத்தால் பெற்றுக் கொள்வோம், குறிப்பிட்டஒரு தவணைக்குப் பின் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவோம் என்று விளம்பரம் செய்கின்றன. இது இப்படியிருக்க கடன் வேண்டியவர்களோ பாங்கிக்குச் சென்று, கடன் வேண்டுமென்று அறிவித்து, அதிக வட்டிக்குப் பணம் பெறுகின்றனர். ஆதலின் பாங்கிகளோ எவ்வளவு குறைந்த வட்டிக்குப் பணம் வாங்கலாமோ அவ்வளவு குறைந்த வட்டிக்குப் பணத்தை வாங்கவும், எவ்வளவு உயர்ந்த வட்டிக்குப் பணத்தைக் கடன் கொடுக்கலாமோ அவ்வளவு உயர்ந்த வட்டிக்குப் பணத்தைக் கடன் கொடுக்கவும், முயலுகின்றன. சொற்ப வட்டிக்குக் கடன் வாங்கி, அதிக வட்டிக்குக் கடன் கொடுப்பதில், இருவித வட்டிகளுக்கும் உள்ள வித்தியாசமே பாங்கியின் வருமானமாகும். அந்த வருமானத்தில் ஒரு பாகம், சிப்பந்திச் செலவாகி வருகிறது. மற்றொருபாகம் இதரசெலவுகளுக்குப்போய்மீதியுள்ள வருமானத்தை பாங்கியின் சொந்தக்காரர் எடுத்துக் கொள்ளுகிறார்கள்.

ஒரு பாங்கியின் சொந்தக்காரர்கள் வட்டிக்குக் கடன் வாங்கும் தொகையையும், தான் பாங்கியில் மூலதனமாகப் போடும் தொகையையும் கொண்டு, பல விதத்தில் உபயோகப்படுத்துகின்றனர். எப்படி யென்றால்:—

பிறருக்குக் கடன் கொடுக்கின்றனர்; உண்டியல் சீட்டுகளை வட்டி தள்ளி வாங்குகின்றனர்; கவர்ன்மெண்ட் முதலான பொது ஸ்தாபனங்களின் கடன் சீட்டு வாங்குகின்றனர். இவ்விதம் செய்தும் நடை முதல் செலவுக்கு வேண்டிய பணத்தைக் கையிருப்பில் வைத்துக் கொள்ளுவார்கள்; மேலே கண்டவாறு ஒவ்வொரு இடங்களிலும் எவ்வளவு தொகை போடலாமென்பதானது ஒரு பாங்கியின் பண நிலைமையை முக்கியமாய் பொறுத்திருக்கும். இன்னின்ன இனங்களி லிப்படி பணம் போட வேண்டுமென்பதை விதிக்கமுடியாது; ஒரு பாங்கியானது தனது பணத்தை எவ்விதம் எந்த இடங்களில் போட்டு வைக்கிறதென்பதே, அந்தப் பாங்கியின் புத்திசாலித்தனத்தைக் காட்டும். பொதுவாகப் பார்க்குமிடத்து, ஒரு பாங்கியானது தான் கொடுக்கவேண்டிய கடன் தொகையின் மூன்றில் ஒரு பங்குக்குச்சரியான தொகையைத் திடரென்று ரொக்கமாக்கி உபயோகப் படும்படியான ஆதாரத்தைத் தேடி வைத்திருப்பது போதுமானதெனலாம்.

இனி, கேட்ட சமயத்தில் பணம் கொடுப்பதாகக் கடன் வாங்குவதும், குறிப்பிட்ட தேதிகளில் பணத்தைத் திருப்பிக் கொடுப்பதாகக் கடன் வாங்குவதுமே பிரிட்டிஷ் பாங்கிகள் செய்துவரும் முதன்மையான வேலையாகும். வேண்டும்போது பணம் கொடுப்பதாக ஒரு பாங்கி கடன் வாங்கினால், கடன் கொடுத்தவன் இன்னானுக்கு இவ்வளவு பணம் கொடு என்று செக் அனுப்பினால், அவ்வாறே அந்த பாங்கியானது அந்தச் செக்கின்பேரில் பணம் கொடுத்து விடும். இவ்வாறு சேகரிக்கும் பணத்தை பாங்கி என்ன செய்கிறது? குறிப்பிட்ட காலத்திற்குப் பின் ஒருவருக்குப் பணம் கிடைக்கும்படியான பத்திரங்களிலும் நோட் பாண்டுகளிலும் கூடுதலாகும் தொகையில் வட்டி கழித்து அவ்வகைகளுக்காக பாங்கிகள் பணம் கொடுக்கும். அதல்லாமல், தன்னிடம் பற்று வரவு செய்பவருக்குக் கடனும் கொடுக்கும். அன்றன்றைய நடப்பு வட்டிக்குத். தவிர, இன்னும் பாங்கிகள் செய்யும் வேலைகள் என்னவெனில்:—உள்நாட்டிலும் வெளி நாடுகளிலும் இருக்கும் பாங்கிகளுக்குப் பிரதிநிதியாக விருக்கும், கடன் பத்திரங்களை விலைக்குவிற்கவோ வாங்கவோ செய்யும், வெளியூர்களுக்கு தர்சன உண்டியல்கள் விற்கும், தன்னிடம் பற்று வரவு செய்பவர்களின் கடன் சீட்டுகளை விலைக்குப் பெறும்; ஒருவருக்குப் பிரதிநிதியாகவிருந்து அவருடைய சொத்துக்களையும் நகை நாணயங்களையும், பத்திரங்களையும் பரிபாலித்துவரும்; மேலும் ஒரு பாங்கியானது மற்றொருவருடைய பொக்கிஷதாரியாக இருக்கும்; அதாவது மற்றொருவருக்குக் கிடைக்க வேண்டிய பணத்தை வசூலித்துப் பத்திரமாய் வைத்திருக்கும்; வெளிநாடுகளிலுள்ள கவர்ன்மெண்டுக்காவது பொது ஸ்தாபனத்துக்காவது பிரதிநிதியாக விருந்து கடன் வாங்கிக் கொடுக்கும். தவிர ஒரு பாங்கியானது தன்னிடம் பற்று வரவு செய்வோர் தாம் யாரோடேனும் தொழில் வியாபாரம் முதலியன நடத்த விரும்பி அவர்களுடைய நாணயத்தைக் குறித்து அறிய வேண்டினால் அவர்களைப் பற்றியுள்ள விவரங்களை அந்தரங்கமாக விசாரித்து அறிவிக்கும்.

ஒருபாங்கியானது கிரமப்படி லேவாதேவி செய்து வருமாயின், அதனால் தேசத்தின் திரவிய நிலைமைக்கு அபரிமிதமான அனுகூலங்கள் உண்டாகும். கையில் குறைவான பணத்தை வைத்துக்கொண்டு, அதற்கு ஏற்றபலனை யடைய முடியாதவர்கள் ஓரிடத்திலிருக்க, பணம்வேண்டுமென்று விரும்பியிருப்போர் மற்றோர் இடத்திலிருக்க, பணமுள்ளவர்களிடமிருந்து பணத்தை வாங்கி, அதை வேண்டியவர்களுக்கு உபயோகமாகும்படி செய்வதில்

பாங்கிகள் தேச ஐசுவர்யப் பெருக்குக்கு ஓர் முக்கிய ஆதாரமாய் இருக்கின்றன.

இந்தியாவுக்கு இன்னவிதமான பாங்கிகள் வேண்டுமென்பதையும், இந்தியாவின் பொருளாதார நிலைமையை விருத்தி செய்வதற்கு வேண்டிய சாதனங்கள் என்னவென்பதையும் நாம் நிர்ணயிக்குமுன், இந்தியாவிலே இப்பொழுது பாங்கி முறை எப்படியிருக்கிறதென்பதைக் கவனிக்கவேண்டும்.

இந்தியாவிலுள்ள மிகப்பெரிய பாங்கிகளோ மேல் காட்டு மாதிரியாய் அமைந்து நடந்துவருகின்றன. இந்தப் பாங்கிகளில் முக்கியமானவை மாகாண பாங்கிகளாகும்.

### ராஜதானி பாங்கிகள்.

இந்தியாவிலே 3 ராஜதானி பாங்கிகள் உள. கல்கத்தாவிலுள்ள வங்காள பாங்கி 1806 ம் வருஷத்தில் ஏற்பட்டது. பம்பாயிலுள்ள பம்பாய் பாங்கி 1840 ம் வருஷத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. சென்னையிலுள்ள மெட்ராஸ் பாங்கி 1843-ம் வருஷத்தில் ஏற்பட்டதாகும். பம்பாய்பாங்கியானது 1867-ம் வருஷத்தில் கலைக்கப்பட்டுப் போக, இப்பொழுதுள்ள பம்பாய் பாங்கியோ 1868-ம் வருஷத்தில்திரும்பவும் அமைக்கப்பட்டதாகும். கவர்ன்மெண்டார் கர்ரன்ஸி நோட்டுகளை வெளிப்படுத்துவதுபோல மாகாண பாங்கிகளும் தங்கள் பேரால் நோட்டுகளை அச்சடித்து வெளிப்படுத்தலாமென்று சுதந்திரம் இருந்தது. அதை 1862-ம் வருஷத்தில் கவர்ன்மெண்டார் நிறுத்திவிட்டார்கள். ஸேவிங்கிஸ் பாங்கியின் மேற்பார்வையை அவைகள் கவனித்து வந்தன. அதுவும் 1896-ம் வருஷத்தில் தபாலாபீஸுக்கு மாற்றப்பட்டுப் போயிற்று. ஆரம்பத்தில், இவ்வாறு பாங்கிகள் அரைவாசி கவர்ன்மெண்டு ஸ்தாபனங்களாய் இருந்தன. இவைகளில் ஏராளமான மூலதனத்தை கவர்ன்மெண்டுகள் கொடுத்துவந்தன. அதனால்,பாங்கியின் போர்ட் என்ற கமிட்டியாருள் குறிப்பிட்ட ஓரளவு டைரக்டர்களை கவர்ன்மெண்டார் நியமித்துவந்தனர். ஆனால் மாகாண பாங்கிகளிலே இம்மாதிரி கவர்ன்மெண்டுக்கிருந்த சம்பந்தமானது 1876-ம் வருஷத்தில் நிறுத்தப்பட்டுப் போயிற்று; என்றாலும் இவைகளை கவர்ன்மெண்டு பாங்கிகள் என்று சொல்ல வேண்டும். இவைகளுக்கும் கவர்ன் மெண்டுக்கும் உடன்படிக்கைகள் உண்டு. இந்த உடன்படிக்கைகள் 10 வருஷத்திற்கு ஒரு முறை திருத்தி அமைக்கப்படும். இந்தஉடன்படிக்கைகளோ அந்தரங்கமாய் உள்ளன. ஆகவே உடன்படிக்கைகளின் விவரங்கள் ஜனசமூகத்தாருக்குத் தெரியா. இந்தியாவிலே கவர்ன்மெண்டின் சாதாரணமான கொடுக்கல் வாங்கல் வேலைகளை இந்தப் பாங்கிகள் நடத்திவருகின்றன. கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய மூன்று நகரங்களிலே "பப்ளிக் டெட்", அதாவது கவர்ன்மெண்டின் கடன்களின் மேற்பார்வையையும் வேலையையும் இவைகளே நடத்திவருகின்றன. அதற்காக இவைகளுக்கு நேரும்செலவை கவர்ன்மெண்டார் கொடுத்து வருகின்றனர். ஒவ்வொரு மாகாண பாங்கியிலும் குறிப்பிட்ட ஓரளவு பணத்தை கவர்ன்மெண்டார் டிபாஸிட்டாக வைத்திருக்கின்றனர். அவ்விதம் குறிப்பிட்ட தொகைக்கு கவர்ன்மெண்டின் பணம் குறையுமானால், அவ்வாறு குறைந்த தொகைக்கு ஏற்ற வட்டியே கவர்ன்மெண்டார் கொடுக்கிறார்கள். கவர்ன்மெண்டார் உலோக வாரியாக வைத்திருக்கும் நாணய சாதனங்கள் இவைகளிடம் இருப்பதில்லை. கவர்ன்மெண்டின் கையிருப்பு ரொக்கத்தில் சிறிதளவுதான் இவைகளி லிருக்கும்.

### மாகாண பாங்கிகளின் சில நிபந்தனைகள்

மாகாண பாங்கிகளின் அமைப்பும் நிர்வாகமும் சில சட்டங்களால் திட்டமாக்கப்பட்டிருக்கின்றன. அந்தச் சட்-

டங்களிலே முக்கியமானவை 1867, 1876,1907 ஆகிய இவ்வருஷங்களில் ஏற்பட்ட சட்டங்களாகும். இன்னின்ன மாதிரி வேலைகளைத்தான் மாகாண பாங்கிகள் நடத்த வேண்டுமென்று அச்சட்டங்களில் கண்டிருக்கின்றன. மாகாணபாங்கிகள் கடன்கொடுப்பதை அச்சட்டங்கள் வெகுவாய்க் குறைத்திருப்பதோடு, இவைகளின் பணம் இந்தியாவை விட்டுவெளியே போகாதபடியும் தடுத்திருக்கின்றன. முக்கியமான நிபந்தனைகள் என்னவென்றால்:—(1) இந்தியாவிலோ இலங்கையிலோ செலுத்தப்படக்கூடிய "பில்ஸ் ஆப் எக்ஸ்சேஞ்சு" (Bills of Exchange) என்ற உண்டிச் சீட்டுகளையும் இதரவிதமான பத்திரங்களையும் வாங்கவோ, எழுதிக் கொடுக்கவோ, விற்கவோ செய்யலாமேயொழிய இந்தியாவுக்கு வெளியே செலுத்தப்படக்கூடிய பத்திரங்களை வாங்கவும் விற்கவும் எழுதிக்கொடுக்கவும் கூடாது. இந்த நிபந்தனையால், மேனாடுகளிலே செலாவணியாகும் பத்திரங்களையும் மாகாண பாங்கிகள் முற்றிலும் வாங்க முடியாது போகின்றன (2) இந்தியாவுக்கு வெளியே உள்ள ஒருவர் குறிப்பிட்டகாலத்திற்கு வட்டிக்குப்போடுவதாகச் சொன்னால் அவரிடமிருந்து மாகாண பாங்கிகள்பணம் வாங்கமாட்டா; இந்தியாவுக்கு வெளியே திருப்பிக் கொடுக்கும்படியான பணம் வாங்கக் கூடாது. இவ்விதம் நிபந்தனையிருப்பதால், இந்தியாவில் உபயோகமாகும்படி லண்டனிலேஇந்தபாங்கிகள் கடன் வாங்கமுடியாது (3) 6மாத தவணைக்கு மேல் செலுத்தும்படி ஒருவருக்கும் கடன் கொடுக்கக்கூடாது. (4)ஸ்தாவர சொத்தின்மேல் ஈட்டுக்கடன்கொடுக்கவும் கூடாது(5)இரண்டுபேர் கையெழுத்துப் போட்டாலன்றி நோட் பாண்டின்மேல் கடன்கொடுக்கக்கூடாது (6) சாமான்கள் அடமானமாகபாங்கியிடம் வைக்கப்பட்டாலொழிய, சாமான்களின்மேல் கடன்கொடுக்கக்கூடாது.

### மாகாண பாங்கிகளின் மேற்பார்வை.

மாகாண பாங்கிகளிலே அநேகமாய் பங்குகளை ஐரோப்பியர்களேஎடுத்துக் கொண்டிருக்கிறார்கள். சாதாரணமான "ஜாயிண்டு ஸ்டாக்பாங்கி"களைப்போல் இந்தப் பாங்கிகளில் பங்கெடுத்துக் கொண்டிருப்பவர்களுக்கு அவ்வளவு சௌகரியங்கள் இல்லை. ஆகவே, மாகாணபாங்கிகளின் டைரக்டர்கள், பாங்கி சம்பந்தமாய் தாங்கள்வெளியிட்ட கணக்கு விபரங்களைத் தாங்களே அங்கீகரித்துவிடும்படியும், தங்களையே டைரக்டர்களாக மறுபடியும் தேர்ந்தெடுக்கும்படியும், அல்லது தங்களுடைய இஷ்டப்படி வேறு எவரையேனும் டைரக்டராகத் தெரிந்தெடுக்கும்படியும், வருஷாந்தர பொது மீட்டிங்கிலே தங்களுடைய இஷ்டப்படி கணக்குப் பரிசோதகர்களை நியமிக்கும்படியும், செய்யக்கூடியதாய் இருக்கிறது. இந்த பாங்கிகளுக்கும் கவர்ன்மெண்டுக்கும் உள்ள உடன்படிக்கைகளின்படி மாகாணபாங்கிகளின் கணக்கு வழக்குகளைச் சோதித்துப் பார்க்கவும், பாங்கிகளின் காரியங்களைப் பற்றிய தகவல்களை அறிவிக்குமாறு கேட்டுவிடவும், அது சம்பந்தமான தஸ்தாவேஜுகளை அனுப்புமாறு கேட்டுவிடவும், கவர்ன்மெண்டுக்கு பாத்தியமுண்டு. மேலும் கவர்ன்மெண்டார், தங்களுக்குச் சரியென்று தோன்றும் முறைப்படி பாங்கிகளின் ஐவேஜி, கடன் ஆகிய விவரங்களைக் காட்டக்கூடிய குறிப்புகளை வெளியாக்குமாறு அறிவிக்கவும் கேட்டுவிடலாம்; ஆனால் அனுபவத்தில் பார்த்தால், மாகாண பாங்கிகளின் மேற்பார்வையைக் கவர்ன்மெண்டார் திறமையுடன் கவனிப்பதாகவில்லை. தவிர, பாங்கிகளின் மேற்பார்வையில் எல்லாப் பங்குக்காரர்களுக்கு வாஸ்தவத்தில் பாத்தியமும் இல்லை.

### கிளை பாங்கிகள்.

3-மாகாண பாங்கிகளுக்குமாக இந்தியாமுழுவதிலும் மொத்தத்தில் 54 கிளை பாங்கிகளிருக்கின்றன. அவை

களின் மேற்பார்வையும் ஐரோப்பியரிடமே இருக்கிறது. கிளை பாங்கியிலே ஏஜண்ட் என்ற பதவியிலாவது அக்கவுண்டண்ட் (அதாவது கணக்குப் பரிசோதிக்கும் அதிகாரி) என்ற பதவியிலாவது இந்தியரை இதுவரை நியமிப்பதேயில்லை.

### இந்தியரின் அபீஷ்டங்கள்.

மாகாண பாங்கிகளிலே டைரக்டர்கள் அனைவரும் ஐரோப்பியராகவே இருக்கின்றனர். பம்பாய் பாங்கியில் மட்டும் டைரக்டர்களாகச் சில இந்தியர் இருக்கின்றனர். ஆயினும் அவர்களின் தொகை எப்பொழுதும் அற்பமானதே யாகும். சென்னை பாங்கியிலே டைரக்டர்களாக இந்தியர்கள் வருவதைத் தடுத்துவிட வெளிப்படையாகவே முயற்சி செய்யப்படுகிறது. மாகாண பாங்கிகளிலெல்லாம் டைரக்டர்களாக ஐரோப்பியர்களே இருப்பதனாலும், நிர்வாக உத்தியோகங்களை ஐரோப்பியர்களே வகிப்பதனாலும், இந்தியரின் நோக்கங்கள் எப்பொழுதும் பாதகமடைகின்றன. மாகாண பாங்கிகள் அநேகமாய் ஐரோப்பியரின் முயற்சிகளைப் பற்றிய இலாபத்தையே கவனித்துவருவதனால், ஆங்கில ஸ்தாபனங்களில் ஒன்றாகவே கருதவேண்டும். பெரிய ஐரோப்பிய வியாபார கம்பெனிகளுக்கு மாகாண பாங்கிகள் உதவிபுரிகின்றன. அவர்களுடைய நோக்கத்திற்குச் சாதகமான சில மாகூல்களுக்கு முன்பணம் கொடுத்து உதவிபுரிகின்றன. இந்தியத்தொழிலுக்காவது வியாபாரத்திற்காவது முன் பணம் கொடுத்துதவுவதில் திட்டமான ஒழுக்கமில்லை; நல்லெண்ணமும் பிரியமும் இல்லை. இந்திய வியாபாரத்துக்கு முன் பணம் கொடுத்துதவினால், தங்களுக்கு இவ்வளவு தூரம் பலனுண்டாகிக் காரியம் கைகூடுமென்பதைப் பார்த்து, அவ்வளவுதான் மாகாண பாங்கிகள் பணவுதவி புரிகின்றன. பணத் தட்டு ஏற்பட்டால் அதை நீக்குவதற்காக மாகாண பாங்கிகளிடம் கவர்ன்மெண்டார் பணம் போட்டு வைக்கின்றனர். இன்னும் சில சாதனங்களையும் கவர்ன்மெண்டார் தேடிக் கொடுக்கின்றனர். இப்படியிருந்தும், கவர்ன்மெண்டார் செய்திருக்கும் சாதகங்கள் அனைத்தும் ஐரோப்பியரைத் தாண்டி அன்னியருக்கு எட்டுவதில்லை. இதோடு நிற்காமல் மற்ற பாங்கிகளோடும் மாகாண பாங்கிகள் போட்டி போடுகின்றன.

### பணப்புழக்கத்தின் அளவு.

இந்தியாவிலுள்ள மாகாண பாங்கிகள், எக்ஸ்சேஞ்சு பாங்கிகள், ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள், ஆகிய இவைகளில் பணப்புழக்கம் இவ்வளவு அளவினையுடையதென்பதை மற்றோரிடத்தில் காட்டியிருக்கும் ஜாப்தாவினால் அறிந்து கொள்ளலாம்.

### எக்ஸ்சேஞ்சு பாங்கிகள்.

மாகாண பாங்கிகளுக்கு அடுத்தபடியாக முக்கியமானவை "எக்ஸ்சேஞ்சு பாங்கி"களாகும். இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கிகளானவை லண்டன், ஐரோப்பா, கீழ்த் தேசங்கள் முதலிய இடங்களிலுள்ள பாங்கிகளின் கிளைகளாகும். இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கிகளில் ஒன்று அமெரிக்காவிலுள்ள யுனைடெட் ஸ்டேட்ஸ் என்னும் தேசத்திலிருக்கும் பாங்கியின் கிளையாகும். ஆதியிலே இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கிகள் யாவும் இந்தியாவுக்கு வெளியே நடக்கும் வியாபாரத்திற்குப் பணவுதவி செய்துவந்தன ஆனால் சமீபத்திலே இந்தபாங்கிகளில் சிலவோ இந்தியாவில் வியாபாரத்துக்கும் பணவுதவி செய்யத் தலைப்பட்டு, அவ்வாறே தங்களுக்கு கிளைகள் இருக்கும் இடங்களிலே உள்நாட்டு வியாபாரத்திற்குப் பணவுதவி செய்வதில் சிறிது சம்பந்தப்பட்டு வருகின்றன. இந்த பாங்கிகளின் தலைமை ஆபீஸ்கள் அநேகமாய் லண்டனில் இருக்கின்றன. ஆகவே இந்த பாங்கிகள் லண்டனிலும் இதர இடங்களிலும் கடன் வாங்கின தொகையைக்கொண்டு இங்கே நடவடிக்கை நடத்திவருகின்

றன. இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கிகளின் தலைமை ஆபீஸுக்குப் பொதுவாய் "இந்தியன் அண்டு கலோனியல் பாங்கிகள்" என்றுபெயர் உண்டு. பிரிட்டிஷ் பாங்கிகள் எவ்வளவு வட்டி கொடுக்கின்றனவோ அதைவிட அதிகமான வட்டியானது அத்தலைமை ஆபீஸ் பாங்கிகளால் கொடுக்கப் படுகிறது. சென்றசில வருஷங்களாக இந்தப் பாங்கிகள் இந்தியாவிலேயே ஏராளமாய் பணம் கடன் வாங்கிவருகின்றன. ஆகவே, இந்தியாவில் கடன்வாங்கிய பணத்தைக் கொண்டே எக்ஸ்சேஞ்சு பாங்கிகள் வியாபாரத்திற்கு மிகுந்த அளவு பணவுதவி செய்து வருவதாகச் சொல்லப்படுகிறது.

### பாங்கிகளின் கடன் தொகைகள்.

இந்த பாங்கிகள் ஒவ்வொன்றும் இந்தியாவில் எவ்வளவு தொகை கடன் வாங்கியிருக்கின்றனவென்பதை யறியும்படியான தகவல் எதுவும் கிடைக்கவில்லை. ஆயினும் கவர்ன்மெண்டின் புள்ளிகளிலிருந்து பார்த்தால், ஏராள பண தொகை வாங்கப்பட்டிருப்பதாகவே தெரிகிறது. சென்ற சில வருஷங்களுக்குக் கிடைத்த புள்ளிகள் பின்வருமாறு:—

| | | | |
|---|---|---|---|
| 1909-ம் | வருஷம் | 2227 | லட்சம் ரூபாய் |
| 1911 | ,, | 2876 | ,, |
| 1913 | ,, | 3103 | ,, |

1915-ம் வருஷத்திய புள்ளிகள் இன்னும் கிடைக்கவில்லை. இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கிகளின் பணமோ இந்தியாவில் இறக்குமதியும் ஏற்றுமதியும் செய்யப்படும் சாமான்களின்மீது ஏற்படும் பில் என்ற பத்திரங்களின் மீது கொடுக்கப்பட்டிருக்கின்றன. இறக்குமதி தரப்பிலே இக்கிளைகளின் வேலையைக் கவனிப்போமாயின், இந்தியாவிலே இறக்குமதி செய்யப்படும் சாமான்களுக்காக இந்தியாவுக்கு வெளியேயுள்ள எக்ஸ்சேஞ்சு பாங்கிகளின் ஆபீஸர்கள் அங்குள்ள வியாபாரிகளுக்குப் பணவுதவி செய்கிறார்கள். இந்தியாவிலுள்ள கிளைகள் செய்யும் வேலையென்னவென்றால், அந்தபில்களின்மீது வரவேண்டிய பணத்தை வசூலிப்பதும் இந்தியாவிலிருந்து சாமான்களை ஏற்றுமதி செய்வோரின் அந்தஸ்தை இந்தியாவுக்கு வெளியிலுள்ள கிளைகளுக்கு அறிவிப்பதுமே முக்கியமான வேலைகளாகும். ஆனால் இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகும் சாமான்களின்விஷயமாகவும் இப்பாங்கிகள் பணவுதவி செய்கின்றன. இதனால் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் சாமான்களின்விஷயமான பணவுதவியை எக்ஸ்சேஞ்சு பாங்கிகளே அநேகமாய் நடத்தி வருகின்றனவென்று சொல்ல வேண்டும். இந்தியாவிலிருந்து ஏராளமான சாமான்கள் ஏற்றுமதி செய்யப்படுவதால், அதற்குஏற்றபடி பணவுதவி செய்துவர இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கிகளுக்கு மிகுந்த பணப் பழக்கம் இருக்கவேண்டுமென்று ஏற்படுகிறது. எனவே இங்குள்ள எக்ஸ்சேஞ்சு பாங்கிகள் தாங்கள் பெறும் பில்களை மறுபடியும் லண்டனில் செலாவணியாகும்படி செய்து பணம் பெற்றுவிடுவதால், தங்களுடைய பணம் அவ்வளவாக முடக்கமாகித் தேங்கிப்போய் விடுவதில்லை. எவ்வளவு தொகைக்கு பில்கள் லண்டனிலே மறுபடியும் செலாவணி செய்யப்படுகின்றனவென்று தெரியவில்லை.

இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் சாமான்களுக்காக பில் என்ற பத்திரங்கள் எழுதப்படுகின்றன. சாமான்களை இங்கிலாந்தில் பெற்றுக்கொள்பவர்களிடம் அப்பத்திரங்கள் ஆஜர்செய்யப்பட்ட தேதியிலிருந்து பெரும்பாலும் 3-மாத தவணைக்குள் பணம் கொடுக்கப்பட வேண்டுமென்று எழுதப்பட்டிருக்கும். இங்கிலாந்திலுள்ள பிரபலகம்பெனிகள், லேவாதேவிக் கம்பெனிகள் ஆகிய இவைகளின் பேரில்தான் அநேகமாய் பில் எழுதப்படும்.

அத்தகைய பத்திரங்களை இந்தியாவிலுள்ள எக்ஸ்சேஞ்சு பாங்கிகள் வாங்கியதும் அவைகளை உடனே லண்டனுக்கு அனுப்பிவிடும். அங்கே அவைகளை, தேவையானபோது மாற்றிக்கொள்ளும். எக்ஸ்சேஞ்சு பாங்கிகளுக்குப் பணம் உடனே தேவையில்லாதுபோனால், அவைகள் அப்பத்திரங்களைக் கெடுவுவரையில் கையிருப்பில் வைத்துக்கொண்டிருக்கும். ஏற்றுமதியாகும் சாமான்களுக்காக எழுதப்படும் பத்திரங்களை வாங்க எக்ஸ்சேஞ்சு பாங்கிகள் பணந்தேடிக்கொள்ளும் மார்க்கங்கள் என்னவென்றால்:—

(1) இறக்குமதி செய்யப்படும் சாமான்களுக்காக எழுதப்பட்ட பத்திரங்களுக்குக் கிடைக்கவேண்டிய பணத்தைக் காலக்கெடுவில் பெற்றுக்கொள்ளுதல்.

(2) இதர வெளி தேசங்களில் பெறும்படியான உண்டியல்களின் விற்பனையால் கிடைக்கும் ரொக்கம்.

(3) இந்தியா மந்திரியினால் இந்தியாவில் பணங் கொடுபட வேண்டிய உண்டியல்களை லண்டனில் வாங்கி, இந்தியாவில் அவைகளுக்காகப் பணம் பெறுதல்.

(4) லண்டன், ஈஜிப்டு, ஆஸ்டிரேலியா முதலிய இடங்களிலிருந்து வெள்ளிப் பாளங்களையும், நாணயங்களையும், தங்க நாணயங்களையும் இறக்குமதி செய்தல்.

இந்தியாவிலுள்ள மாகாண பாங்கிகளுக்கு லண்டனிலே கிளை ஆபீஸ் ஒன்று இல்லாதிருப்பதால், கவர்ன்மெண்டின் ராணுவம் முதலிய இலாக்காக்களின் பற்று வரவுகளை எக்ஸ்சேஞ்சு பாங்கிகளே பெற்று நடத்தி வருகின்றன. மேலும் இந்தியாவிலே ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள் செய்து வரும் வேலையையும் இந்தியாவிலுள்ள எக்ஸ்சேஞ்சு பாங்கிகள் செய்துவருகின்றன.

எக்ஸ்சேஞ்சு பாங்கிகளில் பங்கெடுத்துக்கொண்டிருப்பவர்களிற் பலரும் ஐரோப்பியரே யாவர். இந்தியரும் பணத்தை வட்டிக்குப் போடுகிறார்கள். மாகாண பாங்கிகளில் இருப்பதைப் போலவே எக்ஸ்சேஞ்சு பாங்கிகளிலும் நிர்வாகத்தை நடத்தும் உத்தியோகஸ்தர்கள் ஐரோப்பியர்களாகவே இருக்கிறார்கள். இந்தியா கவர்ன்மெண்டின் கையிருப்புப் பணத்தின் ஒரு பகுதியானது இந்த எக்ஸ்சேஞ்சு பாங்கிகளுக்கும் வட்டியில்லாமல் கிடைக்கிறது. தவிர குறிப்பிட்ட காலத்தில் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவதால் லண்டனில் கடனுக்குப் பணம் பெறுகின்றன. இம்மாதிரி இந்தியா கவர்ன்மெண்டின் பணத்தைக் குறைந்த வட்டிக்கு இந்த பாங்கிகள் பெறுகின்றன.

## இந்தியன் ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள்.

இந்தியன் ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள் மற்ற பாங்கிகளைப்போல் அவ்வளவு மூலதனம் இல்லாமல் சொற்ப மூலதனத்தைக் கொண்டு லேவாதேவி செய்துவருகின்றன. அவைகளிற் சில, ஐரோப்பியரின் மேற்பார்வையிலிருக்கின்றன. ஆனால் பல பாங்கிகள் இந்தியரால் நடத்தப்பட்டு வருகின்றன. 1906-1913-ஆகிய வருஷங்களுக்குள் அவைகளின் தொகை வெகுவாக அதிகரித்தன. அவைகளின் லேவாதேவியும் அதற்கு ஏற்றபடி பெருகத் தலைப்பட்டது. தற்சமயம் அவைகள் இந்தியாவின் உள் நாட்டு வியாபாரத்திற்கே அநேகமாய்ப் பணங்கொடுத்துதவி வருகின்றன. ஐரோப்பியரின் மேற்பார்வையிலிருக்கப்பட்ட சில பாங்கிகள், ஏற்றுமதியாகும் சாமான்களின் பேரில் ஏற்படும் பில்களை விலைக்கு வாங்குகின்றன வென்றாலும், வெளிநாட்டுவியாபாரிகளுக்கு விசேஷமாய்ப் பணஉதவி செய்து வருவதாகச் சொல்ல இடமில்லை. இந்த அம்சத்திலும்

விருத்தியடைந்து வெளி தேசத்திலிருந்து பூணத்தைப் பெற்று, லேவாதேவி செய்யுமென்று எதிர் பார்க்கப்படுகிறது.

1913-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ந் தேதி ஏற்பட்ட இந்திய கம்பெனிகளின் சட்டப்படி கவர்ன்மெண்டாரால் பதிவு செய்து கொள்ளப்பட்ட பாங்கிகளின் தொகை 513 ஆகும். ஆயினும் இந்த 513 பாங்கிகளிலே உண்மையில் பாங்கிகள் என்று சொல்லக்கூடியவைகளின் தொகை மிகவும் அற்பமேயாகும். இந்தியரின் மேற்பார்வைக்கு உட்பட்ட பாங்கிகள் இன்னும் பல ஏற்படவேண்டியது அவசியமாகும். தவிர, இப்பொழுது இந்தியரின் பார்வைக்கு உட்பட்ட பாங்கிகளின் மூலதனமும் அவைகளின் வருமான இனங்களும் பெருகவேண்டியது அவசியம்.

ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள் ஏற்படும் தன்மை.

சில மனிதர்கள் ஒன்றுகூடிப் பண லேவாதேவி செய்ய உத்தேசித்துப் பணம் போடுவதிலிருந்து ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள் ஏற்படுகின்றன. அவர்கள் சேர்ந்து போடும் பணந்தான் அதற்கு மூலதனம் எனப்படும். அவ்விதம் அவர்கள் போடும் பணம் பங்கு Share) எனப்படும். அப் பங்குகள் தாவாரியாகப் பிரிக்கப்படும். சில பங்குகளுக்கு மற்றப்பங்குகளைவிட அதிகமான சௌகரியங்களும் சுதந்திரங்களும் உண்டு. மேலே கண்டவாறு பணம் போடுபவர்களுக்குப் பங்குக்காரர்கள் (Share holder) என்று பெயர். அவர்கள் ஒவ்வொருவரும் கொடுக்கும் பணம் தனித்தனியே மூலதனத்தில் பங்காகும். ஒவ்வொரு பங்குக்கும் அவர்கள் கொடுக்கவேண்டிய முழுப்பணமும் உடனே அநேகமாய் கொடுபடுப்படியாய் இராது. ஒரு பங்குத் தொகை சுமார் 500 ரூபாய் என்று ஏற்பட்டால், அதில் சுமார் 100 அல்லது 200 ரூபாய் முதன் முதல் கொடுக்கப்பட, பின்னால் வேண்டும் பொழுது மீதித் தொகை கொடுக்கப்படும். இவ்விதம் சேர்ந்த மூலதனத்தை இன்ன இனங்களில் உபயோகப்படுத்துவ தென்பதை ஒரு தஸ்தாவேஜில் தெளிவாய்க் குறிப்பிடவேண்டும். இதர நடவடிக்கையின் விபரங்கள் பாங்கியின் விதிகளால் நிர்ணயிக்கப்படும் பாங்கிகளில் பங்கெடுத்துக் கொண்டிருக்கும் பங்குக்காரர்கள் அப் பாங்கிகளின்மேற்பார்வையைக் கவனிப்பதற்கென்று தங்களிலிருந்து சில பேரைத் தெரிந்தெடுப்பார்கள். அவ்விதம் தேர்ந்தெடுக்கப் படுபவர்களுக்கு "டைரக்டர்" என்றுபெயர். நன்னடக்கை, அந்தஸ்து, செல்வாக்கு, வேலையில் அனுபவம் ஆகிய இந்த யோக்கியதையுள்ளவர் டைரக்டர்களாக எப்பொழுதும் தேர்ந்தெடுக்கப் படுவார்கள்; அவ்வாறே தேர்ந்தெடுக்கப் படவேண்டும். பங்குக்காரர்களின் சமூகமே அப்பாங்கிகளின் சொந்தக்காரர்களாயிருக்க, அப் பாங்கிகளை சரிவர நடத்துவதற்கு மேற்படி டைரக்டர்களே ஜவாப்தாரிகளாவர். ஆகவே தகுந்த அந்தஸ்தும் யோக்கியதையும் உடையவர்களையே டைரக்டர்களாக நியமிப்பதுதான் பங்குக்காரர்களின் அடிப் படையான வேலையாகும். அவ்விதமான டைரக்டர்கள் இருந்தால்தான், பாங்கிகளின் வேலை திருப்திகரமாயும், குறைவின்றியும் நடந்துவர முடியும். டைரக்டர்களா யிருந்தவர்களின் தவறுதல்களும், பிழைகளுமே இந்தியாவிலும் வேறு இடங்களிலும் பாங்கிகள் முறிந்து போனதற்குக் காரணமாக ஏற்படும் பொழுது, டைரக்டர்களைத் தேர்ந்தெடுப்பதை பங்குக்காரர்கள் மிகவும் முக்கியமாகக் கவனிக்க வேண்டுமென்று வற்புறுத்துவது அனுவசியம். பாங்கியின் வேலையை நடத்துவதற்கு நிபுணரொருவரை டைரக்டர்கள் நியமிக்கிறார்கள். பின்பு குறிப்பிட்ட கால

ங்களில் கணக்கு விவரங்களைப் பங்குக்காரர்களுக்கு டைரக்டர்கள் அறிவிக்கிறார்கள். அச்சமயத்திலே பங்குக்காரர்கள் அனைவரும் பிரசன்னமாய் இருக்கவேண்டுமென்பது அவசியம்; எப்படியென்றால் பாங்கிகளின் கணக்கு வழக்குகளைப் பற்றி டைரக்டர்கள் என்ன சொல்லுகிறார்களென்பதை நேரில் அறிவதற்கும், அதில் ஏதேனும் பிசகிருந்தால் குணதோஷங்கூறி மேற்பார்வையை ஒழுங்கு படுத்துவதற்கும் முடியும். அப்பொழுது அவ்விதம் கணக்கு வழக்குகளை நேரில் அறிந்து குணதோஷங்களைக் கண்டித்து வருவதானது பங்குக்காரர்களுக்கே நன்மையாகும். ஆகவே அவ்விதம் பாங்கியின் நடவடிக்கைகளைப் பரிசீலனை செய்து வந்தால், பாங்கிகள் முறிந்து போவதற்கு இடமிராது. ஆனால், பங்குக்காரர்களோ தங்களது கடமையும் நன்மையும் இன்னவென்று அறிந்து கொள்ளாமல் உபேட்சையாய் இருந்து வருவது விசனத்திற்கு இடமாகும். உபேட்சையாய் இருந்துவிடுவதால்தான் பாங்கிகள் முறிந்து, பண முடையும் கஷ்டமும் ஏற்பட்டுவிடுகின்றன. இனி, டைரக்டர்களைப்பங்குக்காரர்கள் தெரிந்தெடுப்பதோடு கணக்கு வழக்குகளைப் பரிசீலனை செய்தறிவிக்க கணக்குப்பரிசோதகர் அதாவது ஆடிட்டர் என்பவர்களையும் தெரிந்தெடுக்கிறார்கள். அவ்விதம் நியமிக்கப்படும் கணக்குப் பரிசோதகர்களோ கணக்கு வழக்குகளில் நிபுணர்களாய் இருக்கவேண்டுமென்பதோடு, அந்தரங்க ஸ்திதியைக் கவனித்து சுயேச்சையாய் கணக்கு வழக்குகளின் நிலைமையை அறிவிப்பவர்களாயும் இருக்க வேண்டும். பங்குக்காரர்களுக்கு ஆடிட்டர்களே ஜவாப்புதாரிகளாதலால் பங்குக்காரர்களின் நன்மைகளையே ஆடிட்டர்கள் கவனித்து கணக்கு வழக்கை உள்ளது உள்ளபடி அறிவிக்கக்கடமைப்பட்டவர்கள். ஆகவே ஆடிட்டர்கள் தங்களது வேலையைக் கிரமப்படி செய்வார்களாயின், டைரக்டர்களின் மேற்பார்வையும், அவர்களின் கீழுள்ள சிப்பந்திகளின் வேலையும் ஒழுங்குபட்டு கிரமமாக நடக்கும். எனவே ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள் பலனுடன் நடைபெறுவதற்கு முக்கியமான மூன்று அமிசங்கள் என்னவென்றால்:—

(1) தகுந்த டைரக்டர்களைத் தேர்ந்தெடுத்தல்.

(2) கணக்குப் பரிசோதனையைத் திறமையுடன் நடத்தல்.

(3) பங்குக்காரர்கள் தகுந்த மேற்பார்வையிடல்.

### இந்தியன் ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகளின் முறிவு.

இரண்டொரு வருஷங்களுக்கு முன் சில பாங்கிகள் முறிந்து போயினமையால், இந்தியன் பாங்கிகளின் விருத்திக்கு தடை ஏற்பட்டது. பஞ்சாபிலே தலைமை ஆபீஸைக் கொண்டு, இந்தியாவின் பல பாகங்களில் 72 கிளைகளுடன் இருந்த "பீபில்ஸ் பாங்கு ஆப் இந்தியா" என்ற பாங்கியானது முதன் முதல் முறிந்து போயிற்று. இதற்குப் பின் "இந்தியன் ஸ்பீஷி பாங்கு" என்ற பாங்கி முறியலாயிற்று. இந்தியர்களாலேயே மேற்பார்வை பார்க்கப்பட்டு வந்த இந்த பாங்கிக்குத்தான் லண்டனிலே ஒரு கிளை ஆபீஸ் இருந்தது. 1913-ம் வருஷத்திலிருந்து முறிந்து போன பாங்கிகள், அவைகளால் உண்டான பொருட்சேதம் ஆகிய விவரங்களடங்கிய ஜாப்தா ஒன்று மற்றோரிடத்தில் காணப்படும். பாங்கிகள் முறிந்து போனதற்குக் காரணங்கள் பலவுண்டென்று சொல்லப்படுகிறது. முறிந்து போன பாங்கிகளில் சில வற்றை மேற்பார்வை பார்த்து வந்தவர்கள் லேவாதேவி விஷயத்தில் தகுந்த அநுபவம் இல்லாதவர்களாய் இருந்தனர். தவிர சண்மூடித் தனமாய் கண்ட முயற்சிகளில் இறங்கி இருந

தனர்; இன்னும் சில பாங்கிகளோ பார்ப்பதற்கு மட்டும் ஆடம்பரமாய்க் காணப்பட்டும், அவைகளில் வசூலான மூலதனம் மிகவும் அற்பமாயிருந்தது. மேலும் தகுந்த ஈடில்லாமல் பணத்தைக் கடன் கொடுத்துவிட்டன. அன்றியும், தாங்கள் கொடுக்கவேண்டிய கடன் தொகைக்கு ஏற்ற அளவு சேம நிதியை வைத்துக் கொள்ளாமல் மிகவும் கொஞ்ச அளவுள்ள சேம நிதியை வைத்திருந்தன. இது நிற்க நெருக்கடியான காலத்திலே அவைகளுக்குத் தகுந்த அந்தஸ்திலுள்ள பாங்கிகளிலிருந்து பண வுதவி யில்லையென்றும், நல்ல ஸ்திதியிலுள்ள பாங்கிகளின் நிலைமையைப் பற்றி ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள் விஷயமறியாமல் குற்றங்கூறி வந்ததனல் பாதகமுண்டாயிற்றென்றும் காரணஞ் சொல்லப்படுகிறது. ஆகவே பல பாங்கிகள் முறிந்துபோயினமையால் ஏழை மனிதர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் சொல்லவொண்ணாத பெருங் கஷ்டம் உண்டாய்விட்டது. பாங்கிகளில் பங்கெடுத்துக் கொண்டுள்ளவர்களோ அவைகளின் பார்வையைக் கவனிக்கும்படி திறமையுள்ளவர்களை நியமிக்கவில்லையென்றும் தெரியலாயிற்று. சில பாங்கிகளில் மேற்பார்வையை மானேஜர் என்ற பதவி வகித்தவர்கள் கவனித்து வந்திருக்க, அந்த மானேஜர்கள் இன்னின்னபடி ஜாக்கிரதையாக நிர்வாகஞ் செய்ய வேண்டு மென்ற நிபந்தனைகள் ஏற்படவில்லை; தர்மத்துக்கு கட்டுப்பட்டுக் கவனித்ததாயும் தெரியவரவில்லை. ஆதலின் இதற்கு முன் பாங்கிகள் முறிந்துபோன காரணங்களை யெல்லாம் இனி பாங்கிகளை ஏற்படுத்துவோர் உணர்ந்துகொண்டு, உஷாராய் இருந்து முறிந்துபோன பாங்கிகள் செய்த தவறுகளை விலக்கி ஜாக்கிரதையாய் இருப்பார்களாக. இனி முன்னம் பாங்கிகள் முறிந்துபோனதால், இனிமேல் பாங்கிகள் ஏற்படுவது தடைப்படுமாயின், அது இந்தியாவுக்குப் பெருத்த துரதிருஷ்டமாகும். பாங்கிகளை ஜாக்கிரதையுடன் விசாலப்படுத்தி, லேவாதேவி முறைகளை நன்குணர்ந்து சரிவர நடத்தினல்தான், இந்தியாவானது பிற்காலத்தில் பணத்திலும் க்ஷேமத்திலும் விருத்தியடையலாம்.

### கவர்ன்மெண்டாரே பாங்கி வேலைகளை நடத்தல்.

இந்தியாவிலுள்ள கவர்ன்மெண்டாரே பெரிய பாங்கிகள் போலாவர். அது எப்படியென்றால், கவர்ன்மெண்டார் கையிருப்பாகப் பணம் வைத்திருப்பதோடு, செலாவணியையும் நடத்தி, தபாலாபீஸ் ஸேவிங்ஸ் பாங்கிகளில் ஜனங்களைப் பணம் போட்டு வைக்கும்படி செய்து, அதற்காக வட்டியுஞ் செலுத்தி வருகின்றனர். மகா யுத்தம் ஏற்பட்ட காலத்திலே தபாலாபீஸ் ஸேவிங்ஸ் பாங்கிகளில் ஜனங்கள் வட்டிக்குப்போட்டிருந்த பணத்தின் தொகை 24 கோடி ரூபாயாகும். இவ்வளவு தொகைக்கு ஈடாக கவர்ன்மெண்டார் பிரத்தியேகமான கையிருப்பு வைப்பதில்லை. விவசாயத்தை விருத்தி செய்வதற்கும், நிலம் ஆடு மாடு முதலியவைகளை வாங்குவதற்குமாக விவசாயிகளுக்கு கவர்ன்மெண்டார் கடன் கொடுத்துதவுகிறார்கள். பஞ்சமும் பணத்தட்டும் ஏற்படும் சமயத்தில் மேலேகண்டவாறு ஏராளமாய் கடன் கொடுக்கிறார்கள். இவ்விஷயத்தைச் சொல்லும்பொழுது கவர்ன்மெண்டாருடைய சார்பில் ஏற்பட்டுள்ள ஐக்கிய நாணயச் சங்கங்களைக் கவனிக்கவேண்டும்.

### ஐக்கிய நாணயச் சங்கங்கள்.

ஐக்கிய நாணயச் சங்கங்களின் சட்டமானது 1904-ம் வருஷத்தில் ஏற்பட்டது. அச்சட்டமோ 1912-ம் வருஷத்தில் திருத்தி அமைக்கப்பட்டது. அச்சங்கங்கள் சமீபத்தில் ஏற்பட்டனவாகையால் அவைகளின்

அபிவிருத்தியை ஜன சமூகத்தார் மிகுந்த சிரத்தையுடன் கவனித்து வருகின்றனர். நாளது வரையில் அச்சங்கங்களின் முயற்சிகளைக் கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்களே நடத்திவருகின்றனர். அவைகளினால் எவ்வளவு பலனுண்டென்பதை இதற்குள் அளவிட்டுச் சொல்ல முடியாது. ஆயினும் அம்முயற்சிகளை விஸ்தாரமாய் பிரபலமடையச் செய்வதில் பலனுண்டென்பதற்கு ஐயமில்லை. பல விஷயங்களில் அச்சங்கங்களை விருத்திசெய்து தகுந்த பலனடைவதானது ஜன சமூகத்தாரைப் பொறுத்திருக்கிறது. சென்ற 10 வருஷகாலத்திற்குள் கூட்டுறவு முயற்சியானது எவ்வளவு விருத்தியாயிருக்கிறதென்பதைப் பரிசீலனை செய்வதற்காக 1914-ம் வருஷத்திலே ஒரு கமிட்டியை நியமித்தனர். அம்முயற்சியின் கொள்கைகள் இனி எப்படியிருக்க வேண்டுமென்பதாக, கவர்ன்மெண்டார் முடிவான உத்தரவு இன்னுஞ்செய்யாவிடினும், அக்கமிட்டியார் வெளியிட்டிருக்கும் ரிபோர்ட்டானது வெகு நன்றாயும் சிரத்தையுடனும் எழுதப்பட்டிருக்கிறது. ஆதலின் கூட்டுறவு முயற்சியில் மனமார்ந்த சிரத்தையுடையோர் அந்த ரிபோர்ட்டை கவனமாய்ப் படித்துப் பார்க்க வேண்டும். ஆனால் அச்சங்கங்கள் இது வரையில் சேகரித்திருக்கும் மூலதனம் அவ்வளவு அதிகமாயில்லை. ஜனங்களுக்குள் செட்டான வாழ்வும் இருக்க வேண்டுமென்பதில் மிகுந்த கவனஞ் செலுத்தப்பட்டதென்பதற்கும் இடமில்லை.

### இந்திய லேவாதேவிக்காரர்கள்.

இந்திய லேவாதேவிக்காரர்கள் (அல்லது பாங்கர்கள்) இவர்களைப் பற்றிக் கவனிப்போம். இவர்களைப்பற்றி முக்கியமாய்க் கவனிக்கவேண்டும். நகரங்களிலே இந்திய லேவாதேவிக்காரர்கள் இருக்கின்றனர். இவர்கள் சிறிதளவு லேவாதேவி செய்து வருகின்றனர். இந்தியாவின் உள்நாட்டு வியாபாரத்திற்கு அநேகமாய் இவர்கள் பணவுதவி செய்துவருகின்றனர். ஆயினும் இவர்கள் ஐரோப்பியரின் வியாபாரப் பத்திரங்களை வாங்குவதில்லையென்று சொல்ல வேண்டும். கவர்ன்மெண்ட் பத்திரங்களின்மேலும், அதேமாதிரி இதர பத்திரங்களின் மேலும் இவர்கள் சில சமயங்களில் கடன் கொடுக்கின்றனர். என்றாலும் இவர்கள் விசேஷமாய் இந்திய வியாபாரிகளின் உண்டியல்களை ஏராளமாய் வாங்குவதோடு, விவசாயிகளுக்கும் மிகுந்த பணம் கடன் கொடுத்து வருகின்றனர். கிராமங்களிலே சாவுகாரர்களும் சுற்றுப்புறங்களிலுள்ள இதரர்களும்விவசாயிகளுக்கு கடன் கொடுத்து வருகிறார்கள். அற்பமான சாவுகாரர்கள் தங்களிடம் கடன் வாங்குபவர்களின் நிலைமையை நன்கு அறிவதோடு, ஆங்காங்குள்ள ஸ்தலங்களின் நிலைமையையும் நன்கு அறிகின்றனர். ஆகவே பெரிய பாங்கிகளைவிட இவர்களுக்கு ஆங்காங்குள்ள ஸ்தலங்களின் நிலைமை நன்கு தெரியவர, இவர்களுக்கு மிகுந்த சௌகர்யமுண்டு.

நோட்பாண்டுகள் எழுதிக் கொடுத்தும், நகைகளை அடமானம் வைத்தும் சொத்துக்களை ஈடு வைத்தும் கடன் வாங்கப்படுகிறது. சாவுகாரர்கள் இவ்வாறு செய்யும் லேவாதேவியோ அபரிமிதமாகும். ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள் ஏற்படு முன்னம் வெகுகாலமாய் இவர்கள் வழங்கிவருகின்றனர். கடும் வட்டிக்குக் கடன் கொடுப்பதாக இவர்களின்மீது தூஷணைகள் ஏற்படினும், வியாபாரங்களுக்கு இவர்கள் மிகுந்த உதவி செய்வதோடு, இந்தியாவிலே பாங்கிக்கும் தகுந்த ஒத்தாசை செய்பவர்களாய் இருக்கின்றனர். இப்பொழுதுள்ள நிலைமையின்படி, இந்தியாவிலுள்ள பாங்கிகளோ இந்தியாவிலுள்ள ஏராளமான வியாபாரிகளுடன் நெருங்கிப் பழகிக் கடன் கொடுக்க முடியுமென்று நம்புவதற்கு இடமேயில்லை. இந்தியாவிலுள்ள ஏராளமான

வியாபாரிகள் சிலருக்குமேல் பாங்கிகள் கடன் கொடுக்க முடியவில்லை. இந்திய வியாபாரிகளுக்கும் பாங்கிகளுக்கும் மத்திய புருஷனாய் சாவுகார் இருந்து உபயோகப்படுகிறார்கள். சாவுகாரர்களோ தங்களிடமிருக்கும் மூல தனத்தைக் கொண்டு வியாபாரிகளுக்குக் கடன் கொடுக்க முடியாது போயின், உடனே பாங்கிகளுக்குச் சென்று கடன் வாங்குகின்றனர். இந்த சாவுகாரர்களின் அந்தஸ்தையும் இவர்களிடமுள்ள கடன் பத்திரங்களையும் பாங்கிகள் கவனித்தறிந்து, அந்தப் பத்திரங்களின் மீது ஈடாக, மாகாண பாங்கிகளும் இதர பாங்கிகளும் கடன் கொடுக்கின்றன. வட இந்தியாவிலே உள்நாட்டு வியாபாரத்திற்கு முக்கியமாய் உதவி புரிந்து வருபவர்களோ மார்வாரிகள், முல்டானியர் முதலியோராவர். தென்னிந்தியாவிலோ குஜராத்தியர்களும் நாட்டுக் கோட்டை செட்டிமார்களும் உதவிபுரிந்து வருகிறார்கள். ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகள் ஏற்படுமுன்பு இந்திய லேவாதேவிக்காரர்கள் ஜனங்களிடமிருந்து வட்டிக்குக் கடன் பெற்றும் வந்தனர். ஆனால், சமீப வருஷங்களுக்குள் அவ்விதம் வட்டிக்கு வாங்கும் தொகை குறைந்து போய் விட்டது. இனி, சாவுகாரர்களின் உதவியைக் கிரமப்படி உபயோகமாகும்படி செய்தால், தேசத்திற்கும் விவசாயிகளுக்கும் பண விஷயத்தில் தகுந்த ஆதரவு கிடைக்க வழியுண்டாகும்.

**பாங்கி வட்டியின் விகிதம்.**

இங்கிலாந்திலே பாங்கிகளின் வட்டி விகிதம் இவ்வளவுதான் என்று பத்திரிகைகளில் அறிவிக்கப்படுகிறது. மூன்று மாத காலத்திற்குள் பணம் கிடைக்கக்கூடிய தகுந்த உண்டியல்களை "பாங்க் ஆப் இங்கிலாந்து" என்ற பாங்கி என்ன வட்டி விகிதம் கழித்து வாங்கத்தயாராயிருக்குமோ அவ்வட்டி விகிதம் "பாங்கி ரேட்" என்று சொல்லப்படுகிறது. ஆனால் பாங்கியிலே பற்று வரவு செய்பவர்களுக்கோ அந்த விகித வட்டிக்குச் சிறிது குறைவாகவே நடப்பு வட்டி விதிக்கப்படுகிறது. இது இப்படியிருக்க இந்தியாவிலோ ஒவ்வொரு மாகாண பாங்கியும் தனது வட்டி விகிதம் இவ்வளவுதான் என்று நிர்ணயித்து விடுகிறது. அவ் விகிதத்தினால், பாங்கியின் பலவிதமான லேவாதேவி வட்டிகள் நிதானிக்கப் படுகின்றன. கவர்ன்மெண்ட் பத்திரங்களின் மேல் மட்டும் பாங்கிகள் கொடுக்கும் கடனுடைய வட்டியானது அந்த விகிதப்படியே இருக்கும். இதர பத்திரங்களின் மேல் விதிக்கப்படும் வட்டியும், பில்களை வாங்குவதில் விதிக்கப்படும் வட்டியும், அந்த வட்டி விகிதத்தைவிடச் சிறிது அதிகமாகவே யிருக்கும். மேலே கண்டவாறு கொடுக்கப்படும் வட்டி விகிதமானது சர்க்கார் விகித வட்டியைவிட 100-க்கு அரைப் பங்கு முதல் 2-பங்கு வரையில் சாதாரணமாக அதிகமாயிருக்கும். ஆனால், பணப் புழக்கம் மந்தமாய் இருக்கும் பொழுது, சர்க்கார் விகிதத்துக்கு சரியாகவோ குறைவாகவோ இருக்கலாம். மூன்று மாகாண பாங்கிகளின் வட்டி விகிதமும் எப்பொழுதும் ஒரே மாதிரியாய் இருப்பதில்லை. ஆனால் 100-க்கு ஒன்றுக்கு மேல் வித்தியாசம் அவைகளுள் ஏற்படுவது அபூர்வமாக விருக்கும். வங்காளம், பம்பாய் ஆகிய இரண்டின் வட்டி விகிதமும் சென்னை மாகாண பாங்கியின் வட்டி விகிதத்தைப் போலில்லாமல், அநேகமாய் ஒன்றையொன்று அனுசரித்திருக்கும். பாங்கியின் டைரக்டர்கள் மீட்டிங் கூடி வட்டி விகிதம் இவ்வளவு என்று நிர்ணயஞ் செய்கின்றனர். பாங்கியின் பணங்களையும் வெளிப்பாடாகும் பணத்தையும் ஒட்டியே, பாங்கியின் வட்டி விகிதம் நிதானிக்கப்படும். கையிருப்பில் பணம் மிகவும் குறைந்துவிடுமாயின், வட்டி விகி

தத்தை டைரக்டர்கள் உயர்த்திவிடுகின்றனர். கடன்கொடுக்கும் தொகையை அதிகப் படுத்தும்படியான நிலைமை பாங்கிக்கு உண்டென்று தோன்றினால் உடனே வட்டி விகிதத்தை டைரக்டர்கள் குறைத்துவிடுகின்றனர். அதாவது, கையிருப்பில் பணம்கொஞ்சமாயின், வட்டி விகிதம் உயரும்; கையிருப்பில் அதிகப் பணம் இருப்பின், வட்டிவிகிதம் குறையும். இந்தியாவில் பாங்கியின் வட்டி விகிதம் உயர்வதனால், உடனே பாங்கிகளில் மிகுந்த பணம் வந்து சேருகிறதென்பதில்லை. வட்டி விகிதம் குறைவதனால், பணமானது வேறு இடங்களுக்குப் போய் விடுகிறதென்பது மில்லை. ஆனால் இங்கிலாந்தில் அப்படியிராது. இதர பாங்கிகளுக்கு கடன் தொகைக்கோ, பில்களை வாங்கும் தொகைக்கோ, வட்டி விகிதமானது அநேகமாய் மாகாண பாங்கியின் வட்டி விகிதத்தை யனுசரித்து நிர்ணயிக்கப்படுகிறது. ஆயினும் இந்தியாவிலே பாங்கிகள் குறிப்பிட்ட காலத்தில் திருப்பிக் கொடுத்துவிடுவதாக வாங்கும் கடனுக்குக்கொடுக்கும்வட்டியானது மாகாண பாங்கியின் நடப்பு வட்டி விகிதப்படி நிர்ணயிக்கப் படுவதில்லை.

மேலே காணப்படும் விவரங்களையெல்லாம் கவனித்தால், இந்திய ஜனசமூகத்தாரைப்பற்றிய மட்டில் இப்பொழுதுள்ள லேவாதேவி சாதனங்கள் பின் அம்சங்களில் குறைவாயிருக்கின்றனவென்பது நிதர்சனமாகும்.

### இந்தியர்களுக்கு உதவி.

1. (a) மாகாண பாங்கிகளும் எக்ஸ்சேஞ்சு பாங்கிகளும் அன்னிய தேசத்தாரின் வசமிருப்பதால், இந்தியருக்கான நடவடிக்கைகளுக்கு அவ்விரண்டினாலும் உதவி கிடைப்பதில்லை. ஆகவே, இந்தியரின் வசத்திலேயே அதிகமான பாங்கிகள் இருக்கவேண்டுமென்பது அதியவசியமாகும்.

### பங்குக்காரர்களின் மேற்பார்வை.

1. (b) பாங்கிகளின் தன்மையைப் பற்றியும், அவைகளின் மேற்பார்வையைப்பற்றியும் முன்பே சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களைக் கவனித்தால், பாங்கிகளின் மேற்பார்வையில் பங்குக்காரர்களுக்கு அதிகாரம்உண்டென்பது பேருக்குமாத்திரந்தான்என்பது நன்கு விளங்கும்; தவிர பாங்கிகளின் மேற்பார்வையில் பங்குக்காரர்கள் அவ்வளவு கவனஞ் செலுத்தாமல், உபேட்சையாய் இருந்துவிட்டதால் தான், சில வருஷங்களுக்கு முன்னே பாங்கிகள் முறிந்துபோக நேர்ந்ததென்பதும் தெளிவாகும்.

### கிளை ஆபீஸ்கள்.

(2) இங்கிலாந்திலே ஒவ்வொரு சிறிய நகரிலும் கிராமத்திலும் பாங்கிகளின் கிளை ஆபீஸ்கள் இருப்பதால் பிரிட்டிஷாரின் பண ஆதாயத்தில் அவர்கள் செட்டாய் இருக்கஇடமுண்டாகிறது. நகரத்தைவிட்டு வெகுதூரத்திற்குஅப்பால் இருப்பவர்களுக்கும், முக்கியமான வியாபாரஸ்தலங்களில் இருப்பவர்களைப் போல் முன் பணம் வேண்டுமானால் அவ்விதமே சாதகம் கிடைக்கிறது. 1913-ம் வருஷம் அக்டோபர் மாதம் 31-ந் தேதியில் கணக்கெடுத்தபடி, இங்லாந்திலே 6944 கிளை ஆபீஸ்களும், ஸ்காட்லண்டிலே 1256 ஆபீஸ்களும், அயர்லாந்தில் 861 ஆபீஸ்களும் உண்டு. ஆகவே, கிரேட் பிரிட்டனில் மொத்தத்திலே எல்லா பாங்கிகளுக்குமாக 9063 கிளை ஆபீஸ்கள் இருக்கின்றன. இம்மாதிரியே கானடாவிலும் ஆங்காங்கு பாங்கிகளுக்குக் கிளை ஆபீஸ்கள் இருக்கின்றன. கிளை ஆபீஸ்கள் இல்லாத பாங்கிகளே இல்லை. கானடாவில் சுமார் 3-ஆயிரம் கிளை ஆபீஸ்கள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதேமாதிரி பிரான்ஸ், ஜெர்மனி முதலான தேசங்களிலும் பாங்கிகளுக்கு ஆங்காங்கு கிளை ஆபீஸ்கள் இருப்பதால் மிகுந்த பிரயோஜனம்உண்டு. இதர தேசங்களிலே

பாங்கிகளுக்கு ஆங்காங்கு பல கிளை ஆபீஸ்கள் இருக்கும் பொழுது, இந்தியாவிலோ வெனில், மூன்று மாகாணபாங்கிகளுக்குமாக உள்ள கிளை ஆபீஸ்களின் தொகைசுமார் 60; எக்ஸ்சேஞ்சுபாங்கிகளுக்கோ சிறிது குறைய 50; இதரஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகளுக்கு 200 கிளைகளுக்குமேல்இல்லை; 3150 லட்சம் ஜனங்களுள்ள இந்தியாவில், 300 கிளை பாங்கிகளுக்கு மேல் இல்லை. 350 லட்சம் ஜனத்தொகையுள்ள இங்கிலாந்திலோ சுமார் 7 ஆயிரம் கிளை பாங்கிகள் இருக்கின்றன. இக்கணக்குகளை ஆராய்ந்து பார்த்தால், இந்தியாவிலே 10 லட்சம் ஜனங்களுக்கு ஒரு கிளை ஆபீஸ் வீதம் இருக்க, இங்கிலாந்திலோ 5 ஆயிரம் ஜனங்களுக்கு ஒரு கிளை ஆபீஸ் வீதம் இருக்கிறது. ஸ்காட்லாந்திலோ சில இடங்களில் 3 ஆயிரம் ஜனத்தொகையுள்ள இடங்களுக்கெல்லாம் ஒரு கிளை ஆபீஸ் வீதம் உண்டு. இவ்வாறு பணத்தை வட்டிக்குப் போடுபவர்களுக்கு வெகு சுலபமாக அவர்களுடைய அருகிலேயே பாங்கி இருக்கிறது. ஆனால் இந்தியாவிலே பணத்தை வட்டிக்குப் போடுபவர்கள் வெகு தூரம் பிரயாணஞ் செய்து பாங்கியிருக்கும் இடத்திற்குப் போகவேண்டும். இங்கிலாந்திலே பாங்கிகளால் நேரும் சௌகரியத்தைப் பார்த்தால், நாம் சுவாமியிடம் போக முடியாதாயின் சுவாமி நம்மிடம் வரவேண்டுமென்ற மொழிப்படி யிருக்கிறதென்று சொல்லவேண்டும். லண்டன் நகரில் மட்டும், சந்து பொந்து, மூலை முடுக்கு, முதலிய பல விடங்களிலும் ஆயிரம் கிளை ஆபீஸ்கள் இருக்கின்றன. சுருங்கச் சொல்லின், லண்டனிலே எங்கு பார்த்தாலும் கிளை ஆபீஸ்கள் இருக்கின்றன வென்று புலப்படும். இந்தியாவிலோ வென்றால், நகரங்களிலுள்ள பாங்கிகளெல்லாம் அங்கங்கே ஒரு தெருவில்மட்டும் உள. அப் பாங்கிகளோ தங்களிடம் பற்று வரவு செய்பவர்களின் சௌகரியம் இன்னதென்பதையும், சௌகரியமான இடங்களிலெல்லாம் கிளைகளை ஏற்படுத்தவேண்டுமென்பதையும் கவனித்ததாகக் காணப்படவில்லை.

விவசாயிகளின் தேவைகள்.

(3) நிலத்தையுடைய விவசாயிகளுக்கு முன் பணம் கொடுத்துதவுவதில் இருவகையுண்டு. அவ்விரு வகையும் என்ன வென்றால்:—

(a) விவசாயத்தை நடத்துவதற்கென்று கூலிகொடுப்பதற்கும், சாமான், விதை, எரு முதலிடன வாங்குவதற்கும் கையில் பணம் அதிகமாய் இருக்கும்படி செய்தல்.

(b) பாசனம், வடிகால் இவைகளை பொட்டி நிலங்களில் நிரந்தரமான விருத்தி செய்வதற்கான வேலை செய்வதற்கு ஏற்ற பணவுதவி செய்தல்.

விவசாய விஷயத்திலே பணம்கொடுத்துதவுவதற்காக ஐரோப்பாவிலும் இதர இடங்களிலும் சமீப வருஷங்களுக் குள்ளாக லேவாதேவிக் கம்பெனிகளின் தொகையும், அவைகளினாலுண்டாகும் சௌகரியமும், வெகுவாக அதிகரித்திருக்கின்றன. நிலங்களுக்கென்று கடன் கொடுப்பதற்கான சங்கங்கள் ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான் முதலிய தேசங்களின் பல பாகங்களிலும் ஏற்பட்டு நடந்து வருகின்றன.

இவ்விருவகையில் மேலேகண்டவாறு விவசாயிகளுக்குப் பணவுதவி செய்வதற்காக ஜெர்மனியிலே ஒவ்வொரு ஜில்லாவிலும் ஸ்தாபனங்கள் பலவருஷங்களாக இருந்து வருகின்றன. ஜனங்களிடம் சிக்கனத்தையும் சமூகவாழ்வையும் விருத்தி செய்வதில் மேலே கண்ட ஜில்லா ஸ்தாபனங்கள் மிகவும் அனுகூலமா யுள்ளன. அவைகளால் பூஸ்திதி யுடையவர்களின் பளுவு குறைந்திருக்கிறது; நிலங்களின் விலை உயர்ந்திருக்கிறது; நிலங்களில் சாசுவதமான அபிவிருத்தி ஏற்பாடுகள் உண்டாகி வருகின்றன. இவ்விதம் சௌ

கார்யங்கள் இருப்பதால் நாட்டுப்புறங்களிலுள்ள ஜனங்கள் நகரங்களுக்குச் சென்று அங்கே குடியேறவேண்டிய அவசியம் இல்லாமல் போகிறது. இப்படியெல்லாமிருக்க, இந்தியாவிலே விவசாயிகளின் கஷ்டத்தைப் போக்குவதற்கும், அவர்களுக்கு வேண்டிய பணவுதவி செய்வதற்கும், ஸ்தாபனங்கள் இல்லாதிருப்பது துரதிருஷ்டமாகும். இந்தியாவிலே ஜமீன்தாரும் ஏழை ஜனங்களும் சுலபமாய்க் குறைந்த வட்டிக்குப் பணம் பெறுவதற்கான ஏற்பாடுகள் இருக்க வேண்டியது அத்தியாவசியமேயாம். இதர தேசங்களிலே நிலங்களின் விஷயமாய்ப் பணங் கொடுப்பதற்கென்று பாங்கிகள் இருக்க, அவைகளால் விவசாயிகளுக்கு மிக்க அனுகூலம் கிடைத்திருக்கிறது. ஜமீன்தார்களுக்கும் விவசாயிகளுக்கும் பணங்கொடுத்துதவும்படி கவர்ன்மெண்டின் ஆதரவில் தனித் தனியே பாங்கிகள் ஏற்படவேண்டும். நிலச்சுவான்தார்களின் பாங்கி என்ற பாங்கிதான் ஜமீன்தார்களுக்கு ஏற்றது. விவசாயிகளுக்கோ கூட்டுறவுச் சங்கங்களைச் சரியானபடி விசாலமாய் ஏற்படுத்த வேண்டும். கூட்டுறவுச் சங்கங்களின் விஷயமாய் முழுமனதுடன் எவ்வளவு சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமோ அவ்வளவு சிரத்தை கவர்ன்மெண்டார் எடுத்துக் கொள்ளவில்லை. பல மாகாணங்களில் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பணம் கொடுத்து உதவி செய்வதற்காக மத்திய பாங்கிகள் சில உண்டாக்கப்படவேண்டும். அத்தகைய ஸ்தாபனங்களையோ, பாங்கிகளையோ இந்தியரே நடத்திவர வேண்டும். அவைகளுக்கு உண்மையில் கவர்ன்மெண்டார் வேற்றுமையின்றி ஆதரவளித்து வரவேண்டும்.

**செட்டாயிருப்பதற்கான ஸ்தாபனங்கள்.**

ஜனங்களுக்குள் செட்டான வாழ்வை உண்டுபண்ணுவதற்கான லேவாதேவி சாதனங்களே இல்லாதிருக்கும் பொழுது, பணத்தை தூங்கப் போட்டு வைப்பதாக இந்தியர்மீது குறைகூறப்படுகிறது. மிகவும் ஏழைகளாய் இருப்பவர்களும் மிச்சம் பிடித்துவைக்கும்படியான சாதனங்களாகிய பாங்கிகள் இதர தேசங்களில் உண்டு. செட்டையுண்டு பண்ணுவதற்காக ஸேவிங்ஸ் பாங்கிகள், அணா பாங்கிகள், கட்டுச் சங்கங்கள் ஆகிய பல ஸ்தாபனங்கள் இந்தியாவில் இருக்கவேண்டியது அத்தியாவசியமாகும். ஜனங்களிடம் சிறிதேனும் பணம் மிச்சமாகும்படி சாதனங்களை உண்டுபண்ணுவதற்காக இந்தியாவிலே கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பல கிளைகள் இருக்கவேண்டும்.

இத்தேசத்தின் வியாபாரத்தையும், விவசாயத்தையும் இன்னமாதிரி விருத்தி செய்யவேண்டுமென்பதற்கான யோசனைகளை இந்த வியாசத்தில் விரிவாய்ச் சொல்லாது போயினும், இப்பொழுதுள்ள சாதனங்கள் என்னென்னவென்பதையும் அவைகளை உடனே எம்மாதிரி விருத்தி செய்து விசாலிக்க வேண்டுமென்பதையும் குறிப்பாகச் சொல்லவேண்டுமென்பதே கருத்தாகும்.

---

# இந்தியாவின் நீர்ப்பாசன வசதிகள்.

[மிஸ்டர் ஸி. வி. கங்காதர சாஸ்திரிகள் எழுதியதின் மொழிபெயர்ப்பு.]

### நிலவளம்.

நாம் வசிக்கும் இந்திய நாடு 18,02,657 சதுர மைலுள்ளதாய், உன்னத மலைகளையும், அகண்ட ஆறுகளையும், பற்பல பூசாரங்களையும், நானாவித சீதோஷ்ண நிலைமையையுங் கொண்டது. இனிய கனிதரும் மரங்களும், நன்னீர் பொருந்திய கூபங்களும், சுகந்த மாருதம் வீசும் சைலங்களும், பச்சைப் பசேரென்ற வயல்களுமுள்ள இந்நாட்டின் சரித்திரத்தை ஆராயுங்கால் இத்தேச செல்வத்திற்கும் சிறப்புக்கும் வியவசாயமே அடிப்படை என்றும், ஜனங்களில் பெரும்பாலோரும் விவசாயத்தையே அனுஷ்டிக்கிறார்களென்றும், ஆதிகாலம் முதல் நீர்ப்பாசனாதி வியவசாய சாதனங்கள் ராஜ்ய துரந்தரர்களால் வெகுவாய் கவனிக்கப்பட்டு வந்திருக்கின்றன வென்றும் எளிதில் புலப்படும்.

### பாசனத்தின் புராதனம்.

நீர்ப்பாசனம் என்னும் பதத்திற்கு நிலங்களுக்கு நீரோட்டத்தின் உதவியைக்கொண்டு தண்ணீர் பாய்ச்சுதல் எனப் பொருளாகும். நிலங்களின் சத்தை விருத்திசெய்வதின் நிமித்தம் தண்ணீர் பாய்ச்சுவது என்பது ஆதிகால முதற்கொண்டே எல்லாரும் நன்கறிந்த விஷயம். இந்தியாவில் தற்சமயம் சாகுபடி நடந்து வரும் பல ஸ்தலங்கள் வானம் பார்த்த பூமி என்றும், மழையில்லையேல் திடலாகக் கிடக்கும் என்றும், நாம் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. இதை யுத்தேசித்து குளங்கள் வெட்டி, மழைத்தண்ணீரை அவைகளில் கட்டிக்கொள்வது வெகு காலமாக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. பூர்வீக இந்திய அரசர்களின் முக்கிய கடமைகளில் இதொன்றாயிருந்ததெனக் கூறப்பட்டிருக்கிறது. மொகலாய அரசர் காலத்திலும் வட இந்தியாவில் அநேக கால்வாய்கள் வெட்டப்பட்டன வென்றும், யமுனா நதியிலிருந்து டில்லிக்கு கால்வாய் மூலமாய் ஜலம் கொண்டு வரப்பட்டதென்றும் அறிகிறோம். இவைகள் ஆழமின்றி வெட்டப்பட்டபடியால், கவனமற்று காலக்கிரமத்தில் தூர்ந்து உருவழிந்தன.

### பிரிட்டிஷாரின் பொறுப்பு.

ஆகையால்; ஸிந்து நதி போன்ற பெரிய நதிகளின் நீர்ப் பெருக்கை மடை கட்டி, வாய்க்கால் வழியாகக் கொண்டுவந்து சாகுபடி செய்யும் அனுஷ்டானம், விசேஷமாய் ஆங்கிலேயர் காலத்திலேயே பெருக்கப்பட்டதென்று சொல்லவேண்டும். முதல் முதல் துரைத்தனத்தார் இவ்வாய்க்கால்களை வெட்ட கம்பெனிகளுக்கு வட்டி ஒப்பந்தம்பேசி, வெட்டிவந்தனர். ஆனால் இவைகளில்சில வட்டிக்கு கட்டிவராமையால், இதர வேலைகளை இவ்வாறு செய்ய சௌகரியப்படவில்லை. லார்டு லாரென்ஸ் இந்திய ராஜப் பிரதிநிதியாக இருந்தகாலத்தில், தேவையான பணம் கடன்வாங்கி செலவிட்டு, கவர்ன்மெண்டாரே இவ் வேலைகளைச் செய்யவேண்டு மென்று நிர்ணயிக்கப்பட்டது.

இவ்வாறு கவர்ன்மெண்டு தலைப்பட்டு நடத்தி வருவது ஆதிமுதல் ஏற்பட்ட ராஜகாரியமாயிருந்தாலும், தற்போது வழங்கி வரும் இணையற்ற கால்வாய் அணைக்கட்டுகளை, பிரிட்டிஷ் ஆட்சியின் முக்கிய சிறப்பெனக் கருதலாம். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இவ்வாறு ஏற்பட்டுசெய்தவேலையில், ஆதி

யில் வெகு கவலை எடுத்துக்கொண்டு அதிதீரத்துடன் வேலைசெய்தவர்களில் இருவரைக் குறிப்பிடவேண்டும். தென்னிந்தியாவில் ஸர். ஆர்தர் காட்டன் என்பவர் காவிரிப் பாசனத்தை சீர்திருத்தி கொள்ளிடத்தில் அணைக்கட்டு கட்டினார். கோதாவரி, கிருஷ்ணா நதிகளின் முகத் துவாரங்களில் ஏற்பட்டுள்ள அணைக்கட்டுகளும் இவரால் நிர்ணயிக்கப்பட்டனவாகும் இதே மாதிரி வட இந்தியாவில் ஸர். புரோபின் காட்லே என்பவர் ஹரித் துவாரத்திலிருந்து கங்கா ஜலத்தை கால்வாய் மூலமாய் மறித்து பாசனத்தை நிலைநாட்டினார். இவ்விருவர் ஆரம்பித்த வேலையை சிரத்தையுடன் பின்பற்றினவர்களும் கவனித்து வந்தார்கள். சென்னை மாகாணத்தில் பெரியாறு நீர்ப்பாசனக்கட்டு கர்னல் பெணிவிக் என்பவரால் 1896-97-ம் வருஷம் சுமார் ஒரு கோடியே ஆறு லட்சம் ரூபாய் செலவில் செய்து முடிக்கப்பட்டது. ஆனால் இப்படிச் செய்த வேலைகள் ஆதியில் முதலுக்கு தகுந்த ஈவு கொடுக்காமலிருந்தபடியால், லாபகரமான வேலையே முன்பாக நடத்தப்பட்டு, லாபம் தராத வேலைகள் எவ்வளவு அவசியமாக இருந்தாலும், அவைகளில் கவனக் குறைவு ஏற்பட ஆரம்பித்தது.

### நீர்ப்பாசன கமிஷன்

இவ் விஷயங்களை நன்கு கவனித்து நீர்ப்பாசன வேலைகளில் ஒரு நிதானமும் ஒழுங்கும் ஏற்படுத்துமாறு லார்டு கர்ஸன் ராஜப் பிரதிநிதியாக இருந்த சமயத்தில், 1902-ம் வருஷம் நீர்ப்பாசனக் கமிஷன் ஒன்று நியமிக்கப்பட்டது. அக்கமிஷன் நாட்டின் அமைப்பையும், சாகுபடியின் அவசியங்களையும் நன்கு ஆராய்ந்து, துரைத்தனத்தார் இன்னின்ன வேலைகளைச் செய்யவேண்டுமென்று ரிப்போர்ட்டு செய்ததின் பலனாக, சென்ற 10 வருஷத்திலே பஞ்சாப்மாகாணத்தில் அநேக கால்வாய்கள் வெட்டப்பட்டன தரிசாயிருந்த நிலங்கள் சாகுபடி செய்யப்பட்டன. சுமார் 11 லட்சம் ஜனங்கள் இந்தக் கால்வாய்கள் வந்த பிரதேசத்தில் புதிதாய் குடியேறி ஜீவித்துவருகிறார்கள். இதர மாகாணங்களிலும் அநேக பாசன வசதிகள் பரிசீலனை செய்யப்பட்டு, சில வேலைகள் துவக்கப்பட்டும், இன்னும் சில செலவு நிர்ணயிக்கப்பட்டும் வருகின்றன.

சென்னை மாகாணத்தில் இக்கமிஷன் குறிப்பிட்டது புதிதாய் மூன்று முக்கிய வசதிகளாகும். அவை துங்கபத்ரா, கிருஷ்ணா, காவிரி இம்மூன்று ஆறுகளின் ஜலத்தை அணையிட்டு பாசனத்துக்கு உபயோகிக்கும் ஏற்பாடுகள். இவற்றை கவனித்துப்பார்த்தபோது துங்கபத்ரா நதியின்ஜலத்தை உபயோகிப்பது அசாத்தியமென ஏற்பட்டது. காவிரி ஆற்று ஜலத்தை உபயோகிக்கும் யோசனையானது இந்தியா கவர்ன்மெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்ட போதிலும் மைசூர் சமஸ்தானத்தார் இந் நதியிலிருந்து கண்ணம்பாடியில் பெரிய ஓர் அணைக்கட்டு ஏற்படுத்தி வருவதாலும் இதுவிஷயமாய் சென்னை கவர்ன்மெண்டாருக்கும் மைசூர் தர்பாருக்கும் விவாதம் நடந்து வருகிறபடியாலும், இவ்விஷயம் சரிவர முடிவாகிற வரையில் மேற்படி வேலை துவக்கமாகும் எனக்கருதுகிறோம். கிருஷ்ணா நதியின் ஜலத்தை உபயோகிக்கும் ஏற்பாட்டை யொட்டி இன்னும் செலவு முதலானவைகள் நிர்ணயிக்கப்படவில்லை யென்பதாகவும், அது விஷயமாக அந்த இலாகா அதிகாரிகள் பிளானும் புள்ளியும் தயாரித்து வருவதாகவும் அறிகிறோம்.

### நீர்ப்பாசனப் பிரிவுகள்.

நாம் இதுவரையிலும் வாய்க்கால் பாசனத்தையும், பிரிட்டிஷ் அரசாட்சியில் இவை அடைந்த விசேஷ ஆதரவையும், விசால நோக்கத்தையும் குறிப்பிட்டோம். ஆனால், நீர்ப்பாசனம் என்பது கால்வாய்ப் பாசனம் மாத்திரமே

யல்ல. அற்பமான கிணற்றிலிருந்து கூடையைக் கொண்டு தண்ணீர் இறைத்து சாகுபடி செய்வதையும், பல சதுரமைல் விஸ்தீரணமுள்ள ஏரிகளிலிருந்து சில்லரைக் கால்வாய்கள் மூலமாய் ஜலம் பாய்ச்சுவதையும் நீர்ப்பாசனம் என்றே சொல்லவேண்டும். ஆகையால் நீர்ப்பாசனம் மூன்றுவகை எனக் கருதலாம். பெரிய கால்வாய் மூலமாகப் பாய்ச்சுவது மேலே குறிப்பிட்டிருக்கிறோம். குளங்களிலிருந்தும், கிணறுகளிலிருந்தும் நீர்பாய்ச்சுவதை ஒருவாறு புராதன முறை என்று சொல்லலாம். சாதாரணமாய் விவசாயிகள் தங்கள் தங்களுக்குத் தேவையானபடி, சொந்த முதல் கொண்டு, கிணறு வெட்டிக் கொள்ளுகிறார்கள்; சமயங்களில் கவர்ன்மெண்டாரும் அவர்களுக்கு இக்காரியத்திற்காக தக்காவி கடன் கொடுத்து, கிஸ்தியுடன் கொஞ்சம் கொஞ்சமாக அதை வசூலித்துக் கொள்ளுவதுமுண்டு. குளங்கள் சாதாரணமாய் மழை ஜலத் தேக்கமென்றே சொல்லலாம். சில இடங்களிலே ஆறுகளில் வெள்ளம்பெருகும்போது குளங்களில் ஜலம் கட்டிக் கொள்ளுவதுமுண்டு. இக்குளங்கள் விசேஷமாய் சென்னை ராஜதானியிலேயே, சுமார் 37 ஆயிரம் வரையில் இருக்கின்றன. அவைகள் ராஜதானியின் மராமத்துஇலாகா மேற்பார்வையில் இருந்து வருகின்றன. சில வருஷமாக நூதன முறைகளால், சிலசாகுபடி நிலங்களின் வரும்படியை விருத்தி செய்யவும், பெருத்த தாக்குகளை யந்திர உதவியால் நீர்ப்பாய்ச்சவும் ஆரம்பித்த பின்னர், கிணறுகளுக்கும் குளங்களுக்கும் மறுபடியும் விசேஷகவனம் ஏற்பட்டு வருகிறதென்று இந்த சந்தர்பத்தில் குறிப்பிடலாகும்.

### சென்னை ராஜதானியில் பாசன வேலைகள்.

சென்னை ராஜதானியில் ஏற்பட்டுள்ள பாசனவேலைகளின் காப்பு நிலைமையை நாம்இப்போதுகவனிப்போம். இவைகள் நான்கு வகுப்புகளாகப்பிரிக்கப்பட்டிருக்கின்றன; அதாவது (1) மேஜர் பாதுகாப்பு, வருமான வேலைகள் (2)வரவு செலவு கணக்குகள் ஏற்பட்டுள்ள மைனர்வேலைகள் (3) அக்கணக்குமில்லாத சில்லரை வேலைகள் (4) அல்ப விவசாயசாதனங்கள். முதல் வகுப்பிலே மேஜர்வேலைகளில், சாகுபடியாவதைக் காப்பதற்கே ஏற்பட்ட வசதிகள், நீர்ப்பாசனம் கொடுப்பதால் வருமானம் லாபமாகக் கிடைக்கும் வசதிகள் என்றும்இருவிதம் குறிப்பிட்டிருப்பதை நாம் கவனிக்கவேண்டும். இவ்வேலைகளுக்கு மேஜர் என்றுசொல்லுவதின் தாத்பர்யாவது, இந்திய கவர்ன்மெண்டாரால் பிரத்தியேகமூலதனத்துடன் கடன் வாங்கி செய்யப்பட்ட வேலைகளைக் குறிப்பிடுவதற்காகவே நாம் ஏற்கெனவே பாசன வேலைகளில் பல அவசியமாயிருந்தாலும் முதலுக்குத் தகுந்த ஈடு கொடுப்பதற்குத் தகுதியற்றிருக்கிறதென்று குறிப்பிட்டிருக்கிறோம். வேலை நஷ்டத்தைத் தந்தாலும் பொதுஜன நலத்தை உத்தேசித்து, செய்யவேண்டியது அவசியமாகிறது இப்படி ஏற்படும் வேலைகளுக்கு பாதுகாப்பு வேலைகளென்று சொல்லப்படுகிறது. சென்னை ராஜதானியிலே கஞ்சம் ஜில்லாவில் ஏற்பட்டுள்ள 'ரிஷி குல்ய' பாசனக்கட்டை இதற்கோர் உதாரணமாகச் சொல்லலாம். இந்த வேலைக்கு ரூபாய் 50,69,366 மூலதனமும் 28,00,656 ரூபாய் வட்டி நிலுவையும் ஆகக்கூடுதல் 7869912 ரூபாய் ஆகிறது. நிர்வாகச் செலவு போக வருஷாந்தர வருமானம் 124096 ரூபாய் தான். இன்னும் சில பாதுகாப்பு வேலைகள் புள்ளியிடப்பட்டிருக்கின்றன; ஆனால் வேலை இன்னும் துவக்கப்படவில்லை.

### மேஜர் வருமான வேலைகள்.

சென்னை ராஜதானியில், இதைத் தவிரபாக்கி ஏற்பட்டுள்ள மூன்று பாச

ணக் கட்டுகளையும் வருமானக் கட்டுகளென்றே சொல்லவேண்டும். அவைகளின் ஆதாயமும் செலவும் கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன:—

| அணைக்கட்டுகள் | மொத்த முதல். | மொத்த வருமானம் | செலவு போக பாக்கி வருமானம். | ஏற்பட்ட முதலுக்கு வட்டி. |
|---|---|---|---|---|
| காவேரி அரங்கம் | ரூ. 4132355 | ரூ. 1030027 | ரூ. 832881 | 20. 15 |
| கோதாவரி அரங்கம் | 14615472 | 4086443 | 3031792 | 20. 74 |
| கிருஷ்ணா அரங்கம் | 16 080383 | 3770366 | 2838523 | 17. 65 |

இம்மாதிரியான வேலைகளில் ஏற்பட்ட வருமானத்தையும், நன்மையையும் கருதி இந்தியப் பிரமுகர்களில் சிலர், கவர்ன்மெண்டார் ரயில்வே விருத்தியில் செலவிடும் ஏராளமான பணத்தை பாசனக்கட்டுகளில் செலவிடுவது, தேச முன்னேற்றத்துக்கு விசேஷமென்று சொல்லுகிறார்கள். ஏனெனில் நீர்ப்பாசன வேலைகள் தேசத்தின் விவசாயத்தை விருத்தி செய்து செல்வத்தை இந்தியர்களுக்கு விசேஷமாய் அடையும்படி செய்கிறது. ரயில்வேக்களோ பல நாடுகளுடன் போக்கு வரத்து சௌகர்யாதிகளை ஏற்படுத்தி சரக்கின் விலையையும் உணவுப் பொருள்களின் சேர்க்கையையும், உலகப் போட்டிக்குக் கீழ்ப்படுத்தி விடுகிறதென்று சொல்லப்படுகிறது. கக்ஷிப் பிரதி கக்ஷியாக பிரவேசிக்காமல் இருவகைச் செலவிலும் உள்ள நன்மைகளை நாம் கவனிக்க வேண்டும்.

### மைனர் வேலைகள்.

சென்னை மாகாண பாசனவேலைகளில் இரண்டாவது வகுப்பிலிருப்பவை வரவு செலவு கணக்கேற்பட்ட மைனர் வேலைகளென்று கண்டிருக்கிறோம். மைனர் வேலைகள் என்றால் பிரத்தியேகமாய் கவர்ன்மெண்டார் கடன் வாங்கி செய்யப்படும் வேலைகளல்லவென்பதும் வருமானத்திலிருந்து சௌகரியத்திற்குத் தக்கபடி செய்யப்படுவன வென்பனவாம். ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறபடி இவைகள் கணக்குள்ளவைகளும், கணக்கில்லாதவைகளுமாக, விசேஷமாய் சென்னை மாகாணத்திலேயே யிருக்கின்றன. இவைகளின் உதவியினால் வருஷந்தோறும் சுமார் 33-லக்ஷம் ஏக்ரா பூமிகள் பயிரிடப்படுகின்றன.

### பாசன விவரங்கள்.

இக்குளங்களிலிருந்தும் கால்வாய்களிலிருந்தும், குடிகளுக்கு அவரவர்களுக்கு தக்கபடியும் தேவையானபடியும் நீர்ப்பாய்ச்சுவதில் அநேக விவாதங்கள் உண்டாகின்றன. கவர்ன்மெண்டாரின் பாதுகாப்பில் இவை யாவும் இருக்கின்றமையால் கூடிய வரையில் தகராறுக்கு இடமில்லாமல், வேலையைச் செய்ய சிப்பந்திகளுக்கு எத்தனையோ விதிகளும் நிபந்தனைகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆனால், குறையும் கூக்குரலும் இன்னும் தீர்ந்தபாடில்லை. இவ் வேலையைச் சரிவர மேற்பார்வை செய்துவர, உத்தியோகஸ்தரல்லாத தகுந்த கிராமத்தாரை பஞ்சாயத்துகளாகக் கூட்டி பொறுப்புக் கட்டி விட்டால், தகராறு இல்லாமல் போய்விடுமென்று ஜனத்தலைவர்கள் சொல்லுகிறார்கள். நெல்லூர் ஜில்லா

வில் இம்மாதிரியாக நீர்ப்பாசன பஞ்சாயத்துகள் சமீபத்தில் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. அவற்றின் குணகுணங்களை இதற்குள் நிர்ணயிப்பது அசாத்தியமாயினும், அவைகளால் சௌகர்யங்கள் உண்டென்று சொல்லப்படுவதைக் குறிப்பிடலாகும்.

### பாசன வேலைகளுக்கு எல்லை.

விவசாய வேலையிலும் பாசன விருத்தியிலும் கவலையுள்ளவர்களில் பலர்; சென்ற 10 வருஷமாக நடந்து வந்த பாசன வேலைகளைக் கவனித்து இம்மாதிரியான வேலை இன்னும் எவ்வளவு செய்யக்கூடும் என்றும், கையில் இருக்கும் வேலைகளெல்லாம் முடிந்த பின்னர் இன்னும் அதிக வேலைகளை புதிதாய் செய்ய ஸாதனங்கள் போதவில்லையே என்றும் சஞ்சலிக்கின்றார்கள். தற்சமயம் வேலைதுவக்கியும் வேலை துவக்க உத்தரவாகியும் இருக்கின்ற பாசனக்கட்டுகளின் செலவு தொகை சுமார் $46\frac{1}{2}$-கோடி மதிப்புற்றதென்பதை நாம் முதலில் குறிப்பிடுவோம். தவிர ஜனங்களின் செல்வமும், நிலங்களின் வெள்ளாமையும், பல நாடுகளுடன் வியாபாரமும், பெருகப் பெருக 10 வருஷத்திற்கு முந்தி அசாத்தியமென்று மதிக்கப் பட்ட பாசனக் கட்டுகள் இப்போது சாத்தியமாகுமென்பதை மறுக்கமுடியுமோ? இந்தியாவில் தரிசு நிலம் இருக்கிற வரையில் பாசன வேலைகளுக்கு வகையுண்டு என்றே சொல்லவேண்டும். சாகுபடி முறையிலும், அநேக மாறுதல்கள் உண்டாகி வருகின்றன. நூதனப்பயிர்களும் தோன்றிவருகின்றன. இன்னும் பல மாறுதல்கள் ஏற்படலாமென்றும் எதிர்பார்க்கப்படுகின்றது. ஆகையால் இவையனைத்தையும் உத்தேசித்து நீர்ப்பாசன வேலைகளுக்கு எல்லை விதிப்பது சாத்தியமாகுமா ?

# இந்தியாவில் கல்வி அபிவிருத்தி.

[மிஸ்டர் கா். ஆ. வீரராகவாச்சாரியார் எழுதியதின் மொழிபெயர்ப்பு.]

நமது தேசத்தில் பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் வருமுன், புராதனமாயிருந்த தேச ராஜாக்களும், அவர்களுக்குப் பின்பு இந்நாட்டைப் பல பிரிவாகக் கைப்பற்றிய மகம்மதிய மன்னர்களும் தங்கள் தங்கள் கொள்கைகளுக்கேற்றபடி கல்வியின் சிறப்பையும், ஞானத்தின் நுட்பத்தையும் மிகப் பாராட்டினர் என்பதற்கு ஐயமே இல்லை. ஆதலின் அவைகள் வளரு நிமித்தம் சபைகளிலும், தர்பார்களிலும், இன்னும் இதர வழிகளிலும், பண்டிதர்களுக்கும், மௌல்விகளுக்கும், பாடசாலைகளுக்கும், மதராஸாக்களுக்கும், பரிசளித்துப் பணவுதவி செய்துவந்தனரென்பது சரித்திர மறிந்த யாருக்கும் தெரியும். ஆனால் சாதாரணமாய் நாட்டிலிருக்கும் பண்டிதர் பாமரர் முதலிய எவரும் எழுதப்படிக்கத் தெரிந்து கொள்வது ராஜ்பத்தின் க்ஷேமத்திற்கு முதன்மையான ஹேதுவாகு மென்பதையாவது, அல்லது 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்ற ஔவையார் வசனத்திற்கிணங்க ஒவ்வொரு ஜனங்களின் ஞானக்கண்களை திறந்து வைப்பது ராஜாங்கத்தாரின் கடைமையென்பதையாவது உணர்ந்து அவர்கள் கல்வியின் விருத்தியைக் கருதினார்கள் என்று சொல்வதற்கில்லை. பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் இந்தியாவில் ஸ்திரமானராஜ்ய நிர்வாகம் ஏற்படுத்தி 19-வது நூற்றூண்டின் மத்தியில் இந்தியர்களின் கல்வியபிவிருத்தியைப் பற்றி ஆரம்பத்தில் கவனித்த பொழுதும், இவ்விரு அம்சங்களையும் குறிப்பாய் கவனித்தவர்களல்ல. ஆங்கில அரசாங்கத்தார் இந்தியருக்கு இன்னகல்வியைத் தான் போதிக்க வேண்டுமென்ற விஷயத்தை அப்பொழுது தீர்மானிக்கவில்லை. இத்தேசப் பூர்வீகக் கல்வியையே போதிக்கிறதா, அல்லது பிற்காலங்களில்ஏற்பட்டிருந்த நாகரீக வாழ்வுக்குத் தகுதியாக இந்தியரைச் செய்யவும், மேனாட்டாருடைய லட்சியங்களை அவர்கள் கொள்ளும்படியாக செய்யவும், மேனாட்டுக் கல்வியை அவர்களுக்கு போதிக்கிறதா என்ற சந்தேகமானது லார்டு மெக்காலே 1835-ம் வருஷத்தில் இத்தேசக் கல்வியைத்தூஷித்துஎழுதும்வரையில் இருந்துகொண்டே இருந்தது. ஆனால் மேனாட்டுக் கல்வியையே போதிக்க வேண்டியது அவசியமென்ற எண்ணம் அதற்கு முன்னமே உண்டாயிருந்தது. தவிர மேனாட்டாருடைய கல்வியைத் தாங்களும் கற்றுக்கொள்ள வேண்டுமென்று பலஜாதி ஜனங்களுக்குண்டாயிருந்த ஆசையை நிறைவேற்றி வைக்கவும், தேசத்தின் ஆளுகையை நடத்தும் விஷயத்தில் கவர்ன்மெண்டுக்கு உபயோகமாக விருக்கும்படி இந்தியர் பலரைத் தயார்செய்யவுமே முக்கியமாக மேனாட்டுக் கல்வியை போதிக்க வேண்டிய அவசிய மேற்பட்டிருந்தது. ஆகையால், இந்தியருக்குக் கல்வியை போதிக்க ஆங்கில ஆட்சியின் ஆரம்ப காலத்தில் என்ன செய்யப்பட்டதென்றும், லார்டு மெக்காலே காலத்தில் அதற்குளப்படி அஸ்திவாரம் போடப்பட்டதென்றும், அது எப்படி வளர்ச்சி பெற்றதென்றும், இப்பொழுது என்ன நிலைமையில் இருக்கிறதென்றும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

### ஆரம்பப் பிராயத்தனம்.

இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாயிருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் 1781-ம் வருஷத்தில் கல்கத்தாவில் ஒரு மதராஸா கட்டுவதற்கு அஸ்திவா

ரக்கல் நட்டார்; 1791-ம் வருஷத்தில் ஸ்ரீகாசியில் ஒரு ஸம்ஸ்கிருத காலேஜ் கட்ட ஜொனதன் டங்கன் அஸ்திவாரக்கல் நட்டார். கல்வி அபிவிருத்தியில் அரசாங்கத்தார் சிரத்தை உள்ளவர்களாயிருந்தார்கள் என்பதை இவ்விரண்டு விஷயங்களும் குறிப்பிக்கின்றன. ஆனால் சம்ஸ்கிருத பாஷைப்படிப்பிலும் அரபி பாஷைப் படிப்பிலுமே அக்காலத்தில் அதிகாரிகள் சிரத்தை காட்டி வந்தார்கள். இந்தியா விஷயமாக பிரிட்டிஷ் பார்லிமெண்டில் 1813 வருஷத்தில் செய்யப்பட்ட முக்கியமான ஒரு சட்டத்தின்படி, கல்வி அபிவிருத்திக்காக வருஷாவருஷம் ஒரு லட்ச ரூபாய் செலவிடும்படி ஓர் ஏற்பாடு செய்யப்பட்டதாயினும்; ஸம்ஸ்கிருதத்தையும் அரபியையும் விருத்தி செய்யவே அந்த ஏற்பாடு செய்யப்பட்டதாகவே கருதி வந்தார்கள். ஆங்கிலக் கல்வியை போதிக்கிறதற்காக அந்தப் பணத்தில் ஒரு பாகத்தை செலவிடக் கூடாதா என்று 1835-ம் வருஷத்தில் கவர்னர் ஜெனரலுடைய ஆலோசனை சபையில் முதல் முதல் வாதம் செய்யப்பட்டது. அவ்வாறு அந்த சபை யோசனை செய்ததற்கு முன்னமேயே ஆங்கிலக் கல்வியைப் பரவச் செய்வதற்கான வேறு சாதனங்கள் ஏற்பட்டு வந்தன. மேனாட்டு பாஷைகளையும் சாஸ்திரங்களையும் இத்தேசபாஷைகளையும் சாஸ்திரங்களையும் ஜனங்களுக்குக் கற்பிக்கும்பொருட்டு, 1817-ம் வருஷத்தில் கல்கத்தாநகரில் ஹிந்துகாலேஜ் ஒன்று ஸ்தாபனமாயிற்று. காலேஜ் ஏற்படுவதற்கு முக்கியஸ்தராயிருந்தவர் பிரம்மஸமாஜ ஸ்தாபகராகிய ராஜாராம் மோகனராய் என்பவரே. அரசாங்கத்தாருக்கு இஷ்டமிருந்தாலும் இல்லாவிடினும், அவர்களால் அடக்க முடியாத ஓர் ஊக்கம் தேசத்தில் உண்டாய்விட்டதென்பதை காலேஜ் ஸ்தாபனமான விஷயம் தெரிவிக்கிறது. இதே மாதிரி ஊக்கம் பம்பாய் மாகாணத்திலும் தோன்ற ஆரம்பித்தது.

## பம்பாய் கவர்னர் எல்பின்ஸ்டனின் அபிப்பிராயம்.

இந்தியாவில் எவ்விதக்கல்வி போதிக்கப்படவேண்டுமென்ற விஷயத்தைப் பற்றி 1824-ம் வருஷத்தில் பம்பாய் கவர்னராயிருந்த மௌண்டுஸ்டுவர்ட் எல்பின்ஸ்டன் தம்முடைய அபிப்பிராயங்களை எழுதி வெளியிட்டார். மேனாட்டு பாஷாஞானமும் சாஸ்திர அறிவும் இந்தியர்களுக்கு உண்டாகுமாறு கல்வி கற்பிக்க வேண்டியது முக்கியமென அவர் கருதினாராயினும்; ஹிந்துக்களுடைய முறையை அடியோடு நீக்கிவிட அவர் சம்மதிக்கவில்லை. ஒரு ஜாதியின் அறிவை விசாலப்படுத்த உத்தேசித்து, ஆரம்பத்தில் அந்த ஜாதியின் சுய பாஷையைத் தொலைத்து விடுவதானது வெகு விபரீதமான யோசனையென்று அவர் எழுதினார். அவர்களுடைய சொந்தக் கல்வியுடன் மேனாட்டுக் கல்வியையும் புகட்டினால், அவர்களுடைய யோக்கியதை அதிகரிக்குமென்பதே தமது திடசித்தம் என்றும் அவர் வற்புறுத்தினார். எல்பின்ஸ்டன் பெயரால் பம்பாய் காலேஜில் இரண்டு போதக ஸ்தானங்களை ஏற்படுத்த பம்பாய் வாஸிகள் 1827ம் வருஷத்தில் கூட்டங் கூடி யோசித்ததிலிருந்து அவர் கல்வி அபிவிருத்தியில் காட்டிவந்த சிரத்தையை ஜனங்கள் மிகவும் மதித்தார்களென்பது நன்கு விளங்குகிறது.

## வளர்ச்சியும் அமைப்பும்.

இப்படியிருந்துவரும் நாளில் 1835ம் வருஷத்தில் லார்ட் மெக்காலே தம்முடைய அபிப்பிராயத்தை வெளியிட்டார். இத்தேச பாஷைகளில் காவியங்களும், சாஸ்திரமும், சரித்திரமும் இல்லையென்றும், அவைகளைக் கற்பிப்பதில் சிறிதேனும் லாபகரமில்லையென்றும், ஆங்கில பாஷையையும் ஐரோப்பிய சாஸ்திரங்களையுமே கற்பிக்க வேண்டிய தவசியமேயென்றும் அவர் வெகு ஆவேசத்துடன் வற்புறுத்தி

னதன் பலனாக, ஐரோப்பிய பாஷைகளையும் சாஸ்திரங்களையும் கற்பிக்க வேண்டியதே ஆங்கில அரசாங்கத்தாரின் கருத்தாயிருக்கவேண்டுமென்றும், கல்வியின் பொருட்டு செலவிடப்படும் தொகை அனைத்தையும் அந்த நோக்கத்தை நிறைவேற்றும் விஷயத்தில் செலவு செய்து விடலாமென்றும் இந்தியா கவர்ன்மெண்டார் தீர்மானித்தார்கள்.

## யூனிவர்ஸிடிகள்.

கல்விசபையில் லார்டு டெக்காலே ஒருவராகச் சேர்க்கப்பட்டதிலிருந்தே கல்வி அபிவிருத்திக்கு ஓர் ஊக்கம் உண்டாயிற்று. அவர் அந்த சபையைச்சேர்ந்தபொழுது, அதன் விசாரணைக்குட்பட்டு 12 பள்ளிக்கூடங்கள்தான் இருந்தன. அவர் சேர்ந்து கொஞ்சகாலம் ஆவதற்குள் மூன்றத்தனை பள்ளிக்கூடங்கள் உண்டாய்விட்டன. ஆங்கில பாஷையையும் தேசபாஷையையும் கற்பிக்கும் பள்ளிக்கூடங்களாகவும் காலேஜ்களாகவுமே அவைகள் இருந்தன. இவ்வாறு வங்காளத்தில் அதிகமாகவும் மற்ற மாகாணங்களில் குறைவாகவும் கல்வி அபிவிருத்தி அடைந்து, 1852-ம் வருஷத்தில் 25 ஆயிரம் பையன்களுக்கு அதிகமாக பள்ளிக்கூடங்களில் படித்து வந்தார்கள். ஆனால் புதுமாதிரிப் பள்ளிக்கூடங்களில் படித்தவர்களுக்கே முதலில் ஸர்க்கார் உத்தியோகங்களைக் கொடுக்க வேண்டுமென்று 1844-ம் வருஷத்தில் இந்தியா கவர்ன்மெண்டார் ஒரு தீர்மானம் செய்ததானது வயிற்றுப்பிழைப்பே கல்வி கற்பதன் நோக்கமென்று சொல்லிக் கொடுத்ததுபோலிருக்கிறது. இவ்வாறுநடக்கும்நாளில் 1854-ம் வருஷத்திற்குள் பள்ளிக்கூடங்களின் தொகை அதிகரித்த போதிலும் படித்தவர்கள் மூலமாக மற்றவர்களுக்கு கல்வியில் ஊக்கமும் ஆவலும் ஜனிக்கவில்லையென்று தெரிந்தது. 1854-ம் வருஷத்தில் ஸர் சார்லஸ் வுட் தம்முடைய அபிப்பிராயங்களை எழுதி வெளியிட்டதன் பலனாக மாகாணந்தோறும் கல்வி இலாகா ஒன்று ஏற்பட்டது. கல்கத்தாவிலும், பம்பாயிலும், சென்னையிலும் யூனிவர்ஸிடிகளை ஏற்படுத்தும்படி சட்டம் செய்யப்பட்டதற்கும் ஸர் சார்லஸ் வுட் எழுதிய கடிதமே காரணம்.

## பள்ளிக்கூடங்களுக்குப் பண உதவி.

அவர் எழுதிய கடிதத்தின்மேல் செய்யப்பட்ட உத்தரவுகளின் பலனாக இப்பொழுதிருக்கிறது போன்ற ஒரு முறை உண்டாயிற்று. கல்வி போதிப்பதை கவர்ன்மெண்டார் தங்களுடைய வேலையாக மேற்போட்டுக் கொண்டு யூனிவர்ஸிடிகளையும் காலேஜ்களையும் நடத்தா பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்தினார்கள். பாமர ஜனங்களுக்கு ஆரம்பப் படிப்பை கற்பிக்க முயற்சிசெய்யப்பட்டது; அதன் பொருட்டு பிறர் நடத்தும் பள்ளிக்கூடங்களுக்குப் பொருளுதவி செய்யவும், அவைகள் சரிவர நடக்கின்றனவா என்று சோதனை செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டது. கவர்ன்மெண்டாரே நேரில் பள்ளிக்கூடங்களை நடத்துவதற்குப் பதிலாக ஆங்காங்குள்ளவர்களே பள்ளிக்கூடங்களை நடத்தும்படி செய்து, அவைகளை மேல் விசாரணை செய்து கொண்டு பணம் கொடுத்துதவ வேண்டுமென்பது கவர்ன்மெண்டின் கொள்கையாக ஏற்பட்டது. 1882-ம் வருஷத்தில் கல்வி விஷயமாக தக்க விசாரணை செய்து கவர்ன்மெண்டுக்கு தகுந்த சிபார்சுகளை அறிவிக்கும்படி நியமிக்கப்பட்ட கமிஷனானது ஆரம்பப்படிப்பு பரவவேண்டிய அவசியத்தை வெகுவாகவே வற்புறுத்தி, ஸ்தல ஸ்தாபனங்கள் கல்வியின் பொருட்டு செலவிடும் தொகையானது ஆரம்பப் படிப்பின்பொருட்டே செலவிடப்படவேண்டுமென்றும், மாகாண கவர்ன்மெண்டார் கல்வியின் பொருட்டு

செலவிடும் தொகையில் பெரும் பாகம் ஆரம்பப்படிப்பின்பொருட்டு செலவிட வேண்டுமென்றும் வற்புறுத்தியது.

### விசேஷ அபிவிருத்தி.

1882-ம் வருஷமுதல் 1900-ம் வருஷம் வரையிலுள்ள காலத்தில் தான் கல்வி அபிவிருத்தி அதிகமாய் ஏற்பட்டது. கல்வியை நாடெங்கும் பரவச் செய்ய அக்காலத்தில் அதிகப் பிரயத்தனம் செய்யப்பட்டதாயினும், அதனுடைய யோக்கியதை கவனிக்கப்படவில்லை யென்று நாளடைவில் அதிகாரிகளுக்குள் ஓர் அபிப்பிராயம் தோன்றியிருந்ததால், ஸர் சார்லஸ் வுட்டும், 1882-ம் வருஷக் கமிஷனும் செய்த சிபார்சுகளில் சந்தேகம்தோன்ற ஆரம்பித்தது. அதை அனுசரித்து 1901-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் ராஜப்பிரதிநிதியா யிருந்த லார்டு கர்ஸன் ஒரு கான்பரென்ஸை ஸிம்லாவில் கூட்டினார். 1902-ம் வருஷத்தில் இந்தியாவிலுள்ள யூனிவர்ஸிடிகளைப்பற்றி விசாரித்து அறிவிக்கும்படி ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டது ; அந்தக் கமிஷனுடைய ரிபோர்ட்டின்பலனாக யூனிவர்ஸிடிகளைப்பற்றிய சட்டத்தைத் திருத்துவதற்காக 1904-ம் வருஷத்தில் ராஜப்பிரதிநிதியின் சட்ட சபையில் ஒரு சட்டம் செய்யப்பட்டது.

### யூனிவர்ஸிடி சட்டம்

உயர்தரப் படிப்பை கவர்ன்மெண்டார் மேற்பார்வை செய்யாமல் ஓரளவு ஒதுங்கிக் கொள்வதுடன், பிறர் நடத்தும் பள்ளிக்கூடங்கள் குறைவாக சம்பளம் வசூல்செய்து கொள்ள சம்மதிக்கவேண்டுமென்று 1882-ம் வருஷக் கமிஷன் சிபார்சு செய்ததனால் கல்வியின் யோக்கியதை நாளடைவில் குறைந்து போய்விட்டதென்பது சிலருடைய அபிப்பிராயமாயிருந்தது. யூனிவர்ஸிடி சபையின் அமைப்பிலிருந்த பிசகு காரணமாக யூனிவர்ஸிடிகளின் நிர்வாகமே கெட்டுப் போயிருந்ததாகவும் சிலர் நினைத்தனர். கல்வியில் ஒரு சம்பந்தமுமில்லாதவர்கள் ஸெனேட் சபையில் ஸ்தானம் பெற்றிருந்ததாலும், அச்சபை மெம்பர்கள் அதிகமாக விருந்ததாலும், கல்வி அபிவிருத்தி தடைப்பட்டதாக அவர்கள் நினைத்தார்கள். ஆகையால் புதுச் சட்டத்தினால் ஸெனேட் சபையில் மெம்பர்களின் தொகை குறைந்துவிட்டதுடன், காலேஜ் தலைவர்களும் போதகர்களுமே அதில் அதிகமாக ஸ்தானம் பெற்றிருக்கிறார்கள். காலேஜ்களிலும் பள்ளிக்கூடங்களிலும் படிக்கும் மாணவர்களைப் பரிட்சை செய்து யோக்கியதா பத்திரங் கொடுக்கும் வேலையை மாத்திரம் செய்து வந்த யூனிவர்ஸிடிகள் இப்பொழுது தாங்களே பிரசங்கங்களைச் செய்விக்க அதிகாரம் பெற்றிருக்கின்றன. ஆயினும் இந்த வேலையானது உபாயமாகவே இப்பொழுது நடந்து வருகிறதல்லாமல், பெரும்போக்காய் நடக்கவில்லை. ஸர்க்கார் உத்தியோகத்தில் அமரவும் காலேஜில் சேரவும் யோக்கியதை கொடுத்து வந்த மெட்ரிகுலேஷன் பரிட்சை ஸ்தானத்தில் ஸ்கூல் பைனல் என்றபுதுப்பரிட்சைஏற்பட்டதற்கும் 1902-ம் வருஷக் கமிஷனுடைய சிபார்சே காரணமாகும்.

### 1913-ம் வருஷத்திய உத்தேசங்கள்.

கல்வியானது நாடெங்கும் பரவுமுன், பரவின வரையில் அது நல்லதாயிருக்க வேண்டுமென்பது லார்டு கர்ஸனுடைய உத்தேசமென்று சொல்லப்படுகிறது. யூனிவர்ஸிடி சபைகளின் அமைப்பு திருத்தப்பட்டு அச் சபைகள் இப்பொழுது தக்கவர்களின் கூட்டமாயிருப்பதும், நடுத்தரப் பள்ளிக்கூடங்கள் சீர்திருத்தப்பட்டிருப்பதும், உபாத்தியாயர்களைப் பயிற்சி செய்விக்கும் விஷயமாக கவனம் செலுத்தப்பட்டு வருவதும், ஆரம்பப் படிப்புப் பள்ளிக்கூடங்களின் கட்டடங்கள் சீர்திருத்தப்பட்டு உபாத்தியாயர்களின் சம்பளங்கள் அதிகமாக்கப்பட்

டிருப்பதும், பாடங்கள் சீர்திருத்தப் பட்டிருப்பதும் லார்டு கர்ஸன் உண்டு பண்ணின மாறுதலினால் ஏற்பட்ட பிரயோஜனங்கள். லார்டு ஹார்டிஞ்சின் நிர்வாக சபையில் ஸர் H பட்லர் கல்வி யிலாகா மெம்பராயிருந்த காலத்தில் வெளியான கல்வித் தீர்மானமானது லார்டு கர்ஸனுடைய கருத்து பூர்த்தி யாய்விட்டதாக வைத்துக்கொண்டு, நாலாபக்கத்திலும் பள்ளிக்கூடங்களை அதிகமாக ஏற்படுத்தப் போவதாக வெளியிட்டது. கட்டாயமாக ஆரம் பப்படிப்பைச் செய்யவும் வேண்டாம், தானாக அது பரவட்டுமென்று விட்டு விட்டிருக்கவும்வேண்டாம் என்பதற்கு மத்தியஸ்தமாக இப்பொழுது எத்தனை ஆரம்பப் படிப்புப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றனவோ அவைகளை இரட் டிப்பாய்ச் செய்யவேண்டுமென்றும், பண உதவியை அதிகப்படுத்தி பிறர் நடத்தும் நடுத்தரப் பள்ளிக்கூடங்களை அதிகமாகும்படிச் செய்ய வேண்டு மென்றும், எல்லாக் காலேஜ்களிலும் பள்ளிக்கூடங்களிலும் மாணவர் களுக்கு சாப்பாடும் ஜாகையும் கிடைக் கும்படி செய்யவேண்டுமென்றும், இந் தியா கவர்ன்மெண்டின் உத்தேச மென்று அந்தத் தீர்மானத்தால் வெளி யாகிறது.

யூனிவர்ஸிடிகளின் அமைப்பு.

யூனிவர்ஸிடி என்பவை தங்களு டைய ஆதீனத்துக்குட்பட்ட காலேஜ் களில் படிக்கும் மாணவர்களைப் பரிட் சை செய்யும் சபைகள். யூனிவர் ஸிடிகளின் சபாநாயகர்கள் அந்தந்த யூனிவர்ஸிட்டி ஏற்பட்டிருக்கும் மாகா ணத் தலைவர்கள். வைஸ் சான்ஸலர் என்ற உப சபாநாயகரை அந்தந்த மா காண கவர்ன்மெண்டார் நியமிக்கிறார் கள். யூனிவர்ஸிடியின் நிர்வாக சபை யைத்தான் ஸிண்டிகேட் என்று சொ ல்லுவது வழக்கம். கல்வி போதிப்பதில் சம்பந்த முள்ளவர்கள் ஸிண்டிகேட் சபையில் அதிகமாக ஸ்தானம் பெறும் படி இந்த சபையின் அமைப்பு திருத் தப்பட்டிருக்கிறது. இந்த சபையின் அக்கிராஸ்தானத்தை வைஸ் சான்ஸ லர் வகிக்கிறார். வைஸ் சான்ஸலரையும் வித்யா இலாகாத் தலைவரையும் தவிர்த் து, மற்ற மெம்பர்கள் எல்லோரும் ஸெனேட் சபையின் உட்பிரிவுகளால் தெரிந்தெடுக்கப் படுகிறார்கள். இந்தச் சபையின் காரியதரிசியா யிருந்து அதன் வேலைகளைச் செய்து வைக்கிற வருக்கு யூனிவர்ஸிடி ரெஜிஸ்டிரார் என்று பெயர். அவர் ஸெனேட் சபை யால் நியமிக்கப்படுகிறார். யூனிவர்ஸி டியின் நிர்வாக சபைக்கு ஸிண்டிகேட் என்பதுபோல், ஆலோசனை சபைக்கு ஸெனேட் என்று பெயர். அது பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு பாகல்டி (Faculty) என்று பெயர். பாஷை, சாஸ்திரம், சட்டம், வைத்தியம், எஞ்சி னீரிங் ஆகிய படிப்புகளுக்காக ஒவ் வொரு பாகல்டி ஏற்பட்டிருக்கிறது. கீழ்த்திசைப் பாஷைப் படிப்புக்காக பஞ்சாப் யூனிவர்ஸிடியில் மாத்திரம் ஒரு பாகல்டி அதிகமாக ஏற்பட்டிருக் கிறது. மேற்சொன்ன அந்தந்தப் படிப்பைக் கவனித்து நடத்த ஒரு பாகல்டி ஏற்பட்டிருப்பதுந் தவிர, பாட புஸ்தகங்கள் இன்னவை என்று நிதா னிக்க ஒரு ஆலோசனை சபையும் ஏற் பட்டிருக்கிறது. ஸெனேட் சபைகளில் மொத்தமாக 75 பெயர் முதல் 100 பெயர் வரையில் இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் கவர்ன் மெண்டால் நியமிக்கப்படுகிறார்கள். அப்படி நியமிக்கப்பட்டவர்கள் சேர் ந்து சிலரையும், பாகல்டிகள் ஒவ்வொன் றும் சிலரையும், யூனிவர்ஸிடியில் பட் டம் பெற்றவர்கள் சேர்ந்து சிலரையும் நியமிக்கத் தெரிந்தெடுக்கிறார்கள்.

யூனிவர்ஸிடிகளின் விஸ்தீரணம்.

இந்தியாவில் ஐந்து யூனிவர்ஸிடி கள் இருக்கின்றன. வங்காளமும், பர்மா வும், அஸ்ஸாமும் கல்கத்தா யூனிவர்

ஸிடியையும், சென்னை மாகாணமும் குடகும் நிஜாம் ராஜ்யமும், மைசூரும், ஸிலோனும் சென்னை யூனிவர்ஸிடியையும், பம்பாய் மாகாணமும் ஸிந்து மாகாணமும், பம்பாய் யூனிவர்ஸிட்டியையும், ஐக்கிய மாகாணங்கள் என்று சொல்லப்படும் ஆக்ரா, ஔட் (அயோத்தி) என்ற பிரதேசங்களும் பேரார் ஜில்லா உள்பட மத்திய மாகாணங்களும், ஆஜ்மீர் மேர்வாரா என்ற மாகாணமும், ராஜபுதனம் என்ற நாட்டிலுள்ள பல சமஸ்தானங்களும், மத்திய இந்தியாவிலுள்ள சமஸ்தானங்களும் அலகாபாத் (பிரயாகை) யூனிவர்ஸிடியையும், பஞ்சாபும், வடமேற்கு எல்லை மாகாணமும், பிரிட்டிஷ் பெலுசிஸ்தானமும் பாக்கியுள்ளபெலுசிஸ்தானமும், காஷ்மீரமும் பஞ்சாப் யூனிவர்ஸிடியையும் சேர்ந்தவை. மைசூரில் அடுத்த ஜூலை மாதம் தனியே ஒரு யூனிவர்ஸிடியை ஏற்படுத்தத் தீர்மானமாயிருக்கிறது.

### பரிட்சைகளும் படிப்பும்.

மெட்ரிகுலேஷன் பரிட்சை என்பது காலேஜ்களில் சேர்ந்து படிக்க யோக்கியதை உண்டாக்கும் பரிட்சை. மெட்ரிகுலேஷன் பரிட்சையில் தேறினபின் உயர்தரப் படிப்புகளில் பட்டம் பெற விரும்பினால், காலேஜில் சேர்ந்து நாலு வருஷம் படிக்கவேண்டும். இரண்டு வருஷம் படித்தான பிறகு இண்டெர்மீடியேட் என்ற மத்திய பரிட்சையில் தேறவேண்டும். அப்புறம் இரண்டு வருஷம் படித்தால் கலைப்படிப்பில் பட்டம் பெறலாம். ஆனர்ஸ் என்ற பட்டத்திற்காக ஏற்பட்டிருக்கும் கலைப்படிப்பு வேறாகவும் சாஸ்திரப் படிப்பு வேறாகவும் பிரிக்கப்பட்டிருக்கிற யூனிவர்ஸிடிகளில் மெட்ரிகுலேஷன் பரிட்சையான 2 வருஷங் கழித்து மாணவர்கள் மத்தியபரிட்சையில் சாஸ்திரப்படிப்பில் தேறி, பிறகு 2 வருஷங்கழித்து பி. எஸ். ஸி. என்ற பரிட்சைக்குப் போகவேண்டும். விவசாயம், வைத்தியம், எஞ்சினீரிங் முதலிய தொழில் படிப்பை விரும்புகிறவர்கள் இரண்டொரு வருஷம் கலைப் படிப்பைப் படித்துவிட்டே, பிறகு தொழில் படிப்புக்குப்போகவேண்டும். கலைப்படிப்பில் தேறி பி. ஏ. பட்டம் பெற்றவர்கள் பிறகு இரண்டு வருஷம் சட்டப்படிப்பைப் படித்து பி. எல். பட்டம் பெறலாம்.

வருஷ மொன்றுக்கு சராசரியில் 1935 பெயர்கள் பட்டம் பெறுகிற தாகக் கணக்குகளிலிருந்து தெரிகிறது.

| | | | |
|---|---|---|---|
| கலைப்பட்டம் | பெறுகிறவர்கள் | | 100-க்கு 85 |
| சாஸ்திரம் | ஷை | ஷை | 100-க்கு 20 |
| வைத்தியம் | ஷை | ஷை | 100-க்கு 9 |
| எஞ்சினீரிங் | ஷை | ஷை | 100-க்கு 4 |

சில யூனிவர்ஸிடிகளில் சாஸ்திரப் படிப்புக்கும் கலைப் பட்டமே கொடுக்கப்படுகிறது என்பதை நினைப்பில் வைத்துக்கொள்ள வேண்டும்.

### டாக்கா யூனிவர்ஸிடி.

வங்காளத்தில் டாக்கா நகரில் புது மாதிரி யூனிவர்ஸிடி ஒன்றை ஏற்படுத்த கவர்ன்மெண்டார் உத்தேசித்திருப்பதாக 1913-ம் வருஷத்தில் வெளியிடப்பட்ட இந்தியா கவர்ன்மெண்டின் தீர்மானத்தினால் தெரிகிறது. ஸ்ரீகாசியில் அதே மாதிரி யூனிவர்ஸிடி ஒன்று ஏற்பட்டுவிட்டது. அலிகார் நகரில் முகம்மதியர்களின் பிரயத்தனத்தின்மேல் ஒரு யூனிவர்ஸிடி ஸ்தாபனமாக முயற்சிகள் நடந்து வருகின்றன. இதுவரையில் யூனிவர்ஸிட்டிகள் பரிட்சை செய்யும் சபைகளாகவே யிருக்கின்றன. ஆனால் குருகுலம்போல், யூனிவர்ஸிடிகள் மாணவர்களுக்கு வித்தைகளைக் கற்பித்து அவர்களை சற்குண சம்பன்னர்களாயும் செய்யவேண்டு மென்பது வித்வான்களுடைய அபிப்பிராயம். புது யூனிவர்ஸிடிகள் இந்த லட்சியங்களை நிறைவேற்ற வேலை செய்யும்.

### காலேஜ்கள்.

யூனிவர்ஸிடியுடன் சம்பந்தப்பட்டு அவைகளின் ஆதீனத்துக்கடங்கியிருப்பனவாகிய காலேஜ்கள் என்ற ஸ்தாபனங்களில்தான் உயர்ந்த படிப்பு போதிக்கப்படுகிறது. 1907ம் வருஷத்தில் இந்தியாவில் 176 காலேஜ்கள் இருந்ததாகக் கணக்கிலிருந்து தெரிகிறது. அவைகளில் 161 கலைப்படிப்பை போதிக்க ஏற்பட்டவை, பாக்கியில் 3 சட்டப்படிப்பையும், நாலு வைத்தியப் படிப்பையும், 3 எஞ்சினீரிங் படிப்பையும், ஒன்று இத்தேச பாஷைகளையும், ஒன்று வியவசாயத்தையும், மூன்று மாணவர்களுக்கு எப்படி கல்வி கற்பிப்பதென்பதையும் போதிக்க ஏற்பட்டவை. கவர்ன்மெண்டினுல் நடத்தப்பட்டாலும், அல்லது பிறரால் நடத்தப்பட்டாலும் எல்லா காலேஜ்களும் யூனிவர்ஸிடி சபையால் பரிசோதிக்கப் படுகின்றன. மாகாண கவர்ன்மெண்டின் ஐவேஜியிலிருந்தும் இந்தியா கவர்ன்மெண்டின் ஐவேஜியிலிருந்தும் காலேஜ்கள் திரவிய சகாயத்தைப் பெறுகின்றன. மாணவர்கள் இன்ன இடத்தில் தான் வசிக்கவேண்டுமென்று கட்டுப்பாடு செய்ய காலேஜ் அதிகாரிகளுக்கு யூனிவர்ஸிடிச் சட்டம் இடம் கொடுத்திருக்கிறது. பெற்றோர்களுடனாவது பாத்தியப் பட்டவர்களுடனாவது வசிக்காத மாணவர்கள காலேஜ் அதிகாரிகளின் விசாரணைக் குட்பட்டதாகவாவது அல்லது அவர்களால் அங்கீகரிக்கப் பட்டதாகவாவது இருக்கும் ஜாகையில் வஸிக்க வேண்டுமென்பது இப்பொழுதுள்ள விதியாகையால், அநேகம் காலேஜ்களுக் குட்பட்டு ஜாகைகள் ஏற்பட்டிருக்கின்றன. எல்லாக் காலேஜ்களிலும் ஜாகைகள் ஏற்படவேண்டுமென்று கவர்ன்மெண்டார் 1913 ம் வருஷத்திய தீர்மானத்தில் வற்புறுத்தி இருக்கிறார்கள். 1907-ம் வருஷக் கணக்குப்படி அவ்வருஷத்தில் எல்லாக் காலேஜ்களிலுமாக 18001 மாணவர்கள் படித்தார்கள்.

### பள்ளிக்கூடங்கள்

பள்ளிக்கூடங்களை எப்படி நடத்த வேண்டுமென்று காட்டுவதற்காக சில பள்ளிக்கூடங்களை கவர்ன்மெண்டார் நடத்தினுல் போதுமென்பது அவர்களுடைய அபிப்பிராயம். பாக்கி வேண்டிய பள்ளிக்கூடங்கள் முனிசிபாலிடிகளாலும், ஜில்லா தாலுகா போர்டுகளாலும் பாதிரிகளாலும் பிறராலும் நடத்தப்படுகின்றன. அவைகளை கவர்ன்மெண்டார் நன்கு பரிசீலனை செய்துகொண்டு, பண உதவி செய்து வருகிறார்கள்.

### நடுத்தரப் பள்ளிக்கூடங்கள்.

ஸெகண்டரி என்ற நடுத்தரப் பள்ளிக்கூடங்கள் பெரும்பாலும் இரண்டு வகைப்படும். சில பள்ளிக்கூடங்களில் மெட்ரிகுலேஷன் வகுப்பு வரையில் ஏற்பட்டிருக்கின்றன. பாக்கி பள்ளிக்கூடங்களில் மெட்ரிகுலேஷன் வகுப்புக் கீழ் ஒன்றிரண்டு வகுப்புகள் குறைவாக இருக்கும். இவைகளிலே கீழ் வகுப்புகளில் ஆங்கில பாஷையும் கற்பிக்கப்படுகிறது; மேல் வகுப்புகளில் ஆங்கில பாஷை மூலம் மற்றப் படிப்புகள் கற்பிக்கப்படுகின்றன. 1907-ம் வருஷக் கணக்குப்படி அவ்வருஷத்தில் 3285 ஸெகண்டரிப் பள்ளிக்கூடங்கள் இத்தேசத்தில் இருந்தன. அவைகளில் சுமார் 4 லட்சத்து 73 ஆயிரம் சுமார் மாணவர்கள் கல்வி பயின்றனர். ஸெகண்டரி படிப்பு முடிந்ததும். மெட்ரிகுலேஷன் அல்லது ஸ்கூல் பைனல் பரிட்சைக்கு மாணவர்கள் போகலாம். காலேஜில் சேர விரும்புகிறவர்கள் யூனிவர்ஸிடி நடத்தும் மெட்ரிகுலேஷன் பரிட்சையில் தேறினுல் போதும். காலேஜில் படிக்க இஷ்டப்படாமல் அந்த படிப்புடன் நிறுத்திக்கொண்டு ஸர்க்கார் உத்தியோகத்துக்குப் போக விரும்புகிறவர்கள் கவர்ன்மெண்டு நடத்தும் ஸ்கூல் பைனல் பரிட்சையில் தேற வேண்டும்.

ஆனால் ஸ்கூல் பைனல் என்ற பரிட்சையில் தேறினவர்கள் காலேஜிலும் சேரத் தகுதியுள்ளவர்களாக இருப்பது போல், மெட்ரிகுலேஷன் பரிட்சையில் தேறினவர்களும் ஸர்க்கார் உத்தியோகத்துக்குத் தகுதியுள்ளவர்களாக இருக்கவில்லை.

### ஆரம்பப் படிப்புப் பள்ளிக்கூடங்கள்.

ஆரம்பப் படிப்புப் பள்ளிக்கூடங்களும் இருவகைப்படும். சில கீழ்த்தரமென்றும், சில மேல்தரமென்றும் சொல்லப்படுகின்றன. கீழ்த்தர ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் 4-வது வகுப்புடன் நின்று விடுகின்றன. மேல்தர ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் நாலாவது வகுப்பும் உண்டு.

"இப்பொழுதுள்ள ஒரு லட்சம் பிரைமரி பள்ளிக்கூடங்கள் தவிர, இன்னும் 91 ஆயிரம் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி, இப்பொழுது படித்து வரும் 45 லட்சம் பிள்ளைகளை 90 லட்சமாக்கிவிட வேண்டுமென்பது கவர்ன்மெண்டின் உத்தேசம்" என்று 1913-ம் வருஷத்தில் இந்தியா கவர்ன்மெண்டார் தாங்கள் வெளியிட்ட தீர்மானத்தில் சொல்லியிருக்கிறார்கள். குழந்தைகளிடமிருந்து சம்பளம் வாங்காமல் பல தேசங்களில் எல்லாக்குழந்தைகளையும் கட்டாயப்படுத்தி ஆரம்பப் படிப்பை சொல்லி வைக்கிறார்கள். அம்மாதிரி இந்தியாவிலும் செய்ய வேண்டுமென்று ஜனத்தலைவர்கள் விடாது கேட்பதற்கு ஒரு வகையில் சமாதானமாக மேற் சொன்னபடி பள்ளிக்கூடங்களின் தொகையை அதிகப்படுத்துவதாக கவர்ன்மெண்டார் வாக்களித்து வருகிறார்கள்.

### தொழிற் படிப்பு.

தொழில் ஞானத்தை ஊட்டும் பள்ளிக்கூடங்கள் அநேகமிருக்கின்றன. அவைகளிற் சில கவர்ன்மெண்டாலும் முனிஸிபாலிட்டிகள் ஜில்லா போர்டுகளாலும் வேறு சில பிறராலும் நடத்தப் படுகின்றன. பெரிய நகரங்களில் சில சித்திரவேலை கலாசாலைகளும் இருக்கின்றன. அவைகளில் சித்திரத் தொழில்களைக் கற்பிப்பதல்லாமல், மண்பாண்டம் செய்தல் முதலிய ஜீவனவுபாயங்களையும் கற்பிக்கிறார்கள். வைத்தியத் தொழிலைச் சொல்லி வைக்க அநேகம் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. விவசாயத்தை அனுபோக முறையிலும் சாஸ்திர ரீதியிலும் கற்றுக்கொடுக்க சில பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டிருக்கின்றன. காடுகள் சம்பந்தமானப் படிப்பை சொல்லி வைக்க வட இந்தியாவில் டேராடேன் என்ற நகரில் ஒரு காலேஜ் இருக்கிறது.

### உபாத்தியாயர்களுக்குப் பயிற்சி.

மாணவர்களுக்குப் படிப்புச்சொல்லி வைக்கும் முறையைக் கற்பிப்பதற்காக அநேகம் பள்ளிக்கூடங்களும் காலேஜ்களும் ஏற்பட்டிருக்கின்றன. இதுவரையில் உபாத்தியாயர்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்த சம்பளம் போதவில்லை என்பதை கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டு அவர்களுடைய சம்பளத்தை உயர்த்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

### பெண்களின் கல்வி.

பெண்களுக்குக் கல்வி புகட்டுவதற்காகப் பல பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. ஆயினும் இவ்விஷயத்தில் கவர்ன்மெண்டார் போதுமான முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. பிள்ளைகளுக்காக ஏற்பட்டிருக்கும் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் பெண்களும் சேர்ந்து படிக்கலாமானாலும், பெண்களுக்குத் தனியாக வித்தியாஸ்தாபனங்கள் போதுமான வரையில் ஏற்படவேண்டியது அவசியம். பெண்களுக்குத்தனியாக ஆங்காங்கு சிற்சில பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டிருக்கின்றனவாயினும், அவை போதுமானவைகளாயில்லை. சென்னையில் பெண்களுக்குத் தனியாக ஒரு காலேஜ் ஏற்பட்டிருப்பது குறிப்பிடத்தக்க விஷயம்.

### போதனை செய்வோர்.

போதனை செய்வோர் 3 வகுப்பாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஒரு வகுப்புக்கு "இந்தியன் எடுகேஷனல் ஸெர்விஸ்" (இந்திய கல்வி ஊழியம்) என்று பெயர்; இன்னொரு வகுப்பாருக்கு புரொவின்ஷியல் எடுகேஷனல் ஸெர்விஸ் (மாகாணக் கல்வி ஊழியம்) என்று பெயர்; மற்றொரு வகுப்பாருக்கு கீழ்த்தர உத்தியோகஸ்தர்கள் என்று பெயர். இங்கிலாந்திலுள்ள யூனிவர்ஸிடிகளில் படித்துத் தேறி பட்டம்பெற்றவர்களே முதல் வகுப்பில் ஸ்தானம் பெறுகிறார்கள். அவர்களுக்கு 500 ரூபாய் முதல் 1500 ரூபாய்வரையில் சம்பளம்கிடைக்கிறது. அவர்கள் போதகாசிரியர்களாகவும் கலாசாலைத் தலைவர்களாகவும், பள்ளிக்கூடங்களைப் பரிசோதிக்கும் இன்ஸ்பெக்டர்களாகவும் இருக்கிறார்கள். வித்தியா இலாகாத் தலைவர்களுக்கு 2500 ரூபாய் சம்பளம். அவர்களுக்கு டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் என்று பெயர். மாகாணக் கல்வி கீழ்த்தர நிர்வாகம் இந்தியர்களாலேயே ஆக்கப்பட்டது. அவர்களும் போதகாசிரியர்களாகவும் கலா சாலைத் தலைவர்களாகவும் இன்ஸ்பெக்டர்களாகவும் வேலை செய்து வருகிறார்களாயினும் அவர்களுக்குச் சம்பளம் 200 ரூபாய் முதல் 700 ரூபாய் வரையில் தான். கீழ்த்தர உத்தியோகஸ்தர்கள் பள்ளிக்கூடங்களின் தலைவர்களாகவும் உதவி இன்ஸ்பெக்டர்களாகவும் இருப்பவர்கள். அவர்கள் 40 ரூபா முதல் 400 ரூபாய்வரையில் சம்பளம் பெறுகிறார்கள்.

---

# தென் இந்தியாவில் ஸ்தல யாத்திரை.

[கனம் ராவ்பகதூர் எம். ராமச்சந்திர ராவ் எழுதியதின் மொழிபெயர்ப்பு.]

உலகமெங்கும் புண்ணிய பூமியெனப் புகழ்கொண்ட பாதகண்டமாம் இந்திய ராஜ்யத்திலே க்ஷேத்திர யாத்திரை தீர்த்தாடனம் என்றால் மும்மூர்த்திகள், ஆசாரியர்கள், மஹான்கள் இவர்களின் அவதார ஸ்தலங்களின் ஸேவை என்பதாகும். இது ஹிந்துக்களுள் மிகவும் அந்தரங்க பக்தியுடன் செய்யப்படும் காரியமென்பதை யாவரும் அறிவர். அதே மாதிரியாக நமது மகம்மதிய நண்பர்களுள் அநேக மகான்கள் அடக்கமாகியஇடங்களில் வருஷ ஸேவை செய்வதும் இந்தியாவில் எங்கும் வியாபித்திருக்கிறது. இப்படி ஸ்தல யாத்திரையின் வைபவங்கள் இதர தேசங்களி விருப்பினும், இந்தியாவில் அவைகளடைந்திருக்கும் அபாரமான ஏற்ப டுகளைப்போல் அவ்விடங்களில் அமையவில்லை. அப்படி தீர்த்த யாத்திரை போகும் யாத்திரிகர்களின் சௌகர்யத்தின் பொருட்டு பூர்விக ஹிந்து மகம்மதிய ராஜாங்கங்களும், தற்கால பிரிட்டிஷ் ராஜாங்கத்தாரும், பல ஏற்பாடுகளும் வசதிகளும் செய்து வந்திருக்கிறார்கள். ஆனால் இவைகளெல்லாம் பற்பல காலங்களில் பற்பல விதமாய் செய்யப்பட்டு வந்ததினால், தற்காலத்துக் கொத்தபடி அவைகளைத்திருத்திச் செம்மைபடுத்துவதைப்பற்றி இந்தியா கவர்ன்மெண்டார் இப்போது யோசனை செய்து வருகிறார்கள். 1912-ஆம வருஷத்தில் ஆல் இந்தியா சானிடரி கான்பரன்ஸ் செய்த நல்ல வேலைகளின் பயனாக இந்தியா கவர்ன்மெண்டார் க்ஷேத்திரங்களின் சுகாதாரத்தையும், ஸ்தல யாத்திரைக்காரர்கள் தாங்கள் எண்ணிப் போகும் க்ஷேத்திரத்தைப் போய்ச்சேரும் வரையில் அவர்களுக்குள்ள நிலைமைகளையும், தீர பரிசோதிக்கும்படி கேட்டுக் கொண்டதின்பேரில், ஒவ்வொரு மாகாணத்திலுமுள்ள யாத்திரை ஸ்தலங்களைப் பரிசோதித்து, அவைகளை முன்னுக்குக் கொண்டுவருவதற்கு வேண்டிய காரியங்களை யோசிக்கும் பொருட்டு மாகாணக் கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. (1913-1914)-ம் வருஷத்தில், இவ்வித கமிட்டிகள் ஐக்கிய மாகாணங்களிலும், கிழக்கு வங்காளத்திலும், அஸ்ஸாம் பிரதேசத்திலும் கூடின. சென்ற வருஷம் இதேமாதிரி கமிட்டிகள் சென்னை ராஜதானியிலும், பம்பாய் ராஜதானியிலும் ஏற்படுத்தப்பட்டன. அக்கமிட்டிகளின் பரிசீலனைக்கு இட்டமாயிருக்கும் காரியங்களோ நிரம்பவும் முக்கியமானவை; ஏனெனில் போக்குவரவினால், வியாதிகள் ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பரவி இந்தியாமுழுவதும் சுகாதார நிலைமையை பாதிக்கின்றன. உலகப்பிரசித்திபெற்ற புண்ணிய க்ஷேத்திரங்களாகிய, காசி, அலஹாபாத், கயா, ராமேசுவரம், திருப்பதி முதலிய ஸ்தலங்களுக்கு அநேகமாய் இந்தியாவிலுள்ள எல்லா வருணத்தார்களும் யாத்திரை செய்கிறார்கள். இந்துக்களுக்குள் ஒவ்வொருவரும் தங்களுடைய ஆயுள் காலத்திற்குள் காசி, ராமேசுவர யாத்திரை செய்ய வேண்டுமென்ற ஐதீக மிருப்பதல், யாத்திரைக்காரர்கள அவ்விரு ஸ்தலங்களுக்கும் இடையேயுள்ள க்ஷேத்திரங்களுக்கும் போய்ச் சேருகிறார்கள்.

ரயில்பாதை ஏற்பட்டதின் பலனாக, இவ்வித முக்கிய ஸ்தலங்களுக்கெல்லாம் யாத்திரைக்காரர்கள் வரு

ஷம் முழுமையும் சரிசமானமாகவே போய் வருகிறார்கள். முற்காலத்திலே சில விசேஷ தினங்களில் தான் க்ஷேத்திரங்களுக்கு யாத்திரைக்காரர்கள் கூட்டம் கூட்டமாய்ச் செல்வது வழக்கம். இதல்லாமல் 12-வருடங்களுக்கொருமுறை வரும் கும்பகோண மஹாமகம், ராஜமஹேந்திரபுரம் கோதாவரி புஷ்கரணி, காசி கங்கா புஷ்கரணி, முதலிய முக்கியமான தீர்த்தவாரி திருவிழாக்களிருக்கின்றன. இவ்வித விசேஷ திருவிழாக்களுக்கு லக்ஷக்கணக்கான யாத்திரைக்காரர்கள் சென்று, அவ்விடம் சிலநாள் தங்கியபின், தங்கள் ஊருக்குத் திரும்புகிறார்கள். இவ்வித விசேடங்களில், ரயில்வே போக்குவரவில் ஏற்படக்கூடிய கஷ்டங்களை உத்தேசித்து, பிரத்தியேகமாக சில ரயில்வண்டிகள் விடப்படுகின்றன. ரயில் வண்டிகளில் ஏற்படும் நெருக்கடியை விலக்குவதற்கான ரயில்வே ஏற்பாடே, மாகாணங்களில் இப்போது நியமிக்கப்பட்டுள்ள யாத்திரைக் கமிட்டி கவனிக்கவேண்டிய முக்கிய விஷயங்களிலொன்று. சொற்பகாலமாக சுகாதார சம்பந்தமாய், காலரா, பிளேக், அம்மை முதலிய வியாதிகளைப் பரவவொட்டாமல் தடுப்பதற்கு உள்ளூர் அதிகாரிகள், வேண்டிய முயற்சி எடுத்துவருவதை இங்கே குறிப்பிடல் தகும்.

யாத்திரை க்ஷேத்திரங்களுக்குத் தேவையான தண்ணீர் சப்ளை விஷயத்தைப் பற்றி கமிட்டியார் விசாரணை செய்து வருகிறார்கள். ஆனால் எங்கு பார்த்தாலும் செய்யப்படவேண்டிய காரியங்கள் பல இருக்கின்றன. மாகாண கமிட்டிகளின் ரிபோர்ட்டு இன்னும் பிரசுரிக்கப்படவில்லையாகையால், இவ்விஷயம் தீர யோசிக்கப் படுமென்று நம்பப் படுகிறது. யாத்திரை ஸ்தலங்களுக்கு தண்ணீர் சப்ளை செய்யவேண்டிய ஏற்பாடானது கவர்ன்மெண்டாரின் பண உதவியைக்கொண்டுதான் செய்து முடிக்கக் கூடியதாகும். ஆகையால் கவர்ன்மெண்டார் ஜனங்களின் அபிப்பிராயங்களை நிறைவேற்றுவதற்காக கமிட்டிகள் ஏற்படுத்தியபின், தண்ணீர் சப்ளை ஏற்பாட்டை நிறைவேற்றுவதற்காக பண உதவி செய்யத் தவறமாட்டார்களென்று நம்புகிறோம்.

க்ஷேத்திரங்களுக்கும் அவைகளுக்கிடையே யுள்ள இடங்களுக்கும் கூட்டங் கூட்டமாகப் பிரயாணஞ் செய்யும் யாத்திரைக்காரர்கள் தங்கக்கூடிய வசதியான இடம் ஏற்படுத்தும் விஷயமானது பொது ஜனங்களின் முக்கிய குறைகளிலொன்று. முற்காலங்களில் ரோட் மார்க்கமாக பிரயாணங்கள் செய்யப்பட்டன. காசிக்கும் ராமேசுவரத்திற்கும் நடுவே சௌகரியமான விடங்களில் சத்திரங்கள் கட்டப்பட்டு, பாதுகாக்கப்பட்டுவந்தன. ஆனால் ரயில்பாதை ஏற்பட்டநாள் முதற்கொண்டு அவை எல்லாம் பிரயோஜனமற்று, பாழடைந்து வருகின்றன. ரயில் மார்க்கங்களில் சௌகரியங்கள் தேவையான அளவு இன்னும் ஏற்படவில்லை. க்ஷேத்திரங்களிலும் யாத்திரைக்காரர்கள் தங்குவதற்குப் போதுமான இடம் கிடையாது. பொது ஸ்தாபன தர்ம சத்திரங்களின் அதிகாரம் 1817-ம் வருஷத்திய 4-வது சட்டப் பிரகாரம் ரெவின்யூ போர்டாரின் வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இவ்வதிகாரமானது எப்பொழுதும் சரிவர நிர்வகிக்கப்படுவதாகத் தெரியவில்லை. இக்காரணத்தினால் ஒழுங்கீனங்கள் ஏற்பட்டுவிட, ஜனங்கள் அநேக அசௌகரியங்களை அடைந்து வருகிறார்கள். இவ்விஷயமாக சென்னை சட்ட சபையில் ஒரு தீர்மானம் பிரேரணை செய்யப்பட, கவர்ன்மெண்டார் இவ்விஷயத்தைப்பற்றி தீர விசாரித்து வருகிறார்கள். இவ்விசாரணையின் முடிவை ஜனங்கள் ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டிருப்பதை நாம் வற்புறுத்துகிறோம்.

# ஸ்தல யாத்திரை கமிட்டியின் விசாரணை.

[ ஒரு பிரயாணி எழுதியது. ]

புண்ணிய க்ஷேத்திரம் போய் வரும் பிரயாணிகளின் சுகாதார சௌகர்யாதிகளை பரிசீலனை செய்து குறைகளைத் தீர்க்க, இந்தியா கவர்ன்மெண்டின் அபிப்பிராயப்படி சென்ற வருஷம் சென்னை கவர்ன்மெண்டார் ஒரு கமிட்டி நியமித்தனர். இக்கமிட்டியார் சென்னை மாகாணத்திலுள்ள எல்லா முக்கியமான திவ்ய க்ஷேத்திரங்களையும் நேரில் பார்த்து, ஒவ்வோர் ஊரிலுள்ள சுகாதார நிலைமையையும் ரயில் போக்குவரத்து சௌகர்யங்களையும் விசாரித்து, கவர்ன்மெண்டாருக்கு ரிபோர்டு செய்திருப்பதாக அறிகிறோம். இந்த ரிபோர்ட்டில் பல முக்கியமான அம்சங்கள் கவனிக்கப்பட்டிருக்கின்றன. தற்காலத்திய பிரயாண சாதனங்களில் முக்கியமானது ரயில் போக்குவரத்து என்பது வெளிப்படை. இதனால் பண்டைக் காலத்தில் பல மாதங்களாகும் பிரயாணத்தைச் சில நாட்களில் வெகு சௌகர்யமாயும் அதிக சிரமமன்னியிலும் செய்து விடலாம். ஆகவே பிரயாணிகளுக்கு ரயில்வேக்களில் போதுமான சௌகர்யங்கள் இருக்கின்றனவா, ரயில்களில் சதா நெருக்கடி என்ற பொது வதந்தி வாஸ்தவமா, என்பதை கமிட்டியார் முதல்முதல் கவனித்திருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் செய்தவிசாரணையில் ரயில்வே கம்பெனிகள் பிரயாணிகளின் சௌகர்யத்தை வெகுவாய் கவனித்துவருகின்றனவென்றும், அவர்கள் செய்திருக்கும் ஏற்பாடுகள் நிரம்பவும் பொருந்தியன வென்றும், அவர்கள் மீது கூறும் குறைகள் அல்ப விஷயங்களே என்றும், சொல்லப்பட்டன; நடந்துவரும் ஏற்பாடுகளைக் கமிட்டியார் கொண்டாடுவதாகவே தெரிகிறது. நமக்கோ ரயில்வே ஏற்பாடுகளின் மேன்மையைக் கண்டு ஆச்சர்யப்படுவதா, அல்லது அதைக் கண்டு பிரமித்த கமிட்டியாரைப் பார்த்து ஆச்சர்யப்படுவதா என்று சந்தேகம். ரயில்வே கம்பனிகள் இது காறும் செய்துவந்த முயற்சியை ஏளனம் செய்யவோ குறை கூறவோ நாம் உத்தேசிக்கவில்லை. ஆனால் குறை கூறுவது எப்போதும் மானிட சுபாவமென்றும், ரயில்வேக்களில் ஜன நெருக்கடியே ஒரு விநோதமென ரயில் பிரயாணிகளில் பெரும்பாலோர் மதிக்கிறார்கள் என்றும் சொல்வது, விசாரணைக் காதாரமாகுமோ?

* * * *

ரயில்வே கம்பெனியார் தயார் செய்து கொடுத்த சென்ற திருவண்ணாமலை கார்த்திகை தீபோத்ஸவ பிரயாணிகளின் சங்கியையை கமிட்டியார் ஆராய்ந்து பார்த்தார்கள். குறிப்பிட்ட சங்கியையில் சில முக்கியஇனங்கள் திட்டமாகத்தான் சொல்லியிருக்கக்கூடுமென்பதையும் கவனித்தார்கள். முடிவில், தென் இந்திய ரயில்பாதையில் ஜன நெருக்கடி இருப்பது வாஸ்தவமென்றும், அது உத்ஸவகாலத்தில் மாத்திரமேயல்லாமல் எல்லாக் காலத்திலும்இருக்கிறதென்றும், அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். ஆனால் அவ்வளவு கேவல ஸ்திதியில் இந்த ஜன நெருக்கம் இருப்பதாகச் சொல்வதற்கில்லை என்று சொல்லி உள்ள விஷயத்தை சற்று மெழுகியிருப்பதாகத் தெரிகிறது. இக்கமிட்டியின் இந்திய மெம்பரான கனம் ராமச்சந்திரராவ், ரிபோர்ட்டை யொட்டி தமது மறுப்பு அநுபந்தமொன்று எழுதி யிருப்பதாகவும் அதில் இதைக்கண்டித்து நன்றாய் எழுதி

பிருப்பதாகவும் அறிகிறோம். கமிட்டியாரின் உத்தேசத்தில் தோஷம் சொல்லும்படியான நெருக்கடி என்பதற்கு என்ன எல்லை விதித்திருக்கிறார்களோ தெரியவில்லை. ரயில்வே கம்பெனியைக் கேட்டால், எப்பேர்ப்பட்ட நெருக்கடியும் அபவாதத்திற்கு இடமாகாதெனப்படும். ஆனால் நெருக்கடி அபவாதத்திற் கிடமாகும்படி யானாலும், ஆகாவிட்டாலும் ஜனங்கள் படும் கஷ்டநிஷ்டூரங்களை மறுக்கமுடியாது. பிரயாணிகளை ஏற்றிச்செல்லும் விஷயமாய் ரயில்வே கம்பெனிகளுக்குள்ள கவலையும் பொறுப்பும் சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. தவிர, ரயில்வே கம்பெனிகள் இந்தியாவில் பெரும்பாலும் கவர்ன்மெண்டுக்குச் சொந்தமானபடியால், இப் பொறுப்பை சரிவர வகிப்பது கவர்ன்மெண்டின் கடமையாகும்.

* * * * *

ரயில்வேக்களில் கிடைக்கும் உணவுக்கான பண்டங்களைப் பற்றியும் கமிட்டியார் கவனித்தார்கள். இது விஷயமாய் தென் இந்தியா ரெயில்வே வெகு பிரயாசை எடுத்துக்கொண்டு பல முக்கிய ஸ்டேஷன்களில் தகுந்த ஏற்பாடுகளைச் செய்ய கவலை காட்டி வருகிறார்கள் என்பது தெரிந்த விஷயம். பிரயாசை எடுத்துக்கொண்டும் பிரயோஜன மற்றுப்போக பல இடங்களில் பிரயாணிகள் வருந்துகிறார்கள் என்பதையும் மறுக்கமுடியாது. பல வகுப்பாருக்கு பிரத்தியேக போஜன ஸ்தலங்களை ஸ்டேஷனிலேயே அமைப்பது சிரம சாத்தியமான விஷயம். ஆனால் அவ்வாறு சீர்படுத்தும் வரையில், தகுந்த அந்தஸ்துள்ள இந்தியர்கள் தற்போது ஸ்டேஷனில் இருக்கும் ஓட்டல்களில் போஜனம் செய்யமாட்டார்கள். ஆகையால் ஓட்டல்கள் சரிவர நடக்க அவைகளின்மீது ஓர் அத்தும கட்டுப்பாடும் இருக்கவேண்டும். இதையுத்தேசித்து, முன்போல் ஓட்டல் கண்டிராக்டை ஏலமிட்டு, மாதாந்தர கட்டணங்களை வசூலித்து, இப்படி வசூலாகும் பணத்தைக் கொண்டு, ஓட்டல்களின்பேரில் மேல் விசாரணை பார்ப்பதற்கான அதிகாரிகளை ஏற்படுத்துவது நலம் என்று கமிட்டியார் அபிப்பிராயப் படுவதாகவும், ஆனால் கனம் ராமச்சந்திர ராவ் இதை ஒப்புக்கொள்ளவில்லையென்பதாகவும் தெரிகிறது. கண்டிராக்டர்களிடமிருந்து இதுகாறும் வசூலித்து வந்த விகிதமானது பிரயாணிகள் வாங்கும் தின்பண்டங்களின்மீது சுமத்தப்பட்டு வந்ததென்பதை யாவரும் அறிவார்கள். இதன் உண்மை இப்போதும் ரேணுகுண்டா, காட்பாடி, பெஜவாடா முதலான மதராஸ் ரயில்வே ஸ்டேஷன்களில் விசாரித்தால் புலப்படும். ஆகையால் கட்டணத்தை மறுபடியும் விதிப்பது நிச்சயமாய் பிரயாணிகளின் சாப்பாட்டுச் செலவை அதிகரிக்கும். மேற்பார்வையை யுத்தேசித்து பிரயாணிகளின் செலவை அதிகரிப்பது நியாயமா? ரயில்வே கம்பனிகளே இப்பொறுப்பை வகிக்கக் கடமைப்பட்டவர்களல்லவா? ஆங்கில பிரயாணிகளின் சௌகர்யார்த்தமாக எல்லா முக்கிய ஸ்டேஷனிலும் ரிப்ரெஷ்மெண்ட் ரூம் வைக்கவும், சாமான் போக்குவரத்து சாதகங்களைக் கொடுக்கவும், ரயில்வே கம்பெனியார் ஏற்பாடுசெய்திருப்பது போல் இந்தியப் பிரயாணிகளின் சௌகர்யத்திற்கான சாதகங்களைச் செய்தால், இக்குறை வெகு தூரம் சீர்திருத்திவிடாதா?

* * * *

அடுத்தபடி க்ஷேத்திரங்களில் பிரயாணிகள் தங்குவதற்குள்ள சௌகரியங்களைக் கமிட்டியார் கவனித்தார்கள். தென்னிந்தியாவில் பிரயாணிகளை உத்தேசித்து, அனேக மடங்களையும், சத்திரங்களையும், சாவடிகளையும், தர்ம சிந்தை வாய்ந்த நமது முன்னோர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். தஞ்சாவூர் ராஜாக்களாலும், சமீபகாலத்தில் நாட்டுக்கோட்டை செட்டிப் பிள்ளைகளாலும், பலபொது ஸ்தாபனங்கள் இவ்

வாறு ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. ஆனால் தற்போது யாத்திரிகர்கள் எல்லாரும் ரயில் மார்க்கமாய் எல்லாக் காலங்களிலும் போய் வருகிறபடியால் ரயில்பாதையை ஒட்டி சத்திரங்களும் சாவடிகளும் வெகுவாய் இல்லாமலிருப்பது ஒரு பெரிய குறையாகும். க்ஷேத்திரங்களில் இருக்கும் ஸ்தாபனங்களும், நிர்வாகக் குறைவால் சீர்கெட் டிருப்பதாகவே சொல்ல வேண்டும். இப்பேர்ப்பட்ட தர்ம ஸ்தாபனங்களின் மேற்பார்வை அதிகாரம், சென்னை ரெவின்யூ போர்டார் வசத்தில் நூறு வருஷத்திற்கு முந்தி சட்ட மூலமாய், விதிக்கப்பட் டிருக்கிறது. ஆகையால் அதில் கண்டிருக்கும் அதிகாரங்கள், தற்காலத்திற்கு உசிதமாக இருப்பதாகச் சொல்லுவதற்கில்லை. ஆகையால் இதை கவர்ன்மெண்டார் புதிய சட்ட பூர்வமாய் சீர்திருத்த வேண்டியது அவசியமாகும். முதல் முதல் இவ்வாறு ஏற்பட்டிருக்கும் தர்ம ஸ்தாபனங்களுக்கு கணக்கும் குறிப்பும் ஏற்படுத்தி, அவைகளின் நிர்வாகத்திற்கு, கூட்டுறவுச் சங்கங்களின் மேல் விசாரணையைப்போல், கவர்ன்மெண்டின் தரப்பில் ஒரு ரிஜிஸ்டிராரையும் நியமித்து, ஜில்லாவாரியாக உத்தியோகஸ்தரல்லாத கமிட்டிகளையும், அவருடைய உதவிக்கு ஏற்படுத்தவேண்டும். இது விஷயமாய் கமிட்டியார் ஜனங்களின் நோக்கத்தை நன்குணர்ந்து தற்போதுஇருக்கும் கேவல ஸ்திதியையும், திருத்த வேண்டிய முறைகளையும், கண்டிருப்பதாக கேள்விப் படுகிறோம்.

* * * *

க்ஷேத்திரங்களின் சுகாதாரநிலைமையையும் யாத்திரிகர்களின் சௌக்யத்தையும் பாதுகாக்கவே, இக்கமிட்டியார் முக்கியமாய் நியமிக்கப்பட்டார்களென்று முன்பே குறிப்பிட் டிருக்கிறோம். ஆகையால் இவ்விஷயமாய் கமிட்டியார் விஸ்தாரமாய் விசாரணை செய்திருப்பதாக அறிகிறோம். தற்காலம் க்ஷேத்திரங்களிலே உத்ஸவகாலங்களில் காணக்கூடிய வியாதிகள் முக்கியமாய் பெரிய அம்மை, மலேரியா ஜ்வரம், பிளேக், காலரா இவைகள் நான்கேயாம். கமிட்டியார் கவனித்தவரையில் முதல் கண்ட மூன்று வியாதிகளினால் க்ஷேத்திரங்களில் விசேஷ அபாயம் ஏற்படுவதாகச்சொல்லுவதற்கில்லை என்றுகமிட்டியார் அபிப்பிராயப்படுவதாகஅறிகிறோம். இந்த சந்தர்ப்பத்தில் பிளேக் விஷயமாய் ஏற்படுத்தியிருக்கும்நிபந்தனைகள் அனாவசியமென்றும், பிரயோஜன மற்றனவென்றும், தெளிவாக எடுத்துச் சொல்லியிருப்பதாக அறிகிறோம். காலரா வென்றாலோ க்ஷேத்திரங்களில் அடிக்கடி ஆரம்பித்து வருவது என்பதை மறுக்க முடியாது. ஆனால் அவைகள் ரயில் மார்க்கமாய் வரும் பிரயாணிகளால் எவ்வளவு தூரம் பரவுகிறது, அவ்வாறு பரவச் செய்யாமலிருக்க நிபந்தனைகள் ஏற்படுத்துவது சாத்தியமா, என்ற இரண்டு விஷயங்களை கமிட்டியார் நன்கு கவனித்திருக்கிறார்கள். கமிட்டியாரின் அபிப்பிராயத்தில் இது கேவலம் பிரயாணிகளைப்பற்றின விஷயம் அல்லவென்றும், மாகாணங்கள் முழுமையும் சுகாதாரநிலைமையைச் சீர்படுத்தினாலொழிய, இக்கொடும் வியாதியைக் கண்டிக்க முடியா தென்றும், அபிப்பிராயப்பட் டிருப்பதாகக் கேள்விப் படுகிறோம். உத்ஸவ காலங்களில் க்ஷேத்திரங்களுக்கு வரும் பிரயாணிகளுக்குத் தகுந்த வசதிகள் அமைப்பதும், குடிக்கும் தண்ணீரை சரிவர பந்தோபஸ்தில் வைத்து வருவதும், சாப்பிடும் பண்டங்களை இடை இடையே பரிசோதித்து கெடாமல் பார்ப்பதுமாகிய இவைகளே மேற்படி வியாதிகளின் விஷயமாய்ச் செய்யலாகும்என்று கமிட்டியார் சொல்லியிருப்பதாகத் தெரியவருகிறது. பிரயாணிகளின் போக்குவரத்தினாலோ, க்ஷேத்திரங்களின் சுகாதாரமற்ற நிலைமைகளினாலோ, காரணம் எதுவாயிருந்தாலும்

இக் கொள்ளை நோய்கள் பல சமயங்களில் விஸ்தாரமாக வியாபித்து ஆயிரக்கணக்கான உயிர்களை மாய்த்து விடுகின்றன வென்பதை மறுக்க முடியாது. இந்த ஸ்திதியிலிருப்பது நமது கவர்ன்மெண்டாரின் பொறுப்புக்கும், கடமைக்கும் ஏற்றதாகாது. ஆகையால் விஷயத்தை நன்கு கவனித்து தேவையான பந்தோபஸ்துகளை இனியாவது ஏற்படுத்துவார்களென்று நம்புகிறோம்.

* * * *

ஆனல் கமிட்டியார் குறிப்பிட்டிருக்கும் சீர்திருத்தங்களைப் பணச் செலவன்னியில் நடத்த முடியாது. பண உதவி இல்லாமையே பல முக்கிய சீர்திருத்தங்களுக்கு இடையூருக வாய்ந்திருக்கிறதென்பது யாவரும் அறிந்த விஷயம். ஆகையால் இச் சீர்திருத்தங்களைச் செய்வதற்கு யாத்திரிகர்களிடமிருந்து வரி வசூலிப்பது தகுமா, அல்லது தேவ ஸ்தானங்களிலிருந்து மேற்படி விஷயமாக கட்டணங்கள் விதிப்பது நியாயமாகுமா, என்பதையுங்கூட கமிட்டியார் கவனித்திருப்பதாகவும் அறிகிறோம். யாத்திரிகர்கள் மீது வரி விதிப்பதைப்பற்றி 1903-ம் வருஷத்தில சென்னை கவர்ன்மெண்டார் விசாரணை செய்து, தற்போது அது பயன்படாது, வரி வசூலிப்பதில் அநேக கஷ்டங்கள் உண்டு, இது விஷயமாய் தேவஸ்தானங்களை எதிர்பார்ப்பதே உசிதமென்று நிர்ணயித்தார்கள். சில தேவஸ்தானங்களும் இக் கடமையை ஏற்கெனவே சிறிது வகித்து வருவதாக அறிகிறோம். சட்ட பூர்வமாக, நிபந்தனைகளை விதிக்காமல், இவ் விஷயங்களில் தேவஸ்தானங்களுக்குப் பணம் செலவிட அதிகாரம் கொடுப்பது உசிதமெனக் கருதப்படுகிறது. தேவஸ்தானங்கள் பண உதவி செய்தாலும், யாத்திரிகர்கள் வரி கொடுத்தாலும், கவர்ன்மெண்டின் பொறுப்பை அகலாது. கவர்ன்மெண்டாரே ஜனங்களின் சுகாதாரத்தைச் சீர்படுத்தக் கடமைப்பட்டவர்களென்பதை நாம் இங்கே குறிப்பிடலாகும்.

---

# கவர்ன்மெண்டும் விவசாயமும்.

[ ஜி. ஏ. வைத்யராமன் பி. ஏ., பத்ராதிபர், ஜனுபிமானி. ]

இந்தியாவில் அரசாட்சி செவ்வையாய் நடந்து வருவதற்காக, கவர்ன்மெண்டார் தேசத்தை அநேக மாகாணங்களாகவும், ராஜதானிகளாகவும் பிரித்து ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ராஜதானிகளில் கவர்னரும், அவருக்கு உதவியாய் ஆலோசனைசொல்ல மூன்று மெம்பர்களும் உண்டு. இதுபோலவே, டெல்ஹி நகரத்திலும், கவர்னர் ஜனரல் ராஜ ப்ரதிநிதியாக மேலான அதிகாரம் வகித்து ராஜாங்கத்தை நடத்தி வருகிறார். அவரோடு, தேச விஷயங்களைப்பற்றி விசாரணை செய்வதற்காக, மந்த்ரிகள் போல, ஆறு மெம்பர்கள் இருக்கிறார்கள். ஒவ்வொரு மெம்பரும் ஒவ்வொரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி செம்மையாய் ஆலோசித்து,ராஜரீகத்தை நடத்தி வருகிறார்.

நமது தேசத்தில் விவசாயம் எப்படி நடந்து வருகிறதென்று விசாரணை செய்ய, ஒரு ப்ரத்யேகமான இலாகா உண்டு. அதற்கு மேலே சொன்ன ஆறு மெம்பர்களில் ஒருவர் தலைவராவர். இந்த இலாகாவின் அமைப்பு மற்ற விஷயங்களில் ராஜ்ய பரிபாலனம் நடந்துவருவது போலவேதான். அதாவது, இந்தியாவில் அங்கங்கே உள்ள விவசாய முறைகளையும், குறைகளையும், அறிந்து சீர்திருத்துவதற்காக மாகாண உத்யோகஸ்தர்களும், இந்தியா முழுவதிலும் விவசாய விஷயங்களை கவனித்து, மேன்பார்வையிட்டு, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய இந்தியா கவர்ன்மெண்டைச் சேர்ந்த பெரிய உத்யோகஸ்தர்களும், நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

1866-ம் வர்ஷத்தில் வங்காளத்திலும், ஒரீஸா மாகாணத்திலும், ஒரு பெரிய பஞ்சம் நேர்ந்தது. அந்தப் பஞ்சத்தைக் குறித்து சில விஷயங்களை விசாரணை செய்ய, கவர்ன்மெண்டாரால் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அந்தக் கமிட்டியார் விவசாய முறைகளை ஆராய்ந்தறிந்து, அவைகளை முன்னுக்குக் கொண்டு வருவதற்காக, ஒரு ப்ரத்யேக இலாகா ஸ்தாபிக்க வேண்டுமென்று சிபார்சு செய்தார்கள். அந்த சிபார்சை அனுசரித்து, இந்தியாவிலுள்ள ஒவ்வொரு ராஜதானியிலும் விவசாய டைரெக்டர் என்ற ஒரு பெரிய உத்யோகஸ்தரையும், இவர்களையெல்லாம் மேன்பார்வை பார்த்துவர இந்தியா கவர்ன்மெண்டில் ஒரு பெரிய உத்யோகஸ்தரையும், நியமிப்பதாக ஏற்பாடு செய்யப்பட்டது. ஆகவே, 1871-ம் வர்ஷத்தில் விவசாய இலாகா ஒன்று தனியாக ஏற்பட்டது. ஆனால், 1877-78-ம் வர்ஷத்தில் நேர்ந்த பெரும் பஞ்சத்தால், கவர்ன்மெண்டுக்குப் பணமில்லாமல், மேலே சொல்லியவிவசாயஇலாகாஅடியோடே எடுபட்டுப் போய்விட்டது. 1880-ம் வர்ஷத்தில் இந்தப் பெரும் பஞ்சத்தைப் பற்றி விசாரணை செய்ய ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அந்தக் கமிட்டியாரும், விவசாய முறைகளை ஆராய்ச்சி செய்யவும், அவைகளை சீர்திருத்தவும், பஞ்சம் நேரிட்டால் ஜனங்களுக்கு உதவி செய்யவும், தனியே ஒரு இலாகா இருக்கவேண்டுமென்று சிபார்சு செய்தார்கள். அதை அனுசரித்து, நிலவரி, விவசாயம், இவைகளைப்பற்றி விசாரணை செய்ய, இந்தியா கவர்ன்மெண்டிலும், இன்னும் பல மாகாண கவர்ன்மெண்டுகளிலும் ப்ரத்யேக இலாகாக்கள் ஏற்பட்

டன. ஆனல் இப்படி ஏற்பட்ட இலாக்காக்கள், நிலவரியை எப்படி சுலபமாய் வஸூலில்செய்யலாம், ஒவ்வொரு ஊரிலும் எவ்வளவு நிலம் சாகுபடியாகிறது, எவ்வளவு தரிசாயிருக்கிறது, எவ்வளவு நன்செய், எவ்வளவு புன்செய், ஒவ்வொரு நிலத்திலும் என்ன மாஸூலில் சாகுபடியாகிறது, ஒவ்வொரு ஊரிலும் எவ்வளவு ஆடுமாடுகள் இருக்கின்றன, பஞ்சம் வந்தால் அதை எப்படி நிவர்த்தி செய்கிறது, என்ற இப்படிப்பட்ட விஷயங்களிலேயே பூராவாக கவனம் செலுத்தி, விவசாய முறைகளை அபிவ்ருத்தி செய்யும் வழிகளைத் தேடாதிருந்துவிட்டார்கள். இதற்குக் காரணம் மேலே சொல்லப்பட்ட விவசாய இலாகாவில் விவசாய நிபுணர்கள் இல்லாததுதானும். இருந்தவர்களைக்கொண்டு வங்காள ராஜதானியில் ப்யூஸா பட்டணத்திலும், மத்யமாகாணங்களில் நாகப்பூரிலும், ஐக்யமாகாணங்களில் கான்பூரிலும், வங்காள மாகாணத்தில் ஸிப்பூரிலும், சென்னை ராஜதானியில் சைதாப்பேட்டையிலும், விவசாய காலேஜுகள் ஏற்படுத்தி, சேர்ந்த பிள்ளைகளுக்கு விவசாயத்தைப்பற்றி படிப்புச் சொல்லிக் கொடுத்து வந்தார்கள்.

1889-ம் வர்ஷத்தில் இந்தியாவிலுள்ள விவசாய முறைகளை யெல்லாம் ஆராய்ந்து பார்த்து, க்ரமமான வழிகளை எடுத்துச் சொல்ல, டாக்டர் வோயல்கர் என்ற ஒரு நிபுணரை இந்தியா கவர்ன்மெண்டார் தருவித்தார்கள். அவர், விவசாயத்தை ஒட்டிய ரஸாயன சாஸ்த்ரத்தில் நிபுணர். அவர் இந்தியா முழுவதும் ஒரு வர்ஷம் சுற்றிப் பார்த்து, பலவித சிபார்சுகள் செய்தார். அவைகளின் மொத்த தாத்பரியம் என்ன வென்றால், இந்தியாவில் விவசாயிகளுக்கு, ஒரு கார்யத்தைச் செய்வதற்கு முன்னால், அதை ஏன் அப்படிச் செய்யவேண்டும் என்பதற்குள்ள காரணத்தை அறியும்படியான சாஸ்த்ர ஞானம் உண்டாக்க வேண்டுமென்பதும், அந்த சாஸ்த்ர ஞானத்தை உண்டுபண்ண ஒரு ப்ரத்யேக இலாகா ஏற்படுத்த வேண்டும் என்பதுந்தான்.

உழுது சாகுபடி செய்கிறவனுக்கு சாஸ்த்ர ஞானம் என்னத்துக்கு? பயிருக்கு, மழையும் ஜலமும் ஒத்துவந்தால், அது தானே விளைந்துவிட்டுப் போகிறது என்று சிலபேர் சொல்லலாம். அப்படிச் சொல்வதில் கொஞ்சம் வாஸ்தவ மிருந்தாலும், க்ருஷிகன் தன்னுடைய புத்தியால் எவ்வளவோ லாபம் அடையக்கூடிய வழிகள் உண்டு. எல்லா நிலங்களும் ஒரேவிதமாக விளைகின்றனவா? எல்லாப் பயிர்களும் எல்லா நிலங்களிலேயும் பிடிக்குமா?, எந்த எரு என்ன நிலத்திற்குப் போடவேண்டும்? நிலங்கள் முன்போல் விளையாதிருப்பதற்குக் காரணமென்ன?, சவர் நிலங்களை எப்படி திருத்துகிறது?, கரும்பில் சர்க்கரை அதிகமா யிருப்பதற்கும் குறைந்திருப்பதற்கும் காரணமென்ன?, என்ற இவைகளைப் போன்ற விஷயங்களைத் தெரிந்துகொள்ள, ரஸாயன சாஸ்த்ர ஞானம் வேண்டியது அவச்யம். பயிர், புல், பூண்டு, செடி முதலியவைகளின் உபயோகங்களென்ன?, அவைகளை சாதாரணமாய் உண்டாகும் ஒரு இடத்திலிருந்து வேறொரு இடத்தில் பயிர் செய்யலாமா?, ஒரே விதப் பயிர்களிலுள்ள வித்யாஸங்களென்ன?, என்ற இவை போன்ற விஷயங்களைத் தெரிந்துகொள்ள "பாடனி", அதாவது, ஸ்தாவர சாஸ்த்ர ஞானம் வேண்டியது. கரும்பில் அரக்கு விழுவதையும், இன்னும் பயிர், செடிகளில், விழும் நோய்களையும் பரிஹரிப்பதற்கு "மைகாலொஜி" அதாவது, காளான் முதலிய பயிர் வ்யாதிகளில் ஞானம் தேவை. பயிர்களையும், செடிகளையும், இலைகளையும் அடித்தும், அரித்தும், பலவித தீங்குகளைச் செய்கிற பூச்சி, புழு, முதலியவைகளின் ஸ்வபாவங்களை அறிந்து அவைகளை போக்கடிக்க,

"என்டமாலொஜி", அதாவது, சிற்றுயிர் லக்ஷண சாஸ்த்ர ஞானம் தேவை.

வெள்ளாமை என்பது வல்லாமையல்லவா? வல்லாமை என்றால் தேக பலம் மட்டும் அல்ல. புத்திபலமும் சேர்ந்தது. ஊழல் பயிர் செய்யாமல், லாபகரமாய் பயிர் செய்ய, மேலே சொல்லிய சாஸ்த்ரங்களில் ஞானம் அவச்யம் வேண்டும் என்பதே டாக்டர் வோயல்கர் போன்ற புத்திமான்களின் அபிப்ராயம்.

ஆசையால், இந்த அபிப்ராயத்தைக் கொண்டே, 1892-ம் வர்ஷத்தில் இந்தியா கவர்ன்மெண்டார் ஒரு விவசாய ரஸாயன சாஸ்த்ரியை நியமித்தார்கள். அவருக்கு முக்ய வேலை என்ன வென்றால், மாகாண கவர்ன்மெண்டார்களுக்கு விவசாய விஷயமாய் வேண்டிய ஒத்தாசைகளைச் செய்வதே. அது முதல், இந்தியா கவர்ன்மெண்டாரும், மாகாண கவர்ன்மெண்டார்களும், உசிதம் போல், அவரவர்களுக்குத் தேவையான நிபுணர்களை நியமித்துக் கொண்டும், பரீக்ஷைப் பண்ணைகளை ஏற்படுத்திக்கொண்டும், விவசாய இலாகாவை பலப்படுத்திக் கொண்டே வந்திருக்கிறார்கள். இந்தியா கவர்ன்மெண்டாரைப் பற்றின மட்டில் முதலில் சொல்லுவோம்.

இவர்கள் 1901-ம் வர்ஷம் மார்ச்சு மாஸத்தில் "பாடனிஸ்ட்", அதாவது, ஒரு ஸ்தாவர சாஸ்த்ரியை நியமித்தார்கள். அதே வர்ஷம் அக்டோபர் மாஸத்தில், இந்தியாவைச் சேர்ந்த ரஸாயன சாஸ்த்ரி, ஸ்தாவர சாஸ்த்ரி முதலிய சாஸ்த்ரீய உத்யோகஸ்தர்களுக்கு அதிபதியாகவும், சாஸ்த்ரீய விஷயமாய் மாகாண கவர்ன்மெண்டார்களுக்கு வேண்டிய ஆலோசனைகள் சொல்வதற்காகவும், இந்தியாவிலுள்ள ஸகல விவசாய இலாகாக்களுக்கும் தலைவராக, "இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆப் அக்ரிகல்சர்" என்ற ஒரு பெரிய உத்யோகஸ்தரை நியமித்தார்கள். 1903-ம் வர்ஷத்தில் பூச்சி, புழு முதலிய சிற்றுயிர்களால் பயிர்களுக்கு நேரிடும் நன்மை தீமைகளை அறிய "என்டமாலோஜிஸ்ட்" அதாவது, சிற்றுயிர் லக்ஷண சாஸ்த்ரி ஒருவரை நியமித்தார்கள். அதே வர்ஷத்தில், வடக்கே பீஹார் மாகாணத்தில் ப்யூஸா என்னும் பட்டணத்தில், ஒரு விவசாய ஆராய்ச்சி சாலையையும், பண்ணையையும் ஏற்படுத்தினார்கள், அதை ஒட்டி ஸகல ஸாதனங்களும் அமைக்கப்பட்ட "லாபொரெடரி" அதாவது, வஸ்து சோதனை சாலையும், ஒரு விவசாய காலேஜும், ஆடு மாடுகள் வளர்க்கும் இடமும், ஏற்படுத்தப்பட்டன. இந்தப்பண்ணை 1358 ஏகரா விஸ்தீரணமுள்ளது. இந்திய விவசாய இலாகாவைச் சேர்ந்த ஸகல நிபுணர்களும் இவ்விடத்திலேயே இருக்கவேண்டியவர்கள். நிலத்தைத் தவிர, கட்டிடங்கள் மட்டும் சுமார் 17-லக்ஷம் ரூபாய் பெறும். இந்தக் கட்டிடத்தில் விவசாய இலாகா சாஸ்த்ரிகளுக்கு வேண்டிய வஸ்து சோதனை சாலையும், பயிர்க்கொல்லையும், ம்யூஸியமும், புஸ்தகசாலையும், ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவைகள் தவிர, விவசாயப் படிப்புக்குச் சேர்ந்திருக்கும் பிள்ளைகளுக்கு வேண்டிய இடங்களும், பரிசோதனை சாலைகளும், அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த ப்யூஸாப் பண்ணையில் விவசாய விஷயமாய் மாகாண கவர்ன்மெண்டார்களாலும், அவர்களுக்கு உள்பட்ட விவசாய நிபுணர்களாலும், செய்ய முடியாத ஸகலவித ஆராய்ச்சிகளும் செய்வதற்கு வேண்டிய எல்லா ஸாதனங்களும் இருக்கின்றன.

மாகாண கவர்ன்மெண்டார்களால் செய்ய முடியாத ஆராய்ச்சிகளை ப்யூஸா பண்ணையில் இந்தியா கவர்ன்மெண்டின் நிபுணர்கள் செய்வார்கள் என்று மேலே சொன்னோம். இந்தியாவிலுள்ள பல மாகாணங்களில் எந்த மாகாணத்தில் எது முடியாது?, ஒரு மாகாணத்தில் செய்யமுடியாத ஆராய்ச்

சிலைய மற்றொரு மாகாணத்தில் செய்ய லாமே; அப்படிச் செய்தால் அதையே ப்பூஸாப் பண்ணையில் செய்யவேண்டு வதில்லையே என்றால், இப்படிக்கெல்லாம் நேரிடாதிருப்பதற்காகவும், ஒரே வித ஆராய்ச்சியை பல இடங்களில் செய்யாதிருப்பதற்காகவும், இன்னார் இன்னார் இன்ன இன்ன ஆராய்ச்சி செய்யவேண்டும் என்று தீர்மானித்துக் கொள்வதற்காகவும், வர்ஷந்தோறும், அந்தந்த மாகாணங்களிலுள்ள விவசாய சாஸ்த்ரிகளும், இந்தியா கவர்ன்மெண்டாருக்கு நேரே கீழ்பட்ட சாஸ்த்ரிகளும், ஒரு இடத்தில் மீட்டிங் கூடி பேசிவரும்படி செய்திருக்கிறார்கள். இந்த ஸபையில் கூடும் சாஸ்த்ரிகள், அவரவர்கள் செய்யும் ஆராய்ச்சியை வெளியிட்டு, விவசாய விஷயமாகச் செய்யவேண்டிய அபிவ்ருத்திகளைப்பற்றி மாகாண கவர்ன்மெண்டார்களுக்கும் இந்தியா கவர்ன்மெண்டாருக்கும் சிபார்சு செய்து வருகிறார்கள்.

நிற்க, 1905-ம் வர்ஷத்தில் இந்தியாவில் விவசாயத்தொழிலை முன்னுக்குக் கொண்டு வரவேண்டுமென்ற எண்ணத்துடன் இந்தியா கவர்ன்மெண்டார் இந்தியா மந்திரிக்கு எழுதி, ஏற்கெனவே செலவிடப்பட்டு வந்த தொகையைத் தவிர, வர்ஷந்தோறும் இருபது லக்ஷம் ரூபாயை எல்லா மாகாண கவர்ன்மெண்டார்களுக்கும் தக்கபடி பிரித்துக் கொடுத்து ஒத்தாசைசெய்ய உத்தரவு பெற்றார்கள். இப்படிக்குப் பணம் கொடுப்பதோடு, ஒவ்வொரு மாகாண கவர்ன்மெண்டாரும் பொதுவாய் இன்னவிதமாக விவசாயத்தை அபிவ்ருத்தி செய்யவேண்டுமென்றும், அதற்காக என்ன ஏற்பாடுகள் செய்யவேணு மென்றும், இந்தியா கவர்ன்மெண்டார் சொல்லியிருக்கிறார்கள். அந்த ஏற்பாடுகளை இங்கே விவரிக்க வேண்டியதில்லை. ஏனென்றால், அவைகள் இன்னவென்று, சென்னை கவர்ன்மெண்டார் செய்திருக்கும் ஏற்பாடுகளைப் பார்த்து, சுலபமாய் அறிந்துகொள்ளலாம். இவர்கள் செய்திருக்கும் ஏற்பாடென்னவென்று இனி விசாரிப்போம்.

முதலாவது, ஒரேவித விவசாய ஸாதனங்களுள்ள ஒவ்வொரு முக்ய ப்ரதேசத்திலும் சோதனைப் பண்ணைகள் ஏற்படுத்தவேண்டு மென்பது இந்தியா கவர்ன்மெண்டாரின் அபிப்ராயம். இந்த அபிப்ராயத்தை அநுசரித்து, நமது ராஜதானியில் முதலில் 8 பண்ணைகள் மதராஸ் கவர்ன்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்டன.

அவைகளாவன:—

1. கோதாவரி ஜில்லாவில் சமல்கோட்டை என்னும் ஊரில் கரும்பு சாகுபடியைப் பற்றி விசாரணை செய்ய ஒரு பண்ணை.

2. பல்லாரி ஜில்லாவில் பல்லாரி பட்டணத்தில் பருத்தி, சோளம், இந்தப் பயிர்களைப் பற்றி விசாரணை செய்ய ஒரு பண்ணை.

3. அதே ஜில்லாவில் பருத்தி சாகுபடிக்கு லாயக்கான கருவல நிலங்களுக்கு நீர் பாய்ச்சுதலை ஆராய்ச்சி செய்ய ஒரு பண்ணை.

4. அனந்தப்பூர் ஜில்லா, ஹிந்துப்பூரில் கற்றாழை சாகுபடியைப் பற்றிய ஒரு பண்ணை.

5. கர்நூல் ஜில்லாவில் நந்தியால் பட்டணத்தில் வடக்கத்தப் பருத்தியை சோதனை செய்ய ஒரு பண்ணை.

6. தென்னாற்காடு ஜில்லா நெல்லிக்குப்பத்துக்கடுத்த பாலூரில் மணிலாக்கொட்டைப் பயிரையும், கரும்புப் பயிரையும் சோதிக்க ஒரு பண்ணை.

7. திருநெல்வேலி ஜில்லாவில் கோயில்பட்டியில் பருத்தியைப்பற்றிய ஒரு பண்ணை.

8. மலையாளத்தில் தளிப்பரம்பா என்னும் ஊரில் மிளகு கொடியைப் பற்றிய பண்ணை.

இந்த 8 பண்ணைகளைத் தவிர, கோயம்புத்தூரில் விவசாய காலேஜ் ஹெட் உபாத்யாயர் பார்வைக்குள்

டு ஒரு பெரும் பண்ணையும் இருக்கு.

இந்தப் பண்ணைகளில் வர்ஷந்தோ சாகுபடி செய்து, ஆராய்ந்தறி விஷயங்களை ரிபோர்ட்டுகள் மூல ப்ரசுரம் செய்து வருகிறார்கள்.

இரண்டாவது, ஒவ்வொரு மாகா த்திலும் ஏற்படும் பண்ணைகளை ல்பார்வை பார்த்துவர, ஸுபெரி டெண்டுகளையும் நியமிக்க வேண் . இந்த ஸுபெரின்டெண்டுகளை டிப்டி டைரெக்டர்' என்று சொல்ல ம். முதலில் இந்த ராஜதானியை ண்டாகப் பிரித்து, வடபாகத்திற்கு தாவது, தெலுங்கு ஜில்லாக்களுக்கு டிப்டி டைரெக்டரும், தென்பாகத் கு அதாவது, தமிழ் ஜில்லாக் நக்கு ஒரு டிப்டி டைரெக்டரும் மிக்கப்பட்டார்கள்.

ஒவ்வொரு டிப்டி டைரெக்டரும் வருக்கு ஏற்பட்ட நான்கெல்லைக் ர் விவசாய விஷயத்தில் முக்ய அதி ரி. அவர் அவருடைய எல்லைக்குள் பட்டிருக்கும் சோதனைப் பண்ணை ளயும், நிரூபப் பண்ணைகளையும், ல்பார்வை பார்த்து வரவேண்டும். விர, அவர் அவருடைய எல்லைக்குள் நக்கும் விவசாயிகளோடு நெருங் பழகி வரவேண்டும். அவர்கள் கேட் ம் கேள்விகளுக்கு பதில் சொல்ல வண்டும். அவர்கள் புதிதான முறை ள அனுஷ்டிக்கும்படி தைரியப் த்தவேண்டும். விவசாய ஸங்கங் இருந்தால் அவைகளுக்கு ஆலோ னயும் சொல்ல வேண்டும்.

மூன்றாவது, மேலே சொல்லிய ஏற் டுகளால் ஒவ்வொரு மாகாணத்தி ம் விவசாய இலாகாவில் வேலை அதி மாகுமென்பதை சொல்லாமலே றிந்து கொள்ளலாம். இதை நிர் க்க ஒவ்வொரு மாகாணத்திலும் த்யேகமாக டைரெக்டர் என்ற ஒரு காணத் தலைவரை நியமிக்கவேண்டு மன்பது இந்தியா கவர்ன்மெண்டா ன் கருத்து.

நமது ராஜதானியில் 1906-ம் வர்ஷம் வரையில் ரெவினியூ போர்டு மெம்பரில் ஒருவரே விவசாய இலாகாவின் டைரெக்டராக இருந்தார். அந்த வர்ஷத்தில் அந்த ஏற்பாட்டை நிறுத்தி, விவசாய இலாகாவுக்கு மட்டும் ஒரு டைரெக்டர் ஏற்படுத்தப்பட்டார். விவசாய விஷயத்தில் இவர் அதிகாரம் சென்னை ராஜதானி முழுவதிலும் செல்லும்.

நாலாவது, விவசாயத்தில் வேண்டியவைகளை அனுபோக ஸித்தியாய் அறிந்து கொள்வதற்காக ஒரு பெரிய பாரமும் (பண்ணையும்) சாஸ்த்ரீய முறைகளால் அறிந்து கொள்வதற்காக வஸ்து சோதனைசாலைகளும், அப்படிப்பட்ட ஆராய்ச்சிகளைச் செய்யக்கூடிய நிபுணர்களும், அப்படிக்கெல்லாம் செய்து அறிந்த விஷயங்களை விவசாயிகளுக்கு போதிக்க ஒரு காலேஜும், ஒவ்வொரு மாகாணத்திலும் ஏற்படுத்தவேண்டும் என்பது இந்தியா கவர்ன்மெண்டாரின் விருப்பம். இதை அங்கீகரித்தே சென்னை கவர்ன்மெண்டார் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள்.

சென்னப் பட்டணத்துக்கு அடுத்த சைதாப்பேட்டையில் ஒரு விவசாய காலேஜ் நடந்துவந்ததாக மேலே சொன்னோம். இந்த காலேஜில் சொல்லிக்கொடுத்த படிப்பானது, கவைக்குதவாமல், அதில் படித்துத் தேறியவர்கள் விவசாயம் செய்யாமல், வேறு பிழைப்புகளைத் தேடிவந்தார்கள். தவிர, சைதாப்பேட்டையில் அந்த காலேஜை சுற்றிலுமுள்ள பூமியும் ரொம்ப 'பஞ்சை' நிலம். இவைகளையெல்லாம் உத்தேசித்து, மதராஸ் கவர்ன்மெண்டார் 1907 வர்ஷத்தில், சைதாப்பேட்டை காலேஜை நிறுத்தி, நமது ராஜதானியில் விவசாய அபிவ்ருத்திக்கு வேண்டிய ஸகலவித ஸாதனங்களையும் கோயம்புத்தூரில் அமைத்திருக்கிறார்கள். விவசாய விஷயத்தில் ப்யூஸா பட்டணத்தில் இந்தியா கவர்ன்மெண்டார்

எவ்வித ஏற்பாடுகள் செய்திருக்கிறார்களோ, அந்த மாதிரி ஏற்பாடுகளையே நமது மாகாண கவர்ன்மெண்டார் கோயம்புத்தூரில் செய்திருக்கிறார்கள். அதாவது, ஒரு விவசாய காலேஜும், அதை ஒட்டி ஒரு பாரமும் (பண்ணையும்), விவசாய சாஸ்த்ரிகள் ஆராய்ச்சி செய்வற்கு வேண்டிய வஸ்து சோதனை சாலைகளும், ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்த காலேஜ் கட்டி முடிந்து 1909-ஞ் ஜூலை 14-ம் தேதி கவர்னர் ஸர் ஆர்தர் லாலி அவர்களால் திறக்கப்பட்டது.

விவசாய விஷயமாய் என்னென்ன சாஸ்த்ரிகள் நியமிக்கப்பட வேண்டும் என்றும் இந்தியா கவர்ன்மெண்டார் சொல்லி யிருக்கிறார்கள். மாகாண முழுமைக்கும் ஒரு "அக்ரிகல்சரல் கெமிஸ்டு", அதாவது, விவசாய ரஸாயன சாஸ்த்ரியும், ஒரு 'பாடெனிஸ்ட்' அதாவது, ஸ்தாவர சாஸ்த்ரியும், ஒரு "மைகாலஜிஸ்ட்", அதாவது, பயிர்களை பாதிக்கும் காளான் முதலியவைகளில் நிபுணரான ஸ்தாவர சாஸ்த்ரியும், ஒரு "என்டமாலொஜிஸ்ட்", அதாவது, பூச்சி புழு முதலியவைகளில் நிபுணரான சிற்றுயிர் லக்ஷண சாஸ்த்ரியும், நியமிக்கப்படவேண்டும். தற்காலத்தில் நமது ராஜதானியில் இந்த சாஸ்த்ரிகள் எல்லாரும் நியமிக்கப்பட்டு வேலைபார்த்து வருகிறார்கள். இவர்கள் வெளி வேலைகளோடு விவசாய காலேஜ் பிள்ளைகளுக்கும் படிப்புச் சொல்லிக்கொடுத்து வருகிறார்கள். இவர்கள் கோயம்புத்தூரி லிருக்க வேண்டியது. அவசியமானால் சென்னை ராஜதானியில் எந்த இடத்தையும் போய் சுற்றிப் பார்க்கலாம்.

கோயம்புத்தூர் பெரிய பண்ணை 457½ ஏகரா விஸ்தீரண முள்ளது. இதற்குள் காலேஜ் கட்டிடமும், குடியிருப்பதற்கு வேண்டிய கட்டிடங்களும், 'அக்ரிகல்சரல் கெமிஸ்ட்,' அதாவது, விவசாய ரஸாயன சாஸ்த்ரி, பாடொனிஸ்ட், அதாவது, ஸ்தாவர சாஸ்த்ரி, இவர்கள் ஆராய் செய்வதற்கு வேண்டிய. 'லாபொ டரி' அதாவது வஸ்து சோதனை ச களும், அமைக்கப்பட்டிருக்கின்ற நிலமும் கட்டிடமுமாகச் சேர்ந் லக்ஷம் ரூபாய்க்கு மேலாகும். போ வர்ஷம் வரையில், இந்த காலே படித்துத் தேறி, திரும்பிப்போய், சாயம் செய்வார்களென்ற நம்பிக் யுள்ள விவசாயிகள் பிள்ளைகளில் பேர்களை மட்டும் தெரிந்தெடு காலேஜில் சேர்த்துக்கொண்டு வந் கள். இதில் சாதாரணமாய் 3 வர் படிக்கவேண்டி யிருந்தது.

இந்த ஏற்பாட்டில், மாணவர்களு விவசாய வேலையில் பழக்க மேற்ப தற்குமுன் விவசாய சாஸ்த்ரம் பித்து வந்தார்கள். இது மாணவர் க்கு ஏற்றதாயில்லை. அவர்களுக்கு கெனவே போதுமான அளவு க யில்லாததால், அவர்கள் சாஸ்த்ர பா களில் தேர்ச்சியடைவது கஷ்டமா ந்தது. ஆகவே போன வர்ஷத் இந்தக் காலேஜ் விஷயமாய் சில திருத்தங்கள் செய்யப்பட்டன.

இப்போது இந்த காலேஜில் ண்டு ப்ரத்யேகமான வகுப்புகள் படுத்தப்பட்டிருக்கின்றன. மு வகுப்பு இரண்டு வர்ஷகாலம் கும். இந்த வகுப்பில் மாணவர் க்கு அநுபவ ரீதியாக விவசாயம் றுக் கொடுப்பார்கள். இரண்டா வகுப்பில் மாணவர்கள் 1½ வர் வாசிக்க வேண்டும். இதில் மாண களுக்கு விவசாய ஸம்பந்தமான த்ரங்கள் கற்றுக் கொடுக்கப்படும்.

முதல் வகுப்பில் சேர ப்ரியப் கிறவர்கள் ஒரு பரிக்ஷையிலும் யிருக்க வேண்டியதில்லை. கற்பிக் பாடங்களைக் கேட்டறிந்து கொ போதுமான அளவு இங்கிலீஷ் தெ திருந்தால் போதும். இரண்டா வகுப்பில் சேர விரும்பும் மாணவ முதல் வகுப்பில் சேர்ந்து படி தேறியிருக்க வேண்டியதோடு,

ரிகள் குறிப்பிடும் ஒரு பரிக்ஷையில் தறினவர்களா யிருக்கவேண்டும். சில ந்தர்ப்பங்களில் அப்படிக் குறிப்பிட்ட ரிக்ஷையில் தேருத மாணவர்களை, ாலேஜிலுள்ள போதகர்கள் சேர்ந்த ரு கமிட்டியார் ஸம்மதித்தால், இர ாடாவது வகுப்பில் சேர்த்துக்கொள் நவார்கள்.

இந்த சீர்திருத்தத்தின் நோக்கமெ ானவென்ருல்,

(1) காலேஜில் படித்துவிட்டு பிறகு ங்களுடைய ஸொந்த நிலங்களின் ாகுபடியை கவனிக்க விரும்புகிறவர் ளுக்கு ஏற்றதாயும் போதுமானதா ம் ஸாதாரண விவசாயக் கல்வி கற் ப்பது; விவசாய டிபார்ட்மெண்டில் புதிக சாஸ்த்ர அறிவுவேண்டி. பிராத ழ்த்தா உத்யோகங்களில் சேரவிரு புகிறவர்களுக்கு விவசாயக் கல்வி ற்பிப்பது.

(2) விவசாயக் கல்வியை அதிகமா ப் பரவச்செய்ய வேண்டு மென்று னங்கள் சொல்லுவதற்கேற்க, அதிக ாணவர்களைச் சேர்த்துக்கொள்வது. தல் வகுப்பில் வர்ஷந்தோறும் 40 ாணவர்களைசேர்த்துக்கொள்வார்கள். ரண்டாவது வகுப்பில் வர்ஷந்தோ ம் 20 மாணவர்களைசேர்த்துக் கொள் ார்கள்.

காலேஜ் சப்பளம் ஒன்றும் கொடு கவேண்டியதில்லை. ஆனால் அவரவர் ள் சாப்பாட்டுச் செலவுகளை அவ வர்களே செய்துகொள்ள வேண்டி து. இந்தப் பள்ளிக்கூடத்தைச் சேர் த பாரத்தை (பண்ணையை) இந்த ாலேஜ் ப்ரின்ஸிபாலே, அதாவது லைமை உபாத்யாயரே மேல்பார் வை பார்த்து வரவேண்டியது.

இப்படிக் கெல்லாம் சோதனைகள் செய்து போதிப்பதோடு, விவசாயிகளு கு நல்ல வித்துக்கள் தயார்செய்து கொடுக்கவேண்டு மென்பதும் கவர்ன் மண்டார் அபிப்பிராயம். முதலில் கோயில்பட்டி பண்ணையிலிருந்து எடு த கருங்கண்ணி பருத்தி விதையை திருநெல்வேலி விவசாயிகளுக்கு கொடு த்து வந்தார்கள். இப்படி ஸர்க்கார் விவ சாயப் பண்ணைகளிலிருந்து பொறுக்கி எடுத்த பருத்தி விதையைக்கொண்டு போனவர்ஷத்தில் திருநெல்வேலி, கர் நூல், பல்லாரி ஆகிய மூன்று ஜில்லாக் களில் 34,000 ஏகர்களுக்குமேல் சாகு படி செய்யப்பட்டன.

தவிர, ஒரே பயிரில் எந்தவிதம் சிலாக்யமென்று கண்டு அறிவதும் விவ சாய இலாகாவின் நோக்கம். சாமல் கோட்டைப் பண்ணையில் செய்த பரி க்ஷைகளால் சர்க்கரை ஜாஸ்தி காணக் கூடியதும் நோய்விழுந்தால் தாங்கக் கூடியதுமான ஒருவித கரும்பைத் தெ ரிந்தெடுத்து, அதை கோதாவரி ஜில் லாவிலும், தென்னுற்காடு ஜில்லாவி லும், தென்கன்னட ஜில்லாவிலும், கரும்பு சாகுபடி செய்யவேணு மென் கிறவர்களுக்குக் கொடுத்து வருகிருர் கள்.

இவைகளைத் தவிர, கூடியமட்டில் புது தினுசு பயிர்களையும் சாகுபடி செ ய்யும்படியாக விவசாயிகளுக்கு உதவி செய்து வருகிருர்கள். உதாரணமாக, கர் நூல், கடப்பை, அனந்தப்பூர், மலே யாளம், தென்கன்னடம், க்ருஷ்ணு, கோயம்புத்தூர் ஜில்லாக்களில் சில பா கங்கள், இவைகளில் புதிதாய் மணி லாக்கொட்டை சாகுபடியாகி வருகி றது. இதே மாதிரியாக தென் ஜில் லாக்களில் பயிர் செய்யப்படும் கம்போ டியாப் பருத்தி விவசாய இலாகாவால் தருவித்துக் கொடுக்கப்பட்டது.

இன்னும் லாபகரமான புது முறை களையும், ஆயுதங்களையும் சர்க்கார்பண் ணையில் உபயோகித்துக் காட்டி, அவை களை அநுஷ்டிக்கும்படி விவசாயிகளு க்குச் சொல்லிவருகிருர்கள், உதாரண மாக, மதுரை, செங்கல்பட்டு, திருச்சி னுப்பள்ளி ஜில்லா (பிரம்பளூர்), திரு நெல்வேலி, கோயம்புத்தூரில் சில பாகங்கள்,ஆகிய இவ்விடங்களிலுள்ள விவசாயிகள் தங்கள் நன்செய்களிலே யே பசுந்தாள் எருப்பயிர்களை உண்

டாக்கி அவைகளை அந்த நிலங்களி லேயே மடக்கி உழுதுவிடுகிறார்கள். இப்படிச்செய்வதால், தழையை விலைக்கு வாங்கிக்கொண்டு வந்து போடுவதைவிட எவ்வளவோ லாபம் விவசாயிகளுக்குக் கிடைக்கிறது. பருத்தி சாகுபடியில் தேர்ந்த சில வேலைக்காரர்களை பல்லாரியில்இருந்துகோயில் பட்டி பண்ணைக்கு அழைத்துக் கொண்டுபோய் ஜனங்களுக்கு விதைக்கலப்பை முதலிய ஆயுதங்களை, உபயோகப்படுத்தும் வழிகளைக் காட்டியிருக்கிறார்கள்.

கால் நடைகளுக்கு வ்யாதிகள் வந்தால்சிகிச்சை செய்யப்போதுமான வைத்யர்கள் தற்காலத்தில் இல்லை. இவர்களைத் தயாரிக்க சென்னைப்பட்டணத்தில் ஒரு கால்நடை வைத்ய காலேஜ் ஏற்படுத்தி படிப்புச் சொல்லிக்கொடுத்துவருகிறார்கள். சில கால்நடை வைத்யர்களை ஊரூராய் அனுப்பி வைத்யம் செய்ய உத்தரவு பண்ணியிருக்கிறார்கள்.

மேலே சொல்லிய சாச்வதமான ஏற்பாடுகளைத்தவிர, அப்போதைக்கப்போது, காலத்துக்குத்தகுந்த ஏற்பாடுகளும் செய்யப்படும். அவையாவன, விவசாயப் பொருள்காக்ஷிகளும், கால்நடைக் காக்ஷிகளும், விவசாய ஸங்கங்களும் ஏற்படுத்துவதோடுகூட, சுதேச பாஷைகளில் பத்ரிகைகளும் ப்ரசுரம் செய்யப்படும்.

ஒருவன் எவ்வளவு கெட்டிக்காரனுயிருந்தாலும், விவசாயத்தில் எல்லாவற்றையும் அறிந்தவன் என்று சொல்வது அஸாத்யம். சில விஷயங்களில் அளவில்லாத ஞானமும் அனுபோகமும் தேவை. உதாரணமாக, பருத்தி, கோதுமை, கரும்பு, பழவகைகள், புகையிலை, இவை எல்லாம் சாகுபடி செய்து நல்ல லாபம் எடுக்கவேண்டுமானால் ஒவ்வொன்றையும் பற்றிச் சொல்ல ஆயுள் முழுவதும் படித்து உழைத்த நிபுணர் வேண்டும். ஏக காலத்தில் இப்படிப்பட்ட நிபுணர்களை நியமித்தால் அஸாத்யச் செலவாகும். ஆகையால், அப்போதைக்கப்போது வேண்டியவர்களை நியமிப்பதாக இந்தியா கவர்ன்மெண்டாருக்கு அபிப்ராயம். உதாரணமாக, தற்போது பருத்தியைப்பற்றி ஆராய்ச்சி செய்வதற்காக இந்தியா கவர்ன்மெண்டின் கீழ் ஒரு நிபுணரை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். ...தேமாதிரியாக கரும்பைப்பற்றியும், மீனி வளர்த்தலைப்பற்றியும், ஆராய்ச்சி செய்ய சென்னை கவர்ன்மெண்டின் கீழ் இரண்டு நிபுணர்கள் இருக்கிறார்கள்.

தற்காலத்தில் இந்தியாவிலேயே, விவசாயத்தில் சாஸ்த்ரீய நிபுணர்கள் இல்லாததால் விவசாய இலாகா பெரிய உத்யோகஸ்தர்களெல்லாம், சீமையிலிருந்து வரவழைக்கப் பட்டிருக்கிறார்கள். ப்யூஸா காலேஜில் சேரும் பிள்ளைகள் படித்துத்தேறி, நிபுணர்களானல் அவர்கள் விவசாய இலாகாவில், உயர்ந்த உத்யோகங்களுக்கு நியமிக்கப்படுவார்கள்.

இப்படியாக சென்னை விவஸாய டிபார்ட்மெண்டானது 1905-06-ம் வர்ஷத்தில் சீர்திருத்தி யமைக்கப்பட்டது. இப்படியே இதர மாகாணங்களிலும் விவசாய இலாகா முன்னேற்றம் பெற்றது. ஆகவே, ஒவ்வொரு மாகாணத்திலும் தனி விவசாயடைரெக்டர் ஏற்பட்டுவிட்டபடியால், அவைகளுக்கு விவசாய விஷயமாய் ஆலோசனை சொல்ல 1901-ம் வர்ஷத்தில் ஏற்படுத்தப்பட்ட 'இன்ஸ்பெக்டர் ஜெனரல்ஆப் அக்ரிகல்சர்' என்ற உத்யோகம் அனுவச்யமாயிற்று. ஆகையால் அந்த உத்யோகத்தை 1912-ம் வர்ஷக் கடைசியில் இந்தியாகவர்ன்மெண்டார் எடுத்துவிட்டார்கள்.

1905-06-ம் வர்ஷம் முதல் சென்னை விவசாய டிபார்ட்மெண்டின் முயற்சியால் நமது ராஜதானியின் விவசாயத்தில்சில நல்லசீர்திருத்தங்கள்ஏற்பட்ட போதிலும், அப்படி சீர்திருத்தங்கள் பரவியிருக்கும் ஜில்லாக்கள் எட்டு அல்லது ஒன்பதுக்குமேலில்லை. இ...

னும் பல இடங்களில் விவசாயப் பண்ணைகள் ஸ்தாபிக்க வேண்டுமென்றும், மேல் குறிப்பிட்ட ஜில்லாக்கள் போக மற்ற ஜில்லாக்களிலும் விவசாய முறைகளை சீர்திருத்த, டிபார்ட்மெண்டார் முயற்சியெடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், லெஜிஸ்லேடிவ் கௌன்ஸில் மெம்பர்களும், ஜில்லா ஸங்கங்களும் அடிக்கடி கேட்டுக்கொண்டும், வேண்டிய ஸிப்பந்திகளில்லாததால், கவர்ன்மெண்டார் மேற்சொன்ன வேலைகளைச் செய்ய ஸாத்யப்படாமல் போயிற்று. ஆகிலும் இன்னும் பண்ணைகள் ஸ்தாபிப்பதற்கும், ஏற்கனவே கவனித்துவந்த ப்ரதேசங்களையன்றி மற்ற விடங்களிலும் சீர்திருத்தங்களைப் பரவச்செய்வதற்கும், ஸௌகர்யமாக, மேற்படி டிபார்ட்மெண்டில் சில திருத்தங்களை போன வர்ஷம் முதல் செய்திருக்கிறார்கள்.

இந்த ராஜதானியை மொத்தம் 7-பிரிவுகளாகப் பிரித்து, அந்தப் பிரிவுகளில் ஒவ்வொன்றிற்கும் ஒரு டிப்டி டைரெக்டரை தலைவராக நியமித்திருக்கிறார்கள்.

தற்போது கோயம்புத்தூர் விவசாய காலேஜில் ஒரு பண்ணையும், மலையாளம் ஜில்லா தளிப்பரம்பாவில் ஒன்றும், திருநெல்வேலி ஜில்லா கோயில்பட்டியில் ஒன்றும், தஞ்சாவூர் ஜில்லா மங்கநல்லூரில் ஒன்றும், பல்லாரி ஜில்லா ஹகரியில் ஒன்றும், கர்நூல் ஜில்லாவில் நந்தியால், சிறுவெல் ஆகிய இரண்டிடங்களில் இரண்டும், கோதாவரி ஜில்லா ஸாமல் கோட்டையில்ஒன்றும், விசாகப்பட்டணம் ஜில்லா அனகாபள்ளியில் ஒன்றும், தென்னாற்காடு ஜில்லா பாலூரில் ஒன்றுமாக மொத்தம் 0 விவசாயப் பண்ணைகள் ஸ்தாபித்திருக்கிறார்கள்.

போன வர்ஷத்து ஏற்பாட்டின்படி இன்னும் 9 பண்ணைகள் ஏற்படுத்துவார்கள். அவைகள் ஸ்தாபிக்கப்படும் ஜில்லாக்கள் பின் வருமாறு:-கஞ்சம்-1; குண்டூர்-1; க்ருஷ்ணா டெல்டாவிலாவது நெல்லூரிலாவது-1; அனந்தபுரம்-1; வட ஆற்காடு-1; சேலம்-1; மதுரை-1; மலையாளம்-1; தென்கன்னடம்-1. புதுப் பண்ணைகள் ஸ்தாபிப்பதற்கும், அதிகப் பிரிவுகள் ஏற்படுத்துவதற்கும் தக்கபடி பண்ணை மானேஜர்களும் ஜில்லா இன்ஸ்பெக்டர்களும் மற்ற ஸிப்பந்திகளும் அதிகமாக நியமிக்கப்படுவார்கள்.

இந்தப் புது ஸ்கீமுக்கு வர்ஷத்துக்கு $2\frac{3}{4}$ லக்ஷம் ரூபாய் அதிகப்படியாகச் செலவழியுமாம். தவிர, இந்த ராஜதானியில் ஏராளமாய் சாகுபடி செய்யப்பட்டு வருகிற தென்னையைப் பற்றிய விஷயங்கள் ஒருவருக்கும் பூராவாகத் தெரியவில்லை. அவைகளை ஆராய்ந்தறிவதற்காக மலையாளத்திலும், தென் கன்னடத்திலும், மூன்று பண்ணைகள் ஸ்தாபிப்பதாக ஸமீபத்தில் ஏற்பாடாகி இருக்கிறது. இதோடு கூட இதுவரையில் டைரெக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸ் என்று சொல்லப்படும் கைத்தொழில் இலாகா அதிகாரியின் வசமிருந்த கிணறு வெட்டுதல், ஆயில் இன்ஜின்களைக் கொண்டு தண்ணீர் இறைத்தல், முதலிய வேலைகளை விவசாய இலாகா டைரெக்டரே பார்த்து வரும்படி ஏற்பாடாகியிருக்கிறது.

மொத்தத்தில் சுருக்கிச் சொல்ல, 1905-ம் வர்ஷம் முதல்தான் இந்தியாவில் விவசாய இலாகா மும்முரமாய் வேலைசெய்ய ஆரம்பித்தது. அந்த வர்ஷத்தில் இந்தியர்களும் ஐரோப்பியர்களுமாகச் சேர்ந்து 158 உத்யோகஸ்தர்கள் இருந்தார்கள். இப்பொழுதோ சுமார் 866 பேர்களிருக்கிறார்கள். 1905-ம் வர்ஷத்தில் சோதனைப் பண்ணைகளும் நிரூபப் பண்ணைகளுமாகச் சேர்ந்து 35 தானிருந்தன. இப்பொழுதோ அவைகள் 374-ஆகப் பெருகி யிருக்கின்றன. 1904-05-ம் வர்ஷத்தில் இந்தியாவில் விவசாயத்தின் அபிவ்ருத்திக்காக ரூ. 8,81,124 செலவு செய்யப்பட்டது. 1913-14-ம் வர்ஷத்தில் செலவானது ரூ. 51,30,652.

இதுவரையில் முக்யமாய் நெல், கோதுமை, பருத்தி, கரும்பு, புகையிலை, மணிலாக்கொட்டை ஆகிய இவைகளைப்பற்றியே விவசாய இலாகாவில் கவனம் செலுத்தி யிருக்கிறார்கள். இதுவரையில் இந்த இலாகாவின் பயனாக குறைந்தது வர்ஷமொன்றுக்கு இந்திய விவசாயிகளுக்கு மூன்றரை கோடி ரூபாய் லாபமென்று சொல்லலாமென்று ஒரு பெரிய விவசாய உத்யோகஸ்தர் மதிப்பிட்டிருக்கிறார்.

இந்தியா கவர்ன்மெண்டின் வர்ஷ வரும்படியும் செலவும் சுமார் 120 கோடி ரூபாயாகிறது. இதில் நாலில் ஒன்று அதாவது 30 கோடி ரூபாய் நிலத் தீர்வையாக கவர்ன்மெண்டார் வஸூல் செய்கிறார்கள்.

பொது ஜனங்களின் ஸௌகர்யத்துக்காக 120 கோடி ரூ. செலவழிக்கிற இந்தியா கவர்ன்மெண்டார், 30 கோடி ரூ. தீர்வையாகக் கட்டுகிற விவசாயிகள் விஷயத்தில், 50 லட்சம் ரூ. மட்டும் செலவழிப்பது போதுமா? இன்னும் செலவழிக்க பணமில்லை என்றுவது, மனிதரில்லை என்றுவது, சொல்வது சரியல்ல. பணமிருந்தால் எதுவும் கிடைக்கும். ஆகையால் நமது கவர்ன்மெண்டார் விவசாயத்தைவ்ருத்தி செய்யும் விஷயத்தில் என்ன பணக்கஷ்டமிருந்தாலும் பின் வாங்காமல் தாராளமாய் செலவு செய்வார்களென்று நம்புகிறோம்.

---

# இந்தியத் தொழில் நிலைமை.

[மிஸ்டர் சி. துரைசாமி ஐயங்கார் எழுதியதின் மொழிபெயர்ப்பு.]

### விவசாயமே முக்ய தொழில்.

இவ்விந்திய தேசத்திலும் அதைச் சேர்ந்த சுதேச சமஸ்தானங்களிலும், மொத்தம் 3150 லட்சம் ஜனங்களிருக்கின்றனர். இப்பெரும் ஜனத்தொகையில் முக்கால் பாகத்தினர், விவசாயத் தொழில் செய்தே பிழைக்கின்றனர். மொத்த ஜனத்தொகையையும், சாகுபடியாகும் நிலங்களையும் கணக்கிட்டுப் பார்ப்போமானால், ஆள் ஒன்றுக்கு ஒரு ஏக்ராநிலம் வீதம் பயிரிடப்படுகிறது என்று சொல்லலாம். அந்நிலங்களையும், விவசாயத் தொழிலினால் பிழைப்பவர்களையும் மாத்திரம் கணக்கிட்டுப் பார்ப்போமானால், ஆள் ஒன்றுக்கு $1\frac{1}{4}$-ஏக்ரா வீதம் ஏற்படுகிறது. இப்பெரிய தேசத்தின் எல்லா ஜனங்களுக்குந் தேவையான ஆகாராதிகள் முழுமையும், சர்க்கரை ஒரு சாமான் தவிர, இந்நிலங்களினின்றுமே கிடைக்கின்றனவென்பதை நன்கு கவனிக்க வேண்டும். தேச ஜனங்களுக்கு வேண்டிய தேவைகளை மீட்பதன்றி, உலகத்தோருக்கு வேண்டிய சணல், பருத்தி, அரிசி, கோதுமை, கொட்டைமுத்து முதலிய சாமான்களும் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. உலகத்திலுள்ள பருத்தி விளையும் முக்கியமான இடங்களில், இந்தியாவையே இரண்டாவதாகச் சொல்லலாம். சணலோ, உலகத்தில் இந்தியாவில் ஒரு தேசத்திலேயே விளைகிறது. இதர தேசத்தவர்களுக்கு விற்றுக் கிடைக்கும் பணத்தைக் கொண்டே, இந்தியர் தங்களுக்கு வேண்டிய சாமான்களை வரவழைக்கவும், ராஜாங்க நிர்வாகத்தில் ஏற்படும் அன்னியதேசச் செலவுகளை வகை செய்யவும், முடிகிறது. இவ்வாறு இதர தேசங்களுக்கு அனுப்பப்படும் பொருள்கள் விளையும் நிலங்களைத் தள்ளிக் கணக்கிட்டுப் பார்ப்போமானால், இந்தியாவிலுள்ள ஜனங்களுக்கு ஆள் ஒன்றுக்கு ஒரு ஏக்ரா பூமியில் மூன்றில் இரண்டு பாகம் வீதம் சொந்தச்செலவுக்கு பயிரிடப்படுவதாக ஏற்படுகிறது. அதாவது, ஒரு ஏக்ராவில், மூன்றில் இரண்டுபாகத்தில் விளையும் பொருள்களைக் கொண்டே ஒவ்வொருவரும் அன்ன வஸ்திரம் அடைந்துவருகின்றனர். ஆகையால், இந்தியக் குடியானவர்கள் தங்கள் நிலத்தில் நெற்றி வியர்வை நிலத்தில் சொரியும்படியாக உழைக்கின்றனரென்பதும், ஜனங்கள் ஆகாராதிகளின் செலவில் ரொம்பவும் செட்டாக இருக்கின்றனரென்பதும் நன்கு வெளியாகின்றன. இனி குடியானவர்களைத் தவிர, அநேக மிராசுதாரர்கள் நிலவருமானத்தினின்றுமே ஜீவித்து வருகின்றனர். குடியானவர்கள் இம் மிராசுதாரர்களின் நிலத்தைப் பயிரிட்டு, தாங்கள் படும் பாட்டுக்காக அம்மிராசுதாரர்களிடமிருந்து தினக் கூலியோ அல்லது மாதக் கூலியோ பெறுகின்றனர். இனி, இந்திய கிராமத்தின்கண் உள்ள குயவன், கொல்லன், தச்சன், அம்பட்டன், சக்கிலியன், வண்ணான் முதலானவர்கள் நிலத்தில் நேராக பாடுபடாவிட்டாலும், தாங்கள் செய்யும் வேலைக்கு அக்கிராமத்திலுள்ள நிலங்களில் விளையும் பொருளில் வீதம் பெற்றே ஜீவிக்கின்றனர். மேலும், இந்தியாவில் மொத்தஜனங்களிலே பத்தில் ஒன்பது பாகத்தினர், கிராமங்களிலேயே

வசித்து, விவசாயத்தையே அனுஷ்டிக்கின்றனர். தவிர விவசாயத்தையே நம்பியிருக்கும் தேசங்களில் மற்றத் தொழில்களெல்லாம் அவ்விவசாயத்தையே சார்ந்திருக்கின்றன. ஆகையால் ஒரு பொருள் விளையாவிட்டால் உடனே அப்பொருள் சம்பந்தமான விஷயங்கள் அனைத்திலும் பஞ்சம் ஏற்படுகின்றது. அதாவது இந்தியர் பெரும்பான்மையோர் விவசாயத்தை அனுஷ்டிக்கின்றனர். இதர தொழில்களும் அநேகமாய் விவசாயத்தையே சார்ந்திருக்கிறது.

## பஞ்சத்தை நிவர்த்திக்க சாதனங்கள்.

இந்திய விவசாயம் முழுமையும் பருவகால மழையைப் பொறுத்திருக்கின்றது. சில சமயங்களில் இம்மழையில் குறைவு ஏற்படுகின்றது. அல்லது மழையே இல்லாமல் போய்விடுகின்றது; சில சமயங்களில் தேசத்தில் ஒரு பாகத்தில் மாத்திரம் மழைபெய்யாமலிருந்துவிடுகிறது; இன்னும் சிற்சில சமயங்களில் தேசத்தில் பெரும் பாகத்தில் மழை இல்லாமல் போய்விடுகின்றது. அபூர்வமாய்த் தேசம் முழுமையும் மழை பெய்யாமலிருக்கின்றது. பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் பஞ்சம் ஏற்படக் கூடுமென்ற நிகிலினால், 40 வருட காலமாக ஏற்படுத்தியிருக்கும் ரயில் பாதைகள், கால்வாய் முதலியவைகளின் சாதகங்களினால் பஞ்சபயம் அநேகமாய் நிவர்த்தியாகி விட்டதெனலாம். தற்காலம் இந்தியாவில் 31 ஆயிரம் மைல் நீளம் ரயில் பாதையிருக்கிறது 230லட்சம் ஏக்கர் நிலங்கள்வாய்க்கால் பாய்ச்சலைக் கொண்டிருக்கின்றன. ரயில் பாதைகளின் சாதகத்தினால் அதிக தூரத்திலுள்ள இடங்களிலிருந்து மழை இல்லாமல் பஞ்சம் ஏற்படக்கூடிய இடங்களுக்குப் பொருள்கள் அதி சீக்கிரத்தில் கொண்டுவரப்படுகின்றன. தேச முழுவதும் மழையன்னியில் பயிர்கெடுவது அதி அபூர்வமாகையால் இவ் வேற்பாட்டினால் மழை இல்லாத இடங்களிலுள்ளவர்களுக்கு பஞ்சம் ஏற்படுமென்ற பயத்திற்கு இடமில்லை.

## கைத்தொழில் விருத்தி அவசியம் வேண்டும்.

சென்ற 20 வருட காலமாக இந்தியாவின் ஜனத்தொகை 100-க்கு 20 வீதம் அல்லது 500 லட்சம் ஜனங்கள் அதிகரித்திருக்கின்றது. இந்த ஏராளமான ஜனங்களுக்குதற்காலம் இந்தியாவில் போதுமான பிழைப்பு இருப்பதாகச் சொல்வதற்கில்லை. விவசாயத்தையே இனி முற்றிலும் நம்புவதுபயன்படாது ஆகையால் இந்தியாவில் தொழில் மாறுதல்களும், முன்னேற்றமும் இப்பொழுதுதான் ஆரம்பித்து வருவதாகச்சொல்லவேண்டும். இதை நாம் விவசாய மாறுதல்களிலேயும், தூரதேசங்களில் விற்கக்கூடிய பொருள்கள் பல இப்போது பயிராகி வருவதிலும் கவனிக்கலாம். இனி, பல குறிப்பிட்ட ஸ்தலங்களிலும், விசேஷ சௌகரியங்கள் பொருந்திய இடங்களிலும் நானாவித தொழில்சாலைகளும், சுரங்கவேலைகளும் ஏற்பட்டு வருவதைக் கவனிக்கலாம். இவ்வாறு நூதனமாய் ஏற்பட்டு வரும் தொழில் ஸ்தாபனங்களுள், தங்கம், நிலக்கரிச் சுரங்கங்களும், பருத்தி சணல் யந்திர சாலைகளும், காப்பி தேயிலை தோட்டங்களும் முக்கியமாய்க் குறிப்பிடத்தக்கன. இவை தவிர இன்னும் அநேகம் தொழிற்சாலைகள் படிப்படியே ஏற்பட்டு வருகின்றன.

## சில முக்கிய தொழில்கள்.

தொழிலின் அபிவிருத்தியை கவனிக்கையில், பருத்தி நெசவில் ஏற்பட்ட விஸ்தாரமான முன்னேற்றத்தை நாம் முதல் முதல் குறிப்பிடவேண்டும். பருத்தி யந்திர நெசவு 1851-ம் வருஷத்தில் இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பித்து வெகுகாலம், ஐரோப்பியர்களின் ஆதீனத்தை ஒட்டி நடந்து வந்தது. நாளடைவில் இந்தியர்களும் இதிற் கவலை காட்டி, மூலதனப்

போட்டு, விருத்தி செய்ய எத்தனித்தார்கள். 1884-ம் வருஷத்தில் 63-யந்திர சாலைகள் மொத்தம் 666½-லட்சம் ரூபாய் மூலதனத்துடன் ஏற்பட்டன. சுமார் ½ லட்சத்திற்கு மேற்பட்ட கூலியாட்கள் வேலை செய்யலாயினர். 1914-ம் வருஷத்தில் கணக்கிட்டுப் பார்க்கையில், மூலதனம் ஒன்றுக்கு நாலாக அதிகரித்தது; யந்திரசாலைகள் ஒன்றுக்கு நாலாக ஏற்பட்டன; அவைகளில் வேலை செய்யும் கூலியாட்கள் ஐந்து மடங்குக்கு மேலேயே அதிகரித்து விட்டார்கள். தவிர நெசவு நூல்களிலும் மேல்தர ரகங்கள் விஸ்தாரமாகத் தயாரிக்கப்பட்டு வருகின்றன. சென்ற 20 வருஷத்திற்குள் இந்த ஒரு ரகத்திலேயே நெசவு நூல்கள் மூன்று பங்கு அதிகரித்திருக்கின்றன. சமீபகாலத்தில் பிரவர்த்திக்கப்பட்டிருக்கிற பல சீர்திருத்தங்களின் பலனாக, பருத்தி நெசவுத் தொழில் மேன்மேலும் விருத்தியடைந்து, அதி உன்னத பதவிக்கு வரக்கூடுமென்பதற்கு ஐயமில்லை.

சணல் யந்திர சாலைகளை கவனிப்போமாயின், சென்ற 20 வருஷ காலத்திற்குள் இவைகளின் தொகை 21-லிருந்து 64-க்கு அதிகரித்து, அவைகளில் போடப்பட்ட மூலதனம் 270லட்சத்திலிருந்து 1309 லட்சமாக அதிகரித்து, அவைகளினால் பிழைக்கும் கூலியாட்களின் தொகையும் 38 ஆயிரத்திலிருந்து, 2 லட்சத்துப் பதினாயிரமாகக் காலக்கிரமத்தில் விருத்தியாகி இருக்கின்றது. சணல் என்னும் பொருள் இந்தியாவில் ஒரு தேசத்திலேயே பயிரிடப்பட்டு வருகிறது. இத் தொழிலைப் பிரபலப் படுத்தவே சமீபத்தில் நிலக்கரிச் சுரங்கங்கள் வாய்த்திருக்கின்றன போலும். வங்காள ஜனங்கள் தங்களுடைய தொழில் முன்னேற்றத்தில் பம்பாய் நகரத்தைப்போல் கவனம் செலுத்தியிருப்பார்களேயாயின், இந்தப் பெரிய சணல் வியாபாரம் முழுவதும் நமது இந்தியர்களுக்குள்ளேயே இருந்திருக்கலாம். நமது அசிரத்தையால் இந்த வியாபாரம் தற்போது விசேஷமாய் ஆங்கிலக் கம்பெனிகளின் ஆதீனத்தின்கீழ் நடந்து வருகிறது; என்றாலும் காலக்கிரமத்தில் இந்த ஸ்திதி மாறிவருகிறதென்பதை மறுக்கமுடியாது. தவிர சணல் பயிரிடுவோர்களுக்கும் ஏராளமான லாபம் கிடைத்திருப்பது வெளிப்படை.

இவ்விரண்டு முக்கியதொழில் ஸ்தாபனங்கள் தவிர, இன்னும் அநேகம் சில்லரைத் தொழில்களும் பல இடங்களில் ஏற்பட்டுவருகின்றன இரும்புச் சாலைகள், அரிசி யந்திரசாலைகள், எண்ணெய் ஆலைகள், சர்க்கரைச் சாலைகள், தோல்பதனிடும் சாலைகள், முதலிய பலவும், பல இடங்களில் மேனாட்டியந்திர சாதகங்களுடன், தற்காலோசித சாஸ்திரப்பயிற்சியுடன், நடத்தப்பட்டு வருகின்றன. தவிர, நிலக்கரிச் சுரங்கங்களும் தங்கச் சுரங்கங்களும் பிரபலமான ஸ்திதிக்கு வருவதையும் இங்கே குறிப்பிடலாகும்.

**இனி செய்யவேண்டிய கடமை.**

இவை ஒருபக்கமிருக்க, கவனமற்று பார்வையன்னியில், தொழில்கள் பல சுணங்கியும், க்ஷீணித்தும் போயிருக்கின்றன. மூலப் பொருள்களும் இதர சாதனங்களும் இருந்தும், இவ்வாறு தொழில்கள் க்ஷீண நிலைமையிலிருப்பதற்கு இந்தியர்களுள் காலோசித தொழிலப்பியாசம், தொழில் ஞானம் இல்லாமையே காரணமாகும். இந்தியாவில் வசிக்கும் ஜனத்தொகையையும், இந்திய தேசத்தின் விஸ்தீரணத்தையும், இந்தியாவிலிருக்கும் இயற்கை சாதனங்களையும், நாம் நன்கு கவனிப்போமாயின், இதுகாறும் ஏற்பட்டுள்ள தொழிலபிவிருத்தியை விருத்தி என்றே சொல்லலாகாது.

ஆனால் இந்தியாவின் முன்னேற்றத்துக்கு இத்தொழில் விருத்தியே முக்கிய சாதனமாகும். ஏற்கெனவே விவசாயத்தைப் பெரும் பான்மையோர் பிழைப்புக்கு நம்பி இருக்கிறார்கள்.

இவர்கள் இவ்வாறு நம்பியிருக்க, அந்நியர்கள் இந்தியாவின் இயற்கைச் செல்வத்தை சுவாதீனப்படுத்தி விடுகிறார்கள். இந்தஸ்திதியை நிவர்த்தித்து, இந்தியாவின் இயற்கைச் செல்வத்தை இந்தியர்களே விருத்தி செய்து அனுபவிக்கவேண்டுமானால், மேனாடுகளில்பிரபலமாக வழங்கிவரும் தொழில் முன்னேற்றத்தையே நாமும் நன்கு கற்று அனுசரிக்க வேண்டும். இந்தியாவின் தற்கால நிலைமையையும், தொழில் முன்னேற்றத்துக் குரிய சாதக பாதகங்களையும் நன்கு ஆராய்ந்து அறிய இப்போது இந்தியத் தொழில் கமிஷன் ஒன்று நியமிக்கப்பட்டிருக்கிறது. இவர்களின் விசாரணையின்பலனாக, தேவையான சீர்திருத்தங்களும் தகுதியான தொழில்களும் ஏற்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. அவ்வாறு ஏற்படுமாயின், பல சிக்கலான இந்திய ராஜீய தேசீய விஷயங்கள் விமோசனம் பெறும் என்பது திண்ணம்.

# தென் இந்தியாவில் பொதுஜன வாழ்க்கை.

[கே. விசுவநாதய்யர் எழுதியது.]

## இருவகை ராஜ்ய நிர்வாகம்.

உலகத்தில் பலதேசங்களிலும் நடைபெற்றுவரும் கவர்ன்மெண்டுகள் பலாத்காரத்தைக் கொண்டேனும், அல்லது தேச ஜனங்களின் சம்மதத்தைக் கொண்டேனும் நடந்துவருகின்றன. தங்களிஷ்டப்படி ஜனங்களுக்கு நன்மையை அல்லது தீங்கைச் செய்யக் கூடியவர்களாயும், வேறு யாராலும் அடக்கப்படாத அதிகாரத்தை யுடையவர்களாயும் இருக்கிற அரசர்கள் பலாத்காரத்தினால் ஆளுபவர்கள். அவர்களுடைய ஆட்சி எப்பொழுதும் ஜனங்களுக்கு அனுகூலமாக இருப்பது நிச்சயமில்லை. ஆகையால் நாளடைவில் ஜன ஆட்சி என்ற வேறொரு வகை கவர்ன்மெண்டு ஏற்பட்டு, அதுவே இக்காலத்தில் உலகத்தில் அதி வியாபகமா யிருந்து வருகிறது. அந்த ஆட்சியானது ஜனங்களுடைய அபிப்பிராயத்தைத் தனக்கு ஆதாரமாக உடையது. தங்களுக்கு நன்மை எது வென்பதைப் பிறரைவிட ஜனங்கள் தாங்களே அறிந்தவர்கள் என்பது ஜன ஆட்சிக்கு அடிப்படையாக உள்ள கொள்கை. ஜன ஆட்சியானது அரசாக்ஷியை விடத் திறமையாய் இருக்குமென்பதும், ஜனங்களுடைய நடத்தையை ஒழுங்குப்படுத்துமென்பதும், நூல் வல்லோரால் ஒப்புக்கொள்ளப்பட்ட அபிப்பிராயங்கள். உலகத்தின் அனுபோகமும் அதுவே.

## பொதுஜன அபிப்பிராயம்.

இவ்விதச் சிறப்புள்ள ஜன ஆட்சியானது சில தேசங்களில் முழு ஆதிக்கம் பெற்றும், சில தேசங்களில் ஓர் அளவு ஆதிக்கம்பெற்றும் நடந்து வருகிறது. முழு ஆதிக்கம் பெற்றுள்ள தேசங்களில் அரசர்களில்லாமற் போய் குடியரசு, என்ற கவர்ன்மெண்டு ஏற்பட்டிருக்கிறது. சிறிது குறைவாக ஆதிக்கம் பெற்றுள்ள தேசங்களில் அரசர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய அதிகாரம் பொதுஜன அபிப்பிராயத்திற்கு நாளடைவில் முற்றிலும உட்பட்டுவிடுகிறது. இந்த கவர்ன்மெண்டை "மட்டிட்ட அரசாக்ஷி" என்று சொல்லுவது வழக்கம். முழு ஜன ஆக்ஷியை விட இந்த மட்டிட்ட அரசாக்ஷியே சிரேஷ்டமானதென்று வாதிப்பவர்கள், சிலர் உளர். அஃது எப்படியாயினும், இம்மாதிரி கவர்ன்மெண்டுதான் இங்கிலாந்தில் நடைபெற்று வருகிறது. அரசர் ஒருவர் உளராயினும், வரி விதித்தல் முதலிய முக்யமான விஷயங்களில் அவருக்கு அதிகாரமில்லாமல், அந்த அதிகாரமானது ஜனங்களால் செலுத்தப்பட்டுவருகிறது—அதாவது, ஜனங்களது பிரதிநிதிகளால் செலுத்தப்பட்டு வருகிறது. ஒரு தேசத்திலுள்ள பல லட்சம் ஜனங்கள்கூடி ஒரு விஷயத்தைப் பற்றி ஆலோசித்து முடிவு செய்வது அனுஷ்டானத்தில் நடக்கக்கூடாத காரியமாதலால், தங்களுக்குப் பதிலாக அபிப்பிராயங் கொடுக்க அவர்கள் சிலரைப் பிரதிநிதிகளாகக் குறிப்பிட்டுக் கொள்ளுகிறார்கள். அப்படிக் குறிப்பிடப்பட்ட பிரதிநிதிகள் ஆலோசனை நடக்கும் காலங்களில் சொல்லும் அபிப்பிராயமானது அவர்களைப் பொறுக்கி எடுத்த ஜனங்களின் அபிப்பிராயமாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. சௌகரியத்தை உத்தேசித்தே

இந்த முறை அனுஷ்டிக்கப்படுகிறது. ஜனங்களின் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்பட விரும்புகிறவர்கள் ராஜ்ய நிர்வாக விஷயமாக அடுத்த சில வருஷங்களில் நடக்கக்கூடிய முக்யமான சில காரியங்களைப்பற்றித் தங்களுடைய சொந்த அபிப்பிராயம் என்னவென்பதை முன்னாடியே தெரிவித்துவிடுகிறது வழக்கமாகஇருக்கிறது. அவர்களுடைய அபிப்பிராயம் ஜனங்களுடைய அபிப்பிராயத்திற்கு ஒத்ததாக இருக்குமானால் ஜனங்கள் அவர்களைத் தங்கள் பிரதிநிதிகளாகக் கோரிக்கொள்ளுகிறார்கள். ஆகையால் ஜனப்பிரதிநிதிகள் மூலமாக வெளியாகும் அபிப்பிராயங்கள் தேச ஜனங்களின் அபிப்பிராயமாகவே இருக்குமென்று நினைக்கப் போதுமான ஆதாரமிருக்கிறது.

இவ்வாறு நடைபெறும் ஜன ஆட்சியானது மிகவும் சிரேஷ்டமாகக் கருதப்படுகிறதென்று சொன்னோம். ஒரு கவர்ன்மெண்டானது எவ்வளவு நல்லதாயிருப்பினும் அது ஜன ஆட்சியல்லாவிடின் மதிக்கப்படத் தக்கதல்ல என்ற கொள்கை இக்காலத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்றிருக்கிறது. எந்த நல்ல ஆட்சியிலும் ஜன ஆட்சி சம்பந்தப்பட்டிருக்க வேண்டுமென்று இன்னொரு விதமாகச் சொல்வதுமுண்டு. ஆளப்படுவோரின் சம்மதத்தைப் பெற்றதாக ஆட்சி இருக்கவேண்டுமென்றும், அதுவே பலமாகவும் ஊர்ஜிதமாகவும் இருக்குமென்றும் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளும், பிறரும், அடிக்கடி வற்புறுத்தி வந்திருக்கிறார்கள். இம்மாதிரி கவர்ன்மெண்டினால் ஆளப்படும் இத்தேசத்தில் பொதுஜன அபிப்பிராயம் எவ்வளவு செல்வாக்குப் பெற்றிருக்கிறதென்பதை இந்த அத்தியாயத்தில் நாம் விசாரிப்போம்.

**இந்தியாவில் பொதுஜன அபிப்பிராயம்.**

பிரிட்டிஷாரின் ஆட்சி இந்தியாவில் ஊன்றி மேனாட்டுக் கல்வியை நமக்கு அவர்கள் புகட்ட ஆரம்பித்ததின் பயனாக இங்கிலாந்து முதலிய தேசங்களின் சரித்திரங்களையும் இலக்கிய நூல்களையும் நம்மவர்கள் கற்று, கவர்ன்மெண்டுகள் உலகில் எதற்காக ஏற்பட்டிருக்கின்றன வென்பதைப்பற்றி மேனாட்டாருக்குள்ள அபிப்பிராயங்களைத் தெரிந்து கொண்டனர். பிரிட்டிஷார் இத்தேசத்தைத் தமக்கு உட்படுத்தி, தமது ஆளுகையை இங்கு ஊன்றினராயினும், பிரிட்டிஷ் முறைகளை அனுசரித்து நம்மவரின் நன்மையைக்கருதி ஐரோப்பியரென்றும் இந்தியரென்றும் வித்தியாசம் பாராட்டாமல், இத்தேசம் ஆளப்படுமென்று பிரிட்டிஷ் மன்னர்களும், பார்லிமெண்டு சபையும் அதிகாரப் பதங்களிலிருந்த பல மேதாவிகளும், நமக்குப் பல சமயங்களில் சொல்லியிருந்ததை ஆங்கில பாஷையைக் கற்ற நம்மவர் அறிந்திருந்தார்களாகையால் அவ்வாறு நடக்குமென்று எதிர் பார்த்திருந்தனர். ஆனால் சிற்சில சமயங்களில் ஆட்சியில் குறைகள் ஏற்பட்டதால், அவைகளை நீக்கிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் அவர்கள் மனதில் உதித்தது. மேனாட்டுக் கல்வியை நம்மவருக்குப் போதிப்பதால் இம்மாதிரி மனோபாவம் ஜனங்களுக்கு உண்டாகுமென்று அக்கல்வியைப் போதிக்க முதலில் ஏற்பாடுசெய்தவர்கள் ஆதியிலேயே எதிர்பார்த்ததுண்டு. ஆங்கில நூல்களையும் ஐரோப்பியரின் சாஸ்திரங்களையும் இந்தியர்களுக்குப் போதிக்க வேண்டியது பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் கடமை என்று 1835-ம் வருஷத்தில் வற்புறுத்தி எழுதியவராகிய மெக்காலே என்ற மேதாவி பின் வருமாறு அப்பொழுதே சொல்லியிருந்தார்:—

“நம்முடைய கல்வியை நாம் இந்தியருக்கு போதிக்கும் பிரயோஜனமாக அவர்களுடைய மனது விசாலமடைந்து நம்முடைய ஆட்சி முறைகள் அவர்களுக்கும் பிடிக்காதனவாய் விடலாம். நம்முடைய ஆளுகை நல்லதாயிருப்பினும், இன்னும் திறமையாக தேசத்தை ஆளக்கூடிய சக்தி அவர்களுக்கு உண்டாகலாம். ஐரோப்பியரின் கல்வியைப் பெறுபவர்கள் ஐரோப்பியரின் ஸ்தாபனங்களுக்குஆசைப்

படலாம். இம்மாதிரியான நாள் ஒன்று
வருமென்று நாம் நிச்சயமாய்ச் சொல்ல
மாட்டோமாயினும், ஒரு சமயம் அந்
நாள் வரலாம்; வந்தால், அதுதான் நம்
தேசத்து வாழ்வில் உத்தமமான நாளா
குும்."

## பொது உணர்ச்சியின் ஆரம்பம்.

இப்படி, மெக்காலே எதிர் பார்த்
துபோல் வேறு பல மேதாவிகளும்
திர் பார்த்தனர்களென்று காட்ட
த்தணையோ பிரமாணங்களை நாம்
றக் கூடும். அவர்கள் எதிர்பார்த்த
டியே பிரிட்டிஷாரின் நல்ல ஆளுகை
ல் குறைகளிருப்பதாகவும், அவை
ள நிவர்த்திக்க வழி தேடவேண்டு
மென்றும் கல்விகற்ற இந்தியர் கருதத்
லைப்பட்டனர். இம்மாதிரி அபிப்பி
யம் தோன்ற ஆரம்பித்ததும், காலஞ்
சென்ற விக்டோரியா மகாராணி இந்தி
ாவின் ஆட்சியை நேராகத் தாம் ஒப்
க்கொண்டதும் அநேகமாக ஒன்றாக
ருக்கலாம். அப்பொழுது அவரால்
வளியிடப்பட்ட ராஜ விளம்பரமா
து இந்தியருடைய மனதில் பெரிய
ஆசைகளை உண்டு பண்ணிற்று. ஜாதி
த வேற்றுமையைப் பாராட்டாது
ாம் இந்தியாவை ஆளப்போகிறதாக
ம், கல்வியாலும் சாமர்த்தியத்தினு
ும் உத்தியோகங்களுக்குத் தகுதி
ள்ளவர்கள் ஜாதிமத வேற்றுமை
இல்லாது நியமிக்கப்படுவார்க ளென்
ும் அந்த விளம்பரத்தில் மகாராணி
ார் சொல்லி யிருந்தார். ஆனால்
அனுஷ்டானத்தில் வித்தியாசங்கள்
ாராட்டப் பட்டுத்தான் வந்தன. பிரிட்
டிஷ் ஆட்சியின் பலனாக நன்மையை
முற்றிலும் ஒரு வகுப்பார் அடைந்த
ாகவும், வேலையை முற்றிலும்
வேறொரு வகுப்பார் செய்ததாகவும்
868-ம் வருஷம் மே மாதத்தில் பிரிட்
டிஷ் பார்லிமெண்டில் மிஸ்டர் பாஸெட்
என்ற பெரியவர் எடுத் துரைத்தார்.
நம்முடைய கடமைகளையாவது, நாம்
செய்திருக்கிற வாக்குத்தத்தங்களையா
வது நாம் நிறைவேற்ற வில்லை" என்று
869-ம்வருஷம் மேமாதத்தில் பார்லி
மெண்டில் லார்டு சபையில் ட்யூக்
ஆர்கைல் சொன்னார். "சில ஐரோப்
பியரின் நன்மைக்காக இனி நாம் இந்
தியாவை ஆளக்கூடாதென்று 1858-ம்
வருஷம் ஜூன் மாதத்தில் மிஸ்டர்
ஜான் ப்ரைட் என்ற மஹா புருஷன்
காமனஸ் சபையில் சொன்னார். "வரி
வருமானத்தில் பெரும் பாகம் இந்தி
யாவிலிருந்து வெளிப்போய் விடுவ
தற்குத் தகுந்தாற்போல் அத்தேசத்
திற்கு பிரதிப் பிரயோஜனம் ஏற்
படவில்லை" என்று 1875-ம் வரு
ஷம் மே மாதத்தில் அப்பொழுது
இந்தியா மந்திரியாய் இருந்தவரும்
பிறகு முதல் மந்திரியான வருமான
லார்டு ஸாலிஸ்பரி ஒப்புக்கொண்
டார். இம்மாதிரி இன்னும் பல மேற்
கோள்களை நாம் எடுத்துரைக்கக்
கூடுமாயினும், இங்கு இடமில்லை
யாகையால் நிறுத்திக்கொள்ளுகிறோம்.

## மதராஸ் நேடிவ் அஸோஸியேஷன்.

ஆட்சியில் குறைகளிருந்தன வென்
பது மேற்சொன்னவற்றிலிருந்து விள
ங்கும் ஆகையால் அவற்றைநிவர்த்தித்
துக்கொள்ள வேண்டுமென்ற அவா
படித்த வகுப்பாருக்கு உண்டாகவே,
கவர்ன்மெண்டாருக்கு விண்ணப்பங்
கள் மூலமாகத் தங்கள் குறைகளைத்
தெரிவித்துக் கொள்ளுவதைத் தவிர
வேறுவழி ஒன்றும்இல்லாமலிருந்தது.
அந்நாளில் பத்திரிகைகள் ஏற்பட்டு
விடவில்லை. ஆகையால் ஆங்கில மந்
தோர் பெரிய பட்டணங்களில் சபை
களாகக்கூடி, தங்களுடைய குறைகளை
யும் முறைப்பாடுகளையும் மாகாணகவர்
னருக்கும் கவர்னர்ஜெனராலுக்கும், இங்
கிலாந்திலுள்ள மேலதிகாரிகளுக்கும்,
தெரியப்படுத்தி சிற்சில அனுகூலங்க
ளடைந்துவந்தனர். அப்படிச் செய்து
வந்த சபைகளில், சுமார் 70-வருஷங்
களுக்குமுன் சென்னையிலிருந்த "நேட்
டிவ் அஸோஸியேஷன்" என்ற சபையை
நாம் முக்கியமாகச் சொல்லலாம். அக்
காலத்தில் கனம் மிஸ்டர் லக்ஷ்மி
நரஸு செட்டியார் என்றுசென்னையில்

ஒரு கனவான் இருந்தார். அவருடைய தலைமையின் கீழ் அச்சங்கம் நடந்து வந்தது.

## பத்திரிகைகளின் ஆரம்பம்.

பத்திரிகைகளை நடத்துவதின் பிரயோசனத்தையும் ஆங்கிலேயரிடமிருந்து நம்மவர் அறிய ஆரம்பித்தனர். ஆனால் பத்திரிகையை நடத்தும் வேலையானது இக்காலத்தில் இருப்பதைவிட ஆரம்ப காலத்தில் அதிக ஆபத்துக்கிடமானதாய் இருந்ததாகத் தெரிகிறது. 1835-ம் வருஷத்திற்குமுன் பத்திரிகைகள், சுதந்திரம் பெறவில்லை. அதிகாரிகளின் முறைகளைக் கண்டித்தெழுதின சில ஆங்கிலப் பத்திராதிபர்கள் விசாரணையின்றி தேசத்தினின்றும் வெளியேற்றப்பட்டனர். ஆயினும், நாளடைவில் பத்திரிகைகளின் அவசியத்தை உணர்ந்த கவர்ன்மெண்டார் 1835-ம் வருஷத்தில் பத்திரிகைகளுக்குச் சுதந்திரங்கள் கொடுத்தனர். அது முதல் பெரிய பட்டணங்களில் ஆங்கிலேயர்கள் சில பத்திரிகைகளை நடத்த ஆரம்பித்தனர். அவ்வகுப்பார் நடத்தும் பத்திரிகைகள் அநேகமாக இக்காலத்தில், அதிகாரிகளுக்குச் சார்பாக இருப்பதுபோல், அக்காலத்தில் இருந்ததில்லை. பயமில்லாமல் கவர்ன்மெண்டின் தப்பு முறைகளை அவைகள் கண்டித்தெழுதி, செல்வாக்குப்பெற்று வந்ததை இந்தியர் கண்டு, தாங்களும் அம்மாதிரி செய்ய ஆரம்பித்தனர். மேலே நாம் சொன்ன சென்னை "நேடிவ் அஸோஸியேஷன்" என்னும் சபையாரும், "க்ரெஸண்ட்" (இளம்பிறை) என்ற ஒரு பத்திரிகையை நடத்திவந்தனர். அதுதான் தென் இந்தியர்களால் முதல் முதல் ஆரம்பிக்கப்பட்ட பத்திரிகையாகும். ஆனால் ஆதரிப்பாரின்றி, அந்த இளம் பிறையானது தேய்ந்து மறைந்துபோய் விட்டது. பிறகு சுமார் 40 வருஷங்களுக்குமுன் காலஞ்சென்ற ராஜா ஸர். டி. மாதவராவ், திவான் பகதூர் ரகுநாதராவ், ரங்கநாத முதலியார், ஆகியோரும் சேர்ந்து "நேட்டிவ் பப்ளிக் ஒபீனியன்" என்ற ஒரு பத்திரிகையை நடத்த ஆரம்பித்தார்கள். அதே காலத்தில் "ரைஸிங் ஸன்" (உதய சூரியன்) என்ற ஒரு பத்திரிகையும் நடந்து வந்தது. ஆனால் இளம்பிறையைப் போல் உதய சூரியனும் வெகுசீக்கிரத்தில் மறைந்துவிட்டது. மற்றப்பத்திரிகையை நடத்தி வந்தவர்கள் அது விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்தக்கூடாமலிருந்ததாலும், அதற்கு வியாசங்கள் எழுதிவந்த ஆசிரியர் எழுதின ஒவ்வொரு வியாசத்தையும் ஒரு கமிட்டி சோதனை செய்தபிறகே பிரசுரம் செய்ய வேண்டுமென்றிருந்ததாலும், அந்த ஆசிரியரும் சென்னையைவிட்டுப் போய்விட நேர்ந்ததாலும், அப்பத்திரிகையை நிறுத்திவிட வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆனால் மைசூர் சீப் ஜட்ஜாகவிருந்து உபகாரச் சம்பளம் பெற்றுக்கொண்டு உத்தியோகத்தினின்றும் நீங்கி இப்பொழுது ஸ்ரீ சங்கராச்சாரியாருடைய ஜனன பூமியாகிய காலடியில் வசித்துவரும் ஸ்ரீமான் வ. ராமச்சந்திரய்யர் "மெட்ராஸி" என்ற ஒரு பத்திரிகையை நடத்த ஆரம்பிக்கவே, "நேட்டிவ் பப்ளிக் ஒபீனியனும்" அதனுடன் சேர்ந்து இரண்டும் ஒன்றாய்விட்டன. ஆனால் பிறகு ராமச்சந்திரய்யர் ஜட்ஜி உத்தியோகம்பெற்று வெளியே போய்விடவே அப்பத்திரிகையானது, பிறர் கையில் அகப்பட்டு, காலஞ்சென்ற ஸர். டி. முத்துஸாமி ஐயர் 1877-ம் வருஷத்தில் ஹைகோர்ட்டு ஜட்ஜாக நியமிக்கப்பட்ட பொழுது அவருடைய நியமனத்தை எதிர்த்து எழுதிற்று. ஆகையால் இந்தியருடைய அனுகூலங்களைத் தனக்கு நோக்கமாகக் கொண்ட வேறு ஒரு பத்திரிகை ஏற்பட வேண்டியது அவசியமாகி விட்டது.

## ஸ்ரீமான் ஜி. சுப்பிரமணி அய்யர்.

அந்த அவசியத்தைத் திருப்தி செய்து வைக்கத் தகுந்த மனிதர்

ளும் உண்டாய் விட்டனர். கலந்சென்ற ஸ்ரீமான் ஜி. சுப்பிரமணிய ஐயர் அப்பொழுது பச்சையப்பன் கலாசாலையில் ஒரு உபாத்தியாயராக இருந்துகொண்டு பி. ஏ. பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தார். ஸ்ரீ வீரராகவாச்சாரியரும் பி. ஏ. பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தார். ஜில்லா ஜட்ஜாக விருந்து இப்பொழுது உபகாரச் சம்பளம் பெற்று வருகிற ஸ்ரீமான் டி. டி. ரெங்காச்சாரியார், ராஜப் பிரதிநிதி சட்ட சபையில் ஸ்தானம் வகித்துவந்த ஸ்ரீமான் என். சுப்பராவ் முதலிய ஆறு வாலிபர்கள் சேர்ந்துகொண்டு ஒரு பத்திரிகையை நடத்துவதாகத் தீர்மானித்தார்கள். காரியத்துக்குரிய உற்சாகம் அவர்களுக்கு மிகுதியாயிருந்ததே ஒழிய பத்திரிகையை நடத்துவதற்கு வேண்டிய பொருள் முதலிய சாதனங்கள் எதுவுமில்லை. ஆயினும் அவர்கள் அஞ்சாது, பத்திரிகையை நடத்த முன்வந்து 1878-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 20-ந் தேதியன்று "ஹிந்து" பத்திரிகையை முதல் முதல் வெளியிட்டனர். பத்திரிகையை நடத்த அனுபோகமாவது பொருளாவது அவர்களுக்கில்லையாயினும், தாங்கள் செய்ய வேண்டிய வேலை இன்னவென்றும், தங்களுக் குண்டாகக்கூடிய கஷ்டங்கள் இன்னவென்றும் அவர்கள் உணராதிருக்கவில்லை. அவர்கள் பிரசுரித்த முதல் பத்திரிகையின் தலையங்கத்தில் பின்வருமாறு எழுதி யிருந்தார்கள். "இப்பொழுது பல பத்திரிகைகள் வெகு சாமர்த்தியமாக நடத்தப்பட்டு வருகின்றன. பொது ஜன அபிப்பிராயத்தையும் அவர்களுடைய தேவைகளையும் குறைகளையும் அவை வெளியிட்டு வருவதுடன், ஆளுவோரின் பெருமையையும் கண்ணியத்தையும் காத்து வருகின்றன. ஆனால் அப்பத்திரிகைகளை நடத்துவோர் ஐரோப்பியர்களாகவும், யூரேஷியர்களாகவும் இருக்கிறார்கள். ஆகையால் ஒன்றிரண்டு இந்தியப் பத்திரிகைகள் சென்னையில் நடைபெற இடமிருக்கிறது" என்றும்; "இந்தியர்களுக்கு அபிப்பிராயங்கள் இல்லாமலில்லை; அதை ஒழுங்காகச் சொல்ல ஒரு இந்தியப் பத்திரிகை இல்லாததே குறை. பத்திரிகைகளானவை பொதுஜன அபிப்பிராயத்தை வெளியிடுவதுடன், அந்தந்த நிலைமைக்குத் தகுந்தபடி அதைத் திருத்தவேண்டியவைகளாகவுமிருக்கின்றன. ஆளுவோருக்கும் ஆளப்படுவோருக்கும் மிடையிலுள்ள தடையைநீக்கி ஒருவரை யொருவர் அறியும்படியும் இந்தியப் பத்திரிகைகள் செய்யவேண்டும். மேனாட்டாருடைய ஆளுகையின் மேன்மையை அறியாமல் அவர்கள் மண்டார் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் கண்டிக்கிற வகுப்பாரில் நாங்கள் சேர்ந்தவர்களல்ல. ஆனால் ஆங்கிலத்தை அறிந்த விசேஷத்தால், இத்தேச அனுஷ்டானங்களையெல்லாம் கண்டித்து, மேனாட்டு ஸ்தாபனங்களே சிரேஷ்டமானவை யென்று சொல்லுகிற வகுப்பாரையும் நாங்கள் சேர்ந்தவர்களல்ல. ஐரோப்பியர் காட்டும் வழியை உலகம் முழுமையும் பின்பற்ற வேண்டிய தென்பதை நாங்கள் உணர்ந்திருக்கிறோம். மேனாட்டு அறிவும் நாகரீகமும் பரவுவதால் நம்மிடம் தோன்றும் ஆசாபாசங்களை அடக்கிவிடுவது ஒருசமயம் கூடுமாயினும், அப்படிச் செய்வது விரும்பத்தக்க தல்லவென்று நாங்கள் அறிந்திருக்கிறோம். தேசஜனங்களுக்குள் பரஸ்பர நம்பிக்கையையும் ஒற்றுமையையும் உண்டுபண்ண நாங்கள் முயலுவோம். தேச ஜனங்களின் உணர்ச்சிகளை உள்ளபடி அதிகாரிகளுக்கு எடுத்துக்கூறுவோம்; ஆளுவோருக்கும் ஆளப்படுவோருக்கும் அன்னியோன்னியத்தை உண்டு பண்ணப் பார்ப்போம். மதச்சண்டைக்கு எங்கள் பத்திரிகையில் இடங்கொடுக்க மாட்டோம்; ஆனால் மதச்சண்டையில் ராஜீய அல்லது ஜனச்சார விஷயங்கள் சம்பந்தப்படுமாயின், கிரமமான கண்டனங்களுக்கு அப்பொழுது இடங்கொடுப்போம்" என்றும் பத்திரிகை

பொன்று ஏற்படவேண்டிய அவசியத்தையும் அதனுடைய நோக்கங்களையும் அதற்கேற்படக்கூடிய சிரமங்களையும் வெகு விஸ்தாரமாக முதல் பத்திரிகையில் சொல்லியிருந்தார்கள். இதிலிருந்து 23-வயதுள்ள ஸ்ரீமான் ஜி. சுப்பிரமணிய ஐயரும் மற்றும் பாலிய உற்சாகத்தை மாத்திரம் கொண்டவர்கள் அல்லவென்றும், அவர்கள் தீர்க்க தரிசிகள் என்றும் தெரிகிறது.

"ஹிந்து"வின் வளர்ச்சி.

"ஹிந்து"வானது தான் ஏற்பட்டது முதல் நல்ல பிரயோஜன முண்டாகக் கூடிய வழியில் வேலைசெய்யத் தலைப்பட்டது. அக்காலத்தில் பரங்கிமலையில் ஸர்ஜன் மேஜர் நிக்கொல்ஸன் என்ற கனவான் ஒருவர் இருந்தார். ஹிந்துவின் முதல் பிரசுரத்தைக் கண்டதும், அவர் பட்டணத்துக்கு வந்து அதை நடத்த ஏற்பட்டவர்களைக் கண்டுபிடித்து அவர்களுக்குத் தக்க புத்திமதிகள் சொன்னதன்மேல், மிஸ்டர் ஜி. சுப்பிரமணிய ஐயரும் மிஸ்டர் விஜய ராகவாச் சாரியாரும் அடிக்கடி அவரிடஞ் சென்று பல விஷயங்களைத் தெரிந்துகொண்டனர். சேலம் கலகம் முதலிய சில விஷயங்களில் சாட்சிகளின் கட்டுப்பாட்டால் நீதி தவறிப் போய்விட்டதாக "ஹிந்து" பல உண்மைகளை வெளியிட்டதன் பலனாக கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்புகள் மாற்றப்படவே, "ஹிந்து"வின் கியாதி நாடெங்கும் பரவிவிட்டது. அது முதல் இன்றளவும் "ஹிந்து"வானது பொதுஜன அபிப்பிராயத்தை ராஜாங்கத்துக்கு அறிவிக்கும் தூதனாக இருந்து வருவதுடன், அதிகாரிகளும் அதை அப்படியே பாவித்தும் வருகிறார்கள்.

"சுதேசமித்திரன்" ஆரம்பம்.

"ஹிந்து"வை ஆரம்பித்து இரண்டு வருஷங்களானவுடன் பாமர ஜனங்களும் படிக்கக்கூடிய பத்திரிகையொன்று வேண்டிய அவசியத்தை ஹிந்துவின் சொந்தக்காரர்கள் அறிந்து "சுதேசமித்திரன்" பத்திரிகையை ஆரம்பித்தார்களாயினும், ஸ்ரீமான். ஜி. சுப்பிரமணிய ஐயர் "ஹிந்து"வை விட்டு நீங்கும் வரையில் அது வாரமொருமுறையே வெளிவந்துகொண்டிருந்தது. பிறகுதான் வாரம் மும்முறையாக சிறிதுகாலமும் அதற்கப்புறம் நாள்தோறும் பிரசுரமாக ஆரம்பித்து ஆங்கிலப் பத்திரிகைகள் அட்டானஷ்யை அறிந்தவர்களுக்கு எப்படிப் பிரயோஜனப்பட்டு வருகின்றனவோ அதேமாதிரி ஆங்கிலமறியாதவர்களுக்கு அது பிரயோஜனப்பட்டுவருகிறது. "சுதேசமித்திரன்" ஏற்பட்டதற்கு லார்டு ரிப்பனுடைய ஆட்சி காலத்தில் உண்டான ஒரு அனுகூலம் காரணமாகையால், அதை இங்கு குறிப்பிடுவது அவசியமாகும். அவருக்குமுன் ராஜப் பிரதிநிதியாயிருந்த லார்டு லிட்டன் என்பவர் தேசபாஷைப் பத்திரிகைகளினிடத்தில் அச்சங்கொண்டு, அவைகளுக்குப் பல நிர்ப்பந்தங்களை ஏற்படுத்திவிட்டார். மகா தாராளச் சிந்தையுடையவராகிய லார்டு ரிப்பன் அந்த நிர்ப்பந்தங்களை ஒழித்துவிடவே தேசபாஷைகளில்பத்திரிகைகள் நடைபெறுவது சாத்தியமாயிற்று. ரிப்பன் மகாப் பிரபு 1884-ம் வருஷத்தில் தமது உத்தியோகத்தை விட்டு நீங்கிவிடவே, பொதுஜன அபிப்பிராயத்தை உண்டு பண்ணவும் அதை வெளியிடவும் பத்திரிகைகள் இருப்பது மாத்திரம் போதாதென்றும், அதை ஆதரிக்க செல்வாக்குள்ள சங்கங்கள் தேவையென்றும் பிரமுகர்களாயிருந்தவர்கள் நினைத்தார்கள். அதற்கு முன் இருந்த நேடிவ் "அஸோஸியேஷன்" என்பது நாளடைவில் இருந்த விடம் தெரியாமல் போய்விட்டது.

சென்னை மகாஜன சபை.

ஆகையால் 1885-ம் வருஷாரம்பத்தில் மிஸ்டர் ஜி. சுப்பிரமணிய ஐயர், மிஸ்டர் பி. அநந்தாச்சார்லு, மிஸ்டர் பி. ரங்கையாநாயுடு முதலிய கனவான்கள் சேர்ந்து இப்பொழுதுள்ள மகாஜன சபையை ஸ்தாபித்தார்கள். மற்றும்

பெரிய நகரங்களிலும் இதுபோன்ற சபைகள் ஏற்பட்டு நடைபெற ஆரம்பித்தன. பத்திரிகைகளும் சபைகளும் ஓங்கத்தலைப்பட்ட தன்பிரயோஜனமாக தேசத்தில்படித்தவர்களுக்குள் பொது ஜன நன்மையில் அக்கரை யேற்பட்டு இந்தியாவுக்குப் பொதுவாகஒரு சபை வேண்டிய அவசியத்தை உணரத் தலைப்பட்டார்கள். 1885-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் சென்னைமா நகரில் திவான் பகதூர் ரகுநாத ராயர் வீட்டில் நடந்த முக்கியமான மீட்டிங்கில் மேற்சொன்ன உணர்ச்சி உருவெடுத்ததாகச்சொல்லலாம். சென்னை, கல்கத்தா, பம்பாய் முதலிய பெரிய நகரங்களின் முக்கியஸ்தர்கள் அநேகர் அந்தமீட்டிங்கில்கூடி, இந்தியாவுக்குப் பொதுவான ஒரு சபை வேண்டுமென்றும், அதன் மூலமாக தேசத்தின் பொதுவான குறைகளை அதிகாரிகளுக்குத் தெரிவித்துக் கொள்ளவேண்டு மென்றும் தீர்மானித்தார்கள். காங்கிரஸ் மகா சபை என்ற பல விருட்சத்துக்கு விதை அந்த மீட்டிங்கில்தான் ஊன்றப்பட்டது.

**காங்கிரஸ் மகா சபையின் மூலம்.**

ஆகையால் காங்கிரஸ் முதல் முதல் பம்பாய் நகரில் கூடினபோதிலும் அதற்குப் பிறப்பிடம் சென்னையேயாகும். முதல் காங்கிரஸின் அக்கிராஸனாதிபதியான பாபு உமேச சந்திர போனர்ஜி காங்கிரஸின் உற்பத்தியைப்பற்றி பின் வருமாறு சொல்லியிருக்கிறார்.—

"மார்குவிஸ் டபரின் இந்தியாவின் ராஜப்பிரதிநிதியா யிருந்த காலத்தில் அவர்தான் காங்கிரஸ் சபையை உற்பத்தி செய்தாரென்பது அநேகருக்குத் தெரியாம லிருக்கலாம். இந்தியாவிலுள்ள ராஜீய வாதிகள் வருஷம் ஒரு முறை கூடி ஜனசார முறைகளைப் பற்றிக் கலந்துபேசி, அந்நியோந்நியமாகப் பழகக்கூடிய சந்தர்ப்பம் ஒன்று ஏற்பட்டால் நன்மையாக இருக்குமென்று மிஸ்டர் எ. ஒ. ஹியூம் 1884-ம் வருஷத்தில் நினைத்தார். ஆனால் அந்தக் கூட்டத்தில் ராஜாங்க விஷயம் பிரஸ்தாபிக்கப் படவேண்டுமென்று அவர் நினைக்கவில்லை. ஏனென்றால், சென்னையிலும் கல்கத்தாவிலும் பம்பாயிலும் ராஜீய சபைகள் ஏற்பட் டிருந்தன. இந்தப் பொதுக்கூட்டத்திலும் ராஜீய விஷயங்கள் பிரஸ்தாபிக்கப் படுமாயின் அந்த சபைகளின் விசேஷம் குறையுமென்பது அவருடைய அபிப்பிராயம். எங்கெங்கு இந்தப் பொதுச்சபை கூடுகிறதோ அந்த மாகாணத்தின் கவர்னர் அதனுடைய அக்கிராசனாதிபத்தியத்தை வகித்தால், உத்தியோகஸ்தர் கோஷ்டிகளுக்கும் உத்தியோகஸ்த ரல்லாத கோஷ்டிகளுக்கும் ஒற்றுணர்ச்சி ஏற்படுமென்பதும் அவருடைய அபிப்பிராயம். இந்த உத்தேசத்தை மனதில் வைத்துக்கொண்டு 1883-ம் வருஷத்தில் லார்டு டபரினை அவர் ஸிம்லாவில் பேட்டி கண்டு தம்முடைய அபிப்பிராயத்தை அவருக்கு தெரிவித்துக் கொண்டார். லார்டு டபரின் சிறிதுகாலம் யோசனைசெய்து பார்த்து, மிஸ்டர் ஹியூமுடைய அபிப்பிராயப்படி நடந்தால் ஒரு பிரயோஜனமும் உண்டாகாதென்று அவர் தெரிவித்தார். இங்கிலாந்தில் பார்லிமெண்டு சபையில் கக்ஷி பிரதிக்கக்ஷி இருப்பதால் ஒரு கக்ஷியார் அதிகாரப்பதவியை வகித்து கவர்ன்மெண்டை நடத்தும்பொழுது, இன்னொரு கக்ஷியார் மூலமாக எதிர்வாதம் ஏற்படுகிறது. அந்த வேலையைச் செய்ய இந்தியாவில் ஒரு வகுப்பாரும் இல்லை. பத்திரிகை மூலமாக பொதுஜன அபிப்பிராயம் தான் வெளியாகிறது என்ற நிச்சயம் அதிகாரிகளுக்கு இல்லையாகையால், தங்களுடைய ஆளுகையைப்பற்றி ஜனங்கள் என்னநினைக்கிறார்களென்று தெரிந்துகொள்ளக் கூடாதவர்களாய் அவர்கள் இருக்கிறார்கள். ஆகையால் வருஷம் ஒருமுறை தேசத்திலுள்ள முக்யஸ்தர்கள் கூடி, ராஜாங்கத்திலுள்ள குறைகளை எடுத்துச

சொன்னால். ஆளுவோருக்கும், ஆளப்படுவோருக்கும் நலமாயிருக்குமென்றும், ஆச்சபையின் அக்கிராஸ்தானத்தை கவர்னர்கள் வகித்தால், தாராளமாக பேசமுடியாமல் கூச்சம் உண்டாகுமாகையால், அவர்கள் வகிக்கக் கூடாதென்றும், லார்டு டபரின் மிஸ்டர் ஹியூமிடத்தில் சொல்ல, மிஸ்டர் ஹியூம் தம்முடைய அபிப்பிராயத்தையும், மிஸ்டர் டபரின் அபிப்பிராயத்தையும், கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய இடங்களிலிருந்த முக்யஸ்தர்களுக்கு அறிவித்து, அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டார். தாம் இந்தியாவில் இருந்த வரையில் காங்கிரஸ் சம்பந்தமாக தம்முடைய பெயரை வெளியிடக் கூடாதென்று லார்டு டபரின் கேட்டுக்கொண்டிருந்தபடியால், அவருடைய யோசனையின் மேல் காங்கிரஸ் சபை ஏற்பட்டதென்பது சிலரைத் தவிர மற்றவர்களுக்குத் தெரியாது”.

## முதல் காங்கிரஸ் மகாசபை.

1885-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் சென்னையில்கூடிய சபையில் காங்கிரஸ் சபை அடுத்த டிசம்பர் மாதத்தில் புனாவில் கூடவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டபோதிலும், அந்த சமயத்தில் புனாவில் வியாதி பரவி இருந்ததை உத்தேசித்து பம்பாயில் கூடப்பட்டது. காலஞ்சென்ற கனம் மிஸ்டர் உமேசசந்தர போனர்ஜி அக்கிராசனம் வகித்தார். பிரதிநிதிகளாக 72 பேர்களே கூடினபோதிலும், அவர்களில் பெரும்பாலோர் சென்னை வாசிகளென்பது இம்மாகாணத்தவர்களுக்குப் பெருமையாகும். இந்தியாவுக்குப் பொதுவாக ஒரு சபை கூடப்போகிறதாகத் தெரிந்தவுடன், அதனுடைய நோக்கங்கள் இன்னவென்று தெரியாத நிலைமையிலேயே சிலர் அதை தூஷித்ததாக முதல் காங்கிரஸின் அக்கிராஸனாதிபதி தம்முடைய ஆரம்பப் பேச்சில் சொல்லியிருக்கிறார். ஆகையால் காங்கிரஸின் நோக்கங்கள் இன்னவைதானென்று அவர் ஆரம்பத்திலேயே எடுத்துச் சொன்னார். அடுத்த வருஷம் டிஸம்பர் மாதத்தில் காங்கிரஸ் கல்கத்தாவில் கூடியபொழுது ராஜப் பிரதிநிதியாகிய லார்டு டபரின் காங்கிரஸுக்குப் போயிருந்த பிரமுகர்களுக்கு விருந்துசெய்து உபசரித்தார். அதற்கடுத்த வருஷத்தில் சென்னையில் காங்கிரஸ் கூடியபொழுதும், சென்னை கவர்னராகிய லார்டுகானிமாரா அதேமாதிரி செய்தார். ஆனால் அடுத்த வருஷத்தில் லார்டு டபரினுக்கு காங்கிரஸிடத்தில் கோபம் பிறந்துவிட்டதால், அதுமுதல் பலர் அந்தசபை ராஜவிசுவாஸமில்லாதவர்களின் கூட்டமென்று சொல்வது எளிதாய்விட்டது. அக்காலத்தில் இங்கிலாந்திடத்தில் உள்ளூரப் பகைமை கொண்டிருந்த ருஷ்யரின் தூண்டுதலின்மேல் அது நடைபெற்று வந்ததாகக்கூட இரண்டொருவர் ஜாடையாகச்சொல்ல ஆரம்பித்தனர். ஸர் ஸய்யத் அகமெத் என்ற முஸ்லிம் சிரேஷ்டரும், அதிகாரிகளின் தயவை சம்பாதிக்கப் பார்த்தவர்களாகிய சி. ராஜா சிவப்பிரஸாத் முதலிய சில ஹிந்து சமூகப் பிரமுகர்களும் காங்கிரஸிடத்தில் வெறுப்புப் பாராட்டின தன் பலனாகவும், அது ராஜவிசுவாஸமில்லாதவர்களின் கூட்டம் என்ற எண்ணம் பரவ ஆரம்பித்தது.

## காங்கிரஸ் சபையின் முன்னேற்றம்.

ஆனால் 1889-ம் வருஷத்தில் பம்பாயில் மறுபடி காங்கிரஸ் கூடினபொழுது ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் அதன் அக்கிராஸனத்தை வகிக்க முன் வந்ததாலும், பார்லிமெண்டில் வெகு செல்வாக்குள்ள மிஸ்டர் சார்லஸ் பிராட்லா கூடவந்திருந்து காங்கிரஸை அபிமானித்துப் பேசியதாலும் அதற்கு ஒரு புதுபலம் உண்டாயிற்று. சட்ட சபைகள் திருத்தப்படவேண்டிய விஷயமாக பார்லிமெண்டில் தாம் ஒரு மசோதாவை ஆஜர்செய்வதாக மிஸ்டர் பிராட்லா வாக்களித்தப்போ படி இங்கிலாந்துக்கு அவர் போனதும் ஒரு மசோதாவைத் தயார் செய்து

பார்லிமெண்டில் கொண்டு வந்தார். அப்பொழுது இந்தியா மந்திரியாயிருந்த லார்டு க்ராஸ் என்பவர் தாமே ஒரு மசோதாவைக் கொண்டுவர ஏற்றுக் கொண்டு மிஸ்டர் பிராட்லா தம்முடைய மசோதாவை வாபிஸ் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இந்தியாவின் ஆளுகை விஷயத்தில் நிரம்ப அனுபோகம் படைத்தவராகிய ஸர் வில்லியம் ஹண்டர் என்ற உத்தமன் காங்கிரஸானது ஆங்கிலக் கல்வியின் பலனாக ஏற்பட்டதே யென்றும், அது அராஜகக் கூட்டமல்ல வென்றும், பத்திரிகைகளில் தாங்கி எழுதினர்.

**காங்கிரஸுக்கு அதிகாரிகள் விரோதம்.**

லார்டு க்ராஸ் கொண்டுவந்த மசோதா சட்டமாய் இந்தியாவிலுள்ள சட்ட சபைகளின் அமைப்பு ஓரளவு திருத்த மடைந்ததாயினும் இந்தியர் விரும்பிய அளவு திருத்த மேற்படவில்லை ஆயினும் பொதுஜன அபிப்பிராயத்தின் வல்லமை அதிலிருந்து வெளியாயிற்று. அதைப் பார்த்த அதிகாரிகள் அதன் செல்வாக்கைக் குறைக்கக் கருதி 1890-ம் வருஷத்தில் ஒரு உத்தரவு செய்தனர். அப்பொழுது லார்டு லான்ஸ்டோன் ராஜப்பிரதிநிதியாயிருந்தார். காங்கிரஸ் ஒரு கிரமமான முயற்சியே யென்றும், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அல்லாதவர்கள் அதன் அபிவிருத்திக்காக உழைக்கத் தடையில்லை யென்றும், ஆனல் உத்தியோகஸ்தர்கள் அதில் சம்பந்தப் படுவது கூடாதென்றும், ஆயினும் அபிமானமாவது விரோதமாவது பாராட்டாமல் அவர்கள் நடுநிலைமை வகிக்க வேண்டுமென்றும் ராஜப் பிரதிநிதி இஷ்டப்படுகிறதாக ஒரு தாக்கீது பிறப்பிக்கப்பட்டது. ஆயினும் உத்தியோகஸ்தர்கள் நடுநிலைமைக்கு மாறாக காங்கிரஸிடத்தில் விரோதம் பாராட்டத் தலைப்பட்டனர். ஆகையால் 1896-ம் வருஷத்தில் காங்கிரஸின் அக்கிராஸனதிபத்தியத்தை வகித்தவராகிய கனம் மிஸ்டர் ஸயானி என்ற பம்பாய் முகம்மதிய கனவான், காங்கிரஸ் ஒரு அவசியமான ஸ்தாபனமென்றும், முகம்மதியர்கள் அதில் சம்பந்தப்படாமல் ஒதுங்கி நிற்பது அவர்களுடைய நன்மைக்கும் தேசத்தின் பொது நன்மைக்கும் உற்றதல்ல வென்றும், ஆட்சியில் பல குறைகள் உள்ளனவென்றும், அவைகளை நிவர்த்திசெய்து கொள்ளப் பிரயத்தனப்படுவது நமது கடமையென்றும், வெகு விஸ்தாரமாகப் பேசினர். ஆயினும் அதிகாரிகளின் விரோதமும் குறையவில்லை; முகம்மதியர்கள் அதில் அதிகமாக சம்பந்தப்படவுமில்லை. தங்களுக்குத் தனியாக அவர்கள் "முஸ்லிம் லீக்" என்று ஒரு சபையை ஏற்படுத்திக் கொண்டு வேலை செய்ய ஆரம்பித்தார்கள். ஆனல் சில வருஷங்களாக அந்த முஸ்லிம் லீக் மெம்பர்களிற் பலர் காங்கிரஸிடத்தில் அபிமானம் காட்டவும் அதன் கொள்கைகளை ஆதரிக்கவும் ஆரம்பித்திருப்பது ஒரு நற்குறியாகும்.

**காங்கிரஸின் முயற்சிகள்.**

காங்கிரஸ் மூலமாக வெளிப்பட்ட பொதுஜன அபிப்பிராயத்தின் பலன் என்னவென்று விஸ்தாரமாக எடுத்துச் சொல்ல இடமில்லை யாயினும், இரண்டொரு முக்கியமான விஷயங்களைக் குறிப்பிடுவோம். ஒரே அதிகாரிக்கு நிர்வாக வேலையும் நீதிசெலுத்தும் வேலையுமிருக்கக் கூடாதென்று ஆதி முதல் காங்கிரஸ் சொல்லி வந்திருக்கிறது. ராஜப் பிரதிநிதியாயிருந்த லார்டு டபரின் அது மிகவும் நல்ல யோசனை யென்று ஒப்புக் கொண்டாராயினும், அதிகாரிகள் தங்களுக்குள்ள வல்லமையைச் செலுத்தி அந்த அபிப்பிராயப்படி அனுஷ்டான மேற்படாமல்செய்து வந்திருக்கிறார்கள். போலீஸ் இலாகாவின் அமைப்பு திருத்தப்படவேண்டுமென்று காங்கிரஸ் வற்புறுத்தி வந்தபடி, சில திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. பெரிய உத்தியோகங்களில் நம்மவர் அதிகமாக நியமிக்கப்படவேண்டுமென்று காங்கிரஸ் மன்றாடி

னதற்கேற்ப, முன்னிலும் அதிகமாக இப்பொழுது நியமிக்கப்பட்டு வருகிறார்கள். ஸிவில் ஸெர்விஸ் உத்தியோகங்களை விரும்புகிறவர்கள் பொருட்டு நடத்தப்படும் பரிட்சையானது ஒரே காலத்தில் இங்கிலாந்திலும் இந்தியாவிலும் நடத்தப்படவேண்டுமென்று ஆதிமுதல் காங்கிரஸ் கேட்டுவந்திருப்பதை பிரிட்டிஷ் பார்லிமெண்டில் காமன்ஸ் சபை அங்கீகரித்துக் கொண்டது.

### மார்லி மின்டோ திருத்தங்கள்.

எல்லாப்பலன்களிலும் சிறந்த பலன் லார்டுமிண்டோ ராஜப்பிரதிநிதியாயும் லார்டு மார்லி இந்தியா மந்திரியாயும் இருந்த காலத்தில் ஏற்பட்ட சட்டசபைத்திருத்தமே. அத்திருத்தங்களின் பலனாக, ஜனப்பிரதிநிதிகள் இப்பொழுது உண்மையாக சட்ட சபையில் ஸ்தானம் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் ஒரு மனதுடையவர்களாயிருக்கும்பொழுதும், அவர்களிஷ்டப்படி ஒரு காரியத்தைத் தீர்மானித்துவிடக்கூடிய பலம் இன்னும் அவர்களுக் குண்டாக வில்லை. ஆனால் சீக்கிரம் உண்டாய்விடு மென்பதில் தடையில்லை. அதிகாரத்தைத் தங்கள் கையில் வைத்துக்கொண் டிருக்கிறவர்கள் அதை விட்டுவிடச் சம்மதிக்காம லிருப்பது இயற்கை; ஆயினும் நாம் பிடிவாதமாகக் கலக்கம் செய்தால் நம்முடைய மனோபீஷ்டங்கள் நிறைவேறுமென்று இதுவரையில் கிடைத்திருக்கிற அனுகூலங்களினாலேயே நாம் தைரியப்படக்கூடும்.

### நாட்டின் புது உணர்ச்சி.

மற்றெல்லாப் பலன்களையும் விட, ஒரு பலனையே நாம் பெரிதாகக்கொண்டாடவேண்டும். சென்ற 30 வருஷங்களாய் காங்கிரஸ் நடந்து வந்திருக்கிறதன் பிரயோஜனமாக நாமெங்கும் ஒரு கிளர்ச்சி தோன்றிவிட்டது. நாம் எப்படி, யாரால், ஆளப்படுகிறோமென்பதையும் தாசில்தாருக்கு பெரிய அதிகாரி உண்டென்பதையும் அறியாதிருந்த ஜனங்கள், இப்பொழுது நமக்கும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்குமுள்ள சம்பந்தத்தையும் பிரஜைகளுக்குள்ள பாத்தியங்களையும் பொறுப்புகளையும் அறிந்தவர்களாய், பாத்தியங்களைக் கொண்டாடுகிறவர்கள் பொறுப்புகளை வகிக்கவும் இஷ்ட முடையவர்களாயும் ஆய்விட்டார்கள். தென் ஆபிரிக்காவிலுள்ள இந்தியரின் கஷ்டங்களை நிவர்த்திக்கக் கவர்ன்மெண்டார் முன்வரவேண்டு மென்று ஆங்காங்கு மீட்டிங்கு கூடி ஜனங்கள் கேட்டுக் கொண்டதிலிருந்து, பிரஜைகளுக்குள்ள பாத்தியங்களை அறிந்துகொண்டிருக்கிறார்க ளென்பதும், இந்த யுத்தத்தில் தங்களாலான உதவியை, கவர்ன்மெண்டாருக்குக்குச் செய்து வருவதிலிருந்து தங்களுடைய பொறுப்புகளை வகிக்க இஷ்டமுடையவர்களாயிருக்கிறார்களென்பதும் தெளிவாய் விளங்குகின்றன.

### சுய ஆட்சி லக்ஷியங்கள்.

நிர்வாகத்திலுள்ள குறைகளைத் திருத்திக்கொள்ள வேண்டியதையே தனது முக்கிய வேலையாகக் கொண்டிருந்த காங்கிரஸில் சுமார் 10 வருஷங்களுக்குமுன் அபிப்பிராய பேதம் முதிர்ந்து, பெரியதோர் சம்பவம் உண்டாய் விட்டது. காங்கிரஸின் குறுகிய லட்சியங்கள் போதா வென்றும் அவைகளைவிட மேலான லட்சியங்கள் வேண்டுமென்றும் ஒரு வகுப்பார் பிடிவாதம் செய்தனர். பிரிட்டிஷ் ஆட்சியின் சம்பந்த மில்லாமலேயே இந்தியா சுய ஆட்சி பெற்று இருக்கக் கூடும் என்ற கருத்தைக்கூட அபூர்வமாகச் சிலர் கொண்டார்களானாலும் வெகு வருஷ காலமாகக் காங்கிரஸில் உழைத்து வந்தவர்கள் பிரிட்டிஷ் சம்பந்தம் தெய்வ சங்கல்பத்தால் உண்டான தென்றும், அதன் வழியில் இப்பொழுது நாம் அடைந்திருக்கிற முன்னேற்றத்தை அடைந்திருக்க முடியாதென்றும் அந்த சம்பந்த மில்லாமல் இனி ஒரு நாள்கூட நாம் நிர் வகிக்க முடியா

தென்றும் திடமாய் நம்பினவர்களாகையால், காங்கிரஸின் லட்சியம் இதுதானென்று தீர்மானித்து அதைக் காங்கிரஸின் முதல் கொள்கையாக ஏற்படுத்தினார்கள். ஆகையால் 1906-ம் வருஷத்தில் சூரத்தில் கூடின காங்கிரஸ் கலைபட்டுப் போகவே, பல காங்கிரஸ் தலைவர்கள் அலகாபாத் நகரில் கூடி "பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்டிருந்துகொண்டு சுய ஆட்சி பெறுவதே காங்கிரஸின் லட்சியம்" என்றும், "அதை ஒப்புக்கொண்டவர்கள் தான் அதில் சம்பந்தப்படலா"மென்றும் தீர்மானித்து விட்டனர். அதுமுதல் ஒதுங்கி நின்ற மற்றக் கட்சியார் இப்பொழுது அந்த லட்சியத்தை ஒப்புக்கொண்டு இந்த வருஷக் கடைசியில் பம்பாயில் நடக்கப்போகிற காங்கிரஸுக்கு வருவார்கள் என்ற சந்தோஷ சமாச்சாரம் சமீபத்தில் வெளியாயிருக்கிறது.

### கான்பரன்ஸ் சபைகள்.

காங்கிரஸைப்பற்றி எழுதிக்கொண்டே போனால் வளருமாகையால், இதனுடன் நிறுத்திக்கொண்டு, அதன் வழியாய்ப் பிறந்த கான்பரென்ஸுகளைப் பற்றி சிறிது சொல்வோம். இந்தியா முழுமைக்கும் பொதுவான விஷயங்களை கவனிக்கவே காங்கிரஸால் கூடுமாகையால், ஆங்காங்குள்ள குறைகளை நிவர்த்திக்க வழிதேடவும், பொது ஜனங்கள் ராஜீய வியவகாரங்களில் சம்பந்தப்பட்டு அவர்கள் மூலமாக தேசத்தில் அறிவு பரவவும் மாகாண கான்பரென்ஸ்களும் அவசியமென்ற உணர்ச்சி தோன்றி, அப்படியே கூட்டங்கள் நடைபெற ஆரம்பித்தன. சிலஜில்லா கான்பரென்ஸ்கள் தோன்றி சுமார் 30 வருஷங்களாய்விட்டன. சில ஜில்லா கான்பரென்ஸ்கள் இந்த வருஷத்தில் தான் உண்டாயிருக்கின்றன. இன்னும் சில ஜில்லாக்களில் கான்பரென்ஸ்கள் நடைபெறவேயில்லை. சில ஜில்லாக்களில் தாலூக்கா கான்பரென்ஸ்களும் நடைபெறுகின்றன. அந்தந்த வகுப்பார்கள் வேறு கான்பரன்ஸ் நடத்தவும் தலைப்பட்டு விட்டார்கள். இவைகள் எல்லாம் நற் சகுனங்கள் தான். ஆயினும் நம்முடைய தேசத்தின் விஸ்தீரணத்தையும் நிர்வாகக் குறைகளையும் கவனிக்கையில், நடக்கும் கான்பரென்ஸ்கள் போதாவென்று நினைக்கிறோம். ஜனங்கள் இன்னும் அசிரத்தையிலிருந்து முற்றிலும் விழித்தெழுந்து விடவில்லை.

### முடிவுரை.

ஒரு தேசத்தில் பொதுஜன அபிப்பிராயம் எவ்வளவு விருத்தியாயிருக்கிறதென்பதையும், ஜனங்கள் தங்களுடைய நன்மையில் எவ்வளவு சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதையும் அத்தேசத்தில் நடைபெறும் பத்திரிகைகளைக் கொண்டு நிதானித்து விடலாம். இந்தியாவைக் காட்டிலும் மிகச் சிறியதாகிய இங்கிலாந்து முதலிய தேசங்களில் எத்தனை பத்திரிகைகள் நடைபெறுகின்றன? ஒவ்வொரு பத்திரிகையிலும் எத்தனை பிரதிகள் செலவாகின்றன? இந்தியாவில் அப்படியில்லாமலிருப்பதிலிருந்தே பொது ஜன சிரத்தை இன்னும் பலமாகவில்லையென்று சொல்லலாம். தேசபாஷைப் பத்திரிகைகளில் நாள்தோறும் லட்சம் பிரதிகள் செலவாகும் காலம் வந்தபொழுதுதான், பொதுஜன அபிப்பிராயம் பலப்படும்; அந்தக்காலம் சீக்கிரம் வருமென்றும் நாம் நம்புகிறோம்.

# இந்தியாவில் கூட்டுறவு.

[மிஸ்டர் வி. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார் எழுதியதின் மொழிபெயர்ப்பு.]

கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஐரோப்பா கண்டத்தில் விவசாயிகளின் நிலைமையைச் சீர்திருத்த ஏற்படுத்தப்பட்டதற்கு அடிப்படையாயிருந்த காரணங்கள் பலவும் இந்தியாவிலும் வாய்ந்திருந்தமையால், நமது கவர்ன்மெண்டாரும் ஜனத் தலைவர்களும் அந்த ஸ்திதியைச் சீர்திருத்த பலவழிகள் தேடி பல முறைகள் அனுஷ்டித்து கடைசியாக கூட்டுறவுச் சங்கங்களை இந்தியாவில் ஏற்படுத்த எத்தனித்தார்கள். தற்கால ரீதிப்படி வியாபாராதி சாதனங்கள் பல ஏற்பட்டும் இந்திய விவசாயிகளின் பரிதாப நிலைமையும், விமோசனமற்ற வாழ்வும், நிவர்த்தியாகாமலிருப்பது, விஷயத்தை நன்கு கவனித்துப் பார்ப்போமாயின், அவ்வளவு ஆச்சரியப்படத்தக்கதல்ல; ஏனெனில் ஐரோப்பாவிலும் இதே நிலைமை இப்பேர்ப்பட்ட கவலைக்கே இடங்கொடுத்தது. விவசாயிகள் கடும் வட்டிக்குக் கடன் வாங்கி, வாங்கின கடனைத் திருப்பிக்கொடுக்க வகையற்று, வறைச் சேதம், வெள்ளச் சேதம் ஏற்பட்டால் அவைகளைச் சமாளிக்க சக்தியற்று, நிற்கும் நிலைமை இந்தியாவில் ஒரு நூதன சம்பவமல்ல. இந்தப் பரிதாப நிலைமைக்குப் பல காரணங்கள் உண்டு; முக்கியமாய் விவசாயிகளிடமிருந்து கவர்ன்மெண்டார் வசூலித்து வரும் அசாத்திய நிலத் தீர்வையும் ஜனங்களுக்குள் வழங்கிவரும் வழக்கங்களும் நியமங்களும், தொழிற் சங்கங்கள் ஜாதியக் கட்டுப்பாடுகள் கிராமப் பஞ்சாயத்துகள் முதலான புராதன ஸ்தாபனங்கள் காலக்கிரமத்தில் குன்றிப் போனதும், பொதுவாய்ப் பிழைப்பின் கஷ்டங்கள் அதிகரித்து, நாகரீக வாழ்வு படிப்படியாய்க் குறைந்து வருவதும், குறிப்பிடலாகும்.

இப்பேர்ப்பட்ட நிலைமை கவர்ன்மெண்டாருக்குக் கவலையை யுண்டாக்கிற்றென்பதும் ஆச்சரியப்படத் தக்கதல்ல. ஏனெனில் இவ் விவசாயிகளிடமிருந்தே துரைத்தனத்தாரால் முக்கிய வருமானம் வசூலிக்கப்பட்டுவருகிறது. ஆகையால் விவசாயிகள் கேவல ஸ்திதியில் இருந்து வந்தால் நிலத்தீர்வையை எவ்வாறு வசூலிப்பது? வாட்சை காலத்தில் எவ்வாறு சாகுபடி நடத்துவது? இந்த ஸ்திதியைச் சீர்திருத்த கவர்ன்மெண்டார் பலமுறைகள் அனுஷ்டித்தும், இக்குறைகளுக்கு மூலகாரணமாகிய தாங்கமுடியாத நிலத்தீர்வையைக் குறைக்க எத்தனித்தார்களல்ல. சேவிங்ஸ் பாங்கிகள் எங்கும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன; கடன்காரர்களைப் பற்றிச் சட்டங்கள் பலமுறை மாற்றப்பட்டிருக்கின்றன; குடிவார சுதந்திரங்கள் அநேகமுறை நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன; ஆனால் இவை அனைத்தும் விவசாயிகளின் கஷ்டங்களை நீக்கவில்லை. அவர்களின் நிலைமை க்ஷீணித்தே வந்து கொண்டிருந்தது. விவசாயமே இந்தியாவின் முக்கிய தொழிலாகையால் விவசாயிகளின் நிலைமை இராஜாங்கத்தின் செல்வத்திற்கும் சிறப்புக்கும் அடிப்படையாகும். ஆகையால் இதைச் சீர்திருத்துமாறு இதர தேசங்களில் அநுஷ்டிக்கப்பட்டு வரும் முறைகளைக் கவர்ன்மெண்டார் கவனிக்கத் தலைப்பட்டார்கள். ஐரோப்பாவில் கூட்டுறவுச் சங்கங்களின் அபிவிருத்தியையும், இந்தியாவில் வெகு காலமாய் வழங்கிவரும் கூட்டுச்சீட்டு, நிதி, குறி, முதலான ஸ்தாபனங்கள்

யும், நன்கு கவனித்துவந்த சென்னை கவர்ன்மெண்டார் தமது முக்கிய உத்தியோகஸ்தர்களிலொருவரான ஸர் ப்ரெடரிக் நிக்கல்ஸன் என்பவரை ஐரோப்பாவுக்கு அனுப்பி, இந்நூதன ஸ்தாபனங்களின் முறைகளையும் விவசாயத்திற்கொத்த அவைகளின் ஏற்பாடுகளையும், கவனித்துவர நியமித்தார்கள். இந்த ஸர். ப்ரெடரிக் நிக்கல்ஸன் 1897-ம் வருஷம் வெளியிட்ட ரிபோர்ட்டே கூட்டுறவுச் சங்கங்களின் விசால விருத்திக்கு ஆதிகாரணமாகும். உலகமெங்கும் கூட்டுறவுச் சங்கங்களின் விஷயங்களுக்கு இந்த ரிபோர்ட்டானது ஒரு முக்கியப் பிரமாணமாகக் கருதப்பட்டு வருவதே, அதன் அருமைபெருமைக்கு அறிகுறியாகும். விஷயங்கள் யாவற்றும் விஸ்தாரமாய் விசாரிக்கப்பட்டு, விவரங்கள் அனைத்தும் நன்கு பரிசீலிக்கப்பட்டு, எழுதப்பட்டுள்ள இந்த ரிபோர்ட்டு படிப்போர்களுக்கு ஆனந்தத்தையும் ஆவலையும் புகட்டுகிறது.

இதே சமயத்தில் ஐக்கிய மாகாண கவர்ன்மெண்டார் மிஸ்டர் டியூப்பர்னே என்பவரை விவசாய பாங்கிகள் இந்தியாவில் ஏற்படுத்துவது சாத்தியமா, என்பதை நிர்ணயிக்க நியமித்தார்கள். வட இந்தியாவில் ஜனங்களின் பாங்கிகள் என்பதைப் பற்றிய இவருடைய பிரசித்திபெற்ற ரிபோர்ட்டு 1900-ம் வருஷத்தில் பிரசுரிக்கப்பட்டது. மேற்குறித்த இவ்விரண்டு ரிபோர்ட்டுகளின் பலனாக வங்காளத்திலும் ஐக்ய மாகாணத்திலும் பஞ்சாப் மாகாணத்திலும் கூட்டுறவு ஸ்தாபனங்கள் சில ஏற்படுத்தப்பட்டன. ஆனால் அவைகளில் நீடித்துநிற்கும் குணங்கள் இருக்கவில்லை. ஆகையால் லார்டு கர்ஸன் இந்தியாவில் இராஜப் பிரதிநிதியாக விருந்தபொழுது கூட்டுறவுச் சங்கங்களின் குணாகுணங்களையும் தேச சௌகரியா சௌகரியசாதனங்களையும் ஆராய்ந்தறிய, ஸர் ட்ரட்ரிக்லோ என்பவரின் அக்கிராசனத்தின் கீழ் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அவர்கள் செய்த ரிபோர்ட்டின் பலனாக 1904-ம் வருஷத்திய கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் ஏற்படுத்தப்பட்டது. இச்சட்டத்தின் முக்கிய அமிசம் என்னவெனில், கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஊருக்கேற்றவாறும், தொழிலுக்குத் தக்கவாறும், ஜனங்களுக்குத் தக்கவாறும், ஏற்பட இடங்கொடுத்தது. இப்படி தீர்க்காலோசனையின்மேல் ஆரம்பம் செய்யப்பட்ட இந்த முயற்சியின் பலனாக 1912-ம் வருஷத்தின் முடிவில் 8177 சங்கங்கள் 335 லட்சம் மூலதனத்துடன் ஏற்பட்டிருந்தன. ஆனால் காலக்கிரமத்தில் சட்டத்தில் நிர்ணயிக்கப்படாத பல குறைகளும் மாறுதல்களும் தலைப்பட ஆரம்பித்தன. ஆகையால் சட்டத்தில் திருத்தங்கள் கொண்டுவர அவசியமேற்பட்டது. 1912-ம் வருஷத்திய கூட்டுறவுச் சங்க சட்டத்தின் திருத்தம், நாணயச் சங்கங்கள் தவிர, இதரவித சங்கங்களுக்கும், சில்லரைச் சங்கங்களுக்கும் தொகை கொடுத்து மேல்பார்வை செய்துஉதவி புரிய மத்திய பாங்கிகளும், ஏற்படுத்த அதிகாரமகொடுத்தது. 1914-ம் வருஷத்தில் இந்தியா கவர்ன்மெண்டார் கூட்டுறவுச் சங்க விருத்தியில் வெளியான பல சிக்கலான ப்ரசினைகளை விசாரித்து மற்றும் ஒரு ரிபோர்ட்டு வெளியிட்டார்கள். இடையே, இவ்விரண்டு வருஷங்களுக்குள் சங்கங்களின் தொகை 1488-ஆயிற்று. இவ்வாறு விரைவாய விருத்தியடைந்து வரும் சங்கங்களின் பொருளாதார நிலைமை சரிவர இருக்கின்றதா?, அவைகளின் அபிவிருத்தி தகுந்த வழிகளில் ஏற்பட்டு வருகிறதா? என்பவைகளை நிதானிக்க 1914-ம வருஷக் கடைசியில் ஸர் எட்வர்ட் மாக்ளகான் என்பவரின் அக்ராசனத்தின்கீழ் ஒருகமிட்டி நியமிக்கப்பட்டது. இக்கமிட்டி வெளியிட்ட ரிபோர்ட்டு அதிகப் பிரயோஜனமுள்ளதாகவும் அநுசாணைக்கு லாயக்குள்ளதாகவும் இருக்கிறதாகச்சொல்லவேண்டும்.

மேலே கூட்டுறவுச் சங்கங்களின் ஏற்படக் காரணங்களையும் அவைகள அடைந்த அபிவிருத்தியையும் சுருக்கமாய் எழுதியிருக்கிறோம். இந்த ஸ்தாபனங்கள் ஆதியில் ஐரோப்பாவில் ஏற்படுத்தப்பட்டன வென்பதையும் குறிப்பிட்டிருக்கிறோம். ஆனால் கூட்டுறவு ஸ்தாபனங்களென்றால் என்ன? என்பதை சற்று கவனிப்போம். பல ஏழை ஜனங்கள் ஒன்றுசேர்ந்து, ஒருவருக்கொருவர் உதவிபுரிய ஒரு சங்கமாகத் தங்களை ஏற்படுத்திக்கொண்டு, கட்டுப்பாட்டினாலும்கூட்டுறவினாலும் தனவந்தர்கள் அடையக் கூடிய பல சௌகர்ய சாதனங்களை அடைவதேயாகும். இந்தியாவின் பூர்வோத்தரத்தைநன்குணர்ந்தவர்கள் இதை ஒரு நூதன ஸ்தாபனமாகக் கருதமாட்டார்கள். இந்தியாவில் வெகுகாலமாக தொழிற் சங்கங்களும் ஜாதியகட்டுகளும் கூட்டுறவு என்னும் மூலப் பிரமாணத்தை நன்கு சித்தாந்தம் செய்திருக்கின்றன. கூட்டுறவு முயற்சிகள் தன் நம்பிக்கையும் செட்டான குடித்தனமும், நாகரீகமானவாழ்வும், ஏற்படுத்து மென்பதை நம்மவர்கள்நன்கு அறிவார்கள். இவை காரணமாகவே கூட்டுறவு ஸ்தாபனங்கள் இப்போது ஏற்பட ஆரம்பித்தவுடன் வேரூன்றிச் செழித்தோங்க சகஜமாய் ஆயிற்றென்று சொல்லலாம்.

ஐரோப்பாவில் இந்தக் கூட்டுறவுச் சங்கம் அனேகவிதமாக வேலை செய்திருக்கிறது. சில வருஷங்களுக்குள்ளாக ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான் இந்த தேசங்களில் இவை இன்ன வேலைகள் செய்திருக்கின்றன வென்பதை இந்தியக் கூட்டுறவுச் சங்கத்தோன் அறிந்திருக்கவேண்டும். கடன் வாங்கிக் கொடுக்க, ஆயிரக் கணக்கான சங்கங்கள் ஏற்பட்டுள்ளன. நமது ஜமீன்தார்களைப்போல ஈன ஸ்திதிக்கு வந்துவிட்ட பிரபுக் கூட்டங்களை காப்பாற்ற விவசாய பாங்கிகளும் ஏற்பட்டிருக்கின்றன. கடன் கொடுக்கத் தகுந்த சங்கங்கள் ஏற்பட்டிருப்பதும தவிர விவசாய அபிவிருத்திக்குத் தக்கவைகளும் மிதமில்லாமல் ஏற்பாடாயிருக்கின்றன. இவைகளின் நோக்கங்கள் பின் சொல்லப்பட்டவை.

(1) சாதாரண விவசாயம்.

(2) விவசாயக் கருவிகள், எருக்கள் விவசாயத்திற்கு வேண்டிய மற்றவைகள் இவைகளை யெல்லாம் வாங்குதல், மகசூல்களை விற்று முதல் செய்தல், சொல்பமான வருஷக் கட்டணம் அல்லது மாதக் கட்டணத்தைப் பெற்றுக்கொண்டு கால்நடைகள் இறந்து போனால் அவைகளின் பெறுமானத்தைக் கொடுக்கிறதாகிய இன்ஷூர் செய்யும் சங்கங்களை ஏற்படுத்தல், ஆலங்கட்டி மழையினால் சேதம் நேரிடாமல் பார்த்துக்கொள்ள சங்கங்களையும் விவசாயத்திற்கு அனுகூலமாய் மின்சார சக்தியை உண்டுபண்ணும் சங்கங்களையும் இன்னம் இவை போன்ற சங்கங்களை ஏற்படுத்தவும், அத்தேசங்களில் கூட்டுறவு அடிப்படையாயிருக்கிறது.

மற்ற தேசங்களில் ஏழை ஜனங்கள் உற்பத்தியை உத்தேசித்து கூட்டுறவு சங்கங்களாய்ச் சேர்ந்திருக்கின்றனர். டென்மார்க் தேசத்தில் வெண்ணெய் உற்பத்திசெய்வது விருத்திக்கு வந்திருப்பது விவசாயத்தினால் தான். இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலுள்ள மற்ற தேசங்களிலும் தினப்படி செலவுக்கு வேண்டிய அனேக சாமான்கள் கூட்டுறவுச் சங்கங்களினால் செய்யப்படுகின்றன. கூட்டுறவுக் கட்டட சங்கங்களும் ஏற்பட்டிருக்கின்றன. இன்னமொருவிதச் சங்கங்களுமிருக்கின்றன இவைகளுக்கு விநியோகச் சங்கங்கள் என்றுபெயர். இவைகளிலிருந்து தான் கூட்டுறவுச் சங்க நிகழ்ச்சி ஏற்பட்டது. 1848-வருஷத்தில் ராச்டேலைச்சேர்ந்த 28-கம்பளி நெசவுக்காரர்கள் மத்திய வகுப்பாரால் கஷ்டப்படுத்தப்பட்டு ஒரு சிறிய சங்கத்தை ஏற்படுத்தினார்கள். அவர்களுக்கு தினசரி வேண்டிய சாமான்களை சேகரிக்கவும் கடை விலை

ரசிப்படி அவைகளை சங்கமெம்பர்களுக்கு விற்பனை செய்வதும் அதன் வேலையாகும். இப்படி முதல் முதலில் சிறியதாயிருந்தது, இப்போது இங்கிலாந்தில் 2000 சங்கங்களாக விருத்தியாகியிருக்கிறது. சாமான்களை உற்பத்தி செய்யும் இலாகா ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தூரதேசங்களில் தேயிலை, காபி, முதலிய பண்டங்களை விளைவிக்கின்றன. இந்த சங்கங்களுக்குச் சொந்தமான ஸ்டீமர்களில் இங்கிலாந்துக்கு இந்த மாசூல்கள் கொண்டுவரப்படுகின்றன. 1915-ம் வருஷம் ஜூன் மாதக் கடைசியில் இந்தியாவில் 17327 சங்கங்கள் இருந்ததற்குக் காரணமாயுள்ள கூட்டுறவுச் சங்கங்களின் ஆக்டானது அதிக சிக்கலுள்ளதல்ல. ஏழையா யிருப்பவர்களும் விவசாயிகளும் தொழிலாளிகளும் செட்டாய் செலவு செய்யவும் சுயமாய் ஜீவனோபாயம் செய்யவும் சங்கங்களை ஏற்படுத்த இந்த சட்டம் இடங் கொடுத்தது. இந்த சங்கங்களின் வேலைகளையும் விருத்தியையும் கவர்ன்மெண்டார் கவனித்து அதிகாரம் செலுத்தி வருகிறார்கள். இந்த சங்கங்களின் விஷயமாய் ஸ்டாம்புகளுக்காவது, ரிஜிஸ்டர் செய்வதற்காவது சர்க்கார் தணிக்கைக்காவது பணம் செலவு செய்ய வேண்டியதில்லை. கடன்கள் எப்படி எதற்காகக் கொடுக்கவேண்டு மென்பதையும் பலவித சங்கங்களில் வரும் லாபங்களை எப்படி பங்கிட்டுக்கொள்ள வேண்டுமென்பதைப் பற்றியுந்தெரிவிக்கிறதுந்தவிர சங்கத்தைக் கலைக்கவேண்டிய விதத்தையும் சட்டம் தெரிவிக்கிறது. இந்தியாவில் முக்கியமாய் நாணயச்சங்கங்கள்தான் பிரபலமடைந்து விருத்தியாகியிருக்கின்றன. கூட்டுறவுச் சங்கத்தில் ஏழைகள் சேர்ந்து கடன்வாங்கி கடன் கொடுத்தவர்களுக்கு நஷ்டம் வந்தால் அதற்கு அச்சங்கத்தைச் சேர்ந்தவர்கள் ஜவாப்புதாரியாயிருக்கிறார்கள். இப்படி ஒப்புக்கொள்வதால் தக்க ஜாமீன் ஏற்படுகிறது. அதனால் பணக்காரர்கள் தங்கள் பணத்தை வட்டிக்குவிட முன் வருகிறார்கள். இந்தச் சங்கங்களின் மெம்பர்கள் தங்களுடைய எல்லா சொத்துக்களையும் நஷ்டத்திற்கு ஈடுகொடுக்க ஒத்துக்கொள்ளுகிறார்கள். இது வரையறையில்லாதபொறுப்பின்பேரில் ஏற்படுத்தப்பட்ட சங்கமென்று சொல்லப்படுகிறது. இவ்வித பாத்தியம் கடன் கொடுப்போருக்கு இருப்பதனால் தான் 1915-ம் வருஷக் கடைசியில் 900 லட்சம் ரூபாய் மூலதனம் ஏற்பட்டிருக்கிறது. ஒருவரோடு ஒருவர் சம்மந்தமில்லாமல் ஒவ்வொருவரும் தனிமையாகத்தங்கள் வேலையை செய்திருந்தால் இவ்வளவு பணம் வெளிவந்திருக்க மாட்டாது. இந்த 17000 சொச்சம் சங்கங்களிலிருந்து மெம்பர்களுக்குளவ்வளவுலாபம் கிடைத்ததென்பதை ஒரு உத்தேசமாய்ச் சொல்லலாம். 100-க்கு 30-வீதம் வட்டி தாரணைக்கு சாதாரணமாய் சாவுகார்கள் பணம் கொடுக்கிறார்கள். சாதாரணமாய் பட்டணத்தில் சங்கங்கள் கொடுக்கும் பணத்திற்குவட்டி தாரணை 100-க்கு 15 ஆகிறது. இதன்பிரகாரம் 900 லட்சத்திற்கு 135-லட்சமாகிறது. இந்த சங்கங்களில்லாவிடில் இதேபணத்திற்கு விவசாயிகள் குறைந்தது 270 லட்சம் ரூபாய் வட்டி கொடுத்தே தீரவேண்டும். ஆகையினால் இந்த சட்டத்தின் பிரயோசனத்தினால் ஏழைகளுக்கு 135 லட்சம் ரூபாய் லாபமாயிற்று. தேசத்திலுள்ள விவசாயிகளின் கடன்களை இது தீர்த்துவிடவில்லை. ஆனால் அதை இப்போதுதான் தொட ஆரம்பித்திருக்கிறது. 1915 வருஷக் கடைசியில் இந்த சங்கங்களில் 825 ஆயிரம் மெம்பர்கள் இருந்தார்கள். 4 பேர்களடங்கிய ஒரு சம்சாரத்திற்கு ஒரு மெம்பரிருப்பதாக கணக்கிட்டால் மொத்தம் இதனால் நன்மை யடைந்தவர்கள் 30 லட்சத்து 20 ஆயிரம் ஜனங்களுக்கு மேலில்லை. இந்தத் தொகையை விவ

சாமிகளின் மொத்தத்தோடு ஒத்துப் பார்த்தால் மிகக்கொஞ்சமாக இருக்கிறது. ஏனெனில் தேச ஜன சங்கியையில் 100 க்கு 90 பேர்கள் விவசாயிகள். செட்டாய் செலவிடுதலே விருத்தி செய்வதினாலும், மெம்பர்களுக்குப் பொறுப்பையும், ஜவாபையும் உண்டு பண்ணுவதினாலும் கடனை சீக்கிரத்தில் திருப்பிக் கொடுப்பதினாலும், இந்த சங்கங்களின் நோக்க மின்னதென்று நன்றாய்த் தெரிந்து கொள்வதினாலும் அதனால் வரும் லாபங்களைத் தெரிந்து கொள்வதினாலும், இந்த சங்கங்களின் விருத்தி நிறைவேறும். இந்த சங்கங்களின் நோக்கங்கள் இன்னவையென்று ஜனங்களின் புத்தியிலே பதியவைக்க எவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டாலும் தகும். ஏனெனில் கமிட்டி சொல்லுகிறபடி இந்தியாவில் அனேகமாய் எல்லா இடங்களிலும் நோக்கங்களை போதிக்கவேண்டிய அவசியம் அலட்சியம் செய்யப்பட்டு வருகிறது.

கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பை இரண்டு பாகமாகப் பிரிக்கலாம். உத்தியோகப் பிரிவு ஒன்று உத்தியோகஸ்தரல்லாதபிரிவு ஒன்று கவர்ன்மெண்டால் நியமிக்கப்படும். ரெஜிஸ்டிராரும் அவருடைய சிப்பந்திகளும் இன்ஸ்பெக்டர்களும் உத்தியோகஸ்தர் ஆவார்கள். உத்தியோகஸ்தரில்லாதவர்களில் மாகாண பாங்கிகள், மத்திய பாங்கிகள் யூனியன்கள் மூலாதாரச் சங்கங்கள் ஆகியவை சேர்ந்திருக்கின்றன. ஒரு மாகாண சங்க அமைப்பானது மற்றொரு மாகாண சங்க அமைப்பில் சில்லரை விஷயங்களில் அனேக மாறுதல்களை உடைத்தாயிருக்கும். எல்லா மாகாணங்களிலும் இந்த மாறுதல்களிருக்கின்றன. கூட்டுறவுச் சங்க நிபுணர்கள் ஜெர்மன் ஏற்பாட்டை மெச்சுகிறார்கள். அந்த ஏற்பாட்டின் விவரம் அடியில் சொல்லப்பட்டிருக்கிறது. பண ஒத்தாசையை உத்தேசித்து மூலாதாரச் சங்கங்கள் பல சம்பந்தப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆங்காங்கு ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற மத்திய பாங்கிகளுடன் மூலாதாரச் சங்கங்கள் சேர்ந்துகொள்கின்றன. இந்த மத்திய பாங்கிகளுக்கு மேல் மாகாண பாங்கிகள் ஏற்பாடாயிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் மேலாக மத்தியகவர்ன்மெண்டு ஸ்தாபன மொன்றிருக்கிறது. தணிக்கைக்காகவும், மேல் பார்வைக்காகவும் 30, 40 சங்கங்களடங்கிய யூனியன்க ளிருக்கின்றன. இதற்கு மேல் ஜில்லா யூனியனிருக்கிறது. இது ஒரு செண்டிரல் சங்கத்துடன் சம்பந்தப்பட் டிருக்கிறது. இந்தியாவில் எந்த மாகாணத்திலும் இந்த ஏற்பாடு இன்னும் உண்டாகவில்லை. ஏனெனில் அந்தந்த மாகாணங்களின் ஸ்திதிக்குத் தக்கபடி விதம் விதமாக கூட்டுறவுச் சங்கங்களை அமைக்கவேண்டி யிருக்கிறது.

இந்த சட்டம் அமுலுக்கு வந்தவுடன் சென்னை செண்டிரல் அர்பன் பாங்கி ஏற்பாடாயிற்று. வெளியூர்களிலுள்ள சங்கங்களுக்கு பணம் கொடுத்ததனால் (ஷேர் ஹோல்டர்கள்) பங்குக்காரர்கள் சேர்ந்தார்கள். 1915 - வருஷம் ஜூன் மாதக்கடைசியில் இதன் மூலதனம் சற்றேறக்குறைய 30 - லட்சம் ரூபாயாக இருந்தது. செலவெல்லாம் போக கிடைத்த லாபம் ரூ. 57,000. சேம நிதி ரூபா 75,000. தவிரவும் சேலம், திருச்சினாப்பள்ளி, கோயம்புத்தூர், குண்டூர், மதுரை, ராமனாதபுரம், தஞ்சாவூர், தென்கன்னடம், கிருஷ்ணா, செங்கல்பட்டு இந்த ஜில்லாக்களில் மத்திய பாங்கிகளும் இருக்கின்றன. இவைகள் எல்லாம் அனேகமாய் சரியாகவே, வேலைசெய்துகொண் டிருக்கின்றன. இந்த 10–பாங்கிகளில் 5 - மட்டும் சங்கங்களை மெம்பர்களாக ஏற்றுக் கொள்ளுகின்றன. மீதி ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கிகளைப்போல் வேலை செய்கின்றன. இந்த மத்திய சங்கங்களின் மொத்த மூலதனம் 60-லட்ச ரூபாய். சென்ற வருஷத்தில் 400-சங்கங்கள் சேர்ந்த 20-யூனி

்களிருந்தன. இந்த யூனியன்களின்
லேயானது தனது சிப்பந்திகளைக்
ரண்டு சங்கங்களை மேன்பார்வை
ப்பதாகும். விவசாய சம்பந்தமில்
மல் கடன் கொடுக்கும் சங்கங்கள்
-இருக்கின்றன இவைகளின் மூல
ம் 15-லட்சம் ரூபாய். இவை
வெகு நன்றாய் வேலைசெய்து வரு
னால் இப்போது ஒரு லட்ச ரூபாய்
மந்தி இருக்கிறது. இவைகளில்
முனிசிபல் சிப்பந்திகளின் சங்கங்
, 2 கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்
ன் சங்கங்கள், 4 முனிசிபல் தோட்
ளின் சங்கங்கள், 5 பிரதம உபா
யாயர்களின்சங்கங்கள், 1 நெசவுக்
ர் சங்கம், 1 உப்புச் சுமக்கும்
கள் சங்கம், 1 மண் வெட்டும்
ர் என்போரின் சங்கம், 1 வீட்டு
லைக்காரர்களின்சங்கம், முதலியவை
டன் வினியோக சங்கங்களென்று
சொல்லப்படுகிற 12 சங்கங்களும்இருக்
றன. பண்டங்களை உற்பத்திசெய்ய
வாங்கவும், விற்கவும் அவைஏற்பட்
வை. ஏறக்குறைய 6 கட்டடச் சங்கங்
ளு மிருக்கின்றன. ஆனாலிவைகள்
லை நடத்திவருகிறதாகத் தெரிய
லை. 1915-ம் வருஷம் ஜூன்
டசியில் 1438 விவசாய சங்கங்களி
தன. இவைகளின் மூலதனம் 65
சம் ரூபாய். இவைகளின் சே
5½ லட்சம் ரூபாய். அவைகளில்
000 மெம்பர்களிருந்தனர். சென்னை
ஸ்டிரார் இவைகளை இரண்டு வகுப்
ளாகப் பிரித்திருக்கிறா. முதல்
ப்பு ரூபா 1000 அல்லது அதற்கு
ல்பட்டு உள்ளூரிலேயே கடன் அல்
டிபாசிட்டுகளை வாங்கினவைகள்.
ண்டாவது வகுப்பு ரூபா 100க்குக்
றையாமல் லாபமடைந்தவைகள்.
தல் வகுப்பில் 76 சங்கங்களும்
ண்டாவது வகுப்பில் 385 சங்கங்
மிருக்கின்றன. 1915 வருஷம்
ன் மாதக் கடைசியில் விவசாயச்
சங்கங்களுக்கு வரவேண்டிய கடன்
கை ரூபா 54 லட்சமாகும். ஸ்தல

யூனியன்களுடன் சேர்க்கப்படாத சங்கங்களின் தணிக்கையும் மேன்பார்வையும் கவர்ன்மெண்டு இன்ஸ்பெக்டர்களால் நடத்தப்படுகின்றன. ஸகல யூனியன்கள் ஜில்லா பாங்குகள் இவைகளின் மேன்பார்வை உத்தியோகஸ்தரல்லாதவர்களால் செய்யப்படவேண்டுமென்று எடுத்துக் காட்டப் பட்டிருக்கிறது. இந்த மேன்பார்வைக் காரர்களால் நியமிக்கப்படும் சிப்பந்திகள் பிரதம தணிக்கைக்கும் மேன்பார்வைக்கும் ஜவாப்புதாரியாவார்கள். கவர்ன்மெண்டு இன்ஸ்பெக்டர்களும் வருஷத்திற்கு ஒரு தடவை சங்கங்களின் கணக்குகளைத் தணிக்கை செய்யலாம்.

முக்கியமாய் கடனுக்காகவே கூட்டுறவுச் சங்கங்கள் இந்தியாவில் பலமாய் வேரூன்றி யிருக்கின்றன. மற்ற விதமான வேலைகள் செய்யும் சங்கங்களுமில்லாமல் போகவில்லை. இந்தியாவில் மொத்தம் உள்ள 17000 சங்கங்களில் சாமான் உற்பத்தி செய்யவும் விற்கவும் சென்ற வருஷத்தில் 41 சங்கங்களிருந்தன. கால்நடைகளை இன்ஷூர் செய்யும் சங்கங்கள் 78-இருந்தன. ஆனால் இந்த சங்கங்களின் பிரபலமும் விருத்தியும் எப்படியிருக்கவேண்டுமோ அப்படி யிருக்கவில்லை. ஏனெனில் கூட்டுறவுச் சங்க இலாக்கா நாணயச் சங்கங்களை ஏற்படுத்த முயலுவது போல மற்றவைகளை ஏற்படுத்த முயலுவதில்லை. இங்கிலாந்திலிருக்கும் விநியோகச் சங்கங்களென்ன, அயர்லாந்து ஜெர்மனி தேசங்களின் விவசாய சங்கங்களென்ன, ஜெர்மனி பிரான்சு இனம் மற்ற தேசங்களிலுள்ள நில பாங்கிகளென்ன இவைகளைப் போல இந்தியாவில் சங்கங்கள் ஏற்பட நிரம்ப இடமிருக்கிறது. உத்தியோகப் பற்றில்லாதவர்களின் ஒத்தாசையும் ஏற்பாடும் வேண்டும் கவர்ன்மெண்டாரின் ஆதரிப்பும் வேண்டும். இந்த வேலையினால் செட்டாயிருக்கும் குணம் விருத்தி ஆகிறதும், சுயேச்சா புத்தி உண்டா

தலும். சுய நம்பிக்கையை விருத்தி ஆகிறதும் ஜாஸ்தியாயிருப்பதினால் இந்த வேலையை அபிவிருத்தி செய்வதற்கு உத்தியோகஸ்தரல்லாதவர்கள் முன்வருவார்களென்று நம்பப்படுகிறது. இந்த முயற்சியின் நியமங்களையும் அனுஷ்டானங்களையும் நன்றாய்த் தெரிந்து கொள்ளும்படி ஜனங்களுக்குப் போதிக்க வேண்டும். இல்லாவிடில் வேலை சரியாக நடக்காது. இந்தியாவில் இந்த அம்சத்தை கவனிக்காததினால் நிர்மாணம் பலஹீனமாயிருக்கிறது. படிப்புக்கு வசதிகள் குறைவாய் இருக்கிறதினால் படிப்பை அபிவிருத்திசெய்வது கஷ்டமாக இருக்கிறது. வித்தையில்லாவிடில் இந்தக் கூட்டுறவு வேலை செய்வது கஷ்டமே. இரண்டாவதாக, கூட்டுறவுச் சங்கத்தினால் எல்லாக் குறைகளையும் நீக்கமுடியாது. விவசாயிகள் தரித்திரத்தில் கஷ்டப் படாமலிருக்க கவர்ன்மெண்டார் நிலத் தீர்வை சட்டத்தை கொஞ்சம் மாற்றி விவசாயிகளுக்கு நெருக்கடியைப் போக்க வேண்டும். கவர்ன்மெண்டார் நிலத் தீர்வை கஷ்டத்தைக் குறைக்கிறவரையில் ஜனங்களின் கஷ்டம் நீங்காது. கூட்டுறவுச் சங்கத்தினால் ஏதோ கொஞ்சம் கஷ்டத்தைத் தான் நிவர்த்திக்கலாம்.

---

# ஜனோபகார ஸபைகள்.

ஒரு தேசம் அபிவிருத்தி யடைந்து வருகிறதென்பதற்கு நிச்சயமான அடையாளம் ஒன்றுண்டு. அதாவது, அதின் ஜனங்கள் அவரவர் பாடு என்று இருந்து விடாமல் ஒருவருக்கொருவர் உதவி செய்ய முயலுவதேயாம். இப்படிப் பார்த்தால் இந்தியா தேசம் நாளுக்கு நாள் விருத்தி யடைந்து கொண்டு வருகிற தென்பது நிச்சயம். ஏனென்றால், தம்தம் பாட்டைப் பார்த்துக் கொண்டால் போதாதென்றும், ஒவ்வொருவரும் தம்மால் முடிந்த மட்டும் பொது நன்மைக்காகப் பாடுபட வேண்டுமென்றும், உணர்ச்சி பரவி, அந்த உணர்ச்சியின் பயனாக, இப்பொழுது இத்தேசத்தில் எங்கு பார்த்தாலும் நூற்றுக் கணக்கான பரோபகாரமான சபைகள் ஸ்தாபிக்கப்பட்டு வேலை செய்து வருகின்றன. இந்த சபைகள் அநேகமாய் பி. ஏ., எம். ஏ, முதலிய உயர்ந்த வித்தியா பட்டங்களுக்குப் படித்துவரும் வாலிபர்களால் நடத்தப்பட்டு வருகின்றன.

### ஜன ஊழிய சபைகள்.

இச்சபைகளுக்குள், முக்கியமாக Social Service Leagues என்று சொல்லப்பட்ட ஜன ஊழிய சபைகளையே சொல்ல வேண்டும். இந்த சபைகள் கல்கத்தா, பம்பாய், பூனா, சென்னை, அலகபாத், லக்னவ், பங்களூர், லாகூர், இன்னும் இந்தியாவில் உள்ள ஒவ்வொரு பெரிய பட்டணங்களிலும், ஊர்களிலும், ஸ்தாபித்து நடத்தப்பட்டு வருகின்றன. இன்னும், மதுரை, மாயவரம், பாலக்காடுமுதலிய பல ஜில்லாக்களிலும் நடந்து வருகின்றன. இந்த சபைகள் தங்கள் பெயருக்கேற்க பொதுஜனங்களுக்கு ஊழியம் செய்வதே தொழிலாகக்கொண்டுவேலை செய்து வருகின்றன. அதில், மெம்பர்களுக்கு எவ்விதமான லாபமும் இல்லை. அவர்கள் அநேகமாய் உயர்தரக் கலாசாலைகளில் படிக்கும்வாலிபர்களென்று முன்னமேயே சொன்னோம்; மற்றவர்கள் தக்க உத்தியோகஸ்தர்கள். படிப்பு, அல்லது உத்தியோகம் ஒழிந்த நேரத்தில் பரோபகாரமாக உழைத்து வருவதற்காக மேற்படி சபைகளில் சேர்ந்திருக்கிறார்கள். ஆகையால் பிரதிபலனை அடைவதுமில்லை, அதை எதிர்பார்ப்பதுமில்லை. தாங்கள் செய்யும் வேலையால் ஜனங்களுக்குச் சிறிது லாபம் ஏற்பட்டால் அதையே பெரிய வெகுமானமாக நினைத்து வேலை செய்து வருகிறார்கள்.

### சபையின் நன்மைகள்.

அவர்களுடைய வேலையால் இதுவரை ஏராளமான நன்மை விளைந்திருக்கிறது. உதாரணமாக, இச்சென்னையில் ஐந்துத் தர்மப் பள்ளிக்கூடங்களை வைத்து நடத்தி அநேக ஏழைப்பிள்ளைகளுக்கு இனாமாகக் கல்வி கற்பித்து வருகிறார்கள். ஏழை ஜனங்களுக்கு சகாயமாக மூன்று (கோ-ஆபரேடிவ்) ஐக்கிய நாணயச் சபைகளை நடத்தி வருகிறார்கள். ஜனங்களுக்கு கல்வி அவசியத்தையும் ஐக்கிய நாணயச் சபைகளின் பிரயோஜனத்தையும் தெரியச் செய்து கூடுமான இடங்களிலெல்லாம் தர்மப் பள்ளிக்கூடங்களையும், ஐக்கிய நாணயச் சபைகளையும் ஸ்தாபிக்கும்படி பாடுபடுகிறார்கள். இத்தேசத்தில் அசுத்தத்தினாலும், குடியாலும், கடனாலும் எவ்வளவு பெயர் கெட்டுப் போகிறார்களென்பது சகலருமறிந்த விஷயம். ஆகையால் 'மாஜிக் லாண்டர்ன்' என்ற விசித்திரப் படங்களைக் கொண்டும், துண்டுப் பத்திரி

சைகள் மூலமாகவும் பிரசங்க மூலமாகவும், ஜனங்களுக்கு நன்மார்க்கத்தைப் போதித்து வருவதால், ஏற்கெனவே, எத்தனையோ பெயர் குடியையும் கடனையும் விட்டு விட்டு அதனால் க்ஷேமமாய் இருக்கிறார்கள். ஜனங்கள் சுகாதார விதிகளையும், காலரா வைசூரிமுதலிய கொள்ளைவியாதிகளைத் தடுக்கும் முறைகளையும் கற்றுக்கொண்டு, வீடு வாசல்களையும் தங்கள் தேகங்களையும்,சாப்பாடு, தண்ணீர் முதலியவைகளையும் சுத்தமாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். முன்பு கண்ணெடுத்துப் பார்க்கக் கூடாமலிருந்த சில இடங்கள் இப்பொழுது சுத்தமாயிருக்கின்றன. இதைத் தவிர, ஷ சபை மெம்பர்கள் அடிக்கடி ஆஸ்பத்திரிகளுக்குப்போய்,வியாதிக்காரர்களுக்கு ஆறுதல் சொல்லியும், வேண்டிய சகாயங்களைச் செய்தும், கடிதம் முதலியது எழுதிக்கொடுத்தும், சிறு கதை புஸ்தகங்கள் நாவல்கள் முதலியவைகளை வாசிக்கக் கூடியவர்களுக்கு வாசிக்கக் கொடுத்தும், பலவிதமாகத் தேற்றி வருகிறார்கள். மேலும் இச்சபையார் சூதாட்டத்தைத் தடுப்பதற்காகவும் முயன்று வருகிறார்கள். Circulating Libraries. என்ற சுற்றி வரும் புஸ்தகசாலைகளை வைத்து ஜனங்களுக்குள் கல்வி பரவும்படி செய்து வருகிறார்கள். சிறு ஊர்களுக்கும் கிராமங்களுக்கும் போய், ஜனங்களுக்கு நாகரீகத்தையும் சுத்தத்தையும் கல்வி யறிவையும் உண்டாக்கிக் கொண்டுவருகிறார்கள். கிராமங்களில் தர்ம வைத்திய சாலைகளை ஸ்தாபித்திருக்கிறார்கள். பஞ்சம், கொள்ளை நோய், முதலியவைகள் பரவியிருக்கிற இடங்களுக்குப் போய் ஜனங்களைக் காப்பாற்றுகிறார்கள். தீ விபத்து, வெள்ள விபத்துகள் நேரிடுங் காலங்களில் இவர்கள் செய்யும் உதவி மிகவும் அரிது. இன்னும் இவர்கள் பரோபகாரமாகச் செய்யும் வேலைகள் அனந்தம்.

**தாழ்ந்த வகுப்பாருக்கு விமோசனம்.**

இந்தியாவில், ஜாதி வித்தியாசங்களால் விளைந்திருக்கும் பல தீமைகள் சகலருக்கும் தெரிந்தேயிருக்கிறது. கீழ் ஜாதிகளைப் படிப்பித்து நாகரீகப்படுத்தி முன்னுக்குக் கொண்டுவர வேண்டியது எவ்வளவு அவசியமென்பதை நாம் எல்லோரும் அறிந்திருக்கிறோம். இந்த மகா உத்தமமான தர்ம வேலையைச் செய்வதற்காக இந்தியாவில் ஒவ்வொரு முக்கியமான பட்டணங்களிலும் ஊர்களிலும் "Depressed classes Mission" கீழ் ஜாதிகளின் இரக்ஷிப்பு சபையென்று, ஒரு சங்கம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இச்சபையார் நூற்றுக்கணக்கான பிரைமரி, ஸெகெண்டரி பள்ளிக்கூடங்களை வைத்துப் பஞ்சமர், முதலியவர்களுக்கு இலவசமாகப் படிப்பு சொல்லிக்கொடுத்து வருவதோடுஏராளமானகைத்தொழிற்சாலைகளையும் ஏற்படுத்தி அவைகளில் பலகைத்தொழில்களையும்கற்றுக்கொடுத்துவருகிறார்கள். இதனால் கீழ் ஜாதியார்களுக்குப் படிப்புக்குப் படிப்பும், நாகரீகத்து நாகரீகமும் உண்டாவதோடு, அவர்கள் கேவலமானதொழில்களைச்செய்யவேண்டிய அவசியமும் இல்லாமல்போகிறது. ஆகையால் அவர்கள் எல்லாவிதங்களிலும் கௌரவமாய் வாழ்வதற்கு ஏதுவாகிறது. இந்த சபையின் முயற்சியால் ஏற்கனவே ஆயிரக்கணக்கான "கீழ் ஜாதியார்"களைப்பார்த்தால் கீழ் ஜாதிகளென்று சொல்ல முடியாது.இப்படிப் பள்ளிக்கூடங்களை வைத்து நடத்துவதும், வேலை பார்த்துக் கொடுப்பதும் மாத்திரமல்லாமல், பிரசங்க மூலமாக சுத்தம், நாகரீகம், நன்மார்க்கம், சற்குணம், முதலியவைகளைப் போதித்து எல்லா வழிகளிலும் கீழ்ஜாதிகளை முன்னுக்குக் கொண்டு வரும்படி அச்சபை வெகு ஊக்கமாய் உழைத்து வருகிறது.

**பெண் கல்வி.**

இத்தேசத்தில் பெண்களின் நிலைமை சகலருமறிந்த விஷயம். ஆகையால்

கீழ் ஜாதிகளை உயர்த்தும் சபைபோல் ஸ்திரீகளை உயர்த்தும்படி ஸ்தாபிக்கப்பட்டிருக்கும், "சேவசாதன்", "வித்யா ஆலயம்," "மகில வித்தியாலயம்" "நிஷ்காமமடம்" முதலிய ஸ்தாபனங்களைச் சொல்லலாம். "சேவசாதன்" என்னும் பெரிய பெண் பிள்ளைப் பள்ளிக்கூடம் பம்பாயிலும் பூனாவிலும் பிரபலமாய் நடந்து வருகிறது. அவைகளில் இந்தியாவின் சகல பாகங்களிலிருந்தும் நூற்றுக் கணக்கான பெண்பிள்ளைகள் போய்க் கல்வி கற்று வருகிறார்கள். மெட்ரிகுலேஷன் பரிக்ஷை வரைக்கும் படிப்பு சொல்லிக் கொடுக்கப் படுவதல்லாமல் பெண்களுக்கு வேண்டிய, தையல் பின்னல், சமையல் சங்கீதம், குடும்ப வைத்தியம் முதலியவைகளும கற்பிக்கப்படுகின்றன. இந்தியாவிலுள்ள சகல பெண் பாடசாலைகளிலும் இதையே முக்கியமாகச் சொல்ல வேண்டும். கலியாணமான பெரிய பெண்பிள்ளைகளெல்லாம் இதில் படித்து வருகிறார்களென்றால் இதன் மூலமாய்ப் பெண் கல்வி எவ்வளவு விரைவாகப் பரவுமென்பதைச் சொல்லவும் வேண்டுமா?

### விதவா மடங்கள்.

இந்தப் பள்ளிக்கூடங்களைவிட முக்கியமான மற்றொரு ஸ்தாபனமுண்டு. அதுதான், பூனாவில் உள்ள ஜெகத் பிரசித்திபெற்ற "Widows' Home" என்ற விதவை மடம். இந்தியாவில் இதைப் போன்ற மற்றொரு ஸ்தாபனம் கிடையாதென்று நிச்சயமாய்ச் சொல்லலாம். இது சுமார் 20 வருஷங்களுக்கு முன், பூனா பெர்கூஸன் காலேஜ் போதனாசிரியர்களில் ஒருவராகிய புரோபஸர் கார்வே அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. ஆதியில் சில கொட்டகைகளைக் கட்டி அவைகளில் சில, அனாதைக் கைம்பெண்களைப் படிப்பிக்கும்படி ஏற்பாடு செய்தார். வரவர அதன் பிரயோஜனம் ஜனங்களுக்குத் தெரிந்தவுடன், அவர்கள் தங்கள் பெண்களையும், விதவைகளையும் படிப்பதற்காக அங்கே அனுப்பி வைத்தார்கள். இப்பொழுது பூனா விதவை மடம் பூனாவுக்கு வெளியே சிறிது தூரத்தில் அழகான ஒரு கெட்டிக் கட்டிடத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. நூற்றுக் கணக்கான பெண்கள் அதில் படித்து வருகிறார்கள். அவர்களுக்குள் சுமார் 100-பெயர் விதவைகள்; மற்ற அநேகர் கலியாணமான பெரிய பெண்கள்; மற்றவர்கள் சிறு பெண்கள்; மெட்ரிகுலேஷன் பரிக்ஷை வரைக்கும் ஆங்கிலத்தில் படிப்பு சொல்லிக் கொடுக்கப்படுகிறது. ஆனால் அங்கே இதுதான் முக்கியமான படிப்பு என்று நினைக்கவேண்டாம். விதவைகளும் அனாதைப்பெண்களும் பிழைத்துப் போவதற்காக அவர்களுக்குப் பல தொழில்கள் கற்பிக்கப்பட்டு வருவதையே முக்கியமாகச் சொல்லவேண்டும். இந்த விதவை மடம் இல்லாவிட்டால் இத்தனை விதவைகளும் இத்தனை பெண்களும் கல்வியில்லாமல்தானே இருப்பார்கள்! தவிர, இந்தப் பள்ளிக்கூடத்தில் படித்த அநேக விதவைகள் இப்பொழுது கௌரவமாய்ப் பிழைத்து வருவதுமல்லாமல், பலர் மறு கலியாணம் செய்து கொண்டு க்ஷேமமாயிருக்கிறார்கள். இந்த விதவை மடத்தை ஒரு ஸ்திரீ சர்வ கலாசாலையாக ஏற்படுத்தி நமது ஸ்திரீகளுக்கு நாட்டுப் பாஷைகளில் உயர்தரக் கல்வி கற்பித்து வித்தியா பட்டங்கள் கொடுக்கும்படி புரொபஸர் கார்வே இப்பொழுது செய்யும் முயற்சிகள் சீக்கிரத்தில் பலித்து பூனா ஸ்திரீ கலாசாலை மூலமாக நமது ஸ்திரீகள் அதி விரைவாகக் கல்வியில் முன்னேறி விடுவார்களென்று எதிர்பார்க்கிறோம். மைசூர், பரோடா சமஸ்தானங்களிலும் விதவை மடங்கள் ஏற்பட்டு நன்றாய் நடந்து வருகின்றன. ஆனால் சென்னையிலும் விசாகப்பட்டணம், ராஜ மகேந்திரம் முதலிய இடங்களிலும் பேருக்கு விதவை மடங்கள் இருக்கின்றன. இவைகள்

பூனா விதவைமடத்தைக் கண்முன்னால் வைத்துக்கொண்டு இனியாவது சுறுசுறுப்பாக வேலை செய்யவேண்டும்.

### நன் நடத்தைச் சங்கங்கள்.

குடி, சூது, காமம் முதலியவைகளால் ஜனங்கள் கெட்டுப்போகாமல் தடுப்பதற்கு ஆங்காங்கு Social Purity Leagues என்ற சுத்த ஜீவிய சபைகள் வேலை செய்கின்றன. இச்சபைகளின் முயற்சியால் கொழும்பில் வேசி தாசிகளென்ற பெயரே யில்லாமல் போய்விட்டது; இரங்கூனிலும் வேசிகளின் ஆர்ப்பாட்டம் வெகுதூரம் அடங்கிவிட்டது. இச் சபையைச் சேர்ந்தவர்கள், லாகூர் முதலிய இடங்களில் வேசிகள் வசிக்கும் வீதிகளின் மூலையில்போய் நின்றுகொண்டு, வருகிறவர்களுக்குப் புத்தி சொல்லி அநேகரைத் திருப்பி அனுப்பி விட்டது சகலருமறிந்த விஷயம். அப்படியே கள்ளுக் கடைகளண்டையிலும் சாராயக் கடைகளண்டையிலும் நின்றுகொண்டு, குடிக்க வருகிறவர்களுக்குப் புத்தி சொல்லி குடிக்காதபடி செய்தும் வருகிறார்கள். இந்தக் குடியை ஒழிப்பதற்காக வேலை செய்து வரும் All-India Temperance Association, என்ற சர்வ இந்தியா மதுவிலக்குச் சபையின் அரும் பெரும் முயற்சிகளால் நூற்றுக் கணக்கானவர்கள் குடியைத் தவிர்த்து விட்டு க்ஷேமமாயிருக்கிறார்கள். இப்படியே கொலை, களவு முதலிய பெரிய குற்றங்களைச் செய்கிறவர்களை நல்வழிக்குக்கொண்டு வரும்படியாகவும் சில சபைகள் உழைத்து வருகின்றன. அவைகளில் "Salvation Army" என்ற இரக்ஷண் சேனையை விசேஷமாகச் சொல்லலாம். ஜெயில்களுக்குப் போய்க் குற்றவாளிகளைக் கண்டு அவர்களுக்கு நற்புத்தி சொல்லி, அவர்கள் ஜெயிலைவிட்டு வெளியேறிய பிறகு மறுபடியும் கெட்டுப்போகாமலிருக்கும் படிக்கு அவர்களுக்கு ஜீவனம்சத்துக்கு ஏதோ ஒரு வேலை பார்த்துக்கொடுத்து, ஏற்கெனவே, அநேக குற்றவாளிகளை நல்லவழியிற் சேர்த்திருக்கிறார்கள். தவிர, இரக்ஷண்யசேனையார் சரிபாய் நாகரீகமில்லாத முரட்டு ஜாதிகள் வசிக்கும் இடங்களுக்குப்போய் அவர்களில் ஏராளமானவர்களை ஏற்கெனவே நல்ல வழிக்குக் கொண்டு வந்திருப்பது எல்லோருமறிந்த விஷயம்.

### ஏழைக்கடன் சங்கங்கள்.

ஏழை விவசாயிகளும், ஏழைக் கூலிகளும் மார்வாடி முதலியவர்களிடத்தில் அநியாய வட்டிக்குக் கடன் வாங்கி அநியாயமாய்க் கெட்டுப் போவதை நாமெல்லோரும் பார்த்திருக்கிறோம். இப்படிக் கெட்டுப் போகும் பேதைகளைக் காப்பாற்றுவதற்காக பம்பாய் மதராஸ் முதலிய பட்டணங்களில் "Debt Redemption Societies" அதாவது, கடன் நிவர்த்தி சபைகள், ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. வாழ்நாளெல்லாம் உழைத்தாலும் தங்கள் கடனை அடைக்க முடியாத அநேகர் இந்த சபைகளில் சேர்ந்து தங்கள் கடன்களை இலகுவாய்த் தீர்த்துக்கொண்டு இப்பொழுது சுகமாய் இருக்கிறார்கள். திருஷ்டாந்தமாக பம்பாயில் இந்த சபையில் 353 மெம்பர்கள் உண்டு. அவர்கள் மார்வாடிகளிடத்தில் 100-க்கு 75 என்றும் 100-க்கு 150 என்றும் அகாத வட்டிக்குக் கடன் வாங்கி கடனைத் தீர்க்க முடியாமல் தவித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் சபையில் சேர்ந்தபிறகு சபைப் பணத்திலிருந்து அவர்களுக்கு அற்பவட்டிக்குக் கடன் கொடுக்கப்பட்டது. அதைக்கொண்டு அவர்கள் கடனைத் தீர்த்துக்கொண்டதுமல்லாமல், சபையிலிருந்து வாங்கிய கடனையும் மெள்ள மெள்ளக் கொடுத்து அடைத்து விட்டதாகத் தெரியவருகிறது.

### இதர ஊழிய சங்கங்கள்.

இந்தியாவில் அநேக இடங்களில் பிறவிக் குருடர்களுக்கும் செவிடர்க

ளுக்கும் எழுதப்படிக்கக் கற்றுக்கொடுக்கும் பள்ளிக்கூடங்களையும், குஷ்டரோகி மடங்கள், காசரோகி மடங்கள், தர்ம ஆஸ்பத்திரிகள், பலவித நோயாளிகளைப் பரிபாலிக்கும் சுகஸ்தாபனங்கள் அனாதைப் பிள்ளை மடங்கள், தர்ம வாசக சாலைகள், புஸ்தக சாலைகள், முதலியவைகளையும்ஜனோபகாரச் சபைகளுக்குள்ளாகவே சேர்த்துக் கொள்ள வேண்டும். ஜனங்களுக்குள் கல்வியைப் பரவச் செய்வதிலும், கீழ் ஜாதிகளை முன்னுக்குக் கொண்டு வருவதிலும், விதவைகளின் நிலைமையை சீர்திருத்துவதிலும், பெண் கல்வியைப் பரப்புவதிலும், ஆசார சீர்திருத்தங்களைச் செய்வதிலும், வியாதி முதலியவைகளைத் தடுப்பதிலும், குடி, சூது, பொய், களவு, கொலை, காமம் முதலிய குற்றங்களைக் குறைத்து ஜனங்களை நல்வழிப் படுத்துவதிலும், ஏழைகளை சம்ரக்ஷிப்பதிலும், இன்னும் மேலே சொல்லப்பட்ட சகல வழிகளிலும், பொது ஜனங்களுக்கு உபகாரம் புரிவதிலும், முன்னே சொல்லப்பட்ட சபைகள் மாத்திரமல்ல, சகல கிறிஸ்துவ மிஷனரிகளும், ஆரிய சமாஜ், பிரமோ சமாஜ், பிரார்த்தன சமாஜ், தேவ சமாஜ், தேவாலய சமாஜ், கிறிஸ்தோ சமாஜ், ராமகிருஷ்ண விவேகானந்த மிஷன், முதலிய ஹிந்துமத ஸ்தாபனங்களும் இன்னும் எண்ணிறந்த சங்கங்களும் சபைகளும், சிறந்த வேலை செய்துகொண்டு வருகின்றன. பொது நன்மைக்காக உழைக்கும் இந்த சகல சபைகளும் ஸ்தாபனங்களும், பொது ஜனங்களின் பண வுதவியாலேயே நடந்துவர வேண்டியிருப்பதால் பொது ஜனங்கள் அவைகளை ஆதரிப்பது கடமையாகும்.

---

# பிரம்ம சமாஜம்.

19-ம் நூற்றாண்டில் இந்து மத சீர்திருத்த சம்பந்தமாக ஏற்பட்ட சகல சங்கங்களிலும், சமாஜங்களிலும், பிரம சமாஜமே காலக்கிரமத்தில் முந்தியதாகும்.

**ராஜாராம் மோகன் ராய்.**

பிரம சமாஜத்தை ஏற்படுத்திய இராஜாராம் மோகன ராய் 1774-ம் வருஷத்தில் வங்காளத்தில் நல்ல வைதீக பிராமண குலத்தில் பிறந்தார். அவருடைய பிதா நல்ல தனவந்தராகையால் தமது குமாரனுக்கு முதல் தரமான வித்தியாப்பியாசம் செய்வித்தார். 12-வயதுக்குள் இராஜாராம்மோகனராய்பாரசீகத்தில் நன்றாய்த் தேர்ச்சியடைந்தவராய் அரபிபாஷையைக் கற்றுக்கொள்ளும்படி பாட்ணு பட்டணத்துக்குச் சென்றார். அங்கே அரபி, கணிதசாஸ்திரம், தத்துவசாஸ்திரம் முதலியவைகளைக் கற்றுக்கொண்டு காசிக்குச் சென்று சம்ஸ்கிருத பாஷையையும் தீரப்படித்து அறிந்து கொண்டார். ஆனால் "விளையும் பயிர் முளையிலேயே தெரியும்" என்றதுபோல், இளமைப் பருவத்திலிருந்தே அவருக்குத் தத்துவ ஆராய்ச்சியிலும், மதஆராய்ச்சியிலும், வெகு பிரீதியிருந்தது. ஆகையால் தமது 15-வது பிராயத்தில் திபேத் தேசத்திற்குப்போய் புத்த பார்க்கத்தைப்பற்றி ஆராய்ச்சிசெய்து புத்த சன்னியாசிகளோடு சிறிதுகாலம் வசித்துவந்தார். பிறகு பல ஊர்களையும் பார்த்துவிட்டுவீட்டுக்குத்திரும்பினார். ஆனால் வீட்டில் நெடுங்காலம் இருக்க அவருக்குக் கொடுத்து வைக்கவில்லை.

**அவருடைய மனப்பான்மை.**

ஏனெனில், தத்துவ விசாரத்திலும், மத ஆராய்ச்சியிலும் பதிந்து கிடந்த அவருடைய மனமானது விக்கிரகஆராதனை, சந்தியாவந்தனம், ஜாதி சித்தியாசம் முதலிய வெளிகருமங்களையும் சடங்கு ஆசாரங்களையும் அருவருத்துவிட்டது. அவருடைய பிதா மாதாக்கள், பந்துமித்திரர் முதலியவர்களுடைய குருட்டாட்டமான நம்பிக்கைகளும் அனுஷ்டானங்களும் அவருக்குப்பிடிக்கவில்லை. ஆகையால் அவர் அந்த ஆசார அனுஷ்டானங்களை அனுசரிக்கவில்லை. இதனால் அவருடைய சுற்றத்தாருக்கு வெகுகோபமும் வருத்தமும் உண்டாயிற்று. ஆனால் ராம் மோகன ராய் அசையவில்லை. மேலும், இந்து மதம் கிடந்த அலங்கோலத்தையும் சீர்கேட்டையும் கண்டு, மனம் சகிக்காதவராய் அவர் தமது 16-ம் பிராயத்தில் விக்கிரக வணக்கம் கூடாது என்று ஒரு புஸ்தகம் எழுதி வெளியிட்டார்.

**சுற்றரின் கொடுமைகள்.**

இவ்வளவு பாலியத்தில் தாய் தந்தையருடைய கோபத்தையும், பந்து மித்திரர்களுடைய கோபத்தையும், தமது ஜாதியாருடைய கோபத்தையும் லக்ஷியம் பண்ணாமல், சத்தியமே பெரிது என்று இப்புஸ்தகத்தைப் பிரசுரித்த அவருடைய மனம் எவ்வளவு வீராவேசம் நிறைந்ததாயிருந்திருக்கவேண்டுமென்பதை, நண்பர்களே! யூகித்துக்கொள்ளுங்கள். இக்காலத்தில் விக்கிரக வணக்கம், ஜாதி ஆசாரம், முதலியவைகளை எத்தனையோ பெயர் கண்டிருக்கிறார்கள். ஆனால் அக்காலத்தில் அப்படியல்ல. சகலஇந்துக்களும் ஒருவர் பாக்கியில்லாமல் விக்கிரக பூஜையிலும் ஜாதி ஆசாரத்திலும் முழுகிக்கிடந்த அக்காலத்தில், ஒரு மனிதன் அதிலும் ஒரு சிறு பையன் அதை எதிர்த்துப் பேசுவதென்றால், அது எவ்வளவு வீரமான செய்கை யென்பதைச் சொல்லவும்

வேண்டுமா ? ஆனால் ராம் மோகனரின் பந்துக்கள் அவரை இமிசிக்க ஆரம்பித்தார்கள். ஆகையால் அவர் 16-ம் பிராயத்தில் தெருவில் பட்டினி கிடந்து செத்தாலும், மனச்சாக்ஷிக்கு விரோதமாக நடக்க மாட்டேன் என்ற வைராக்கியம் நிறைந்தவராய் வீட்டை விட்டு ஓடிப்போய் விட்டார்.

### ஈஸ்ட் இந்தியா கம்பெனியிடம் சேவகம்.

பிறகு நெடுங்காலம் ஒரு இடத்தில் தங்காமல் ஊர் ஊராய்ச் சென்று, பல காரியங்களை நேரிற் கண்டு அறிந்து கொண்டார். ஆனால் 1803-ம் வருஷத்தில் அவருடைய பிதா காலவியோகமானார். அப்பொழுது அவருக்கு வயது 39. ஆகையால் அவர் வீட்டுக்குத் திரும்பிப் போய்ச் சேர்ந்தார். அப்பொழுது இந்தியாவில் பிரிட்டிஷ் இராஜாங்கம் ஸ்தாபகமாகவில்லை. ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் அதிகாரத்திலிருந்து ராஜாராம் மோகனராய் பல சுதேச பாஷைகளோடு இங்கிலீஷ் பாஷையையும் தீரக் கற்றிருந்தபடியால் ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் அவரை கிஸ்தி வசூல் செய்யும் உத்தியோகஸ்தர்களில் ஒருவராக நியமித்தார்கள். அவர் 10 வருஷம் இந்த வேலையிலிருந்தார். ஆனால் இலௌகீக விஷயங்களிலும், திரவியம் சம்பாதிப்பதிலும் எப்பொழுதுமே பிரியமில்லாத அவருக்கு சீக்கிரத்தில் மனம் சலித்துவிட்டது. ஆகையால் அந்த வேலையை விட்டு விட்டு, மதபோதகத்தில் இறங்கி விட்டார்.

### பிரம்ம சமாஜம் ஏற்பட்டது.

அவர், பாரசீகம், ஹிந்தி, அரபி, சம்ஸ்கிருதம், வங்காளி, இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் தேர்ந்த பாண்டித்திய மடைந்திருந்தபடியால் அப்பாஷைகளில் விக்கிரக ஆராதனை, ஜாதி ஆசாரம், முதலிய ஆசாரங்களைக் கண்டித்து அவர் வெளியிட்ட புஸ்தகங்களுக்கும் பத்திரிகைகளுக்கும் கணக்கு வழக்கில்லை. மேலும் பூசாரி, புரோகிதர் முதலியவர்களுடைய மாய்மாலங்களையும் அவர் பலமாய்க் கண்டித்தார். இதனால் அவருடைய ஜாதியார் மறுபடியும் அவரை உபத்திரவிக்க ஆரம்பித்ததால், அவர் மறுபடியும் வீட்டை விட்டுக் கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந்து அங்கு சிஷ்யர்களைச் சேர்த்துக்கொண்டு 1828-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 20-உ "பிரம்மசபா" என்று ஒரு சபையை ஸ்தாபித்தார். சீக்கிரத்தில் "சபா" என்பது "சமாஜம்" என்று மாறி அதிலிருந்து "பிரமசமாஜம்" என்று பெயர் வழங்கிவருகிறது.

### பிரம்ம சமாஜத்தின் தத்துவங்கள்.

1830-ம் வருஷம் ஜனவரி மாதம் 23-ந் தேதி பிரம சமாஜத்தாருடைய ஆராதனைக்காகக் கல்கத்தாவில் ஒரு தேவாலயம் கட்டி முடிக்கப்பட்டது. ராம் மோகன் ராயின் முக்கியமான போதனைகளாவன:—"ஒரே கடவுள் தான் உண்டு. எல்லாமதங்களும் அவர் அருளியவைகளே யாகும். ஜாதிபேதங்கள் தவறு. எல்லா மனிதரும் சகோதரர்களே. விக்கிரகவணக்கம் கூடாது. எப்படிப்பட்ட கிரந்தங்களானாலும், அது இந்து வேதங்களானாலும் சரி; கிறிஸ்தவர்களின் பைபிள் ஆனாலும் சரி; மகம்மதியரின் கொரான் ஆனாலும் சரி; எல்லா வேத புஸ்தகங்களிலும் ஞானம் அடங்கி யிருக்கிறது. ஆனால் அவைகளிலுள்ள ஒவ்வொரு எழுத்தும் தேவவாக்கு என்று நினைக்கக்கூடாது. அந்தப் புஸ்தகங்கள் ஒவ்வொன்றிலும் அநேக தவறுகள் உண்டு. ஆகையால் புஸ்தகங்களை முழுவதும் நம்பிவிடாமல் புத்திக்கு ஒத்த காரியங்களையே ஒவ்வொருவரும் விசுவசிக்கவேண்டும். அப்படியே போப்புகள், மௌல்விகள், பூசாரிகள், முதலியவர்கள் சொல்லுவதை எல்லாம் நம்பிவிடக்கூடாது. எல்லா மதங்களிலும் நல்லவைகளாய் உள்ளவைகளை கிரகித்துக்கொண்டு சகல மதஸ்தரோடும் சகோதர உறவா யிருக்கவேண்டும்.

மத தர்க்கம் கூடாது; அவரவர் தங்கள் தங்கள் மார்க்கத்தி லிருந்து கொண்டு நல்லவர்களாய் மட்டும் நடந்து கொண்டால் போதும். எந்த மார்க்கத்தில் இருந்தாலும் சரி. ஒருவர் நல்லவராயிருந்தால் அவருக்குத் தவறாமல் முக்தி கிடைக்கும்" என்பவைகளேயாம்.

### பிரம்ம சமாஜத்துக்கும் ஆர்ய சமாஜத்துக்கும் உள்ள பேதங்கள்.

பிரம சமாஜத்துக்கும், அதற்குப் பிறகு சுவாமி தயாநந்த சரஸ்வதியால் ஏற்படுத்தப்பட்ட ஆரிய சமாஜத்துக்கும் அநேக ஒற்றுமைகள் இருந்தாலும் இரண்டு முக்கியமான வித்தியாசங்களுண்டு. முதலாவது, இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு ஹிந்து வேதங்களும் கடவுள் நேரில் அருளிச் செய்தவைகளென்றும், அவைகளில் ஒரு தவறு கூடக் கிடையாதென்றும், சகல ஞானவானுக்கும் அறிவுக்கும் அவைகளே அஸ்திவாரமென்றும், மற்ற வேதங்களெல்லாம் பொய்யென்றும் ஆரிய சமாஜத்தார் சாதிக்கிறார்கள். ஆனால் பிரம சமாஜத்தார் எல்லா வேதங்களிலும் உண்மை யிருக்கிறதென்று ஒப்புக் கொள்ளுகிறார்கள். இரண்டாவது 33 கோடித் தேவர்களும், 333 ஜாதிகளும் இடைத்தட்டில் ஏற்பட்டவைகளென்று ஆரிய சமாஜத்தார் ஒப்புக் கொள்ளுகிறார்களென்ற போதிலும், ஆதி வேதங்களில் சொல்லப்பட்ட பிராமண க்ஷத்ரிய வைசிய சூத்திர என்ற நான்கு ஜாதிகளும் இருக்கவேண்டியது அவசியமென்று போதித்து வருகிறார்கள். பிறப்பினால் ஜாதி ஏற்படுவதில்லை என்று குணத்தினாலேயே ஏற்படுகிற தென்றும், பிராமணன் தீயவனாயிருந்தால் பறையனே யென்றும் பறையன் நல்லவனாயிருந்தால் அவன் பிராமணனே யென்றும், ஆரிய சமாஜத்தார் போதிப்பது மாத்திரமல்லாமல், ஆயிரக்கணக்கான பஞ்சமர்களை நல்லவர்களென்ற நியாயத்தால் பிராமணர்களாக அங்கீகரித்துக் கொண்டும் வருகிறார்கள். என்றாலும் அவர்கள் நான்கு ஜாதிகளுள் இருக்கவேண்டியது அவசியமென்று சாதிக்கிறார்கள். ஆனால் பிரம சமாஜத்தார் சகல ஜாதிபேதங்களும் தப்பிதமென்று போதித்து வருவது மல்லாமல், சாப்பாடு கொள்வனை கொடுப்பனை முதலிய விஷயங்களில் எள்ளளவேனும் ஜாதி வித்தியாசம் பார்ப்பது கிடையாது. இந்த இரண்டு விஷயங்களையுந் தவிர மற்ற விஷயங்களிலெல்லாம் அநேகமாய் ஆரிய சமாஜமும், பிரம சமாஜமும் ஒத்தே யிருக்கின்றன.

### கிறிஸ்தவ பாதிரிகளின் முயர்ச்சிகள்.

இந்த இரண்டு சமாஜங்களும் கிறிஸ்தவ மதத்துக்குச் சார்பா யிருப்பதாகச் சில மிஷனரிகள் சொல்லுவதுண்டு இது சுத்தப் பிசகு. இந்து மார்க்கத்தில் இடைத்தட்டில் உண்டான மூட ஆசாரங்களையும், குருட்டு வழிகளையும் சடங்கு ஆசாரங்களையும் நீக்கி, இந்து மார்க்கம் ஆதியில் எப்படிப் பரிசுத்தமா யிருந்ததோ அப்படியே மறுபடியும் அதைப் பரிசுத்தமான நிலைமைக்குக் கொண்டு வருவதன்பொருட்டே, இந்த சமாஜங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆரிய சமாஜத்தார் பைபிள் முதலிய பற மதப் புஸ்தகங்களை பொய்யென்று தள்ளி இந்து வேதங்களை மட்டுமே உண்மையென்று பாராட்டுகிறார்கள். பிரம சமாஜத்தார் இந்து உபநிஷத்துகளையும் பகவத்கீதையையும் மற்ற வேதங்களுக் கெல்லாம் மேலாகப் பாவித்து வருகிறார்கள். இந்து மதத்தில் தான் இரக்ஷண்யமுண்டு என்ற இந்துக்களை இராம் மோகனராய் எப்படி எதிர்த்து வந்தாரோ, அப்படியே கிறிஸ்து மதத்தில்தான் இரக்ஷணியம் உண்டு என்று போதித்த மிஷனரிகளையும் அவர் உக்கிரமாக எதிர்த்து வந்தார். இப்படிப் போதித்த மிஷனரிகளுக்கு விரோதமாக அவர் எழுதியிருக்கும் தர்க்கப் புஸ்தகங்கள் அனந்தம்

அவர் கல்வி கேள்விகளில் மற்றஇந்துக்களையெல்லாம் விடச் சிறந்திருந்ததைக் கண்டு, மிஷனரிகள் எப்படியாவது அவரைக் கையில் போட்டுக்கொள்ள வேண்டுமென்று முயன்றார்கள். அவரை எப்படியாவது கிறிஸ்து மார்க்கத்திற்கு இழுத்து விடும்படி கல்வி கேள்விகளில் சிறந்த ஒரு பாதிரியை அவரிடம் அனுப்பினார்கள். ஆனால் அந்தப் பாதிரி இராம் மோகனராயைக் கிறிஸ்து மதத்தில் சேர்ப்பதற்குப் பதிலாக இராம் மோகன்ராய் அந்தப் பாதிரியைப் பிரம சமாஜத்தில் சேர்த்து விட்டார்.

**இராம்மோகனின் பலவகை முயர்ச்சிகள்.**

இராம் மோகனராய் இப்படி மதசீர்திருத்தத்தை மாத்திரம் கவனித்துக்கொண்டிருக்கவில்லை. எல்லா விஷயங்களிலும் இந்தியா அபிவிருத்தி யடைவதற்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் வெகு ஊக்கமாகச் செய்து வந்தார். 1819-ஆம் வருஷம் கல்கத்தாவில் ஹிந்துக் காலேஜ் என்ற கலாசாலையை ஸ்தாபித்தார். அப்போது இத்தேசத்தில் இங்கிலீஷ் கல்வி கிடையாது. ஆகையால் இங்கிலீஷ் படிப்பு சொல்லிக் கொடுப்பதற்காக அவர் பல கலாசாலைகளையும் பள்ளிக்கூடங்களையும் ஆங்காங்கே ஸ்தாபித்தது மன்றி, டாக்டர் அலெக்ஸாண்டர் டப்,முதலிய மிஷனரிகள் பல இங்கிலீஷ் கலாசாலைகளை ஸ்தாபிப்பதற்கு உதவி செய்தார். மேலும், இராம் மோகனராயின் முயற்சியினாலேயே ஸத்தி என்ற உடன் கட்டையேறும் கொடிய வழக்கம் 1829-ஆம் வருஷத்தில் கவர்னர் ஜெனரலாயிருந்த வில்லியம் பெண்டிங்க் பிரபுவினால் சட்ட மூலமாய்த் தடுத்து விடப்பட்டது. இந்த ஒரு காரியத்திற்காக மாத்திரம் இராம் மோகனராயின் பெயர் என்றும் அழியாமலிருக்க வேண்டியது. இராஜ்ஜிய விஷயங்களிலும் இராம் மோகனராய் பலசீர்திருத்தங்களுக்காகப் பாடுபட்டார். Vernacular Press Act என்ற சுதேச பாஷைப் பத்திரிகைகளின் சட்டம் அமுலுக்கு வந்த காலத்தில் அவர் அதை ரத்துச்செய்யும்படி சக்ரவர்த்திக்கு நேரில் அனுப்பின சிறந்த மனுவை மறக்க முடியாது. 1830ஆம் வருஷத்தில் டில்லி பாஷா அவருக்கு ராஜா என்று பட்டம் கொடுத்து இங்கிலாந்துக்கு ஸ்தானாதிபதியாக அனுப்பினர். இங்கிலாந்தில் அரசர் அவருக்குப் பேட்டிக் கொடுத்தார். அவர் இந்தியாவின் க்ஷீணதசையைப் பற்றியும் எளிமையைப்பற்றியும் ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் டைரக்டர்களுக்கு நன்றாய் விவரித்துக் காட்டின விதத்தைப் பற்றி இன்றைக்கும் எல்லோரும் புகழ்ந்து கொள்ளுகிறார்கள். இந்தியாவின் புத்திர சிகாமணிகளில் ஒருவராகிய இவர் இந்தியாவுக்குத் திரும்பி வரக் கொடுத்துவைக்கவில்லை. இங்கிலாண்டில் உள்ள பிரிஸ்டல் பட்டணத்தில் அவர் காலகிரேயாகமாகிவிட்டார். அங்கே அவருக்கு ஒரு ஞாபகச் சின்னம் கட்டப்பட்டிருக்கிறது.

**சமாஜத்தின் அபிவிருத்தியும் பிளவுகளும்**

அவருடைய மரணத்துக்குப் பிறகு, உலகப்பிரசித்திபெற்ற கவிச்சிரேஷ்டராகிய டாக்டர் ஸர் ரபீந்திரநாத் தாகோருடைய தந்தையாகிய மகரிஷி தேவேந்திரநாத் தாகோர் பிரம சமாஜத்தின் தலைவராகத் தெரிந்துகொள்ளப்பட்டார். 1857-ஆம் வருஷத்தில் ஸ்ரீஜத் கேசவ சந்திர ஸேன் பிரம சமாஜத்தில் சேர்ந்தார். கேசவசந்திர ஸேன்பிரசங்கத்தில்மிகவுந்தேர்ந்தவர். 1864-ஆம் வருஷத்தில் சென்னைக்கு விஜயம்செய்து "வேத சமாஜ்" என்ற சபையை ஸ்தாபித்தார். ஆனால் 1865 ஆம் வருஷத்தில் பிரம சமாஜத்திலேயே ஒரு பிளவு உண்டாயிற்று. மகரிஷி தேவேந்திர நாத் தாகோரைத் தலைவராகப் பின்பற்றியவர்களுக்கு "ஆதி பிரமசமாஜம்" என்றும், கேஸவ சந்திரசேனைப் பின் பற்றியவர்களுக்கு "நவீன பிரமசமாஜம்" என்றும் பேர்

உண்டாயிற்று. 1867ஆம் வருஷத்தில் கேசவசந்திரஸேன் பம்பாய்க்குச் சென்று அங்கே "பிரார்த்தன சமாஜ்" என்ற சபையை ஸ்தாபித்தார்.

1881-ஆம்வருஷத்தில்கேசவசந்திரஸேனைச்சேர்ந்தவர்களுக்குள்மற்றொரு பிளவு உண்டாயிற்று. கேசவ சந்திரஸேன் ருதுவாகாத தனது குமாரத்தியைக் கூச்பிகார் மகாராஜாவின் தம்பிக்கு இரண்டாவது பெண்சாதியாக விவாகம் செய்துகொடுத்தார். ருதுவாகாத பெண்ணை விவாகம் செய்யக்கூடாதென்பது பிரம சமாஜத்தின் கொள்கை. அதிலும், ஏற்கெனவே கலியாணம் செய்திருந்த ஒருவருக்கு இரண்டாவது பெண்சாதியாக வதுவை செய்து கொடுத்தது ஒருவருக்கும் பிடிக்கவில்லை. அவரைச் சேர்ந்த அநேகர் உடனே அவரை நிராகரித்து விட்டார்கள். ஆனால் சிலர் பிராமாணிக்கந் தவறாமல் இருந்தார்கள். இப்படி அவரோடு உறுதியாய் நின்றவர்களுக்கு அதிலிருந்து "புது சுவிசேஷ சபை" (New Dispensation Church) என்று பெயராயிற்று.

இப்படி பிரம சமாஜம் மூன்று பிரிவுகளாய்ப் பிளவுபட்டிருந்த போதிலும், மொத்தத்தில் ஒரு சபையாகவே விளங்குகிறது. பிரமசமாஜத்தார் எல்லோரும் குருட்டு வழக்க பழக்கங்கள் ஒழிந்து, நல்ல ஞானம் உதயமாகி இந்தியா அபிவிருத்தி அடைவதற்காக ஐக்கியமாகவே உழைத்து வருகிறார்கள். இராஜா இராம் மோகனராய், மகரிஷி தேவேந்திரநாத் தாகோர், ஸ்ரீஜத் கேசவ சந்திரசேன், கவிசிரேஷ்டர் ரவீந்திரநாத் தாகோர், சித்திர சாஸ்திரி அபனீந்திரநாத தாகோர், பண்டிதை சரோஜினி தேவி, முதலியவர்களெல்லாம் பிரம சமாஜத்தைச் சேர்ந்தவர்களென்பதினாலேயே பிரம சமாஜத்துக்கு இந்திய தேச சரித்திரத்தில் அழியாப் புகழ் உண்டாகுமென்பதற்குத் தடையில்லை.

# ஆரிய ஸமாஜம்.

உலகத்தில் ஒவ்வொரு மார்க்கங்களிலும் உண்மையான பக்தி படிப்படியாய்க் குறைந்து வெளிக் கிரியைகளும் ஆசாரங்களும் மேலிட்டு விட்டதைப் போலவே, ஹிந்து மார்க்கத்திலும் பக்தி, யோகம், ஞானம் என்ற உள் தத்துவங்கள் பெரும்பாலும் நசித்துப் போய் நமது ஜனங்கள் முரட்டு ஆசாரங்களை அனுஷ்டித்து, மூட நம்பிக்கைகளைக் கைப்பற்றி, சாறு இருக்கச் சக்கையைச் சாப்பிடுவதற்குச் சமானமாய் அர்த்தசாரமில்லாத வெளி வேஷங்களையும், சடங்குகளையும் கிரியைகளையும் அநுசரித்து வருவதால், ஹிந்து மார்க்கத்தைப் பரிசுத்தப்படுத்தி அதைப் பழைய மேன்மையான அந்தஸ்துக்குக் கொண்டு வரும்படி ராஜாராம் மோகனராய், ஸ்வாமி தயாநந்த ஸரஸ்வதி, ஸ்வாமி ராமகிருஷ்ண பரமஹம்ஸா, விவேகாநந்த ஸ்வாமி முதலிய லோககுருக்கள் கிளம்பி, பிரம சமாஜம், ஆரிய சமாஜம், ராமகிருஷ்ண விவேகாநந்த ஆசிரமம் முதலிய சபைகளை ஸ்தாபித்துவிட்டுப் போயிருப்பதால், இந்தியா தேசம் மற்றக் காரியங்களில் மாறி வருவதைப் போலவே, மத விஷயத்திலும் சீர்திருத்த மடைந்து மேன்மை யடைந்து கொண்டு வருகிறதென்பது சகலரு மறிந்த விஷயம். இது இந்தியா சகல விதங்களிலும் அபிவிருத்தி யடைந்து வருவதற்குரிய முக்கியமான அறிகுறிகளில் ஒன்றாகும்.

### தயாநந்த சரஸ்வதி ஸ்வாமி.

ஆரிய சமாஜத்தை ஸ்தாபித்த தயாநந்த சரஸ்வதி சுவாமி 1824-ம் வருஷத்தில் கத்தியாவாரைச் சேர்ந்த மோர்வி யென்னும் சுதேச ராஜ்யத்தில் தங்காரா என்னும் ஊரில் பிராமண குலத்தில் பிறந்தவர். அவருக்கு ஆதியில் மூல் சங்கர் என்று பெயர். அவருடைய பிதா மகா பக்திவைராக்கியம் நிறைந்த ஓர் பெரிய வைதீகி; சாஸ்திர நியமனப்படி வருணாசிரம தருமங்கள் ஒன்றுந் தவறாமல் அனுஷ்டித்து வந்தார். அவருடைய மாதா, கற்பிலும், பொற்பிலும், பக்தியிலும், நல் விவேகத்திலும் சீதை, சாவித்திரி, தமயந்தி, நளாயினி முதலிய ஸ்திரீ ரத்தினங்களுக்குச் சமானமாக விளங்கின மாது சிரோமணி. இப்படிப்பட்ட தாய் தந்தையர்களின் வயிற்றில் பிறந்த மூல் சங்கர் வைதீகத்திலும், வருணாசிரம தர்மத்திலும் வளர்ந்து வந்தாரென்பதை நாம் சொல்ல வேண்டியதில்லை. பிதா மாதாக்களும், குருவும் சொன்னதெல்லாம் உண்மை யென்று நம்பி வந்தார். ஆனால் அவருக்கு 14-வது வயது நடக்கும்பொழுது ஒரு விசேஷம் சம்பவித்தது. அதனால் அவருடைய ஜீவிய முழுவதும் மாற நேரிட்டதாகையால் அதைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறோம். அதென்ன வென்றால், ஒரு நாள் மகா சிவராத்திரி அன்றைக்கு அவருடைய தகப்பனாரின் ஆக்ஞைப்படிக்கு அவர் மகாதேவர் சந்நிதிக்குச் சென்று இரவுமுழுவதும் தூங்காமல் மகாதேவர் விக்கிரகத்தின் முன்னிலையில் உட்கார்ந்து அர்ச்சனை செய்து கொண்டிருந்தார். அப்படி அர்ச்சனை செய்துகொண்டிருக்கும் பொழுது, ஒரு எலி மகாதேவர் விக்கிரகத்தின் மேல் ஏறி ஓடினது. மறுபடியும் அவர் அதை விரட்டினார். அவர் அதைத் துரத்தத் துரத்த, அது விக்கிரகத்தின் மேல் ஏறிக்கொண்டே யிருந்தபடியால் அவருக்கு மனதில் ஒரு பெருத்த சந்தேகம் உண்டாகிவிட்டது. "நாம்

கும்பிடுகிற இந்த மகாதேவர் உண்மையாகவே ஈசுவரனாயிருந்தால் இந்த எலி தன்மேல் ஏறும்படி விட்டுவிடுவாரா" என்று ஆலோசிக்கத் தொடங்கினார். மறுநாள் காலமே அவர் இதைப் பற்றித் தன்னுடைய தகப்பனாரைக் கேட்டார். உடனே தகப்பனாருக்கு அடங்காக் கோபம் உண்டாகிவிட்டது. தாறுமாறாகப் பிள்ளையை வைய ஆரம்பித்துவிட்டார். அதிலிருந்து மூல்சங்கருக்குத் தகப்பனார் வார்த்தையிலும், குரு வார்த்தையிலும், வைதீக சம்பிரதாயங்களிலும் வருணாசிரம தர்மத்திலும், விக்கிரக வணக்கம், முதலிய வெளி ஆசாரங்களிலும் நம்பிக்கையில்லாமல் போய்விட்டது. இப்படியாக, இந்த அற்பக்காரியத்தினால் மூல்சங்கருக்கு மனம் மாறியதினாலேயே அவர் பிற்காலத்தில் ஆரிய சமாஜத்தை ஏற்படுத்தினாரென்பது நிச்சயம்.

### மத ஆராய்ச்சியில் ஊக்கம்

ஆனால், அவருக்கு முந்தி பிரம சமாஜத்தை ஏற்படுத்திய ராஜராம் மோகனராய் தமது 16-வது வயதில் விக்கிரக ஆராதனை செய்யமாட்டேனென்று வீட்டைவிட்டு ஓடியதைப் போல், மூல் சங்கரும் வீட்டைவிட்டு உடனே ஓடிப்போகவில்லை. வீட்டிலேயே இருந்துகொண்டு மத ஆராய்ச்சியில் புகுந்துவிட்டார். மேலும், சம்ஸ்கிருதம், ஹிந்தி, உருது முதலிய பாஷைகளிலுள்ள புஸ்தகங்களையெல்லாம் தீரப்படிப்பதில் காலம் போக்கினார். ஆனால் 1845-ம் வருஷத்தில் அவருடைய தகப்பனார் வருணாசிரம தருமப்படிக்கு அவரை விவாகம் செய்து கொள்ளும்படி கட்டாயப்படுத்தினார். அப்பொழுது அவருக்குப் பிராயம் 21. தத்துவ விசாரணையிலும், மத ஆராய்ச்சியிலும், காலத்தைக் கழிக்கவேண்டுமென்று அவருக்கு இச்சையிருந்ததே யொழியக் கலியாணம் என்று அவர் கனவில் கூட நினைத்தவரல்ல. ஆகையால் தனக்கு விவாகம் வேண்டாமென்று கெஞ்சிக் கேட்டுப்பார்த்தார். அவருடைய தகப்பனார் அசையவில்லை. ஆகையால் ஒருநாள் அவர் ஒருவருக்கும் தெரியாமல் வீட்டை விட்டு ஓடிப் போய்விட்டார்.

### மத விசாரணை செய்தல்.

வீட்டை விட்டு ஓடியபிறகு அவர் பிரமசாரி விரதம் பூண்டு, மூன்று வருஷ காலம் ஊர் ஊராய் அலைந்து எண்ணிறந்த சாதுக்களையும் குருக்களையும் அடுத்து, அவர்கள் சொல்லக் கூடியதை எல்லாம் கேட்டுக்கொண்டு மவுல்விகளையும், பாதிரிகளையும் சந்தித்து, அவர்கள் சொல்லக் கூடியதையும் கேட்டுக்கொண்டு, சம்ஸ்கிருத பாஷையைத் தீரப்படித்து, வேதங்கள் சாஸ்திரங்கள் உபநிஷத்துகள் ஆகமங்கள் முதலிய நூல்களை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்து, மற்றவர்களுக்கு மறைபொருளாய்க் கிடந்த பல தத்துவங்களை அவைகளிலிருந்து கிரகித்துக் கொண்டு முன்னொருவராலும் போதிக்கப்படாத பல கொள்கைகளை நூதனமாகப் போதிக்கத்தொடங்கினார். சம்ஸ்கிருதத்தில் அவர் இணையில்லாத பண்டிதரா யிருந்ததோடு, பிரசங்கம் பண்ணுவதில் நிகரில்லாதவராகவும் விளங்கினபடியால் ஆயிரக்கணக்கான ஜனங்கள் அவருடைய உபதேசத்தைக் கேட்கச் சென்றது ஆச்சரிய மல்ல. அவர் கொஞ்சகாலம் பிரம சமாஜத்தில் சேர்ந்து வேலை செய்தார். ஆனால் பிரம சமாஜத்தில் சில கொள்கைகள் அவருக்குப் பிடிக்கவில்லை. இருக்கு, யஜுர், சாம, அதர்வணம் என்ற நான்கு வேதங்களிலு மிருந்து தான் எல்லா ஞானமும் புறப்பட்டதென்பது அவருடைய பிரதானமான கொள்கை. ஆனால்பிரமசமாஜத்தார் மேற்சொன்ன நான்கு வேதங்களையும், கோரான் பைபிள் முதலிய மற்ற வேதங்களையும் ஒரே படித்தாக வைத்து நடத்தினார்கள். ஆகையால் அவர் பிரமசமாஜத்தை விட்டுப் பிரிந்து, 1875-ம் வருஷத்

தில் பம்பாயில் ஆரிய சமாஜத்தை ஸ்தாபித்தார். இரண்டு வருஷத்திற்குப்பிறகு, 1877-ம் வருஷத்தில் பஞ்சாபின் தலை நகரமான லாகூருக்குச் சென்று, அங்கேயும் ஆரிய சமாஜத்தை ஏற்படுத்தினதுமல்லாமல் அதிலிருந்து லாகூரையே தமக்கு முக்கிய இருப்பிடமாக வைத்துக்கொண்டார். இன்றைக்கும் லாகூரிலேயே ஆரிய சமாஜத்தின் தலைச்சபை நடைபெறுகிறது. பஞ்சாப் மாகாணத்திலேயே ஆரிய சமாஜத்தார் அதிகமாயிருக்கிறார்கள்.

**ஆரிய சமாஜத்தின் முக்கியகோள்கைகள்**

இந்த ஆரிய சமாஜத்தின் முக்கியமான கொள்கைகளாவன:—

இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வண வேதம் ஆகிய ஆதி நான்கு (ஆரிய—சம்ஸ்கிருத) வேதங்களும் கடவுளால் ரிஷிகளுக்கு நேரில் அருளிச் செய்யப்பட்டவைகள்: அவைகளில் அடங்கியிருக்கிற சம்கிதைகளும், மந்திரங்களும தேவவாக்கு. ஆகையால் அவைகளில் ஒன்றும் பிசகு இல்லை. எல்லா ஞானமும் இரக்ஷணியமும் அவைகளிலேயே அடங்கியிருக்கிறது. மற்ற வேதங்களெல்லாம் மனிதர்கள் ஏற்படுத்திய பொய்யானவேதங்கள் (இதுதான் ஆரிய சமாஜத்தின் மூலாதாரம்—அஸ்திவாரக்கொள்கை) இருக்கு, யஜுர், சாம, அதர்வணம ஆகிய நான்கு வேதங்களும் ஒரே கடவுள் உண்டென்று முறையிடுகின்றன. ஆகையால் முப்பத்து முக்கோடித்தேவர்கள் இல்லை: புராணங்களும், ஆகம இதிகாசங்களும் இடைத்தட்டில் மனிதர்கள் கட்டினகட்டு; ஜாதிக்கட்டுப்பாடுகள் ஆசாரங்கள், திருவிழாக்கள் விக்கிரக ஆராதனை, சடங்குகள் யாவும் வீண்; இவைகளெல்லாம் மனிதர்கள் இடைத்தட்டில் ஏற்படுத்தியவைகள். பிராமணர்மட்டுமல்ல, சூத்திரர், பஞ்சமர் முதலிய சகலரும் வேதங்களைப்படிக்கலாம். எல்லோரும் வேதங்களைக்கட்டாயம் படித்தே தீரவேண்டும். ஐரோப்பியர் முதலிய அன்னிய நாட்டாருக்கும் மனித ஜென்மமெடுத்த சகலருக்கும், வேதங்கள் பொதுவேயாகும், பிராமணருக்குப் பிறந்தவன் பிராமணனென்று வேதங்கள் சொல்லவில்லை; ஒரு பஞ்சமன் நன்னடத்தை யுள்ளவனானால் அவன் பிராமணன்தான். ஒரு பிராமணன் தீயவனாக நடந்தால் அவன் சண்டாளன்தான்; இவைகளைத்தவிர வேறே ஜாதிபேத மில்லை; ஒரு தாரத்துக்குமேல் ஒரேசமயத்தில் விவாகம் செய்யக்கூடாது: ஆண்பிள்ளைகள் 25-வயதுக்குமேலும் பெண்பிள்ளைகள் 16-வயதுக்குமேலும்தான்விவாகஞ்செய்துகொள்ளவேண்டும். எல்லா யோகத்திலும்கர்மயோகமேசிறந்தது, சரியையை விடக்கிரியையே சிறந்தது. சகலத்தையும் துறந்துவிட்டு ஆரண்யம் சென்று தபசுசெய்வதைவிட உலகத்திலிருந்து மற்றவர்களுக்கு நன்மை செய்வதே முக்தியடைவதற்குச் சுலுவானவழி; ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பாட்டில் நல்லவர்களாயிருந்து விட்டால் போதாது; உலகத்தில் அஞ்ஞானத்தை அகற்றி, ஞானத்தைப் பரப்புவதற்கு ஒவ்வொருவரும் உழைக்கவேண்டியது கடமை. பரோபகாரமாக உழைக்காதவர்களுக்கு முக்தியில்லை, என்பது முதலியவைகளாம் மற்ற மார்க்கத்தினரைப் போல் ஆரிய சமாஜத்தாரும் பொய், கொலை, களவு, காமம், முதலிய தின்மைகளைக் கண்டிப்பதால் அவைகளைப் பற்றி நாம் இங்கு விவரிக்கவேண்டிய அவசியமில்லை. சில புரோகிதர்களும் பண்டிதர்களும் ஜாதிபேதம், கர்மானுஷ்டானங்கள், ஆசாரங்கள் இவைகளுக்கு வேதங்களையே ஆதாரமாகச் சொல்லுவதுண்டு. சுவாமி தயாநந்த சரஸ்வதி வேதங்களைத் தீரக்கற்று, வேதங்கள் இக்காரியங்களை விலக்குகின்றனவென்று நேர் விரோதமாக நிரூபித்து விட்டதால், அவருடைய உறவின்முறையாரும் மற்ற பிராமணர்களும் இன்னும் கர்நாடகக்குருட்டுத்தனம் மாறாத சகலரும், தயாநந்த சரஸ்வதி சுவாமியையும், அவரைச் சேர்ந்தவர்களையும்

பலவாறு நிந்தித்து நிர்ப்பந்தப்படுத்தி வந்தார்கள். ஆனால் மற்ற மார்க்கங்கள் நிர்ப்பந்தத்தால் எப்படி உலகத்தில் நிலைத்து விட்டனவோ, அப்படியே ஆரிய சமாஜமும் நிர்ப்பந்தங்களினால் லவினமடையாமல் நாளுக்கு நாள் அபிவிருத்தி யடைந்து கொண்டு வந்தது. சுவாமி தயாநந்த சரஸ்வதி தமது ஆயுள் காலம் முழுவதும் ஒரு க்ஷணமாவது இளைப்பாறினவரல்ல. எந்நேரமும் ஊர் ஊராய்ச் சென்று பிரசங்கம் செய்து ஆயிரக் கணக்கானவர்களை ஆரிய ஸமாஜத்தில் சேர்த்துக் கடைசியாய் 1883-ம் வருஷம் அக்டோபர் மாதம் 30-ந்தேதி ஜோத்பூரில் சமாதி யடைந்தார். அவர் இறந்த பிறகு அவருடைய சிஷ்யர்களில் முக்கியமான லாலா லஜபதிராய், லாலா ஹன்ஸ்ராஜ், லாலா சயின்தாஸ், பண்டித குருதத்தா, முதலியவர்கள் அவர் வேலையைத் தொடர்ந்து நடத்தி ஏராளமானவர்களை ஆரிய சமாஜத்தில் சேர்த்து வருகிறார்கள். இப்பொழுது 3 லக்ஷம் பேருக்குமேல் ஆரிய சமாஜத்தில் சேர்ந்திருப்பதாகத் தெரிய வருகிறது.

**ஆரிய சமாஜத்தாரின் நற்கிரியைகள்.**

இதோடு, அஞ்ஞானத்தைப்போக்கி ஞானத்தைப் பரவச் செய்ய வேண்டும் என்பது அவர்களுடைய குருவின் கண்டிப்பான கட்டளைகளில் ஒன்று. ஆகையால் அவர்கள் இத்தேசத்தில் கல்வி அறிவைப் பரவச் செய்வதற்குத் தங்களால் என்னென்ன செய்ய முடியுமோ அவைகளை யெல்லாம் மகா ஊக்கத்தோடு செய்து வருகிறார்கள். லாகூரில் தயாநந்த சரஸ்வதி சுவாமிகளின் பெயரால் "தயாநந்த ஆங்கிலோ வெர்னகுலர் காலேஜ்" என்ற ஒரு பெரிய காலேஜை நடத்துகிறார்கள். பஞ்சாப் மாகாணத்தில் நடந்து வரும் சகல காலேஜுகளிலும் அதுவே பெரியதென்றும், சிறந்த தென்றும் மற்றக் காலேஜுகளைவிட அதில் அதிகமாக மாணுக்கர்கள் உயர்தர வித்யா பட்டங்களுக்குப் படித்து வருகிறார்களென்றும்,பஞ்சாப்கவர்ன்மெண்டார் மெச்சியிருக்கிறார்கள். இதைத் தவிர அநேக ஹைஸ்கூல்களையும்ஸக்கண்டரி ஸ்கூல்களையும்ஆங்காங்கே வைத்து நடத்திவருகிறார்கள். இன்னும் ஆசார சீர்திருத்தத்துக்காக ஆரிய சமாஜத்தார் செய்துவரும் அரும்பெரும் வேலைகளைப்பற்றி அறியாதவர்கள் யார்? பெண்களுக்குக் கல்விகற்பிக்கவேண்டியது புருஷர்களின் கடமையென்று ஸ்வாமி தயாநந்த சரஸ்வதி வேதங்களிலிருந்து பல மேற்கோள்களை யெடுத்துக் காட்டியிருப்பதால், ஆரிய சமாஜத்தார் தங்கள் காலேஜுகளிலும் ஹைஸ்கூல்களிலும் பெண்களை தாராளமாகச் சேர்த்துக் கொண்டு அவர்களுக்குஉயர்தரக் கல்விகற்பித்து வருவது மல்லாமல், பெண்களுக்கென்று பிரத்தியேகமாகப் பல பாடசாலைகளையும், வைத்து நடத்தி வருகிறார்கள். அப்படியே தாழ்ந்த வகுப்பார் என்று சொல்லப்பட்ட பஞ்சமர் முதலியவர்களுக்கும் கல்வி கற்பித்து அவர்களை முன்னுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆரிய சமாஜத்தின் மூலமாக இப்படிப் படித்து இதுவரைக்கும் முன்னுக்கு வந்திருக்கும் பஞ்சமர்கள் ஆயிரக்கணக்கா யிருக்கின்றனர். இதோடு, பஞ்சம், கொள்ளை நோய், வெள்ள விபத்து, தீவிபத்து முதலியவைகள் நடக்கும் இடங்களுக்குச்சென்று இதுவரைக்கும் ஆயிரக் கணக்கான ஏழைகளைக் காப்பாற்றியிருப்பதுடன், நூற்றுக்கணக்கான அநாதிகளை இன்றைக்கும் போஷித்து வருகிறார்களென்பது சகலருமறிந்த விஷயம்.

ஆனால் இவைகளையெல்லாம் விடப் பெரியதோர் நன்மை ஆரிய சமாஜத்தினால் ஏற்பட்டிருக்கிறது. அது என்னவென்றால்:—லாலா லஜபதிராய் முதலிய இரண்டொருவரைத் தவிர, மற்ற ஆரிய சமாஜத்தாரெல்லாம் ராஜ்ஜிய விவகாரத்தில் கலக்காமல் அண்டா

யிருக்கிறார்களென்றபோதிலும், ஆரிய சமாஜத்தின் போதனை சாதனைகளினால் இலக்ஷக்கணக்கான இந்தியர் மனம் ஐரோப்பிய நாகரீகத்தில் ஈடுபடாமல் இந்தியாவின் பூர்வீக நாகரீகத்தில் லயித்து தேசாபிமானமென்ற பாசமும், தேசசேவை செய்யவேண்டுமென்ற ஆசையும் நிறைந்தவைகளாயிருப்பதால், இந்தியா சுயராஜ்யம் அடைவதற்கு (பல ஏதுக்களில்) இதுவும் ஒரு ஏதுவாகுமென்பதில் என்ன சந்தேகம்?

---

# ராமகிருஷ்ண விவேகாநந்த ஆசிரமம்.

சுவாமி ராமகிருஷ்ண பரமஹம்ஸரும், விவேகாநந்தரும், ஆகிய இருவரும் இந்த ஆசிரமம் ஏற்பாடாவதற்கு ஏதுவாயிருந்தபடியினால், இது ராமகிருஷ்ண விவேகாநந்த ஆசிரமம் என்று அழைக்கப்படுகிறது.

### ராமகிருஷ்ண பரம ஹம்ஸரின் சரித்திரம்.

சுவாமி ராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்று பிற்காலத்தில் பிரசித்திபெற்ற கடதர் சட்டர்ஜி, 1834-ம் வருஷம் வங்காளத்திலுள்ள கமாபுகர் என்னும் ஊரில் நல்ல பிராமண குடும்பத்தில் பிறந்தார். அவருடைய தமயனார் கல்கத்தாவில் ஓர் காலேஜில் (புரொபஸராக) போதனாசிரியராக இருந்தபடியால், கடதர் சட்டர்ஜிக்கு இங்கிலீஷ் படித்துக்கொடுக்க விரும்பினார். ஆனால் "விளையும் பயிர் முளையிலேயே தெரியும்" என்கிறார்களே. அதுபோல சிறுவத்திலிருந்து கடதர் சட்டர்ஜியின் மனம் லௌகிகக் காரியங்களில் ஈடுபடாமல், ஈசுவர தியானத்திலும் வைதீக ஒழுக்கத்திலும் பிரவர்த்தித்து அதிலேயே லயித்துப்போயிருந்தது. ஆகையால் அவர் சிறு பையனாயிருக்கையிலேயே, தக்ஷிணேஸ்வரம் என்ற பக்கத்து ஊரிலுள்ள கோவிலில் பூசாரியாகப் போய்ச்சேர்ந்தார்.

### பரமஹம்ஸர் சன்னியாஸ மடைதல்.

ஆனால் அக்கோவிலில் நடக்கிற வீண் சடங்குகளையும் அலங்கோலங்களையும், உண்மையான பக்தி ஒருவருக்கும் இல்லாமலிருந்ததையும், பொதுவாக இந்துமதம் கிடந்த அலங்கோலத்தையும், கண்டு அவருக்கு சீக்கிரத்தில் மனம் வெறுத்துவிட்டது. அவரோவென்றால் சதா ஈசுவர சிந்தை உடையவர். பக்தி ஆவேசம் நிறைந்தவர். பகவானைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டு பரவசமடைய வேண்டுமென்று உருகிக்கொண்டிருந்தார். அவருக்கு இந்த வெளிச் சடங்குகளும் வீண் ஆசாரங்களும் எப்படிப் பிடிக்கும்? ஆகையால் அவர் பூசாரி வேலையை விட்டுவிட்டு, அருகாமையிலிருந்த ஒரு சிறு ஆரண்யத்துக்குச் சென்று அங்கே ஈசுவரதியானத்திலும் ஈசுவர பூஜையிலும் காலங்கழிக்கலானார். அப்படியிருக்கும் நாளில், ஒரு ஸ்திரீ யோகி அங்கு வந்து சில வருஷக் காலம் அவருக்கு உபதேசம் செய்து, யோகாப்பியாசமும் செய்வித்து விட்டுப்போனார். பிறகு ஒரு சன்னியாசி அவ்விடம் வந்து அவருக்கு சன்னியாச தீக்ஷைகொடுத்தார். அதிலிருந்து அவருக்கு ராமகிருஷ்ண பரமஹம்ஸ சுவாமி என்று பெயர் வழங்கலாயிற்று.

### பரமஹம்ஸரின் மாஹாத்மியம்.

சுவாமி ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் பக்தியையும் யோகத்தையும் ஞானத்தையும், அவருடைய புனிதத்தையும் மகிமையையும் சொல்ல முடியாது. சகல மதங்களும் ஒன்றே என்று அவர் கண்டுகொண்டதும், முதலில் கிறிஸ்துவாகவும், பிறகு மகம்மதியாகவும், பிறகு பௌத்தராகவும், ஒவ்வொரு மதத்திலும் கொஞ்சம் கொஞ்சக் காலம் இருந்து எல்லா மதங்களும் ஒன்றே யென்பதை உலகத்துக்கு நிரூபித்தார். ஜாதிவித்தியாசங்கள் கூடாது என்று நிரூபிக்கும்படி, உயர்குலப் பிராம்மணரும் பெரிய மகாத்மாவும் ஆகிய அவர், ஒரு பறையன் வீட்டில் வேண்டுமென்றே வேலைக்காரனாய்ச் சேர்ந்து பறையனுக்கு ஊழியம் செய்துகொண்டிருந்தார். காசுபண மென்பதெல்லாம்

பொய்யென்று காண்பிக்கும்படி கங்கை நதிக்கரையில் போய் உட்கார்ந்து கொண்டு, ஒரு கையில் சக்தியையும், மற்றக் கையில் பவுன்களையும் வைத்துக்கொண்டு, "அதுவும் அழுக்கு இதுவும் அழுக்கு" என்று சொல்லிக் கொண்டே இரண்டையும் ஒன்றாய்த் தேய்த்து ஆற்றில் போட்டுவிட்டுப் போய் விடுவார். ஆண்பிள்ளை பெண் பிள்ளை யென்ற மாய்கையை மறக்கும் படியாக ஒரு பெண்ணைப்போல் உடுத்திக் கொள்ளுவார். அன்னம், ஆகாரம், தண்ணீர், நித்திரை, எல்லாவற்றையும் மறந்துவிட்டு, ஒரு வாரம், இரண்டு வாரத்துக்குமேல் யோகத்தில் அமர்ந்து விடுவார்.

இப்படிப்பட்ட பரமகுருவின் கீர்த்தி சீக்கிரத்தில் வங்காள முழுவதும் பரவிவிட்டது.

பிரம சமாஜத்தின் தலைவர்களில் ஒருவரான கேசவ சந்திரகேசன், பி. ஸி. மசும்தார், முதலியவர்களைப் போன்ற அநேக ஞானிகள் அவரைக் கண்டுகொள்ளும்படி வந்தார்கள். அவருக்கு இங்கிலீஷில் ஒரு அக்ஷரம் கூடத் தெரியாதென்ற போதிலும், எம். ஏ. பி. ஏ. பட்டாதாரிகள் அநேகர் அவரிடம் உபதேசம் பெற வந்தார்கள். இப்படிப் படித்தவர்களும் படியாதவர்களும் ஆயிரக் கணக்காக அவரை அண்டி ஆத்மஞானம் பெற்றார்கள்.

### விவேகானந்த ஸ்வாமி—அவரது புத்தி கூர்மை.

இவர்களுக்குள் நரேந்திரநாத் தத்தா பி. ஏ. என்று ஒருவர் இருந்தார். இந்த நரேந்திரநாத் தத்தா க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவர். ஆச்சரியமான தேகக்கட்டும் தேஜசும் முக விலாசமும், புத்தி விசாலமும், வாய்ச்சாலகமும் வாய்த்தவர். அவர் 16-வயது பையனும் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருக்கும் பொழுது, ஜெகப்பிரசித்திபெற்ற ஸ்பென்ஸர் என்னும் இங்கிலீஷ் தத்துவ சாஸ்திரியோடு தர்க்கம் செய்தவரென்றால் அவருக்கு எவ்வளவு அபாரமான மூளை யிருந்திருக்க வேண்டும். இங்கிலீஷ் படித்த மற்றனேகப் பிள்ளைகளைப் போலவே அவரும் கடவுள் இல்லை யென்று தீர்மானமாயிருந்தார். அப்படி யிருக்கும் பொழுது சுவாமி இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் கீர்த்தியைப்பற்றிக் கேள்விப்பட்டு, வேடிக்கை பார்க்கும்படி போய் சுவாமி பரமஹம்ஸரைக் கேவி பண்ண ஆரம்பித்தார். "கடவுளை நீர் கண்டீரா" என்று மற்றவர்களைக் கேட்பதைப்போலவே, அவரையும் பரிகாசமாய்க் கேட்டார். அதற்கு "ஆம். இதோ நான் கடவுளை நேராய் பார்க்கிறேன்" என்று சுவாமி பரமஹம்ஸர் பதில் சொன்னதும், நரேந்திரநாத் தத்தாவுக்குத் திடுக்கிட்டு விட்டது. மற்றவர்களை அப்படிக் கேட்டால் அவர்கள் கடவுளை எப்படிப் பார்க்க முடியும் என்றல்லவோ சொல்லுவார்கள். இந்த மனிதன் "ஆம். இதோ நேரில் பார்க்கிறேன்" என்று சொல்லுகிறாரே இதில் ஏதோ விசேஷம் இருக்கிறது என்று எண்ணமிட்டு, அதிலிருந்து அடிக்கடி பரமஹம்ஸ சுவாமியை தரிசித்து உபதேசம் பெற ஆரம்பித்தார்.

### பரமஹம்ஸருக்கு அவர்மேலுள்ள ப்ரீதி.

அவருடைய ஆழ்ந்த புத்தி தீக்ஷண்யத்தையும், அளவிறந்த மனவெழுச்சியையும் ஊக்கத்தையும், கண்டு சுவாமி பரமஹம்ஸருக்கு அவர்மேல் விசேஷப் பிரியமுண்டாயிற்று. சீக்கிரத்தில் நாஸ்திக வாதியாயிருந்த நரேந்திரநாத் தத்தாவை நல்ல வேதாந்தியாகச் செய்து விட்டார். அவருடைய புத்தி விவேகத்தை மெச்சி, அவருக்கு "விவேகாநந்தர்" என்று பெயர்கொடுத்தார். அதிலிருந்து நரேந்திரநாத் தத்தாவுக்கு "விவேகாநந்தர்" என்று பெயராயிற்று. "விவேகாநந்தர்" என்னும் பெயர் உலகமெல்லாம் வியாபிக்கும் என்று ராமகிருஷ்ண பரமஹம்ஸ சுவாமிகள் சொன்னதைப் போலவே, இப்பொ

மூது விவேகாநந்தரின் பெயர் உலக முழுவவம் வியாபித்திருக்கிற தென்பதற்கு என்ன ஆக்ஷேபணை?

### அமெறிக்காவுக்கு ப்ரயாணம்.

விவேகாநந்தர் உலகத்தில் எவ்வளவோ பெருமை மகிமைகளை யெல்லாம் அடைந்திருக்கலாமென்ற போதிலும், அவர் எல்லாவற்றையும் வெறுத்துவிட்டு, பரமஹம்ச சுவாமிகளின் சிஷர்களில் ஒருவராய்ச் சேர்ந்து கொண்டார். சுவாமி பரமஹம்ஸர் 1886-ம் ஆண்டில் சமாதியடைந்த பிறகு, அவரும் மற்ற சிஷர்களும் சன்னியாச விரதம்பூண்டு, பரமஹம்ஸரின் போதனைகளை உலகத்தில் பரப்பும்படி வெளிக்கிளம்பினார்கள். விவேகாநந்த சுவாமி இமயமலைச் சாரலுக்குச்சென்று 6 வருஷக்காலம் யோகத்திலிருந்தார். இப்படி முஸ்தீப்பு செய்துகொண்டு, 1892-ம் வருஷத்தில் சென்னைக்கு விஜயம்செய்தார். 1893ம் வருஷத்தில் அமெரிக்காவில் உள்ளசிக்காகோ பட்டணத்தில் Parliament of Religions அதாவது, சகல மதங்களின் பார்லிமெண்ட், அல்லது, சர்வ சமய சமரசசங்கம் என்னும்சபை கூடிற்று. இராமநாதபுரம் இராஜாவான காலஞ்சென்ற பாஸ்கர சேதுபதி சுவாமி விவேகாநந்தருக்குப் பொருள் உதவிசெய்து, மேற்படி சபையில் ஹிந்து மதத்தைப் பற்றிப் பிரசங்கிக்கும்படி அமெரிக்காவுக்கு அனுப்பி வைத்தார்.

### அமெரிக்காவில் அவர் சீர்த்தி.

விவேகாநந்த சுவாமிகள் மேற்படி சபையில் பிரசங்கித்ததும், அவருடைய அபாரமான புத்தி விசாலத்தையும் ஆழ்ந்த படிப்பையும் ஆச்சரியமான இங்கிலீஷ் கல்வியையும், நிகரில்லாத வாய்ச்சாலகத்தையும், தத்துவஞானத்தையும் கண்டு, அமெரிக்கா முழுவதும் பிரமித்து விட்டதும், அநேக அமெரிக்கர்கள் அவருக்கு சிஷர்களாகிவிட்டதும், ஆயிரக் கணக்கான அமெரிக்கர்கள் ஹிந்து மார்க்கத்தில் சேர்ந்து கொண்டதும், இப்பொழுது சிறபிள்ளைக்கு முதலாய்த் தெரியுமாகையால், அதைப் பற்றி விஸ்தரிக்க வேண்டிய அவசியமில்லை. அதுவரைக்கும் ஹிந்து மார்க்கம் இந்தியாவுக்குள்ளேயே அடைபட்டிருந்தது. விவேகாநந்த சுவாமிகளே அதை அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் பரவும்படிச் செய்தார். இப்பொழுது அமெரிக்காவில் மட்டும் சுமார் பத்தாயிரம் ஹிந்துக்களிருக்கிறார்கள். பல ஹிந்து தேவாலயங்களு முண்டு. ஆஸ்திரேலியா, ஐரோப்பா முதலிய கண்டங்களிலும் அப்படியே ஹிந்து மதம் பரவிக்கொண்டு வருகிறது. இவ்வளவுக்கும் விவேகானந்த ஸ்வாமிகளே மூலகாரணம்.

### ராமக்ருஷ்ண விவேகாநந்த சிரமம்.

விவேகானந்த சுவாமிகள் 1902-ம் வருஷத்தில் தமது 40-ம் பிராயத்தில் காலவியோகமானார். ஆனால், தாம் இறப்பதற்கு முன் தமது குருவாகிய ராமகிருஷ்ண பரம ஹம்ஸரின் போதனைகளைப் பறப்புவதற்கும், பொது நன்மைக்காகப் பாடுபடுவதற்கும், ராமகிருஷ்ண ஆசிரமம் என்ற ஒரு சபையை ஏற்படுத்தினார். விவேகானந்தசுவாமிகளின் மரணத்திற்குப் பிறகு அவருடைய சிஷ்யர்கள் அதை ராமகிருஷ்ண விவேகானந்த ஆசிரமம் என்று அழைத்து வருகிறார்கள்.

இந்த ராமகிருஷ்ண விவேகானந்த ஆசிரமம் நல்ல வேலை செய்துகொண்டு வருகிறது. ஹிந்துமதத்தைப் போதிக்கும்படி, அமெரிக்காவுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் சுவாமி பாமானந்தபாரதி முதலிய பல மிஷனரிகளை அனுப்பியிருக்கிறது.

இந்த ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள் பஞ்சமர் முதலிய கீழ் ஜாதிகளை முன்னுக்குக்கொண்டு வருவதற்காக வெகு பாடுபடுகிறார்கள் இந்த விஷயத்தில்

அவர்கள் செய்துவரும் நன்மையை அளவிட முடியாது. பஞ்சமர்களுக்கு இலவசமாய்க் கல்வி கற்பிக்கும்படி ஏராளமான பள்ளிக்கூடங்களை நடத்தி வருகிறார்கள். இன்னும் இந்தியாவின் நன்மைக்கடுத்த அநேக காரியங்களையும் செய்துவருகின்றனர். பஞ்சம், கொள்ளைநோய் முதலியவைகள் பரவியிருக்கிற இடங்களுக்குச்சென்று ஜனங்களுக்கு சகாயம் செய்கிறார்கள். இப்பொழுது வங்காளத்தில் பங்கூராவில் பஞ்சத்தால் பீடிக்கப்பட்டிருக்கும் ஜனங்களைக் காப்பாற்றும்படி, அவர்கள் எவ்வளவு பிரயாசைப்படுகிறார்களென்பது சகலருமறிந்த விஷயம். இப்படியே அப்போதைக்கப்போது வேண்டிய சகல காரியங்களையும் ஊக்கமாகச் செய்துவருகிறார்கள். இவ்வளவுக்கும் அவர்களுக்கு ஏதாவது பிரதிபலன் உண்டா? இல்லை. அவர்கள் பிரதிபலனை எதிர்பார்ப்பதுமில்லை. பழைய காலத்து புத்த சன்னியாசிகள் எப்படிப் பிக்ஷையெடுத்து சாப்பிட்டுக்கொண்டு பொது நன்மைக்காக உழைத்துவந்தார்களோ, அப்படியே இவர்களும் தர்மம் வாங்கி ஜீவனம் செய்கிறார்கள். இவர்கள் அநேகமாய் நன்றாய்ப்படித்து பெரிய வித்தியா பட்டங்களைப் பெற்றவர்கள். உலகத்தில் வெகு சொகுசாக இருந்திருக்கலாம். என்றாலும், எல்லாவற்றையும் துறந்துவிட்டு, காவி வஸ்திரம் அணிந்து, பரோபகாரமாகப் பாடுபடுவதலேயே காலங்கழித்துவருகிறார்கள். இந்த அற்புதமான ஜீவகாருண்யத்தைக்கண்டு நாம் வியக்காமலிருக்க முடியாது.

---

# பிரமஞான சபை.

(தியஸாபிகல் சோஸைட்டி)

பிரமஞான சபையென்று வழங்கும் தியஸாபிகல் சொஸைட்டி 1875-ம் ௵ நவம்பர் ௴ 27 ௳ அமெரிக்காவிலுள்ள ந்யூயார்க் பட்டணத்தில் ஏற்படுத்தப்பட்டது. அதை முக்கியமாய் முன்னின்று ஏற்படுத்தினவர்கள் இரண்டு பேர். ஒருவர் மிஸஸ் ஹெலினா பெட்ரோனா பிளவாட்ஸ்கி; மற்றவர் மிஸ்டர் கர்னல் ஹென்ரிஸ்டீல் ஆல்காட். ஹெலினா பெட்ரோனா பிளவாட்ஸ்கி ருஷ்யாக்காரி; நல்ல குடும்பத்தில் பிறந்தவர். கர்னல் ஹென்றிஸ்டீல் ஆல்காட் அமெரிக்கா சைனியத்தில் காவல் வேலையிலிருந்தவர். இந்த இரண்டு பேரும் கிறிஸ்து மார்க்கத்தில் பிறந்தவர்களாயிருந்த போதிலும், கிறிஸ்து மதத்தைவிட்டு விட்டு உலகத்திலுள்ள சகல வேதங்களையும் ஆராயத் தொடங்கினார்கள். விசேஷமாக, ஆசியாகண்டத்தில் உற்பத்தியான சகல வேதங்களையும் சாஸ்திர சம்பிரதாயங்களையும் கொள்கைகளையும் ஆராய்ந்து பார்த்தார்கள். அதிலும் ஹிந்து மத சாஸ்திரங்களை வெகு முக்கியமாய்க் கற்றுக்கொண்டார்கள். பிறகு எல்லாவற்றிலுமிருந்து கொஞ்சங் கொஞ்சமாய்ப் பொறுக்கி எடுத்து "தியாஸபி" என்னும் புது மதத்தை ஏற்படுத்தினார்கள்.

தியாஸபி என்றால் என்ன.

இதைப்புதுமத மென்பதுகூட அவ்வளவு பொருத்தமல்ல. ஏனென்றால் "தியாஸபி" யென்பது (Theo) தேயோ (Sophos) சோபாஸ் என்னும் இரண்டு கிரேக்க வார்த்தைகளின் புணர்ச்சியாகும். தேயோ என்பதற்கு பிரமம் அல்லது கடவுளென்றும், சோபாஸ் என்பதற்கு அறிவு அல்லது ஞானமென்றும் அர்த்தம். ஆகையால் தியாஸபி என்பதற்கு, கடவுளைப்பற்றிய அறிவு அல்லது பிரம ஞானம் என்பது பொருள். பொதுவாய்க் கடவுளைப்பற்றிய அறிவு என்பதாலும், கடவுள் எல்லா மதங்களுக்கும் பொதுவாகையாலும், தியாஸபி ஒரு புதுமதமல்ல.

அது ஒரு பொது மதம்—அல்லது சமரசம் என்பதே பொருந்தும். தியாஸாபிகல் சபையைச் சேர்ந்தவர்களும் இப்படியே சொல்லுகிறார்கள். தற்பொழுது மேற்படி சபைக்குத் தலைவராயிருக்கும் மிஸஸ் அன்னிபெஸண்ட் எழுதுவதாவது:—"ஒருவர் நல்ல கிறிஸ்துவரா யிருக்கலாம். மதவைராக்கிய நிறைந்த மகமதியரா யிருக்கலாம். அல்லது, ஹிந்துவா யிருக்கலாம். அல்லது புத்த மதத்தைச் சேர்ந்தவரா யிருக்கலாம். ஆனால் அவர்களெல்லோரும் தியஸாபிகல் சபையில் மெம்பர்களாய்ச் சேர்ந்து கொள்ளலாம். தங்கள் தங்கள் வேதத்தை விடவேண்டுமென்று அவசியமில்லை. அவரவர்கள் வேதத்திலிருந்து கொண்டே தியஸாபிஸ்டுகளாகவும் இருக்கலாம்" ஆனால் இந்தியாவில் தியஸாபிகல் சபையில் சேர்ந்திருப்பவர்களில் முக்கால்வாசிப் பேர் ஹிந்துக்கள். சில பௌத்தர்கள், மகமதியர்களும் கிறிஸ்துவர்களும் சேர்ந்திருப்பதாய்த் தெரியவில்லை. இதற்குக் காரணம், எந்த மகமதியராவது, கிறிஸ்தவராவது தியஸாபிகல் சபையில் சேரும்பக்ஷத்தில் மற்ற மகமதியர்களும் கிறிஸ்தவர்களும் அவரைத் தங்கள் சபையில் சேர்த்துக் கொள்ளமாட்டார்கள். ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் அநேக கிறிஸ்தவர்கள் தியஸாபிஸ்டுகளாய்

விட்டபடியால், கிறிஸ்துவர்கள் அவர்களைச் சபையைவிட்டு விலக்கிவைத்திருக்கிறார்கள். ஆகையால் யதார்த்தத்தில் தியஸாபிகல் சபையில் எல்லோரும் சேர்ந்துகொள்ளலாமென்பது பேருக்குத்தானே யொழிய மற்றப்படியல்ல.

### தியஸாபிகல் சோஸைடியின் கொள்கைகள்.

எல்லா மதங்களும் உண்மை, ஒரே கடவுளுண்டு, சகல மனிதர்களும் சகோதரர்களென்பதுதான் தியஸாபிகல் சபையின் பிரதானமான கொள்கைகள். ஆனால் இதர மதங்களிலும், இப்படியே சொல்லியிருப்பதால் தியஸாபிகல் சபையென்று புதிதாய் ஒரு சபையை ஏன் ஏற்படுத்தவேண்டுமென்று சிலர் கேட்பதுண்டு. இந்த ஆக்ஷேபணைக்குச் சமாதானம் சொல்லுவது எளிதல்ல. ஆனால் தியஸாபிகல் சபையில் சில நூதனமான கொள்கைகளும் உண்டு. அவைகளில் இரண்டொன்றைத்தான் இவ்விடத்தில் குறிப்பிட முடியும். (1) சமீப காலத்தில் கிறிஸ்து, புத்தர், மகமது முதலியவர்களுக்குச் சமானமான 33 லோக குரு அவதரித்து உலகத்தைக் கடைத்தேற்றப்போகிறாரென்றும், (2) ஜீவன்முக்தி பெற்ற அநேக மகாத்மாக்கள் உலகத்திலேயே கண்ணுக்கு மறைவாயிருந்துகொண்டு லௌகிக காரியாதிகளை நடத்தி வருகிறார்களென்றும், (3) Occultism, ஆக்கல்டிசம். எனப்பட்ட ஆத்தும வித்தையில் தேர்ந்தவர்கள் அந்த மகாத்மாக்களை நேரில் பார்க்கலாமென்றும், சாக்ஷாத் கடவுளையே நேருக்கு நேராய்க் கண்டுகொள்ளலாமென்றும், நினைத்தமாத்திரத்தில் சந்திர சூரிய லோகங்களுக்குப் பாய்ந்துவிடலாமென்றும், கூடுவிட்டுக் கூடு பாயலாமென்றும், பழைய பிறப்பு இறப்புக்களை ஞாபகப்படுத்திக் கொள்ளலாமென்றும், செத்தவர்களைக் கண்டு பேசிக்கொள்ளலாமென்றும், பேய் பூதங்களோடும், மற்ற ஆவிகளோடும் சம்பாஷிக்கலாமென்றும், தியாஸபிஸ்டுகள் நம்புகிறார்கள். இன்னும் நாளுக்குநாள் தியஸாபிகல் சபையில் புதிது புதிதான கொள்கைகள் உற்பத்தியாகிக்கொண்டும் வருகின்றன.

### சபையின் ஆதிகர்த்தாக்கள் ப்லிவாட்ஸ்கியம்மாளுக்தும் கர்னல் ஆல்காட்டும்.

ஹெலினா பெட்ரோனா பிளவாட்ஸ்கி அம்மாளும், கர்னல் ஹென்ரி ஆல்காட்டும் 1879-ஆம் வருஷம் பிப்ரவரி 17உ இந்தியாவில் வந்து சேர்ந்து, ஒவ்வொரூராய்ச்சென்று இந்து நாகரீகம் ஐரோப்பிய நாகரீகத்தை விடச் சிறந்ததென்றும், இந்த மதமே எல்லா மதங்களிலும் மேன்மையானதென்றும் இந்து ஆசார அநுஷ்டானங்களை சகல ஆசார அநுஷ்டானங்களிலும் சாலச்சிறந்ததென்றும், ஐரோப்பியர்களுக்கும் இதர அன்னியர்களுக்கும் இந்து மதத்தைப் போதிக்கும்படியாகவே தியஸாபிகல் சபை ஏற்பட்டிருக்கிறதென்றும், வாய்ச்சாலகமாகப் பிரசங்கித்துக் கொண்டு வந்ததால், அநேக இந்துக்கள் மேற்படி சபையில் மெம்பர்களாய்ச் சேர்ந்து கொண்டார்கள். 1882-ஆம் வருஷம் டிசம்பர்மாசம் சென்னையில் உள்ள அடையாற்றின் கரையில், தியாஸாபிகல் சபையின் தலைமை ஸ்தானம் ஏற்படுத்தப்பட்டு அதற்காக வேண்டிய கட்டடங்களும் கட்டி முடிக்கப்பட்டன. 1884-ஆம் வருஷத்தில் பிளவாட்ஸ்கி அம்மாள் இந்தியாவைவிட்டுப் போய்விட நேரிட்டது. எப்படியென்றால், நெடுங்காலமாய் அந்த அம்மாளுக்கும் கிறிஸ்துவமிஷனரிகளுக்கும் கொடிய விரோதம் அந்தரங்கமாய்ப் புகைந்து கொண்டிருந்தது. இந்து மதத்தையும் நாகரீகத்தையும் புகழ்ச்சியாய்ப் பேசி இந்த அம்மாள் அநேகம் பேரைத் தியாஸபிஸ்டுகளாக்கி விட்டதால், கிறிஸ்துவ மதம் பரவுவதற்குச் சிறிது விக்கினம் உண்டானது. மிஷனரிகளுக்குப் பிடிக்கவில்லை. 1884-ஆம் வருஷத்தில் பிளவாட்ஸ்கி அம்மாள் ஏதோ பல அற்

புதமான செய்கைகளைச் செய்கிறதாகப் பட்டணத்தில் பிரஸ்தாபமிருந்தது. கிறிஸ்துவ மிஷனரிகள் அந்த அற்புதமான வேலைகளை வெகு உஷாராய் ஆராய்ச்சிபண்ணி, அவைஎல்லாம் செப்படி வித்தையென்றும், வஞ்சகமென்றும் ரூபித்துவிட்டார்களென்றும், அதனால் பிளவாட்ஸ்கி அம்மாள் இனிமேல் இந்தியாவிலிருப்பது அவமானமென்று எண்ணி சொல்லிக் கொள்ளாமல் ஐரோப்பாவுக்கு ஓடிப் போய் விட்டதாகவும், மிஷனரிகள் சொல்லுகிறார்கள். ஆனால் பொறாமை பிடித்த பாதிரிகள பிளவாட்ஸ்கி அம்மாளின் வேலைக்காரர்களைக் கைக்கூலி கொடுத்துக் கைக்குள் போட்டுக் கொண்டு பிளவாட்ஸ்கி அம்மாளுக்கு விரோதமாக இல்லாததுபொல்லாதுகளையெல்லாம் சொல்லி, ஷை வேலைக்காரர்களைக் கொண்டு அப்படியே சொல்லும்படி செய்வித்தார்களென்றும், ஆகையினாலேயே பிளவாட்ஸ்கி அம்மாள் இந்தியாவைவிட்டுப் போய் விட்டதாகவும் தியாஸபிஸ்டுகள் சொல்லுகிறார்கள். இதில் எது உண்மையோ, மகாத்மாக்களுக்குத் தான் தெரியும்.

### ஆனிபெஸன்ட் அம்மாளின் பூர்வீக சரித்திரம்.

பிளவாட்ஸ்கி அம்மாள் இப்படிப் போய்விட்டது, ஒருவிதத்தில் தியஸாபிகல் சபைக்கு நன்மையாகவே முடிந்தது. ஏனென்றால், பிளவாட்ஸ்கி அம்மாளை விட வெகுசாமர்த்தியம்நிறைந்த அன்னிபெஸண்டு அம்மாள், அதற்குப்பிறகு, தியஸாபிகல் சபைக்கு அக்கிராசனாதிபதியாக வந்து சேர்ந்ததினால், ஷை சபை எவ்வளவோ நன்மை அடைந்திருக்கிறதென்பதைச்சொல்லவும் வேண்டுமா? அன்னிபெஸண்டு அம்மாளைப்பற்றி இப்பொழுது அநேகமாய் எல்லோருக்கும் தெரிந்தேயிருக்கும். இந்த அம்மாள் சுய இங்கிலீஷ்காரி. கிறிஸ்துவமதத்தில் பிறந்தவர். ஆனால் பாலிய பருவத்திலேயே கிறிஸ்து மதம் பொய்யென்று உதறிவிட்டார். அவர் ஒரு கிறிஸ்துவ பாதிரியை விவாகம் செய்திருந்தனால் கோர்ட்டில் விவாகத்தை ரத்துச் செய்து கொண்டார். பிறகு புத்தமதம் மகமது மார்க்கம், இந்து மதம் ஒவ்வொன்றிலும் கொஞ்சகாலம் இருந்து பார்த்தார். ஆனால் ஒன்றிலும் சரிப்படவில்லை. ஆகையால் கடைசியில் நாஸ்திக மதமே அதாவது, கடவுள் இல்லையென்கிற மதமே, சரியென்று தீர்மானித்திருக்கும் பொழுது பிளவாட்ஸ்கி அம்மாள் இந்தியாவிலிருந்து இங்கிலாந்தில் போய்ச் சேர்ந்து அன்னிபெஸண்டு அம்மாளின் அபூர்வமான வாக்கு சாதுரியங்களையும், எழுத்துத் திறமையையும் கண்டு, அவருக்கு தியாஸபியின் மகிமைகளையும், இந்தியாவின் மகிமைகளையும், இந்து மதத்தின் மகிமைகளையும் எடுத்து உபதேசித்து, அந்த அம்மாளைத் தியஸாபிகல் சபையில் சேர்த்துக் கொண்டது மல்லாமல், தன்னுடைய மரணத்துக்குப் பிறகு அந்தஅம்மாளையே தியஸாபிகல்சபைக்குத் தலைவியாகத்தெரிந்து கொண்டாள்.

### ஆனிபெஸன்டும் சபையின் முன்னேற்றமும்.

அன்னிபெஸண்டு அம்மாள் 1893-ம் வருஷத்தில் இந்தியாவில் வந்து சேர்ந்தார். அவர் பிளவாட்ஸ்கி அம்மாளையும் கர்னல் ஆல்காட்டையும் விட அநேக மடங்கு அதிக வாய்ச்சாலகமும் எழுத்து சாமர்த்தியமும் உடையவராகையாலும், அவர்களை விட அதிக ஊக்கமும், உத்ஸாகமும், மும்முரமும், விடா முயற்சியும் உடையவராகையாலும், அவர்களை விட நூறு மடங்கு அதிக சாமர்த்தியமாக இந்து மதத்தின் மகிமைகளையும் இந்து நாகரிகத்தின் பெருமைகளையும் எடுத்துப் பிரசங்கித்துக் கொண்டுவந்தபடியாலும், ஏராளமானவர்கள் மளமளவென்று தியஸாபிகல் சபையில் சேர்ந்து விட்டதுமல்லாமல், ஏராளமாகத் திரவிய

சகாயமும் செய்த படியால், சீக்கிரத்தில் மேற்படி சபைக்கு ஏராளமான நிதி கைமேல் கூடி விட்டது "ஒரு ஐரோப்பிய மாது அதிலும் நன்றாய்ப் படித்த புத்திசாலி, இன்னும் அபூர்வ வாக்குசாதுரிய நிறைந்த பிரசங்கி ஆகிய மிஸஸ் அன்னிபெஸண்ட், இந்தியாவுக்குப் போய் இந்து மதமே சிறந்தது, இந்து நாகரீகமே மேலானது என்று சரமாரியாகப் பிரசங்கித்தால் இந்துக்கள் ஏன் தியஸாபிகல் சபையில் சேர்ந்துக்கொள்ள மாட்டார்கள்" என்று ஸர் வாலண்டின் சிரோல் தமது Indian unrest "இந்தியக் கலாபனை" யென்னும் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறார். இது முற்றிலும் சரியாகும்.

### தியஸாபிகல் சோஸைடியின் நற்செய்கை கல்வி யபிவிருத்தி.

கிறிஸ்துவமிஷனரிகளின் மூலமாக இந்தியாவுக்குக் கல்வி விஷயத்தில் பல நன்மைகள் விளைந்திருப்பதைப் போலவே, தியஸாபிகல் சபையினாலும் பல நன்மைகள் விளைந்திருக்கின்றன. காசியில் செண்ட்ரல் ஹிந்து காலேஜ் என்ற காலேஜ் தியஸாபிகல் சபையினாலேயே ஏற்படுத்தப்பட்டு, 15 வருஷமாய் மேற்படி சபையின் ஆதீனத்தில் நடைபெற்று வந்தது. இப்பொழுது மேற்படி காலேஜ் சமீபத்தில் ஏற்பட்ட காசி ஹிந்து யூனிவர்ஸிடி (சர்வகலாசாலை) யோடு சேர்த்து விடப்பட்டிருக்கிறது. மதனப்பள்ளியில் ஒரு காலேஜூம், இந்தியாவின் பற்பல பாகங்களில் சுமார் 20 ஹைஸ்கூல்களும் செக்கெண்டரி ஸ்கூல்களும் பல பெண்பாடசாலைகளும், தற்பொழுது தியஸாபிகல் சபையின் நடப்பிலிருக்கின்றன. பஞ்சமர்களுக்காகவும் ஆங்காங்கே பல பாடசாலைகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இந்தப்பாடசாலைகளில் ஒரு முக்கியமான அம்சம் என்னவென்றால், மற்றப் பாடசாலைகளைப் போலல்லாமல் இந்தப் பாடசாலைகளில் இந்துமதமும், விசேஷமாக "தியாஸபியும்", படித்துக்கொடுக்கப் படுவதே.

### அன்னிபெஸண்டின்மீது ஒரு வியாச்சியம்.

சுமார்மூன்றுவருடங்களுக்கு முன்பு இந்த சபையில் ஒரு மெம்பராயிருந்த மிஸ்டர் நாராயணய்யாவுக்கும், மிஸஸ் அன்னிபெஸண்டுக்கும் இடையில் நடந்த பிரபலமான வியாச்சியம் நண்பர்களுக்கு நினைவிருக்கலாம் மிஸ்டர் நாராயணய்யாவின் இரண்டு குமாரர்களையும் மிஸ்டர் நாராயணய்யாவின் வசத்தில் திரும்பவும் ஒப்படைக்க மிஸஸ் பெஸண்டு மறுத்துவிட்டதும், மிஸஸ் பெஸண்டுக்குப் பிறகு தியாஸாபிகல் சபையில் அதிக முக்கியமான மிஸ்டர் லெட்பீட்டர் என்பவர், அந்த இரண்டு பையன்களுக்கும் சில துர்ப்போதனைகள் கற்றுக்கொடுத்ததாகக் கோர்ட்டில் வெளிப்பட்டதும், அந்தப் பையன்களில் மூத்தவனாகிய கிருஷ்ணமூர்த்தி யென்பவன் கடவுளுடைய அவதாரமென்று மிஸஸ் பெஸண்டு போதித்துக்கொண்டு வந்ததும் சகலரு மறிந்தவிஷயம்.

இந்த விஷயங்களைக் கண்டு அநேகர் தியஸாபிகல் சபையை விட்டு விலகிக்கொண்டார்கள். தியஸாபிகல் சபைக்கு இதனால் கொஞ்சகாலம் கெட்ட பேர் உண்டாயிற்று,

### பொதுஜன நன்மைக்கு ஊழியம்.

ஆனால் 1913-ம் வருஷத்திலிருந்து மிஸஸ் அன்னிபெஸண்டு "பிரமஞானம்" போதிப்பதை விட்டு விட்டு நமது காங்கிரஸிலும் கான்பரன்ஸுகளிலும் சேர்ந்து, இந்தியாவின் பொது நன்மைக்காக உழைத்து வருவதால், அந்தக் கெட்ட பெயர் ஒழிந்து விட்டதென்பதற்குத் தடையில்லை. இப்பொழுது இந்தியாவுக்கு சுயராஜ்யம் வேண்டுமென்று மும்முரமாக முன்னின்று முயலுகிறவர்களுக்குள் மிஸஸ் பெஸண்டும் ஒருவராகும். சென்ற 1915-ம் வருஷம் பம்பாயில் இந்தியன்

நாஷனல் காங்கிரஸ் மகாசபை கூடிவதற்கு முந்தி, "சுயராஜ்ய சபை" என்று ஒரு சங்கத்தை ஏற்படுத்துவதற்காக மிஸஸ் பெஸன்ட் பகிரதப் பிரயத்தனங்கள் செய்தும் பயன்படவில்லை. ஏனென்றால் அப்படிப்பட்ட ஒரு சபை இப்பொழுது அநாவசியமென்று காங்கிரஸ் மகாசபை தீர்மானித்து விட்டது. என்ற போதிலும் மிஸஸ் பெஸன்டு மனந்தளராமல் இன்னும் எழுத்து மூலமாகவும் பிரசங்கங்கள் மூலமாயும் இந்தியாவுக்கு ஊழியஞ் செய்து கொண்டு வருவது மிகவும் சந்தோஷிக்கத் தக்க விஷயம்.

---

# மிஷனரி முயற்சிகள்.

கிறிஸ்துவின் சிஷரில் ஒருவராகிய தோமாஸ், கிறிஸ்து மரித்தவுடன் இந்தியாவுக்கு வந்து அநேகரைக் கிறிஸ்து மார்க்கத்தில் சேர்த்துவிட்டதாகவும், ஒரு இந்து அரசன் அவரைப் பிடித்துக் கொன்று விட்டதாகவும் அவர் மைலாப்பூரில் புதைக்கப்பட்டிருப்பதாகவும் கிறிஸ்துவர்கள் சொல்லுகிறார்கள். இது எவ்வளவு தூரம் உண்மையோ தெரியவில்லை. கிறிஸ்துவின் காலத்துக்குப் பிறகு "தோமா" என்ற ஒரு புத்த சன்னியாசி திபேத்திலிருந்து இந்தியாவுக்கு வந்ததாகவும், அவர் மைலாப்பூரில் சமாதியாகியிருப்பதாகவும், அவரைத் தான் கிறிஸ்தவர்கள் தோமாஸ் என்று தெரியாமல் நினைத்துக்கொண்டிருக்கிறார்களென்றும், சில சரித்திரக்காரர்கள் கூறுகின்றனர். சரித்திர வாயிலாகத் தெரிந்தவரையில் கி. பி (கிறிஸ்துவுக்குப் பிறகு) 6-ம் நூற்றாண்டுக்கு முன், இத்தேசத்தில் கிறிஸ்துவர்கள் என்ற நாமதேயமே கிடையாது. 6-ம் நூற்றாண்டில் முதல் முதல் மலையாளத்தில் சில கிறிஸ்துவர்கள் இருந்ததாகத் தெரியவருகிறது. அவர்கள் சுதேசக் கிறிஸ்துவர்களா, அல்லது பலஸ்தீன், சிரியா, முதலிய நாடுகளிலிருந்து, வந்து குடியேறிய கிறிஸ்துவர்களாவென்பது விளங்கவில்லை. இன்றைக்கும் சிரியா கிறிஸ்துவர்களென்றே அவர்களுக்குப் பெயர் வழங்குவதால் அவர்கள் பெரும்பாலும் குடியேற்றக்காரரின் சந்ததியாயிருக்கலாம். எப்படியென்றபோதிலும், அவர் பிறமதஸ்தரை மனந்திருப்ப முயலாமல், தங்கள் பாட்டில் தங்கள் வேதத்தை அனுசரித்துக்கொண்டு வந்திருக்கிறார்கள்.

## போர்த்துகீஸ் மிஷனரிகள்.

16-ம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் கிறிஸ்துவ மிஷனரிகள் இந்தியாவுக்கு வந்து இந்துக்களை மனந்திருப்ப முயற்சி செய்தார்கள். இந்த வேலையை முதல் முதல் ஆரம்பித்தவர்கள் போர்த்துகீஸ் ஜாதியார். 1498-ம் வருஷத்தில் அவர்கள் கடல்மார்க்கமாக இந்தியாவுக்கு வழிகண்டு பிடித்துக் கள்ளிக்கோட்டையிலிறங்கி, மேற்குக்கரை நெடுக கோவா முதலிய பட்டணங்களை ஆதீனப்படுத்திக்கொண்டு, வியாபாரம் செய்துவந்தார்களென்பது சகலருமறிந்த விஷயம். ஆனால் அவர்கள் இந்துக்களை மனந்திருப்புவதில் அதிகக் கவனமாயிருந்தார்களேயொழிய வியாபாரம் செய்வதில் கூட அவ்வளவு கவனம் செலுத்தவில்லை. தாங்கள் போகுமிடந்தோறும், தங்கள் வேதத்தைப் பரப்பும்படி முயற்சிசெய்து வந்தனர். அதற்குமுன் மகமதியர்கள் கட்டாயமாகப் பலரை மகமதியர்களாகும்படி செய்துவந்ததைப்போலவே, போர்த்துகீஸ்காரர்கள் தங்கள் ஆதீனத்துக்குள்பட்ட குடிகளைப் பலவந்தமாகக் கிறிஸ்துவ மதத்தில் சேரும்படி கட்டாயப்படுத்திக்கொண்டு வந்ததாகவும் அதினால் குடிகள் அவர்களை வெறுத்து விரோதிக்கும்படி நேரிட்டதென்றும், இதினாலேயே போர்த்துகீஸ்காரர்களுடைய அதிகாரம் இந்தியாவில் வரவரக் குறைந்து கடைசியில் ஒன்றுமில்லாமல் போய்விட்டதென்றும், அவர்கள் மாத்திரம் ஆங்கிலேயர் முதலிய மற்ற ஐரோப்பியர்களைப்போல் வேதத்தைத் தள்ளிவைத்துவிட்டு வியாபாரத்தை மாத்திரம் கவனித்துக் கொண்டுவந்திருந்தால்

அவர்களுடைய வியாபாரமும் அதிகாரமும் நாளுக்குநாள் விருத்தியடைந்திருக்குமென்றும், சில சரித்திரக்காரர்கள் கூறுகிறார்கள். அப்படியானால் அவர்கள் கிறிஸ்து மார்க்கத்தைப் பரப்புபடி எவ்வளவு முயற்சி செய்திருக்க வேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ?

### இரண்டு முக்கிய பாதிரிகள்.

இப்படிப்போர்த்துகீஸ் அதிகாரிகள் ஜனங்களை மனந்திருப்ப முயன்றது மாத்திரமல்லாமல், அவர்களுடைய ஆதரவின்கீழ் ஸ்பெயின் போர்த்துகல் முதலிய தேசங்களிலிருந்து மதபோதகர்கள் வந்து வேதம் போதிப்பதற்கும் வெகு சௌகரியமாயிருந்தது. இப்படிப்பட்ட மதபோதகர்களுக்குள் முக்கியமானவர் பிரான்சிஸ் க்ஸேவியர். (தமிழ்க் கிறிஸ்துவர்கள் இவரைச் சவேரியார் என்று அழைக்கிறார்கள்) மத வைராக்கியத்திலும் பக்திஆவேசத்திலும், மும்முரத்திலும், ஆதியிலிருந்து இது பரியந்தம் இந்தியாவுக்கு வந்திருக்கும் எல்லா மிஷனரிகளையும் விட சவேரியாரே பெரியவர். இவருடைய மும்முரமான போதனையால் நூற்றுக் கணக்கானவர்கள் கிறிஸ்துவர்களாய் விட்டதாகச் சொல்லப்படுகிறது. ஒருஆள்பாக்கியில்லாமல் மரவஜாதிமுழுவதையும் ஒரேவாறாய் மனந்திருப்பியவர் இவரேயாகும். ஆனால் போர்த்துகீஸ் அதிகாரம் மேற்குக்கரைப்பட்டணங்களில் தான் பரவியிருந்தபடியால், இவர் மேற்குக் கரைப் பட்டணங்களில் மட்டும் வேதம் போதித்துக்கொண்டு திரிந்தாரே யொழிய மற்றப்பாகங்களுக்குச் செல்லவில்லை. ஷை பட்டணங்களில் போர்த்துக்கீஸ் அதிகாரம் குறையக் குறைய, இவரால் மனந்திரும்பிய அனேகர் பழையபடி இந்து மதத்தில் போய்ச் சேர்ந்து விட்டதாகவும் சொல்லப்படுகிறது. மத வைராக்கியத்திலும், மும்முரத்திலும் இவருக்கு அடுத்தபடியில் ஜான் பிரிட்டோ என்பவரை வைக்கலாம். (தமிழ்க் கிறிஸ்தவர்கள் இவரை அருளானந்தர் என்று அழைக்கிறார்கள்) தென்னிந்தியாவில் முக்கியமாக மதுரை, ராமநாதபுரம் ஜில்லாக்களில் உள்ள ரோமன் கதோலிக் கிறிஸ்தவர்கள் பெரும்பாலும் இவருடைய முயற்சியால் மனந்திரும்பியவர்களின் சந்ததியாரேயாகும். அக்காலத்தில் இராமநாதபுரத்தை ஆண்டுவந்த இரகுநாத சேதுபதியின் மைத்துனனும் சேனாதிபதியுமாகிய தடியத்தேவனைக்கூட இவர் கிறிஸ்துமதத்திற்கு இழுத்துவிட்டதால், ரகுநாத சேதுபதி சினந்து இவரைக் கொன்றுவிடும்படி உத்தரவுசெய்துவிட்டபடியே அவர் இராமநாதபுரத்துக்குச் சிறிது தூரத்திலுள்ள ஓரியூர் என்ற இடத்தில் தலைவெட்டப்பட்டு அவ்விடத்திலேயே அடக்கம் செய்யப்பட்டிருக்கிறார். இன்றைக்கும் நூற்றுக்கணக்கான கிறிஸ்தவர்கள் அவருடைய கல்லறைக்குத் திருயாத்திரையாகப் போய்வருகிறார்கள்.

### புரோடஸ்டண்டு பாதிரிகள்.

கிறிஸ்தவர்களுக்குள் ரோமன் கதோலிக் கென்றும், புரோட்டஸ்டண்டு என்றும், இரண்டு பெரிய பிரிவுகளிருப்பது சகலரு மறிந்த விஷயம். மேலே சொல்லப்பட்ட மிஷனரிகள் ரோமன் கத்தோலிக் சபையைச் சேர்ந்தவர்கள். புரோட்டஸ்டண்டு மிஷனரிகள் 18-ம் நூற்றாண்டின் இறுதியில்தான் வேதம் போதிக்கும்படி மும்முரமாக ஆரம்பித்திருக்கிறார்கள். இந்த மிஷனரிகளுக்குள் சுவாரஸ் என்பவரைப் பிரதானமாகச் சொல்லலாம். ரோமன் கத்தோலிக்கு மிஷனரிகளுக்குள் பிரான்ஸிஸ் சேவியர் எப்படியோ அப்படியே புரோட்டஸ்டண்டு மிஷனரிகளுக்குள் சுவாரஸ். இவர் ஜாதியில் ஜெர்மன். லூத்ரர் மிஷனைச் சேர்ந்தவர். தரங்கம்பாடியில் மதபோதக சபை யொன்றை ஏற்படுத்தி நடத்திவந்தார். பற்பல ரோமன் கத்தோலிக் மிஷனரியும், ஆச்சரியமான தமிழ் பாண்டித்தியமுள்ளவரும், தமிழில் "தேம்பா

வணி" யென்ற அரிய காவியத்தை இயற்றியவரும், "வீரமாமுனிவர்" என்று மறு பெயர் பூண்டவருமான பெஸ்கி யென்ற கத்தாலிய மிஷனரிகளுக்கும் ஷெ சுவாரஸ் ஸ்தாபித்த லுத்தர் மிஷன் பாதிரிகளுக்கும் இடையில் நடந்த மத தர்க்கங்களை இன்றைக்கும் வாசிக்கலாம்.

### மிஷனரி முயர்ச்சியின் பலன்கள்.

இப்படியாகக் கடந்த 500 வருஷ காலமாக ரோமான் கத்தோலிக் மிஷனரிகளும் புரோட்டெஸ்டண்டு மிஷனரிகளும் வேதம் போதித்தபிறகு இப்பொழுது இந்தியாவில் 1,904,006 ரோமன் கத்தோலிக் கிறிஸ்துவர்களும், 1,636,731 புரோட்டஸ்டண்ட் கிறிஸ்துவர்களும், 315,612 சிரியன் கிறிஸ்துவர்களும், ஆகமொத்தம் சற்றேறக்குறைய 40 லக்ஷம் கிறிஸ்துவர்கள் இருக்கிறார்கள். (இந்தியாவின் ஜனத்தொகை 30 கோடி.)

### கல்வி போதனை.

வேதம் போதிப்பது ஒரு பக்கத்திலிருக்க, மிஷனரிகள் பொது நன்மைக்கடுத்த பல காரியங்களைச் செய்து வருகிறார்கள். முதலாவது கவர்ன்மெண்டாரும் பொது ஜனங்களும் கல்வி அபிவிருத்தியைப் பற்றிக் கவனியாமலிருந்த காலத்தில், மிஷனரிகள் ஆங்காங்கு கலாசாலைகளையும் பள்ளிக்கூடங்களையும் ஸ்தாபித்து, நமது பிள்ளைகளுக்குக் கல்வி கற்பித்திருக்காமலிருந்தால், இப்பொழுது இத்தேசத்தில் கல்வி யெவ்வளவு குறைவாயிருக்குமென்று நாம் சொல்லவேண்டியதில்லை. இச் சென்னையில் சர்க்காரும் ஜனங்களும் கல்வியில் சிரத்தை யெடுத்துக் கொள்ளுமுன், டாக்டர் மில்லர் என்னும் மிஷனரி "கிறிஸ்தியன் காலேஜ்" என்று வழங்கும் கலாசாலையை ஆரம்பித்து நடத்தியதினாலேயே, நமது வாலிபர்களில் எண்ணிறந்தவர்கள் படித்து முன்னுக்கு வர முடிந்தது. இன்றைக்கும் ஷெ காலேஜுக்கு "மில்லர் ஸ்கூல்" என்று பெயர் வழங்குகிறது. சென்னையில் எப்படியோ அப்படியே இந்தியாவின் சகல பாகங்களிலும் நமக்கு மிஷனரிகள் கல்வி விஷயத்தில் செய்திருக்கும் நன்மையை அளவிட முடியாது. இன்றைக்கும் மிஷனரிகள் தாங்கள் நடத்தும் கல்வி ஸ்தாபனங்களை மூடிவிட்டுப் போய்விட்டால், இந்தியாவுக்கு எவ்வளவு கல்வி நஷ்டம் விளையுமென்பதை சொல்லவும் வேண்டுமா? இப்பொழுது புரோட்டெஸ்டண்ட் மிஷனரிகள் 13,204 எலிமெண்டரி பாடசாலைகளை வைத்து நடத்தி வருகிறார்கள். அதாவது இந்தியாவில் உள்ள எலிமெண்டரி ஸ்கூல்களில் ஒன்பதில் ஒரு பங்கு மிஷனரி நடப்பிலிருக்கிறது. இந்தப் பாடசாலைகளில் ஆண்களும்பெண்களுமாக 4,46,000பிள்ளைகள் படித்து வருகிறார்கள். இப்பாடசாலைகள் அநேகமாய்ச் சிறு ஊர்களிலும் குக்கிராமங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன வென்றால், ஜனங்களுக்குள் கல்வி பரவுவதற்கு இவைகளைவிடச் சிறந்த சாதனம் வேறென்னவிருக்கிறது? இதைத் தவிரப் புரோட்டஸ்டண்ட் மிஷனரிகள் 283 ஹைஸ்கூல்களையும், 38 உயர்தரக் காலேஜுகளையும் வைத்து நடத்திவருகிறார்கள். மேற்படி ஹைஸ்கூல்களில் 62,600 ஆண்களும், 8,400 பெண்களும் கல்வி பயின்று வருகிறார்கள். காலேஜுகளில் மதராஸ் கிறிஸ்டியன் காலேஜ், கல்கத்தா டப் காலேஜ், பம்பாய் வில்சன் காலேஜ், லாகூர் போர்மன் காலேஜ் மதுரை அமெரிக்கன் காலேஜ் முதலியவைகளை முக்கியமாய்க் கூறலாம். இக்காலேஜுகளில் 5488 ஆண்களும் 61 பெண்களும் பி. ஏ., எம். ஏ., முதலிய பெரிய வித்யா பட்டங்களுக்கு வாசித்து வருகிறார்கள். ரோமன கத்தோலிக் மிஷனரிகள் 3000 எலிமெண்டரி பாடசாலைகளை நடத்திவருகின்றனர். இவைகளில் 98000 பையன்களும், 41000 பெண்களும் படிக்கிறார்கள். அவர்களால் நடைபெறும் ஹைஸ்கூல்களில்

143000 பையன்களும், 73000 பெண்களும் வாசிக்கிறார்கள். திருச்சினாப்பள்ளி ஸெயிண்டு ஜோசப்ஸ் காலேஜ் முதலிய உயர்தர ரோமன் கத்தோலிக் காலேஜுகளில் ஆணும் பெண்ணுமாக 5000 பிள்ளைகள் உயர்தரக் கல்வி கற்று வருகிறார்கள். இந்தக் காலேஜுகளும் பாடசாலைகளும் பெருக்கு மிஷனரிகளால் நடத்தப்பட்டு வந்த போதிலும், அவைகளில் வாசிப்பவர்கள் முக்கால் வாசிக்குமேல் இந்துக்களேயாகும். உதாரணமாக புரோட்டஸ்டண்ட் உயர்தரக் காலேஜுகளில் படித்துவரும் 5438 மாணவர்களில் 247 பெயர்தான் கிறிஸ்துவர்கள்.

இதர நன்மைகள்.

1878-ம் வருஷத்தில் தென்னிந்தியாவில் உண்டான பயங்கரமான தாது வருஷப் பஞ்சத்தில், கிறிஸ்துவ மிஷனரிகள் நூற்றுக்கணக்கான ஏழைகளையும் அநாதைக் குழந்தைகளையும் போஷித்துக் காப்பாற்றினது நண்பர்களுக்கு ஞாபகமிருக்கும். அப்பொழுது தொடங்கி அவர்கள் ஆங்காங்கே பல அநாதைப் பிள்ளை மடங்களை வைத்து நடத்துகிறார்கள். தாய் தகப்பனில்லாத நூற்றுக் கணக்கான ஏழைப்பிள்ளைகள் அவைகளில் இனமாய்ச் சாப்பிட்டு வருவதுமன்றி, இலவசமாகப் படித்தும் வருகிறார்கள். இதைத்தவிர 184 இண்டஸ்டிரியல் ஸ்கூல்களை ஏற்படுத்தி, அவைகளில் விவசாயம், நெசவு, தச்சு வேலை, சித்திரம், சிற்பம், டைப்ரயிட்டிங், என்பதுபோன்ற 60 கைத்தொழில்களைக் கற்பித்து, பிழைப்பில்லாத ஆயிரக் கணக்கான வாலிபர்களுக்குப் பிழைப்பை உண்டாக்கிக் கொடுத்து வருகிறார்கள். இவைகளையெல்லாம் விட, இந்தியா முழுதும் எண்ணிறந்த தர்ம ஆஸ்பத்திரிகளை வைத்து நடத்துகிறார்கள். லெப்பர் அசைலம் எனப்பட்ட குஷ்டரோகி ரக்ஷகமடங்கள் எல்லாம் மிஷனரிகளாலேயே நடத்தப்பட்டு வருகின்றன. மேற்படி ஆஸ்பத்திரிகள் எவ்வளவு நன்றாய் நடத்தப்பட்டு வருகின்றன வென்றால், பல இடங்களில் ஜனங்கள் கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரிகளை விட்டுவிட்டு மிஷனரி ஆஸ்பத்திரிகளையே தேடிப்போகிறார்கள். விசேஷமாக முனிசிபல் பெண்பிள்ளை ஆஸ்பத்திரிகளைவிட மிஷனரிகள் நடத்தும் பெண்பிள்ளை ஆஸ்பத்திரிகள் ஜனங்களுக்கு அதிகமாய்ப் பிடித்திருப்பதாகத் தெரிகிறது. மேலும் பெரிய பட்டணங்களில் உள்ள ஆஸ்பத்திரிகளில் கிறிஸ்துவ கன்னிகா ஸ்திரீகள் வியாதிக்காரர்களை அன்பாக சகோதரிகளைப்போல் பார்த்து வருவது சகலருமறிந்த விஷயம்.

சால்வேஷன் ஆர்மி.

"சால்வேஷன் ஆர்மி" என்ற இரக்ஷண்ய சேனை, இவ்வித தர்ம கைங்கரியங்களை நடத்துவதில், மற்றக் கிறிஸ்துவ சபைகளையெல்லாம் விடச்சிறந்து விளங்குகிறது. மற்றக் கிறிஸ்துவ சபைகளாவது வேதம் போதிப்பதை முக்யமாக நினைத்திருக்கிறார்கள். ஆனால் இரக்ஷண்ய சேனையார் பரோபகாரத்தையே முக்கியமாக நினைத்திருக்கிறார்கள். இந்தியாவின் கைத்தொழில் அபிவிருத்திக்காக இவர்கள் செய்திருக்கும் அரிய பெரிய வேலைகளை நாம் மறக்க முடியாது. குஷ்டரோகிகள் காசரோகிகள் முதலியவர்களுக்சாக ஏராள்மான மடங்களை வைத்து நடத்தி வருகிறார்கள். இதையெல்லாம் விட முக்கியமான தென்னவென்றால், குற்றவாளிகளையும், அநாகரீகமான ஜாதிகளையும், நல்வழிக்குக் கொண்டுவரும்படி இவர்கள் செய்துவரும் முயற்சிகளை நாம் தகுந்தமட்டும் புகழமுடியாது. கவர்ன்மெண்டாரே இது விஷயத்தில் இவர்கள் செய்துவரும் வேலைக்காக மெச்சி, துஷ்டர்களான சில காட்டுமிராண்டி ஜாதிகளை நாகரிகப்படுத்தி நல்வருக்குக் கொண்டுவரும் அபாரமான வேலையை அவர்கள் வசம் ஒப்படைத்திருக்கிறார்களென்றால், அவர்களால் விளையும் நன்மைகளை நாம் வரு

ணிக்கவும் வேண்டுமோ? சுருக்கத்தில் மற்றெல்லாக் கிறிஸ்துவ சபைகளையும் விட இரக்ஷண்ய சேனையாரே மத போதகத்தை அவ்வளவாய்க் கவனியாமல், நமது தேச அபிவிருத்தியின் பொருட்டு மகா பாடு பட்டு வருகிறார்கள்.

மிஷனரிகளும் இந்திய முன்னேற்றமும்

ஆனால் பொதுவாகக் கிறிஸ்துவ மிஷனரிகள் கிறிஸ்து மார்க்கத்தின் அபிவிருத்தியைக் கருதியே இத்தேசத்தில் கலாசாலைகள், கைத்தொழிற் சாலைகள், ஆஸ்பத்திரிகள், முதலிய தர்ம ஸ்தாபனங்களையெல்லாம் வைத்து நடத்தி வருகிறார்களென்றும், ஆகையால் இது பரோபகார மல்லவென்றும் சிலர் சொல்வதுண்டு. எப்படியானாலும் நமக்கு நன்மையாக முடிவதால் நாம் மிஷனரிகளுக்கு நன்றி பாராட்டாமலிருக்க முடியாது. அவர்களுடைய முயற்சிகளினால் நமது தேசத்தில் நாமெல்லோரும் விரும்பும் சில முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. உதாரணமாகப் பெண் கல்வி வேண்டுமென்று விரும்புகிறோம். மிஷனரிகள் நடத்தும் பள்ளிக்கூடங்களில் பெண்கள் எவ்வளவோ ஏராளமாகப் படித்துவருகிறார்களென்பதை ஏற்கெனவேபார்த்திருக்கிறோம். இதனால் இத்தேசத்தில் பெண் கல்வி எவ்வளவு விருத்தியடைந்துகொண்டு போகுமென்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ? அப்படியே ஜாதி ஆசார திருத்தம் வேண்டுமென்றும் பஞ்சமர் முதலிய தாழ்ந்த ஜாதிகளை நல்ல நிலைமைக்குக் கொண்டு வரவேண்டுமென்றும் ஆசிக்கிறோம். அந்தத் "தாழ்ந்த ஜாதியரில்" ஏராளமானவர்கள், மிஷனரி கலாசாலைகளில் கல்வி கற்று ஏற்கெனவே முன்னுக்கு வந்துவிட்டார்களல்லவா? இது ஒரு பெரிய ஆசார சீர்திருத்தம் அன்றோ? இன்னும் கைத்தொழிற் கல்வியின் அவசியத்தைப்பற்றி எவ்வளவோ பேசுகிறோம். மிஷனரிகள் ஏராளமாக கைத்தொழிற் சாலைகளை ஸ்தாபித்து, எண்ணிறந்த இந்திய வாலிபர்களுக்கு நானாவிதமான கைத்தொழில்களைக் கற்றுக்கொடுத்து வருகிறார்களென்று ஏற்கெனவே கண்டிருக்கிறோம். இப்படியாக இந்தியாவுக்குப் பலவிதங்களிலும் நன்மையான காரியங்களைச் செய்துகொண்டு வரும் கிறிஸ்தவ மிஷனரிகளின் நோக்கம் என்னவாயிருந்தால் தான் நமக்கு என்ன? நாம் அவர்களுக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோமன்றோ?

மிஷன்களுக்குள் பிரிவுகள்.

கிறிஸ்தவர்களுக்குள் ரோமன் கத்தோலிக் என்றும் புரோட்டஸ்டண்ட் என்றும் இரண்டு பெரிய பிரிவுகளிருப்பதாக ஏற்கெனவே கூறியிருக்கிறோம். புரோட்டஸ்டண்ட் சபைக்குள் ஏராளமான கிளைச் சபைகளிருக்கின்றன. எல்லாச் சபைகளையும் சேர்த்து இப்பொழுது இந்தியாவில் சுமார் 20 கிறிஸ்தவ சபைகள் வேலைசெய்து வருவதாகக் கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது. இவைகள் எல்லாவற்றையும் ஒன்று ஒன்றாய் எடுத்துச் சொல்லவேண்டுமானால் இடம் போதாது. ஆகையால் முக்கியமான சிலவற்றை மட்டும் இங்கே குறிப்பிடுகிறோம்:—

ஆங்கிலிக்கன் சபை; எஸ். பி. ஜி. சபை; எஸ். பி. ஸி. கே. சபை; பிரிஸ்பைட்டரியன் சபை; மெதடிஸ்ட் சபை பப்டிஸ்ட் சபை; அமெரிக்கன் மிஷன்; பெந்தகோஸ்த் மிஷன்; லுத்தரன் மிஷன்; டேனிஷ்மிஷன்; பேசில்மிஷன் வெஸ்லியன் மிஷன்; செவந்தே அட்வண்டிஸ்ட் மிஷன்; முதலியன. இந்தக் கிளைச் சபைகளுக்கும் கிளைகளிருக்கின்றன.

கவர்மெண்டின் உதவி.

கவர்ன்மெண்டார் கிறிஸ்தவ மிஷனரிகளுக்கும் பணவுதவி செய்துவருகிறார்கள். கல்கத்தா, பம்பாய், மதராஸ், லாகூர், ரங்கூன், லக்னௌ

நாக்பூர் முதலிய பட்டணங்களின் ஆங்கிலிக்கன் பிஷப்புகளுக்கு இராஜாங்கத்தாரே சம்பளம் கொடுத்துவருகிறார்கள். மற்றும் ஆங்கிலிக்கன், பிரிஸ்பைட்டரியன், ரோமன் காதலிக் முதலிய சபைகளின் குருக்களில் அநேகருக்கும் கவர்ன்மெண்டாரே சம்பளம் கொடுத்து வைத்திருக்கிறார்கள். இந்நான்கு சபையைச் சேர்ந்தவர்களுக்கும் சொந்தச் செலவில் கோவில் கட்டிக்கொடுப்பதும் இடிந்துபோன கோவில்களை ரிப்பேர்செய்து கொடுப்பதுமுண்டு. மற்ற விஷயங்களிலும், மற்ற மிஷன்களுக்கும் பலவாறாகப் பணவுதவி செய்துவருகிறார்கள். ஆனால் மகமதியர்கள், இந்துக்கள் முதலியவர்கள் கொடுக்கும் வரியிலிருந்து கிறிஸ்துவ மிஷனரிகளுக்கு இப்படி உதவி செய்யலாமோ வென்கிற சந்தேகம் குறிப்பிடலாம்.

---

# அன்னிய நாடுகளில் இந்தியர்கள்.

இந்தியர்கள் இயற்கையாகவே வீடு தங்கும் சுபாவமுடையவர்களென்றும், வெளி நாடுகளுக்குப்போக விரும்புவதில்லையென்றும், ஐரோப்பியர்கள் நமக்குப் படித்துக் கொடுப்பதால் நாம் அதை நம்பியிருக்கிறோம். இந்திய மாதாவின் பிள்ளைகள் ஐரோப்பியர்களைப்போல் நாடோடிகளாய்ப் பிழைக்கவேண்டு மென்ற அவசியம் எந்தக் காலத்திலும் ஏற்படவில்லை. ஆகையால் இந்தியர்கள் ஐரோப்பியர்களைப்போல் உலகமுழுவதும் வியாபித்துப் பரப்பவில்லை என்றாலும், வேண்டியமட்டும் வெளி நாடுகளுக்குப் போய் வருகிறார்கள்.

## பூர்வோத்ரம்.

இந்தக்காலத்தில் மட்டுமல்ல; சுமார் 3000 வருஷங்களுக்கு முன், ஐரோப்பியர்கள் கப்பல் என்றால் என்னவென்று தெரியாமல் காடுகளில் அலைந்துகொண்டு திரிந்தகாலந் தொடங்கி, நமது நாட்டார், பலஸ்தீன். அசிரியா, பபிலோன், நினிவே, ஈஜிப்து முதலிய தூரதேசங்களுக்குப்போய் வர்த்தகம் செய்திருப்பதாக சரித்திர வாயிலாய்த் தெரியவருகிறது. பாண்டிய குலத்து அரசர்களுடைய காலத்தில் தமிழர்கள் ரோம நாட்டாரோடு வியாபாரம் செய்துவந்ததாகவும், ரோம் அரசர்கள் பாண்டிய ராஜாக்களுக்கு தூது அனுப்பியதாகவும், பாண்டிய ராஜாக்கள் ரோம் அரசர்களுக்கு தூது விடுத்ததாகவும் வாசிக்கிறோம். இப்போது சிலோன் என்று வழங்குகிற இலங்கையின்மேல் தமிழர்கள் படையெடுத்துச் சென்று இலங்கையைப் பிடித்து ஆண்டது சகலருமறிந்த விஷயம். அப்படியே இந்தியர்கள் சுமத்திரா, ஜாவா முதலிய தீவுகளிலேயும் போய்க் குடியேறி யிருக்கிறார்கள். இன்றைக்கும் அத்தீவுகளில் அவர்கள் கட்டிய இந்துக் கோவில்கள் முதலிய கட்டடங்களைக் காணலாம். 16-ம் நூற்றாண்டில் கொலம்பஸ் என்னும் ஐரோப்பிய மாலுமி அமெரிக்காவைக் கண்டு பிடித்ததாக ஐரோப்பியர்கள் சொல்லுகிறார்களல்லவா? கொலம்பஸ் பிறப்பதற்குப் பல நூறு வருஷங்களுக்கு முன், இந்தியர்கள் அமெரிக்காவைக் கண்டுபிடித்து அங்கே குடியேறினதாக பல குறிகள் இருக்கின்றன. ஆகையால் இந்தியர்களுக்குக் கடல் யாத்திரையென்றால் பயமென்றுசொல்லுவது சுத்தப்பிசகு. பூர்வீக காலத்தில் எப்படியோ, அப்படியே இக்காலத்திலும் இந்தியர்கள் "திரைகடலோடியும் திரவியந் தேடு" என்ற ஔவை வாக்குப்படி அன்னிய நாடுகளுக்குச் சென்று வருகிறார்கள்.

## தற்கால நிலைமை.

இப்பொழுது இலக்ஷக்கணக்கான இந்தியர்கள் அன்னிய தேசங்களில் குடியேறி யிருக்கிறார்கள். ஆசியா, ஐரோப்பா, அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய ஐந்து கண்டங்களிலும் இந்தியர்களின் பெயர் வியாபித்திருக்கிறது. இப்பொழுது உலகத்தில் ஒரு இந்தியனாவது இல்லாமல் ஒரு இடமாவது இல்லை யென்பது உறுதி. அமெரிக்காவில் ஐக்கிய நாடுகளிலும், கானடாவிலும். ஆப்பிரிக்காவின் கிழக்குக் கரை நெடுக்கத்திலும், விசேஷமாகத் தென்னாப்பிரிக்கா, பிரிட்டிஷ்கயனா, டச்சு கயனா, ஜான்ஸிபார், ஜெர்மன் தென்மேற்கு ஆப்பிரிக்கா, பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்கா முதலிய நாடுகளிலும், ஆப்பிரிக்காவில் ஐரோப்பியர்களுக்கு இன்னம் மறை

பொருளாய் யிருக்கும் சில உள் பிரதேசங்களிலும், ஆசியாவில் சீனு ஜப்பான் மலையா, அஸ்ஸாம் பர்மா, முதலிய நாடுகளிலும், ஆஸ்திரேலியாவில் பிஜி, டிரினிடாட் ஜமெய்க்கா, நியூஸிலாந்து முதலியதேசங்களிலும், ஐரோப்பாவில் இங்கிலாந்து, பிரன்சு முதலிய பலதேசங்களிலும், சுருக்கத்தில் உலகத்தின் சகல பாகங்களிலும் இலக்ஷக்கணக்கான இந்தியர்கள் குடியிருக்கிறார்கள்.

## மூன்று பிரிவுகள்.

இவர்களை மூன்று பெரிய பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1-வது, ஒப்பந்தக் கூலிகள். 2-வது, சுயேச்சையாகப் பிழைக்கப் போனவர்கள். 3-வது மாணுக்கர்கள். இவர்களுக்குள் ஒப்பந்தக்கூலிகள் தொகையில்மற்றவர்களைவிட அதிகமாயிருக்கிறார்கள். இப்பொழுது கவர்ன்மெண்டார் தென்னாப்பிரிக்காவுக்கு ஒப்பந்தக்கூலிகளை ஏற்றி அனுப்புவதைத் தடுத்துவிட்டாலும், தென்னாப்பிரிக்காவிலுள்ள இலக்ஷத்து ஐம்பதினாயிரம் இந்தியரில் இலக்ஷத்து இருபதினாயிரம் பேர் ஒப்பந்தக்கூலிகளென்றால் மிஞ்சின முப்பதினாயிரம் பேர்கள்தான் சுவாதீனமாகப் போனவர்களென்றும் தெரியவருகிறது அப்படியே, மோரீசு, பினாங்கு, சிங்கப்பூர், ஐக்கிய மலையா, நாடுகள், அஸ்ஸாம், முதலிய நாடுகளுக்கும் ஒப்பந்தக்கூலிகளை அனுப்புவதுநின்றுவிட்டபோதிலும், அவ்விடங்களிலும் இலோனிலும் ஆயிரக்கணக்கான ஒப்பந்தக் கூலிகளிருக்கிறார்கள். பிஜி, டிரினிடாட், ஜமேய்க்கா, டெமர்ரா நியூஸிலாந்து, பிரிட்டிஷ் கயானு, டச்சு கயானு, முதலிய நாடுகளுக்கு ஒப்பந்தக் கூலிகள் இன்னும் அனுப்பப்பட்டு வருகிறபடியால், இவ்விடங்களில் இலக்ஷக் கணக்கான ஒப்பந்தக் கூலிகளிருக்கிறார்கள். 'பிரிட்டிஷ் கயானுவிலும், டிரினிடாட்டிலும் இலக்ஷத்து ஐம்பதினாயிரம் இந்தியர்களும், பிஜியில் 40,000 இந்தியர்களும், மோரீசில் இரண்டு லக்ஷத்து 58 ஆயிரம் இந்தியர்களும், ஜமேக்கா, டச்சு கயானு, முதலிய மற்ற இடங்களில் ஆயிரக் கணக்கான இந்தியர்களும் சாசுவதமாகக் குடியேறி வசித்து வருவதாகக் கணிக்கப்பட்டிருக்கிறது.

## ஒப்பந்தக்கூலிகள்.

ஒப்பந்தமாக ஐந்து வருஷத்துக்கோ, அல்லது பத்து வருஷத்துக்கோ ஒரு எஜமானனுக்கு ஊழியம் செய்வதாக எழுதிக் கொடுக்கிறவர்களுக்குத்தான் ஒப்பந்தக்கூலிகளென்று சொல்வது. ஆகையால் தவணை கழியும் வரைக்கும் அவர்கள் அடிமைகள் என்பதற்குத் தடையில்லை. உண்மையில், அடிமை வியாபாரம் ஒழிந்துபோன பிறகு ஐரோப்பிய முதலாளிகள் தோட்டந்துறவுகளில் வேலை செய்வதற்கு ஆள் இல்லாமல், பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொண்டதின் பேரில், பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இந்தியாவிலிருந்து ஒப்பந்தக் கூலிகளைக் கொண்டு போவதற்கு அனுமதி கொடுத்தார்கள். அவர்கள் 1860-ம்வருஷத்திலிருந்து "எமிகிரேஷன் எஜண்டு"கள் மூலமாகக் கங்காணிகளைக் கொண்டு ஆயிரக்கணக்கான ஏழை ஜனங்களை இலேசாய் ஒப்பந்தக் கூலிகளாகக்கொண்டு போய் வருகிறார்கள். இது நாமாகக்கூறும் அபிப்பிராயமல்ல. ஒப்பந்தக்கூலி ஏற்பாடுகளைப் பற்றி விசாரித்து அறிக்கை செய்யும்படி இந்தியா கவர்ன்மெண்டார் நியமித்த சாண்டர்சன் கமிட்டியாரே இப்படித் தெரிவித்திருக்கிறார்கள்.

## அவர்களின் நிலைமை.

இப்படி, அடிமைகளுக்குப் பதிலாக, ஏற்பட்டிருக்கும் ஒப்பந்தக் கூலிக்காரர்கள் அடிமைகளைப்போல அடிக்கடி நடத்தப்பட்டு வருவது ஆச்சரியமாகுமா? அடிமைகளுக்குப் பதிலாகப் போனவர்களுக்கும் அடிமைகளுக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது? ஐந்து அல்லது ஆறு வருஷத்துக்கு ஊழியம் செய்வதாக எழுதிக்கொடுத்த பிறகு

முதலாளி என்ன ஹிம்சை செய்தாலும், பொறுத்துக்கொண்டு தானேயிருக்கவேண்டி யிருக்கிறது. அன்னிய நாட்டில் வேறு என்னசெய்ப முடியும்? முன் சொன்ன தேசங்களில் ஐரோப்பிய முதலாளிகள் தோட்டங்களில் வேலைசெய்யும் இந்தியர்களை எப்படி நடத்தி வந்தார்களென்றால், அறிவு உணர்வு இல்லாத பிராணிகளை நடத்துவதுபோல் நடத்திவந்தார்கள். எடுத்ததெற்கெல்லாம் சவுக்கடி; எடுத்ததெற்கெல்லாம் அபராதம்; வேலையிடுவதற்கோ, கணக்கு வழக்கில்லை; இராப்பகலெல்லாம் வேலை செய்யச் சொன்னாலும் செய்ய வேண்டியது தான்.

### விமோசன மற்ற வாழ்வு.

எஜமான் இட்டதே சட்டம். கோர்ட்டுக்குப் போனால் எஜமான் சொல் ஏறுமே யொழிய ஏழைசொல் ஏறாது. ஆகையால் கருப்பு மனிதனுக்குக் காசு செலவழிவதுமல்லாமல், எஜமானிடம் வந்து முன்னிலும் பதின்மடங்கு கஷ்டப்பட வேண்டியதுதான். ஒரு நாள் உடம்புக்குச் சௌக்கியமில்லை யென்று வேலைக்குப் போகாமலிருந்துவிட்டால், 6-மாதம் அல்லது 7-மாதம் கடுங்காவல். ஏன்? எஜமானை எதிர்த்து ஒரு வார்த்தை கேட்டுவிட்டால் அதற்கும் கடுங்காவல் தான். ஒரு குற்றத்தையுமறியாமலிருக்கும்பொழுதுகூட, எஜமான் ஏதோ கோபத்தை வைத்துக்கொண்டு கோர்ட்டில் இழுத்துவிட்டால் அதற்கும் ஆறு ஏழுமாதம் கடுங்காவல் தப்பாது. எஜமான் சொன்னபடியெல்லாம் கேட்கவேண்டும். கேள்வி முறையில்லை. இப்படியெல்லா மிருந்தால் இந்தியர்கள் ஏன் ஒப்பந்தக் கூலிகளாகப் போகிறார்களென்று சிலர் கேட்கலாம். என்னென்றால், கங்காணிகள் இல்லையா? கங்காணிகளின் பசப்பு வார்த்தைகளைக் கேட்டு ஏமாந்து இரண்டு துட்டு சம்பாதித்துக்கொண்டு வரலாமென்று, பேதைகள் தெரியாமல் போய் இவ்வளவு அகோர வேதனைகளையெல்லாம் அனுபவிக்கிறார்கள். அப்படியாவது, இரண்டு துட்டாவது சம்பாதித்துக் கொண்டு வருகிறார்களா? அந்த இடங்களில் சரக்குகள் எல்லாம் அதிபாயக் கிறுக்கி.

### சுகாதார நிலைமை.

அதுவுமல்லாமல், அந்த இடங்கள், மலேரியா, பிளேக், அம்மை முதலிய பயங்கரமான வியாதிகள் நிறைந்த இடங்கள். அந்த இடங்களில் முதலாளிமார்கள் அவர்களுக்குக் கட்டிக் கொடுத்திருக்கும் ஜாகைகளின் நிலைமையை நினைத்தாலே தேகம் நடுங்குகிறது மழையும் வெயிலும், பனியும் தாராளமாய் நுழையக்கூடிய ஓட்டை வீடுகளில் கலியாண மானவர்களும், கலியாண மில்லாதவர்களும், ஆணும் பெண்ணும் பிள்ளையுமாக நிறைந்து போயிருக்கிறார்கள். சாக்கடைகளில்லை, குப்பைகொட்ட ஒரு தொட்டிகூட இல்லை. கக்கூசு என்பதுகூடக் கிடையாது. ஆகையால் வீட்டைச்சுற்றி நரகலும், நாற்றமும், புழுக்களும், குப்பையும் கூளமுமாய்க் கிடக்கும். அவர்கள் குடிக்கும் தண்ணீரும், குளிக்கும் தண்ணீரும், கால் கழுவும் தண்ணீரும் சமைக்கும் தண்ணீரும் எல்லாம் ஒரே தண்ணீர்தான். இவ்வளவு வியாதி பிடித்த இடத்தில் இந்த மாதிரி அசுத்தம் நிறைந்த நிலைமையில் ஒப்பந்தக்கூலிக்காரர்கள் வருஷமுழுவதும் வசித்து வந்தால் அவர்கள் எவ்வளவு சுகமாயிருப்பார்கள் என்பதைக் கேட்கவும் வேண்டுமா? ஆகையால் அங்குபோகும் இந்தியர்களில் வெகு ஜனங்கள் இந்தியாவுக்குத் திரும்பிவராமல் அங்கேயே மாண்டுபோய்விட்டது ஆச்சரியமல்ல.

### சம்பாத்தியத்தில் மிச்சமில்லை.

மற்றவர்கள் சம்பாதித்ததையெல்லாம் சாப்பாட்டுக்கும், மருந்துக்கும் கோர்ட் செலவுக்கும், அபராதத்திற்கும் கொடுத்து அழுதுவிட்டுத் தாய் நாட்டை விட்டு இங்கு ஏன் வந்தோம், பிறந்த நாட்டில் எப்படியாவது பிழைத்துப் போயிருக்கலாமே யென்று

அழுதுகொண்டு வந்து சேருகிறார்கள். ஒப்பந்தக்கூலியாகப் போன ஒருவனாவது இரண்டு துட்டு சம்பாதித்துக் கொண்டு வந்ததை நாம் பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை. ஆனால் ஸ்ரீ காந்தி போன காங்கிரசில் கூறினது போல், "சரீரம் உடைந்து, புத்தி மழுங்கி, ஆத்துமா கெட்டு பிச்சைக்காரர்களாய் வந்து சேருகிறார்கள்"

### கவர்ன்மெண்டாரின் பொருப்பு.

தென்னாப்பிரிக்காவுக்கு ஒப்பந்தக் கூலிகளை ஏற்றி அனுப்புவதை நமது கவர்ன்மெண்டார் தடுத்துவிட்டது யாரும் அறிந்த விஷயம். தென்னாப்பிரிக்காவில் ஒப்பந்தக் கூலிகளை முதலாளிகள் நடத்திய கொரூரத்தைக் கண்டு சகிக்காமல், அப்படிக்கு தடுத்துவிட்டார்கள். ஆனால் தென்னாப்பிரிக்காவைப் போலவே, பிஜி, டிரினிடாட், ஜமேக்கா, பிரிட்டிஷ் கயானா, டச்சு கயானா முதலிய மற்ற இடங்களிலும் இந்திய ஒப்பந்தக்கூலிகள் அகோர வேதனைகளை அனுவித்துக் கொண்டு வருவது தெரிந்திருந்தும் நமது கவர்ன்மெண்டார் அந்த இடங்களுக்கும் ஒப்பந்தக்கூலி ஆள்களை அனுப்பக்கூடாதென்று தடுக்காமலிருப்பது ஆச்சரியமாகவே யிருந்தது. நாம் எவ்வளவோ கத்திய பிறகு, மிஸ்டர் மெக்னீல் ஐ. சி. எஸ் என்பவரையும், மிஸ்டர் சிமன்லால் என்பவரையும் அனுப்பி, ஒப்பந்தக்கூலிகளின் நிலைமை எப்படியிருக்கிறதென்று சோதித்துத் தெரிவிக்கும்படி செய்தார்கள். அப்படியே அவர்கள் சோதித்து வெளியிட்ட அறிக்கையில் கூலிகள் சௌக்கியமாயிருப்பதாகக் காட்டும்படி எவ்வளவோ முயன்றும், கூலிகளின் அகோரமான நிலைமையை முழுவதும் மறைக்க அவர்களால் கூடமுடியவில்லை.

### உத்தியோகப்பற்றில்லாதவர்களின் அபிப்பிராயம்.

பிறகு ரெவரண்டு ஆந்திரூஸ், மிஸ்டர் பீர்ஸன் என்ற இரண்டு ஐரோபகாரிகளும் வலிய மேற்படி இடங்களுக்குப் போய் இந்தியக் கூலிகளின் நிலைமையைப் பார்த்துவிட்டு சமீபத்தில் தான் இந்தியாவுக்குத் திரும்பி வந்தார்கள். திரும்பி வந்தவுடன், இந்தியக்கூலிகளின் நிலைமை சகிக்கக் கூடாததாயிருக்கிறதென்றும், உடனே கவர்ன்மெண்டார் ஒப்பந்தக் கூலி வேலையை ரத்துசெய்து விட வேண்டுமென்றும் தெளிவாகத் தெரிவித்திருக்கிறார்கள். இந்தியன் நாஷனல் காங்கிரஸ் எவ்வளவு காலமாகவோ இப்படிக் கேட்டு வருகிறது. 1192-ம் வருஷம் மார்ச்சு மாதம் 4உ காலஞ்சென்ற ஸ்ரீமான் கோகலே ஒப்பந்தக்கூலிகள் ஏற்பாடுகளைச் சட்டமூலமாக ரத்து செய்துவிட வேண்டுமென்று வைசிராயின் சட்ட சபையில் ஓர் மசோதா கொண்டுவந்தது நண்பர்களுக்கு ஞாபகமிருக்கும். ஒப்பந்தக் கூலி ஏற்பாட்டால் உலகமுழுவதும் இந்தியர்களுக்கு அவமானமும், அபகீர்த்தியும் உண்டாகி, இந்தியரென்றால் உலகத்தார் சிரிக்கிறார்களென்று அவர் அந்த மசோதாவில் எடுத்துக் காட்டியிருக்கிறார். சமீபத்தில், ஏகோ லார்டு ஹார்டிஞ்சு இதைப்பற்றி இந்தியா மந்திரியிடம் சிபார்சு செய்ததாகச் சொன்ன திருப்திகரமாயினும், சீக்கிரத்தில் விமோசனம் ஏற்பட வேண்டியது மிகவும் அவசியமாகவே யிருக்கிறது.

### நமது கடமை.

எப்படியிருந்த போதிலும், நமக்குக் கெட்டபேரையும் நமது சகோதரர்களில் லக்ஷக்கணக்கானவர்களுக்கு அளவில்லாத துன்பத்தையும் விளைவிக்கிற இந்த அநியாயமான ஒப்பந்தக் கூலி ஏற்பாடுகளைத் தொலைக்கிற வரைக்கும் நம்மில் ஒருவராவது இளைப்பாறக் கூடாது. அதற்கிடையில், யாராவது தெரியாத்தனமாக, ஒப்பந்தக்கூலியாகப் போக விரும்புவதாக நமக்குத் தெரியவருமானால், நாம் அவனிடம் போய் அவனைத் தடுக்கும்படி நம்ம

லானமட்டும் முயற்சி செய்யவேண்டி யது நமது கடமை.

சுயேச்சையாகச் சென்றவர்களின் ஸ்திதி.

ஒப்பந்தக்கூலிகளைத் தவிர, சுயேச்சையாக வேறு அந்நிய நாடுகளுக்குப் பிழைக்கப் போகிறவர்களும் ஆயிரக்கணக்காயிருக்கிறார்கள். அவர்கள் பாடு ஒப்பந்தக் கூலிகளைவிடக் கொஞ்சம் தாவிலை யென்றாலும், அவர்களும் அநேக துன்பங்களை அனுபவித்தே தீரவேண்டியிருக்கிறது. ஆனால் ஒப்பந்தக் கூலிகள் தவணை முடியும் வரைக்கும் வேலை செய்தே தீரவேண்டும், அல்லது இடந்து சாகவேண்டும். சுயேச்சையாகப் போனவர்களுக்கு அந்த ஒரு துன்பம் இல்லை. இவர்களிலும் முக்கால் வாசிப் பெயர் ஒப்பந்தக் கூலிகளைப்போல் தோட்டங்களிலேயே கூலிவேலை செய்து வருகிறார்கள். கொஞ்சம் பெயர் சொற்ப வியாபாரம் செய்து வருகிறார்கள். சிலர் கைத்தொழில் செய்து வருகிறார்கள். வெகு கொஞ்சம் பேர் பிரிட்டிஷ் கயானாவிலும், தென்னாப்பிரிக்காவிலும் கவர்ன்மெண்டாரிடமிருந்து இனாமாக நிலம் பெற்று வேளாண்மை செய்து பிழைக்கிறார்கள். பலர் தாழ்ந்த வேலைகளைச்செய்துவருகிறார்கள்.

கனடாவில் நிர்ப்பந்தங்கள்.

அமெரிக்காவில் கனடா என்ற பிரிட்டிஷ்குடியேற்ற நாட்டில் சுமார் 1000 சீக்கியர்கள் குடியேறி யிருக்கிறார்கள். அவர்கள் அநேகமாய்க் கைத்தொழிலாளிகள். இவர்களுடைய போட்டிக்குப் பயந்துகொண்டு கனடா கவர்ன்மெண்டார் இவர்களைப் பலவாறு இம்சித்து வருவதுமல்லாமல், இந்த யுத்தம் ஆரம்பிக்கிறதற்குச் சுமார் ஒரு மாதத்துக்குமுன், குருதித் சிங்கின் தலைமையின் கீழ் கோமகடமாரு என்ற ஜப்பான் ஸ்டீமரில் கனடாவுக்கு வந்த சுமார் 300 சீக்கியர்களை இறங்கவிடாமல் திருப்பி அனுப்பிவிட்டதும் சகலருமறிந்த விஷயம். கனடாவிலுள்ள இந்தியர்கள் முன்பு தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் எந்த நிலைமையிலிருந்தார்களோ, அதே நிலைமையில் இப்பொழுது இருக்கிறார்கள். ஆகையால் இந்த யுத்தம் முடிந்த பிறகு, தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் எப்படிப் போராடாமல் போராடித் தங்கள் நிலைமையைச் சீர்திருத்திக் கொண்டார்களோ, அப்படியே கனடா இந்தியர்களும் செய்வார்களென்பது நிச்சயம். சுயேச்சையாக அத்தேசங்களில் குடியேறி யிருப்பவர்களில் கொஞ்சம் பெயர் படித்தவர்கள். இவர்கள் பாரிஸ்டர்களாகவும், டாக்டர்களாகவும், குமஸ்தாக்களாகவும் வேலைசெய்து வருகிறார்கள்.

அன்னிய நாடுகளில் நமது மாணவர்கள்.

அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு ஜெர்மனி, ஜப்பான் முதலிய தேசங்களில் ஆயிரக்கணக்கான இந்திய வாலிபர்கள் படித்து வருகிறார்கள். இங்கிலாந்தில்மட்டும் கல்வியபிலும் இந்திய வாலிபர்களின் தொகை சற்றேறக்குறைய 3000. பி. ஏ. எம். ஏ. முதலிய வித்யா பட்டங்களுக்காகவும், I. C. S. பாரிஸ்டர் பரீக்ஷைக்காகவும் மாத்திரமல்ல. வைத்தியம், இஞ்சினியர்வேலை, சித்திரம், சிற்பம் பலவித மான கைத்தொழில் முதலியவைகளையும் கற்று வருகிறார்கள். மாணாக்கர்களென்றாலும் இவர்கள் இந்தியர்களாகையால், இவர்களையும் சனியன் விடவில்லை. முதலாவது, ஆங்கிலேயக் கலாசாலைகளிலும், பள்ளிக்கூடங்களிலும் இவர்களைச் சேர்த்துக்கொள்ளுவது பெரிய கஷ்டமாயிருக்கிறது. இதனால் வருஷா வருஷம் இங்கிலாந்தில இந்திய மாணாக்கர்களின் தொகை குறைந்து வருகிறது. உயர்ந்த கல்வியுடையவர்களாயிருந்தாலும், ஆங்கிலேய சர்வ கலாசாலைகள் இந்தியர்களை மாணாக்கர்களாகச் சேர்த்துக் கொள்ளாமல். குறைந்த கல்வியுள்ள ஆங்கிலேயர் முதலியவர்களைச்

சேர்த்துக் கொள்ளுவதாகத் தெரிய வருகிறது. இதுவுமல்லாமல், வைத்யம், இஞ்சினிரிங் முதலிய தொழில்களுக்குப் படிக்கும் மற்றவர்களைத் தொழிற் சாலைகளிலும் ஆஸ்பத்திரிகளிலும் விட்டுப் பழகும்படி செய்தாலும், இந்திய வாலிபர்களை அடபடிப் பழக விடுவதில்லையென்றும் தெரிய வருகிறது. இங்கிலாந்தில் டேருக்கு இந்திய மாணாக்கர்களின் நன்மைக்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு சபையிருந்தாலும், அந்த சபை ஆங்கிலேயர்களாலேயே நடத்தப்பட்டு வருவதால், இந்திய மாணாக்கர்களுடைய நன்மையை அவ்வளவு கவனிக்காமல், எந்த இந்திய மாணாக்கனை இராஜத் துரோகமாகப் பேசுகிறானோ, ஏதாவது செய்கிறானோ என்பதை ஆராய்வதிலேயே கவனத்தையெல்லாம் செலுத்திக் கொண்டிருக்கிறது. இது அநீதமென்றும், மற்ற மாணாக்கர்களைப் போலவே இந்திய மாணாககர்களையும் நடத்தவேண்டுமென்றும் போன காங்கிரசிலும், கைத்தொழில் கான்பரன்சிலும் தீர்மானிக்கப்பட்டதையாவது கவர்ன்மெண்டார் கவனிப்பார்களென்று நமது ஜனங்கள் எதிர்பார்க்கிறார்கள்.

# தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்கள்.

## இந்தியர்கள் தேன் ஆப்பிரிக்காவுக்குப் போன காரணம்.

தென் ஆப்பிரிக்காவில் ஏராளமான பெரிய நிலக்கரிச் சுரங்கங்களும் பொன் சுரங்கங்களும், கரும்புத்தோட்டங்களும், காபி தேயிலைத்தோட்டங்களும் ரப்பர் தோட்டங்களும், இருப்பது சகலருமறிந்த விஷயம். ஆதியில் ஐரோப்பியர்கள் தென்ஆப்பிரிக்காவில் குடியேறிய காலத்தில் அவர்கள் காப்பிரி அடிமைகளைக்கொண்டு அந்தச் சுரங்கங்களிலும், தோட்டங்களிலும், வேலை நடத்தி வந்தார்கள். ஆனால் அமெரிக்கா கவர்ன்மெண்டாரும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரும் அடிமை வியாபாரம் செய்யக்கூடாதென்று தடுத்து விட்டபிறகு அவர்களுக்குப் போதுமானவேலை ஆள் இல்லாமல் போய் விட்டது. ஆகையால் அந்தத்தோட்டங்களும் சுரங்கங்களும் பாழடைந்து விடும்போல் தோன்றிற்று. அதன் மேல், அத்தோட்டங்களின் சொந்தக்காரர்களும் சுரங்கத்தின் முதலாளிகளும் எங்கிருந்தாவது வேலைக்கு ஆள் கொண்டுவரவேண்டுமென்று தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டாரைத் தொந்தரித்தார்கள். அப்படிச்செய்யாவிட்டால்தென்ஆப்பிரிக்கா முழுவதும் ஐசுவரியம் குன்றி,வறுமை அடைந்துவிடுமென்று தோன்றியபடியால், தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டாரும் இதற்கு என்னசெய்யலாமென்று ஆலோசிக்கத் தொடங்கினார்கள். கடைசியில் இந்தியாதான் இதற்குச் சரியான இடமென்று தீர்மானித்து மேற்சொன்ன அடிமைகளுக்குப் பதிலாக இந்தியாவிலிருந்து ஒப்பந்தமாகக்கூலிகளைத் தென் ஆப்பிரிக்காவுக்குக் கொண்டு போக ஏற்பாடு செய்யவேண்டுமென்று பிரிட்டிஷ் ஏகாதிபத்ய கவர்ன்மெண்டாரைக் கேட்டுக்கொண்டார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்ய கவர்ன்மெண்டார் தென் ஆப்பிரிக்கா ஐரோப்பியர்களின் நன்மையை முக்கியமாக நினைத்து இந்தியாவிலிருந்து ஒப்பந்தக்கூலிகளைத்திரட்டிக்கொண்டுபோக உத்தரவு கொடுக்கவேண்டுமென்று இந்தியா கவர்ன்மெண்டாரை நெருக்கியபடியால், இந்தியா கவர்ன்மெண்டார் 1859-ம் வருஷத்தில் அப்படியே உத்தரவு கொடுத்துவிட்டார்கள். அந்த வருஷத்தில் தான் இந்தியர்கள் முதல் முதல் தென் ஆப்பிரிக்காவில் போய்ச் சேர்ந்தார்கள்.

பிற்பாடு, தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டாரின் நிர்ப்பந்தங்களைத் தாங்க முடியாமல், இந்தியர்கள் அவர்களை "எதிர்க்காமல்" எதிர்த்துப்போராடின காலத்தில், சிலர் "இந்தியர்கள் ஏன் தென் ஆப்பிரிக்காவுக்குப்போனார்கள்? யார் அவர்களைப்போகச் சொன்னது?" என்று தெரியாத் தனமாகப் பேசலானார்கள். நாம் மேலே சொன்ன விவரங்கள் தெரிந்திருந்தால் அவர்கள் ஒருக்காலும் அப்படிப் பேசியிருக்க மாட்டார்கள். இந்தியர்கள் துவக்கத்தில் சுயேச்சையாகத் தென் ஆப்பிரிக்காவுக்குப் போனவர்கள் அல்ல. பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரும் போயர் கவர்ன்மெண்டாரும் வலிய அவர்களை வருந்தி அழைத்துத் தருவித்துக் கொண்டார்களே யொழிய வேறல்ல. வலிய வரும்படி கேட்டுக் கொண்டது மாத்திரமல்ல. தென் ஆப்பிரிக்காவுக்குப்போனால் இந்தியக் கூலிகள் ஏராளமாகப் பணம் சேர்த்து விடலாமென்றும், அவர்களுக்கு இனமாக நில பலங்கள் விட்டுக் கொடுக்கப்படுமென்றும்,

அவர்கள் சம்பிரமமாக வாழலாமென்றும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரும், போயர் கவர்ன்மெண்டாரும் ஆசை வார்த்தைகளை வாரி பிறைத்தபடியினாலேயே இந்தியக் கூலிகள் தென் ஆப்பிரிக்காவுக்குப் போனார்களென்பது நிச்சயம். ஆகையால் பிற்பாடு விளைந்த சகல கஷ்டங்களுக்கும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரும் போயர் கவர்ன்மெண்டாரும் உத்தரவாதிகளேயொழிய ஏழை இந்தியர்கள் ஜவாப்தாரிகள் அல்ல.

ஆதியில் இந்தியர்களின் நிலைமை.

ஆதியில் போயர்கள் இந்தியர்களை அவ்வளவு நிர்ப்பந்திக்கவில்லையென்றே சொல்ல வேண்டும். ஆரம்பத்திலேயே குணத்தைக் காட்டி விட்டால் கொஞ்சத்துக்குள் கூலி ஆள் வருவது நின்று போய் விடாதோ? ஆகையால் அவர்கள் முதலில் இந்தியர்களை அவ்வளவு கொடுமை செய்யவில்லை. ஆனால் இந்தியர்கள் அப்பொழுது வெகு சௌகரியமாய் வாழ்ந்ததாக ஒருவரும் எண்ணிவிட வேண்டாம். அடிமைகளுக்குப் பதிலாகத் தோட்டங்களிலும் சுரங்கங்களிலும் ஒப்பந்தமாக உழைக்கப் போனவர்கள் எப்படிப் பூரண சௌகரியமாயிருக்க முடியும்? ஆகையால் அப்பொழுதுகூட முதலாளிகள் இந்தியர்களை அடிமைகளைப் போலவே நடத்தி வந்தார்கள். பல சந்தர்ப்பங்களில், கூலிகளுக்குச் சவுக்கடியும், உதையும், பட்டினியும், காராக்கிருஹமுந்தான். அக்காலத்திலும், ஐரோப்பியர்கள் இந்தியர்களில் ஆண் பெண் உள்பட மானபங்கப்படுத்துவது தாராளமாகவே நடந்து வந்தது. சுருக்கத்தில் இப்பொழுது, பிஜி, ஜமேக்கா, டிரினிடாட், பிரிட்டிஷ் கயானா, டச்சுகயானா, மோரீஸ் முதலிய அன்னிய நாடுகளில் நமது இந்திய ஒப்பந்தக் கூலிகள் என்னென்ன பாடு படுகிறார்களோ, அதை விடக் கொடிய உபாதைகளையெல்லாம் அவர்கள் தென் ஆப்பிரிக்காவில் அனுபவித்து வந்ததாகத் தெரிய வருகிறது. ஆகிலும் பிற்காலத்தில் அவர்கள் படவேண்டியிருந்த ஆக்கினைகளையும் பாடுகளையும் யோசித்துப் பார்க்கும்பொழுது, ஆதியில் அவர்கள் பாடு தேவலையென்றே சொல்லவேண்டும்.

இந்தியர்களின் அபிவிருத்தியும், போயர்களின் பொறாமையும்.

அதற்கிடையில், "எமிகிரேஷன் ஏஜெண்டு"களும், கண்காணிகளும் இமயமலையிலிருந்து ராமேஸ்வரம் வரைக்கும் ஊர் ஊராய்ச் சென்று, "நெட்டாலுக்குக் கூலி ஆள் சேர்க்கும் இடம்" என்று எண்ணிறந்த "எமிகிரேஷன் டிப்போக்"களை ஏற்படுத்தி, தென் ஆப்பிரிக்காவுக்குப் பிழைக்கப்போன இந்தியர்களெல்லாம் பணக்கோட்டை கட்டிவிட்டார்களென்றும், மகா டம்பமாக வாழுகிறார்களென்றும், அங்கு போகிறவர்களுக்கெல்லாம் குபேர சம்பத்து கிடைத்துவிடுமென்றும், ஏழைகளையும், பேதைகளையும் பசப்பி ஆயிரக் கணக்கானவர்களை ஒப்பந்தக் கூலிகளாகச் சேர்த்துக்கொண்டு போய் விட்டார்கள். இப்பொழுது தென்னாப்பிரிக்கா கவர்ன்மெண்டார் எதிர்பாராத இரண்டு காரியங்கள் சம்பவித்தன. 1-வது, ஆயிரக்கணக்கான ஒப்பந்தக் கூலிக்காரர்கள் தென் ஆப்பிரிக்காவுக்குப் போவதைப் பார்த்து நூற்றுக் கணக்கான இந்தியர்கள் சுயேச்சையாகத் தென் ஆப்பிரிக்காவுக்குப்போக ஆரம்பித்தனர். இது முற்றிலும் சகஜமே. ஆயிரக் கணக்கான இந்தியக் கூலிகள் குடியேறிப் பிழைக்குமிடத்தில் அவர்களுக்கு வேண்டிய காரியங்களை நடப்பிக்கிறதற்கு இந்திய வியாபாரிகளும், தொழிலாளிகளும், பாரிஸ்டர்களும, டாக்டர்களும் போய்ச் சேர்ந்தது சகஜம் அன்றோ? இப்படி சுயேச்சையாகப் போனவர்களில் முக்காலே மூன்று வீசப்பேர் சில்லரை வியாபாரிகள். இவர்கள் ஐரோப்பிய வியாபாரிகளைவிடக் குறைந்த விலைக்கு சாக்குகளை விற்றதால், ஐரோப்பிய வியாபாரி

களுக்கு வியாபாரம் மட்டுப்பட்டு, அவர்களுக்கு இந்தியர்களின்மேல் பொறாமையுண்டாயிற்று. 2-வது, ஒப்பந்தமாகச் சென்ற கூலிக்காரர்கள் 5-வருஷம் ஒப்பந்தமாக வேலை செய்து ஒழித்தபிறகு, இந்தியாவுக்குத் திரும்பி வராமல் தென் ஆப்பிரிக்காவிலேயே சாசுவதமாகக் குடியேறிவிட்டார்கள். இதுவும் சகஜமே யொழிய மற்றப்படியல்ல. கஷ்டப்பட்டு வேலை செய்து ஏதோ சிறிது நிலபலம் சம்பாதித்த இடத்தை விட்டு விட்டு இந்தியாவுக்குத் திரும்பிப் போக வேண்டுமென்று அவர்களுக்கென்ன ஆக்கிரம்? ஆகையால் அங்கேயே சுயேச்சையாகத்தங்கிவிட்டனர். தென் ஆப்பிரிக்கா போயர்கள் இந்த இரண்டு காரியங்களும் நடக்குமென்று எதிர்பார்க்கவில்லை போலும். ஆதியில் தென்னாப்பிரிக்காவுக்கு இந்தியர்களைத் தருவிக்கவேண்டு மென்று யோசனை செய்தபொழுது, பிற்காலத்தில் இன்னின்னபடி சம்பவிக்குமென்று அவர்கள் கண்டுகொள்ளாமல் போனது தான் ஆச்சரியம். இந்தியர்கள் வலியத் தென் ஆப்பிரிக்காவுக்கு வரவில்லை யென்பதையும், நாமே அவர்களை வரவழைத்தோம் என்பதையும், அவர்கள் இப்பொழுது மறந்து விட்டார்கள். இந்தியர்கள் வந்திருக்கா விட்டால் தென் ஆப்பிரிக்கா பாழாய்ப் போயிருக்குமென்பதையும், இந்தியக் கூலிகளின் உழைப்பே தென் ஆப்பிரிக்காவின் ஐசுவரியத்துக்குக் காரணமென்பதையும், அவர்கள் மறந்து போய்விட்டார்கள். சுயேச்சையாக இந்தியர்கள் தென் ஆப்பிரிக்காவில் குடியேறி, ஐரோப்பியர்களோடு போட்டி போட்டுக்கொண்டு வியாபாரம் கைத் தொழில்களைச்செய்து, அங்கேயே கொள்வினை கொடுப்பினையெல்லாம் செய்துகொண்டு, நாளுக்குநாள் அபிவிருத்தி அடைந்துகொண்டு வருவதைக் காணவே, அவர்கள் தங்கள் செல்வ விருத்திக்கும், முற்போக்குக்கும் குறைவு வருமென்று கர்ப்பெண்ணம் கொண்டு, கோபமும் பொறாமையும் கொண்டவர்களாய், எங்கே நமது தேசத்தில் இந்தியர்களின் தொகை இன்னும் அதிகரித்து விடுகிறதோ என்று பயந்து, ஒப்பந்தமாக உழைக்கிறவர்களைத் தவிர மற்ற இந்தியர்களையெல்லாம் எப்படியாவது தென் ஆப்பிரிக்காவைவிட்டுக் அப்புறப்படுத்தி விட வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அதிலிருந்து, இந்தியர்களுக்கு விபரீதமான கஷ்டகாலம் ஆரம்பித்த தென்று சொல்லலாம்.

### தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டின் ஹிம்சை.

இந்தக்கருத்தை மனதில் வைத்துக் கொண்டு, அவர்கள்பல அநியாயமான சட்ட திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். இந்தியர்களைக் கஷ்டப்படுத்த வேண்டுமென்று அவர்கள் அந்தச் சட்ட திட்டங்களை ஏற்படுத்தவில்லை யென்பதையும், ஒப்பந்தக் கூலிகளைத் தவிர மற்ற இந்தியர்களை எப்படியாவது நாட்டைவிட்டுத் விலக்கிவிட வேண்டு மென்னும் நோக்கத்துடனேயே அவர்கள் இந்தச் சட்ட திட்டங்களை ஏற்படுத்தினார்களென்பதையும், மற்றப்படிக்கு இந்தியர்களைப் பல ஆக்கினைகளுக்கும் உள்படுத்தினார்களென்பதையும் நண்பர்கள் ஒருபோதும் மறக்க முடியாது. இந்தச் சட்டங்களுக்குள் எல்லாம் மகாக்கொடியதும் பேர்போனதும் எதுவென்றால், 3 பவுன் தலைவரியைப் பற்றிய சட்டமேயாகும். இது 1875-ம் வருஷத்தில் ஏற்படுத்தப்பட்டது ஒப்பந்தக்கூலி அல்லாத மற்ற ஒவ்வொரு இந்தியர்களும், ஆண்பிள்ளையானால் 16 வயதுக்கு மேற்பட்டும், பெண்பிள்ளையானால் 13-வயதுக்கு மேற்பட்டும், தென் ஆப்பிரிக்காவில் குடியிருக்க வந்தால், வருஷா வருஷம் தலைக்கு 3 பவுன் தலைவரி செலுத்திவிட்டுத்தான் குடியிருக்கலாம் என்பதே இச்சட்டத்தின் தாத்பர்யம். தென் ஆப்பிரிக்கா

இந்தியர்கள் வருஷ மொன்றுக்கு சராசரி தலைக்கு 12 பவுன் சம்பாதிக்கக்கூடியவர்கள். அவர்கள் குடும்பமும் நாலு பிள்ளை குட்டியுமாக இருந்தால் 12 பவுனையும் வரி கொடுத்து விட்டு, கஞ்சிக்குக் காற்றுப் பறக்கவேண்டியதுதான். அவர்கள் இந்த வரியைக் கொடுக்க முடியாமல் தென் ஆப்பிரிக்காவை விட்டுப் போய்விடுவார்களென்னும் துர்க்கருத்தைக்கொண்டே இந்த வரியை ஏற்படுத்தியபடியால் நாம் இதைப்பற்றி ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. இதைத் தவிர, இன்னும் பல அநியாயமான சட்டதிட்டங்களையும் ஏற்படுத்தினார்கள். அவைகளையெல்லாம் இவ்விடத்தில் சொல்லவேண்டிய அவசியமில்லை. ஆனால் இந்தியர்களுக்கு எலெக்ஷன்களில் ஓட்டுக் கொடுக்கும் சுதந்திரத்தைப் பிடுங்கிக் கொண்டதையும், ஒரு ஐரோப்பிய பாஷையாவது எழுதப் படிக்கத் தெரியாத இந்தியர்கள் தென் ஆப்பிரிக்காவில் பிரவேசிக்கக்கூடாதென்று தடுத்து விட்டதையும், இந்தியர்கள் அநுமதி யில்லாமல் தென் ஆப்பிரிக்காவுக்குள்ளேயே இடம் விட்டு இடம் போகக்கூடாதென்று விலக்கி வைத்ததையும், சகல இந்தியர்களும் தங்கள் பேர்களைப் பதிவு செய்துகொண்டு எவ்வளவு படித்தவர்களானாலும் 10 விரலும் பதிய விரலடையாளம் கொடுக்கவேண்டுமென்று கேட்டதையும் இங்கு குறிப்பிடலாம். இந்திய வியாபாரிகள் பேரிலேயே போயர்களுக்கு முக்கியமாகக் கோபம். ஆகையால் மற்ற இந்தியர்களைவிட வியாபாரிகளையே அகோரமாக நிர்ப்பந்திக்கலானார்கள். இந்திய வியாபாரிகள் என்ன விற்கவேண்டுமானாலும், லைசென்ஸ் இல்லாமல் விற்கக்கூடாதென்று உத்தரவு செய்துவிட்டார்கள். கத்தரிக்காய் விற்பதற்குக் கூட லைசென்ஸ் வேண்டுமென்று கேட்டார்கள். இப்படி நெருக்கினவர்கள் லைசென்ஸ் கொடுப்பதிலாவது நியாயமாய் நடந்துகொண்டார்களோவென்றால், அதுவும் இல்லை. இத்தேசத்தில் துப்பாக்கி வைத்திருப்பதற்கு லைசென்ஸ் எவ்வளவு அருமையாய்க் கிடைக்கிறதோ, தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்கள் ஏதாவது வியாபாரம் செய்வதற்கு லைசென்ஸ் கிடைப்பது அவ்வளவு அருமையாகிவிட்டது. இத்தேசத்தில் தப்பித் தவறி துப்பாக்கி லைசென்ஸ் கிடைத்தாலும், அடிக்கடி அதைப் புதுப்பித்துக் கொண்டிருக்கவேண்டி யிருப்பதைப் போலவே தென் ஆப்பிரிக்காவில் ஒரு இந்திய வியாபாரிக்கு எப்பொழுதாவது தப்பித்தவறி வியாபாரம் செய்ய லைசென்ஸ் கிடைத்து விட்டாலும், வருஷா வருஷம் அதைப் புதுப்பித்துக்கொண்டே யிருக்க வேண்டும். இங்கே துப்பாக்கி லைசென்ஸ்களைப் புதுப்பித்துக் கொள்ளப் போகும்பொழுது ஒரு சமயம் லைசென்ஸுக்கே மோசமாக முடிகிறதைப் போலவே, அங்கே வியாபார லைசென்ஸ்களுக்கும் மோசம் நேரிடுவதாயிருந்தது. ஒருவருடைய லைசென்ஸ் பத்திரத்தை மற்றொருவர் பேருக்கு மாற்றுவதென்றால் முடியாது. இப்படி லைசென்ஸ்களைக் குறைத்துக் கொண்டே போய் 10 வருஷத்துக்குள் தென் ஆப்பிரிக்காவில் ஒரு இந்திய வியாபாரி கூட இல்லாமல் செய்து விடும்படி தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் ஒரு காலத்தில் தீர்மானித் திருந்ததாகவும் சொல்லப்படுகிறது. இந்தச் சட்டதிட்டங்களைத் தவிர, சில்லரை விஷயங்களில் போயர்கள் இந்தியர்களை எவ்வளவு நிர்ப்பந்தப் படுத்தினார்களென்பதும் ஜெகப்பிரசித்தமான விஷயம். போயர்கள் இந்தியர்களைப் படுத்திய பாடுகளுக்கும் அவமானங்களுக்கும் கணக்கு வழக்கில்லை.

போயர் யுத்தம்.

இப்படி அவர்கள் இந்தியர்களை நடத்திக்கொண்டு வருமபொழுது, போயர் சண்டை உண்டாயிற்று. தாங்கள் தென் ஆப்பிரிக்காவுக்கு வருவதற்கு பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் ஆதியில்

ஏதுவாயிருந்தார்க ளென்பதையும் தென் ஆப்பிரிக்காவில் தாங்கள் படுந் துயரங்களை பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தார்களென்பதையும், இந்தியர்கள் மறந்துவிட்டு, அந்த சண்டையில் காயப்படும் பிரிட்டிஷ் வீரர்களுக்கு சகாயம் செய்யும்படி, ஸ்ரீஜத் காந்தியின் தலைமையின்கீழ், ஒருசபை சேர்ந்து பிரிட்டிஷ் படைகளுக்கு இயன்றவளவு உதவிசெய்ததைக்கொண்டு, பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் அவர்களை வெகுவாக மெச்சிக்கொண்டது மல்லாமல், கொஞ்சகாலம் வரைக்கும் தென் ஆப்பிரிக்கா தேசத்தார்கள் இந்தியர்களைக் கொஞ்சம் பக்ஷமாக நடத்தினார்கள். ஆனால் அந்த யுத்தம் முடிந்தவுடன், "பழைய குருடி கதவைத் திறடி" யென்று மறுபடியும் ஆரம்பித்து விட்டார்கள்.

### டிரான்ஸ்வாலில் முதலாவது போராட்டம்.

பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் போயர்களோடு யுத்தஞ் செய்த பலகாரணங்களுக்குள், இந்தியர்களைக் காப்பாற்றவேண்டுமென்பதும் ஓர்காரணம் என்பதாக பலர் கூறினார்கள். மேற்படி யுத்தத்தில் பிரிட்டிஷாருக்கே ஜெயமென்பது சகலருமறிந்த விஷயம். அந்த யுத்தம் முடிந்த பிறகு போயர்கள் இந்தியர்களுக்கு விரோதமாய் ஏற்படுத்தி யிருந்த சட்ட திட்டங்களை ரத்து செய்யவில்லை. அதற்கு விரோதமாக, இன்னு மனேக புதிய திர்ப்பந்தச் சட்டங்களை ஏற்படுத்தினது மல்லாமல், சகல விதங்களிலும் முன்னைவிட இந்தியர்களை அதிகமாக வருத்தத் தொடங்கிவிட்டார்கள். இந்தியர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய கவர்ன்மெண்டாரைத் தங்களைக் காப்பாற்றும்படி கேட்டுக் கொண்டார்கள். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தங்களால் ஒன்றும் செய்ய முடியாதென்று தெரிவித்து விட்டனர்.

தென் ஆப்பிரிக்கா தேசம், நெட்டால், டிரான்ஸ்வால், கேப்கலனி, ஆரஞ்சியா, என்று 4 பாகங்களாய்ப் பிரிக்கப்பட்டிருப்பது நண்பர்கள் அறிந்ததே. இந்தியர்களில் முக்கால் வாசிப்பெயர் நெட்டாலிலும், சுமார் பதினாயிரம் பேர் டிரான்ஸ்வாலிலும், சுமார் 20000 பேர் கேப்கலனியிலும், சொற்பப் பேர் ஆரஞ்சியாவிலும், குடியேறியிருந்தார்கள். இவர்கள் எல்லோரிலும் டிரான்ஸ்வால் இந்தியர்களின் நிலைமையே மிகவும் கொடுமையாய் இருந்தது. டிரான்ஸ்வால் இந்தியர்கள் பொறுக்கு மட்டும் பொறுத்துப் பார்த்தார்கள். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் ஒன்றுஞ் செய்ய முடியாதென்று தெரிவித்து விட்டதின்பேரில், அவர்களால் சகிக்கக் கூடவில்லை. ஆகையால் அவர்கள் 1906-ம் வருஷத்தில் ஸ்ரீஜத் காந்தியின் தலைமையின்கீழ் தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டை "எதிர்க்காமல்" எதிர்க்க ஆரம்பித்து விட்டார்கள். ஸ்ரீஜத் காந்தியின் "எதிர்க்காமல்" எதிர்க்கும் உபாயம் அப்பொழுதான் உலகத்தில் பிரசித்திக்கு வந்தது. இப்பொழுது "எதிர்க்காமல்" எதிர்க்கும் உபாயமென்றால் என்னவென்றுதெரியாதவர்கள் இல்லை. டிரான்ஸ்வால் அதிகாரிகள் இந்தியர்களுக்கு விரோதமாய்ஏற்படுத்தியிருந்த ஒவ்வொரு சட்டங்களையும் வேண்டுமென்றே மீறி நடந்து வலிய ஜெயிலுக்குப் போவதும், ஜெயிலிலிருந்து வெளியேறினவுடன் மறுபடியும் வேண்டுமென்றே அதே குற்றத்தைச் செய்து மறுபடியும் ஜெயிலுக்குப் போவதும், இப்படித் திரும்பத் திரும்ப சட்டத்தை மீறிக்கொண்டேயிருந்து அதிகாரிகளுக்கு மனஞ்சலிக்கும்படி செய்து, முடிவில் அவர்கள் அந்தச்சட்டத்தை ரத்து செய்யும்படி செய்வதுதான் எதிர்க்காமல் எதிர்ப்பதற்கு அர்த்தம். அப்படியே, டிரான்ஸ்வால் இந்தியர்கள் டிரான்ஸ்வாலை விட்டு வெளிபோக் கூடாதென்பது சட்டம். இந்தியர்கள் வேண்டுமென்றே டிரான்ஸ்வாலை விட்டு நெட்

டாலுக்குப் போகிறார்கள். ஒருவர் இரண்டு பேரல்ல; 2000 அல்லது 3000 பேர், ஆணும் பெண்ணும் பிள்ளையுமாக அப்படிப்போகிறார்கள். அதிகாரிகள் என்ன செய்ய முடியும்? அவர்களைப் பிடித்து ரயிலில் ஏற்றிக்கொண்டுவந்து ஜெயிலில் வைக்க முடியும். நல்லது. ஜெயிலைவிட்டு வெளியேறிய பிறகு, அவர்கள் திரும்பத் திரும்ப அப்படியே செய்துகொண்டிருந்தால் பாவம் அதிகாரிகளுக்குத்தான் அலுத்துப்போகாதா? ஆனால் திரான்ஸ்வால் அதிகாரிகள் அவ்வளவு இலேசில் இளைத்துப் போகவில்லை. 1906-ம் வருஷத்திலிருந்து 1910-ம் வருஷம் வரைக்கும் 4-வருஷக்காலமாக திரான்ஸ்வால் இந்தியர்கள் ஆணும் பெண்ணும் பிள்ளையுமாகத் திரும்பத் திரும்ப சட்டங்களை மீறி 3500 பேர் ஜெயிலுக்குப்போய், 100 பேர் தென் ஆப்பிரிக்காவை விட்டு தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டு, ஏராளமான குடும்பங்கள் சின்னபின்னமாகச் சீரழிந்து, புருஷன் போனபக்கம், பெண்சாதி போனபக்கம், பிள்ளை போன பக்கமென்றுகூடத் தெரியாமல், எவ்வளவோ கஷ்ட கஷ்டங்களையெல்லாம் அனுபவித்துக்கொண்டு வந்தார்கள். என்றாலும், திரான்ஸ்வால் அதிகாரிகளின் மனம் இளகவில்லை. ஆனால் இந்தியர்களும் அசையவில்லை.

### டில்லி தர்பாரும், ராஜியும், வார்த்தை மீறுதல்களும்.

இப்படியிருக்கும்பொழுது 1910-ம் ஆண்டில் 5-ம் ஜார்ஜ் சக்கரவர்த்திக்கு டில்லியில் பட்டாபிஷேகம் நடைபெற்றது. அந்த சமயத்தில் அடித்துக்கொண்டிருந்தால் நன்றாயிராதென்று இருதரப்பாரும் நினைத்து ராஜியாய்ப் போகத் தீர்மானித்தார்கள். ஆனால் இந்தியர்களுக்கு விரோதமாக ஏற்படுத்தியிருந்த சட்டங்களையெல்லாம் கூடிய சீக்கிரத்தில் ரத்து செய்து விடுவதாகத் தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் எழுதிக் கொடுக்கவேண்டுமென்று ஸ்ரீஜத் : காந்தி சாதித்தார். அதற் கிடையில் இந்தியர்களுக்கு அனர்த்தமான புதிய சட்ட திட்டங்களை ஏற்படுத்தக்கூடாதென்றும் கேட்டார். அப்படியே தென் ஆப்ரிக்காவின் பிரதம மந்திரியான ஜெனரல் ஸ்மட்ஸ் ஸ்ரீஜத் : காந்திக்கு எழுதிக் கொடுத்தார். அதன்மேல் இந்தியர்கள் ராஜியாய்ப் போனார்கள். ஆனால் 1911-ம் வருஷத்தில் தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் தங்கள் வாக்கை நிறைவேற்றவேண்டுமென்று இந்தியர்கள் வற்புறுத்தினார்கள். தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டாரும் ஏதோ அப்படிச் செய்யப்போகிறவர்களைப்போல் வெளிக்குப் பாவனை செய்தார்களே யொழிய உண்மையில் அப்படிச் செய்யவில்லை. மறுபடியும் 1912-ம் வருஷத்தின் துவக்கத்தில் இந்தியர்களின் அமட்டுக்குப் பயந்து மறுபடியும் இந்தியர்களுக்கு சாதகமாகப் பேருக்கு ஒரு மசோதா கொண்டுவந்தார்கள். ஆனால் அவர்களே அந்த மசோதாவைச் சட்டமாக்காமல் நிராகரித்து விட்டனர். ஆகையால் ஒரு தடவையல்ல, இரண்டு தடவை அவர்கள் வாக்குப்படி நடக்காமல் இருந்து விட்டார்கள். ஆகினும் 1913-ம் வருஷத்தில் கட்டாயம் மேற்படி சட்டங்களைச் ரத்து செய்து விடுவதாக மறுபடியும் வாக்களித்தபடியால் இந்தியர்கள் அப்பொழுது ஒன்றும் செய்யவில்லை.

### ஸ்ரீஜத் : கோகலேயின் விஜயம்.

காரியங்கள் இந்நிலைமையிலிருக்கும்பொழுது, காலஞ்சென்ற இராஜதந்திர சிரோமணியாகிய ஸ்ரீமான் : கோகலே அவர்கள் தென் ஆப்பிரிக்காவுக்கு விஜயம் செய்து, ஜெனரல் போதா, ஜெனரல் ஸ்மட்ஸ், மிஸ்டர் பிஷர், முதலிய பெரிய அதிகாரிகளை நேரில் கண்டு பேசி, இந்தியர்களின் விவகாரத்தைச் சிக்கறுத்துச் சரிக்கட்டுவதற்கு அவர்களுக்கு வேண்டிய ஆலோசனைகளைச் சொல்லி வந்ததின். அதனால் தென் ஆப்பிரிக்கா அதிகாரி

கள் வெகு உதவியடைந்து பிற்பாடு இந்தியர்களின் விவகாரம் ஒழுங்காகத் தீர்க்கப்படுவதற்கு ஏதுவாயதும், எல்லோருக்கும் தெரிந்தேயிருக்கிறது. ஸ்ரீமான் கோகலே தென் ஆப்பிரிக்காவுக்குச் சென்றிருக்காவிட்டால், அவ்விடத்தில் இந்தியர்களைப் பற்றிய தகராறு இருப்திகரமான முடிவுக்கு வந்திருக்க மாட்டாதென்று அவருடைய மரணத்துக்குப் பிறகு நமது இராஜப் பிரதிநிதியாகிய ஹார்டிஞ்சு பிரபு அவர்கள் தமது இம்பீரியல் சட்ட சபையில் கூறியது நண்பர்களுக்கு ஞாபகமிருக்கும். ஸ்ரீமான்: கோகலே தென் ஆப்பிரிக்காவில் செய்த நல்ல வேலை சரித்திரத்தில் நீடித்திருக்குமென்பது உறுதி.

### தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் மறுபடியும் வார்த்தை மீறல்.

தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் இந்தியர்களை இரண்டு தடவை ஏமாற்றியதைப் பற்றி ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். ஆனால் கண்டிப்பாய் 1913-ம் வருஷத்தில் நிறைவேற்றி விடுவதாக அவர்கள் உறுதியளித்தபடியால் இந்தியர்கள் பொறுமையாய் 1913-ம் வருஷத்தை எதிர்பார்த்திருந்தார்கள். 19.3-ம் வருஷமும் வந்து சேர்ந்தது. தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் மறுபடியும் வார்த்தைப் பிசகாய் நடந்து கொண்டார்கள். இந்தத் தடவை வார்த்தைப் பிசகாய் நடந்துகொண்டதுமட்டுமல்லாமல், இந்தியர்களுக்கு விரோதமாய் முன்னேயில்லாத ஒரு புதிய சட்டத்தையும் ஏற்படுத்தி விட்டார்கள். இந்தச் சட்டமென்னவென்றால், தென் ஆப்பிரிக்காவில் இந்துமத ஆசாரப்படிக்கும், முகமது மத ஆசாரப்படிக்கும், செய்துகொள்ளுகிற விவாகங்கள் சட்டப்படிக்குச் செல்லாதென்பதேயாம். தென் ஆப்பிரிக்கா இந்தியர்கள் அநேகமாய் இந்துக்களும், மகமதியர்களுமே யாவார்கள். அவர்கள் தங்கள் மத ஆசாரப்படிக்கு விவாகம் செய்து கொள்ளாமல், வேறு எப்படி விவாகம் செய்து கொள்ளுவார்கள்? ஆனால் அவர்கள் தங்கள் மத ஆசாரப்படிக்கு விவாகம் செய்துகொண்டால் அது தென் ஆப்பிரிக்காதேசச்சட்டப்படிக்கு செல்லாது. அதாவது அவர்களுடைய பெண்ஜாதிகள் வைப்பாட்டிகளைப்போல் பாவிக்கப்படுவார்கள். அவர்களுடைய சொத்து அவர்களுடைய பெண்ஜாதி பிள்ளைகளுக்குச் சேராது. தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டாரோடு சேர்ந்துவிடும். அப்படியானால் எந்த ஹிந்துக்கள், அல்லது மகமதியர்கள்தான் விவாகம் செய்து கொள்ளத் துணிவார்கள்? அவர்கள் விவாகம் செய்து கொள்ளக்கூடாதென்றும், இந்தியர்களுடைய சந்ததி அற்றுப்போக வேண்டுமென்றும், அவர்கள் இந்த அக்கிரமமான சட்டத்தை ஏற்படுத்தினார்களென்ற ஸந்தேகம் நன்றாய் ஏற்பட்டுவிட்டது. இந்தியர்களை யெப்படியாவது வெளிப்படுத்திவிட வேண்டுமென்று 3 பவுன் தலைவரியை ஏற்படுத்தியதைப் போலவே இந்தச் சட்டத்தையும் ஏற்படுத்தினார்கள்.

### இந்தியர்களின் இரண்டாவது போராட்டம்.

இப்படியாகத் தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் இந்தியர்களுக்கு விரோதமாக ஏற்படுத்திய சட்டங்களை ரத்து செய்வதாக ஒரு தடவையல்ல, இரண்டு தரமல்ல, மூன்று தடவை வாக்குத்தத்தம் செய்துகொடுத்து, ஒவ்வொரு தடவையும் அந்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்றத் தவறிப்போய் விட்டது மல்லாமல், முன்னோர்காலத்திலுமில்லாத அக்கிரமமும், அவமானமுமான ஒரு புதிய சட்டத்தையும் அவர்களுக்கு விரோதமாய் ஏற்படுத்தியதின் மேல், அவர்களுடைய தலைவராகிய ஸ்ரீஜத்: காந்தி இது விஷயங்களைப் பற்றி பிரிட்டிஷ் ஏகாதிபத்ய கவர்ன்மெண்டாருக்கு எடுத்துக்காட்டி இந்தியர்களை இரக்ஷிக்க வேண்டுமென்று எவ்வளவோ கேட்டுக்கொண்டும், பிரிட்-

டிஷ் கவர்ன்மெண்டார் இந்தத் தடவையும் ஒன்றுஞ்செய்ய முடியாமலிருந்து விட்டார்கள். அதன் மேல்தான் அவர் மறுபடியும் எதிர்க்காமல் எதிர்க்கும் உபாயத்தைக் கையாட நிச்சயித்தார். முதல் தடவை திரான்ஸ்வாலில் உள்ள இந்தியர்கள் மட்டுந்தான் இந்த உபாயத்தைக் கையாடினார்கள். இந்தத் தடவையோ வென்றால் தென் ஆப்பிரிக்கா முழுவதிலுமுள்ள சகல இந்தியர்களும் ஆண் பெண்பிள்ளை அடங்கலும் ஏகோபித்து அதில் சேர்ந்து கொண்டார்கள். 1000 பெயர் 2000பெயராகச் சேர்ந்து குறித்த எல்லையைவிட்டுத் திரான்ஸ்வாலுக்குள் புகுவதும், லைசென்ஸ் இல்லாமல் சாமான் விற்பதும், இன்னும் அநியாயமான சட்டங்களையெல்லாம் மீறி நடப்பதும், ஜெயிலுக்கு வலியப்போவதும், வெளியேறிய பிறகு மறுபடியும் சட்டங்களை உடைப்பதுமாக அவர்கள் அதிகாரிகளுக்குக் கொடுத்த தொந்தரவுகளுக்கு அளவில்லை. தோட்டந் துறவுகளில் வேலை செய்த ஆயிரக்கணக்கான இந்தியர்கள் வேலை நிறுத்தஞ்செய்து விட்டார்கள். சுரங்கங்களில் வேலை செய்த இந்தியர்களும் நின்று விட்டார்கள். இந்தியாவிலிருந்து மாதம் மாதம் அவர்களுக்கு 4000 அல்லது 5000 பவுன் போய்க்கொண்டிருந்தது. ஆகையால் அவர்கள் வேலைக்குத் திரும்பவில்லை. சீக்கிரத்தில் தென் ஆப்பிரிக்காவில் சகல வியாபாரங்களும், தொழில்களும், தட்டுக் கெட்டுப்போய்விட்டன. அப்பொழுதுதான் போயர் அதிகாரிகளுக்கும் ஜனங்களுக்கும் இந்தியர்களின் பலம் தெரியவந்தது. ஆகையால் போராட்டத்தை நிறுத்திவிடவேண்டுமென்று இந்தியர்களைக் கெஞ்சினார்கள். இந்தியர்களின் குறைகளை உடனே நிவர்த்திசெய்து விடுவதாகவும் தெரிவித்தார்கள். இந்தியர் களுக்குள்ள குறைகளைப்பற்றி விசாரித்து ரிபோர்ட் செய்யும்படி ஒரு கமிட்டியையும் நியமித்தார்கள். ஆகையால் ஸ்ரீஜத்: காந்தி தற்சமயத்துக்கு எதிர்க்காமல் எதிர்ப்பதை நிறுத்திக்கொண்டார்.

## இந்தியர்களின் வெற்றி.

இந்தியர்களின் குறைகளைப்பற்றி ரிபோர்ட் செய்யும்படி தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் நியமித்த கமிட்டியில் சேர்ந்து இந்தியர்களுக்காகப் பரிந்து பேசும்படி இந்தியா கவர்ன்மெண்டார் ஸர் பென்ஜமீன் ராபர்ட்ஸன் என்பவரை இந்தியாவிலிருந்து அனுப்பி வைத்தார்கள். அவரும், மற்றக் கமிட்டி மெம்பர்களும் தீரவிசாரித்து இந்தியர்களுக்கு அநுகூலமாக ரிபோர்ட் செய்தார்கள். அந்த ரிபோர்ட்டின் ஆதாரத்தின்பேரில் தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் 1914-ம் வருஷம் ஜூன் மாதம் 27-ந் தேதி "Indian Relief Act" என்ற இந்தியர்களின் கஷ்ட நிவர்த்தி சட்டத்தை ஏற்படுத்தினார்கள். இந்தச் சட்டத்தில் 3-பவுன் தலைவரியை எடுத்துவிட்டார்கள். இந்து மகமதிய மார்க்க ஆசாரப்படிக்குச் செய்துகொள்ளும் விவாகங்கள் சட்டப்படி செல்லுமென்று அங்கீகரித்துக்கொண்டார்கள். இந்தியர்கள் தங்கள் பெயர்களை ரிஜிஸ்டர் செய்துகொண்டு விரலடையாளம் கொடுக்கவேண்டுமென்ற உத்தரவை ரத்துசெய்துவிட்டார்கள். இந்தியர்கள் இடம்விட்டு இடம்போக அனுமதி கொடுத்தார்கள். சுருக்கத்தில், இனிமேல் எப்பொழுதும் இந்தியர்களை நீதியாகவும் பக்ஷமாகவும் நடத்துவதாக உறுதிப்பாடுகொடுத்தார்கள். இப்படியாக இந்தியர்களுக்கு பூரணஜெயமாக முடிந்தது. பிரிட்டிஷ் பிரஜைகளுக்குரிய சகல சுதந்தரங்களும் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லையென்பது உண்மைதான், அப்படிச் சகலசுதந்தரங்களும் அவர்களுக்குக்கொடுக்கப்படுகிற வரைக்கும் அவர்கள் பூரண திருப்தி அடையமாட்டார்களென்று ஸ்ரீஜத்: காந்தி கூறியிருக்கிறார். ஆனால் அவர்களுடைய

முக்கியமான குறைகளெல்லாம் தீர்ந்து போய்விட்டன. அவர்களுடைய இரக்ஷகராகிய ஸ்ரீஜத்: காந்தியும் இந்தியாவுக்குத் திரும்பிவிட்டார்.

**ஸ்ரீஜத்: காந்தி வந்தபின் தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களின் நிலைமை.**

ஸ்ரீஜத்: காந்தி தென் ஆப்பிரிக்காவை விட்டுப் போன கொஞ்சகாலத்துக்குள் ஐரோப்பிய யுத்தம் ஆரம்பித்தது. முன்பு, போயர் யுத்தத்தில் பிரிட்டிஷ் படைகளுக்கு உதவிசெய்ததைப்போல் இந்த யுத்தத்திலும் உதவி செய்யும்படி ஸ்ரீஜத்: காந்தியின் பேரால் தென் ஆப்பிரிக்காவில் உள்ள இந்தியர்கள் ஒரு Stretcher Bearer Corps அதாவது காயப்பட்டவர்களுக்கு சிகிச்சை செய்யும் ஒரு படை இரட்டிச் சண்டை நடக்குமிடத்திற்கு அனுப்பியிருக்கிறார்கள். இப்படியெல்லாமிருந்துங்கூட ஸ்ரீஜத்: காந்தி இங்கு வந்தபிறகு தென் ஆப்பிரிக்கா அதிகாரிகளில் சிலர் மறுபடியும் வார்த்தைப்பிசாய் நடக்க ஆரம்பித்திருப்பதாகத் தெரியவருகிறது. முக்கியமாகத் தென் ஆப்பிரிக்கா இமிக்கிரேஷன் ஆபீசர்கள் (அதாவது குடியேற்ற அதிகாரிகள்) இந்தியர்களைக் கடுமையாக நடத்துவதாக விளங்குகிறது. அவர்கள் அடாவடியாக நடத்தியிருக்கும் இரண்டொரு காரியங்கள் தென் ஆப்பிரிக்காவில் பிரசுரமாகும் "இந்தியன் ஒப்பினியன்" என்னும்பத்திரிகை மூலமாக நமக்கு எட்டியிருக்கின்றன. இப்படிப்பட்ட இரண்டொரு காரியங்கள் கடித மூலமாகத் தமக்குத் தெரிய வந்திருப்பதா ஸ்ரீஜத் காந்தி: அவர்கள் சென்ற டிசம்பர் மாசம் பம்பாயில் நடந்த காங்கிரசில் கூறியிருக்கிறார். போன ஜனவரி மாசம் 9-ந் தேதி தென் ஆப்பிரிக்காவில் உள்ள ஜான்ஸ்பர்க் பட்டணத்தில் பிரிட்டிஷ் இந்தியர்களின் சங்கம் கூடித் தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் 1914-ம் வருஷத்திய இந்தியர்களின் கஷ்ட நிவர்த்தி சட்டத்தை முழுவதும் கொண்டு செலுத்தி இந்தியர்களை கருணையாக நடத்தவேண்டுமென்று தீர்மானம் செய்திருப்பதும் இதற்கு ஒரு அத்தாக்ஷியாகும். ஆனால் தென் ஆப்பிரிக்கா கவர்ன்மெண்டார் மறுபடியும் இந்தியர்களை அநீதியாக நடத்தி தங்களுக்குத் துன்பத்தைத் தேடிக் கொள்ளாமல் ஒருவருக்கொருவர் ஏற்பட்டிருக்கும் ஒற்றுணர்ச்சியையே விருத்தி செய்வார்களென்று நமது ஜனங்கள் யாவரும் நம்பியிருக்கிறார்கள்.

# இந்தியாவின் ஊழியர் சபை.

"Servants of India Society" என்று சொல்லப்பட்ட இந்தியாவின் ஊழியர் சபை, 1905-ம் வருஷம் ஜூன் மாதம் 12-ந்தேதி, பூனாவில் காலஞ்சென்ற ஸ்ரீமான் கோபால கிருஷ்ண கோகலே அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது.

### சபையின் நோக்கங்கள்.

இச்சபையின் நோக்கங்களாவன:—

முதலாவது, வார்த்தையாலும் செய்கையாலும் இத்தேசத்து ஜனங்களின் மனதில் தேசபக்தி ஆழமாகப் பதியும்படி செய்து, சுயநலம் பாராட்டாமல், தேச நன்மைக்காக எல்லோருக்கும் உழைக்கும்படி தூண்டிவிடுவதற்காகவும்;

இரண்டாவது, இத்தேசத்தைப் பற்றிய சகல விவகாரங்களையும் தீரப்படித்து, பொது ஜனங்களுக்குப் பொதுக் காரியங்களைப்பற்றிய ஞானத்தையும் அறிவையும் புகட்டி, பொது ஜன சமூகவாழ்க்கையைப் பலப்படுத்தி ராஜீய விஷயங்களில் தேச நன்மைக்காக முயற்சிகள் செய்வதற்காகவும்;

மூன்றாவது, இந்தியாவில் வாழும் எல்லா வகுப்பு ஜனங்களுக்குள்ளும் அன்னியோன்னிய உறவையும் ஐக்கியத்தையும் விருத்தி செய்து எல்லோரும் ஒற்றுமையாக உழைக்கும்படி ஏற்பாடு செய்வதற்காகவும்;

நான்காவது, கல்வியை விருத்திசெய்வதற்காகவும், விசேஷமாக, பெண் கல்வி, கைத்தொழிற் கல்வி, சாஸ்திரக் கல்வி, முதலியவற்றைப் பரப்புவதற்காகவும், தாழ்ந்த வகுப்பாருக்குக் கல்வி கற்பித்து அவர்களை முன்னுக்குக் கொண்டு வருவதற்காகவும்;

ஐந்தாவது, இந்தியாவில் கைத்தொழில்கள் செழித் தோங்கும்படி உதவி செய்வதற்காகவும்;

ஆறாவது, தாழ்ந்த ஜாதிகளை உயர்த்துவதற்காகவும்;

மேற்கூறிய இந்த ஆறு நோக்கங்களுக்காகவும், மற்றும் இந்தியா எல்லா வழிகளிலும் முன்னேறுவதற்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் நிறைவேற்றுவதற்காகவும், இச்சபை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

### சபையின் சட்டதிட்டங்கள்.

இச் சபையின் சில சட்டதிட்டங்களாவன:—

(1) இச்சபை "இந்தியாவின் ஊழியர் சபை" யென்று அழைக்கப்படும்.

(2) இந்தியாவின் நன்மைக்காம் உயிர் பொருள் ஆவி எல்லாவற்றையுக அர்ப்பணம் செய்து உழைக்கக்கூடிய ராஜ சன்னியாசிகளைப் பழக்கி, நியாயமான சால வழிகளாலும், இந்திய ஜனங்களின் உண்மையான நன்மைகளுக்காகப் பாடுபடுவதே இச்சபையின் கருத்து.

(3) இச்சபையில் (i) ஒரு பிரதம மெம்பரும் (ii) சாதாரண மெம்பர்களும் (iii) பழகும் மெம்பர்களும் சேர்ந்திருப்பார்கள்.

(4) பிரதம மெம்பரே சபையின் பிரஸிடெண்டாக இருப்பார்.

(5) ஒவ்வொரு மெம்பரும் முதலில் ஐந்து வருஷம் வேலை கற்றுக் கொள்ள வேண்டும். வேலை கற்றுக் கொள்ளும் மெம்பர்களுக்குப் "பழகும் மெம்பர்கள்" என்று பெயர். 5-வருஷம் பழகிய பிறகு, சாதாரண மெம்பர்களாகச் சேர்த்துக்கொள்ளப்படும்.

### ஏழு சத்தியங்கள்.

சாதாரண மெம்பராகச் சேர்த்துக் கொள்ளப் படும்பொழுது, ஒவ்

வொரு மெம்பரும் ஏழு சத்தியங்கள் செய்துகொடுக்கவேண்டும். அந்த ஏழு சத்தியங்களும் பின்வருமாறு:—முதலாவது, என்னுடைய மனதில் தேசத்தைப்பற்றிய ஞாபகமே முக்கியமாகக் குடிகொண்டிருக்கும்; தேச ஊழியத்தில் என்னில் உள்ளவற்றை யெல்லாம் விநியோகப் படுத்துவேன். இரண்டாவது, தேச ஊழியம் செய்வதில் ஏதாவது சுப நன்மை யுண்டாகும்படி தேடமாட்டேன். மூன்றாவது, எல்லா இந்தியர்களையும் சகோதரர்களைப் போல் நினைத்து ஜாதி மதபேதம் இல்லாமல், சகல இந்தியர்களும் விருத்தியடையும்படிப் பாடுபடுவேன். நான்காவது, என்னுடைய சவரக்ஷணைக்காகவும் எனக்குக் குடும்பமிருந்தால் என் குடும்பத்தின் சவரக்ஷணைக்காகவும் சபையார் எவ்வளவு கொடுக்கிறார்களோ, அதைக்கொண்டு திருப்தியோடு வேலை செய்வேன்; சொந்தமாக ஒரு காசுகூட சம்பாதிக்க முயலமாட்டேன். ஐந்தாவது, ஆத்தும சரீர சுத்தமாக ஜீவிப்பேன். ஆறாவது, யாரோடும் பகைத்து சண்டையிட்டுக் கொள்ளமாட்டேன். ஏழாவது, சபையின் நோக்கங்களை ஒரு நிமிஷமாவது மறக்கமாட்டேன். எப்பொழுதும் அவைகளை என் ஞாபகத்தில் இருத்தி, அவைகளை நிறைவேற்றுவதற்காக என்னால் எவ்வளவு செய்ய முடியுமோ, அவ்வளவையும் மனசாக்ஷிக்கு விரோதமில்லாமல் செய்தே தீருவேன். சபையின் நோக்கங்களுக்கும் கொள்கைகளுக்கும் விரோதமான எந்தக் காரியத்திலும் பிரவேசிக்க மாட்டேன்.

**மெம்பர்களுள் பிரிவுகள்.**

பிரதம மெம்பர், சாதாரண மெம்பர்கள், பழகும் மெம்பர்கள் இவர்களைத் தவிர, "பெர்மனண்ட் அஸிஸ்டண்டுகள்" என்றும், "அட்டாச்சிஸ்" என்றும், அஸோஷியேட்ஸ் என்றும், வேறு சிலர் இருக்கிறார்கள். பெர்மனண்ட் அஸிஸ்டண்டுகளுக்குள், சீனியர் பெர்மனண்ட் அஸிஸ்டண்டுகளென்றும், ஜூனியர் பெர்மனண்ட் அஸிஸ்டண்டுகளென்றும், அவரவர் கல்விக்கேற்றபடி இரண்டு பிரிவுகளுண்டு. பெர்மனண்ட் அஸிஸ்டண்டுகள் மெம்பர்களுக்குஉதவி செய்கிறவர்களாகையால் அவர்களுக்கு இப்பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிரஸிடெண்டு சொல்லுகிற வேலையைச் செய்கிறவர்களுக்கு அட்டாச்சிகளென்று பெயர். அஸோஷியேட்டுகள் மற்றவர்களைப்போல் ஆயுசு முழுவதும் சபையின் வேலையைச் செய்யவேண்டுமென்ற நிபந்தனையில்லை எவ்வளவு நேரம் கூடுமோ, அவ்வளவு நேரம் செய்தால் போதும்.

**தற்கால நிலைமை.**

சபையின் தலை ஆபீஸ் பூனா நகரத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதாக ஏற்கெனவே சொல்லி யிருக்கிறோம். பம்பாயிலும், சென்னையிலும், மத்திய மாகாணங்களிலும், ஐக்கிய மாகாணங்களிலும், இப்பொழுது கிளைச் சபைகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. நேரமும் நிலைமையும் சரியாயிருக்கும்பொழுது மற்ற இடங்களிலும் கிளைகள் ஸ்தாபிக்கப்படும். சபையின் ஆரம்பத்திலிருந்து மரணகாலம் வரைக்கும் ஸ்ரீமான் கோகலே அவர்கள் சபையின் அக்கிராசனாதிபதியாயிருந்தார். அவர் காலஞ்சென்ற பிறகு, ஆனரபிள் மிஸ்டர் வி. எஸ் ஸ்ரீனிவாச சாஸ்திரி அவர்கள் அக்கிராசனாதிபதியாய் இருந்து வருகிறார். சென்ற 1915-ம் வருஷம் ஜூலை மாதம் 16-ந் தேதி யன்று கடைசியாகப் பிரசுரிக்கப்பட்ட ஜாப்தாப்படி, கீழ்க் கண்டவர்கள் சபையில் சேர்ந்திருக்கிறார்கள்:—

**பிரஸிடேண்டு.**

ஆனரபில் மிஸ்டர் வி. எஸ்.
ஸ்ரீனிவாச சாஸ்திரி பீ. ஏ. எல் டி.

**சாதாரண மெம்பர்கள்.**

(1) நடேஷ் அப்பாஜி திரேவித் எம். ஏ.
(2) கோபால் கிருஷ்ண தேவதர் எம். ஏ.
(3) ஆனந்த விநாயக பத்வர்தன் பி. ஏ.
(4) ஹரிதேனாத்குன்சர் பி.ஏ., பி.எஸ்.ஸி.
(5) ஸ்ரீதர் கணேஷ் வஸே பி. ஏ.

(6) சிந்தாமன் சக்காராம் தெயோலி பி. ஏ.
(7) கிருஷ்ண பிரசாத் கால் பி. ஏ.
(8) வி. வெங்கட சுப்பையா பி. ஏ.
(9) நாராயண மல்ஹர் ஜோஷி பி. ஏ.

பழகும் மெம்பர்கள்.

(1) வெங்கடேஸ் நாராயண திவாரி எம். ஏ.
(2) விதால் ஹரி பார்வே
(3) டாக்டர் ஸ்ரீ கிருஷ்ணதேவா எல். எம். எஸ்.
(4) அமிருதலால் விதல்தாஸ் தக்கர் எல்.வி, இ.
(5) டி. ஹனுமந்த ராவ் பி. ஏ.
(6) தத்தாதிரியா வாசுதேவ அம்பிகர்

பெர்மனண்ட் அஸிஸ்டண்டுகள்.

(1) தத்தாதிரியா வாசுதேவ வெலாங்கர்
(2) டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர்

அட்டாச்சிகள்.

(1) பாபுஜீ மார்த்தாண்ட அம்பிகர்
(2) கரிசோண்தாஸ் ஜகஜீவன்தாஸ் சித்தேலியா

மற்ற அசோஷியேட் மெம்பர்களேயும், மேற்படி கணக்கு எடுத்ததற்குப் பிறகு சேர்ந்தவர்களேயும் சேர்த்து, மொத்தம் இச்சபையில் சுமார் 25பேர் இருக்கிறார்கள்.

சில அபிப்பிராயங்கள்.

இச்சபையின் நோக்கங்களேயும் வேலேகளேயும் பற்றிப் பொதுப்படையாகவும் சுருக்கமாகவும் முன்னே தெரிவித்திருக்கிறோம். இதுவரைக்கும், அந்த நோக்கங்களுக்குப் பழுதில்லாமல் இச்சபை பல அரும்பெரும் வேலேகளேச் செய்து முடித்திருக்கிறது. சமீபத்தில் ஆனரபில் பண்டித மதன்மோகன மாலவியா அவர்கள், இந்தியாவின் ஊழியர்கள் சபை நல்ல வேலே, வெகு நல்லவேலே, வெகு வெகு நல்ல வேலேகளேச்செய்து முடித்திருக்கிறது" என்று வியந்து கூறியிருக்கிறார். சில தினங்களுக்குமுன் ஆனரபிள் மிஸ்டர் டி. இ. வாச்சா அவர்கள் இந்தியாவின் ஊழியர்கள் சபை மிகவும் சிறந்த வேலே செய்திருப்பதாகப் புகழ்ந்து பேசியிருக்கிறார். இச்சபை ஸ்ரீமான் கோகலேயால் ஸ்தாபிக்கப்பட்டதாலும், ராஜீய விவகாரங்களிலும், உழைக்க வேண்டுமென்பது இதன் நோக்கங்களுக்குள் ஒன்றானதாலும், சிலர் இந்தியா ஊழியர்கள் சபை ஒரு ராஜீய விவகார சபையென்று நினைக்கிறார்கள்.

தேச ஊழியம் பலவகை.

இது சரியல்ல. ஏனென்றால், இந்தியா ஊழியர்கள் சபை ராஜீய விவகாரங்களில் உழைத்து வந்தபோதிலும், அதில் மட்டும் நின்றுவிடாமல், நமது தாய்நாடு கல்வி, வியாபாரம், விவசாயம், ஆசாரதிருத்தம், கைத்தொழில் முதலிய எல்லா வழிகளிலும், ஒழுங்காய் முன்னுக்கு வரும்படி செய்யக்கூடிய சகல வேலேகளேயும், ஊக்கமாகச் செய்துகொண்டு வருகிறார்கள். அவர்கள் செய்திருக்கும் வேலேகளேயும் செய்து கொண்டு வரும் வேலேகளேயும் சொல்லி முடியாதாகையால், அவற்றில் சிலவற்றை மாத்திரம் இங்கே குறிப்பிடுகிறோம். (1) பம்பாய், சென்னே, ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்கள், முதலிய இடங்களில் விவசாயிகள், கைத்தொழிலாளிகள், ஏழைக் கூலிகள், முதலியோர்களுக்கு சகாயமாக ஏராளமான (கோ-ஆபரேடிவ்) ஐக்கிய நாணயச்சங்கங்களே ஏற்படுத்தி நடத்தி வருகிறார்கள். மார்வாடிகள் முதலியவர்களிடம் ஏழைக் குடியானவர்கள் முதலியோர் அநியாய வட்டி கொடுத்துப் பணம் வாங்கி அவஸ்தைப் படுவதை நிவர்த்தி செய்யும் பொருட்டு அநேக Debt-Redemption Societies (கடன் நிவர்த்தி சங்கங்களே ஸ்தாபித்து நடத்துகிறார்கள்.

ஆபத் சகாயம்.

பிளேக் நோயைத் தடுக்கும்படி பூனு முதலிய இடங்களில் பிளேக் ரிலீப் கமிட்டிகளே ஏற்படுத்தியதனல், அனேக நூற்றுக்கணக்கான ஜனங்கள் பிளேக் நோயிலிருந்து தப்பித்திருக்கிறார்கள். சலும்பள் என்னுமிடத்தில் பயங்கரமான தீ-விபத்து நேரிட்டதனல், எண்ணிறந்த கஷ்ட

நஷ்ட மடைந்த ஜனங்களுக்கு ஐந்து வருஷமாக சகாயம் செய்திருக்கிறார்கள். 1907-08ம் வருஷம் ஐக்கிய மாகாணங்களில் உண்டான பஞ்சத்திலும், 1911-12-ம் வருஷம் குஜராத்திலும் கத்தியாவாரிலும் உண்டான பஞ்சத்திலும், 1913-ம் வருஷம் அகமது நகரில் உண்டான பஞ்சத்திலும், அதற்குப் பிறகு பல இடங்களில் உண்டான பஞ்சங்களிலும் நூற்றுக் கணக்கான ஜனங்களைக் காப்பாற்றி யிருக்கிறார்கள்.

### கல்வி யபிவிருத்தி.

ஜனங்களுக்கு எலிமெண்டரி கல்வியைப்பற்றி நன்றாய் விளக்கிக் காட்டிப் பல எலிமெண்டரிப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுவதற்குக் காரணமாயிருந்திருக்கிறார்கள். பூனா சேவசாதன் முதலிய பல பெரிய பெண் பாடசாலைகளை வைத்து நடத்தி, அவற்றின் மூலமாய் ஆயிரக் கணக்கான பெண்களுக்குக் கல்வி கற்பித்துப் பெண் கல்வியை விருத்தி பண்ணி யிருக்கிறார்கள். பஞ்சமர்கள் முதலியவர்கள் படித்து முன்னுக்கு வரும்படி பல பாடசாலைகளை நடத்துகிறார்கள். கைத்தொழிற் கலாசாலைகளை யேற்படுத்தி யிருக்கிறார்கள். ஜனங்களுக்குள் தீய வாழ்க்கையைத் தடுக்கும் பொருட்டு ஹோவிகாச மேலான் முதலிய சபைகளை நடத்துகிறார்கள். ஜாதிமத பேதங்களை ஒழிக்கும்படி ஆசார சீர்திருத்தக் கான்பரன்சில் மும்முரமாக உழைத்து வருகிறார்கள்.

### ஆசார சீர்திருத்தம்.

பல இடங்களில் ஜனங்களுக்கு சுகாதார ஞானத்தைப் போதித்துக் குடி, முதலிய கேடுகளைத் தவிர்த்து, வியாதியஸ்தர்களைப் பராமரித்து பறைச்சேரி முதலிய இடங்களைச் சீர்திருத்தி இன்னும்பல நன்மைகளைச் செய்யும்படி Social Service League எனப்பட்ட ஜனசேவகச் சபைகளை நடத்துகிறார்கள். கும்பமேளா முதலிய பெரிய திருவிழாக்களிலும், மற்றக் கூட்டமான சமயங்களிலும், பொருள் சேதம் உயிர்ச் சேதங்களைத் தடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்கிறார்கள். இந்தியன் நாஷனல் காங்கிரஸிலும் கைத்தொழில் கான்பரன்ஸ் முதலிய கான்பரன்சுகளிலும், சேர்ந்து, தேச நன்மைக்காக மும்முரமாக உழைத்து வருகிறார்கள்.

### இதர வேலைகள்.

இனி சொந்தமாகப் பல பத்திரிகைகளை நடத்துவதாலும், பிரசங்கம் செய்வதாலும், பல பத்திரிகைகளுக்குப் பல காரியங்களைப்பற்றி அடிக்கடி எழுதுவதாலும், பொது ஜனங்களுக்குள் தேச காரியங்களைப் பற்றிய அறிவைப் பரவும்படி செய்து, அவர்களுக்கு தேச பக்தியைக் கிளப்பிப் பொதுஜன சமூகவாழ்க்கையைப் பலப்படுத்தி, இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்கும் நாளை நெருங்கப் பண்ணுவதற்குத் தங்களால் கூடியானவற்றையெல்லாம் சுறுசுறுப்பாகச் செய்து கொண்டு வருகிறார்கள். இவ்விடத்தில் காலஞ்சென்ற ஸ்ரீமான் கோகலேயும் இப்பொழுது சபைத் தலைவரா யிருக்கும் ஆனரபிள் மிஸ்டர் வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி அவர்களும், சட்ட சபைகளிலும், காங்கிரஸ் முதலிய சபைகளிலும், இந்தியாவுக்குச் செய்திருக்கும் அனந்த நன்மைகளைப் பற்றிச் சொல்லவேண்டியதில்லை.

பூனாவிலுள்ள தலைச் சபைக்கும், மற்ற கிளைச் சபைகளுக்கும் மாதம் சுமார் 1500 ரூபா செலவு பிடிக்கிறது. தேசாபிமானமுள்ள சில கனவான்கள் இப்பொழுது இச்சபையை ஆதரித்து வருகிறார்கள். உயர்தர வித்யாபட்டங்கள் பெற்றிருந்தும், சம்பாதத்தியத்தை நாடாமல், தேச நன்மைக்காகவே உழைக்கவேண்டுமென்ற ஒரே சிந்தையுடன், உடல், பொருள், ஆவி யாவற்றையும் தேசத்துக்கே தத்தம் செய்து

விட்டு, வேறொன்றையும் கவனியாமல் தேசமே வேதம், தேசமே சாஸ்திரம், தேசமே மோக்ஷம், தேசமே எல்லாம் என்று உறுதியாய் நின்று, இந்தியாவின் நன்மைக்காக உழைப்பதற்காக காலஞ் சென்ற ஸ்ரீமான் கோகலே ஸ்தாபித்த இந்த இராஜ சந்நியாசிகளின் சபை, நாளுக்குநாள் அதிகாதிகமாய் விருத்தியடைந்து, தழைத்து ஓங்கும்படி செய்து, ஆதரிக்கவேண்டியது பொது ஜனங்களைப் பொறுத்த கடமையாகும்.

# காங்கிரஸ் மகாசபை.

---

### பொது முயற்சியின் ஆரம்பம், 1832-ம் வருஷம்.

நாடுகள் செழிப்பதும், கல்வி கேள்விகள் உயர்வதும், கைத்தொழில் வியாபாரங்கள் விருத்தியடைவதும், பிரஜைகள் சுதந்திரம் பெறுவதுமான இம்மாதிரி வைபவங்கள் யாவும், அந் நாட்டிலுள்ள சங்கங்களின் ஊக்கத்தினாலும் ஆராய்ச்சியினாலுமே பிரகாசிக்கும். ஜனங்களின் ஒற்றுமைக்கும், பொது விஷய ஆராய்ச்சிக்கும், ஜனசாரச் சீர்திருத்தத்திற்கும், இச்சபைகளே முக்கிய காரணமாயிருக்கும். சபைகளின் நடமாட்டமும், சங்கங்களின் தொகுதியும், அப்போதைக்கப்போது கூடும் பொதுக் கூட்டங்களின் எழுச்சியுமே, ஜனங்களுக்கு தேசாபிமான முதலிய அருங் குணங்களைப் போதிக்கும். அமெரிக்கா பிரஜைகள் சுதந்திரம் பெற்றதும், பிரஞ்சுக்காரர் ஸ்வாதீனமடைந்ததும், ஆங்கிலேயர் இங்கிலாந்தில் ஸ்வராஜ்ஜியங் கொண்டதும், மேற்கூறியசபைகளினாலேயே. ஆகவே, இந்நாட்டிலும் சென்ற எண்பது வருடங்களாக சபைகளின் முயற்சிகள் ஆங்காங்கு நடந்துவந்திருக்கின்றன. இனிவரக்கூடிய சுய அரசாட்சி முதலான ஸ்வதந்திரியத்திற்கும், இந்தியர் ஆங்கிலேயர்களின் பரஸ்பர ஒற்றுமைக்கும், இச் சங்கங்களே காரணமாகும். வங்காள வாசியாயும், சிறந்த தேசாபிமானியாயும், தமது தேச சகோதர சகோதரிகளின் கஷ்டத்தை நீக்க வந்தவராயும் இங்கிலாந்திற்குச் சென்று அங்குள்ள ஆங்கிலேயர்களுக்கு இந்தியர்களின் நிலைமையை, கசடறக்களைந்து கூறினவராயும், இந்தியாவில் உடன்கட்டையேறும் கொடிய வழக்கத்தைத்தொலைத்தவராயுமிருந்து காலஞ்சென்ற நமது ராஜாராம் மோகன ராய் என்பவரே முதல்முதல் 1832-ம் வருடத்தில் இந்தியாவின் பொது விஷய உணர்ச்சியென்னும் விதையை இந்தியர்கள் மனமென்னும் நிலத்தில் விதைத்தார்.

### பொது சபைகள் ஆரம்பம்.

இவ்விதை முதல் முதல் வங்காளத்தில் 1-சபையையும், பம்பாயில் 1-சபையையும் உண்டாக்கிற்று. 1851-ம் வருடத்தில், வங்காள பிரிட்டிஷ் இந்திய சங்கத்திற்கு, பிரசன்ன குமார டாகூர், டாக்டர் ராஜேந்திர லால் மித்ரா, மிஸ்டர் ராம்கோபால் கோஷ், ஹரிஷ்சந்திர முகர்ஜி, முதலான மணிகள் தோன்றி இரவும் பகலும் இடைவிடாது உழைக்க முன்வந்தனர். இதல்லாமல், பம்பாய் சங்கத்திற்கும், பம்பாய் கவர்னர் சட்டசபையில் மெம்பராயிருந்த மிஸ்டர்ஜகன்னாத சங்கரஸேட் என்பவரும், இப்பாரத மாதாவின் அன்பு வாய்ந்த புத்திர ரத்தினமும், இங்கிலாந்தில் இந்தியர்களின் விஷயமாகக் கல்வி முதலிய சுதந்திரங்களுக்குப் படாத பாடெல்லாம் பட்டவரும், தற்பொழுது பம்பாய்க்கடுத்த வர்ஸாலா என்னுமிடத்தில் வானப்பிரஸ்தன் போன்று வாழ்ந்துகொண்டு இந்நாட்டின் பொது விஷயங்களைக் கவனிப்பவரும், அப்போதைக்கப்போது பொது நலத்தை நாடியிருக்கும் தேசாபிமானிகளுக்குப் புத்திபுகட்டியும், சதா சர்வகாலம் இந்தியாவின் க்ஷேமத்திலேயே யீடுபட்டவராயும், அரும் பெருங் கிழவராயுமுள்ள தாதாபாய் நௌரோஜியும், உழைக்க முன் வந்தார்கள். சென்னையிலும், தற்காலமிருக்கும் ஹிந்து பத்திரிகையை ஸ்தாபித்த, பொதுஜன விஷயங்களில் உழைக்க முன் வந்த முச்சுடர்களான வீரராகவாசாரியரும், ரங்கய்ய நாயுடு

வும், ஜி. சுப்பிரமணிய ஐயரும் தோன்றினார்கள். புனா நகரிலும், ராவ் பகதூர் கிருஷ்ணாஜி லக்ஷ்மண் நல்கார், மிஸ்டர் சீதாராம் ஹரி சிப்லோன்கார் முதலிய பிரமுகர்கள் ஸர்வஜனசபையொன்றை ஸ்தாபித்தார்கள்.

### இங்கிலாந்தில் இந்தியப் பொது முயற்சி.

சிற்சு, 1847-ம் வருடந் தொடங்கி இங்கிலாந்திலுள்ள அநேக ஆங்கிலேயர்கள் இந்திய விஷயங்களைக் கவனிக்கலானார்கள். மேடைப்பிரசங்கத்தில் இணையற்றவரும், பத்திரிகைகளுக்கு விஷயதானங்கள் செய்வதில் தேர்ச்சியுள்ளவரும், வாதத்தில் எவருக்கும் பிடிகொடாத புத்தி சூட்சுமமுள்ளவரும், நல்லமனமுள்ளவருமான ஜான் ப்ரைட் என்பவர் பார்லிமெண்ட் சபையில் மெம்பராகி இந்திய விஷயங்களைக் கவனிக்கலானார். எட்மண்ட்பர்க் காலந்தொட்டே இந்தியாவைப்பற்றி, ஜான்ப்ரைட், கிளாட்ஸ்டன், ஹென்ரி பாஸெட், ஹெர்பர்ட் பால், சார்லஸ் ப்ராட்லா, முதலானவர்கள் இங்கிலாந்திலுள்ள பார்லிமெண்ட் சபையில் அப்போதைக்கப்போது பேசிவந்ததினால், இந்தியர்களுக்கு ஒரு பிடிப்பு உண்டாயிற்று. இத்துடன் இந்தியாவில் பெருத்த சர்க்கார் உத்தியோகத்திலிருந்த ஆங்கிலேயர்களான, காங்கிரஸ் பிதாவான ஏ. ஒ ஹ்யூம், இந்தியர்களுக்கு இருகைபோன்ற ஸர் ஹென்றி காடன் ஸர் வில்லியம் வெடர்பர்ன் ஆகிய, இவர்கள் இந்தியர்களுக்கு அதிக உற்சாகத்தை யூட்டினார்கள். 1857-ம் வருடத்தில் உண்டான சிப்பாய்க் கலகத்தின் போக்கினால், எடாவா என்னும் ஊரில் கஷ்டப் பட்டிருந்த ஜனங்களுக்கு இனிய வார்த்தைகூறி உபசரித்த ஹ்யூம் துரையும், பம்பாய் ஜனங்களுக்கு ஹிதத்தை நாடிவந்த ஸர்ஹென்றி வெடர்பர்ன் துரையும், வங்க வாசிகளுக்கு உற்சாகத்தைக் கொடுத்த காடன் துரையுமே, காங்கிரஸ் மகாசபைக்கு ஆங்கிலேயர்களுக்குள் மூலாதாரமாக இருந்தனர்.

### பத்திரிகைகளின் பெருக்கு.

இச்சபைகளின் போக்கு இவ்வாறிருந்ததினால், இந்தியாவில் பத்திரிகைகள் முன்வந்தன. சுதேச பாஷைகளில் பிரசுரித்து வந்த பத்திரிகைகளைப் படிப்பவர்களில் அநேகர், வீதிகள்தோறும் கூட்டங்கூடி பாமரர்களுக்குப் பொது விஷயங்களைச் சொல்லிக் கொண்டிருந்தனர். தோட்டி முதல் தொண்டமான் ஈறாகவுள்ள சகலரும் பத்திரிகை படிப்பதில் மிக்க ஆவல் கொண்டவரானார்கள். இது காரணம் கொண்டே, 1875-ம் வருடத்தில் 478 பத்திரிகைகளிருந்தன. பத்திரிகைகள் வரவர விருத்தியாயின. பத்திரிகைகளில் சிறுபான்மை, ஆங்கிலேயர்களால் நடத்தப்பட்டமையால், இவ்வாங்கிலேய பத்திரிகைகள் சுதேசபத்திரிகைகளின் எழுச்சியைக் கண்டு மனம் பொறாது, கண்டனஞ்செய்யவே, 1878-ம் வருடத்தில் இராஜப்பிரதிநிதியாயிருந்த லார்ட் லிட்டன் சுதேச பாஷைகளிலிருந்த பத்திரிகைகளின் வாயைப் பூட்ட முன்வந்து ஒரு சட்டத்தைப் பிறப்பித்தார். லார்ட் ரிப்பன் காலத்தில் அச் சட்டமானது ஒருவாறு எடுக்கப்பட்டபோதிலும், சுதேச பாஷையின் வாயிலாகத் தோன்றின பத்திரிகைகள் அனைத்தும் பெருத்த கஷ்டத்தைக் கொண்டு இன்னமும் இருக்கின்றன. பத்திரிகைகளுக்குரிய சுதந்திரமில்லாமையும், இந்தியாவின் செலவினால் துருக்கி சுல்தானுக்கு விருந்தளித்த லார்ட் ஸாலிஸ்பரியின் பிசகான காரியமும், இந்திய விஷயங்களைக் கவனிக்க முன்வந்த பாஸெட்டின் விசாரணையும், இங்கிலாந்திலுள்ள ஆங்கிலேய வியாபாரிகளின் க்ஷேமத்திற்காக இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்குவரும் பருத்தி சாமான்களுக்குச் சுங்கமின்றி ஏற்பாடு செய்த லார்ட் லிட்டனின் தப்புச் செயல்களும், அபிஸீனியன் யுத்தம் முதலான யுத்தங்களில் தலையிட்டிருந்த இங்கிலாந்திற்கு இந்தியாவின் பணத்தைக் காரணமின்றிச் செலவு

செய்ய வந்ததும், இவ்விஷயங்களெல்லாம் படித்தறிந்த இந்தியர்கள் மனதில் பொது முயற்சிகள் செய்ய வேண்டுவதின் அவசியத்தையும், அவசரத்தையும் காட்டியதுபற்றி இந்திய காங்கிரஸ் சபையின் ஸ்தாபனத்திற்கு அவைகள் ஆஸ்பதமாய்விட்டன. அப்போது பொதுவாழ்க்கையை மிகவும் சிந்தித்துப் பாராட்டிவந்த நம்மவர்கள் சென்னை, பம்பாய், வங்காளம் முதலிய மாகாணங்களில் சபை யொன்று ஸ்தாபித்தார்கள். வங்காளத்தில் ஸர் ஜோதீந்திர மோஹன் டாகூர் என்பவரால், நாஷனல் லீக் ஒன்றும், சென்னையில் ஜீ. சுப்பிரமணிய ஐயரால் சென்னை மகாஜன சபை யொன்றும், பம்பாயில் இதுபோன்ற சபை யொன்றும் ஸ்தாபிக்கப்பட்டன. சென்னையில் ஸ்தாபிக்கப்பட்ட மகாஜன சபைக்கு மூலாதாரமாக "ஹிந்து" பத்திரிகையும் "சுதேசமித்திரன்" என்னும் தமிழ் பத்திரிகையும் ஸ்தாபிக்கப்பட்டிருந்தன. காலஞ்சென்ற பட்ருடீன் டியாப்ஜி, மேடா, டிவாஸ், உமேஷ்சந்திர பானர்ஜி, ஆநந்த மோகன்போஸ், அநந்தாச்சார்லு முதலானோர் தோன்றினர்.

**காங்கிரஸ் மகாசபையின் உதயம்.**

பொது விஷயங்கள் ஏற்படவும் அதைக் குறித்துப் பேசுபவர்கள் தோன்றி, பொதுஜன ஊழியத்திற்குமுன் வரவும் ஏற்பட்ட இந்நாட்டின் 30-கோடி ஜனங்களுக்கும் பொதுவாக ஒரு சபையிருக்கவேண்டுமென்னும் உணர்ச்சி யுண்டாகவே, இந்திய நாஷனல் காங்கிரஸ் மகாசபை என்னும் பெயர் கொண்ட ஒருசபையை அலன் ஆக்டே வியன்ஹியூம் என்பவர் முதல் முதல் ஸ்தாபித்தார். இவர், இங்கிலாந்திற்குச் சென்று லார்ட் ரிப்பன், ஜான்ப்ரைட், ரீட், முதலானவர்களுடன் காங்கிரஸ் விஷயமாகக் கலந்துபேசி, அவர்களின் அபிப்பிராயத்தையும் அங்கீகாரத்தையும் பெற்று, பஞ்சத்திலடிபட்டவனுக்குப் பாயசம் அகப்பட்டது போல், இந்தியர்களுக்கு வாக்குறுதி கொடுத்து காங்கிரஸ் சபையை ஸ்தாபித்தார். 1883-ம் வருடத்தில் நாஷனல் கான்பரன்ஸ் என்னும் ஒரு கூட்டம் புறவில் கூடிற்று. புறு கூட்டத்தில் வங்காளத்திலிருந்தும், சென்னையிலிருந்தும் அநேகர் வந்திருந்தனர். காங்கிரஸ் சபைக்காக சுரேந்திரநாத் பானர்ஜி, ஆநந்த மோகன்போஸ் இவ்விருவரும் நாட்டின் பல பாகங்களுக்குச் சென்று, சபையின் நோக்கங்களைப்பற்றி அரிய பெரிய பிரசங்கங்களால் தெரியப்படுத்திவந்தார்கள். ஆகவே, சிறிய சிறிய பிரயாசைகள் ஒன்றாய்த்து இரண்டு பெரிய உருவாகி, 1885-ம் வருடத்தில், பம்பாய் நகரில் உமேஷ் சந்திர பானர்ஜியின் அக்கிராசனாதிபத்தியத்தின்கீழ் முதல் காங்கிரஸ் சபை நடந்தது.

**முதல் காங்கிரஸ் சபை கூடியது.**

இச் சபைக்கு அநேக ஆங்கிலேயர்களும், பெருத்தஇந்திய உத்தியோகஸ்தர்களும் வந்திருந்தார்கள். இக்காங்கிரஸ் சபையில் முதல் தீர்மானத்தை முதல் பிரசங்கம் செய்து விவரத்தவர் நமது மித்திரனின் ஸ்தாபகராகிய ஸ்ரீமான் ஜி. சுப்பிரமணியயரே. அம்முதல் சபையில் இந்தியர்களுக்குச் சுதந்திரமளிக்க வேண்டுமென்றும், இன்னுமிதர பெரிய விஷயங்களில் சரியான பொறுப்பு இந்தியர்களுக்கிருக்க வேண்டுமென்றும் பிரேரேபிக்கப்பட்டன. இத்துடன் இந்தியாவின் விஷயங்களை இங்கிலாந்திலுள்ள ஜனங்களுக்கும் அதிகாரிகளுக்கும் தெரியப்படுத்த ஒவ்வொரு மாகாணங்களிலிருந்து ஒவ்வொருபிரதிநிதிகளைக் கூட்டி இங்கிலாந்துக்கு அனுப்பவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. இம்மாதிரியாக 1900-ம் வருடம்வரை நடந்துவந்தது.

1905-ம் வருடத்திய வங்காளப் பிரிவினையினாலும், காங்கிரஸ் பிரரேபணைகள்சரிவரஈடேறாமையினாலும், 1906ம் வருடம் கல்கத்தாவில் தாதாபாய் நௌரோஜியின் அக்கிராசனத்தின்கீழ் நடந்த காங்கிரஸ் சபையில் தீர்மானிக்கப்

பட்ட சுதேசியம், சுராஜ்யம், சுதேச கல்வி முதலிய விஷயங்களை, 1907-ம் வருடத்தில் நடந்த சூரத் காங்கிரஸில் விஸ்தரிக்கும் விஷயத்தில் அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டு காங்கிரஸில் கக்ஷிகள் ஏற்பட்டு சில கல்விகளாயிற்று. ஆதலின், இற்சில புதிய நிபந்தனைகள் ஏற்படுத்தி காங்கிரஸ் நடத்திவரப்பட்டது. ஆனால் சென்ற 1915-ம் வருஷம் பம்பாயில் கூடின காங்கிரஸில் இந் நிபந்தனைகளில் சில மாறுதல்கள் செய்யப்பட்டு அவைகளை இருகக்ஷியாரும் ஒப்புக்கொண்டு காங்கிரஸ் முயற்சிகள் ஒத்துமையாய் ஒரு மனதாய் நடக்கக் கூடிய இயல்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

## காங்கிரஸின் கொள்கைகளும் விதிகளும்.

பொதுவாக நோக்கம் மாத்திரம் இருகட்சிக்காரர்களுக்கும் ஒன்றாகவேயிருக்கின்றது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலிருக்கும் கானடா, ஆஸ்திரேலியா போன்ற குடியரசு நாடுகள் அனுபவிக்கும் சுதந்திரத்தையும், சுய ஆட்சியையும் இந்தியாவும் அனுபவிக்க அடைய வேண்டுமென்றும், இதை யடைவதற்குச் சாதனங்களான, கைத்தொழில் விருத்தி, கல்வி உயர்ச்சி, பொதுவிஷய ஆராய்ச்சி முதலிய சகல உபாயங்களைக் கொண்டு சாதிக்க வேண்டுமென்பதே காங்கிரஸின் முக்கிய நோக்கம். ஆகவே இந் நோக்கத்தை இருகட்சியாரும் அங்கீகரிக்கின்றனர். 1906-ம் வருஷத்தில் அலகாபாத்தில் நடந்த, ஒப்பந்தத்தின்படி காங்கிரஸ் சபைக்கு பிரதிநிதியாகவரும் ஒவ்வொருவரும், காங்கிரஸின் புதிய கோட்பாடுகளின்படி, நடப்பதாக சம்மதப் பதிவு செய்யவேண்டும். பொதுவாக 21-வயதிற்குமேற்பட்ட ஒவ்வொரு இந்தியனும் காங்கிரஸ் சபைக்குப் பிரதிநிதியாக வரலாம். காங்கிரஸ் சபையின், உபசபைகளான மாகாணச் சபைகளினின்றும் ஜில்லா சங்கங்களினின்றும் தெரிந்தெடுக்கப்படும் ஒவ்வொரு பிரதிநிதியும் 10 ரூபாய் கட்டணம் செலுத்தி காங்கிரஸ் மெம்பர்களாகக் கூடும். காங்கிரஸானது ஒவ்வொரு வருடமும் டிசம்பர் மாதக் கடைசியில் வரும் கிறிஸ்ட்மஸ் பண்டிகை காலங்களில் முன்னதாகவே ஏற்பாடு செய்திருக்கும் பட்டணத்தில் நடத்தப்படும். இக் காங்கிரஸ் சபைக்கு எல்லா இந்தியா காங்கிரஸ் கமிட்டியொன்றுண்டு. காங்கிரஸ் கமிட்டியாரால் தீர்மானத்திற்கு வராமலிருக்கும் சில ஏற்பாடுகளைத் தீர்மானிக்க சர்வ இந்தியா காங்கிரஸ் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. மாகாண காங்கிரஸ் கமிட்டியாரின் வேண்டுகோளுக்கிணங்கியோ அல்லது சுயமாகவோ, எல்லா இந்திய காங்கிரஸ் கூட்டமொன்று கூடும். இவர்களுடைய தீர்மானமே முடிவானது.

## கிளைச்சபைகள்.

இந்தியன் நாஷனல் காங்கிரஸுக்கு அநேகபிரிவுசபைகளுமுண்டு. அவை:- (1) காங்கிரஸ் மகா சபை (2) மாகாண காங்கிரஸ் கமிட்டி (3) ஜில்லா காங்கிரஸ் கமிட்டி (4) ஜில்லா காங்கிரஸ் கமிட்டியைச் சேர்ந்த தாலுக்கா காங்கிரஸ் கமிட்டிகள். (5) மாகாண காங்கிரஸ் கமிட்டிகளால் அங்கீகரிக்கப்பட்டிருக்கும் பொதுச் சங்கங்கள் (6) சர்வ இந்தியா காங்கிரஸ் கமிட்டி (7) காங்கிரஸின் பிரிட்டிஷ் கமிட்டி (8) காங்கிரஸ் நடக்கும் வருஷத்தில் அங்கங்கே நடைபெறும், ஜில்லா கான்பரன்ஸ் மாகாண கான்பரன்ஸ் முதலியனவே. மாகாண காங்கிரஸ் கமிட்டியைச் சேர்ந்த ஒவ்வொரு மெம்பரும் வருடமொன்றுக்கு 5 ரூபா கட்டணம் செலுத்தவேண்டும். மாகாண காங்கிரஸ் கமிட்டியைச் சேர்ந்த ஜில்லா காங்கிரஸ் கமிட்டியைச் சேர்ந்த ஒவ்வொரு மெம்பரும் வருடமொன்றுக்கு 1 ரூபா கட்டணம் செலுத்த வேண்டும். ஒவ்வொரு மாகாண காங்கிரஸ் கமிட்டியும் தனித்தனி நிபந்தனைகளைச் செய்யுக்

கூடும். எல்லா இந்தியா காங்கிரஸ்கமிட்டிக்கு 107 மெம்பர்கள் எல்லா மாகாணங்களிருந்தும் நியமிக்கப்படும். இதின் 5-ல் ஒரு பங்கு மகம்மதியர்களாகயிருக்கவேண்டும். இது தவிர, காங்கிரஸ் சபையின் அக்ராசனாதிபதிகளும் காரியதரிசிகளும், எல்லா இந்தியா காங்கிரஸ் கமிட்டிக்கு சாசுவத மெம்பர்களாவார்கள். நவம்பர் மாதம் 30-ந் தேதிக்குள்ளாக மாகாணப் பிரதிநிதிகளின் ஜாப்தா காங்கிரஸ் காரியதரிசிகளிடம் வரவேண்டும். இதல்லாமல் சப்ஜக்ட் கமிட்டி யென்னும் பெயரினையுடைய விஷய ஏற்பாடு கமிட்டி யொன்றுண்டு. காங்கிரஸ் சபைக்கு அக்கிராசனாதிபதியின் உத்தரவிற்கு மீறி ஒரு பிரதிநிதியும் நடக்கக் கூடாது.

குறித்த விஷயங்களைப் பேசுவதற்காகப் பிரத்யேகமாக ஏற்பட்டிருக்கும் பிரதிநிதிகள் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் கால நிர்ணயித்திற்கு மேற்பட்டு உபந்யசிக்கலாகாது.

### இதர மகா சபைகள்.

இந்த காங்கிரஸ் நடக்கும் காலத்தில், தொழில் கான்பரன்ஸ், ஜனசார சீர்திருத்த கான்பரன்ஸ், முதலிய கான்பரன்ஸுகள் நடக்கும். மகாசபையின் செலவு வருஷவாரியில் சுமார் 30000 ரூபாய் ஆகும். தனவந்தர்களின் பொருளுதவியினாலும், பொது விஷயங்களில் ஊக்கங் கொண்டிருக்கும் பிரபுக்களின் திரவிய சகாயத்தினாலும், மெம்பர்களின் கட்டணங்களினாலுமே காங்கிரஸ் செலவு நடந்து வருகிறது. இதல்லாமல் காங்கிரஸ் சபையைப் பார்க்கவரும் ஜனங்களின் டிக்கட்டு பணமும் இதைச் சேருகின்றது. வரவேற்பு கமிட்டியாரே இதின் வரவு செலவு கணக்குகளைப் பரிசோதிக்க அக்குள்ளவர்கள். இக் காங்கிரஸின் பிரதிவருட தீர்மானங்களால் அநேக நன்மைகள் உண்டாயின. இத்தகைய காங்கிரஸ் சபையானது 1885ம் வருடமுதல் நாளது பரியந்தம் நடந்து வருகின்றது. சென்ற வருடம் பம்பாயில் நடந்த காங்கிரஸின் தீர்மானத்தால் இவ்வருடம் லக்நௌவில் காங்கிரஸ் நடத்த தீர்மானிக்கப்பட்டது.

### காங்கிரஸின் நன்மைகள்.

ஆங்கிலக் கல்வியில் மிக்க பாண்டித்யமுள்ள,72 இந்தியர்கள், 1885-ம் வருடத்தில் பம்பாய் நகரில் முதல் முதல் கூடினார்களென்று நாம் கூறினோம். அடுத்த வருடத்தில் 412 இந்தியர்கள் கல்கத்தாவில் கூடினார்கள். அப்பால் 1887-ம் வருடத்தில் 607 இந்தியர்கள் சென்னையில் கூடினார்கள். 1895-ம் வருடத்தில் 1584 இந்தியர்கள் புனாவில் கூடினார்கள். 1906-ம் வருடத்தில் சுமார் 1200 இந்தியர்கள் கல்கத்தாவில் கூடினார்கள். 1915-ம் வருடத்தில் நடந்த பம்பாய் காங்கிரஸில் 2000 பேருக்குமேல் வந்தனர்.

இக்காங்கிரஸ் சபையானது கொஞ்சங் கொஞ்சமாக விருத்தியாகி வந்ததினால் நாட்டி லுள்ள பண்டித பாமரர்களனைவரும் நாட்டிற் குரிய பொது விஷயங்களைக் கவனிக்கலானார்கள். ஜாதிமத வேற்றுமையின்றி ஒரு மனத்தினராய் பொது விஷயங்களைக் கவனிக்க முன்வந்த நம்மவர் நாட்டில் நாலு பாகங்களுக்குச் சென்று ஒரு புதிய உணர்ச்சியை உண்டாக்கினார்கள். காங்கிரஸ் சபையைச் சேர்ந்தவர்களில் அநேகர், பெரிய வக்கீல்மார்களும், கனத்த தனவந்தர்களுமா யிருக்கின்றனர். கோவிந்த ரானடே; ரோமேஷ் சந்தரமித்தர், பட்ருதீன் டியாப்ஜி, ஜட்ஜ் சுப்பிரமணிய அய்யர் முதலானவர்கள் காங்கிரஸ் சபையை விருத்திக்குக் கொண்டுவந்தார்கள். இதல்லாமல் சுரேந்திர நாத் பானர்ஜியின் உழைப்பினாலும், மனமோகன் கோஷ் என்பவரின் முயற்சியினாலும், ஜி. சுப்பிரமணிய அய்யரின் ஊக்கத்தினாலும் காங்கிரஸ் சபையின் நடமாட்டம் தினே தினே அபிவிர்த்தி யடைந்து வந்தது. நிற்க, சிற்சில ஆங்கில பத்திரிகைகள், இந்திய நாஷனல் காங்கிரஸ் சபையானது

ஜீவனோபாயத்திற்குச் சரியான வழியில்லாத சிலர் பொழுதுபோக்கின் நிமித்தம் ஏற்படுத்தினதென்று கூறினர். காங்கிரஸ் சபையைச் சேர்ந்தவர்கள் இராஜ நிந்தனையுள்ளவர்களெனக் கூறும் ஆங்கிலேய பத்திரிகைகள் ஆரம்பம் முதற்கொண்டே அநேக மாறுபாடான எண்ணங்களை எழுதிக்கொண்டு வந்தன. இந்தியன் நாஷனல் காங்கிரஸ் சபையானது, இந்தியர்களின் க்ஷேமத்திற்கேற்பட்ட ஒரு பார்லிமெண்ட் என்பதாக, ஸர். வில்லியம் ஹண்டர், ஸர். சார்லஸ் டில்க் முதலான ஆங்கிலேய பிரபுக்கள் கூறினர். அக்காலத்தில் காங்கிரஸ் சபையில் நியாய இலாகாவையும் நிர்வாக இலாகாவையும் வெவ்வேறு பிரிக்க வேண்டுமென்றும், இந்திய சிற்றரசர்களின் பிள்ளைகளுக்கும் மற்றைய க்ஷத்திரிய வம்சத்தினர்களுக்கும் இராணுவ பாடசாலையொன்று ஸ்தாபிக்க வேண்டுமென்றும், இந்தியன் ஸிவில் ஸர்விஸ் முதலான பரீட்சைகள் இங்கிலாந்திலிருப்பதுடன், அதற்குச் சரியாக இந்தியாவிலும் அப்பரீட்சை நடத்த வேண்டுமென்றும், இராஜப் பிரதிநிதி சபையில் இந்தியர்களுக்கு அதிக ஸ்தானத்தையும் பொறுப்பையும் கொடுக்க வேண்டுமென்றும் தீர்மானங்களை முதல் முதலில் கொண்டுவரப்பட்டன. அப்பால், இந்தியப் பத்திரிகைகளுக்கு சுதந்திரம் கொடுக்க வேண்டுமென்றும் இந்திய ஆயுதச் சட்டத்தை ரத்துசெய்ய வேண்டுமென்றும், வரி முதலானவைகளைக் குறைக்க வேண்டுமென்றுந் தீர்மானங்கள் கொண்டுவரப்பட்டு, பிற்பாடு, சுதேசி, ஜாதீய கல்வி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின்கீழ் சுயஅரசாட்சி முதலிய தீர்மானங்களுங் கொண்டுவரப்பட்டன. இதல்லாமல், காங்கிரஸ் பிரதிநிதிகளை இங்கிலாந்துக்கு அனுப்பி, ஆங்கிலேயர்கள் முன்னிலையில் இந்தியர்களின் நிலைமையைப்பற்றி காலஞ்சென்ற கோகலே, லஜபதிராய், சுப்பிரமணி அய்யர் முதலானவர்கள் அரியபெரிய பிரசங்கங்கள் செய்தார்கள். ஆகவே காங்கிரஸ் சபையின் முயற்சியினால் அநேக நன்மைகள் இந்தியர்களுக்குண்டாயின என்பது கரதலாமலகம்போல் விளங்கும்

---

# எல்லா இந்தியா முஸ்லீம் லீக்.

"எல்லா இந்தியா முஸ்லீம் லீக்" எனப்பட்ட முஸ்லீம் சங்கம் 1906-ம் வருஷத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. அதற்கு முந்தி மகம்மதியர்களுக்குப் பொதுவான சபையில்லை. அவர்களுக்குள் பொது உணர்ச்சியும் கிடையாது.

**கல்விக் குறைவே காரணம்.**

இதற்குக் காரணம் கல்விக் குறைவேயாகும். அக்காலத்து முஸ்லிம் தலைவர்கள் தங்கள் வகுப்பாரின் படிப்பு அபிவிருத்தியைக் கருதி, கலாசாலைகளையும் பள்ளிக்கூடங்களையும் ஸ்தாபிப்பதில் கருத்தாயிருந்தார்களேயொழிய, சங்கங்களை யேற்படுத்துவதில் அப்பொழுது அவர்களுக்கு நோக்கமில்லை. இப்படி முஸ்லீம்களின் கல்வி விருத்திக்காகப் பாடுபட்ட தலைவர்களுக்குள் "ஸர். சையது அகமது" என்பவரைப் பிரதானமாகச் சொல்லலாம். இவரைப்போல் இந்திய முஸ்லீம்களின் கல்வி அபிவிருத்திக்காக வேறு எவரும்பாடுபடவில்லையென்பது திண்ணம். இந்தியாவில் முதன்மையான முஸ்லீம்கலாசாலையென்று பேர்பெற்றதும், இனிவரப்போகிற முஸ்லிம் சர்வகலாசாலையின் அஸ்திவாரமென்று பாவிக்கப்பட்டதும், ஆகிய அலிகார் காலேஜை ஆதியில் ஸ்தாபித்தவர் இவரே. இப்படிப்பட்ட புண்ணியவான்; இந்திய முஸ்லீம்கள் இந்திய ராஜீய விவகாரங்களில் தலையிடக்கூடாதென்றும், இந்தியன் நாஷனல் காங்கிரஸ் மகா சபையில் சேரக்கூடாதென்றும், தமது ஆயுசுபரியந்தம் வற்புறுத்திப் போதித்துக்கொண்டு வந்தது மிகவும் விசனிக்கத்தக்கது.

**காங்கிரஸுடன் சேரவில்லை.**

1885-ம் வருஷத்தில், இந்தியன் நாஷனல் காங்கிரஸ் ஸ்தாபிக்கப்பட்டபொழுது, மிஸ்டர் பத்ருடின்தியாப்ஜி, மிஸ்டர் ரகிம்துலா சயானி, முதலிய சில கனவான்களைத் தவிர, மற்ற மகம்மதியர்களெல்லோரும் அதில் சேராமல் தூர நின்றுவிட்டார்கள். இதற்குக் காரணங்கள் என்னவெனில் (1) முன் சொன்னதுபோல், இந்திய முஸ்லீம்கள் தேச விவகாரங்களைப்பற்றிக் கவனிக்கக்கூடாதென்றும், கல்வி அபிவிருத்தியிலேயே கவனமுழுவதும் செலுத்தவேண்டுமென்றும், ஸர். சையத் அகமது முதலிய தலைவர்கள் செய்துகொண்டுவந்த போதனை. (2) இந்துக்களோடு சேர்தல் மகம்மதியர்களுக்கு நன்மையல்லவென்றும், இந்துக்களுடைய நன்மை வேறு, மகமதியர்களுடைய நன்மை வேறு, என்றும் ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள் செய்துகொண்டுவந்த கலாபனை (3) கவர்ன்மெண்டாரே சிற்சில விஷயங்களில் "பிரித்து ஆள்" என்ற உபாயப்படிக்கு முஸ்லீம்களுக்கு விசேஷ நன்மைகளைச் செய்துவிடுவதாகச் சொல்லி விளைவித்த பிரிவினை. (4) இரு வகுப்பார்களுக்கும் படிப்பில்லாதவர்கள் சில இடங்களில் மத விஷயமாகச் செய்த கலகங்கள். இந் நான்கு காரணங்களினாலும், இந்திய முஸ்லிம்கள் நாஷனல் காங்கிரஸில் சேராமலும், தேச விவகாரங்களைப் பற்றிப் பேசுவதற்குச் சொந்தமாக ஒரு சபை ஏற்படுத்தாமலும், இருந்துவந்தார்கள்.

**படிப்பின் பயன்.**

ஆனால், எவ்வளவு காலத்துக்கு இந்திய முஸ்லீம்களைப் போன்ற ஒரு பெரிய வகுப்பார் தேச காரியங்களைக் கவனிக்காமல் பாராமுகமாயிருக்க முடியும்? அதற்கு முந்தி இந்துக்களுக்குள் படிப்பு அதிகரித்தபோது, ராஜீய விஷயங்களில் அவர்களுக்கு எப்படி

அக்கறை உண்டானதோ, அப்படியே மகம்மதியர்களுக்குள்ளும் கல்வி அதிகரிக்க அதிகரிக்க, ராஜீய காரியங்களில் கலக்கவேண்டுமென்றும், ராஜதந்திரத்தில் தேறவேண்டுமென்றும் இயற்கையாகவே ஆவலும் ஆசையும் உதித்து, நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு வந்தது. இதோடு, எங்கே இந்துக்கள் ராஜீய தந்திரத்தில் தங்களை முந்தி விடப்போகிறார்களோ வென்றபயமும், இராஜ்ஜிய பாரத்தில் இந்துக்களோடும் இதர வகுப்பினரோடும் சரிசமானமாய் பாகம் வகிக்க வேண்டுமென்ற கவலையும், கூடிக் கொண்டதென்பது நிச்சயம்.

**சட்டதிருத்தங்களினால் ஏற்பட்ட அவசியம்**

அச் சமயத்தில் 1892-ம் வருடத்தின் சட்ட சபைகளின் ஆக்டை சீர்திருத்தஞ் செய்ய வேண்டுமென்று பேச்சு உண்டாயிற்று. அந்த ஆக்டுப்படிக்கு இந்திய முஸ்லீம்களுக்கு ராஜப் பிரதிநிதியின் சட்ட சபையிலாவது, மாகாண சட்டசபைகளிலாவது, பிரத்தியேகமான எலெக்ஷன் கிடையாது. ஆகையால் அந்த ஆக்டை சீர்திருத்தம் செய்யுங் காலத்தில், பேசாமல் இருந்து விட்டால், மறுபடியும் பிரத்தியேக எலெக்ஷன்நடத்தும்சுதந்திரம் கிடைக்காமல் போய்விடுமென்றும், இதுசமயம் தவறினால் மறுசமயம் வாய்ப்பது அரிதென்றும், மகம்மதியர்கள்தெரிந்துகொண்டுபிரதிநிதிகள்மூலமாக இராஜப் பிரதிநிதியை அணுகி, தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள். ராஜப் பிரதிநிதியும் அவர்களுடைய அபிப்பிராயத்தை அங்கீகரித்துக் கொண்டு, அதிலிருந்து வைசிராயின் சட்ட சபையிலும், மாகாண சட்ட சபைகளிலும் பிரத்தியேகமான மெம்பர்களைத் தெரிந்துகொள்ளும் சுதந்தரம் மகம்மதியர்களுக்குக் கொடுக்கப்பட்டு, அதன்படியே எலெக்ஷன்கள் நடத்தப்பட்டும் வருகின்றன.

இச்சம்பவம் நடந்தேறிய பிறகு, இந்திய மகம்மதியர்கள் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தங்களுடைய அபிப்பிராயத்தைக் கவர்ன்மெண்டாருக்குத் தெரிவித்துக் கொள்ளவும், இடைவிடாமல் தங்கள் வகுப்பின் நன்மைக்காகப் பாடுபடவும், ஒரு சபை யெவ்வளவு அவசியமென்பதை முன்னிலும் விட நன்றாய்த் தெரிந்து கொண்டார்கள்.

**புதுமகம்மதியத் தலைவர்கள்.**

இப்படி முஸ்லீம் ஜனங்களுக்குள் பொதுவாகவே உணர்ச்சி யுண்டாகியிருக்கும்பொழுது, இந்துக்களுக்குள் எப்படி ராஜதந்திர நிபுணர்களான சில தலைவர்கள் தோன்றி இந்தியன் நாஷனல் காங்கிரஸ் மகா சபையை ஸ்தாபித்தார்களோ, அப்படியே மகம்மதியர்களுக்குள்ளும் ஸர் சையதி அகமது முதலிய பழைய தலைவர்கள் ஒழிந்து, தேச விவகார நிபுணர்களான மகமதலி, வஸிர்ஹஸன், முஸருல் ஹக், ஜின்னா, முதலிய புதியதலைவர்கள் கிளம்பி, எழுத்து மூலமாகவும் பேச்சு மூலமாகவும், பிரசங்க மூலமாகவும் தங்கள் வகுப்பாரை ஒன்று சேர்த்து, 1906-ம் வருடத்தில் எல்லா இந்தியா முஸ்லீம் சங்கத்தை ஸ்தாபித்தார்கள். அதிலிருந்து வருடா வருடம் முக்கியமான பட்டணங்களில் கூட்டம் நடத்தி, இந்திய மகம்மதியர்களின் அபிப்பிராயங்களை இந்தியா கவர்ன்மெண்டாருக்கும் பலமாக எடுத்துரைத்துக்கொண்டு வருகிறது. 1914-ம்வருஷத்தில் மாத்திரம் யுத்தத்தை முன்னிட்டுக் கூட்டம் நடத்தவில்லை. இந்திய மகம்மதியர்களுக்கு ராஜபக்தியைப் புகட்டவும், அவர்களுடைய சுதந்திரங்களைக் காத்துக்கொண்டு அவர்களுடைய நன்மைக்காக உழைக்கவும், அவர்களுக்கும் இந்துக்கள் முதலிய இதர வகுப்பினருக்கும் இடையில் ஐக்கியத்தை வளர்க்கவும், ஆகியஇந்த மூன்று நோக்கங்களுக்காகவுமே இர்

தியா முஸ்லீம் சங்கம் ஆதியில் ஸ்தாபிக்கப்பட்டது.

### சுய ராஜ்ய லக்ஷியம்.

இந்தியாவுக்கு சுயராஜ்யம் வேண்டுமென்று அது எடுத்தவுடனே கேட்கவில்லை. ஆனால் இந்தியன் நாஷனல் காங்கிரஸ் இந்தியாவுக்கு சுயராஜ்யம் வேண்டுமென்று கேட்கிறது. ஆகையால் எல்லா இந்தியா முஸ்லீம் லீக் இந்தியன் நாஷனல் காங்கிரஸுக்குப் போட்டியாகக் கிளம்பியிருக்கிறதென்றும், இந்துக்கள் தான் சுயராஜ்யம் கேட்கிறார்களென்றும், மகம்மதியர்கள் கேட்கவில்லையென்றும், ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள் குளற ஆரம்பித்தன. ஆனால் 1913-ம் வருடத்தில் எல்லா இந்தியா முஸ்லீம் சங்கம் லக்னௌ நகரத்தில் கூடி இந்தியாவுக்கு சுய ராஜ்யம் வேண்டுமென்பதே சங்கத்தின் நோக்கம் என்று தீர்மானித்து, இப்படிப் பேசுபவர்களின் வாயை அடக்கிவிட்டது என்பது சகலருமறிந்த விஷயம்.

### ஆங்கிலோ இந்தியர்களின் அறியாமை.

இந்துக்களோடு, ஒரே தேசத்தில் ஒரே ஆளுகையின்கீழ் ஒரே சட்டதிட்டங்களுக்கு உள்பட்டு இருக்கும் மகம்மதியர்கள், தேச விவகாரத் துறையில் இறங்கிய பிறகு இந்துக்களோடு ஒற்றுமையாய் உழைக்காமலிருந்துவிட முடியுமென்று சிலர் எதிர்பார்த்ததைப்போல் வேடிக்கை வேறில்லை. எந்தக் கல்வியால் அவர்கள் தங்கள் வகுப்பின் நன்மைக்காகப் பாடுபடவேண்டுமென்று முதலில் தெரிந்துகொண்டார்களோ, அக்கல்வியானது அவர்களுக்குள் அதிகரிக்க அதிகரிக்க, தேச முழுமைக்காகவும் உழைக்க வேண்டுமென்ற ஆசை அவர்களுக்கு இயற்கையாகவே உதிக்குமென்றும் அப்படிப்பட்ட ஆசை அவர்கள் மனதில் குடிகொண்ட பிறகு அவர்கள் கட்டாயம் இந்துக்களோடு ஒற்றுமையாய் உழைத்தே தீருவார்களென்றும் ஆங்கிலோ இந்தியர்கள் ஆதியிலேயே தெரிந்துகொள்ளாதது ஆச்சரியமே.

### இந்தியர்கள் ஒரே ஜாதியார்.

1913-ம் வருஷத்திலிருந்தா இந்துக்களுக்கும் மகம்மதியர்களுக்கும் இடையில் இந்தியா ஒரே தேசம், இந்தியர்கள் ஒரே ஜாதியென்ற உணர்ச்சி பலப்பட்டு இப்பொழுது ஸ்திரமாகி விட்டது. இப்பொழுது இருவகுப்பாரும் கைகோர்த்துக்கொண்டு இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்கவேண்டுமென்ற ஒரே முடிவுக்காக ஊக்கமாய் உழைத்து வருகிறார்கள். சொல்லப்போனால், 1915-ம் வருஷத்தின் இந்தியன் நாஷனல் காங்கிரஸ் கூட சுயராஜ்யம் வேண்டுமென்று அவ்வளவு வற்புறுத்தவில்லை. அதன் அக்கிராசனாதிபதியான ஸர் ஸத்தியேந்திர ஸின்ஹா இன்னும் நெடுங்காலத்துக்கு நமக்கு சுயராஜ்யம் கிடைக்காதென்று தாத்பரியப் பட்டாற்போலப் பேசினார். ஆனால் சர்வ இந்தியா முஸ்லீம் சங்கத்தின் அக்கிராசனாதிபதியான மிஸ்டர் முஸருல்ஹக் தமது பிரசங்கத்தில் இப்பொழுது நடக்கும் யுத்தம் முடிந்தவுடனே இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்கும்படியான ஏற்பாடுகளை உடனே செய்துவிட வேண்டுமென்று தெளிவாகக் கேட்டிருக்கிறார். இப்படியாக இந்திய முஸ்லீம்கள் சுயராஜ்யம் கேட்கவில்லையென்று சொன்னவர்கள், இந்துக்கள்கூட சுயராஜ்யம் வேண்டுமென்று அவ்வளவு பலமாய்க் கேட்கவில்லையே யென்று, இப்பொழுது சொல்லும்படியாயிற்று.

### ஓர் அத்தாட்சி.

இந்துக்களுக்கும் மகம்மதியர்களுக்கும் ஐக்கியம் இப்பொழுது எவ்வளவு பூரணமாகிவிட்டதென்றால், சமீபத்தில் பம்பாயில் காங்கிரஸும், முஸ்லீம் சங்கமும் ஏககாலத்தில் கூடியபோது, இருசபையாரும் இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்கும்படியாக என்ன ஏற்பாடுகளையும் சீர் திருத்தங்களையும்

கவர்ன்மெண்டார் செய்ய வேண்டுமென்று ஒன்றோடொன்று கலந்து ஆலோசித்து அறிவிக்கும்படி கமிட்டிகளை நியமித் திருக்கிறார்கள். இந்த இரண்டு கமிட்டிகளும் ஆலோசித்துத் தெரிவிக்கும் அபிப்பிராயம் இந்தியா முழுவதும் ஏகோபித்துத் தெரிவிக்கும் அபிப்பிராயமென்றும், ஆதலால் ஒருவரும் அதை நிராகரிக்க முடியாதென்றும், மிஸ்டர் முஸ்ருல் ஹக் தமது உபன்னியாசத்தில் கூறியிருப்பது முற்றிலும் உண்மையேயாகும். ஒரே மலையில் உற்பத்தியாகும் இரண்டு மகா நதிகள் சிறிது காலத்துக்கு ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து வெவ்வேறு திசைகளில் ஓடினாலும், முடிவில் எல்லா விக்கினங்களையும் மீறிக்கொண்டு ஒரே யிடத்தில் ஒன்றாய்க்கூடி, அதே கடலில் போய்க் கலப்பதைப்போலவே இந்தியன் நாஷனல் காங்கிரஸ், சர்வ இந்தியா முஸ்லீம் சங்கம் ஆகிய இரு கிளைகளும் சுராஜ்யம் எனனும் சமுத்திரத்தில் சங்கமமாகும் காலம் சமீபித்திருக்கிறதென்பதற்குச் சந்தேகமென்ன?

**கிளைகளும் தலைவர்களும்.**

எல்லா இந்தியா முஸ்லீம்சங்கத்தின் தலைஆபீஸ் லக்னௌ பட்டணத்தில் இருக்கிறது. வங்காளம், பம்பாய், சென்னை, பஞ்சாப், ஐக்கிய மாகாணங்கள், மத்தியமாகாணங்கள், பர்மா முதலிய மாகாணங்களில் கல்கத்தா, பம்பாய், பூனா, மதராஸ், லாகூர் முதலிய முக்கிய பட்டணங்களில் கிளைச் சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. சங்கம் ஸ்தாபிக்கப் பட்டதிலிருந்து 1913-ம் வருஷம் வரைக்கும் ஹிஸ் ஹைனஸ் ஆகாகான் அக்கிராசனாதிபதியாயிருந்தார். பிறகு அவர் ராஜிநாமா செய்துவிட்டார். இப்பொழுது மகமதாபாத் ராஜா அக்கிராசனாதிபதியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். சங்கத்தின் பொது காரியதரிசி மிஸ்டர் வசீர் ஹஸன்; மற்ற முக்கியமான தலைவர்கள் மிஸ்டர் மகமதலி, மிஸ்டர் முஸருல்ஹக், மிஸ்டர் ஜின்னா, ஸர் இப்ரகிம் ரகிம்துலா, ஸர் ஆதம் ஜீ பீர்பாய் முதலியவர்கள். துருக்கியில் அன்வர் பாக்ஷா, சுக்ரிபாக்ஷா, ஷவ்கத் பாக்ஷா, தலாத்பே முதலியவர்களுக்கு "வாலிப துருக்கியர்கள்" என்று பெயர் கொடுக்கப்பட்டிருப்பதைப் போலவே, இவர்களுக்கு இந்தியாவில் 'வாலிப மகம்மதியர்கள்' என்று பெயர் கொடுக்கப் பட்டிருக்கிறது. ஏனென்றால், பழைய தலைவர்களைப்போல் மெள்ள நடக்காமல், இவர்கள் சுறு சுறுப்பாய் வேலை செய்வதினாலேயாம். இன்னும் பழைய போக்கை அனுசரிக்கும் தலைவர்களுக்குள் ஹிஸ் ஹைனஸ் ஆகாகான், ஸர் பசுல்பாய் கரீம்பாய், ஆனரபில் மிஸ்டர் ஷாபி முதலியவர்களை முக்கியமாகச் சொல்லலாம். சர்வ இந்தியா முஸ்லீம் சங்கத்துக்கு லண்டனிலும் ஒரு கிளை இருக்கிறது. அதன் அக்கிராசனாதிபதி ரைட் ஆனரபில் ஸையத அமீர் ஆலி.

# காலஞ்சென்ற தேசாபிமானிகள்.

---

### ஸர். பெரோஸிஷா மேடா.

நிறைந்த செல்வமும், முதிர்ந்த கல்வியும், திருந்திய ஒழுக்கமும் வளர்ந்த தொழிலும் பொருந்திய பம்பாய் நகரில் 1845-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 4-ந் தேதி நல்ல உயர்குடியில் நமது பிரோஷஸ்ஷா மேர்வாஞ்சி மேடா பிறந்தார்.

### பார்ஸீ ஜாதியார்.

இஸ்லாம் மதஸ்தர்களின் உக்கிர கோட்பாடுகளுக்குப் பயந்து நம் நாட்டிற்கு1200 வருடங்களுக்கு முன்வந்த பாரஸீ வம்சத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவராவர். இப்பாரஸீ ஜாதியார் இந்நாட்டில் குறைந்த ஜனத்தொகையைக் கொண்டிருந்த போதிலும், செல்வத்திலும், கல்வியிலும் குணத்திலும், வியாபாரத்திலும், மிக்க மேன்மை பெற்றவர்கள். இவ்வம்சத்தைச் சேர்ந்தவர்களில், அநேகர் நாட்டின் நன்மைக்கும், ஜனங்களின் க்ஷேமத்திற்கும் இடை விடாது உழைக்கின்றனர். பிராம்ஜீ கொஹாஸ்ஜீ, தாதாபாய் நௌரோஜி, மேடா, வாசா, டாடா முதலான அரும்பெரும் மக்கள் அனவாதமும் ஜனங்களின் சுகத்திற்கே முயற்சித்து வருதல் காதலாமலகம் போல் விளங்கும்.

### இவரது கல்வி.

மேடாவின் தகப்பனர் பெருத்த வியாபாரியானதினல், தன் குமாரனைக் கல்வி கற்று வரும் நிமித்தம் இங்கிலாந்திற்கு அனுப்பினர். பாரஸீ குலத்தில் முதல் முதல் எம். ஏ. பரீட்சையில் தேறினவர் இவரே. ஸர் அலெக்ஸாண்டர் கிராண்ட் என்பவர் மேடாவின் நுண்ணிய புத்தியையும், திண்ணிய ஒழுக்கத்தையுங் கண்டு பாரிஸ்டர் பரீட்சைக்குப் படிக்க வற்புறுத்தினர். இப் பரீட்சைகளில் ஆங்கிலேயர்களைவிட அதிக முதன்மையைப் பெற்றவர்.

### இளம்பருவத்திலிருந்து பொதுஜன ஊழியம்.

சிறு பிராயந்தொட்டே பிரசங்கங்கள் செய்வதில் மிக்க ஆவல் கொண்டவர். இதுகாரணம் பற்றியே இவர் இணையற்ற மேடைப் பிரசங்கி யெனப் பெயர் பெற்றனர். இவர் இங்கிலாந்திலேயே டப்ளியூ. ஸி. பானர்ஜியுடன் சிநேகமானர். நமது அரும் பெருங் கிழவனரான தாதாபாய் நௌரோஜி, முதல் முதல் இங்கிலாந்தில் லண்டன் இந்தியசங்கமும், கிழக்கு இந்திய சபையும் ஸ்தாபித்த காலத்தில், மேடாவும் பானர்ஜியுமே அதிக மும்முரத்துடன் உழைத்தனர். இவர் இங்கிலாந்தில் இருக்குங் காலத்தில் பம்பாயிலுள்ள கல்வி முறையைப்பற்றிய வியாசமொன்று கிழக்கு இந்திய சபையில் படித்தார். இவர், இந்தியர்களுக்கு உயர்தரக்கல்வியை விசேஷமாகக் கொடுக்கவேண்டுமென்றும், இங்கிலாந்து முதலிய மேனுடுகளில் பரவிவரும் தாராளப்படிப்பு இந்தியாவிற்கு மிருக்கவேண்டுமென்றும், வற்புறுத்தினர். இன்னும் உயர்தரப் படிப்பை அவலம்பிப்பவர்கள் சிறிய தொகையாளர்களாயினும், இச்சிறிய தொகையாளர்களே பெருத்த தொகையாளர்களை முன் நடாத்தி அபிவிர்த்தி செய்கின்றனர் என்றும், சரித்திரங்களை ஆராயுங்கால் ஒவ்வொரு நாட்டிலும் உயர்ந்த கல்வி ஞானத்தைக் கொண்டிருக்கும் சிற்சிலர்களே அந்நாட்டின் விர்த்திக்குக் காரணமாயிருக்கின்றார்களே தவிர, மந்தை மந்தையாயிருக்கும் ஜனங்களாலில்லை யென்பது பிரத்யட்ச நிதர்சனமாக யிருக்கின்றனவென்றும் நமது

கவர்ன்மெண்டார் செய்ய வேண்டுமென்று ஒன்றோடொன்று கலந்து ஆலோசித்து அறிவிக்கும்படி கமிட்டிகளை நியமித்திருக்கிறார்கள். இந்த இரண்டு கமிட்டிகளும் ஆலோசித்துத் தெரிவிக்கும் அபிப்பிராயம் இந்தியா முழுவதும் ஏகோபித்துத் தெரிவிக்கும் அபிப்பிராயமென்றும், ஆதலால் ஒருவரும் அதை நிராகரிக்க முடியாதென்றும், மிஸ்டர் முஸ்ருல் ஹக் தமது உபன்னியாசத்தில் கூறியிருப்பது முற்றிலும் உண்மையேயாகும். ஒரே மலையில் உற்பத்தியாகும் இரண்டு மகா நதிகள் சிறிது காலத்துக்கு ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து வெவ்வேறு திசைகளில் ஓடினாலும், முடிவில் எல்லா விக்கினங்களையும் மீறிக்கொண்டு ஒரே யிடத்தில் ஒன்றாய்க்கூடி, அதே கடலில் போய்க் கலப்பதைப்போலவே இந்தியன் நாஷனல் காங்கிரஸ், சர்வ இந்தியா முஸ்லீம் சங்கம் ஆகிய இரு கிளைகளும் சுராஜ்யம் எனனும் சமுத்திரத்தில் சங்கமமாகும் காலம் சமீபித்திருக்கிறதென்பதற்குச் சந்தேகமென்ன?

### கிளைகளும் தலைவர்களும்.

எல்லா இந்தியா முஸ்லீம்சங்கத்தின் தலைஆபீஸ் லக்னௌ பட்டணத்தில் இருக்கிறது. வங்காளம், பம்பாய், சென்னை, பஞ்சாப், ஐக்கிய மாகாணங்கள், மத்தியமாகாணங்கள், பர்மா முதலிய மாகாணங்களில் கல்கத்தா, பம்பாய், பூனா, மதராஸ், லாகூர் முதலிய முக்கிய பட்டணங்களில் கிளைச் சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. சங்கம் ஸ்தாபிக்கப்பட்டதிலிருந்து 1913-ம் வருஷம் வரைக்கும் ஹிஸ் ஹைனஸ் ஆகாகான் அக்கிராசனாதிபதியாயிருந்தார். பிறகு அவர் ராஜிநாமா செய்துவிட்டார். இப்பொழுது மகமதாபாத் ராஜா அக்கிராசனாதிபதியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். சங்கத்தின் பொது காரியதரிசி மிஸ்டர் வசீர் ஹஸன்; மற்ற முக்கியமான தலைவர்கள் மிஸ்டர் மகமதலி, மிஸ்டர் முஸருல்ஹக், மிஸ்டர் ஜின்னா, ஸர் இப்ராகிம் ரகிம்துலா, ஸர் ஆதம் ஜீ பீர்பாய் முதலியவர்கள். துருக்கியில் அன்வர் பாஷா, சுக்ரி பாஷா, ஷவ்கத் பாஷா, தலாத்பே முதலியவர்களுக்கு "வாலிப துருக்கியர்கள்" என்று பெயர் கொடுக்கப்பட்டிருப்பதைப் போலவே, இவர்களுக்கு இந்தியாவில் 'வாலிப மகம்மதியர்கள்' என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், பழைய தலைவர்களைப்போல் மெள்ள நடக்காமல், இவர்கள் சுறுசுறுப்பாய் வேலை செய்வதினாலேயாம். இன்னும் பழைய போக்கை அனுசரிக்கும் தலைவர்களுக்குள் ஹிஸ் ஹைனஸ் ஆகாகான், ஸர் பசுல்பாய் கரீம்பாய், ஆனரபில் மிஸ்டர் ஷாவி முதலியவர்களை முக்கியமாகச் சொல்லலாம். சர்வ இந்தியா முஸ்லீம் சங்கத்துக்கு லண்டனிலும் ஒரு கிளை இருக்கிறது. அதன் அக்கிராசனாதிபதி ரைட் ஆனரபில் சையத் அமீர் ஆலி.

# காலஞ்சென்ற தேசாபிமானிகள்.

### ஸர். பெரோஸிஷா மேடா.

நிறைந்த செல்வமும், முதிர்ந்த கல்வியும், திருந்திய ஒழுக்கமும் வளர்ந்த தொழிலும் பொருந்திய பம்பாய் நகரில் 1845-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 4-ந் தேதி நல்ல உயர்குடியில் நமது பிரோஷஸ்ஷா மேர்வாஞ்சி மேடா பிறந்தார்.

### பார்ஸீ ஜாதியார்.

இஸ்லாம் மதஸ்தர்களின் உக்கிர கோட்பாடுகளுக்குப் பயந்து நம் நாட்டிற்கு 1200 வருடங்களுக்கு முன்வந்த பாரஸீ வம்சத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவராவர். இப்பாரஸீ ஜாதியார் இந்நாட்டில் குறைந்த ஜனத்தொகையைக் கொண்டிருந்த போதிலும், செல்வத்திலும், கல்வியிலும் குணத்திலும், வியாபாரத்திலும், மிக்க மேன்மை பெற்றவர்கள். இவ்வம்சத்தைச் சேர்ந்தவர்களில், அநேகர் நாட்டின் நன்மைக்கும், ஜனங்களின் க்ஷேமத்திற்கும் இடைவிடாது உழைக்கின்றனர். பிராம்ஜீ கொஹாஸ்ஜீ, தாதாபாய் நௌரோஜி, மேடா, வாசா, டாடா முதலான அரும்பெரும் மக்கள் அனவரதமும் ஜனங்களின் சுகத்திற்கே முயற்சித்து வருதல் காதலாமலகம் போல் விளங்கும்.

### இவரது கல்வி.

மேடாவின் தகப்பனார் பெருத்த வியாபாரியானதினால், தன் குமாரனைக் கல்வி கற்று வரும் நிமித்தம் இங்கிலாந்திற்கு அனுப்பினார். பாரஸீ குலத்தில் முதல் முதல் எம். ஏ. பரீட்சையில் தேறினவர் இவரே. ஸர் அலெக்ஸாண்டர் கிராண்ட் என்பவர் மேடாவின் நுண்ணிய புத்தியையும், திண்ணிய ஒழுக்கத்தையுங் கண்டு பாரிஸ்டர் பரீட்சைக்குப் படிக்க வற்புறுத்தினார். இப்பரீட்சைகளில் ஆங்கிலேயர்களைவிட அதிக முதன்மையைப் பெற்றவர்.

### இளம்பருவத்திலிருந்து பொதுஜன ஊழியம்.

சிறு பிராயந்தொட்டே பிரசங்கங்கள் செய்வதில் மிக்க ஆவல் கொண்டவர். இதுகாரணம் பற்றியே இவர் இணையற்ற மேடைப் பிரசங்கி யெனப் பெயர் பெற்றனர். இவர் இங்கிலாந்திலேயே டப்ளியூ. ஸி. பானர்ஜியுடன் சிநேகமானார். நமது அரும் பெருங் கிழவனரான தாதாபாய் நௌரோஜி, முதல் முதல் இங்கிலாந்தில் லண்டன் இந்தியசங்கமும், கிழக்கு இந்திய சபையும் ஸ்தாபித்த காலத்தில், மேடாவும் பானர்ஜியுமே அதிக ஊக்கத்துடன் உழைத்தனர். இவர் இங்கிலாந்தில் இருக்குங் காலத்தில் பம்பாயிலுள்ள கல்வி முறையைப்பற்றிய வியாசமொன்று கிழக்கு இந்திய சபையில் படித்தார். இவர், இந்தியர்களுக்கு உயர்தரக்கல்வியை விசேஷமாகக் கொடுக்கவேண்டுமென்றும், இங்கிலாந்து முதலிய மேனாடுகளில் பரவிவரும் தாராளப்படிப்பு இந்தியாவிற்கு மிருக்கவேண்டுமென்றும், வற்புறுத்தினர். இன்னும் உயர்தரப் படிப்பை அவலம்பிப்பவர்கள் சிறிய தொகையாளர்களாயினும், இச்சிறிய தொகையாளர்களே பெருத்த தொகையாளர்களை முன் நடாத்தி அபிவிர்த்தி செய்கின்றனர் என்றும், சரித்திரங்களை ஆராயுங்கால் ஒவ்வொரு நாட்டிலும் உயர்ந்த கல்வி ஞானத்தைக் கொண்டிருக்கும் சிற்சிலர்களே அந்நாட்டின் விர்த்திக்குக் காரணமாயிருக்கின்றார்களே தவிர, மந்தை மந்தையாயிருக்கும் ஜனங்களாவில்லை யென்பது பிரத்யட்ச நிதர்சனமாக யிருக்கின்றனவென்றும் நமது

மேடா, தான் எழுதிய வியாசத்தால் குறிப்பிட்டார்.

**கல்வி விஷயத்தில் கொண்ட ஊக்கம்.**

கவர்ன்மெண்டார் 1854-ம் வருடத்தில் அனுப்பின வேதனமுறையைக் கண்டனஞ் செய்ய வாரம்பித்தார். பள்ளிக்கூடங்களுக்கு வேதன மளிக்கும் முறை சரிவர இல்லையென்றும், அது இந்தியாவின் நிலைமைக் குற்றதல்லவென்றும், பலவாறு எடுத்துக் காட்டியுள்ளார். நாற்பது வருடத்திற்கு முன் மேடா கூறினமாதிரியே இன்றைக்கும்கல்வி விஷயத்தில் கவர்ன்மெண்டாரின் ஆதரவும் பொது ஜனங்களின் ஆதரவும் சரிவா இல்லாமல் பரிதாபகரமா யிருக்கின்றது. இத்தகைய நிலைமையிலிருப்பதினால் தான், தற்காலம் யூனிவர்ஸிடிகளினின்று வரும் பீ. ஏ. பட்டம் பெற்றவர்களுள் பலர் சரியான வழிகளில் தங்கள் மனதைச் செலுத்தாது, ஜீவனோபாயத்திற்காக மட்டும் சிற்சில உத்தியோகங்களைப் பெற்று, தங்கள் நாட்டின் நன்மையில் கவனக் குறைவுடனிருக் கிறார்கள். இது மட்டுமா! பீ. ஏ. பட்டம் பெற்றவர்களுக்குச் சரியான உத்தியோகம் கிடைக்காமலிருப்பின் அவர்கள் கவர்ன்மெண்டின்மேல் அதிருப்தி கொள்கிறார்கள். ஆகவே, இத்தகைய பரிதாபநிலைமைக்குக் கல்வி முறைமையே காரணம் என்று பலகாலும் நமது மேடா மொழிந்துள்ளார். 1892-ம் வருடத்தில், புனாவில் நடந்த பம்பாய் மாகாண கான்பரன்ஸில் அக்கிராசனம் வகித்த காலத்திலும், கல்வி முறையைப்பற்றி சாங்கோபாங்கமாகக் கூறினார்.

**அதிதீரமான குணம்.**

1877-ம் வருடத்தில், பம்பாய் கவர்னரவர்களின் அக்கிராசனாதிபத்தியத்தின் கீழ், பம்பாய் வாசிகளை முன்னிட்டு பம்பாய் நகர ரட்சணைக்காக ஆங்கிலேய வாலண்டியர்களை ஏற்படுத்த ஒரு கூட்டம் கூடிற்று. அதில், இந்தியர்கள் ஒருவருமின்றி ஐரோப்பியர்களை சேர்ப்பிக்கவேண்டுமென்றிருந்ததால், நமது மேடா, கவர்னரவர்களையும் பாராது, அப்பெருத்த கூட்டத்தில் முன்வந்து, இந்தியர்களை இராணுவத்தில் வாலண்டியர்களாகச் சேர்க்காத பட்சத்தில், பம்பாய் நகரவாசிகளை முன்னிட்டு கூட்டம் கூடாமலிருந்திருக்கவேண்டும் என்று பிரரேபித்தார். இப்பிரரேபணையை மிஸ்டர் டிலாங் ஆமோதித்தார். இத்தகைய தீர புருஷர் இவர். தனக்குச் சரியென்றேற்படுங் காரியத்தை எவ்வாற்றாலும் சாதிக்கும் வன் நெஞ்சமுடையவர். காரியஞ் சாதிப்பதில் வெகுபிடிவாதக்காரர். மக்களென்றும் சுற்றமென்றும், தன்னாட்டவரென்றும் பிறநாட்டவரென்றும், உத்தியோகஸ்தரென்றும் சாமானியனென்றும் பாராமல், ஒரே சீராயிருக்குந் தன்மையையுடையவர். இவரைப் பம்பாயில் "கிரீடமற்ற மன்னன்" என்று கூப்பிடுவது வழக்கம். தோட்டி முதல் தொண்டமான் ஈறாகவுள்ள சகல ஜனங்களும் இவரையறியாமலிரார். இவரைப் பம்பாயில் ஒரு தெய்வமாகக்கொண்டாடுவர்.

**பம்பாய் முனிசிபாலிடி.**

இங்ஙனம் இவர் இருந்ததினாலேயே இந்துக்கள், மகம்மதியர்கள், பார்ஸீகள் முதலிய அனைவரும் ஒரு மனத்தினராய் இவரை பம்பாய் முனிசிபாலிடி பிரஸிடெண்டாக நியமித்தார்கள். பம்பாய் முனிசிபாலிடியானது மேனாட்டு முனிசிபாலிடிகளைப் போன்றது. பொது ஜனங்களுக்குச் சிறந்த செல்வாக்கையும், பொறுப்பையும், சுதந்திரத்தையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. முனிசிபாலிடியைச் சேர்ந்த 72 மெம்பர்களில் 16 மெம்பர்களே கவர்ன்மெண்டாரால் நியமனம் பெற்றவர்கள். முனிசிபாலிடி விஷயத்தில் இவர் ஜனங்களின் சௌகர்யத்திற்கு கண்ணுங் கருத்துமா யிருந்ததினால் கவர்ன்மெண்டார் கொண்டுவரும் சிற்சில ஏற்பாடுகளைச் செய்யமுடியாமல் தடுத்துவிட்டார். நாடெங்கும் ஏற்பட்டிருக்

கும் ஒரு பொதுவான கால நிர்ணயம் பம்பாயில் மேடாவினலேயே உண்டானது. இதின் பொருட்டு ஆங்கிலேய மெம்பர்கள் பலவாறு போராடினும், மேடா அதை லட்சியஞ் செய்யாது, தான் பிடித்த தீர்மானத்தையே சாதித்தார். பம்பாய் நகர சீர்திருத்தத்தின் பொருட்டு க்ராபோர்ட் பிரபு ஒருவர் கஷ்டப்பட்டுக் கடைசியில் பொது ஜனங்கள் அவரைக் கண்டனஞ்செய்ய வாரம்பித்த காலத்தில், மேடா, அவரது எண்ணங்களைப் பொது ஜனங்களுக்கு எடுத்துக் காட்டி ஜனங்களைத் திருப்தி செய்தார். கமிஷனர்களுக்கு நிறைந்த அதிகாரத்தைக் கொடுக்க வேண்டுமென்று பர்டான்ஜீ என்பவர் முனிசிபாலிடி சபையில் பிரரேபிக்க முன்வந்ததை நமது மேடா, அத்தகைய அதிகாரம் அனர்த்தத்தை விளைவிக்குமென்று பற்பல உதாரணங்களைக் காட்டித்தான் புதிய ஏற்பாடொன்றைச் செய்தார். இவ்வேற்பாட்டைக் கவர்ன்மெண்டார் அங்கீகரித்து 1872-ம் வருடத்தில் முனிசிபாலிடி ஆக்ட் என்று கொண்டு வந்தனர்.

### சுதேச பத்திரிகைச் சட்டம்.

இத்தகைய ஈடும் எடுப்புங்கொண்ட மேடா நாளுக்கு நாள் ஜனங்களின் விஷயமாக பற்பல சீர்திருத்தங்களைச் செய்யலானர். முனிசிபாலிடி விஷயத்தில்தன் காலத்தை செலவு செய்துகொண்டிருந்த இவர், அத்துடன் நிற்காமல் நாட்டின் விஷயங்களையும் கவனித்து வருவார். இராஜப் பிரதிநிதியாயிருந்த லார்ட் லிட்டன், சுதேச பாஷையில் வெளிதோன்றும் பத்திரிகைகளின் ஆக்ட் ஒன்று கொண்டுவந்து, அப்பத்திரிகைகளைத் தலையெடுக்க வொட்டாமல் செய்த காலத்தில், மேடா பம்பாயில் பொது ஜனங்களை முன்னிட்டு அடிக்கடி கண்டனஞ் செய்து, அத்தகைய மசோதா நாட்டிற்கும் சர்க்காருக்கும் அதிக துன்பத்தைக் கொடுக்கும் என்று கோஷித்தார்.

### காங்கிரஸ் உழைப்பு.

இவர் இந்தியாவின் முன்னேற்றத்திற்கு ஆங்கிலேய கவர்ன்மெண்டே தேவையென்பதாகவும் ஆங்கிலேய கவர்ன்மெண்டில் இந்தியர்கள் சர்வ சுதந்தரங்களையு மடையக் கூடுமென்றும் நோக்கத்தைக் கொண்டவர். 1890-ம் வருஷத்தில் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸில் சபாநாயகராயிருந்த காலத்தில் மேற்கூறிய கருத்தையே வெளியிட்டனர். இவர் 1885-ம் வருட முதற்கொண்டே காங்கிரஸ் நடவடிக்கையில் தலையிட்டுக் கொண்டவர். காங்கிரஸ் விஷயங்களில் அதிக பொறுப்பைக் கொண்டவர். மிதவாதி கட்சிக்கு இவரும், தேசிய கட்சிக்கு திலகரும், பெரிய கம்பம் போன்றவர். காங்கிரஸ் விஷயத்தை சிற்சில ஆங்கில பத்திரிகைகள் தாறுமாருய்க் கூறின காலத்தில் மேடாவே அப்பத்திரிகைகளைக் கண்டித்து வாய்மூடச் செய்தவர்.

### சட்டசபை மெம்பர் ஸ்தானம்,

இவர் 1886-ம் வருடத்தில் லார்ட் ரீ என்பவரால் பம்பாய் சட்டசபைக்கு மெம்பராக நியமிக்கப்பட்டார். பம்பாய் சட்ட சபையில் கொண்டுவந்த அரசிறைசெலவு திட்டங்களைப்பற்றி மேடா வெகு சாதுர்யமாய் கண்டனஞ் செய்து, புதிய புதிய ஏற்பாடுகளை எடுத்துக் காட்டினது இன்றைக்கும் இந்திய ஆங்கிலேயர்களனைவரும் கொண்டாடத் தக்கதா யிருக்கின்றது. வருமான செலவு விஷயமாகப் பேசின உபந்யாசங்கள் மிகவும் அற்புதம், அற்புதம் எனக் கொண்டாடுகிறார்கள். நில வருமான மசோதா விஷயமாக பம்பாய் சட்ட சபையில் சபை நடந்தேறுங் காலத்தில் அதி தைரியத்துடன் சபையைவிட்டு எழுந்துவிட்டார். சர்க்கார் தரப்பிலுள்ள மெம்பர்களே சபையில் சர்வ அதிகாரமும், சுதந்திரமுங்கொண்டு ஜனப் பிரதிநிதி மெம்பர்களைக் கலக்காமல் ஏற்பாடு செய்யும் விதத்தைக் கண்ணுற்று, சபை

யில் தாம் மெம்பராயிருப்பது பிரயோஜனமல்லவென்றும் எண்ணங்கொண்டு கவர்னர் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களிருந்தும், அவர்களை சவனியாது சரேலென்று சபையைவிட்டுவெளிவந்தார். இவர் வரவே, இன்னும் கோகலே முதலிய இதர இந்திய மெம்பர்களும் வெளிவந்தனர். சர்க்கார் தரப்பு மெம்பர்களின் தயவிற்குப் பாத்திரமாகாமல், ஜனங்களின் நன்மையையே கருதி சுதந்திரத்துடன் சர்வ காரியங்களையுஞ் செய்யுஞ் சாமர்த்தியத்தைக் கொண்டவர்.

### இராஜப் பிரதிநிதி சபை மெம்பர்.

இவர் பம்பாய் சட்டசபையின் வாயிலாக ஜனங்களுக்குச் செய்த உபகாரத்தைக்கொண்டு, கவர்னர்ஜெனரல் சட்டசபையில் மெம்பராக தெரிந்தெடுக்கப்பட்டார். இவர் சபையில் அங்கத்தினராக வரும் நாள் தொடங்கியே, இந்திய மெம்பர்களுக்குத் தைரியமும் ஆங்கிலேய மெம்பர்களுக்குப் பயமும் உண்டாயின. சர்க்கார் மெம்பர்களின் தலைமையை சர்வ காலத்திலும் எதிர்பார்த்திருந்த சிற்சில இந்திய மெம்பர்கள், தைரியங்கொண்டு மேடாவைத் தங்கள் அதிபதியாகக் கொண்டனர். இராஜப்பிரதிநிதி கொண்டு வரும் மசோதாக்களையும், இன்னுஞ் சிற்சில ஆங்கிலேய மெம்பர்கள் கொண்டு வரும் தீர்மானங்களையும், நன்கு ஆராய்ந்து குற்றமுள்ளவைகளை வேரறக் களைந்து, குற்றமற்றதைச் சிரசாக வகித்து, இந்திய மெம்பர்களை முன்னிட்டு சட்டசபையில் தம் ஸ்தானத்தை வகித்துவந்தார்.

### ஒரு சம்பவம்.

தற்காலம் நமது இந்தியாவை ஆண்டுவரும் 5-வது ஜார்ஜ் மன்னர் இளவரசாயிருந்தகாலத்தில், இந்தியாவிற்கு விஜயஞ் செய்தபொழுது இளவரசருக்கு வரவேற்புப் பத்திரம் இராஜப் பிரதிநிதியே கொடுக்கவேண்டுமென்று கர்ஸன் பிரபு கொண்டுவந்த தீர்மானத்தை நமது மேடா கண்டனஞ்செய்து, இந்தியக் கரைக்கு இளவரசர் விஜயஞ் செய்யுங்காலத்தில் இந்திய ஜனங்களை வரவேற்புப் பத்திரம் கொடுக்க வேண்டுமேயல்லாது, கவர்ன்மெண்ட் பிரதிநிதிகள் கொடுக்கக் கூடாதென்று தீர்மானித்து, பின் மேடாவே இளவரசருக்கு இந்தியர்களை முன்னிட்டு பம்பாயில் முதல் முதல் வரவேற்புப் பத்திரம் கொடுத்தார். இவ்விஷயத்தில் கர்ஸன் பிரபுவுக்கும் மேடாவுக்கும் அநேக வாதங்களுண்டாயின. என்றாலும் கடைசியில் மேடாவே வெற்றி பெற்றார்.

### பலவகை ஊழியம்.

இவர் பம்பாய் சர்வகலா சபையிலும் அங்கத்தினராயிருந்து கல்வி விஷயமாக அநேக சீர்திருத்தங்களைக்கொண்டுவந்தார். ஆகவே, இவர், கல்வி, சுகாதாரம், பொது விஷயம், அரசிறை விஷயம், முதலிய சகல போக்குகளிலும் வெகு சிரத்தையுடன் உழைத்து வந்தார். இவர் சென்ற வருடம் இம்மண்ணுலகை விட்டு விண்ணுலகமேறினார். சிறந்த தேசாபிமானமும் பரந்த ஜனாபிமானமுங் கொண்ட மேடா வெகு திறமை வாய்ந்தவர். மேனாட்டு நாகரீகத்தில் ஈடுபட்டவர்.

இத்தகைய அருங்குணங் கொண்ட மேடா நமது பாரத மாதாவின் அருந்தவ புதல்வர்களில் ஒருவரல்லவோ?

# கோபால கிருஷ்ண கோகலே.

சென்ற வருடம் பிப்பிரவரி மாதம் 20-ந் தேதி காலையில் இம்மண்ணுலகை யொழித்து விண்ணுலகம் புகுந்த கோபாலகிருஷ்ண கோகலேயை யறியாதாருமுளரோ? இங்கிலாந்து, தென்னாப்பிரிக்கா முதலிய விடங்களிலுள்ள அந்நகரவாசிகளும் இம்மரணச் செய்தியைக் கேட்டு உடல் பதைக்க, உள்ளஞ்சோர, கண்ணீர் ஆறாய்ப் பெருக நின்றனரன்றோ! நமது ஜார்ஜ் மன்னர்முதல் நடைமெலிந்த நகரத்தார் ஈறாக, சகலரும் காலஞ்சென்ற நமது உத்தம தேசாபிமானியைச் சிறந்த குருமணியெனக் கொண்டிருந்தனர். நெற்றியில் தீட்டிய திலகம் போலும் பிரகாசித்த கோகலே, 1866ம் வருடத்தில் ரத்னகிரி ஜில்லாவிலுள்ள சிப்ளோன் தாலூக்காவில் மகாராஷ்டிர பிராமண மரபில் ஏழ்மையானதோர் குடியிற்பிறந்தார்.

*தந்தை மகற்காற்று நன்றி—யவையத்து முந்தியிருப்பச் செயல்.*

என்றபடி, தகப்பனார் கோகலேயைப் பள்ளிக்கு அனுப்பினார். பிள்ளையும் பிரவேச பரீட்சைமுதல் பி. ஏ. பரிட்சை வரை நன்றாகக் கல்வி கற்று வந்ததினால், சிலர் வக்கீலாகப் போகவும், சிலர் சீமைக்குச் சென்று கலெக்டர் பரீட்சைக்குப் போகவும், கேட்டுக்கொண்டனர். இவர் கணித சாஸ்திரத்தில் வல்லவரானதினால் இஞ்சினியர் வேலையில் புகவேண்டுமென்ற அவா இவரது மனதில் வெகுவாய்க் குடிகொண்டிருந்தது. நாம் எண்ணுவதெல்லாம் ஈடேறுகிறதா? நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைப்பதும் பிரத்யட்ச மல்லவோ? இந்திய நாடு ஏனைய நாடுகளைப்போல் அபிவிர்த்தியடைவதற்கும், இந்தியர்கள் பொது விஷயங்களில் ஊக்கங்கொண்டு பரோபகாரத்திற்குப் பாடு படவும், பகவான் நமது கோபால கிருஷ்ண கோகலேயை தேச சேவையின் பொருட்டு ஏனைய உத்தியோக வழிகளிற் புகவொட்டாமல் திருப்பினார். உலக சம்ரக்ஷணார்த்தம் பகவான் யுகந்தோறும் அவதரிப்பதுடன், தன் பரிஜனங்களையும் அவதரிக்கக் கட்டளையிடுவதினால், தமது பரிஜனங்களில் ஒருவரான கோபால கிருஷ்ண கோகலேயே இப்பாரத கண்டத்தின் க்ஷேமத்திற்காக அனுப்பினர் போலும்.

## கோகலே போதகாசிரியர்.

மகாராஷ்டியர்களுக்குக்கல்வியின் நிமித்தம், 1880-ம் வருடத்தில் ஏற்பட்ட புதிய இங்கிலீஷ் ஸ்கூல் ஜனங்களுக்குப் போதுமான கல்வி ஞானத்தைக் கொடுக்காததினால், மகாராஷ்டிர குல திலகங்களும் தேசாபிமானச் சிங்கங்களுமான பால கங்காதர திலகர், அகர்கார், விஷ்ணு சாஸ்திரி, சிப்ளோன்கார், முதலியவர்கள் புதிய கலாசாலையொன்றை ஸ்தாபித்தனர். இக் கலாசாலைக்கு, கெல்கர் ஆப்டே, நாம் ஜோஷி, முதலானவர்கள் போதகாசிரியர்களாக இருந்ததுபோலவே நமது கோகலேயும் போதகாசிரியராக இருக்க ஒப்புக்கொண்டு, ஆங்கிலம், கணிதம், சரித்திரம், சாஸ்திர முதலிய சகல விஷயங்களிலும் மாணவர்களுக்குக் கற்பித்து வந்தார். இவர் கல்வி விஷயத்தில் படர்ந்த ஞானமுள்ளவர். ஒவ்வொரு விஷயங்களிலும் தக்க அனுபோகமுள்ளவர். புதிய புதிய வஸ்துக்களைக் கற்றுக்கொள்ளவும், ஆராய்ச்சி செய்யவும், வெகு ஆவல் கொண்டவர். பசிதாக மென்பதையுங் கவனியாமல், ஒரே பிடிவாதமாய் ஒன்றைக் கற்றுக்கொள்ளுபவர். சோம்பலென்பது சிறிதுங் கிடையாது. சதா சுறுசுறுப்புடன் விளங்குவர்.

இவர் வியாச மெழுதுவதில் வெகு சமத்கார முள்ளவர். மகராஷ்டிர பாஷையிலும், ஆங்கிலேய பாஷையிலும் வெகு சாதுரியமாய் விஷயங்களை எழுதுஞ் சக்தியைக் கொண்டவர்.

### இவரது உபந்நியாசங்கள்.

இவர் மேடைப் பிரசங்கத்தில் பானர்ஜி, பால முதலானவர்களைப் போல் வசனமாரி பொழியுஞ் சக்தியைப் பெறாவிடினும், இவரது உபந்யாசங்கள் அழுத்தமும் திருத்தமுமாய், மனதிற்கு நன்கு ஒத்ததாய், தராசுபோல் ஒவ்வொரு வார்த்தைகளையும் எடையிட்டிருக்கும் தன்மையை யுடையன. மாணவர்களும், போதுமான கல்வி ஞானமற்ற சாமானியர்களும், எளிதில் அறியும்படியான எளிய நடையில் இனிய மொழியுடன் உபமான உபமேயங்களைக்காட்டி, அனுமான பிரத்யட்சங்களைக் கொண்டு பேசுஞ் சாமர்த்தியத்தை இவர் கொண்டிருந்தார். இவருடைய உபந்யாசங்கள் யாவும் வேதங்கள் போன்ற பிரமாண முள்ளவை. தன்னைப்போன்ற மேடைப் பிரசங்கி ஒருவருமில்லை யென்பதாக இறுமாந்திருந்த கர்ஸன்பிரபுவுக்கு கோகலேயின் உபந்யாசங்களைக் கேட்டது முதல், இவரிடத்தில் ஒரு வித பயமும், மரியாதையும் உண்டாயிற்று நாட்டின் வருமான விஷயங்களை வெகு சாமர்த்தியமாகச் செய்ததாக சந்தோஷங்கொண்டிருந்த கர்ஸன் பிரபுவுக்கு இராஜப் பிரதிநிதி சட்ட சபையில் கர்ஸனுக்கு முன்னிலையில் அவ்வருமான விஷயங்களின் ஏற்பாடனைத்தும் சரியல்ல வென்றும், ஒரு சார்புடைத்தென்றும், நாட்டிற்கு இத்தகைய ஏற்பாட்டினால் சௌகரியமொன்று மில்லையென்றும், இன்னமும் சரிவர சீர்திருந்த வில்லையென்றும், பற்பல முகாந்தரங்களை யெடுத்துக்காட்டி கர்ஸன் அவிவேகத்தைப் பிரத்யட்சப் படுத்தினர்.

நாட்டின் செல்வ விருத்தி விஷயங்களிலும், அரசிறை வழிகளிலும், செட்டு முதலிய போக்குகளிலும், இணையற்ற ஞானத்தைக் கொண்டவர். காலஞ்சென்ற மகாதேவ கோவிந்தரானடேயினிடம்மேற்கூறிய விஷயங்களைப் பரிசீலனை செய்து கொண்டார். நமது நாட்டின் செல்வ விருத்திக்குரிய விஷயங்களை யறிந்தவர்களில், இவரும், வாச்சாவுமே முதன்மையுள்ளவர். இவர் போதகாசிரியராக இருந்தகாலத்தில், மாணவர்களுக்கு அடிக்கடி செல்வ விருத்தியைப் பற்றியும், டாம்பீகமற்ற வாழ்க்கையைப்பற்றியும், அடிக்கடி பிரசங்கிப்பர். மாணவர்களிடத்தில் இவருக்கு வெகு பிரியம். மாணவர்களுக்கும் இவரிடத்தில் விசேஷ மரியாதை; இங்ஙனம் போதகாசிரியராகமட்டும் இராமல், பொது சபைகளுக்கும் கல்வி விஷயமாக போதிக்க வேண்டுமென்பதாக, 'சுதாக்' என்னும் பத்திரிகைக்கு ஆங்கிலேயபத்திராதிபராகயிருந்தனர். அகர்கார் மராதி பாஷையிலும், கோகலே இங்கிலீஷ் பாஷையிலும், பொது விஷயங்களை "சுதாக்" பத்திரிகையின் வாயிலாக பிரசுரித்து ஆங்கிலேயம் கற்றவர்களுக்கும், ஆங்கிலேயமறியாதமற்றவர்களுக்கும், பொது விஷயங்களைக் கற்பித்து வந்தார்கள்.

### இரண்டு கக்ஷிப் பிரிவு.

இவர்கள் நவீன சீர்திருத்தக்காரர்களுடைய சம்பிரதாயத்தை அவலம்பித்ததினால் திலகருக்கும் இவர்களுக்கும் மனஸ்தாப முண்டாயிற்று; என்றாலும் மகராஷ்டிர நாடு இரு கட்சிக்காரர்களாலும் விசேஷ அபிவிர்த்தியை அடைந்தது. புனாவிலுள்ள சர்வ ஜனைக்ய சபையில் அங்கத்தினராக இருந்த இவர்கள் கட்சியின் பலத்தினால் பிரியலானார்கள். சர்வ ஜனைக்ய சபையை விட்டவர்கள் தக்ஷிண சபை யொன்றை ஸ்தாபித்தார்கள். திலகர் கோஷ்டி சர்வ ஜனைக்ய சபையையும், கோகலே கோஷ்டி தக்ஷிண சபையையும், பற்றிக் கொண்டார்கள். நவீன சீர்திருத்தக்காரர்கள் சிலர் கோகலேயைக்

குருமணியாகவும், வைதீக தர்ம அனுஷ்டானிகளிற் பலர் திலகரைக் குருமணியாகவு மடைந்தனர். மகாராஷ்டிர நாட்டில் கோகலேயும் திலகரும் இராமகிருஷ்ணனைப்போல் பூசிக்கப்பட்டு வந்தார்கள். திலகரும் அகர்காரும் முதல் முதல் இராஜ நிந்தனைக்காக காராகிரக மடைந்து விடுதலையான தினத்தில், கோகலேயும் இன்னுஞ் சிலரும் இவர்களை முதல் முதல் ஆரவாரத்துடன் வரவழைத்தனர். ஸ்ரீமான் கோகலே தக்ஷிண சபைக்கு காரியதரிசியாக இருந்து, பொது ஜன விஷயங்களில் சிறந்த ஊக்கத்துடன் உழைக்கலானார்.

### வெல்பி கமிஷனில் சாக்ஷியம்.

1896-ம் வருடத்தில் ஏற்பட்ட வெல்பி கமிஷனில நமது கோகலே இந்தியாவின் கஷ்டங்களைப்பற்றி வெகு சாதுர்யமாய்ப் பேசினார். "பாருப் பஞ்சத்தினால் பீடிக்கப்பட்டிருக்கும் இந்நாடு தலையொன்றுக்கு 3-4-0 ரூபா வரி செலுத்துகின்றது; ஆனால் அவர்களின் வருட வருமப்படியோ சராசரி 33 ரூ; இத்தொகையில் உணவு, வீடு, வஸ்திரம், கல்வி சடங்குகள், முதலிய யாவும் ஆகவேண்டும்; ஐஸ்வரியத்தில் தத்தளிக்கும் இங்கிலாந்து அமெரிக்கா முதலிய நாடுகளும் இந்நாட்டைப்போல் அவ்வளவு வரி கொடுப்பதில்லை; என்ற அர்த்த சாஸ்திர விஷயமாக எடுத்துக் கூறின கோகலேயை வெல்பி கமிஷன் மெம்பர்கள் வெகுவாய்க் கொண்டாடினர். இவர் அர்த்த சாஸ்திரத்தில் வெகு நிபுணர். அரும்பெருங் கிழவனான தாதாபாய் நௌரோஜி போல் பிரத்யட்சமாக ஒவ்வொரு விஷயங்களையும் எடுத்துக் காட்டும் சக்தியைப் பெற்றவர்.

### சட்டசபை மெம்பர்.

இத்தகைய பொது விஷயங்களின் உழைப்பினால் இவர் பம்பாய் சட்டசபைக்கு மெம்பரானார். இவர் மெம்பரானது முதல் அச்சட்டசபைக்கு ஒரு திலகம்போல் விளங்கினார். இவரும் இவரது தோழரான மேடாவும் சட்டசபையைச் சீர்திருத்தினர். பொது ஜனங்களால் நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களெல்லாரும் இவ் விருவர்களுடைய திறமையினால் ஒரு மனத்தினராயினர். நிலவிஷயமாக புது ஏற்பாடொன்றைக் கொண்டு வந்த பம்பாய் கவர்ன்மெண்டாரை மேடா கோகலே யிவர்கள் எதிர்த்து வாதாடினார்கள். நாட்டின் க்ஷேமத்திற்குரிய சகல ஏற்பாடுகளையும் வெகு தைரியத்துடன் போராடும் திறமையைக் கொண்டிருந்தார். நமது மகான் கோகலே இராஜப்பிரதிநிதி சட்டசபையில் இவர் ஒருவரே நடுநாயகம் போல் விளங்கினார். யாவரையுந் துரும்புபோல் பார்க்குஞ் சுபாவத்தைக்கொண்ட கர்ஸன் பிரபு இவரிடத்தில் வெகு மரியாதையையும், பக்தியையுங் கொண்டிருந்தார். அரசிறை வருமான செலவு விஷயங்களில் இவருக்கும் கர்ஸனுக்கும் அடிக்கடி சண்டை யுண்டாவதுண்டு. கல்வி விஷயமாக இந்தியர்களுக்குச் செலவு செய்யுந்தொகை 1½-கோடி. 31½ கோடி ஜனங்களுக்கு 1½-கோடி ரூபாயைப் பங்கிட்டால் தலையொன்றுக்குச் சராசரி 0-0-9 ஆகிறதென்று அடிக்கடி சட்டசபையில் நமது கோகலே வற்புறுத்தியிருக்கிறார்.

### கட்டாயப் படிப்பு.

இராணுவச் செலவு முதலான செலவுகளைக் குறைத்து, நாட்டிற்குக் கட்டாயப் படிப்பு கொடுக்கவேண்டு மென்பதாக முதல் முதல் சட்டசபையில் இவரே பிரரித்தார். நாகரீகக்குறைவுடனிருந்த "பில்பேணியர்கள்" முதலான சாதியார்கள் இன்றைக்குக் கட்டாயப் படிப்பின் சம்பந்தத்தினால் நல்ல திறமை வாய்ந்தவர்களானொன்னும் உண்மையை யறிந்த கோகலே இந்திய நாட்டிற்கும் கட்டாயப்படிப்பு வேண்டுமென்று கவர்ன்மெண்டை யடிக்கடி வற்புறுத்தினர். இந்தியாவில் 100-க்கு 90-பேர் படியாதவர்களென்

பதை நினைக்கநினைக்க கோகலே மனம் உருகுவார். கல்வி பெருக்கத்திற்கு, இரவும் பகலும் இடைவிடாது, நித்திரையின்றி கஷ்டப்பட்டவர் இவர் ஒருவரே. செல்வ விருத்திக்கும், தொழில் விருத்திக்கும் அனவரதமும் பாடுபட்டவரு மிவரே.

### துணுதிசயங்கள்.

எவ்வுயிரையும் தன் உயிர்போலக் கருதி உபகாரஞ் செய்வார், பிறர்பேரில் நிந்தனையான வார்த்தைகளைத் தானும் பேசார். பிறர் பேசவும் இடங்கொடார். அவருடையஉள்ளமெப்படி நிர்மலமோ அப்படியே அவருடைய தேகமும் ஆடையும் எப்பொழுதும் பரிசுத்தமாயிருக்கும். அவரைப் பார்த்தாலும் பசிதீரும், கண்டாலும் கலி நீங்கும். இத்தகைய அருங்குணங் கொண்ட நமது மகான் கோகலே பெரிய ராஜரிஷி. இவர் காங்கிரஸ் சபையை நல்ல வழிக்குக் கொண்டு வந்தவர்களில் ஒருவராவார். 1905-ம் வருடத்தில் ஸ்ரீ காசியில் நடந்த காங்கிரஸுக்கு சபா நாயகராயிருந்து அற்புதமான உபந்யாசத்தைச் செய்தனர். இவர் மிதவாத கட்சியைச் சேர்ந்தவர். என்றாலும், இவரிடத்தில் மிதவாதி அமிதவாதிகளுக்கும் மிக்க மரியாதை.

### தேச ஊழியம் பலவகை.

இவர இங்கிலாந்திற்குச் சென்று இந்தியாவில் நடக்கும் குழப்பங்களைப் பற்றிஎடுத்துரைத்து அதற்குப் பரிகாரஞ்செய்ய இந்திய மந்திரியை வேண்டினார். இராஜப்பிரதிநிதி சட்ட சபையில் இராஜ நிந்தனை சம்பந்த மசோதாக்களை, கவர்ன்மெண்டார் ஏற்படுத்தின காலையில் அத்தகைய மசோதா நாட்டிற்கு அபாயத்தை விளைக்குமென்று கண்டனஞ் செய்து போராடினார். இதுவுந்தவிர, தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களை ஆப்பிரிக்கா தேசத்து ஐரோப்பியர்கள் கொடிய துன்பத்திற்கு ஆளாக்கினதினால், இந்தியர்களைத் தேற்றி ஆங்கிலேயர்களுக்குப் புத்தி புகட்ட கோகலே ஆப்பிரிக்காவிற்குச் சென்று ஒற்றுமையை நாட்டினார். இவர் இந்தியர்களின் விஷயமாக அடிக்கடி இங்கிலாந்துக்குப் போய்க் கொண்டிருந்தார். இரண்டு வருடத்திற்கு முன்னர் இந்தியாவில் நடந்த பப்ளிக் ஸர்விஸ் கமிஷனில் இந்தியாவின் விஷயமாக அநேக கேள்விகளைக் கொண்டுவந்தார். இவர் புனவிலுள்ள பர்கூஸன் கலாசாலையில் போதகாசிரியராக இருந்து மாதம் சொற்ப தொகையைப் பெற்றுக்கொண்டு 25 வருட காலம் வரை கல்வி விஷயமாக உழைத்தனர். இத்தகைய திறமை வாய்ந்த மேதாவியான கோகலே தேச நன்மையின் பொருட்டுப் பெரிய உத்தியோகங்களுக்குச் செல்லாமல், தனது காலட்சேபத்திற்குத் தேவையான திரவியத்தை மட்டும் பெற்றுக்கொண்டு திருப்தியைக் கொண்டிருந்தார். சிறந்த மந்திரி ஸ்தானத்தை யடையும் சக்தியைக்கொண்ட இவர் ஒரு சாமானிய போதகாசிரியராக இருந்து ஈடும் எடுப்பும் பெற்றனர்.

### நிகரற்ற தேசாபிமானம்.

இதுவன்றே ஒரு தேசாபிமானம். இத் தேசாபிமானம் நாடெங்கும் பரவ, தேச சேவையின் பொருட்டு இந்திய ஊழியச் சங்கமொன்று ஸ்தாபித்தார். நல்லகல்வி கேள்விகள் கொண்டவர்களே இச் சங்கத்திற் சேரலாம். மாதம் 30-ரூபாய் காலட்சேபத்திற்குக் கொடுக்கப்படும். இதில் தேசத்திற்கு உழைக்கக் கோரும் வாலிபர்கள் சர்வசங்க பரித்தியாகிகளாய், அதாவது ஆசையற்றவர்களா யிருக்கவேண்டும். இச் சங்கம் வரவர அபிவிருத்தி யடைந்துவருகிறது. சில காலத்திற்கு முன்பு நமது ஜார்ஜ்சக்கரவர்த்தி கோகலேக்கு K. C. I. E. பட்டங் கொடுக்க விரும்புவதாகத் தெரிவித்ததின் பேரில், அவர் மிகவும் தாழ்ந்து பணிந்து அப்பட்டம் தமக்கு வேண்டாமென்று

கூறிச் சாமானிய மனிதர்களின் மத்தியில் தானும் ஒருவனாகக் கருதப்பட வேண்டுமென்று விரும்பினார். ஆகா! என்ன ஆச்சரியம் இதுவன்றோ உதாரத்துவம். ஆகவே இவர் "துக்கங்களில் நொந்திடாத மனத்தினனாய், சுகங்களில் ஆசை யற்வவனாய், பொருள்களின் மேல் பற்றும், பயமும் கோபமும் நீங்கப்பெற்றவனாய் இருப்பவன் நிலைத்த ஞான முடையவன்" என்ற கீதாசாரியின் வாக்கியத்தை யொட்டியிருந்தார். இத்தகைய மகான் நம்மைவிட்டு நீங்கினது நாம் செய்த கர்மமேயாகும்

## ஜி. சுப்பிரமணிய ஐயர்.

எக்காரட்டினுஞ் சிறந்த நன்னுடென்று பலராலும் மொழியப்பட்டுள்ள நின்ற இப் பொன்னாட்டின் பெருமைக் குற்றது பரோபகாரம். அப்பரோபகாரமே திருவுருக் கொண்டவராய், கனவிலும் நனவிலும் ஜனானுகூலத்தையே பெரிதுங்கருதினவராய், அறத்திற்கிருப்பிடமாய், வாய்மைக்கு வசதியாய், ஏழைகளுக்கு ஆசரவாயுமுள்ள நமது உத்தம தேசாபிமானியான ஸ்ரீ யுதஜி. சுப்பிரமணிய ஐயர் வெகு தீரர். தயாநிதி. புகழாபரணம் பூண்டவர். பெரிய மகான். தத்துவதரிசி. இவர் ஜனங்களின் கஷ்டங்களைப் போக்கும் சஞ்சீவி. தராசு போன்ற நியாயங்கொண்டவர். தென்னிந்தியாரவைப் பரோபகாரத்தால் விளக்க வந்த சூரியகாந்தி. நெற்களஞ்சியமெனும் தஞ்சை நாட்டைப் பெருமைப் படுத்த வந்த நாயகமணி. எல்லா உயிர்களுக்கும் ஹிதஞ் செய்பவர். செய்யத்தக்க காரியங்களை தெரிந்து செய்து, செய்யத்தகாத காரியங்களைத் தெரிந்து ஒழிப்பவர், கால நிலைமையும் இட நிலைமையும் அறிந்து காரியங்களை நடத்துபவர். தன் மன திறருச் சரியென் றேற்படுங் காரியங்களைத் தடையின்றி செய்பவர். சிறந்த தேசாபிமானி நாட்டின் சுதந்திரத்தைக் காப்பாற்ற வந்த சுப்பிரதீபம். எவ்வித கஷ்டங்களுக்கும் கலங்காத கன நெஞ்சமுள்ள பிரக்லாதாழ்வானை யொத்தவர். மிக்க தெய்வ பக்திகொண்டவர். இத்தகைய அருங்குணங் கொண்ட பரம குருமணியாம் நமது ஐயாவர்கள், தஞ்சை நகருக்குப் புறநகரான பஞ்சநத க்ஷேத்திரமென்னும் இயற்பெயரினை யுடைய திருவையாற்றில் 1855-ம் வருஷம் ஜனவரி மாதம் பிராமண குலத்தில் தீக்ஷதர் மரபில் நான்காவது புத்திரராகத் தோன்றினர். இவர் கலாசாலையில் கல்வி கற்குங் காலத்திலேயே இவருக்கு ஸ்வாதீனம் என்னும் பேருணர்ச்சி மிகுதியும் வளர்ந்து வந்தது.

அவ்வுணர்ச்சி மேன்மேலும் அபிவிருத்தி யடைந்தவராவே, ஐயரவர்கள், பசுங் கன்றுகளைப் போன்றிருக்கும் பாலர்களுக்கு ஸ்வயாதீனமென்னும் உணவை ஊட்ட முன்வந்ததின் காரணமாக உபாத்திமைத் தொழிலை மேற்கொண்டார்.

### ஹிந்து பத்திரிகை ஆரம்பம்.

சின்னாள் கழிந்த பின்னர், பாலர்களுக்குப் போதிப்பதைவிட ஞான முதிர்ந்த பொது ஜனங்களுக்கு நாட்டின் விஷயமாக சகல கேள்விகளையும் கற்பிக்கவேண்டுமென்றும் அவாபற்றி, முதல் முதல் 1878-ம்வருடத்தில் "ஹிந்து" என்னும் நாமத்தால் ஒரு ஆங்கிலேய பத்திரிகையைப் பிரசுரித்தார். இப்பத்திரிகை ஸ்தாபனமாகப் பற்பலர் அநேகவிதமாகக் கூறியும் ஐயர் ஒரே பிடிவாதமாய் தன் மனோ வலிமையைக்கொண்டே நடக்க முயன்றார். ஹிந்து என்னும் குழந்தையை நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்துவரவே அது கடைசியாகத் தினசரி யாகியது. பத்திரிகை நடத்தினவர்களில் இவரே மிக்க கீர்த்திபெற்றவர். ஜனங்களின் க்ஷேமத்தையும் கவர்ன்மெண்டின் நோக்கத்தையும் அப்போதைக் கப்போது உணர்ந்து வியாசமெழுதுவதில் நமது ஐயர் மிக்க தேர்ச்சி யுள்ளவர். பொதுஜன விருப்பத்திற்கும், கவர்ன்மெண்டு வெறுப்புக்கு மிடங் கொடாமல் நடத்துவது மிகவும் பிரயாசையென்பதை முதல் முதல்

உணர்ந்தவர் நமதுஐயரவர்களே. தமிழிலும் ஆங்கிலேயத்திலும் சமமான ஞானத்தைக் கொண்டவர்.

### சுதேசமித்திரன் பத்திரிகை.

ஆங்கிலம் அறிந்த சொல்ப ஜனங்களுக்குமட்டும் பொது விஷயங்களைக்கற்பிப்பது நியாயவிரோதமென்றுமனதிற்கொண்டு, ஆங்கில மறியாதவர்கள் பொது விஷயங்களை ஆங்கில மறிந்தவர்கள் கற்குமாறு "சுதேசமித்திரன்" என்னும் ஒரு தமிழ்ப் பத்திரிகையைப் பிரசுரித்தார். இவர் ஹிந்து பத்திரிகையை நடத்துங் காலத்தில் சேலம் ஜில்லா கலகம், செங்கல்பட்டு தாசில்தார் கேஸ்முதலிய பொது ஜன விஷயங்களில் கவர்ன்மெண்டாருக்குப் பகிரங்கமாக நியாயத்தை எடுத்துக் காட்டியுள்ளார். பிராமணப் பெண்கள் சிறுவயதில் விவாகஞ்செய்யப்பட்டு வைதவ்யத்தை யடைவது சகஜமாய் விட்டதென்று கண்டு, புனர் விவாகமுதலிய ஏற்பாடுகள் செய்யுங் கோட்பாடுகளை அவலம்பிக்க வேண்டுமென்று வற்புறுத்தின ரகுநாத ராவ் முதலியவர்களுடன் கலந்து சீர்திருத்தத்தைக்கைக்கொண்டார். மேடைப் பிரசங்கத்தில் ஒன்றும், கிரகத்தில் ஒன்றுமாகக்கொள்ளாமல் தான்பேசும் ஒவ்வொன்றையும் நடவடிக்கைக்குக் கொண்டுவந்தார். இதுதான் இவரிடத்திலுள்ள மேன்மையான குணம். தென்னிந்தியாவிலுள்ள மற்ற பரோபகாரிகளுக்கும் இவருக்கு முண்டானவித்தியாசமிதுவே. கார மேகம்போல் வசன மாரி மொழியும் அநேகர் தங்கள் கூறிய வண்ணம் செய்யாதிருப்பது

"சொல்லுதல் யார்க்கு மெளிய—வரிய
சொல்லிய வண்ணஞ்செயல்" [வாஞ்

என்னும் குறளின் வாக்கியத்தை யொக்கும். இத்தகைய நவீண ஆசாரச் சீர்திருத்த விஷயமாக ஐயருக்கு நேர்ந்த கஷ்டம் இவ்வளவவ்வளவல்ல. மித்திரரென்று கருதப்படுபவர்களும், அண்டம் வெடிக்க சீர்திருத்தத்தை உபந்யாசம் செய்தவர்களும், ஐயரை அநுதாவு செய்து படிப்புள்ளவர்களுக்கு குணமிருப்பதில்லை யென்பதைக் காட்டினார்களென்றும், நமது ஐயரவர்கள், இத்தொல்லைகளில் மனஞ் சலியாது, ஆத்மா ஒன்றையே பற்றியிருக்கிற மனதினால் சந்தோஷத்தை யடைந்தவராய், இஷ்ட வஸ்துக்களைப் பிரிதல் முதலிய துக்கப்படுவதற்குக் காரணங்கள் வந்தபோதிலும் துக்கத்தை யடையாதவராய், துக்கத்திற்குக் காரணமாகிய விசாரம், கோபம் முதலியவைக ளில்லாதவராய், ஆத்ம புத்தியையே சுபாவமாக யுடையவராய், எல்லா இஷ்டங்களுக்கும் உதாஸினராய், சகல நிந்தனைகளுக்கும் கலங்காதவரா யிருந்தார். பின்னர் இவருடைய மனோ வலிமையைப் பற்றிப் புகழாதார் யாருமிலர். எத்தகைய சந்தர்ப்பத்திலும் பத்திரிகை நடத்துவதை மறவாது ஹிந்து, சுதேசமித்திரன் என்ற இவ்விரண்டு பத்திரிகைகளையும் 1898-ம் வருடம் வரை நடத்தி வந்தார்.

### வெல்பி கமிஷன் சாக்ஷியம்.

இந்தியாவின் பொருட்டுச் செய்யப்படும் செலவு விவரங்களைப் பற்றி இந்திய ஜனத்தலைவர்களுடைய அபிப்பிராயங்களை யறிந்து அவசியமான சீர்திருத்தங்கள் செய்வதற்காக, இங்கிலாண்டில் வெல்பி கமிஷன் ஒன்று ஏற்படவும், அதில் பானர்ஜி, கோகலே, வாச்சா முதலானவர்களை அந்தந்த மாகாணத்தார் அனுப்பினது போலவே நமது ஐயரையும் சென்னை மாகாணத்தார் அனுப்பினார்கள். கமிஷனில் ஐயர் கொடுத்த சாக்ஷியம் மிக்க வனப்பைத்தரும். இந்தியாவின் வருமானங்களையும் செலவுகளையும் வெகு சாதுரியமாக எடுத்துக் காட்டி அவைகளின் கோளாறுகளையும், அதை நீக்கும் ஏற்பாடுகளையும் பசுமரத்திலடித்த ஆணிபோல் விளக்கிக் காட்டினர். அப்பொழுது அவர், இந்தியாவில் சேனையின் பொருட்டும் ரயில்

பாதைகளின் பொருட்டும் செய்யப்படும் செலவு மிகவும் அதிகப்பட்டு விட்டதாயும், அவற்றைக் குறைக்க வேண்டியது மிகவும் அவசியமென்றும், இவ்வழிகளில் இறைக்கப்படும் பணத்தைப் பொது ஜனங்களின் வித்யாபிவிருத்தியின் பொருட்டுச் செலவிட்டால் தேசத்திற்கு அளவற்ற நன்மை விளையுமென்றும் கூறினர்.

இவர் பெரிய சுதேசி.

அன்னியநாட்டு வஸ்துவைக் கனவிலும் கருதாதவர். கர்ஸன் பிரபுவின் அவசர அரசாட்சியினுலுண்டான வங்காளப்பிரிவினையின் பலனாக, நம் தேசத்தில் நாலு இடங்களிலும் சுதேச முயற்சியும் ஊக்கமும் விரிவாயின். இச் சென்னையிலே சுதேசிய முயற்சியென்னும் பயிரை நட்டு வளப்படுத்திய வல்லபன் நமது ஐயரேயன்றோ? எழுத்து வாசனையில்லாத பாமர ஜனங்களுக்கு சுதேசி முயற்சியில் சிரத்தை தோன்றுமாறு செய்துவைத்தகாரண புருஷரும் நமது ஐயரேயாவார். சுதேசிய முயற்சிக்கு ஆதாரமாக நிதி வேண்டுமென்பதை நன்குணர்ந்த நமது ஐயர், தென்னிந்தியாவிலே எவ்விடத்திலும் தீபாவளிப் பண்டிகையன்று வீடு வீடாகப் பணம் வசூலித்து சுதேசிய நிதியையும் தொழிற் சங்கத்தையும் முதல் முதல் ஸ்தாபித்தார். சென்னையில் அர்பத்நட் பாங்கி தவறி அநேக இந்திய குடும்பங்கள் கலங்கினதைக் கண்ணுற்ற ஐயர் மனஞ் சகியாது, இந்தியர்களுக்காகத் தனி பாங்கியொன்று அவசியமென்பதை வற்புறுத்தினர். இவ் வற்புறுத்தலைக் கேட்ட வி. கிருஷ்ணசாமி ஐயர் முதலியோர் இந்தியன் பாங்கி ஒன்றை ஸ்தாபிக்க முன் வந்தார்கள். சுதேசியம் பரவ, நமது ஐயர் தென் தேசங்களில் ஆங்காங்கு சென்று அரியபெரிய உபந்யாசங்களால் புதிய உணர்ச்சியை ஜனங்களுக்கு உண்டாக்கினதினால், இவருடைய மனோபாவத்தை கவர்ன்மெண்டார் நன்கறியாது நிதான புத்தியிலிருந்து விலகிப் பரபரப்படைந்து, ஐயரை இராஜ நிந்தனைக்காக இவர்மேல் நடவடிக்கை நடத்த ஆரம்பித்தார்கள். அப்பால் கவர்ன்மெண்டார் தங்கள் எண்ணத்தை மாற்றி அதை நிறுத்தி விட்டனர். காங்கிரஸ் சபைக்கு ஆதிமுதல் உழைத்தவர்களுள் இவரும் ஒருவரே. சென்னை இராஜதானி மதிப்படைந்தது இத்திவ்ய புருஷன் ஒருவராலேதான். பலர் பலவிதமாகக் கூறினும், யோசிக்குமிடத்து, தென்னிந்தியாவில் பொது ஜன விஷய நடமாட்டத்திற்கு காரணம் நமது ஐயரே. தேச நன்மைக்குப் பாடுபட வேண்டுமென விரும்புவோர்க்கு நமது ஐயரே மார்க்கசகாயம்போலும் விளங்கினர். இவர் தேசீய கட்சியைச் சேர்ந்தவர். இத்தகைய தேசாபிமானி, ஏப்ரல் மாதம் 18-ந் தேதியன்று மாலை 6-15-மணிக்கு இல்வாழ்வைத் துறந்தார்: இத்தகைய புகழும் பெயரும் பெற்ற ஐயரைப்போல் தோன்றி தேச சேவைக்காக நாமனைவரும் ஜாதிமத வேற்றுமையின்றி அனவரதமும் உழைப்போமாக!

—

# பஞ்சமும், பஞ்ச நிவர்த்தியும்.

### பஞ்சம் யாது.

பஞ்சம், க்ஷாமம் என்னும் இவ்விரு சொற்கள், ஒரே பொருளைக்குறிப்பதாகி வறுமை, சீர்கேடு முதலிய நிலைமை களுக்குக் காரணமாய் நிற்கும். தனதான்ய விருத்தி குறைந்து நாட்டில் வறுமை மேலிட்ட காலத்திலும், மழை பெய்தலின் குறைவினல் குளங்கள், ஏரிகள், ஆறுகள் நீரின்றி வறண்டு கட்டாந்தரையாக விருக்கும் காலத்திலும், அகால சம்பவங்களினுலுண்டாகும் தீ விபத்து, பிரவாக விபத்து முலிய காலத்திலும், அன்னிய அரசாங்கங்களின் படை யெழுச்சி காலத்திலும் உண்டாகும் க்ஷீணகதிக்குப் பஞ்சமெனப்படும். பசிநோயினல் வருந்தும் ஜனங்கள் பஞ்சத்தினல் பீடிக்கப்பட்ட வரெனக் கூறப்படுவார்கள். இப்பஞ்சப் பீடிப்பினல் பட்டிலா மரணங்க ளுண்டாகின்றன. கைத்தொழில் வியாபாரங்கள் சிதைவுபடுகின்றன. கல்வி கேள்விகள் கலங்குகின்றன. ஜனங்களின் நிலைமை தடுமாறுகின்றது. ஜனங்களின் தேக பந்தோபஸ்தும், பொருள் பந்தோபஸ்தும் கெடுகின்றன. கொலையும், களவும் பெருகுகின்றன. நாட்டின் அரசாங்கமுறைமையும் தனவிருத்திக்குரிய சாதனங்களும் க்ஷீணிக்கின்றன. நாட்டிற்குரிய சநாதன தர்மமும், ஆசார சம்பிரதாயங்களும் கஷ்டமடைகின்றன. ஆகவே, நாடு சீர்குலைந்து தொந்தரைப் படுகின்றது.

### பஞ்சம் வருவதேன்.

31½-கோடி ஜனங்களைக் கொண்டிருக்கும் இப்பெரிய நாடு பஞ்சத்திலழுந்துவதேன்? இந்நாட்டில் சுமார் 100-க்கு 85-பேர் விவசாயிகளாய்ப் பயிர்ப் பண்ணைத் தொழிலின்பொருட்டு வானத்தை அண்ணாந்து பார்க்குந் தன்மையைக் கொண்டிருக்கின்றனர். நாட்டின் அலைவாய்த் திரவியமும், மேழிச்செல்வமும், மலைபடு பொருளும் மழையினல் உண்டாகின்றன. மழையின்றி எப்பொருளும்விளையாது. மருத நிலத்தார்கள் மகிழ்வதும், குறிஞ்சி நிலத்தார்கள் கும்மாள மிடுவதும், நெய்த நிலத்தார்கள் நகைப்பதும் மழையின் மாட்சிமையினலேயே. மழையினலேயே நிலங்கள் முப்போகம் விளைகின்றன. ஆனிவிதை அரசாடிவருவதும், கார்கால வுரிமை கதிர்பெருகி வருவதும் மழையின் வளமையினலேயே. ஜனங்கள் பயிரையே பிரதானமாகக்கொண்டு உயிர் வாழ்கின்றன ராதலால், பயிர்விளைவு குறையின், வறுமை மேலிட்டுப்பஞ்சம் பரவுகின்றது. நவதானியப் பெருக்கத்தினல் உணவுபொருள்களைப் பொங்கி ஜனங்கள் அறுசுவை உண்டிகளை உண்கின்றனர். இந்தியாவில் விளைவு குறைவதினலேயே பஞ்ச முண்டாகின்றதென்றும், இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய மேனடுகளில், தனவினியோகக் குறைவினலேயே பஞ்சமுண்டாகின்ற தென்றும் சாமானியமாய் நினைக்கப் படுகின்றது. பஞ்சமும் வறுமையும் ஒன்றையொன்று பற்றிக்கொண்டு வருவதினல், ஜனங்களின் ஜீவனம் வரவர அதிகரித்து, திரவியவிருத்தி குறைவுபட்டு, உயிர்வாழ்க்கைக்குக் கஷ்டமுண்டாகி நாட்டில் பஞ்சமுண்டாகின்றது. பஞ்சம் உண்டாவதற்கு இன்னும் அநேக காரணங்களுமுள. மகம்மதிய அரசாட்சி காலத்திலும் கம்பெனியாரிடமிருந்து கவர்ன்மெண்டார் அரசாங்கப் பொறுப்பை வகிக்க வந்த காலத்தி

லும் எண்ணிலாப் பஞ்சங்கள் உண்டாயின. அக்காலத்தில் வரி அதிகப்பட்டது. அன்னிய நாட்டுச் சாமான்களின் போட்டா போட்டியினால் இந்நாட்டுக் கைத்தொழில் சிதைவுண்டது. ஜீவனோபாயம் தத்தளித்தது. இத்தகைய காரணங்களினாலேயே பஞ்சம் அடிக்கடி உண்டாயிற்று. இது மட்டுமா? விவசாயிகளுக்கு விவசாயத்தின் பொருட்டுப் போதுமான திரவிய சகாய மில்லாமையினாலும், உயர்ந்த எரு, புதியமாதிரிக் கலப்பை முதலிய விவசாயக் கருவிகள் வாங்கப்பண உதவிசெய்யச் சரியான சங்கங்களும் பிரபுக்களு மில்லாமையினாலும், விவசாயிகளின் வருமானம் சொற்ப தொகையா யிருப்பதினால் கொஞ்சங் கொஞ்சமாக மூலதனம் வைத்து நிலங்களைச் சரியாகச் சாகுபடி செய்ய இயலாமையினாலும், தற்காலத்தை யொட்டிய புதிய மாதிரி ஏற்பாடுகளைச் செய்யப் போதுமான கல்வி யில்லாமையினாலும், விவாகம் சடங்கு முதலிய காரியங்களுக்கு அளவுக்கு மிஞ்சிக் கடன்வாங்கிச் செலவழிப்பதினாலும், சாகுபடியல்லாத காலங்களில் இதர கைத்தொழில்களைச் செய்யவேண்டுமென்னும் அவாகுன்றி சோம்பி யிருப்பதினாலுமே இந்தியாவில் அடிக்கடி பஞ்சம் உண்டாகின்றது.

### ஆங்கிலேய அரசாட்சிக்குமுன் உண்டான பஞ்சங்கள்.

ஆங்கிலேய அரசாட்சியைப் பெரிதும் கொண்டாடுபவர்கள், இந்தியாவின் தற்கால பஞ்ச நிலைமையைப் பற்றி, ஆங்கிலேய கவர்ன்மெண்ட் இரண்டு குற்றங்களைச் செய்திருக்கின்றது என்ற அபிப்பிராயங் கொண்டிருக்கின்றனர். இந்து மகம்மதீய அரசாட்சி காலத்தில் பஞ்சமுண்டா யிருந்தபோதிலும், பஞ்சமுண்டாகும் விஸ்தீரணம் ஆங்கு வெகு குறைவு. தற்பொழுதோ நாடெங்குப் பஞ்சமுண்டாகின்றது. யுத்தமும் பஞ்சமுமே இந்தியாவிலுள்ள விவசாயிகளைத் தாழ்ந்த ஸ்திதிக்குக் கொண்டுவந்தது. சந்திரகுப்தர் காலத்தில், கிரீக்தேசத்து மெகஸ்தனீஸ் என்பவர் அந்நாளில் பஞ்சமே கிடையாதென்றும், நாடெங்கும் சுபிட்சமாய் யாதொரு குறைவுமின்றி யிருந்ததென்றுங் கூறியிருக்கின்றனர். யுத்த அலங்கோலங்களினாலும், இராஜ வம்சங்களின் மாறுதல்களினாலும் ஸ்திரமான அரசாங்கமின்றி யிருந்தது கண்டு, ஜனங்கள் அக்காலத்திலும் பஞ்சத்தினாலடிபட்டனர். இப்பஞ்சத்தில் விதஸ்தாலென்னும் பெயர்கொண்ட ஜீவ நதியில் நீர்தெரியாமல் பிணங்கள் மிதந்து கொண்டிருந்தனவாம். நிலங்களில் எலும்புக் குவியல்கள் மலைபோல் அங்கங்கே கால் மிதிக்க இடமில்லாமலிருந்தனவாம். அரசர்களிருந்தும் ஜனங்களுக்குப் போதுமான உதவி செய்யாமல் கொடுங்கோல் அரசாட்சி புரிந்துவந்தனர். ஆனால், அப்பால் அலாயுதீன் என்பவர் பஞ்ச நிவாரணத்திற்காக, டெல்லியில் தானியக் களஞ்சியமொன்று ஏற்படுத்தி, தன்னாட்டிலிருந்து ஏற்றுமதிச் சரக்குகளை அனுப்பாமல் தடுத்து, வரியைக் குறைத்து, பற்பல உதவி செய்தனர். மகம்மத் டோக்ளாக் காலத்தில் அவர் ஜனங்களுக்கு விதித்த விபரீதமான வரியினாலும், விவசாயிகளின் கஷ்டத்தினாலும், சரியான விளைவின்றி உலகம் பாழடைந்த பரவெளிபோலாகி எங்கும் பஞ்சம் பரந்திருந்தது. சுல்தான் ஆமத்ஷாவுக்கும் தீவால் ராயிக்கும் நடந்த யுத்தத்தில், சுல்தான் ஜனங்கள் பஞ்சத்தினால் பீடிக்கப்பட்டதனால் தக்ஷிண முழுமையும் சுடுகாடு போலாயிற்று. இத்துடன் பிளேக்வியாதியும் உண்டாயிற்று. பஞ்சத்தி லடிபட்ட ஜனங்களுக்கு, தீராப் பிளேக் வியாதியும் வரத் தலைப்படவே, ஜனங்கள் எரியும் விளக்கில் விட்டில் மாள்வதுபோல் மாண்டனர். ஜனங்கள் நகரைவிட்டு ஓடினர். பெருத்த அரண்மனைகளில் பிரேதக் குவியல்கள் குவிக்கப்பட்

ம் கொஞ்சங் கொஞ்சமாக அன்னிய
தசங்களுக்குச் செல்வதினலும் இந்
டுஏழ்மையையடைகின்றது. மேலும்
நுடியானவர்கள் அடிக்கடி வியாச்
ய விஷயமாகக் கோர்ட்டுகளுக்குப்

போவதினல் திரவியங் குறைந்து
வறுமை முற்றுகின்றது. ஆகவே
மேற்கூறிய சகல வழிகளையும் சீர்
திருத்தஞ்செய்வதினல் நாடு பஞ்சத்தி
லடிபடாமல் வளமடையும்.

---

களைப் பரிசீலனை செய்வதில் அவர் அநேகமாய்த் தலையிடுவதில்லை. ஆனால், தமக்குக் கீழுள்ளவர்களின் நடவடிக்கைகளைக் கவனித்துத் தாம் தலையிடவேண்டிய அவசியம் நேருமேயானால், குற்றங்களைப் பரிசீலனை செய்தறிவதில் அவர் தலையிடலாம்.

மிக்க அநுபவம் வாய்ந்த ஸப் இன்ஸ்பெக்டர்களிலிருந்தே இன்ஸ்பெக்டர் தேர்ந்து நியமிக்கப்படுவார். ஒவ்வொரு ஜில்லாவிலும் 3, 4 வட்டங்கள் இருக்கும். பெரிய ஜில்லாவாக இருந்தால், அது இரண்டு ஸப் டிவிஷனாகப் பிரிக்கப் பட்டு, ஒரு டிவிஷனுடைய மேற் பார்வையானது ஓர் அஸிஸ்டண்டு ஸூபரின்டெண்டெண்டுக்கு உட்பட்டிருக்கும். அவர் ஐரோப்பிய உத்தியோகஸ்தராக இருப்பார். ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள போலீஸாருக்குத் தலைவராக இருப்பவர் "டிஸ்டிரிக்ட் ஸூபரின்டெண்டெண்டு ஆப் போலீஸ்" எனப்படுவார். குற்றங்களைப் பரிசீலனை செய்து கண்டுபிடிப்பதிலும் தடுப்பதிலும் பொதுஜன சமாதானத்தைப் பாதுகாப்பதிலும் அவர் அந்தஜில்லாவிலுள்ள கலெக்டருக்கு உட்பட்டிருப்பார். ஜில்லா போலீஸ் நிர்வாக விஷயமாய் டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனராலுக்கும் இன்ஸ்பெக்டர் ஜெனராலுக்கும் அவர் கட்டுப்பட்டவராவர்.

எட்டு அல்லது பத்து ஜில்லாக்கள் சேர்ந்தது ஒரு 'ரேஞ்சு' எனப்படும். அந்த ரேஞ்சில் தலைமையான உத்தியோகஸ்தருக்கு டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்று பெயர். ஸூபரின்டெண்டுகளாய் இருப்பவர்களிலிருந்து ஒருவர் டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல் பதவிக்கு நியமிக்கப்படும்.

ஒவ்வொரு மாகாணத்திலும் உள்ள போலீஸாருக்குத் தலைவராக இருப்பவர் இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்றும் உத்தியோகஸ்தராவர். அவர் மாகாணப் போலீஸ் நிர்வாக விஷயத்தில் மாகாண கவர்ன்மெண்டுக்கு ஜவாப்தாரியாவார்.

குற்றச்சோதனை இலாகா:—போலீஸிலே குற்றச்சோதனை இலாகா என்று ஓர் இலாகா உண்டு. ஒரு ஜில்லாவிலுள்ள போலீஸில் வேலைபார்ப்பவர்களிலிருந்து அந்த இலாகாவுக்கு உத்தியோகஸ்தர்களும் சிப்பந்திகளும் தெரிந்தெடுத்து நியமிக்கப்படுவார்கள். அந்த இலாகாவுக்குத் தலைவராய் ஐரோப்பிய உத்தியோகஸ்தர் ஒருவர் இருப்பார். டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்ற பதவி வகிப்பவர்களிலிருந்து அந்த உத்தியோகஸ்தர் நியமிக்கப்படுவார். இராஜீய விசாரணைகளையும் ராஜத்துவேஷக்குற்றங்களையும் கேஸ்களையும்இந்த இலாகா அதிகாரிகள் கவனிப்பார்கள். மேலே கண்டகுற்றங்களை ஜில்லா போலீஸ் விசாரிப்ப தில்லை. வெளி ஜில்லாவிலுள்ள போலீஸ் இலாகாவிலே திறமை காட்டி வேலைசெய்த ஸப் இன்ஸ்பெக்டர்களும் இன்ஸ்பெக்டர்களுமே அந்தக் குற்றச் சோதனை இலாகாவில் இருப்பார்கள்.

நகர போலீஸ்:—கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய பெரிய நகரங்களில் பிரத்தியேகமான போலீஸ் உண்டு. நகர போலீஸுக்குத் தலைவராய் போலீஸ் கமிஷனர் என்ற உத்தியோகஸ்தர்இருப்பார். அவருக்கு உதவியாக 2, 3 டிப்டி போலீஸ் கமிஷனர்கள் உண்டு வெளி ஜில்லாக்களிலிருந்து வேலை பழகிய ஸூபரின்டெண்டுகளிலிருந்துதான் டிப்டி கமிஷனர்கள் நியமிக்கப்படுவார்கள். நகர போலீஸ் நிர்வாகத்துக்கு அனுகூலமாக, நகரைப் பல டிவிஷன்களாகப் பிரித்து, ஒவ்வொரு டிவிஷனிலும் ஓர் ஐரோப்பிய உத்தியோகஸ்தர் தலைவராயிருப்பார். ஒவ்வொரு டிவிஷனிலும் பல போலீஸ் ஸ்டேஷன்கள் இருக்கும் அந்தப் போலீஸ் ஸ்டேஷனில் ஸப் இன்ஸ்பெக்டர்களும் இன்ஸ்பெக்டர்களும் இருப்பார்கள். நகரின் போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவதற்காக பிரிட்டிஷ் பட்டாளங்களிலிருந்து சில ஐரோப்பியர்கள் நியமிக்கப்படுவார்கள். குற்றத்தைப் பரிசீலனை செய்யும் அதிகாரம் அவர்களுக்குக் கிடையாது.

போலீஸுக்கு ஆள் சேர்த்தல்:—கான்ஸ்டேபிள்களோ ஆங்காங்குள்ள ஸ்தலங்களிலிருக்கும் மனிதர்களிலிருந்து சேர்த்துக்கொள்ளப்படுவார்கள். சில ஜாதியார்களைச் சேர்த்துக்கொள்வதில்லை. சில மாகாணங்களிலுள்ள போலீஸிலே வேலை பார்க்கும்படி இதரமாகாணங்களிலிருந்து இத்தனைபெயரை எடுத்துக்கொள்வதென்று ஒரு நியதிஉண்டு. போலீஸில் சேரவருவோர் நன்னடத்தைக்காக நற்சாட்சிப் பத்திரமொன்றை தருந்த மனிதர்களிடமிருந்து பெறவேண்டும். மேலும் அவர்கள் வேலைக்கு லாயக்கா என்று வைத்திய சோதனை செய்யப்படுவார்கள். கான்ஸ்டேபில்கள் தங்களுடைய சாமார்த்தியமான வேலையால் ஹெட் கான்ஸ்டேபிள் பதவிக்கு வரலாம். இன்னும் அவர்கள் உயர்ந்த பதவி யடையலாமென்று 1906-ம் வருஷத்திற்குமுன் விதி யிருந்தது. ஆயினும் அவ்வருஷம் முதல் அது தடுக்கப்பட்டுப் போயிற்று.

ஸப்இன்ஸ்பெக்டர்களோ ஹெட் கான்ஸ்டேபிள்களாய் இருப்பவர்களி லிருந்து நியமிக்கப்பட்டு வந்தனர். ஆயினும் 1906-ஆம் வருஷத்திற்குப் பின் அப்படியில்லை. இந்தியரில் தகுந்த அந்தஸ்துள்ளவர்களி லிருந்தே ஸப் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கப்படவேண்டுமென்று லார்டு கர்ஸன் 1906-ஆம் வருஷத்தில் உத்தரவு செய்துவிட்டார். அநேக மாகாணங்களிலே 100 க்கு 80 ஸப் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கப் பட்டவர்களாகவே இருக்கின்றனர். அவர்கள் ஒரு போலீஸ் வித்தியாசாலையில் சுமார் 18 மாத காலம் பழக்கப்படுவார்கள். பின்பு அவர்களைப் பரீட்சைசெய்து வேலையை அனுபவத்தில் கற்றுக்கொள்ளும்படி ஒரு போலீஸ் ஸ்டேஷனில் நியமிக்கப்படுவார்கள்,

ஸப் இன்ஸ்பெக்டராய் இருப்பவர்களிலிருந்தே இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கப்படுகிறார்கள். ஆயினும் ஸப் இன்ஸ்பெக்டரால்லாத சிலரை இன்ஸ்பெக்டராக நியமிப்பதுமுண்டு. டிப்டி ஸூபரின்டெண்டு இந்திய உத்தியோகஸ்தராய் இருப்பார். ஸூபரிண்டெண்டுக்கு அவர் உதவியாவர். இன்ஸ்பெக்டர் வேலைபார்ப்பவர்களிலிருந்தாவது, போலீஸ் வித்தியாசாலையில் பழகியவர்களிலிருந்தாவது அந்த உத்தியோகத்திற்குரிய நியமனம் செய்யப்படும்.

இனி, அஸிஸ்டண்டு ஸூபரின்டெண்டுகளோ 1893-ஆம் வருஷத்திற்குபின் லண்டனில்பரீட்சைநடத்தப்பட்டு,அதில்தேறியவர்களிலிருந்து நியமிக்கப்பட்டு வருகின்றனர். அவர்கள் இந்தியாவுக்கு வந்ததும் உமேதவாரியாக வேலை பழகும்படி செய்யப்பட்டு தேசபாஷை, சட்டம், குதிரை சவாரி டிரில் இப்பரீட்சைகளில் இங்கே தேறியதும் காயமாக நியமிக்கப்படுவர்.

போலீஸ் வித்தியாசாலை:—போலீஸ் வித்தியா சாலைகள் 1906-ஆம் வருஷத்தில் ஏற்படுத்தப்பட்டது. அதில் பயிற்சி பெறுவதனால் உமேதவாரி போலீஸ் உத்தியோகஸ்தர்களின் திறமை அதிகரிப்பதோடு, பரீட்சையில் தேர்ந்தவர்களையே வேலைக்கு எடுத்துக்கொள்வதனால், நன்கு படித்தறிந்த உத்தியோகஸ்தரும் கிடைக்கும்படி இருக்கிறது.

சம்பளம்:—போலீஸ் இலாகாவில் சம்பளம் கொடுக்கப்படும் விவரம் பின்வருமாறாகும்.

| | | ரூ. |
|---|---|---|
| கான்ஸ்டேபிள் | ... | 10—12 |
| ஹெட் கான்ஸ்டேபிள் | ... | 15—20 |
| ஸப் இன்ஸ்பெக்டர் | ... | 50—100 |
| இன்ஸ்பெக்டர் | ... | 150—250 |
| டிப்டி ஸூபரின்டெண்டு | ... | 250—500 |
| அஸிஸ்டண்டு ,, | ... | 300—500 |
| டிஸ்டிரிக்ட் ,, | ... | 700—1200 |
| டிப்டி இன்ஸ்பெக்டர்ஜனரல் | | 1500—1800 |
| இன்ஸ்பெக்டர் ஜனரல் | ... | 2000—3000 |

கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய நகரங்களில் போலீஸ் கமிஷனர் பதவி வகிப்பதற்கும், மாகாணங்களில் இன்ஸ்பெக்டர் ஜனரல் பதவி வகிப்பதற்கும் தக்க போலீஸ் உத்தியோகஸ்தர்கள் கிடைக்காது போனால், ஸிவில் ஸர்விஸ் பரீட்சையில் தேறியவர்கள் அப்பதவிகளுக்கு நியமிக்கப்படலாம்.

இன்னுஞ் சில விவரங்கள்:—ஒரு ஜில்லாவிலுள்ள போலீஸ் படையானது 2 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஆயுதம் தரிப்பவர்கள் ஒரு பிரிவு; ஆயுதந் தரியாதவர்கள் மற்றொரு பிரிவு.

ஆயுதந்தரிக்கும் போலீஸார் செய்யவேண்டிய வேலைகள் என்னவென்றால்;—கஜானுக்களைப் பாதுகாத்தல்; கஜானுபணத்தை ஓரிடத்திருந்து மற்றோரிடத்திற்குகொண்டு போகும்பொழுது அதைக் காவல்புரிந்து செல்லுதல்; காவல்புரிந்து கைதிகளை அழைத்துச்செல்லுதல்; அபாயகரமான கூட்டக் கொள்ளைக் காரரைக் கண்டுபிடித்தல்; இவ்வித வேலைகளைச் செய்யவேண்டி யிருப்பதால், அவர்கள் ராணுவத்தைப்போல் நடத்தப்பட்டு வருகின்றனர். ராணுவத்தைப் போல் டிரில் முதலியன கற்றுக் கொடுக்கப்பட்டு, துப்பாக்கியால் சுடவும் பயிற்றப்படுவார்கள்.

ஆயுதந்தரியாத பிரிவார் செய்யவேண்டிய வேலைகளாவன:—மாஜிஸ்டிரேட்டால் விதிக்கப்பட்ட அபராத தொகையை வசூலித்தல்; ஸம்மன்களையும் வாரண்டுகளையும் கொண்டு போய்க் கொடுத்தல்; போக்குவரத்தின் பார்வையைக் கவனித்துவருதல்; அலைந்து திரியும் நாய்களை அழித்தல்; நெருப்பையணைத்தல்; விபத்துக்களைப் பரிசிலனை செய்தல்; போலீஸ் இலாகாவிலே கீழ்த்தர வேலை பார்ப்பவர்களுக்குக்கு உடைகளும் வீட்டு வசதிகளும் கவர்ன்மெண்டால் செய்து கொடுக்கப்படுகின்றன.

போலீஸ்உத்தியோகஸ்தர்கள் பென்ஷன் பெறுவதற்கு முன் 30வருஷ காலம் வேலைபார்க்கவேண்டும். 30 வருஷம் முடிவதற்குள் வேலையை விட்டு நீக்கி விடவேண்டுமானால், டாக்டர் ஸர்டிபிகேட் வேண்டும்.

# இந்திய விவசாயம்.

எல்லா தேசங்களிலும் விவசாயமானது அவைகளின் சீதோஷ்ணத்தையும் பூமியின் ஈரத்தையும் பொறுத்ததாயுமிருக்கும். இந்தியாவின் சீதோஷ்ணம் அனேகமாய் தேசமெங்கும் ஒன்றாயிருக்கிறதென்று சொல்லலாம். ஜூன் மாதம் முதல் அக்டோபர் வரை தேசமுழுதும் ஜாஸ்தி மழைபெய்கிறது. குளிர்காலத்தில் டிசம்பர் ஜனவரி மாதத்தில் கொஞ்சம் மழை பெய்கிறது.

நிலவளப்பம்—இந்தியாவை கங்கைப் பிரதேசமென்றும் மத்திய தென் இந்தியாவென்றும் இரண்டு பாகங்களாகப் பிரிக்கலாம். வட இந்தியாவின் நிலங்கள் பொரசலாயும் செழிப்பாயுமிருக்கின்றன. மத்திய இந்தியாவினுடையவும் தென்னிந்தியாவினுடையவும் நிலங்கள் மலைப் பிரதேசமாயும் சில இடங்களில் களிமண் தரையாயும் கோடையில் கெட்டியாயுமிருக்கிறது.

விவசாய சாதனங்கள்—விவசாயிகள் சாதாரணமாய் 1-முதல் 8-ஏகர் வரைதான் சாகுபடி செய்கிறார்கள். ஏழைகளுக்கு மூலதனம் வெகு ஸ்வல்பம். அடிக்கடி நேரிடும் பஞ்சங்களினாலும், கல்யாணம் முதலிய செலவுகளினாலும் அதிக மூலதனம் ஏற்பட சாத்தியமில்லாததாக இருக்கிறது. விவசாய விஷயமாய் கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்து வருகிற ஐக்கிய நாணய சங்கங்களினால் இக்குறை நிவர்த்தியாகுமென எதிர்பார்க்கப்படுகிறது. விவசாயத்திற்குக் கால்நடைகள்தான் முக்கிய ஆதாரம். இவைகள் நல்ல ஸ்திதியில் இருப்பதாகச் சொல்வதற்கில்லை. பூமிகள் விடாமல் சாகுபடி செய்ய சௌகரியங்களுமில்லை. விவசாயிகளுக்கு விவசாய விஷயத்தில் அறிவும் ஊக்கமுமிருந்த போதிலும் அவர்களிஷ்டப்படி செய்ய சக்தியில்லை. விவசாயக் கருவிகள் சாதாரணமாய் மரத்தினால் செய்யப்படுகின்றன. கலப்பைகளுக்கு நுனியில் இரும்புக் கூருகளிருக்கின்றன. வட இந்தியாவில் பூமியைச் சமப்படுத்த பரம்புக் கட்டைகள் உபயோகப்படுத்தப்படுகின்றன. மண்வெட்டிகள் மண் வேலைகளுக்கு உபயோகமாகின்றன. விதைகளை அநேகமாய் கையால் விதைக்கப்படுகின்றன. அறுவிடையான தானியங்களை கால்நடைகளைக் கொண்டு துவைத்து, காற்றில் தூற்றுவதினாலும் நிலத்தில் அடிப்பதினாலும் சேகரிக்கிறார்கள். இதர சாதனங்கள் ஒன்றுமில்லை.

சாகுபடி:—நன்றாய் செய்யப்பட்டபோதிலும் இன்னம் விருத்திக்கு இடமிருக்கிறது. ஏற்பாடில்லாததினாலும் சாதகங்களில்லாததினாலும், சாகுபடி கஷ்டமாகிறது; திருடர் பயத்தினால், ஜனங்கள் சாகுபடி நிலங்களுக்குச் சமீபத்தில்லாமல் கிராமங்களிலிருக்கிறார்கள். குடும்பங்களில் நிலப்பிறிவு சாகுபடி சௌகரியத்தை அநுசரியாமல் சில்லரை துண்டுகளாயிருக்கின்றன. விவசாய காலத்திற்கு முந்தி நிலங்கள் அனேகந் தடவைகள் உழப்பட்டு சமப்படுத்தப் பட்டிருக்கின்றன. எரு முதல் சாகுபடி யாரம்பத்தில்தான் போடப்படுகிறது. குளிர்காலப் பயிர்களுக்குப் போடப்படுவதில்லை. பயிர்களைப் பூரா அறுப்பதற்கு அரிவாள்கள் உபயோகப் படுத்தப் படுகின்றன. இதில் சேதம் ஒன்றுமில்லை.

பாசனங்கள்:—தேசத்தில் பெய்கிற சொற்ப மழையை இட்டும் பருவகாற்றின் மோசத்தை உத்தேசித்தும் இவை அவசியமானவை. பஞ்சாப், சிந்து, ஐக்கியமாகாணங்கள் சென்னை மாகாணம் இவைகளில் சர்க்கார் கால்வாய்கள், பாசனத்திற்கு இருக்கின்றன. இவைகளையிட்டு தரிசு நிலங்கள் அனேகம் சாகுபடிக்கு வந்து செழிப்பாயிருக்கின்றன. அநேகமாய் நிலங்களுக்கு ஜலம் இறைப்பில்லாமலே பாய்கிறது. இறைப்பு நிலங்களுக்கு தண்ணீர்த் தீர்வை குறைச்சல். மொத்தம் நீர் பாய்ச்சப்படுகிற நிலங்களில் 4-ல் 1 பாகம், கிணற்று இறைப்பினால் சாகுபடியாகிறது. கவர்ன்மெண்டின் பண உதவியினால் கிணறுகளின் பாசனம் சில வருஷங்களாய் மிகவும் அதிகரித்திருக்கிறது. ஏரிகளின் கீழ் பாசனங்கள் தென் இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலுமிருக்கின்றன.

எருக்கள்:—கால்நடைகளின் எருக்கள்தான் முக்கியம். ஆனால் இதில் விசேஷ பாகம் விறகில்லாததினால் எரியவிடுவதற்கு செலவாகிறது. புண்ணாக்குகள் கரும்பு வகையரா சாகுபடிக்கு உபயோகப் படுத்தப்படுகின்றன. ஜனங்கள் எருவின் பலன் நன்றாயறிந்திருந்தாலும் பலவித எருக்

களின் குணகுணங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

நெல்பயிர்.—இந்தப் பயிர் விசேஷமாகப் பயிராக்கப்படுகிறது. வங்காளம், பேஹார், பர்மா, சென்னை, இந்த மாகாணங்களில் ஜாஸ்தி அனேக விதங்கள் பயிரிடப்படுகின்றன. நல்ல தினுசுகள் முதலில் நாற்று நடப்பட்டு, பிறகு நடப்படுகின்றன. 4-முதல் 6-பயிர்கள் நடப்படுகின்றன. நடும்போது 7-முதல் 12-அங்குலம் இடைவெளி விடப்படுகிறது நெல் பயிர் முற்றுகிறவரை தண்ணீர் வயலிலிருந்துகொண்டே இருக்கும்.

கோதுமை. இந்தப் பயிர் வட இந்தியாவில்,முக்கியமாய் குளிர்காலத்தில்,பயிரிடப்படுகிறது. ஐக்கிய மாகாணங்கள், பஞ்சாப் இந்த தேசங்கள், இந்தியாவில் விளைகிற கோதுமையில் $\frac{3}{4}$ பாகத்தைக் கொடுக்கிறது. இந்திய கோதுமை சாதாரணமாய் வெளுப்பு நிறமாயும் சிவப்பு நிறமாயும் இருப்பதும் தவிர, மிருதுவாயுமிருக்கிறது. இந்தப் பயிர் சாதாரணமாய் மார்ச்சு ஏப்பிரல் மாதங்களில் அறு விடையாகிறது

தினை.—இத்தானிய வகையறுக்கள் ஏழை ஜனங்களுக்கு முக்கிய ஆகாரமாவதும் தவிர, கால்நடைகளுக்கு இதன் பயிர் நல்ல ஆகாரமாகிறது.

காய் தானியங்கள்—இவை இந்தியா முழுவதும் பயிர் செய்யப்படுகின்றன. இந்த தானியங்களின் பயிர்கள் பூப்பதற்கு முந்தி மழை அவசியம். ஆகையினால் மழை சரியாய் பெய்யாவிடில் பயிர்கள் கெட்டுப்போகின்றன. இந்தப் பயிர்களுக்கு அதிக ஆழமாகப் பூமி உழப்பட வேண்டும்.

பருத்தி.—இது இந்தியாவிலிருந்து வெளி தேசங்களுக்கு ஏற்றுமதி யாகும் சரக்குகளில் முக்கியமானது. இது வறை பூமிகளில் விசேஷமாக பயிராக்கப் படுகிறது. ஈரப்பற்றுள்ள நிலத்தில் கோடையில் விதைக்கப்படுகிறது. அதன் வளர்தலுக்கு கொஞ்சம் மழை போதுமானது. மத்திய தென்னிந்தியாவில் வரிசை வரிசையாய் விதைக்கப்படுகிறது! சராசர் விளைவு ஏகர் 1-க்கு 400 பவுண்டாகும் இன்னம் ஜாக்கிரதையாய் பயிர் செய்தால் விளைவு ஜாஸ்தியாகலாம்.

கரும்பு—இந்தப் பயிர் சாகுபடிக்கு இந்தியா இயற்கையான பூமியை உடைத்தாயிரா விடினும், வருஷம் 1-க்கு சுமார் 35 லட்சம் ஏகர் சாகுபடியாகிறது. இந்த பயிர் விசேஷமாய் வட இந்தியாவில் மலைப் பிரதேசங்களில் சாகுபடியாகிறது. மெல்லிதான கெட்டிக் கழிகள்தான் முக்யமாய் பயிராக்கப் படுகிறது. வெள்ளைச் சர்க்கரை செய்யப்படுகிறதில்லை. சர்க்கரை இறக்குமதி அதிகமாயிருப்பதால் சர்க்கரைக்கு விலைப் பிரிசம் கிடையாது. நல்ல ஜாதிக் கரும்பை விருத்தி செய்ய உத்தேசித்து சவர்ன்மெண்டார் கோயம்பத்தூரில் ஒரு கரும்பு சாகுபடிப் பண்ணையை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். பேஹார் வகையரா மாகாணங்களில் சர்க்கரை செய்யும் சில தொழிற் சாலைகளும் சிறிது பலமாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

எண்ணெய் விதைகள்.—முக்கியமானவை, எள்ளு, ஆளிவிரை, கடுகு வகையரா, பயிர்கள். ஆளிவிரை அல்லது சணல் விரை வங்காளத்தில் அதிகமாய் சாகுபடியாகிறது. பேஹார், ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்கள் இவைகளிலும் அதிக சாகுபடி யுண்டு. விதைக்காகவே சாகுபடி செய்யப்படுகிறது. வளர்ச்சி குட்டையாயிருக்கும் ஒரு ஏகருக்கு 500 முதல் 600 பவுண்டு விதையாகும். இந்த விதை யெல்லாம் சொல்ப பாகம் எண்ணெயாக்கப்படுவது போக, மீதி ஏற்றுமதி செய்யப்படுகிறது. எள்ளு விதை குளிர் காலத்தில் இந்தியாவின் தென்பாகத்தில் சாகுபடியாகிறது. இந்தவிதை யனேகமாய் ஏற்றுமதி செய்யப்படுகிறது.

சணல் நார் கீழ் வங்காளத்தில் கங்கை பிரமபுத்திரா நதிகள் பாயும் பிரதேசங்களில் பயிராக்கப்படுகின்றது. இதற்கு பூமி ஈரமாயிருக்கவேண்டும். நதிகளின் வண்டல் ஜலம் பூமிகளில் படிவதினால் எரு வேண்டியதில்லை. இது 10, 11 அடி உயரத்திற்கு வளர்கிறது. பயிர் முதிர்வதற்கு முந்தி அறுக்கப்பட்டு 3-வாரம் வரை தண்ணீரில் ஊறப்போடப்படுகிறது. பிறகு நாரை அடித்து எடுக்கிறார்கள். இதில் நல்ல லாபம் கிடைக்கிறது.

புகையிலை—இது வங்காளம், பேஹார், பம்பாய், சென்னை, பர்மா இந்த தேசங்களில் அங்கங்கே பயிரிடப்படுகிறது. விதை விதைக்கப்பட்டு இளம் பயிர்களை பிடுங்கி நடுகிறார்கள். இதற்கு அதிக ஜாக்கிரதை தேவையானதால் சொல்பம் சொல்பமாய்த்தான் சாகுபடி செய்யப்படுகிறது. இந்த பயிருக்கு தண்ணீர் பாசனம் அதிகம்வேண்டும். பிப்பிரவரி மாதம் முதல் பயிர் முதிர்கிறது. ஹுக்காக் குடிப்பதற்கு கறுப்பு புகையிலை செய்கிறார்கள். சுருட்டுக் குடிப்பதற்கு மஞ்சள் புகையிலை செய்கிறார்கள்.

தயிர் பால் வெண்ணெய்கள்—இந்தியா முழுதிலும், இது ஒரு பெரிய தொழிலாகும். பசுக்களைவிட எருமைகள் ஜாஸ்தியான பாலும் வெண்ணெயும் கொடுக்கிறது. ஆனல் தீனிச்செலவு ஜாஸ்தி. நெய்யும் தான் முக்கியமாய் செய்யப்பட்டு விற்கப் படுகின்றன. டவுன்களில் சுத்தப்பாலும் நெய்யும் அகப்படுவது கஷ்டம். இதில் கூட்டுரவு முயற்சிகள் பயன் பட்டு வருகின்றன.

---

* கீழ் குறித்துள்ள தொகைகள் யாவும் ஆயிரங்களாகக் குறிக்கின்றன.

### இந்தியாவில் நில விஸ்தீரணத்தின் பிரிவுகள்.

| | 1914—1915 ஏகர் |
|---|---|
| சர்வே நிலத்தின் விஸ்தீரணம் * | 619,311 |
| காட்டுக்குள்பட்ட நிலத்தின் விஸ்தீரணம் ... ... | 82,935 |
| விவசாயத்திற்குப் பயன்படாத நிலத்தின் விஸ்தீரணம் ... | 145,427 |
| காம்பல்லாத நிலத்தின் விஸ்தீரணம் ... ... ... | 115,080 |
| காம்பு நிலத்தின் விஸ்தீரணம் ... | 45 897 |
| மகசூல் நிலத்தின் விஸ்தீரணம் | 227,[illegible]1 |
| பாசனத்துக்குட்பட்ட நிலத்தின் விஸ்தீரணம் ... ... | 47,194 |

### உணவுப் பொருள்கள் சாதுபடியாகும் நிலத்தின் விஸ்தீரணம்.

| | 1914—1915 ஏகர் |
|---|---|
| அரிசி ... ... ... | 77,669 |
| கோதுமை ... ... | 25,451 |
| பார்லி ... ... ... | 7,905 |
| ஜாவார் ... ... ... | 21,223 |
| பஜ்ரா ... ... ... | 16,042 |
| கேழ்வரகு ... ... | 4,251 |
| சோளம் ... ... ... | 6,188 |
| கொள்ளு ... ... | 14,364 |
| வேறுசில தானியங்கள் ... | 31,412 |
| மொத்தம் | 204,505 |
| சர்க்கரை ... ... | 2,459 |
| வேறுசில மகசூல் ... ... | 8,200 |
| மொத்தம விஸ்தீரணம் | 215,164 |

### உணவுப்பொருள் அல்லாத தானியங்கள் சாதுபடியாகும் நிலத்தின் விஸ்தீரணம்

| | 1914—1915 |
|---|---|
| யாளிவிதை ... ... | 2,526 |
| எள்ளு ... ... ... | 4,478 |
| கடுகு ... ... ... | 4,144 |
| வேர்க்கடலை ... ... | 2,379 |
| வேறு தானியங்கள்... ... | 1,806 |
| மொத்தம் | 15,333 |
| பஞ்சு ... ... ... | 15,222 |
| சணல் ... ... ... | 3,309 |
| வேறு நார்கள் ... ... | 997 |
| நீலம் ... ... ... | 146 |
| அபினி ... ... ... | 179 |
| காப்பிக்கொட்டை ... ... | 87 |
| தேயிலை ... ... | 584 |
| புகையிலை ... ... | 1,056 |
| ஆடுமாடுகளுக்குத் தீனி ... | 6363 |
| உணவுப் பொருள் அல்லாத தானியங்கள். ... ... | 1,752 |
| ஆகமொத்தம் | 45,007 |

# சிறைச்சாலை.

---

சிறைச்சாலை யென்பதைச் சீர்திருத்தச் சாலையெனக் கொள்ளலும் ஒக்கும். சிறை யென்பது காப்பு. யாதாமொரு குற்றத்தின் பொருட்டுத் தண்டிக்கப்படு மொருவனை இனி அத்தகைய குற்றங்களைச் செய்யா வண்ணம் சீர்திருத்தஞ்செய்யச் சிறைப்படுத்தும் இடத்திற்கே சிறைச்சாலையெனப்படும். சிறைச்சாலைகள் எந்நாட்டிலுமுண்டு. இந்நாட்டில் புராதன காலந்தொட்டே சிறைச்சாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. சாதாரண கிராமங்களிலுங்கூட சிறைச்சாலைகள் இருந்தன. ஆனல் புராதன சிறைச்சாலைகள் தற்காலத்திய சிறைச்சாலைகளைப் போலிருந்ததில்லை. அக்காலத்திய சிறைச்சாலைகள் நாகரீகமா யிருந்ததில்லை. மண்சுவற்றினல் கட்டப்பட்ட அநேக சிறு அறைகள், சரியான சூரிய ஸ்பரிசமின்றி யிருந்ததால் காற்றுப்புகுவதற்கு சரியான மார்க்கமின்றி யிருந்தன. தரைகள் ஈரமாயும் மேடுபள்ளங்களுள்ளதாயும், அற்ப உயிர்களின் நடமாட்டத்திற் குற்றதாயுமிருந்தன. மேலும் இச்சிறைச்சாலைகள் உயரமில்லாதனவாய்ச் சிறிய குடிசைகள்போ லிருக்கும். குற்றவாளிகளுக்குப் பெரிய பெரிய இரும்புச் சங்கிலிகளை விலங்குகளாக மாட்டி, கடை வீதிகளுக்கும் இதர இடங்களுக்கும் வேலைக்காக அனுப்புவதும் வழக்கம். ஆகவே முற்காலத்தில் சிறைச்சாலைகள் நாகரீகமுள்ளனவா யிருந்தனவெனக் கூறுதல் தகா. இப்பொழுதிருக்கும் சிறைச்சாலைகளோ வெகு நாகரிகமுள்ளனவையாய், அநேக சௌகரியங்களுடனிருக்கின்றன.

இந்தியாவில் சிறைச்சாலைகளில் சாதாரணமாக 1894-ம் வருஷத்திய சிறைச்சாலைச் சட்ட முறைகளையே, அனுஷ்டித்துவரப்படுகின்றன. மேலும், இந்தியா கவர்ன்மெண்டினலும் அந்தந்த மாகாண கவர்ன்மெண்டுகளினலும் அப்போதைக்கப்போது செய்யப்பட்டுவரும் விதிகளுங் ஆதாரணைக்குக் கொண்டு வரப்படுகின்றன. இந்தியன் பினல் கோட் என்கிற குற்றச் சட்டமுறைகள் பிரகாரம், குற்றவாளிகளாக ஏற்பட்டவர்களுக்கு, தீவாந்தர சிக்ஷை, கடின காவல் சிக்ஷை, சாதாரண காவல் சிக்ஷை, முதலிய தண்டனைகள் விதிக்கப்படுகின்றன. கடன்காரர்களுக்கும், குற்றஞ் செய்தவர்களில் விசாரணையி லிருக்கப்பட்டவர்களுக்கும் சிறைச்சாலைகளில் பிரத்தியேகமான இடமுண்டு.

### சிறைச்சாலைகள் மூன்றுவிதம்.

சிறைச்சாலைகளை மூன்று வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதலாவது ஒருவருஷகாலத்திற்கு மேற்பட்ட தண்டனையடைந்த குற்றவாளிகளுக்காக ஏற்பட்டிருக்கும் ஸெண்ட்ரல் ஜெயில்கள்; இரண்டாவது, பிரதி ஜில்லாவின் தலைமை ஸ்தானத்தில் ஏற்பட்டிருக்கும் ஜில்லா ஜெயில். மூன்றாவது விசாரணையிலிருந்து கொண்டிருக்கும் குற்றவாளிகளுக்காகவும், ஸ்வல்ப காலத்திற்கு சிறைச்சாலை தண்டனையடைந்திருக்கும் குற்றவாளிகளுக்காகவும், ஏற்பட்டிருக்கும் சப் ஜெயில்களும் லாக்கப்புகளும். ஒவ்வொரு மாகாணத்திலும் நியமிக்கப்பட்டிருக்கும் இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்று சொல்லப்பட்ட சர்க்கார் உத்தியோகஸ்தரின் அதிகாரத்தின் கீழ் சிறைச்சாலைகளிருந்து வருகின்றன. அவர்கள் இந்தியன் மெடிகல் ஸெர்விஸ் என்கிற பரீக்ஷையில் தேர்ந்தவரா யிருக்கவேண்டும். அவருக்கு ஜெயில் இலாகாவில் அனுபவமுமிருக்க வேண்டும். சில ஜெயில்களில் ஸூப்பிரின்டெண்டண்டு என்று சொல்லப்பட்ட மேல் விசாரணை செய்கிறவர்களும் இந்தியன் மெடிகல் ஸெர்விஸ் என்கிற பரீக்ஷையில் தேர்ந்தவர்களாகவே யிருக்கின்றனர். ஜில்லா ஜெயிலானது அந்தந்த ஜில்லாவைச் சேர்ந்த ஸிவில் ஸர்ஜனுடைய மேல் பார்வைக்குட்பட்டிருக்கிறது. அந்தந்த ஜில்லா மாஜிஸ்டிரேட்டும் அதை அடிக்கடி தணிக்கை செய்து வருவார். பெரிய ஸெண்ட்ரல் ஜெயில்களில் ஸூப்பிரின்டெண்டண்டுடன்கூட உதவி ஸூப்பிரின்டெண்டண்டு ஒருவர் நியமிக்கப்பட்டு, அவருடைய மேல் பார்வையில் ஜெயிலில் கைத்தொழில் வேலைகள் நடக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதர ஸெண்ட்ரல் ஜெயில்களிலும், ஜில்லா ஜெயில்களிலும், தேவையானவளவு உதவி வைத்தியர்கள் நியமிக்கப்படுகிறார்கள். எல்லா ஸெண்ட்ரல் ஜெயில்களிலும் ஜில்லா ஜெயில்களிலும் குற்றவாளிகளைக் கவனித்து வருவதற்காக, ஜெயிலர்களும், வார்டர்

களும், மற்ற சில்லறை உத்தியோகஸ்தர்களும் ஜெயில் சர்வீஸ் உத்தியோகஸ்தர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

கைதிகளுக்கு வேலை.

கைதிகள் அநேகமாய் ஜெயில் கட்டடத்திற்குள், அதாவது ஜெயில் மதிலுக்குள்ளேயே, வேலைசெய்யும்படி நிபந்தனை ஏற்பட்டிருக்கிறது. ஆனால் சிலவேலைகளில் ஜெயில் மதிலுக்கு அப்பாலும், அநேக கைதிகள் வேலைசெய்ய வேண்டியதாக ஏற்படுகின்றன. பஞ்சாப் மாகாணத்தில் ஜீலம் கால்வாயை வெட்டுவதற்காக, அநேக கைதிகள் வேலையின் மேல் விடப்பட்டார்கள். ஜெயில் மதிலுக்குள்ளேயே, வேலைசெய்கிற கைதிகள் ஜெயிலுக்குச் சம்பந்தமான வேலைகளையும் மராமத்து வகையரா வேலைகளையும், செய்யச் சொல்லப்படுகிறார்கள். அவர்களுக்கு வொர்க் ஷாப்புகளிலும் கைத்தொழிற்சாலைகளிலும் வேலையிடுவதுண்டு. ஜெயிலில் கைதிகளால் செய்யப்பட்டுள்ள சாமான்கள் கைத்தொழில் திறமையினாலும், குற்றத் தண்டனையாக தேகசிரமப்பட்டும் செய்யப்பட்டுள்ளவை. கைத்தொழில்கள் விசேஷமாய் நடந்துவருகின்றன. ஆனால், வியாபாரிகளுடன் போட்டி போடாமலிருக்கும்படி அவ்வளவு ஜாக்கிரதையாக தான் ஜெயிலில் கைத்தொழில் வேலை நடந்துவருகிறது. கூடியவரையிலும் கவர்மெண்டைச் சேர்ந்த டிபார்டுமெண்டுகளுக்குத் தேவையாயிருக்கும் சாமான்கள் தான் ஜெயில்களில் செய்யப்படுகின்றன. அச்சு போடுவது, கூடாரம் செய்வது, உடைகள் செய்வது, ஆகிய இவைகள் தான் அங்கு சாதாரணமாகச் செய்யப்படும் வேலைகள். வாலிபர்களுக்கு மாத்திரம் பாடசாலைகளில் கல்விப்பயிற்சி செய்துவைப்பது வயது வந்த மனிதர்களுக்குக்கூட, படிப்பு முன் கற்றுக்கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால், இந்தியாவில் அநேகமாய் ஜெயிலுக்கு வரும் மனிதர்களுக்குப்படிப்பு கற்றுக்கொடுப்பதனால் பிரயோஜனமில்லையென்றும், தகுதியல்லவென்றும், அது நிறுத்திவிடப்பட்டது.

கைதிகளின் குணங்கள்.

சிக்ஷையடைந்து ஜெயிலில் வந்திருப்பவர்கள் சாதாரணமாய் நல்லகுணத்தை யுடையவர்களாகவேயிருக்கிறார்கள். துணிச்சலுடன் இருப்பவர்கள் கொஞ்சம்தான். கைதிகள் தங்களுக்கு இட்டவேலையைச் செய்யாமலிருப்பதுதான் அவர்கள் பேரில் உண்டாகும் சாதாரணமான குற்றம். அநேகமாய் இப்படிப்பட்ட குற்றங்களுக்கெல்லாம் விதிக்கப்படும் தண்டனைகள் லகு தண்டனைகள். பாரி தண்டனைகள் விதிக்கப்படுமேயானால் முதலில் கைவிலங்கு கால்விலங்குகளைப் போடுவதுண்டு. குற்றவாளிகளின் தேகத்தில் கோடு விழும்படியாக பிரம்பு அடி கொடுப்பதும் வழக்கம். ஆனால் மிகவும் சிலருக்குத்தான் இம்மாதிரியான தண்டனை விதிக்கப்படும் அதுகூட இப்பொழுது குறைந்துகொண்டே வருகிறது.

வாலிப கைதிகள்.

வாலிப குற்றவாளிகளுக்கு, அதாவது பதினைந்து வயதுக்குள் ளிருப்பவர்களுக்கு, சிறைச்சாலை தண்டனை விதிக்கவேண்டுமென்ற அவசியமில்லை. குற்றஞ் செய்த வாலிபர்களை வேறு விதமாக புத்தி திருப்பி வைப்பதற்கு மார்க்கமிருக்கும் போது, அவர்களை ஜெயிலுக்கு அனுப்பக் கூடாதென்று சட்டம் முறையிடுகிறது. அதாவது, ரிபர்மேடரி ஸ்கூல் என்று சொல்லப்படும், ஒரு பாடசாலைக்கு அவர்களை அனுப்பி, பதினெட்டாம் வயதுக்கு மேல் அவர்களை அங்கு நிறுத்தாமல், மூன்று வருஷகாலத்திற்கு குறையாமலும் ஏழு வருஷகாலத்திற்கு மேற்படாமலும், அவர்களுக்குத் தகுந்தபடி சிக்ஷை செய்வித்து குணங்களை சீர்திருத்தி, பிறகு அவர்களுடைய பெற்றோரிடத்திலோ, அல்லது அவர்கள் யாருடைய சம்ரக்ஷணையி லிருக்கின்றார்களோ அவர்களிடத்திலோ, அந்த குற்றவாளியின் நன்னடத்தைக்காக ஒரு பாண்டு (உறுதி மொழிப் பத்திரம்) எழுதி வாங்கிக்கொண்டு, அவர்களிடத்தில் ஒப்பித்து விடுகிறதுதான் சட்ட முறை.

வயதுவந்த யௌவன கைதிகள்.

வயது வந்த யௌவன குற்றவாளிகளுக்குத் தண்டனை விதிக்கப்படுவதைப் பற்றி சில காலமாக ஜெயில் அதிகாரிகள் ஆலோசித்து வருகிறார்கள். சிறைச்சாலை சட்டப்படிக்கு 18 வயதுக்குள் ளிருக்கும்படியான குற்றவாளிகளை வயதுமுதிர்ந்த குற்றவாளிகளோடு சேர்த்து வைக்காமல் தனியே வைக்க வேண்டும். ஆனால், பதினைந்து வயதுக்கு மேல்பட்ட யௌவன குற்றவாளிகளுக்கு சதாரணமான ஜெயில் தகுந்ததல்லவென்றும் ரெபர்மேடரி ஸ்கூலுக்கும் அனுப்ப யோக்கியதையில்லையென்றும் மாகாண கவர்மெண்டுகள் போர்ஸ்டல் என்னுமிடத்தில் யௌவன குற்றவாளிகளை எவ்விதமாய் நடத்திவருகின்றார்களோ அவ்விதமாய் நடத்திவருவதற்குத்தகுந்த ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருக்கின்றன.

1905ம் வருஷத்தில் பம்பாய் ராஜதானியிலுள்ள தார்வார் ஜெயிலில் பொறுக்கியெடுக்கப்பட்ட சில வாலிப குற்றவாளிகளுக்கும் பிரத்யேகமாய் ஒரு வகுப்பு ஏற்படுத்தப்பட்டது. 1908-ம் வருஷத்தில் வங்காள மாகாணத்தைச் சேர்ந்த ஆலிப்பூரில் வாலிப குற்றவாளிகளுக்காக பிரத்தியேகமாய் ஒரு ஜெயில் ஏற்படுத்தப் பட்டது. 1909 ம் வருஷத்தில் பர்மாவில் மீக்டெயிலா ஜெயில் ஒன்றும், மதராஸ் ராஜதானியில் தஞ்சாவூர் ஜெயில் ஒன்றும் பதினைந்து வயதுக்குமேல்பட்ட யௌவன குற்றவாளிகளுக்காக ஏற்பாடு செய்யப் பட்டன. ஐக்கிய மாகாணங்களிலிருக்கும் பெய்ரில்லி என்கிற இடத்தில் வாலிப குற்றவாளிகளுக்காக புதியதாக ஒருஜெயில் ஸ்தாபிக்கப்பட்டது. யௌவன குற்றவாளிகளை பஞ்சாப்மாகாணத்தில் லாகூர் ஜில்லா ஜெயிலில் சேர்க்கவேண்டுமென்று 1910-ம் வருஷத்தில் கவர்ன்மெண்டாரால் தீர்மானிக்கப்பட்டது. லாகூர் ஜெயில், போர்ஸ்டல் ஜெயிலில் எவ்வாறு நடத்தப்பட்டு வருகிறதோ அவ்வாறே நடத்தப்பட்டுவருகிறது. சில விஷயங்களில் இதரவிதமான ஏற்பாடுகள் ஏற்கெனவே செய்யப்பட்டிருக்கின்றன. பஞ்சாபில் சென்ற பத்துவருஷகாலமாக இரண்டுஸெண்ட்ரல்ஜெயில்களில் யௌவன குற்றவாளிகளுக்காக பிரத்தியேகமாகரெபர்மேடோரி ஸ்கூல் ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டு நடந்து வருகிறது. வங்காள மாகாணத்தில் சில ஜெயில்கள் போர்ஸ்டல் ஏற்பாட்டுப் பிரகாரம் நடத்திவரப் படுகின்றன. இந்த ஏற்பாடுகளெல்லாம் கைதிகளுக்காகச் செய்ய வேண்டிய கடமையென்று ஜனங்கள் சுறுசுறுப்பாகத் தெரிந்துகொள்ளவில்லை.

### ரெபர்மேடோரி ஸ்கூல்கள்.

இந்தப் பாடசாலைகள் கல்வியிலாகாவால் 1899-ம் வருஷம் முதல்கொண்டு நடத்திவரப்படுகின்றன. அந்தப்பாடசாலைகளின் அதிகாரிகள் அங்கிருக்கும் பிள்ளைகளுக்கு கைத்தொழில் முதலியவற்றில் பயிற்சி செய்து வைக்கவேண்டும். அந்தப்பிள்ளைகள் பாடசாலையை விட்டுப் போனதும் அவர்களுக்கு ஏதாவது ஒரு உத்தியோகம் கிடைக்கும்படி உதவி செய்யவேண்டும். கூடியவரையில், அவர்களுடைய நடத்தைகளையும் கவனித்து வரவேண்டும்.

### தீவாந்திர சிக்ஷை.

பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த குற்றச் சட்டப்பிரகாரம் தீவாந்திரசிக்ஷை செய்வது பழயகால் தண்டனை. இம்மாதிரியான தண்டனை விதிக்கப்பட்டவர்களை அனுப்புவதற்காக அநேக இடங்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. இப்பொழுது இந்நாக தேசங்களுக்குமில்லை, அந்தமான் தீவின் முக்கிய பட்டணமாகிய போர்ட் ப்ளேர் ஒன்றுதான். இப்பொழுதிருக்கும் சட்டங்களின்பிரகாரம், ஆயுள்பரியந்தம் தீவாந்திர வாசம் செய்யும்படி சிக்ஷை செய்யப்பட்டவர்களையும், அல்லது சில வருஷகாலம் தீவாந்திர வாசம் செய்யவேண்டுமென்று சிக்ஷை செய்யப்பட்டு, அதில் இன்னும் ஆறு வருஷகாலம் பாக்கி கழிக்க வேண்டியவர்களையும், அவர்களுடைய தேகஸ்திதி சரியாயிருக்கும் பக்ஷத்தில், அந்தமானுக்கு அனுப்பிவிடவேண்டும். ஸ்திரீயாயிருந்தால் இன்னும் சில நிபந்தனைகள் உண்டு.

### ஆயுள் குற்றவாளிகள்.

இம்மாதிரியான சிக்ஷையில் மனிதர்களுக்கு ஐந்து விதமான ஆசிரமங்களிருக்கின்றன. தீவாந்திரசிக்ஷையான பிறகு, அந்த போய் சேர்ந்தவுடனே, முதல் ஆறுமாதகாலம் ஜெயிலில் அடைக்கப்பட்டிருக்கவேண்டும். பிறகு பதினெட்டு மாதகாலம் இந்தியாவிலிருக்கும் ஜெயில்களிலிருக்கிறமாதிரி மற்றவர்களுடன் கூடஜெயிலில்கலந்திருக்கவேண்டும். பிறகு மூன்றுவருஷகாலம், மூன்றாவது வகுப்பைச் சேர்ந்த குற்றவாளியாகப் பாவிக்கப்பட்டவனாய், பகலில் கடினமான கூலிவேலை செய்யவேண்டும்; இரவில்பாரக்கில் அடைத்துவைக்கப்படுவான். இம்மாதிரி ஐந்து வருஷகாலம் முடிந்தவுடன் அவன் இரண்டாம் வகுப்புக்கு உயர்த்தப்படுவான். அப்பொழுது, கவர்மெண்டு இலாகாவிலேயே ஏதாவது ஒரு வேலைக்கு ஊழியனாகிறான்; இல்லாவிட்டால் கூலிவேலை செய்கிறவனாயிருக்கலாம், எந்த வீட்டிலாவது சேவகனாயிருக்கலாம். இம்மாதிரியாக ஐந்து வருஷகாலம் கழிந்தபின், நன்னடத்தையுள்ள ஒரு குற்றவாளி, முதல் வகுப்புக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறான். அதில் அவனுக்கு மிகவும் சௌகரியமாயிருக்கும். அவன்கொஞ்சம் நிலத்தை வைத்துக்கொண்டு தன்னை சம்ரக்ஷித்துக்கொள்வதற்காக அவனுக்கு அனுமதிகொடுக்கப் படுகிறது. அப்பொழுது அவன் தன் சம்சாரத்தையாவது வரவழைத்துக் கொள்ளலாம்; அல்லது அங்கேயே ஒரு ஸ்திரீயை விவாகஞ் செய்து கொள்ளலாம். கடைசியாக மேலே சொல்லியிருக்கும் மூன்று வகுப்புகளும் அநேக வருஷங்களாக ஆசாரணையிலிருக்

கின்றன. முதல் சொல்லியது, அதாவது, ஆறுமாதம் கடுங்காவல் தண்டனை, சில நாட்களைத் தான் ஆசாமியிலிருந்து வருகிறது. ஏனென்றால் அந்த ஜெயில்கள் 1905-ம் வருஷத்துதான் முடிவு பெற்றன. இரண்டாவது, பதினெட்டு மாதகாலம் கூட்டமாக ஜெயிலிருப்பதற்காக, அப்பேர்ப்பட்ட ஜெயில்கள் இன்னும் கட்டப்படவில்லை.

### ஸ்திரீ கைதிகள்.

ஸ்திரீகள், மூன்று வருஷகாலம், ஜெயில் அத்துக்குள்ளேயே கடும் நிபந்தனைக் குட்பட்டு, ஏதாவது சில வேலைகளை செய்யும்படி உத்தரவு செய்யப்படுகிறார்கள். பிறகு இரண்டு வருஷகாலம் கொஞ்சம் லகுவாக விடப்பட்டு, பார்த்துவரப் படுகிறார்கள். இப்படி ஐந்து வருஷ காலமானபிறகு, அவர்கள் தாங்களே சுயமாகச் சம்பாதித்து தங்களை சம்ரக்ஷணை செய்துகொள்ளலாம். அவர்கள் கலியாணமும் செய்துகொள்ளலாம்.

### ஜெயில் வேலைகள்.

நன்னடத்தையை யனுசரித்தே மேல் வகுப்புகளுக்கு மாற்றுவது, ஜெயில் கட்டுவது, ஜெயில்களில் மராமத்து வகையரா வேலைகளைச் செய்வது, சேனைக்கு உணவுப்பொருள்களைத் தயார் செய்தல், வைத்தியம், கடற்கரை, காடு, இந்த இலாகாக்களிலும், தேயிலைத் தோட்டங்களிலும் மற்றப்படி விவசாயத் தொழில்களிலும், ஜெயிலில் செய்யக்கூடிய கைத்தொழில்களிலும், இவைகளில்தான் குற்றவாளிகள் வேலை செய்யும்படி உத்தரவு செய்யப்படுவார்கள்.

### விடுதலை விபரம்.

ஆயுள்பரியந்தம் தீவாந்தர சிக்ஷை யடைந்திருக்கும் சாதாரணமான ஆண் குற்றவாளிகள் தாங்கள் நன்னடத்தையிலேயே யிருந்து வருவார்களாயின், இருபது வருஷம் கழித்தும் விடுதலையாய் விடுகிறார்கள். மற்றப்படி கொள்ளைகேசுமுதலிய பெரிய குற்றங்களுக்காகத் தண்டிக்கப் பட்டவர்கள் இருபத்தைந்து வருஷங்களான பிறகு விடுதலை செய்யப்படுவார்கள் தக்ஸ் முதலிய குற்றம் புரியும் கூட்டத்தினரை எப்பொழுதும் விடுதலை செய்கிறதில்லை. நன்னடத்தையுடன் கூடிய ஸ்திரீகளை பதினைந்து வருஷமான உடன் விடுதலை செய்துவிடப்படும். விடுதலை செய்யும் விஷயம் கவர்ன்மெண்டின் இஷ்டத்தைப்பொருந்தியது. சிலவேளைகளில் சில நிபந்தனைகளுக் குட்பட்டு தான் விடுவிக்கப் படுவார்கள். குற்றவாளிகளின் இருப்பிடம் முதலிய விவரங்களைத் தெரிந்துகொண்டுதான் விடுதலை செய்யப்படும். விடுதலை செய்யப்பட்டவர்களில் சிலர் அந்த தீவிலேயே சுயேச்சையாக திரிந்துகொண்டிருக்க விருப்பங் கொண்டவர்களாய் அங்கேயே தங்கிவிடுகிறார்கள்.

அந்த குடியேற்ற நாடு ஒரு சூபரின்டெண்டெண்ட்டின் அதிகாரத்திற்குட்பட்டிருக்கிறது. அவருக்கு சகாயமாக சில ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும், இந்திய உத்தியோகஸ்தர்களும், நியமிக்கப்பட் டிருக்கிறார்கள்.

19.2-ம் வருஷத்தில் போர்ட்ப்ளேரில் 11235 குற்றவாளிகளிருந்தார்கள் இதில் ஆண் 10633 பேர், பெண் 602. 1566 ஆண், 272 பெண், குற்றவாளிகள் விவசாயஞ் செய்து கொண்டு, ஜீவித்து வந்தார்கள். அங்கிருந்த மொத்த ஜனத் தொகை 15612.

# தபால் ஆபீஸும், தந்தி ஆபீஸும்.

பிரபஞ்சத்திலுள்ள சாதன உபாயங்களில் தந்தியும் தபாலுமே சிறந்தனவாய் தற்கால நாகரீகத்தை யொட்டினவையாயிருக்கும். இவைகளின் உபயோகம் இவ்வளவென்னக் கூற இயலாது. ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குத் தபால் போகவேண்டுமானால், பண்டைக் காலத்தில் ஆள்வசம் அனுப்புவது வழக்கம். இதனால் காலவிரயம் விசேஷமாக ஆகும். 100 மைல் தூரமுள்ள ஒரு ஊருக்குக் கடிதம் போகவேண்டுமானால், பண்டைக்காலத்தில் சற்றேறக்குறைய ஒரு வாரம் செல்லும். தற்பொழுதோ 3 மணி நேரத்திற்குமேல் செல்வதில்லை. யுத்தகாலங்களிலும் இன்னுமிதர விசேஷ சமயங்களிலும் இத்தந்தி தபால் சாதனங்கள நாட்டிற்கு இன்றியமையாதனவாகும். தபால் தந்தி ஏற்பாடுகள் மிக்க வியப்பைத் தரக்கூடிய சாஸ்திர ஆராய்ச்சிகளிற் சேர்ந்தவை. இவைகள் இந்தியாவில் விர்த்தியாகிக்கொண்டே வருகின்றன. இந்தியா கவர்ன்மெண்டார் இவைகளுக்குப் பிரத்தியேகமாக இலாகா ஒன்று ஸ்தாபித்திருக்கின்றனர்.

இந்தியாவில் 1837-ம் வருடந் தொடங்கியே தபால் சாதனமேற்பட்டது. அதற்கு முன் ஆள்வசம் அனுப்பப்பட்டு வந்தது. தபால் ஆபீஸுகள் ஆரம்பமான காலத்தில், ஒரு தோலா எடையுள்ள தபால், கல்கத்தாவிலிருந்து பம்பாய்க்கு அனுப்ப ஒரு ரூபாய் செலுத்தப்பட்டது. வரவர தபால் அனுப்பும் செலவு குறைவுபட்டது.

## தபால் ஆபீஸ்.

தபாலாபீஸின் நிர்வாகமானது டைரக்டர் ஜெனரல் என்னும் அதிகாரிக்குட்பட்டதாய், இந்தியாகவர்ன்மெண்டின் வியாபாரக் கைத் தொழில் இலாகாவிற்குக் கீழ்ப்பட்டிருக்கின்றது. தலைமை ஸ்தானாதிபதியான இவருக்கு உதவியாக உப (டிப்டி) டைரக்டர் ஜெனரல் இருவரும், அஸிஸ்டெண்ட் டைரக்டர் ஜெனரல்நால்வரும், ஸூபரின்டெண்டெண்டின் கிரேடில் அஸிஸ்டெண்டுகள் இருவருமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறார்கள். தபால் காரியங்களுக்காக இந்தியாவானது எண்வகைப் பிரிவுகளாகக் கீழ்கண்டபடி பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவை, வங்காளம், பம்பாய், பர்மா. மத்திய கீழ்வங்காளம் அஸாம், சென்னை, பஞ்சாபு, வடமேற்குப் பிராந்தியம், ஐக்கிய மாகாணங்களாம். மத்திய பிரிவானது மத்தியமாகாணம், மத்திய இந்தியா, இராஜபுதனம் ஆகியவைகள்.

புதிய வங்காளமும், பீகார் ஒரிஸாவும், தற்பொழுதிருக்கும் வங்காளம் கிழக்கு வங்காளப் பிரிவுகளுக்கு உட்பட்டிருந்த போதிலும், மேற்கூறிய பிரிவுகள் சமீபத்திலேயே செய்யப்பட்டன. மேற்கூறிய பிரிவுகளிலுள்ள ஒவ்வொரு போஸ்ட்மாஸ்டர் ஜெனரல்களும் டைரக்டர் ஜெனரலுக்குக் கீழ்ப்பட்டவர்களாய்த் தங்கள் பிரிவுகளிலுள்ள தபாலாபீஸ் சம்பந்தமான சகல காரியங்களுக்கும் பொறுப்புள்ளவர்களாகிறார்கள். ரெயில் மார்க்கமாயும் கப்பல்மார்க்கமாயுஞ் செல்லும் தபால் முதலியவைகளுக்குப் பிரத்தியேகமாக நான்கு ஆபீஸர்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றார்கள். இப்போஸ்ட்மாஸ்டர் ஜெனரல்களுக்கு பெர்ஸனல் அஸிஸ்டெண்டுகள் கொடுப்பதுடன் பெரிய பிரிவுகளாக இருக்கும் பக்ஷத்தில் உப (டிப்டி) போஸ்ட்மாஸ்டர் ஜெனரல்களும் கொடுக்கப்படுவர். மேற்கூறிய எண்பிரிவுகளும், இன்ஸ்பெக்டர் ஜெனரல்களின் அதிகாரத்திற் குட்பட்டிருக்கும் நான்கு டிவிஷன்களுக்கும், முறையே ஒவ்வொரு ஸூபரின்டெண்டெண்டும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். ஒவ்வொரு ஸூபரின்டெண்டெண்டுக்கும் இன்ஸ்பெக்டர் என்னும் பெயரைக்கொண்ட அநேக உத்தியோகஸ்தர்களும், அஸிஸ்டெண்டு ஸூபரின்டெண்டெண்டுகளுமிருக்கின்றனர். ஒவ்வொரு ஜில்லாவிலும் ஹெட்போஸ்டாபீஸ் ஒன்று இருப்பதுடன் அந்த ஜில்லாவிலுள்ள மற்ற பாகங்களில் பற்பல சிறிய போஸ்டாபீஸுகளும் கணக்குப் பார்க்கும் நிமித்தம் ஏற்பட்டிருக்கின்றன. கல்கத்தா பம்பாய், சென்னை முதலிய இடங்களிலுள்ள ஜெனரல் போஸ்டாபீஸிலுள்ள போஸ்ட் மாஸ்டர்களும், இதர பெரிய தபால் உத்தியோகஸ்தர்களும் முன்புகோராக போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் அவர்களுக்கு கீழ்ப்பட்டிருந்தபோதிலும், மற்றைய போஸ்டாபீஸ்களிலுள்ள ஸூபரின்டெண்டெண்டுகளைப்போலவே, பரிசோதனை, நிய

மணம், ரஜா, தண்டனை முதலியவைகளில் சரிசமானமான அதிகாரங்களையே வகிக்கின்றனர். இராஜதானி போஸ்ட்மாஸ்டர்கள் தங்களுக்குக் கீழ் ஒன்று இரண்டு சூபரின்டெண்டெண்டுகளை வைத்துக் கொள்ளலாம். போஸ்ட்மாஸ்டரின் காரியங்கள் அதிகமாகித் தம்மால் செய்ய இயலாதென்றிருக்குங் காலத்தில் தமக்கு உபகாரமாக ஒரு டிபுடி போஸ்ட்மாஸ்டரை நியமிக்கும், இதற்குஞ் சரிவராமல் காரியங்கள் அதிகமாயிருப்பின் ஒன்று அல்லது இரண்டு அஸிஸ்டெண்டு போஸ்ட்மாஸ்டர்களையும் நியமித்துக்கொள்ளலாம். ஹெட் ஆபீஸுக்குக் கீழ்ப்பட்ட ஸப் போஸ்ட் ஆபீஸுகள் தங்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கும் கிளைபோஸ்டாபீஸுகளின் கணக்கு முதலியவைகளைப் பரிசோதிப்பதும், பொது ஜனங்களுடன் இலவாதேவி வைத்துக்கொள்வதும், அப்போதைக்கப்போது கவர்ன்மெண்டாருடனும், உள்ளூர்க்காரருடனும் போக்குவரவு செய்துகொள்வதுமான இத்தியாதி அதிகாரங்களைப் பெற்றிருக்கின்றன. மேற்கூறிய ஸப் ஆபீஸுகளில் வேலைக்குத் தக்கமாதிரி, ஒருவரோ அல்லது அவருக்கு உபகாரமாக இரண்டொரு சிப்பந்திகளோ இருப்பார்கள். கிளை தபாலாபீஸுகள் கிராமங்களுக்காக ஏற்பட்டன. இக்கிளை ஆபீஸுகளில் சாதாரணமாக போஸ்டாபீஸ் இலாகாவைச் சேர்ந்த சிறிய சிப்பந்திகளையாவது அல்லது இலாகா மூலமாய் அக்கிராமத்திலுள்ள பள்ளிக்கூடத்து உபாத்தியாயர், கடைக்காரர், பண்ணைக்காரர் முதலியவர்களைச் சொற்ப தொகை கொடுத்தாவது நியமிப்பது வழக்கம். தபால் ஆபீஸ் சம்பந்தமான சகல கணக்குப் பரிசோதனைகளும் தபால் தந்தி ஆபீஸுகளுக்கென்று பிரத்தியேகமாக ஏற்படுத்தியிருக்கும் அக்கௌண்டெண்ட் ஜெனராலுக்கு ஒப்புவிக்கப்பட்டிருப்பதினால், இவர் டைரக்டர் ஜெனராலுக்குக் கீழ்ப்பட்டிராமல் இந்தியா கவர்ன்மெண்டின் அரசிறை இலாகா மெம்பராகயிருக்கிறார். இவருக்கு உதவியாக டிப்டி அக்கௌண்டெண்டும் அஸிஸ்டெண்ட் அக்கௌண்டெண்டுகளும் சிற்சில சிப்பந்திகளும் அநேக பிரிவுகளைப் பார்வையிட்டுவருகின்றனர். 883ம்வ நடத்து நிபந்தனைபடி அநேக சப் போஸ்ட் ஆபீஸுகளும்சில ஹெட்போஸ்டாபீஸுகளும் தந்திவேலைகளைப்பார்த்து வருவதினால் கூட்டாபீஸ் என்று பெயரிடப்பட்டு வருகின்றன.

தந்தி செலவின் பொருட்டைப் பிரத்யேகமாய்த் தந்தி இலாகாவே எடுத்துக்கொண்டு தந்தியின் வாயிலாக வரும் வருமானத்தை, வரவு வைக்கப்படுகிறது.

பின்வருவது உள்ளூர் தீர்வை.

| கடிதங்கள். | தபாற் செலவு முன்னதாகக் கட்டும்பொழுது | தபால் செலவு முன்னதாகக் கட்டாமலிருக்கும்பொழுது. | தபாற் செலவு குறைவாகக் கட்டும் பொழுது. |
|---|---|---|---|
| | அணா | | |
| 1 தோலாவிற்கு அதிகப்படாதது ... | $\frac{1}{2}$ | தபால் கொடுக்கும்பொழுது முன் கட்டணத்திற்கு இரட்டிப்பு கட்டணம். | தபால் கொடுக்கும்பொழுது குறைந்த கட்டணத்திற்கு இரட்டிப்பு கட்டணம். |
| 1 தோலாவிற்கு மேற்பட்டு 10 தோலாவிற்கு அதிகப்படாதது ... | 1 | | |
| ஒவ்வொரு இதர 10 தோலாவிற்கு அல்லது எடையின் பாகத்திற்கு ... | 1 | | |
| புத்தகமும் மாதிரி பாக்கட்டுகளும். | | | |
| பிரதி 10 தோலாவிற்கும் அல்லது அவ்வெடையின் பாகத்திற்கும் ... | $\frac{1}{2}$ | | |

### போஸ்ட் கார்டுகள்.

தனி $\frac{1}{4}$ அணா
ரிப்ளை $\frac{1}{2}$ அணா

தபால் இலாகாவைச்சேர்ந்த கார்டுகளல்லாத இதர வியாபார சம்பந்தமான கார்டுகளுக்கு முன் கட்டணம் முழுமையும் செலுத்தவேண்டும்.

பிரதி 40 தோலா அல்லது அதின் பாகம் முதல் 440 தோலாவரை 0 2.

440 தோலாவிற்கு மேற்பட்டு 480 தோலாவிற்கு அதிகப்படாதது. 0 3

பிரதி 40 தோலா அல்லது அதின் பாகத்தின் முறை முதல் 800 தோலாவரை 0 4

### ரிஜிஸ்டர் கட்டணம்.

ரிஜிஸ்டர்செய்யும் ஒவ்வொரு கடிதம், கார்டு புத்தகம், மாதிரி பாக்கட் அல்லது பார்சலுக்கு 0 2

### சாதாரண மணியார்டர் கட்டணம்.

5-ரூபாய்க்கு மேற்படாத எந்த தொகைக்கும் 0 1

5-ரூபாய்க்கு மேற்பட்டு 10-ரூபாய்க்கு அதிகப்படாத எந்த தொகைக்கும் 0 2

10 ரூபாய்க்கு மேற்பட்டு 15-ரூபாய்க்கு அதிகப்படாத எந்த தொகைக்கும் ... 0 3

15 ரூபாய்க்கு மேற்பட்டு 25 ரூபாய்க்கு அதிகப் படாத எந்த தொகைக்கும் ... 0 4

25 ரூபாய்க்கு மேற்பட்டு 600 ரூபாய்க்கு அதிகப் படாத எந்த தொகைக்கும் ... 0 4

ஒவ்வொரு 25 ரூபாய்க்கும் 4 அணாவும், மிச்சமானது 5 ரூபாய்க்கு மேற்படாமலிருப்பின் 1 அணாவும் 10 ரூபாய்க்கு மேற்படாமலிருப்பின் 2 அணாவும் 15 ரூபாய்க்கு மேற்படாமலிருப்பின் 3 அணாவுமாக முறையே கட்டணம் செலுத்த வேண்டும்.

### தந்தி மணியார்டர் கட்டணம்.

சாதாரண மணியார்டர்களுக்குரிய கட்டணத்துடன் தந்திசெலவும் சேர்க்கப்படும். தந்தி செலவானது. "எக்ஸ்பிரஸ்" அல்லது சாதாரணம் என்ற முறைப்படி வாங்கப்படும்.

### வி. பி. கட்டணம்.

இவை அனுப்புவோனுக்குச் சேர்க்கும் குறித்த தொகையின்படி கணக்கிட்டு அதின்மேல் சாதாரண மணியார்டர் கட்டணம் செலுத்த வேண்டும்.

### இன்ஷியூரன்ஸ் கட்டணம்.

இன்ஷியூர் செய்யும் ஒவ்வொரு 50 ரூபாய்த் தொகைக்குக் கட்டணம் 1 அணா

### ரசீது கட்டணம்.

ஒவ்வொரு ரிஜிஸ்டர் சாமானுக்கும் 1-அணா.

சிலோனும் போர்த்துகல் இந்தியாவும் மேற்கூறிய தீர்வையின் பொருட்டு உள்ளூரைச் சேர்ந்தவையாகக் கொள்ளப்படும். ஆனல் இன்ஷியூரன்ஸ் கட்டணம் பிரத்தியேகம்.

### வெளியூர் தீர்வை.

(மேற் கூறிய சிலோன், போர்த்துகல் இந்தியா, இன்ஷியூரன்ஸ் கட்டணம் நீங்கலாக ஏனைய வைகள் வெளியூர் தீர்வையாகக் கொள்ளப்பட மாட்டா.)

### கடிதங்கள்.

| | |
|---|---|
| இங்கிலாந்து ஸ்காட்லாண்டு ஐயர்லாந்து, இதர பிரிட்டிஷ் சுவாதீனநாடுகள், ஈஜிப்டு, செளடான் முதலிய நாடுகளுக்கு | ஒவ்வொரு அவுன்ஸுக்கும் அல்லது அதின் பாகத்திற்கும் 1 அணா. |
| இதர நாடுகளுக்கு குடியேற்ற நாடுகள். ஊர்களுக்கு | ஒவ்வொரு அவுன்சுக்கும் $2\frac{1}{2}$ அணா, ஒரு அவுன்சுக்கு மேற்பட்ட ஒவ்வொன்றுக்கும் அதின் பாகத்திற்கு $1\frac{1}{2}$ அணா விழுக்காடு சட்டவேண்டும் |

போஸ்ட் கார்டுகள் தனி 1 அணா
,, ,, ரிப்ளை 2 அணா

அச்சிட்ட பிரதிகள்:—ஒவ்வொரு 2 அவுன்சுக்கும் அல்லது அதின் எடையின் பாகத்திற்கும் $\frac{1}{2}$ அணா.

வியாபார பிரதிகள்:—ஒவ்வொரு பாகட்டும் $2\frac{1}{2}$ அணா கட்டணத்திற்குட்பட்டு பிரதி 2 அவுன்சுக்கும் அல்லது அதின் பாகத்திற்கும் $\frac{1}{2}$ அணா.

மாதிரிகள்:—ஒவ்வொரு பாக்கட்டும் 1 அணா கட்டணத்திற்குட் பட்டுபிரதி 2 அவுன்சுக்கும் அல்லது அதின் பாகத்திற்கும் $\frac{1}{2}$ அணா.

மேற்குறிய தொகைகள் முன்னதாகவே கட்டணம் செலுத்தும் தபால்களுக்கே உரியவை.

பார்சல்கள் (முன்கட்டணம் கட்டாயம்) கட்டணமானது நாடுகளுக்குற்றவாறு வாங்கப்படும். பின்வருவது ப்ரிட்டிஷ தேசத்திற்குக் கட்டணக்கிரமம்.

| | ஜிப்ரால்டர் வழியாக | நிலத்தின் வழியாக. |
|---|---|---|
| | ரூ. அ. பை. | ரூ. அ. பை. |
| 3 ராத்தலுக்கு மேற்படாதது | 0 12 0 | 1 8 0 |
| 7 | 1 8 0 | 2 4 0 |
| 11 | 2 4 0 | 3 0 0 |

ரிஜிஸ்ட் ரேஷன் கட்டணம்:—காகிதம் போஸ்ட் கார்டு பாக்கட் ஒவ்வொன்றுக்கும் 2 அணா.

மணியார்டர்:—ரூபாய் நடமாடும் ஊர்களில் சாதாரணமாக உள்ளூர் மணியார்டர் கட்டணத்தை யொக்கும். ரூபாயல்லாத பொன்னுணயங்கள் நடமாடும் நாடுகளுக்கு ஏற்பட்டிருக்கும் கட்டணங்களின் கிரமம் காண்க—

| | | | | |
|---|---|---|---|---|
| 1-பவுனுக்கு மேற்படாததற்கு | | | | 0 3 0 |
| 1-பவுனுக்கு மேற்பட்டு 2-பவுனுக்கு அதிகப்படாததற்கு | | | | 0 5 0 |
| 2-பவுனுக்கு | ,, | 3 | ,, | 0 8 0 |
| 3 ,, | ,, | 4 | ,, | 0 10 0 |
| 4 ,, | ,, | 5 | ,, | 0 12 0 |
| 5 ,, | ,, | | | 0 12 0 |

ஒவ்வொரு முழுத்தொகை கொண்ட 5-பவுனுக்கு மிச்சமுள்ள தொகைக்கு 12-அணாவும், மிச்சமானது 1-பவுனுக்கு மேற்படாமலிருப்பின் 3-அணாவும், 2-பவுனுக்கு மேற்படாமலிருப்பின் 5-அணாவும், 3-பவுனுக்கு மேற்படாமலிருப்பின் 8-அணாவும் 4-பவுனுக்கு மேற்படாமலிருப்பின் 10 அணாவும் முறையே கட்டணஞ் செலுத்தவேண்டும்.

### இன்ஷியூரன்ஸ் கட்டணம்.

| | அணா |
|---|---|
| கீழ் குறிக்கப்படும் நாடுகளல்லாதஇதர நாடுகளுக்கு ஒவ்வொரு 5 பவுனுக்கும் | 3 |
| சிலோன், போர்த்துக்கல் இந்தியாவிற்கு ஒவ்வொரு 100 ரூபாய்க்கும் | 2 |
| மொரிஷஸ், ஸெஷேல்ஸ், ஸான்ஸிபார், பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்கா, உகண்டா, ஸோமாலிலாண்ட் நாடுகளுக்கு ஒவ்வொரு 100 ரூபாய்க்கும் | 4 |

### ரசீது கட்டணம்.

| | அணா |
|---|---|
| ரிஜிஸ்டர் செய்த ஒவ்வொரு வஸ்துவிற்கும். | 2 |

### தபாலாபீஸின் விருத்தி.

1892-93-ம் வருஷக்கடைசியில் தபாலாபீஸ்களின்மொத்த தொகை 10139. தபால் லயன்களின் மொத்த தொகை 113,655 மைல்கள். 1913-ம்வருஷத்தியமார்ச்சு 31-ந் தேதிக்கு 18789-தபால் ஆபீஸுகளும், 154496-தபால் லயன்மைல்களுமாக விர்த்தியாயின. 1892-93-வருடத்தில், தபால் கார்டுகள், கடிதங்கள் பத்திரிகைகள், பாக்கட்டுகள் செலுத்தினதொகை மொத்தம்30-கோடியே 49-லட்சம்.1912-13-ம்வருஷத்தில் 19030-லட்சம். 1892-93-ம் வருஷத்தில் செலுத்தின மெயில் சாமான் 30-லட்சம், 1912-13-ம் வருஷத்தில்110½-லட்சம்மேற்கூறின எல்லா வகுப்புக்குறியதபால்வகைகள் வெளிநாடுகளுக்கு1892-93-ம்வருஷத்தில் செலுத்தினது 180-லட்சம். 1912-13-ம் வருஷத்தில் 670¼-லட்சம். மணியார்டரின் தொகை 1892-93-ம் வருடத்தில் 8325457-லிருந்து 175724055-ரூபாயும், 1912 13-ம் வருஷத்தில் 29618584-லிருந்து 522814903-ரூபாயுமாக செலுத்தப்பட்டன. 1892-93-ம் வருடத்தில் இன்ஷியூரன்ஸ் சாமான்களின் மொத்தம் 763811. அதின் விலை மதிப்பு 730607103. 1910-11-ம் வருடத்தில் 1169428 சாமான்களும் 268878 925 ரூபாயும் 1912-13-ம் வருடத்தில் 2706436 சாமான்களும், 67143661 ரூபாயும் செலுத்தப்பட்டன.போஸ்டாபீஸிலுள்ள சேவிங்ஸ் பாங்க் கட்டணத்தின் கணக்கு 1893-ம் வருடத்தில் 520967 1912-13-ம் வருடத்தில் 1566860 ஆனல் இவைகளின்தொகை 1893-ம் வருடத்தில் 78187723 ரூபாயும், 1903-ம் வருடத்தில் 206114503 ரூபாயுமாக இருந்தன. தபாலாபீஸின் சிப்பந்திகள் 1913-ம் வருடத்தில் மொத்தம் 92870. ஆனல் இவைகளின் செலவு 2802918 ரூ, தபாலாபீஸ் விஷயங்கள் இது மட்டுமா? 1913-ம் வருடத்தில் போஸ்டல் ஜீவித இன்ஷியூரன்ஸ் பாலிஸிகளின் மொத்தம் 23288. இதின்தொகை 32136539 ரூபாய். 1912-13-ம் வருடத்திய சுயதேச இராணுவ பென்ஷன்தார்களுக்கு 2877665 ரூபாயும், பார்ஸல் கடிதமுதலிடவைகளுக்குத் தீர்வையின் பொருட்டு 1111267 ரூபாயும், 10894 ராத்தல் எடையுள்ள குவினைன் பொது ஜனங்களுக்கும் செலவழிக்கப்பட்டன.

### தந்தி இலாகா.

தந்தி இலாகாவின் நிர்வாகமானது டைரக்டர்ஜெனரல் என்னும் அதிகாரிக்குட்பட்டதாய் இந்தியா கவர்ன்மெண்டின் வியாபார கைத்தொழில் இலாகாவிற்குக் கீழ்ப்பட்டிருக்கின்றது. தலைமை அதிகாரியான டைரக்டர் ஜெனரலுக்கு சில உதவி உத்தியோகஸ்தர்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றார்கள். டைரெக்டர் ஆப் டிராபிக் என்னும் கன்ஸ்டரக்ஷன் டைரெக்டர் என்றும், பெர்ஸனல் அஸிஸ்டெண்ட் என்றும், உதவி கன்ஸ்டரக்ஷன் டைரக்டர் என்றும், உதவி டிராபிக் டைரக்டர் என்றும் சில உத்தியோகஸ்தர்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றார்கள்.

1912-ம் வருஷம் எப்ரல் மாதம் முதல் தேதி தொடங்கி மேற்கூறிய தந்தி, தபால் ஆபீஸ் இரண்டும் டைரெக்டர் ஜெனரல் போஸ்ட்டு அண்டு டெலிகிராப்ஸ் என்னும் பெயரால், வழங்கும் ஒரு பொது ஆபீஸரின் அதிகாரமுறைக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறது. தந்திக் காரியங்களுக்காக இந்திய தேசமானது எண் வகைபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவும் தபால் ஆபீஸுடன் கலந்திருக்கின்றது. ஒவ்வொரு பிரிவும் தந்தி டைரக்டர் ஒருவரின்கீழ் இருக்கின்றது. டைரக்டர்கள் பொதுவாகத் தந்தி ஏற்பாடு எல்லாவற்றிற்கும் பாத்தியப்பட்டவர்களாகிறார்கள். இவர்களுக்கு உதவிபுரிய மின்சார இஞ்சினியர்கள் நியமிக்கப்படுகின்றார்கள். இவர்கள் சீப் இஞ்சினியரின் ஆதீனத்தில் டைரக்டர் ஜெனராலுக்குக் கீழ்ப்பட்டவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் தவிர ஸ்டோர் சூபரின்டெண்டெண்டும், ஆபீஸ் சூபரின்டெண்டெண்டுமாக டைரக்டர் ஜெனராலுக்குக் கீழ்ப்பட்டு வேலை புரிகின்றார்கள். 1912-ம் வருடம் ஜூலை முதல்தேதி தொடங்கி, பம்பாயில் இவ்விரண்டு இலாகாவும் ஒன்றாகச் சேர்க்கப்பட்டன. இத்தகைய ஏற்பாடு மேனுடெளிலுள்ள இங்கிலாந்து முதலிய ஊர்களில் தந்தி இலாகாவைச்சேர்ந்த நிர்மாணம் டிராபிக் பிரிவுகளைப் பிரித்து, போஸ்ட் மாஸ்டர் ஜெனராலுக்குச் சேர்க்கப்பட்டு நடந்து வருவது கொண்டே, அதைத் தழுவி இந்தியாவிலும் அவ்வழி ஏற்படுத்தப் பட்டது. ஒவ்வொரு தந்திப் பிரிவுக்கும் தனித்தனி சூபரின்டெண்டெண்ட் ஒருவரும் அவருக்குதவியாக அஸிஸ்டெண்ட் சூபரின்டெண்டெண்டுகளும் டிப்டி சூபரின்டெண்டெண்டுகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனர். கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய மத்திய தந்தி ஆபீஸ்களில் சூபரின்டெண்டெண்டும், இதர இடங்களிலுள்ள தந்தி ஆபீசுகளுக்கு அஸிஸ்டெண்ட் சூபரின்டெண்டெண்டு, டிப்டி சூபரின்டெண்டெண்டுமாக நியமிக்கப்பட்டிருக்கின்றனர். கணக்குப் பரிசோதனையின் பொருட்டுத் தபாலாபீஸ் போலவே அக்கௌண்டண்ட் ஜெனரல் ஒருவர் நியமனம் பெற்றிருக்கிறார். இவருக்கு உதவியாக டிப்டி அக்கௌண்டண்ட் ஜெனராலும், அஸிஸ்டெண்ட் அக்கௌண்டண்ட் ஜெனராலும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

### கட்டணம்.

தந்தி அனுப்ப உள்நாட்டுக் கட்டணம் பின் வருமாறு:—

| | எக்ஸ்பிரஸ் ரூ. | அ. | சாதாரணம் ரூ. | அ. | |
|---|---|---|---|---|---|
| குறைந்தகட்டணம் | 1 | 0 | 0 | 6 | [illegible] |
| 12-வார்த்தைகளுக்கு மேற்பட்ட ஒவ்வொரு வார்த்தைக்கும் | 0 | 2 | 0 | $\frac{1}{2}$ | |

### வேறு கட்டணங்கள்.

| | |
|---|---|
| பதில் தந்திக்குக் குறைந்த கட்டணம் ... ... ... | 6 அணா |
| ரசீதுக்குக் கட்டணம் ... | 6 ,, |
| ஆதாரத் தந்திகள் ஒவ்வொன்றும் 100-அல்லது அதற்குக் குறைந்த வார்த்தைகளுக்கு ... | 4 ,, |

சரிபார்த்தல் தந்திகளுக்குக் கால் கட்டணம்

| | | ரூபா. |
|---|---|---|
| ஆபீஸ் வேலையில்லாதகாலத்தில் எக்ஸ்பிரஸ் தந்திக்காக | தந்திஅடிக்கும் ஆபீஸும் தந்திசேரும்ஆபீஸும் மூடப்பட்டிருந்தால். | 2 |
| | ஏதாவது ஒன்று திறந்திருந்தால் ... | 1 |

கொடி சைகையாவது, கப்பலினின்றும் சைகை காட்டவாவது, அல்லது கப்பலுக்கு சைகைகொடுக்கவாவது தந்தி ஒன்றுக்கு ... 8-அணா

படதுவர்டை அத்தியாவசியமான தொகை.

ஒவ்வொரு 100 அல்லது அதற்குக் குறைந்த வார்த்தைகளுக்கும் தந்தி காப்பிகள் ... 4-அணா

பத்திரிகை.

| | எக்ஸ்பிரஸ் ரூ. | அ. | சாதாரணம். ரூ. | அ. | |
|---|---|---|---|---|---|
| குறைந்த கட்டணம் | 1 | 0 | 0 | 8 | விலாசத்திற்கு கட்டணம் இல்லை. |
| 48-வார்த்தைகளுக்கு மேற்பட்ட ஒவ்வொரு 6-வார்த்தைக்கும். | 0 | 2 | 0 | 1 | |

(ஸிலோன் உள்நாட்டைச் சேர்ந்ததல்ல ஆனால் போர்த்துகல் இந்தியா உள்நாட்டைச் சேர்ந்தது).

வெளிநாடுகளுக்கு அந்தந்த நாட்டைப்பற்றிக் கட்டணம் மாறுபடும். ஐரோப்பாவிலுள்ள ருஷியா துருக்கி நீங்கலாக ஏனைய நாடுகளுக்குத் தந்தி கட்டணத்தின் விதங் காண்க:—

| | ப்ரைவேட். ரூ. | அ. | துரைத்தனம். ரூ. | அ. |
|---|---|---|---|---|
| துருக்கி (வழியாக) | 1 | 6 | 0 | 0 |
| இண்டோ ,, | 1 | 8 | 0 | 14 |
| கிழக்கு வழியாக | 1 | 8 | 0 | 12 |

1892–93-ம் வருடத்தில் 41030மைல் தந்தி லயனும், 126526 மைல் தந்திக்கம்பியு மிருந்தன. 1912–13-ம் வருடத்தில் 789862 மைல் தந்தி லயனும், 311034 மைல் தந்திக் கம்பியு மிருந்தன.

கட்டணம் செலுத்தி தந்தி யடித்த தொகையின் கணக்கு:—

| | | 1892–93 | 1912–13. |
|---|---|---|---|
| உள்ளூர் | ஸ்வசீயம் | 2811679 | 12525782 |
| | துரைத்தனம் | 604124 | 113 721 |
| | பத்திரிகை | 25834 | 186419 |
| வெளியூர் | ஸ்வசீயம் | 530349 | 1571722 |
| | துரைத்தனம் | 6164 | 13144 |
| | பத்திரிகை | 3261 | 21283 |

மேற்கூறிய கணக்கு தபால் ஆபீஸுடன் சேர்க்கப்பட்ட தந்தி ஆபீஸுடனும் சேர்ந்தது.

1912–13-ம் வருடத்தில் கம்பி யில்லாத் தந்திகள் மொத்தம் 15. அவை:–போர்ட் பிளேர், பேசயின், டைமண்ட் தீவு, டேபில் லாண்ட், விக்டோரியாமுனை, மொகியூல், பம்பாய், லாண்ட் ஹெட்ஸ், கல்கத்தா, கராச்சி, டெல்லி, சிம்லா, அலகாபாத், லாகூர், நாகபூர் முதலிய விடங்களி லுள்ளனவாம். அவ்வருடத்தில் கடற்கரையோரங்களிலுள்ள விடங்களில் இக் கம்பியில்லாத் தந்தியின் வாயிலாக வெளிவந்த சமாச்சாரங்கள் 68729.

# இந்திய ரயில் பாதைகள்.

ஒரு நாட்டின் விவசாயத்திற்கும், கைத்தொழில் வியர்பார உயர்ச்சிக்கும் போக்குவரவு சாதனங்களுக்கும், ஸ்தல மாற்றங்களுக்கும் இருப்பு பாதைகள் அவசியமானவை. இராணுவங்களை நாட்டின் பந்தோபஸ்திற்கு அடிக்கடி மாற்றுவதற்கும், பஞ்சகாலங்களில் உணவுப்பொருள்களை ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குக் கொண்டுபோவதற்கும், கண்காக்ஷியின் நிமித்தம் அநேக பட்டணங்களுக்கும், நகரங்களுக்கும் யாத்திரை செய்வதற்கும், இன்னும் ஸ்தல யாத்திரை ஸ்வாமி தர்சனம் இவை போன்ற அநேக காரியங்களுக்கும் இருப்புப் பாதை இன்றியமையாதது. இனி நாட்டின் திரவிய உயர்ச்சிக்கு இருப்புப் பாதைகளே ஓர் முக்கிய காரணம். ஆனால் இருப்புப் பாதைகள் நாட்டைச் சார்ந்தனவையாயிருக்க வேண்டுமென்பது பல இந்திய ஜனத்தலைவர்கள் அபிப்பிராயம். அந்நிய நாட்டார்களின் திரவியத்தைக் கொண்டு போடும் இருப்புப் பாதைகளில் வரும் லாபம் அந்நிய நாட்டார்களுக்குப் போகுமன்றோ? இவ் விந்தியாவின்கண் உள்ள ரயில்பாதைகளில் பெரும் பான்மையும் கவர்ன்மெண்டுக்குச் சொந்தமான தென்பதையும் பாக்கியும் குறிப்பிட்ட கெடுவுக்குப் பிறகு கவர்ன்மெண்டார் வாங்கிவிடலா மென்பதையும் இங்கே குறிப்பிடலாகும.

இந்திய ரயில் பாதைகளின் நிர்வாகத்தில் கவனிக்க வேண்டிய முக்கிய அம்சங்கள் பல உண்டு இந்தியகவர்ன்மெண்டார் சம்பந்தப்பட்ட ரயில்பாதைகளில், வடமேற்கு கிழக்கு வங்காளம், அயோத்தி, ரோஹில்கண்டு முதலிய, மாகாண ரயில் பாதைகள் சமஸ்தானங்களுக்குச் சொந்தமாயும், அவர்களைக் கொண்டே நிர்வகிக்கப்பட்டும் வருகின்றன. ஈஸ்டு இந்தியன், கிரேட் இந்தியன் பெனின் சுலா, பம்பாய் பரோடா மத்திய இந்தியா, சென்னை தெற்குமராட்டா, அஸ்ஸாம் வங்காளம், பெங்கால் நாகபூர், தென் இந்தியா, பர்மா, முதலிய ரயில்பாதைகள் சமஸ்தானங்களுக்குச் சொந்தமாக விருந்தபோதிலும், அவர்களால் நிர்வகிக்கப்படாமல், அவர்களுக்குப் பதிலாய், கம்பெனிக்காரர்களால் சொற்ப வட்டியை அனுபவிக்கும் உத்தரவாதத்துடன் நடத்தப்பட்டு வருகின்றன. முக்கிய ரயில் பாதைகளில் மூன்றான வங்காளம் வடமேற்கு, ரோஹில் கண்டு, குமாயூ தெற்கு பஞ்சாப் முதலிய பாதைகளும், மற்றும் சில சிறிய ரயில்பாதைகளும், பிரத்தியேகமான சில கம்பெனிகளுக்குச் சொந்தமாக விருக்கின்றன. அவைகளில் சில அவைகளின் சொந்தக்காரர்களாலும், சில சமஸ்தானங்களாலும், மற்றும் சில சமஸ்தானங்களுக்குச் சொந்தமான ரயில்பாதைகளை நடத்திவரும் கம்பெனிகளாலும், நடத்தப்பட்டு வருகின்றன. சிறிய ரயில் பாதைகளிலனேகம், ஜில்லா போர்டுகளாலும் சிரத்தையாக நிர்வகிக்கப்பட்டு வருகின்றன. 1884-ம் வருடமுதற்கொண்டு டிஸ்டிரிக்ட்டு போர்டுகள் ரூபாய்க்கு காலணாவீதம் ரயில்வே வரி விதிக்க அதிகாரம் பெற்றன. இவ் வரும்படித் தொகையைக் கொண்டு புதிய புதிய பாதைகள் போடப்பட்டு வருகின்றன. சென்னை ராஜதானியிலுள்ள ஜில்லா போர்டுகளில் தஞ்சாவூர், கிருஷ்ணாவுமே இதற்கு சிறந்த உதாரணமாக குறிப்பிடலாம். இவைகளைப் பார்த்து, இதர ஜில்லா போர்டுகளும், ரயில்வேபாதைகள் போட முன்வந்துகொண்டிருக்கின்றன.

பழைய குத்தகைகள் கவர்ன்மெண்டின் வட்டி உத்தரவாதம் பெற்றிருப்பதினால், கவர்ன்மெண்டார், ரயில்வே விஷயங்களில் தலையிட்டு அதிகாரஞ்செய்ய பாத்தியப்பட்டவர்களாயிருக்கிறார்கள் உதாரணமாக, கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்படும் உத்தியோகஸ்தர் ஒருவர், கவர்ன்மெண்டார் இஷ்டப்பிரகாரம், பாதைகள் போடப்பட்டிருக்கின்றனவென்றும், பிரயாணிகள் தங்களுக்கு யாதொரு தீங்கும் நேரிடாமல் பிரயாணம் செய்யலாமென்றும், சொன்னாலல்லாமல் ஒரு பாதையும் போக்குவரத்துக்காக உபயோகப் படுத்தப்படக் கூடாது. மற்றும் இந்திய கவர்ன்மெண்டார் ஜனங்களின் க்ஷேமத்தைக்கருதி எந்த ரயில்பாதையையும் மூடக்கூடும். சிற்சில வண்டிகளை நிறுத்தக் கூடும். அல்லது சிற்சில நிபந்தனைகளை ஏற்படுத்தவும்கூடும். போக்குவரவு சாதனங்களை நிறுத்துவதாலும், அகாரணமாகச் சாதனங்கள் கொடுக்கப் படுவதாலும், ஏற்படும் குறைகளை விசாரிக்கவும், ரயில்வே வருமானச் செலவுகள், புதிய பாதைகளின்

தீர்மானம், நிர்வாகம் முதலியவைகளை அப்போதைக்கப்போது கவர்ன்மெண்டார் அறியும்பொருட்டு, இஞ்சினியர் உள்பட ஓர் ரயில்வே போர்டை நியமித்திருக்கிறார்கள். இச்சபையில் கவர்ன்மெண்டின் ரயில்வே இலாகாவிலுள்ள பொதுக்காரியங்களைத்தும், அதற்குரிய சாஸனங்களைத்தும், இவ்வாலோசனை சபையின் பார்வைக்குட்பட்டிருக்கின்றன. இச் சபைக்கு ஓர் அக்கிராசனாதிபதியும் இரண்டு மெம்பர்களும் ஓர் செக்ரிடேரியும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இப்போர்டானது முதல் முதல் 1905-ம் வருடம் மார்ச்சு மாதம் ஸ்தாபிக்கப்பட்டது. இப்போர்டு கவர்ன்மெண்டுக்குட்பட்டிருக்கிறது. இப்போர்டானது வியாபாரக் கைத்தொழில் இலாகாவைத் தழுவி அவைகளின் அதிகாரிகளைப் பிரதிநிதிகளாகக் கொள்ளவேண்டும். இப்போர்டு பின்னர் ரயில்வே சம்பந்தமான கணக்குகளைத் தயாரிக்கும். இது சம்பந்தமான ஏஜெண்டுகளின் மூலமாக புதிய பாதைகள் ஏற்படுத்த சிபார்சு செய்யும். வியாபார விஷயம் பிரயாணிகளின் சௌக்கியம், ரயில் உத்தியோகஸ்தர்களின் சம்பளம், ரயில் பாதைகளின் மேல் பார்வை முதலியவைகளை இப்போர்டு நிர்வகிக்கும்.

இந்திய கவர்ன்மெண்டாரும், சில சமயங்களில் சுதேச ராஜாங்கங்களுடன் இந்தியாவின் ரயில்பாதைகளின் நிர்வாக விஷயமாக, கம்பெனிக்காரர்களுடன் செய்துகொண்டிருக்கும் ஒப்பந்தத்தின் ஷரத்துக்களைக் கொண்டு இந்திய ரயில்வே ஆக்டினால் தங்களுக்குள்ள அதிகாரத்தைக் காட்டிலும் இன்னும் அதிகமான அதிகாரங்களைச் செலுத்திவருகிறார்கள். பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள எல்லா கம்பெனிகளிடமிருந்தும் அவர்களனுபவிக்கும் வட்டி மிகவும் சொற்பமாக விருந்தபோதிலும், அக்கம்பெனிக்காரர்களிடம் அவர்களுக்குள்ள பூர்ண அதிகாரம் குறிப்பிடத் தக்கதாயிருக்கிறது.

ஆதியில் இருப்புப்பாதைகள் போடுவதற்காக யோஜனைகள் செய்யப்பட்டு, 1844-ம் வருடம் மஸ்டர் ஸ்டிபன்ஸனால், ஈஸ்ட் இந்தியா கம்பெனிக்காரர்களிடம் ஓர் மசோதா கொண்டுவரப்பட்டது.

பிறகு, கிழக்கு இந்தியா ரயில்வே சீப் இஞ்சினியரும், இன்னும் மற்றவர்களும் யோஜனை செய்து சில தீர்மானங்கள் ஏற்படுத்தினார்கள். இவ்வித தீர்மானங்களில், கம்பெனிக்காரர்கள் பாதைகள் போடுவதற்காக ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறார்களென்றும், கிழக்கு இந்தியா கம்பெனிக்காரர்களால் தேவையான பணம் கொடுத்து உதவி செய்யும் உத்தரவாதத்தைப் பெற்றிருக்கிறார்களென்றும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

கல்கத்தாவிலிருந்து மிர்ஸாபூர் பக்கமாக 100 மைல் தூரம் 10 லட்சம் பவுனைக் கொண்டு போடக்கூடுமென்று, ஈஸ்டு இந்தியா கம்பெனிக்காரர் போட்டுக் காட்டிய பிறகு, கம்பெனிக்காரர்களுடன் இதர கம்பெனிக்காரர்கள் 1849-ம் வருடத்தில் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். கிழக்கு இந்தியா கம்பெனியார், இதற்காக ஏற்பட்டிருக்கும் முதலுக்கு நூற்றுக்கு ஐந்து வீதம் கொடுப்பதாக உத்தரவாதம் கொடுத்தனர். இதேமாதிரியாக, க்ரேட் இந்தியன் பெனின்சுலா ரெயில்வே கம்பெனியாருடன், பம்பாயிலிருந்து கல்யாண் வரையிலும் 50 ஆயிரம் பவுனைக் கொண்டு போட்டுக் கொடுக்க வேண்டுமென்று ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். 1854-ம் வருஷம் வரையில், இந்திய ரயில் பாதை போடும் நிர்வாகம், உத்தரவாதம் பெற்ற கம்பெனிகளிடம் ஒப்புவிக்கப்படவில்லை.

கவர்ன்மெண்டார் அதிகாரத்துக்கும், அவர்களின் மேல் பார்வைக்கும் கீழ்ப்பட்டு, கம்பெனிக்காரர்கள் தங்களுடைய உத்தியோகஸ்தர்களைக் கொண்டே, பாதைகள் போடப்படுவது நலமென்று 1853-ம் வருடம் ஏப்ரல் மாசத்தன்று ராஜப்பிரதிநிதியான லார்டு டால்ஹௌஸி எடுத்துக் காட்டியதுமன்றி, இஞ்சினியர் உத்தியோகஸ்தர்கள் கம்பெனிக்காரர்களைப் போலவே ரயில் பாதைகளை சீக்கிரத்தில் செவ்வனே சொற்ப செலவைக் கொண்டே, போடக்கூடுமென்றும் சொன்னார். வியாபார சம்பந்தமாக வேண்டிய நிர்வாகங்களை செய்வதின் பொருட்டு, ஜனங்கள் கவர்ன்மெண்டின் உதவியை நம்பியிருந்தும், இந்திய கவர்ன்மெண்டார் ஒருவித முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. இவ்வாறு கவர்ன்மெண்டார், தேச நன்மைக்குக் குறுக்கே நிற்பதானது, தேசத்திற்கு ஓர் பெருத்த குறைவென்றும், ஆங்கிலேயர்களின், பிரயாசையைக் கொண்டும் பணத்தைக் கொண்டும் ரயில் பாதைகளை நடத்திவருவதே, தேசத்திற்கு அதிக நன்மை என்றும், அவ்வாறு போடப்படும் ரயில் பாதைகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு இந்தியாவை மற்ற விஷயங்களில் முன்னுக்குக் கொண்டு வரலாமென்றும் ஓர் மசோதாவை பிரேரேபணை செய்தார்.

இவ்வாறு டால் ஹௌஸி செய்த பிரேரணையானது தீர்மானத்திற்குக் கொண்டு வரப்பட்டு, 1854-ம் வருட ஆரம்ப முதல் 1860-ம் வருட முடிவுக்குள்ளாக, ஈஸ்ட் இந்தியா கம்பெனிக்காரர்களும், இந்திய மந்திரியும், ஈஸ்ட் இந்தியன், கிரேட் இந்தியன் பெனின் சுலா, சென்னை, பம்பாய் பரோடா, மத்திய இந்தியா, ஸிண்டு, கிழக்கு வங்காளம், சர்னுட்டிக் ரயில்வே கம்பெனி, கல்கத்தா, தென்கிழக்கு முதலிய ரயில்வே கம்பெனிக்காரர்களுடன், பாதைகள் போடும் விஷயமாக கண்டிராக்டு செய்து கொண்டார்கள். மேற்கூறிய கம்பெனிக் காரர்கள் அந்த ஒப்பந்தத்திற்குட்பட்டு பாதைகளைப் போட்டு வந்தார்கள். இவ்வாறு நடந்து வருகையில் இந்தியாமந்திரியானவர், பாதைகள் போடுவதற்கு நிலம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டது மன்றி, முதலின் பேரில் வட்டிகொடுப்பதாகவும் ஒப்புக் கொண்டார்கள். இவ்வாறு கொடுக்கப்படும் வட்டியானதுகாலநிர்ணயங்களுக்குத் தகுந்தாற்போல் நூற்றுக்கு 5,4¾,4½-வீதம் கொடுத்திருக்கிறார்கள். இவ்விதம் கொடுக்கும் வட்டியை ஈடுசெய்து கொள்வதற்காக அதிகம்கிடைக்கும் லாபத்தில் பாதி, கவர்ன்மெண்டுக்குச் சேரவேண்டு மென்றும், மற்றொரு பாதி, பாகஸ்தர்கள் எடுத்துக் கொள்ளலாமென்றும் ஏற்பாடு செய்திருக் கிறார்கள். கம்பெனியின் நிர்வாகத்திற்கு வேண்டிய சிப்பந்திகளை நியமிப்பதைத் தவிர, மற்ற எல்லா வேலைகளிலும் கம்பெனிக்காரர்கள் கவர்ன்மெண்டாரின் மேல் பார்வைக் குட்பட் டிருக்கின்றனர். உதாரணமாக கம்பெனிக்காரர்கள் எவ்வித வண்டிகள் வைத்திருக்க வேண்டுமென்றும், எவ்வளவு வண்டிகளிருக்கவேண்டு மென்றும், கால நிர்ணயமும், வண்டிகளின் துரிதமும், ரயில்வே கட்டணமும், மற்றுமுள்ள வரவு செலவும், கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயப் பிரகாரமே நிர்ணயிக்கப்படுகின்றன.

ரயில் பாதைகளெல்லாம், கம்பெனிக் காரர்களால், 99 வருட வாடகைக்கு வாங்கி நடத்தப்படுவதுடன் அக்கேடு முடிந்தவுடன் பாதைக்குச் சொந்தமான, வண்டிகள் சாமான்கள் முதலியவைகளின் கிரயத்தைக் கம்பெனிக்காரர்கள் அடைகிறதென்றும் கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்திருக்கின்றனர். ஆனல் சில சமயங்களில், கவர்ன்மெண்டார அபிப்பிராயப்பட்டால், 25 அல்லது 50 வருஷத்திற் குள்ளாகவே, கம்பெனிக்காரர்கள் கொடுத்திருக்கும் முதல், கம்பெனிக்காரர்களுக்கு கிடைத்த உடனே அல்லது கவர்ன்மெண்டார், அக்கம்பெனிக் காரர்களுக்குச் சேரவேண்டிய தொகையை செலுத்திய பிறகோ, பாதை ஒப்புக்கொள்ளலாமென்றும் ஓர் சட்டம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

இவ்வருடம் கவர்ன்மெண்டார் இந்திய கிளைப்பாதை கம்பெனிகளுக்கு உத்தரவாத மன்னியில், பணம் கொடுத்துதவி வந்தனர். இவ்வுதவியைக் கொண்டு அக்கம்பெனியார், வட இந்தியாவிலுள்ள பெரிய பாதைக்கு சௌகரியமான கிளைப்பாதைகளைப் போட்டு வந்தனர். இம்மாதிரியாகவே இந்திய டிராம்வே கம்பெனிக்கும் உதவி கிடைத்தவுடன், இக்கம்பெனியார், சென்னையில் டிராம்வே ஏற்படுத்தினர்கள். இதேமாதிரியாகவே, மற்றக் கம்பெனிகளுக்கும் கவர்ன்மெண்டார் உதவிபுரிந்து வந்தனர். இவ்வாறு கவர்ன்மெண்டார் செய்த உதவி யாதெனில், கம்பெனிக்குத் தேவையான நிலங்களை இனமாகக் கொடுப்பதுடன் ஒருமைல் தூரம் இருப்புப்பாதை போடுவதற்கு 100 பவுன் கொடுப்பதாகவும், பாலம் முதலியவை கட்டவேண்டியிருக்கும் சமயங்களில் பதினயிரம் பவுனுக்குமேல் செலவாகும் பக்ஷத்தில் இன்னும் அதிகத் தொகையும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்கள்.

சில வருடங்களுக்குப் பிறகு இவ்விரண்டு கம்பெனிகளுக்கும் கவர்ன்மெண்டாரால் கொடுத்துதவப்படும் பணத்தைக் கொண்டு, வேலை நடத்த முடியாமல் அதிக உதவி கிடைத்தாலொழிய வேலை நடத்த முடியாதென்று சொல்லிவிட்டார்கள் ஆகையால் கவர்ன்மெண்டார் அக் கம்பெனிகளால் போடப்படும் பாதைகளுக்கு 100க்கு 5-வீதம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார்கள். இவ்வித ஒப்பந்தத்திற்குப் பிறகு இக்கம்பெனிக்கு "அவ்டு ரண்டு ரோஹில் கண்டு ரயில்வே" எனப்பெயர்உண்டாயிற்று. இவ்வாறு செய்து கொண்ட ஒப்பந்தத்தில் 1854-1860 ம் வருஷங்களில் சில கம்பெனிகளுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் ஷராக்களையும் கண்டார்கள் இதே மாதிரியாகவே 1868ம் வருஷத்தில் 100க்கு 3 வீதம் கொடுக்கப்பட்ட போதிலும் இக்கம்பெனி க்ஷீணதிசையை யடைந்தது. பிறகு இக்கம்பெனி தெற்கு இந்தியன் ரயில்வேயுடன் சேர்ந்து தென் இந்தியா ரயில்வேஎனப் பெயர் பெற்றது. இக் கம்பெனியுடன் இந்திய மந்திரி 100க்கு 5 வீதம் வட்டி கொடுப்பதாகவும் ஒப்பந்தம் செய்து கொண்டார் 1869 ம் வருடம் ஸர் ஜான் லாரென்ஸ்

என்பவர் உத்தரவாத மில்லாத கம்பெனிக ளால் ரயில்பாதைகள் நடத்தப்படுவதினால் ஏற்படும் முடிவை கீழ்கண்டவாறு வெளியிட்டிருக்கின்றனர்:—

பணக்காரர்கள் தங்களுடைய பொறுப்பில் கவர்ன்மெண்டாரிடமிருந்து சொற்ப உதவியைப் பெற்று ரயில் பாதைகளை நடத்தவேண்டுமென்று இந்திய கவர்ன்மெண்டார் வேண்டிய பிரயாசை யெடுத்துக்கொண்ட போதிலும், இதுவரையிலும் ஒருவராவது அவ்வேற்பாட்டிற்கு முன்வாவில்லை. கவர்ன்மெண்டார் தங்கள் சொந்த நிர்வாகத்திற்காக கடன்வாங்கும்தொகைக்கு வட்டி கொடுக்கும் பிரகாரம், வட்டி கொடுக்க உத்தரவாதம் கொடுத்தா லொழிய பணம் கிடைப்பது அரிதாய்விட்டது.

இவ்வாறு கம்பெனிகள் நிர்வகிக்க முடியாமல் போகவே, இந்தியாவில் ஆகியில் ரயில் பாதைகள் போட்டு அவைகளின் வருமானத்தைக் கொண்டு தகுந்த முதல் வைத்துக்கொண் டிருக்கும் உத்தரவாதம் பெற்ற கம்பெனிகளுடன் தான் ஒப்பந்தம் செய்துகொள்ளவேண்டியதாயிற்று. ஆனால் கவர்ன்மெண்டார் இவ்வேற்பாட்டிற்குச் சற்றும் இஷ்டப்படாமல், இந்தியன் ரயில் பாதைகளின் நிர்வாகத்தில் இரண்டு மாறுதல்கள் செய்தார்கள். அம்மாறுதல்களின் பிரகாரம்.

1. உத்திரவாதம் பெற்ற கம்பெனிகளிடம் கவர்ன்மெண்டுக்குள்ள பாத்தியதைப் பிரகாரம், கிடைக்கும் அதிகலாபத்தில் பாதி கவர்ன்மெண்டுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்றும், 6-மாதத்திற் கொருமுறை கிடைக்கும் லாபத்தில் பாதி கவர்ன்மெண்டுக்குச் சேர்ந்ததென்றும், ஒப்பந்தத் தேதியிலிருந்து 25-வருடங்களுக்குப் பிறகு கிரேட் இந்தியன் பெனின் சுலா, பம்பாய்; பரோடா மத்திய இந்தியா, சென்னை முதலிய ரயில் பாதைகளை கவர்ன்மெண்டார் திரும்பி வாங்கிக்கொள்ள மாட்டார்களென்றும்; 2. இந்தியாவில் புதிய பாதைகள் போடுவதற்கு தேவையான பணம் இந்தியாவி லிருந்தே கிடைக்கக் கூடுமென்றும் அவ்வாறு இந்தியர்கள் தாங்கள் செலவு செய்யும் பணத்திற்குள்ள நன்மையைத் தாங்களே அனுபவிக்கலா மென்றும் ஏற்பட்டது. அது முதற்கொண்டு ரயில்பாதை நிர்வாகத்திற்கு வேண்டிய முக்கிய செலவுகளெல்லாம் சமஸ்தானங்களாலேயே நிர்வகிக்கப்பட்டு வந்ததுமன்றி, உத்தரவாதம் பெற்ற கம்பெனிகளுடன் ஒருவித புதிய ஒப்பந்தமும் செய்துகொள்ளப் படவில்லை. இவ்வாறு சமஸ்தானங்களால் போடப்பட்ட பாதைகளில், ஸிந்து நதிப் பள்ளத்தாக்கு, பஞ்சாப், வடக்கு ராஜபுதனம், மால்வா, வடக்கு வங்காளம், ரெங்கூன், ஐராவதிப் பள்ளத்தாக்கு, டிர்ஹுட் முதலிய பாதைகள் முக்கியமானவை.

இந்தியா ரயில்பாதை போட ஆரம்பித்தது முதற்கொண்டு 25-வருட காலங்களுக்குள்ளாக, கம்பெனிக்காரர்களால் 6128 மைல் தூரம் வரையில் இருப்புப்பாதை போடப்பட் டிருக்கின்றது. இப்பாதைகள் போடுவதற்கு 97872000 பவுன் வரையில் செலவாகி யிருக்கின்றன. இவ்விதச் செலவில், கல்கத்தா, தென்கிழக்கு, நல்ஹத்தி முதலிய ரயில்வே பாதைகளின் செலவும் சேர்க்கப்பட்டிருக்கின்றது. ஆனால் மேற் கூறிய மூன்று தொடர்களும் 1868ம் வருடத்திலும், 1872-ம் வருடத்திலும் கவர்ன்மெண்டாரால் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டன. கவர்ன்மெண்டார் மறுபடியும் இப்பாதைகளுக்கு 23615226பவுன் வரையில் செலவு செய்து 2175 மைல் தூரம் வரையில் பாதைகள் போட்டார்கள்.

1878-ம் வருடம் நிகழ்ந்த பஞ்சத்திற்குப் பிறகு, ஏற்பட்ட கமிஷனர்கள் தேச பாதுகாப்பின் நிமித்தம் இன்னும் 5000 மைல் தூரம் இருப்புப்பாதை போட வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார்கள்.

அக்காலத்தில் கவர்ன்மெண்டார் தாங்கள் வாங்கும் கடனுக்கு ஓர் எல்லை இருக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அவ்வாறு அவர்கள் நிர்ணயிக்கப்பட்ட தொகையானது 5000 மைல் தூரம் பாதைபோடுவதற்கு போதாததாக இருந்தது.

ரயில் பாதைகள் போடுவதற்குத் தனியாக ஏதாவது முயற்சி செய்யப்பட்டால் அதிக நன்மையாயிருக்குமென்று அக்கமிஷனர்கள் தெரிவித்தார்கள். மற்றும் அவர்கள், பழய ஒப்பந்தப்பிரகாரம் கம்பெனிகளுக்கு உத்தரவாதம் கொடுக்கப்படா விட்டாலும், கவர்ன்மெண்டுக்கு அதிக நஷ்டமில்லாமல் உத்தரவாதம் கொடுக்கச் சம்மதித்தால், தேவையான பணம் கிடைக்கக் கூடுமென்றும், சொன்னார்கள். இவ் வேற்பாட்டுக்கு கவர்ன்மெண்டார் சம்மதித்த வுடனே 1881-ம் வருஷத்திலே பெங்கால் சென்ட்ரல் கம்பெனியும், 1882-ம் வருடத்தில் பெங்கால், நார்த் வெஸ்டர்ன், ரோஹில் கண்டு, குமான், தெற்கு மராடா முதலிய கம்பெனிகளும், 1885-ம் வருடத்தில் மிட்லந்து கம்பெனியும், 1887-ம் வருடத்தில்

பங்காள், நாக்பூர் முதலிய கம்பெனிகளும் முன் வந்தன.

ஆதியில் பெங்கால் செண்ட்ரல் கம்பெனியார் செய்த முயற்சி முழுமையும் நிறைவேறாமல் போயிற்று. ஆதலால் அக்கம்பெனியுடன் வேறு விதமான ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டது. அவ் வொப்பந்தப் பிரகாரம் அக்கம்பெனிக்குள்ள முதலுக்கு 100-க்கு 3½ வீதம் கொடுப்பதாக இந்திய மந்திரி ஒப்புக்கொண்டதுமன்றி அப்பாதைகளின் வருமானத்திலிருந்து பாகஸ்தர்களுக்குச் சேரவேண்டிய பணமும் அதற்குள்ள வட்டியும் அவர்களுக்குச் சேர்க்கப்பட்டபின், பாக்கியிருக்கும் வருமானத்தில், தனக்கு முக்கால் பங்கும் கம்பெனிக்குக் கால் பங்கும் சேரவேண்டுமென்றும் ஏற்படுத்தினார். அன்றியும் 1905-ம் வருடம் ஜூன் மாதம் 30-ந் தேதியன்று இப்பாதைகள் இந்திய மந்திரிக்கு சேரும் பாத்யதையும், அல்லது 10 வருடக் கெடுவுக்குள், கம்பெனிக்குச் சேரவேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டு அப்பாதைகளை ஒப்புக் கொள்ளக்கூடிய பாத்யதையும் அவ் வொப்பந்தத்தில் காணப்படுகின்றன. இவ்வாறே சௌத் மராட்டா கம்பெனிக்காரர்களுக்கும் 100-க்கு 3½ வீதம் கொடுக்கப்பட்டது. இக்கம்பெனியில் பங்காள் செண்ட்ரல் ரயில்வே கம்பெனியிடம், இந்திய மந்திரிக்கு ஏற்பட்டிருக்கும் பாத்யம் முழுமையும் ஏற்பட்டிருக்கின்றது. இவ்வாறே இண்டியன் மிட்லண்டு, பங்காள் நாகப்பூர் ரயில்வே கம்பெனிக் காரர்களுக்கும் 100-க்கு 4-வீதம் கொடுக்கப்பட்டு மற்ற கம்பெனிகளிடம் ஏற்பட்ட சரத்துக்களைப்போல், இக்கம்பெனிகளிலும் அனுபவித்து வருகிறார்.

இப்பாதைகள் போடுவதற்காக மேற்கூறிய மூன்று கம்பெனிகளுக்கும் கொடுத்துதவப்பட்ட பணம் இந்திய மந்திரிக்குச் சொந்தமாகையால், 25 வருடக் கெடுவுக்குப் பிறகு ஒப்பந்தத்தை மாற்றிக் கொள்ளவும், 10 வருடக் கெடுவுக்குப்பின், கம்பெனிகளுக்குச் சேரவேண்டிய தொகை திரும்பக் கொடுக்கப்பட்ட பிறகு, ஒப்பந்தத்தை மாற்றிக் கொள்ளவும் அவருக்கு அதிகாரமுண்டு.

1892-ம் வருடத்தில், இதேமாதிரியாகவே அஸ்ஸாம் பெங்கால் ரயில்வே கம்பெனி ஆரம்பமாயிற்று. இந்த ஒப்பந்தத்தில், அவர்கள் கொடுத்திருக்கும் பணத்திற்கு தகுந்தாற்போல் அதிக லாபத்தைப் பிரித்துக்கொள்ளுவதென்று காணப்படவில்லை. இந்திய மந்திரி இக்கம்பெனிக்கும், 6 வருடகாலம் 100க்கு 3½ வீதமும், அதற்குப் பிறகு 100க்கு 3 வீதமும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்.

1897-ம் வருடம் பர்மா ரயில்வே கம்பெனியார், சமஸ்தானத்துக்குச் சொந்தமான பர்மா ரயில் பாதைகளைப் பரிபாலிக்கவும் விருத்திசெய்யவும் ஆரம்பித்தார்கள். இக்கம்பெனியின் சேர்க்கப்பட்ட முதலுக்கு 100க்கு 2½ வீதம் கொடுப்பதாக இந்திய மந்திரி ஒப்புக்கொண்டார். இக்கம்பெனிக்கு அதிகம் கிடைக்கும் லாபத்தில் 5ல் 4 பாகம் இந்திய மந்திரிக்கும், ஒரு பாகம் கம்பெனிக்கும் சேரவேண்டுமென்றும் 1908ம் வருடத்திற்குப்பிறகு ஒவ்வொருவரும் கொடுத்திருக்கும் முதலுக்குத் தக்கதாற்போல் லாபத்தைப் பிரித்துக் கொள்ளுகிறதென்றும் தீர்மானிக்கப்பட்டது. இவ்வாறு பர்மா கம்பெனியுடன் இந்திய மந்திரி செய்துகொண்ட ஒப்பந்தம், 1928ம் வருடத்தோடன் முடிவு பெறுகிறது. அல்லது அக்கம்பெனிக்குச் சேரவேண்டிய முதல் செலுத்தப்பட்டபிறகு முடிவு பெறுகிறது. இவ்வாறு இந்திய மந்திரி செய்துகொண்ட ஏற்பாட்டினால், 1869ம் வருடத்திற்கு முன் ஏற்பட்ட கம்பெனிகளிடம் தனக்குள்ள அதிகாரத்தைக் காட்டிலும், அதிக அதிகாரத்தை அடைந்து வருகின்றனர்.

1869-ம் வருடம் ஏற்பட்ட கம்பெனிகளிடத்தும், 1886-ம் வருடம் ஏற்பட்ட கம்பெனிகளிடத்தும், கவர்ன்மெண்டார் தங்களுக்குள்ள அதிகாரத்தைக் கொண்டு அதிகலாபம் கிடைக்கக்கூடிய சில ரயில் பாதைகளைத் தவிர, மற்றபாதைகளின் கம்பெனிகளுடன் பேசிக்கொண்ட ஒப்பந்தத்தை மாற்றி கிழக்கு வங்காளம், அவுத் ரோஹில்கண்டு, ஸிந்து பஞ்சாப், டில்லி முதலிய பாதைகளை, சமஸ்தானமானேஜ்மெண்டின் கீழ் விட்டார்கள். இவ்வாறே வங்காள மத்ய ரயில்பாதை வாங்கப்பட்டு, கிழக்கு வங்காள ரயில்வே பாதையுடன் சேர்க்கப்பட்டது. சென்னை, இந்திய மத்ய பாதை வாங்கப்பட்டு, இதர ரயில்பாதை நிர்வகிக்கப்படும் கம்பெனிகளிடத்தும், ஈஸ்ட் இந்தியன், தென் இந்தியன், கிரேட் இந்தியன், பெனின்சுலா பம்பாய், பரோடா, மத்ய இந்தியா முதலிய பாதைகள், அதே கம்பெனியார்களிடத்தும் அல்லது அதற்குச் சம்பந்தமான மற்றக்கம்பெனிகளின் மானேஜ்மெண்டின் கீழும் விடப்பட்டன. இம்மாறுதல்களினால் கவர்ன்மெண்டார் தங்களுக்கு அதிகப்பணம் சம்பாதித்து வருகிறார்கள்.

கவர்ன்மெண்டாருக்கும், உத்தரவாதம் பெற்ற கம்பெனிக்கும் உள்ள சம்பந்தங்களை இங்கு கூறுவோம்.

கம்பெனிக்காரர்கள் வேலைசெய்யும் பாதை சமஸ்தானத்திற்குச் சொந்தமானது. அந்நிர்வாகத்திற்கு ஏற்பட்டிருக்கும் முதல் கவர்ன்மெண்டுக்குச் சொந்தமானது.

செலவுக்குப்பணம் தேவையாக இருக்கும் சமயங்களில், கவர்ன்மெண்டார் தாங்களே அதைக் கொடுக்கின்றனர். அல்லது கம்பெனிக் காரர்களைக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகின்றனர். கம்பெனிக்காரர்கள் முதல் கொடுக்கும் பக்ஷத்தில், அம்முதலுக்கு ஸ்திரமான வட்டி கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்படும். ஒப்பந்தப்பிரகாரம் வருமானத்திலிருந்து கவர்ன்மெண்டாருக்குச் சேரவேண்டிய பாகம் சேர்க்கப்பட்டபின் பாக்கியிருக்கும் லாபத்தை, கவர்ன்மெண்டாரும் கம்பெனிக்காரர்களும் பிரித்தெடுத்துக்கொள்ள வேண்டியது.

இத்தகைய ஏற்பாட்டினால் கம்பெனிகளுக்குக் கிடைக்கும் லாபமானது, கவர்ன்மெண்டுக்குக்கிடைக்கும் லாபத்தில் ஓர் சிறிய பாகமே தான்.

25 வருடக் கெடுவு ஒப்பந்தம் தவிர, மற்ற ஒப்பந்தங்களெல்லாம் குறிப்பிட்ட தினத்தில் இந்திய மந்திரியின் இஷ்டத்தின் பேரில் முடிவு பெறக்கூடியது. அவ்வாறு முடிவுபெற்றவுடன் கம்பெனிக்குச் சேரவேண்டிய பணத்தை இந்தியமந்திரி கவர்ன்மெண்டுக்குச்சேர்த்துவிட வேண்டும். ஆனால் சில இந்திய கம்பெனிக்காரர்களோ சில குறிப்பிட்ட காரணங்களின் பேரில் வருஷவாரியாகப் பணம் பெற்றுவருகிறார்கள்.

1869-ம் வருடம் கவர்ன்மெண்டாரிடமிருந்து 8 பாதைகளை வாங்கி, சொற்ப முதலைக்கொண்டு பாதைகளின் நிர்வாகங்களை நடத்திவரும் உத்தரவாதம் பெற்ற கம்பெனிகளுக்கும் 1880-ம் வருடம் சமஸ்தானத்திற்கு சௌகர்யமான ஷரத்துடன், ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்ட கம்பெனிகளுக்கும் கிடைக்கும், வட்டியின் பெரும் பாகம் கவர்ன்மெண்டைச் சேருகிறது. மேற்கூறிய பாதைகளையும், சிறிய கம்பெனிகளாலும், ஜில்லா போர்டுகளாலும். சுதேச சமஸ்தானங்களாலும் போடப்பட்ட பாதைகளைத்தவிர, வடமேற்கு ரயில்வே, ரோஹில்கண்டு குமான் ரயில்வே முதலிய இரண்டு முக்யமான பாதைகளை, சில கம்பெனிகள் கவர்ன்மெண்டாரிடமிருந்து யாதொரு விதமான உதவியும் பெறாமல் நடத்துகின்றன. அக்கம்பெனிக்காரர்கள், அப்பாதைகளைப் போட ஆரம்பித்த பொழுது, கவர்ன்மெண்டார் 100-க்கு 4வீதம் கொடுப்பதாக உத்தரவாதம் கொடுத்தார்கள். இவ் உத்தரவாதத்தினால் 10 வருடகாலம் வரையில் வருடம் ஒன்றுக்கு 20 ஆயிரம் ரூபாய் வரையில் கம்பெனிக் காரர்கள் அடைந்து வந்தார்கள். ஆனால் 1894-ம் வருடம் இவ் ஏற்பாடு நின்றுபோய்விட, இதற்குப்பிறகு இக்கம்பெனியார்கள் கவர்ன்மெண்டாரிடமிருந்து, ஒருவித உதவியையும் பெறாமலிருந்த போதிலும், சில சமஸ்தான ரயில் பாதைகள், இக்கம்பெனிக் காரர்களிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறபடியால் லாபத்தில் ஓர் பாகத்திற்கு, கவர்ன்மெண்டார் பாத்யமுடையவர்களாயிருக்கிறார்கள். உதாரணமாக பனிர்வுட், ரயில்பாதை மேற்சொல்லிய ஓர் கம்பெனியாரிடத்திலும், லக்னௌ பாரலி ரயில்வே மற்றொரு கம்பெனிக்காரர்களிடத்தும் ஒப்புவிக்கப்பட்டன. இப்பாதைகளின் பல பிரிவுகள் பல நிபந்தனைக்குட்பட்டிருந்தபோதிலும், சமஸ்தானத்தார்கள் தங்களுக்கு இஷ்டமிருந்தால் இப்பாதைகளைத் திருப்பி வாங்கிக்கொள்ள அதிகாரம் உண்டு. இன்னும் இக்கம்பெனிகளுக்கு, உத்தரவாதம் பெற்ற மற்ற கம்பெனிகளுக்கிருந்த சௌகரியங்களைக் காட்டிலும். அதிக சௌகரியங்களிருக்கின்றன. 1932-ம் வருடம் சமஸ்தானத்தார் இப்பாதைகளைத் திருப்பி வாங்கிக்கொள்ளத் தவறினால் மறுபடியும் இப்பாதைகள் 1981-ம் வருஷத்தில் தான் சமஸ்தானத்திற்குச் சொந்தமாகிறது. இவ்வேற்பாட்டினால் கம்பெனிகளுக்கு அதிக அசௌகரியங்கள் ஏற்படுகின்றன. இவ்விதம் சமஸ்தானத்தார் இக்கம்பெனிகளின் நிர்வாகத்திலும் செலவிலும் செலுத்திவரும் அதிகாரமானது, கவர்ன்மெண்டார் உத்தரவாதம் பெற்ற கம்பெனிகளிடம் செலுத்திவரும் அதிகாரத்தைப்போலவே இருக்கின்றது.

இந்தியாவில் உயர்ந்த இருப்புப் பாதைகளின் அளவு 5அடி 6 அங்குலம். இருப்புப் பாதைகள் போட ஆரம்பிக்கும் காலத்திலேயே, அகல அளவுள்ள பெரிய பாதைகளைப் போட வற்புறுத்தினார்கள். ஏனெனில் புயல்காற்று முதலிய சண்டமாருதங்களுக்கு இப்பாதைகள் இடங்கொடுக்குமென்றே இதைப்போடத் தூண்டினார்கள். 1870-ம் வருடத்தில் சமஸ்தான வகை

ஏற்படவே அவைகள் ஒருமைலுக்கு 17000 பவுன் பிடிக்கும் சாமான்ய பாதைகளைப் போட ஆரம்பித்தனர்.

குறுகின பாதைகளின் அளவு 3 அடி 3 அங்குலம். முதல் முதல் சிறிய சிறிய இடங்களுக்கு உபகாரமாயிருக்க குறுகின பாதைகளை ஏற்படுத்தி அப்பால் வியாபாரம் விர்த்தியானின் பெரிய பாதைகளைப் போடலாமென எண்ணமிட்டிருந்தனர் போலும். இக்குறுகிய அளவைக் கொண்டே ரெயில்வே மார்க்கமாக அதிக வியாபாரங்கள் விர்த்தியாவதைக் கண்டு பெரிய அளவைப் போட உத்தேசிக்காமல் விட்டு விட்டனர். சிறிது பள்ளத்தாக்குகளில் மட்டும் பெரிய அளவுகளுள்ள பாதைகள் ஒரு உபாயத்தைக் கொண்டு போடப் பட்டிருக் கின்றது கங்கைக்கு வடக்கேயுள்ள குறுகிய பாதை இராஜபுதன பாதைகளையும், கத்தியவார் பாதைகளையும் தென் இந்தியா இருப்புப் பாதை தென்மகராஷ்டிர பாதையையும் தழுவுகின்றது நைஜாம் ஐதராபாத் கோதாவரி ரெயில்வே மூலமாய் கண்ட வாவிலிருந்து சேர்க்கப்படும் பாதையை மட்டும் காலதாமதஞ் செய்யாமல் முடித்து விடவேண்டும். இது தவிர பாரமற்ற பார்வி பாதைகள் 2 அடி 6 அங்குல அளவைக் கொண்டிருக்கின்றன.

1914-15ம் வருடத்தில் இந்தியா ரெயில்வேகளில் செலவு முன் பணம் சற்றேறக் குறைய 46189 ½ லட்சம்ரூபாய் பாதைகள் நிர்மாணத்தி லிருப்பதற்குச் செலவு முன் பணம் 308 ½ லட்சம் ரூபாய். இது தவிர வேறு சில்லரைக் காரியங்களுக்குச் செலவு முன்பணம் 91½ லட்சம் ரூபாய். ஆக மொத்தச் செலவு முன் பணம் 46589 லட்சம் ரூபாய் ஆனல் அவ்வருடத்தில் செலவழித்த தொகை மொத்தம் 1715 லட்சம் ரூபாய் இந்திய ரெயில்களின் மொத்தம் வருமானம் சென்ற வருடத்தில் 6042 லட்சம் ரூபாய். ரெயில்வே தொடர் ஓடும் நீளம் மொத்தம் 32285 மைல். சென்ற வருடத்தில் ரெயில்வேக்கள் ஏற்றுக் கொண்டு போன பிரயாணிகளின் தொகை 500-லட்சம். இவர்களால் வந்த பணம் தொகை 45-கோடி ரூபாய். சாமான் ரயில்வே தொடர்கள் ஏற்றுக்கொண்டு போன சாமான்களின் எடை 550லட்சம் ராத்தல். இவைகளால் வந்த பணம் தொகை 80 கோடி ரூபாய்.

1914, 15-ம் வருடத்தில் தற்செயலாய் ரயில்வேக்களினுல் கொல்லப் பட்டவர்கள் 76, காயமடைந்தவர்கள் 329.

ரெயில்வே சம்பந்தமான உட்காரியங்களைச் சரிவரசெய்வதற்காக 1876-ம்வருடத்தில் ரெயில்வே கான்பரன்ஸ் ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது இப்படி இருந்தும் 1903-ம் வருடத்தில் தான் சரியான நிலைக்குக் கொண்டுவரப்பட்டு "இந்தியன்ரெயில்வேகான்பரன்ஸ்" சபையென்று ஏற்பட்டது. இது ரெயில்வே இலாகாவின் ஆதீனத்திற்குட்பட்டிருக்கிறது. இது இலாகாவைச் சேர்ந்த மெம்பர்களிலொருவரை அக்கிராசனதிபதியாக நியமித்து அநேக உபயோகமான காரியங்களைச் செய்துவருகின்றது. பட்டுவாடா செய்யும் சாதாரண வேலைகளைத் தற்காலம் ஒவ்வொரு ரெயில்வேயின் ஆடிட் ஆபீஸே பார்த்துக்கொண்டுவருகின்றது.

ரெயில்வேக்கள் கம்பெனிகளால் பராமரிக்கப்பட்டு லண்டனில் டைரக்டர் சங்கங்களைக்கொண்டிருக்கின்றன. இவைகள் இந்தியாவில் ஒரு ஏஜெண்டு மூலமாய் தொழில் நடத்தி வருகின்றன. இவர் கீழ் ஒரு டிராபிக் மானேஜர் ஒரு சீப் இஞ்சினியர், ஒரு லோகோ மோடிவ் சூபரின்டெண்டெண்ட் ஒரு ஸ்டோர் கீப்பர், (கவர்ன்மெண்டால் ஏற்படுத்தப்பட்ட ஒரு போலீஸ் சூபரின் டெண்டெண்ட், கணக்குப் பரிசோதகர் ஆகிய இவர்களனைவரு மிருக்கின்றனர். சமாதான ரெயில்வேக்களுக்கும் இதே மாதிரியான ஏற்பாடுகளேயுள. ஆனல் சிற்சில மாறுதல்களிருக்கலாம். ரெயில்வே அதிகாரிக்கு மானேஜர் என வழங்கும்.

ரெயில்வே இலாகாவைச் சேர்ந்த சிப்பந்திகளின் தொகைகள் சென்ற வருடத்தில் 600116-இவர்களில் 7640 ஐரோப்பியர்களும் 10345-ஆங்கிலோ இந்தியர்களும், 582131 இந்தியர்களுமாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றன. மொத்த ஐரோப்பிய ஆங்கில இந்தியர்களில் 15981-நபர்கள் வாலண்டியர்களாக நியமிக்கப்பட்டார்கள் 1914-15-ம் வருட முடிவில் 1066 குழந்தைகளும் 10163 வேலைகள் கற்றுக்கொள்ளுகவர்களும். ரெயில்வே பள்ளிக்கூடங்களிற்குப் போகும் இதா வேலைக்காரர்களுமாக யிருந்தனர்.

# இந்தியாவில் மோட்டார் வண்டிகள்.

[அடிஸன் கம்பெனி, மிஸ்டர் எ. டி. லியூக்கர் எழுதியதின் மொழிபெயர்ப்பு].

பதினைந்து வருஷத்திற்கு முன் சாதாரண ரஸ்தாக்களில் தானாக யந்திரத்தின் மூலமாய் ஓடும் மோட்டார்கார் என்னும் வண்டிகளை நமது தேசத்தில் அபூர்வமாக வரவழைத்த காலத்தில், ஜனங்கள் அதை ஒரு கண்காக்ஷியாகக் கொண்டு பெருங் கூட்டமாக வந்து கண்ணுற்றனர். தற்காலத்தில் மோட்டார்கார் வண்டிகள் பல விதமாயும், பலவேலைகளுக்கும் பல விடங்களிலும் உபயோகப்பட்டு, நாடெங்கும் பரவி யிருக்கின்றன. பன்னிரண்டு வருஷத்திற்கு முன் இந்நாட்டில் மோட்டார் காரைச் சொந்தமாக வரவழைத்தவர்கள் அவ்வண்டிகளுக்கு இவ்வளவு முன்னேற்றமும் உபயோகமும் ஏற்படுமென்று ஒருக்காலும் நினைத்திருக்க மாட்டார்கள். 1903ம் வருஷத்தில் முதல் முதல் இந்தியாவில் வரவழைக்கப்பட்ட மோட்டார் வண்டிகள் நிரம்பவும் குறைந்த சக்தி உள்ளனவாகும். முற்றிலும் நம்பக் கூடாதனவாகவும் இருந்தன. அக்காலத்தில் அவ்வண்டியில்பழுதில்லாமலும் தடங்கலில்லாமலும் 50 மைல் பிரயாணம் செய்து விடும் பக்ஷத்தில் அது மெச்சத்தக்க வேலையாகக் கருதப்பட்டது. தற்காலத்திலோ, மோட்டார் வண்டிகள் சுத்தம் செய்வதற்கும், எண்ணெய் பெட்ரோல் முதலியவை மறுபடி நிரப்புவதற்கும் ஏற்படக்கூடிய தாமதத்தைத் தவிர வேறு எவ்வித தங்கு தடையில்லாமல் ஆயிரக் கணக்கான மைல்கள் கடந்து சவாரி செய்கின்றன வென்பது வெளிப்படை.

மோட்டார் வண்டி செய்யும் காரியம் மிகவும் நுட்பமானதும் யந்திர சாஸ்திரவேலைப் பாடுள்ளதாகவும் இருக்கிறது. சாதுர்யமான கல்பனைக் காரர்கள் மிகவும் பதமடைந்து வலுவடைந்த எஃகுத் தளவாடத்தை வண்டி செய்வதில் உபயோகப்படுத்தி அதன் மூலமாய் அவ்வண்டியின் கனத்தைக் குறைத்து,அதன்தேய்வைத் தணித்து,பெட்ரோல் எண்ணெய்ச் செலவையும் மட்டு செய்து, வண்டிக்குத் திடமும் கொடுத்திருக்கிறார்கள். ஏராளமாக மோட்டார் வண்டிகள் செய்யும் பட்டரைச் சொந்தக்காரர்கள் தங்களுக்குக் கீழாக உலோக ரஸாயன சாஸ்திரத்தில் தேர்ச்சி யடைந்தவர்களை வைத்து, வண்டியின் ஒவ்வொரு பாகத்தையும் அவர்களின் மேல் பார்வையின் கீழ் செய்து வருகிறார்கள். தவிர, யந்திரங்கள் செய்வதில் அவைகளில் பூட்டிப் பொருந்தக் கூடிய பலபாகங்களை யந்திரங்களாலேயே வெவ்வேறு கணக்கான அச்சுக்களில் செய்யப்பட்டுப் பிரத்யேகமாகக் கிடைக்கக் கூடியதாயிருப்பதினாலும், ஏராளமாக மோட்டார் வண்டிகள் தயாரித்து, ஸரஸமான விலைக்கு சாதாரண ஸ்திதியிலுள்ள மனிதர்களுக்குக்கூட கிடைக்கும்படியாயு மாயிற்று. சுருக்கமாகச் சொல்லும் பக்ஷத்தில், மோட்டார் வண்டிகள் தற்காலத்தில் சுகத்திற்கும் போகத்திற்கும்மாத்திரம் ஏற்பட்டனவல்ல. ஜனங்களுக்குப் பல சாதாரண காரியங்களுக்கும் அவசியமாக ஆய்விட்டன. பிரயாணத்திற்கு அவை எல்லா ஜனங்களுக்கும் முக்கியமான சாதனங்களாக ஏற்பட்டு விட்டன.

மோட்டார் வண்டிகளை இருவிதமாகப் பிரிக்கலாம். சுகத்திற்கான வண்டிகளும் வியாபாரம் முதலிய உபயோகத்திற்கான வண்டிகளும். சுகத்திற்கான வண்டிகள் ஆறு குதிரை யோட்டம் முதல் 40, 50 குதிரை யோட்டம் வலுக்கொண்டதும், 7, 8 ஜனங்கள் வரைக்கும் உட்காரக்கூடியதும், கண்ணாடி ஜன்னல்கள், காந்த விளக்குகள், நிலைக்கண்ணாடிகள் முதலிய அலங்காரங்களும், மிருதுவாய்ச் சாய்ந்து இருக்கக் கூடிய பல மெத்தைகளும் பொருந்திய நிலைகளாக பலநாகரீகத்துடன் செய்யப்பட்டு வருகின்றன. உபயோகத்திற்காக ஏற்பட்ட வண்டிகளோமோட்டார்பஸ்சார் ஆ பாங்க்என்னும் பல ஜனங்கள் ஏறக்கூடிய வண்டிகளாகவும் பெருத்த கனமுள்ள சாமான் சரக்குகளை ஏற்றி சீக்கிரத்திலும் ஸரசத்திலும் இதர விடங்களுக்குக் கொண்டு போய் சேர்க்கக் கூடிய சமான் வண்டிகளாகவும் செய்யப்படுகின்றன. நமது ராஜதானியில் இப்படிப்பட்ட கனத்த சாமான் மோட்டார் வண்டிகள் இன்னும் அதிகரிக்க வில்லை. தற்போதிருக்கும் ரஸ்தா பாலங்கள் அவ்வண்டிகளின் பளுவைத்தாங்கி, செலுத்தக் கூடாததாயிருப்பதால் அவைகள் வலுப்படும் வரைக்கும் சாமான் வண்டிகள் அதிகரிக்க முடியவில்லை. ஐரோப்பா கண்டத்தில 5 டன் கனத்தைத் தூக்கும் மோட்டார்வண்

டியும் அதனால் இழுக்கப்படும் 8 முதல் 10 டன் பளுவோடு இருக்கும் பின் வண்டியையும் சாதாரணமாக எங்கும் காணப்படலாம். இந்தியாவிலோ ஒருடன் முதல் 3-டன் வரையில் எடுக்கக்கூடிய வண்டிகள்தான் காணப்படுகின்றன. சாதாரணமாய் ஒரு மோட்டார் வண்டி எவ்வளவுக் கனம் கொண்டதோ அதே அளவு பளுவை அதன்மேல் ஏற்றிக் கொண்டு இழுத்துச் செல்லும். வியாபாரத்திற்கு உபயோகப்படும் பெரும் வண்டிகளில் கெட்டியான ரப்பர் போடப்பட்ட சக்கரங்களை உபயோகிக்கிறார்கள். ஆனால் சிறிய சக்கரங்களும் வேகமாய்ப்போகும் பஸ்வண்டிகளும் சில சமயம் காற்றடைத்த ரப்பர் சக்கரங்களை உபயோகிப்பது நலமாகும். கனத்த வண்டிகளில் சில சமயம் எஃகுவால் செய்யப்பட்ட இரும்பு சக்கரங்களையே உபயோகிக்கிறார்கள். ஆனால் அவைகள் ரோட்டுகளுக்கு மிகப் பாதகமாயிருப்பதுந் தவிர அதிக அதிர்ச்சியை உண்டாக்கி வண்டிக்குக் கெடுதலும் செய்கின்றன. சென்ற சில வருஷங்களாக நமது மாகாணத்தில் பல பட்டணங்களில் ஒன்றிற்கொன்றுபோக்குவரத்திற்காக மோட்டார்பஸ்தபால்வண்டிகள் சில கம்பெனிகளால் ஏற்படுத்தப்பட்டு நடந்துவருகின்றன. அவைகளில்சில கம்பெனிகள் நன்றாகவும் லாபத்துடனும் நடத்தப்படுகின்றன. ஆனால், மற்றும் சில மட்டமான வண்டிகளை உபயோகப்படுத்துவதாலும் ஸரிவர சிப்பந்திகளை உபயோகிக்காததனாலும் நிரந்தரமான போக்குவரத்தை நடத்த முடியாமல் பண நஷ்டப்பட்டிருப்பதாகத் தெரிகிறது "ஆல்பியன்" போல மற்றும் நற்பெயரடைந்த வண்டிகளை உபயோகித்து நிர்வாஹத்தையும் பணத்தையும் சரிவரச் செலுத்தித் தவறாமல் சுத்தஞ்செய்து, எண்ணெயிட்டு நல்ல எண்ணெயும் உபயோகப்படுத்தி அப்போதைக்கப்போது பிரித்துச்சுத்தஞ் செய்து பூட்டி வண்டிகளை ஓட்டினால் ஸரியானலாபம் கிடைக்குமென்பதில் ஸந்தேகமில்லை. அப்படி நடத்தப்பட்ட வண்டிக் கம்பெனிகளும் நமது மாகாணத்தில் தேவை என்பதற்கு ஸந்தேகமில்லை, அப்படிச்செய்தால் பிரதிவருஷமும் அவ்வண்டிகள் அதிகரிக்குமென்பது நிச்சயம். இந்தியாவில் வழங்கிவரும் மோட்டார் வண்டிகள் அநேகமாய் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் செய்யப்பட்டதாகும். ஆங்கில வண்டிகள் ஸாதாரணமாய் கனமாயும் நீடித்திருக்கக்கூடியதாகவும் உள்ளன. யுத்தம் ஆரம்பமானபிறகு இவ்வண்டிகள் கிடைப்பது கஷ்டமாய் விட்டபடியால் அமெரிக்கா வண்டிகள் ஏராளமாக நமது தேசத்தில் தருவிக்கப்பட்டிருக்கின்றன. 1915ம் வருஷத்தில 1000 வண்டிகளுக்கு மேல் இறக்குமதியாயிருக்கும். இந்த யுத்தத்தில் பிரிட்டிஷ், பிரெஞ்சுக்காரர்களால் உபயோகிக்கப்படும் மோட்டார் வண்டிகளின் அனுபோகத்தைக் கொண்டும் ஆகாய விமானங்களுக்குச் செய்திருக்கும் யந்திரங்களின் புதுமைகளைக் கொண்டும் பிரிட்டிஷ் தேசத்தில் மோட்டார் வண்டிகள்செய்வதில் நிரம்ப குணமும் ஸௌகர்யமும் ஏற்படுமென்பதில் சந்தேகமில்லை. வண்டிகளைஜடிதியில் செய்து பெருக்குவதிலும், பட்டறைகளை விஸ்தரிப்பதிலும் வேலையைச் சுருக்கும் வழிகளை அதிகரிப்பதிலும் பிரிட்டிஷ் மோட்டார்வண்டி செய்பவர்கள் இந்த யுத்தத்தில் ஸமாதானமானவுடன் அதிக சாதகங்களை அடைந்து, இப்போதிருக்கும் வண்டிகளைவிட நன்றாகவும் சரசமாகவும் தயார் செய்வார்களென்று ஊகிக்கலாம்.

ஒரு மோட்டார் வண்டி பல பாகங்களைக் கொண்டது. சாதாரணமாய் வண்டிகளில் 600,- முதல் 1500-வரைக்கும் தனித்தனி சாமான்களிருக்கின்றன. ஒரு வண்டி முதலில் எஃகினால் செய்யப்பட்ட உடலுடன் ஓட்டுவதற்கான சக்கரங்களும் கம்பிகளும், இஞ்சின் யந்திரம், சக்கரங்களைச் சுற்றும் குடங்களடங்கிய பெட்டியின், இரிசும், அதிலுள்ள பெவல்ஜியர் என்னும் பல் சக்கர அமைப்பும், சரியாக வளைவுகளில் திரும்புவதற்கு ஏற்படுத்தியிருக்கும் "டிபரென்ஷியல்" என்னும் பல் சக்கரமும், ஆசனங்கள் அடங்கியிருக்கும் உடலும், ஆயுதப் பெட்டி, பெட்ரோல் எண்ணெய் எடுக்கும் தடாகமும் சேர்ந்து ஓடும் வண்டியாக அமைக்கப்படுகின்றது. சாதாரணமாக, சுகத்திற்கும் வியாபாரத்திற்கும் உபயோகப்படும் எல்லா வண்டிகளும் நான்கு ஸிலிண்டர் என்னும் வட்டக்குழாய்களுடன் அமைக்கப்படுகின்றன. சுகத்திற்கான சில பெரிய வண்டிகளில் 6 அல்லது 8 ஸிலிண்டர்கள் வைக்கப்பட்டு, அவைகளினால் வண்டிக்கு நிதானமான வேகமும் சப்த அதிர்ச்சிகளின் குறைவும் உண்டாகின்றன. சாதாரணமாய், 20 குதிரை யோட்டத்திற்குள் பட்ட வண்டிகளுக்கு, 4 ஸிலிண்டர்களுக்கு மேல் ஏற்படுத்துவதில் அதிக சாதகமொன்றும் இல்லை. சிறுபாகங்களை அதிகப்படுத்தி ஒன்றிற்கொன்று உராயஞ்சலினால் வரும் சேதமே அதிலிருக்கும், லாபத்திற்குச் சரியாய் விடுகிறது. 6 முதல் 10 குதிரை

யோட்டமுள்ள மேலசான வண்டிகளில், ஒன்று அல்லது இரண்டு வட்டக் குழாய்களும் சில சமயங்களில் உபயோகிக்கப் படுகின்றன. 10 வருஷத்திற்கு முன்னிருந்த ஆரவாரமும் ஆட்டமும் அதிகமாயுள்ள வண்டிகளுக்குப் பதிலாகத் தற்காலத்தில் நிசப்தமானதும் அதிர்ச்சி யில்லாததும், அதிக வலுவு உள்ளதுமான யந்திரங்களுடனும் திட்டமும் துவளுந்தனமும் கொண்டதும், எதிர்க் கம்பிகளும் காந்தயந்திரமும் ஏற்பட்டிருப்பதுமான வண்டிகள் செய்யப்படுகின்றன. உழலும் இரும்பு பாகங்களெல்லாவற்றிற்கும் எண்ணெய் தானாகவே பெருகி அவைகளைச் சுத்தஞ் செய்து, உராய் தலையும் குறைத்து, மறுபடியும் அசுத்தமாய்த் திரும்பும் அந்த எண்ணெயையே வடிக்கட்டி மறுபடி தானாக உபயோகப் படும்படிக்கும் வேண்டிய ஸாதனங்கள் ஏற்பட் டிருக்கின்றன.

மோட்டார் வண்டிகளில் ஏற்படுத்தப் பட் டிருக்கும் இஞ்சின் யந்திரங்கள் "ஆட்டோ" அல்லது "நாலு சுழல்" என்று சொல்லப்படும் முறைப்படி வேலை செய்கின்றன. அந்த முறையே தான் சாதாரணமாக மற்ற ஆயில் இஞ்சின்களிலும், காஸ் இஞ்சின்களிலும், ஏற்பட்டு பட்டரை வேலைக்கும், நீர் இறைக்கும் வேலைக்கும் உபயோகப்படுகிறது. மேலும், நைட் இஞ்சின் என்னும் புது யந்திரம் ஏற்பட்டு அதன் மூலமாய் இஞ்சினை ஓட்டுவதில் ஆவியைப் போக்குவதிலும் நிறுத்துவதிலும் ஒரே சரிவான திறப்பு அடைப்பு ஏற்பாட்டை வைத்திருப்பதால், இஞ்சின்கள் சப்தக் குறைவாய் ஓடும்படி செய்யப்பட் டிருக்கின்றன. அதனால் செலவு அல்லது சேதம் கம்மிப் படுவதாக இல்லை. நிரம்பவும் செலவாகும் வண்டிகளில் தான் இந்த முறை ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. நிரம்பவும் ஆகர்ஷண சக்தியுள்ள காந்தப் பற்றின் மூலமாய் இஞ்சினுக்கு உஷ்ணமுண்டாக்குவது இப்பொழுது எல்லா வண்டிகளுக்கும் சாதாரணமாக இருக்கிறது. ஆனால் சில அமெரிக்கன் வண்டிகளில் வெளிச்சத்திற்காக உபயோகப் படுத்தும் காந்த சக்தியையே இஞ்சினுக்குச் சூடு உண்டாக்குவதற்கும் உபயோகிக்கிறார்கள். காந்த சத்தியைக்கொண்டு வண்டியைத் தானாக ஓட்டுவதற்கும் யந்திரங்கள் ஏற்பட்டு அவைகள் துரிதமாய் அனுபோகத்தில் வந்து கொண்டிருக்கின்றன.

அதிகச் சூடேறிவிடும் இஞ்சின்களின் சூட்டைக் குறைக்கும்படி, பல புதிய ஏற்பாடுகள் செய்யப்பட் டிருக்கின்றன. சிறு குழாய்களை வைத்து அவைகளின் வழியாக் குளிர்ந்த ஜலத்தை யந்திர மூலமாய்ச் செலுத்தும் சங்கட ஏற்பாட்டை மாற்றித் தற்போது "தர்மோஸைபன்ரேடியேடர்" என்னும் காற்றை விலக்கிச் சூட்டைக் குறைக்கும் யந்திரங்களே உபயோகப்படுகின்றன. இவைகளிலும் ஜலத்தைப் போக்குவதற்கு பெரிய வண்டிகளில் பம்புகள் அவசியமாய் இருக்கின்றன. இந்தியா தேசத்தில் சூடு குறைக்கும் ரேடியேடர்கள் பிரத்தியேகமான அளவில் இருக்கவேண்டும். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உபயோகப்படும் வண்டிகளுக்கு இருக்கும் இக்குழாய்கள் இந்தியாவில் போதாதிருப்பதினால் அடிக்கடி இஞ்சின்களில் அதிகச் சூடு ஏறிவிடுகின்றது. பெரிதாகிய ரேடியேடர்களையும், பம்புகளையும் ரூ 250 முதல் 400 வரை விலை கொடுத்து வாங்கி உபயோகப்படுத்துகிறதே சரியாகும். வண்டிகளிலும் எல்லா வண்டிகளும் உஷ்ணதேசங்களுக்குத் தகுந்தவைகளல்லவாகையால் இந்தியாவில் வண்டி வாங்குவோர்கள் அனுபோகமுள்ள கம்பெனிகள் மூலமாய் வாங்குவதே உசிதமாகும். டல் சக்கரப் பெட்டிகள் மூன்று நான்கு அளவுக்கு வேகங்களை ஏற்படுத்திக் கொள்ளும்படிக்கும், சக்ர ஓட்டத்தை சடிதியில் திருப்பவும், யந்திரங்கள் கொண்டதாய் அவைகளை ஒருதுவாரத்தின்மூலமாய்ச்செலு கைப்பிடியின் வழியாய் உபயோகப்படுத்தும்படிவைத்திருப்பதும், எல்லாவண்டிகளிலும் சாமான்யம். சிறிய வண்டிகளில் நடுவட்டமான பல் சக்கரங்களும் காணப்படுகின்றன. பல்சக்கரப் பெட்டிகள் சாதாரணமாய் இஞ்சினுக்குப் பின் பக்கத்தில் வைக்கப்பட்டு, "கார்டன் ஷாப்ட்" என்னும் கம்பி மூலமாய்வரும் விசையை அப்போதைக்கப்போது வேண்டிய வேகத்திற்குத் தகுந்தபடி பல்சக்கரங்களின் மூலமாய்ப் பின் சக்கரங்களின் அச்சுக்குச் செலுத்தப் படுகின்றது. பின் சக்கரத்திலும் பெட்டியிலு மிருக்கும் பல் சக்கரங்களில் தாரதம்யங்களினால் வேகத்தைக் குறைக்கவும் ஏற்றவும் சுலபமாகிறது. பெரிய பல் சக்கரத்திலிருந்து அச்சிலிருக்கும் சிறிய பல் சக்கரத்திற்கு வேகத்தைச் செலுத்தினால் ஓட்டம் அதிகமாகும். வண்டியைக் கிளப்பும் பொழுதும் மணலிலும் ஏற்றத்திலும் ஓட்டும் பொழுதும் இந்தப் பல்சக்கரத்தை உபயோகிக்கவேண்டும் ஆனால், இஞ்சின் சக்தியை அதிகரித்து சமதரயில் வேகத்தைப்

பெருக்க வேண்டுமாகில் அச்சிலிருக்கும் பெரிய பல் சக்கரத்தை உபயோகப் படுத்துவது சரியாகும்.

வண்டியின் பின் அச்சிலிருக்கும் பல் சக்கரங்களும் யந்திரமும் இஞ்சினிலிருந்து சுழன்று வரும் வேகத்தால் இரண்டு பின் சக்கரங்களையும் சுற்றும்படி செய்விக்கிறது அது இரும்பு அல்லது எஃகுவினால் செய்யப்பட்ட பெட்டிக்குள் வில்லும் தாங்கல்களுடனும் செய்யப்பட்டிருக்கிறது. உள்ளில் பல் சக்கரங்களும் உயிர் அச்சு என்று சொல்லப்படுகிற மிகவும் துவளை வலுவுள்ள எஃகுவினால் செய்யப்பட்ட இரும்புஇரிசும் இருக்கின்றன. இதுதான் வண்டியை ஓடச் செய்யும் அச்சாகும். இக்காலத்திய மோட்டார் வண்டிகளுக்கெல்லாம் இரும்பு ரவைகளும் உருளைகளுமே தாங்கலாக உபயோகப்படுத்தப் படுகிறது. சக்கரங்களுக்குக் கம்பிச் சட்டங்கள் அல்லது எஃகுத் தகடுகளை வளைத்த ஆரங்களையுமே தற்காலத்தில் மரத்தாளவாடங்களுக்குப்பதிலாக உபயோகப் படுத்துகிறார்கள். அவை மரங்களைவிடலேசாகவும் வலுவாகவும் நாள் நிரம்பநிற்கக்கூடியதாகவும் இருக்கின்றன. வெளி ஜில்லா ரஸ்தாக்களில் உபயோகப்படும் வண்டிகளுக்குப் பெரிய சக்கரங்கள் உபயோகிப்பது நலமாகும், அதனால் நொடிகளையும் மணல்களையும் வண்டி சுலபமாய்க் கடந்துவிடக்கூடும்.

வண்டிகளில் உட்காரும் இடமும் அவைகளுக்கு மேல் மூட்டமும் பலவிதமாய்ச் செய்யப்படுகின்றன. சாதாரணமாகத்திறந்த மாதிரியும், நாலு ஐந்து பெயர்கள் உட்காரக் கூடிய ஆஸனங்களுடையதும் கித்தானால் செய்யப்பட்ட மட்டமான மேல் மூட்டமும் உள்ளதுதான் எங்கும் வேண்டப்படுகிறது. ஆஸனங்கள் போடப்பட்டிருக்கும் அடித்தட்டு, வளைத்த எஃகுத் தகடுகளினால் காற்றைத் தடுக்கக்கூடிய வெளிவிரிவுகள் இல்லாமல் செய்யப்படுகின்றன. அநேகமாய் வண்டிகள் ஆஸனப் பெட்டிகளுடன் தான் வரவழைக்கப் படுகின்றன. ஆனால் சில ஆஸனப் பெட்டிகள் இந்தியாவிலும் செய்யப் படுகின்றன. இந்தியாவில் செய்யப்படும் பெட்டிகள் வேலைப்பாட்டுக் குறைவினால் அதிக கனமுள்ளவையாக இருக்கின்றன. அப் பெட்டியினால் ஏற்படும் விலை சாசத்தை அதிக எண்ணெய்ச் செலவு தேவை மூலமாய்க் கழித்து விடுகின்றன ல[illegible]ணமாய் "லாண்டோலெட்" மடக்குமூட்டமுள்ள சிலவண்டிகள் இந்திய ராஜாக்களால் உபயோகப் படுத்தப் படுகின்றன. முழுமூட்டமுள்ள வண்டிகளும் கோஷா ஸ்திரீகள் போகும்படி செய்யப்படுகின்றன. ஆனால், திறந்தவண்டிகளே இப்போது அதிகமாய்த் தேவையாயிருக்கின்றன. மிகவும் தாழ்ந்த ஆஸனங்களுள்ள வண்டிகள் அவ்வளவு நல்லதல்ல.

காற்றடைக்கப்பட்ட ரப்பர் சக்கரங்களை சாதாரண வண்டிகளுக்கு உபயோகிக்கிறார்கள். அவைகளில் பிரசித்தமானவை, 'டன்லப்' என்னும் 'மிஷலின்' என்னும் தினுசுகள்ஆகும். காற்றடைத்த சக்கரங்கள் போடுமிடத்தில் காற்றில்லாத ரப்பர் சக்கரங்களைப் போடுவது உசிதமல்ல. ஏனென்றால் அந்த தளவாடங்கள் அதன் அதிக அதிர்ச்சியைத் தாங்கக் கூடியதல்ல. சாதாரணமாய்ப் புலப்படாவிடினும் ஒரு வண்டிக்குப் பெருத்த காற்றடைத்த சக்கரங்கள் போடுவது முடிவில் ஸரஸமாக உள்ளது. முதலில் கொடுக்கும் விலை அதிகமாயினும் அதுசெய்யும் வேலை இருமடங்கே ஆகும். காற்றடைத்த சக்கரங்களைப் பற்றி சாதாரணமாய்ப் போதுமான கவனமும் ஜாக்கிரதையும் வைப்பதில்லை. ஆனால் அப்படிச் செய்வது மிகவும் அவசியமானது. சக்கரங்களில் காற்றுவெடிப்பது, அநேகமாக சரியான அளவுக்கு அடைக்கப்பட்ட காற்றுடன் சக்கரங்களை உபயோகப் படுத்தாததனால்தான் அநேகமாய் உண்டாகின்றது. குறைவாகக் காற்றடைப்பதினால் ரப்பரில் பிளவு ஏற்படுவதுந் தவிர பக்கங்களிலிருக்கும் கித்தான் உறையையும் கெடுத்து விடுகிறது. காற்றுக் குறைவான சக்கரத்தில் முட்களும் ஆணிகளும் குத்துவதற்கு அதிக இடம் ஏற்பட்டு வருகிறது. எல்லா வெடிப்புகளையும் பிளவுகளையும் "மாஸ்டிக் ஸ்டாப்" என்னும் சாக்கினால் நிரப்ப வேண்டும். அவை பெரிதாயிருக்கும் பக்ஷத்தில் சரியான வேலைக்காரர்களைக் கொண்டு பார்வையிட்டு ஒக்கப்பண்ண வேண்டும்.

முடிவில், மோட்டார்கார் என்னும் வண்டி மிகவும்லலிதமான யந்திரம். ஆனால் அதை நாம் நன்றாக வைத்துக் கொள்ள வேண்டியது. அதற்கு நல்ல எண்ணெய் போடவேண்டும். அதைச் சுத்தஞ் செய்து எப்போதும் பார்வையிடவேண்டும். அப்படிச் செய்து வரும்பக்ஷத்தில் அதன்பலனாக மோட்டார் உபயோகப்படுத்தாத ஜனங்களும் அறியக்கூடாத பல சுகங்களை அனுபவிக்கக்கூடும்.




மோடார் வண்டியின் மேல் பக்கமிருந்து காக்ஷி மூட்டுப் பட்டங்களும் ஆசனங்களும் எடுக்கப்பட்டிருக்கிறது. திருப்பு விசைப் பெட்டி மத்தியில் காணலாம்.



சுதந்தர ஓட்ட ஆரம்பக் கருவியும் மாக்நெட்டோ என்ற காந்த யந்திரமும் சேர்ந்த புது மாதிரியான 4 சுருள் மோடார் இஞ்ஜின்.



ஓவர்லண்டு காரில் அமைக்கப்பட்டிருக்கிற மாதிரி இரிசில் திருப்பு விசையும் டிப்ரன்ஷியல் என்ற ஏற்றத் தாழ்மை மாற்று விசையும்.





கைப்பிடித் திருப்பு சக்கரம் எலக்டிரிக் விளக்குகள் ஏற்ற அதிலேயே பித்தான் வைக்கப்பட்டிருக்கிறது.



பின் இரிசுக்கு அமைக்கப்பட்டிருக்கிற எலக்டிரிக் ஸ்பிரிங்குகள்.

# இப்போது நடக்கும் மகாயுத்தம்.

[ஒரு யுத்த சரித்திரக்காரர் எழுதியது].



1914-ம் வருஷம் ஜூலை மாதக் கடைசியில் ஐரோப்பா கண்டத்து ராஜாக்களும், ராஜாங்கங்களும் நெடுநாளாக நேரிட்டுவிடுமோ வென்று நடுக்கத்துடன் எதிர்பார்த்திருந்த யுத்தம் ஆரம்பமாகி விட்டதும், எப்போதும் சமாதானத்தையே நோக்கமாகக்கொண்ட பிரிட்டிஷ் தேசத்தாரும் அந்த யுத்தத்தில் ஆகஸ்டு மாதம் 4-ம் தேதியில் இறங்கி விடும்படியாக நேரிட்டது.

கடற்படையில் வலிமையுள்ள இங்கிலாந்தும், ஜெர்மனி ஆஸ்டிரியாக்களுக்கு விரோதியாய் விட்டபோதிலும் அவ்விருதேசங்களுக்கும் சில அனுகூலங்கள் இருந்ததாக நினைக்கக்கூடியதாயிருந்தது. அன்று முதல் இன்று வரையில் யுத்தம் நடந்து வந்திருக்கிற மாதிரியை நாம் கவனித்தால், அந்த அனுகூலங்களின் பலன்களே தொகையில் பெருத்த சத்துருக்களுடன் போர் புரிய நேரிட்டதால் தங்களுக்குள்ள பிரதிகூலங்களினால் கஷ்டம் உண்டாகாமல் ஜெர்மனியானது யுத்தத்தை நடத்திவந்திருக்கிறதாகத் தெரியும். அந்த அனுகூலங்களென்ன, அவைகளைக் கொண்டு ஜெர்மனி எப்படி ஏராளமான பலன் அடையும்படி சண்டை செய்திருக்கிறது என்ற விஷயங்களை இங்கு சொல்லுவோம்.

## ஜெர்மானியரின் அனுகூலங்கள்.

### ஜனங்களின் மனோபாவம்.

யுத்தம் உண்டாகும்படி செய்தது ஜெர்மனி என்பதை நாம் நினைப்பில் வைத்துக்கொள்ள வேண்டும். அப்படி அது செய்ததற்குக் காரணத்தைச் சொல்வோம். இங்கும் அங்கும், எங்கும் தான் வியாபிக்க வேண்டுமென்று ஜெர்மனி நினைத்துக்கொண்டு விட்டது. வியாபாரத்திலும், கைத் தொழில்களிலும், நாகரீக வேலைகளிலும் சமீபகாலத்தில் அது வெகு விருத்தியடைந்து விட்டதால், தான் வியாபிக்கவேண்டுமென்று அது நினைத்தது ஒருவாறு நியாயமேயாகும். ஆனால் வியாபிக்கவோ இடமில்லை. அதற்கு ஒரு புறத்தில் பிரான்ஸூம் இன்னொரு புறத்தில் ருஷ்யாவும் இருந்துகொண்டு, அது வியாபிக்கக்கூடாமல் தடுத்துவந்தன. பிரான்ஸ் தரைப் படையில் வலிமையுள்ளது; முன்னொரு தடவை ஜெர்மனியால் தான் தோற்கடிக்கப் பட்டதை அது நினைத்துக்கொண்டு ஆத்தரப்பட்டுக் கொண்டுமிருந்தது; ருஷ்யாவோவென்றால் தனக்குள்ள ஏராளமான சக்தியை அறியத் தலைப்பட்டது. இவ்விரண்டு தேசங்களையும் தவிர, இங்கிலாந்தானது பிரமாதமான ஒரு கடற்படையை உடையதாகையால், எல்லாக் கடல்களிலும் அதனுடைய ஆதிக்கமே வலுத்துப்போய்விட்டது. இந்த நிலைமையில் ஜெர்மனி எப்படி வியாபிக்க முடியும்! ஜெர்மனியில் தங்கினதுபோக அதிகமாயுள்ள அதனுடைய ஜனங்கள் வேறு நாடுகளில் ஊன்றிச் செழிக்க, ஜெர்மனிக்கு குடியேற்ற நாடுகள் இல்லையாகையால், அந்த அதிக ஜனங்கள் ஜெர்மனிக்கு வீணாய்க்கொண்டு வந்தனர். ஜெர்மானியர் அமெரிக்காவுக்குத் தாராளமாகப்போய், அங்கு தங்கி, தங்களுக்கு இடங்கொடுத்த அமெரிக்காவுக்கெவ்வளவு கேடாய் விளைந்தனர், என்பது இந்த யுத்தம் ஆரம்பித்த பிறகு அவர்கள் அங்கு செய்துவந்திருக்கும் சதிகளால் தெரிகிறதாயினும், ஜெர்மனி

அவர்களை இழந்தது தானே? மற்றதேசங்கள் அன்னிய நாடுகளைக் கைப்பற்ற ஆரம்பித்து வெகுகாலமான பிறகே ஜெர்மனி அவ்வேலையை ஆரம்பித்ததால், அதற்கு இந்தக் கஷ்டம் நேரிட்டது. உலகிலுள்ள சிலாக்கியமான இடங்களை யெல்லாம் மற்ற தேசங்கள் ஏற்கேனவே பிடித்துக் கொண்டு விட்டதால், இப்பிரபஞ்சத்திலே ஜெர்மனிக்கு கைவசப் படுத்திக் கொள்ள இடமில்லாமற் போய்விட்டது. ஆகையால் ஜெர்மனியின் கட்சியில் ஓரளவு நியாயம் இருந்ததுண்டு. ஆனால் இந்த நிலைமை சுபாவமாய் ஏற்பட்டதென்று ஜெர்மானியர் நினைத்துக்கொள்ளாமல், மற்ற வல்லரசுகள் தங்களிடத்தில் அசூயைகொண்டு சதியாலோசனை செய்து ஏற்படுத்திவிட்டதாக நினைத்துக்கொண்டதுதான் தப்பு.

ஜெர்மனியின் எண்ணம் சரியாயிருந்தாலும் தப்பாயிருந்தாலும், பிரபஞ்சத்தில் தனக்கு இடம்வேண்டுமானால், சாந்தமான வழிகளில், தான் முற்போக்கடைவது போதாதென்று அதற்கு ஒரு நிச்சய எண்ணம் உண்டாய்விட்டது. கைத்தொழில், கலைஞானம் முதலிய விஷயங்களில் ஜெர்மனி விசேஷ முற்போக்கடைந்தும், அகண்டமான ராஜ்யம் தன்னுடையதாக வேண்டுமென்று அது எதிர்பார்த்து வந்ததற்கு அநுகுணமாக ஒன்றும் ஏற்படவில்லை. சாந்தமாக உள்ளே நுழைந்துவிடக்கூடாமற் போகவே, பலாத்காரத்தினலாவது அல்லது பலாத்காரத்துக்கு வேண்டிய முஸ்தீப்புகளைச் செய்து பயமுறுத்தியாவது, தன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றி விடுகிறதென்று அது தீர்மானித்துக் கொண்டது. தனக்குச் சேரவேண்டிய சொத்து தனக்குக்கிடைக்காமல் செய்துவிட, மற்ற வல்லரசுகள் ஒன்று சேர்ந்துவிட்டதாக ஜெர்மனிக்கு எண்ணமிருந்து வந்ததால், தனக்கும் அவர்களுக்கும் ஒரு யுத்தம் நடந்துதானகவேண்டுமென்று அது முடிவு செய்துகொண்டது. அந்த எண்ணம் அதற்கு உண்டாய் விட்டதால் வேண்டிய முஸ்தீப்புகளை தான் செய்துகொண்ட பிறகு தனக்கு சௌகரியமான சமயத்தில் யுத்தத்தை ஆரம்பித்து விடுகிறது நியாயமென்றும் அது நினைத்துக் கொண்டது. இந்த யுத்தத்தில் நேச வல்லரசுகள் ஜெர்மனியை பலாத்காரமாக இழுத்துவிட்டதாக அத்தேசம் முழுமையிலும் உண்டாயிருக்கும் எண்ணத்திற்கு மேற்சொன்ன விஷயமே காரணமாகும்; ஆனல் ஸராஜிவோ என்ற நகரில் ஆஸ்டிரியாவின் இளவரசர் கொலை செய்யப்பட்டது முதல் நாள துவரையில் நடந்திருக்கும் காரியங்களைக் கவனித்தால், ஜெர்மானியர் மேற்சொன்னபடி நினைத்துக் கொண்டிருப்பது தப்பென்று தெரிய வருகிறது. ஆயினும் ஜெர்மானியர் அம்மாதிரி மனப்பூர்த்தியாக நினைத்திருப்பது உண்மையே; ஒரு தேசத்திலுள்ள ஜனங்கள் எல்லோரும் கபடஸ்தர்கள் என்று அவர்கள் மேல் எப்படிக் குறை கூறமுடியும்? மற்ற வல்லரசுகள் ஜெர்மனியிடத்தில் அசூயைகொண்டு அது தங்கள் தேசங்களில் வியாபிக்க இடம் கொடுக்காததால் இந்த யுத்தம் ஏற்பட்டதற்கு அவர்களே பொறுப்பேற்றவர்கள் என்பது ஜெர்மானியரின் நம்பிக்கை. கனிந்து கொண்டிருந்த நெருப்பை ஜ்வாலையாகப் பண்ணின காரணம் எதுவாயிருந்தாலும், ஏற்கெனவே நெருப்பு கனிந்து கொண்டிருந்ததென்பது உண்மையென்று ஜெர்மானியர் நம்பினவர்களாயிருப்பதிலிருந்து, ஜெர்மனிக்குள்ள அநுகூலங்களில் முதல் அநுகூலமெது வென்பது விளங்குகிறது. அதுஎன்னவென்றால், ராணுவ அதிகாரிகள் என்ன நடவடிக்கை நடத்தினலும், என்ன கஷ்டங்களைத் தங்களுக்கு உண்டு பண்ணினலும், அவைகளை ஒப்புக்கொண்டு சகித்துக்கொள்ள ஜெர்மானியர் மனமு

வந்தவர்களா யிருந்தனர். யுத்தத்திற்குக் காரணம் ஜெர்மனிதானென்பது உலகால் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாயினும், யுத்தத்தைநடத்தும் விஷயத்தில் அது வெகு மிருகத்தனத்தைக் காட்டி வந்திருந்தும், ஒரு மனதுடையவர்களாய் ஜெர்மானியர் இருந்து நடவடிக்கைகளை நடத்தி வரக் கூடியவர்களா யிருக்கின்றனர்: ஜெர்மானியரின் கட்சி நியாய விருத்தமா யிருந்தாலும், தங்களுடைய கட்சியே நியாயமானதென்று அவர்கள் மனதில் கொண்டு விட்டனர். ஆகையால் யுத்தத்திற்கு வேண்டிய முஸ்தீப்புகளை ஜெர்மனிக்குள் வெகு சுலபமாகச் செய்ய இடமேற்பட்டது. ராணுவ நிர்வாகத்துக்கு உட்படும்படி மற்றெல்லா நிர்வாகங்களும் அதிகாரங்களும் அடக்கப் பட்டன. முடிவில் தங்களுக்கு வெற்றி யுண்டாகத்தக்க ஏற்பாடுகள் செய்யப்பட் டிருக்கின்றன வென்றும், அதுவரையில் அதிகாரிகள் சொன்னபடி செய்ய வேண்டியது தன்னுடைய கடமை யென்றும், ஒவ்வொரு ஜெர்மானியனும் தன்னுடைய புத்தியை திடப்படுத்திக்கொண்டான். இந்த ஒரு விஷயத்தில் ஜெர்மனிக்கும் இங்கிலாந்துக்கும் வெகு வித்தியாசமுண்டு; இங்கிலாந்தில் யுத்தம் ஆரம்பமாய் வெகுகாலமாகிற வரையில் கட்சிப் பிரதி கட்சிச்சண்டையும், அற்பக் காரணங்களை முன்னிட்டு அசூயையும், தொழிற் சாலைகளில் தகராறுகளும் இருந்துகொண்டே யிருந்ததால், ராஜ்ய நிர்வாகப் பொறுப்பை ஏற்றவர்களுடைய வேலை அனுவசியமாய்க் கஷ்டமாய் விட்டது. லண்டன் டைம்ஸ் பத்திரிகையின் ஆதரவில்பிரசுரமாய்வரும் யுத்த சரித்திரம் இவ்விஷயமாய்ப் பின் வருமாறு சொல்லுகிறது :—

"யுத்தம் நாளுக்கு நாள் முற்றி, துணைப் படைகள் வேண்டியிருக்கும் பொழுது தேசத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும் இன்னது தான் செய்யவேண்டியிருக்கு மென்பதை எல்லோரும் நன்கு அறிந்திருந்தார்களாகையால், எல்லோரும் சமமாகவே கஷ்டப்பட வேண்டியிருக்கு மென்ற எண்ணம் உண்டாய் விட்டது. ஆகையால் வைத்த பளுவை சுமக்கக் கூடியவர்களாய் விட்டார்கள். சோம்பேறி ஒருவன்கூட இல்லை; பொறுப்பை வகிக்காமல் தப்பித்துக் கொள்ளப் பார்த்தவர்கள் வெகு அரிது. தொழிற்சாலைகளிலும் வியாபாரத் துறைகளிலும் வேலை செய்து கொண்டிருக்கும்படி விடப்பட்டவர்கள் தங்களுடைய வேலையும் அவசியமென்ற காரணத்தாலேயே தாங்கள் விடப்பட்டதாக நன்றாய்த் தெரிந்து கொண்டிருந்தார்கள்."

இம்மாதிரியான மனப்போக்கு ஜனங்களுக் குண்டாயிருந்ததால், தொழிற்சாலைகள் எல்லாம் யுத்தத்துக்குவேண்டிய சாமான்களையே செய்யும்படி அதிகாரிகள் ஏற்பாடு செய்வது சுலபமாயிருந்தது. ஜெர்மானியரின் யுத்த தளவாடங்கள் பிறருடைய தளவாடங்களை விட வெகுநாள் வரையில் சிரேஷ்டமானவைகளா யிருந்ததற்கு இதுவே காரணம். ஜனங்களுடைய ஆகாரத்தின் பொருட்டும் இதேமாதிரி ஏற்பாடுகள் செய்யப் பட்டன; பிறதேசங்களிலிருந்து ஜெர்மனிக்குப் பண்டங்கள் போகாமல் ப்ரிட்டிஷ் கடற்படை தடுத்து வந்தும், ஜெர்மானியர் ஆகாரத்துக்கில்லாமல் பட்டினி கிடப்பதாகத் தெரியவில்லை.

இதே மாதிரி ஜெர்மனிக்கு சமமாக உள்நாட்டு ஏற்பாடுகளைச் செய்ய அனுகூலமான நிலைமையில் இருந்தது பிரான்ஸ் தேசம் ஒன்றுதான். தங்களுடைய கட்சி நியாயமென்று அத்தேச ஜனங்கள் திடமாய் நம்பி, தேச பக்தி பொங்கினவர்களா யிருந்ததால், அசாத்தியமான கஷ்டங்களை யெல்லாம் அவர்கள் சகித்துக் கொள்ளக் கூடியவர்களா யிருந்தனர். ஜெர்மனியைப் பார்த்துக்கொண்டு அதனுடைய சத்துரு தேசங்களும் அது

செய்த ஏற்பாடுகளைத் தாங்களும் செய்ய ஆரம்பித்ததால், ஜெர்மனிக்கிருந்த இந்த அநுகூலம் வரவரக் குறைந்து கொண்டே வந்து விட்டது. இந்த சமயம் இங்கிலாந்திலும் ருஷ்யாவிலும் நடந்து வரும் காரியம் இது தான்; அவை இரண்டும் சிறிது தாமதகுண முடையவைகளாயிருந்த போதிலும், இந்த யுத்தத்தில் தாங்கள் வெற்றி பெறவேண்டுமானால் தங்களுடைய ஜனங்களின் முழுப்பிரயத்தனமும் அவசியமென்பதையும், எந்த த்யாகத்துக்கும் பின் வாங்கக்கூடாதென்பதையும் அறிந்து கொண்டு விட்டன.

### வெகு காலப் பிரயத்தனம்.

ஜெர்மனிக்கிருந்த அடுத்த அநுகூலமென்னவென்றால், இம்மாதிரி யுத்தம் ஒன்றை உத்தேசித்து அது வெகு நாளாகப் பிரயத்தனங்களைச் செய்து வந்த தேயாகும்.

யுத்தமொன்று நடந்துதானாகவேண்டுமென்ற நிச்சயபுத்தி ஜெர்மானியருக்கு ஏற்பட்டுவிட்டதால், கொஞ்சங் கொஞ்சமாகப் பிரமாதமான ராணுவப் பிரயத்தனங்களை அவர்கள் செய்து கொண்டே வந்திருக்கிறார்கள். அவ்வளவு பெரிய திட்டத்தில் இதுவரையில் எந்தத் தேசமும் யுத்தத்துக்குப் பிரயத்தனம் செய்து வந்ததாக நாம் கேட்டதில்லை. படைத் தொகையில் மிகவும் பெரியதாகிய ஜெர்மன் சேனை, இப்பொழுது நடந்துவரும் யுத்தத்தை உத்தேசித்து வெகு சிரேஷ்டமாகப் பயிற்சி செய்விக்கப்பட்டது. பீரங்கிகளையும் குண்டுகளையும் செய்ய அத் தேசத்தில் ஏற்பட்டிருக்கும் "க்ரூப்" ஆயுதச் சாலையைப்போல் உலகில் வேறெங்கும் இன்னொரு ஆயுதச் சாலை இல்லை. யுத்தத்தில் எதிர்பாராத சம்பவங்கள் என்ன நேருமாயினும், அவ்வப்பொழுது ஜெர்மானியர் என்ன செய்ய வேண்டுமென்று ஜெர்மனியின் ராணுவ இலாகா உத்தியோகஸ்தர்கள் முன்னாடியே யோசனை செய்து முடித்திருந்தார்கள். அநுஷ்டானத்தில் எப்படி யுத்தத்தை நடத்தலாமென்பதை அவர்கள் ஒரு சாஸ்திரமாகக் கற்றறிந்தார்கள். இந்த விஷயத்திலும் ஜெர்மனியின் எதிரிகளில் பிரஞ்சுக்காரர் ஒருவர் தான் அதே மாதிரிப் பிரயத்தனங்களைச் செய்திருந்தனர். ஆனால் பிரஞ்சு சேனை ஜெர்மன் சேனையைவிட தொகையில்சிறுத்தது; தளவாடங்களும்ஜெர்மனிக்கிருந்தஅத்தனை இல்லை. ஜெர்மனியில் ராணுவக் கூட்டத்தார் எல்லா வல்லமை யுள்ளவர்களாயிருந்திருக்கையில், பிரான்ஸில் அவர்கள் ஒரு கட்சியாகவே யிருந்தார்கள். அதல்லாமல் செல்வாக்கற்ற கட்சியாகவுமிருந்தார்கள். ஆகையினால் ஜெர்மனியின் பிரயத்தனங்கள் வெளிப்படையாகத் தெரிந்து, இனி அசட்டையாயிருக்கக் கூடாதுஎன்று தோன்றினபிறகுதான் பிரான்ஸ் தன்னுடைய காரியங்களை ஒழுங்குசெய்ய ஆரம்பித்தது. இப்படி, தாமதமாக முஸ்தீப்புகள் செய்ததன் பலனாகத்தான் அதன் மேல் ஜெர்மனி படையெடுக்கவும், பிரான்ஸ் முதலில் பின்வாங்கிப் போகவும்நேர்ந்தது. இங்கிலாந்திலோ வென்றால், ஜெர்மனியின் சேனையைப்போன்றதோர் சேனை இல்லவேயில்லை. ஆகையால் அம்மாதிரிச் சேனை ஒன்றைப் புதிதாகத்தான் சேர்த்தாக வேண்டி யிருந்தது. ஆனால் யுத்த மந்திரியாகிய லார்டு கிச்சனருடைய சாமர்த்தியத்தாலும் மற்ற மந்திரிகளுடைய பிரயாஸையினாலும், புதிதாகச் சேனை சேர்க்க செய்யப்பட்ட முயற்சி பலித்து, ஜெர்மனியின் சேனைக்கு ஒருவிதத்திலும் சளைக்காத சேனை இப்பொழுது இங்கிலாந்துக்கு ஏற்பட்டிருக்கிறது. ருஷ்யாவுக்குப் பெரிய சேனை இருந்தது உண்மையானாலும், அதைத் திருத்தி அமைக்க வேண்டி யிருந்தது. அந்த வேலை அரை குறையாக நடந்திருக்கையில் இந்த யுத்தம் உண்டாய் விட்டது.

### ஜெர்மனியின் பலாபலங்கள்.

கையால் யுத்தம் ஆரம்பித்தபொ
, ஜெர்மனியின் அதிகாரிகளுக்கு
ன தோன்றியிருக்கு மென்ப
ப் பார்ப்போம். மிதமிஞ்சி தள
ங்களை உடையதும், வெகு சிரே
மாகப் பயிற்சி பெற்றது மாகிய
பெரிய சேனை தங்களுக்கிருந்த
யும், தங்களுடைய கட்சி நியாய
ர தென்று நம்பி அதற்காக எதை
சகிக்கத் தயாராக தேச ஜன
ர் இருந்ததையும், யுத்தத்திற்கு
ண்டிய சாமான்களைத் தயார்
்து கொடுக்கக்கூடிய தொழிற்சா
ள் இருந்ததையும், தங்களுக்கு
னுகூலங்களாக ஜெர்மானியர் நினைத்
ப்பர்; எதிரிகளில், ஒரு எதிரி கட
பிரமாதமான வலிமை யுள்ளவர்க
யினும், தரையில் அற்ப பலமேயுள்
ர்களென்றும், இன்னொரு எதிரி
ரப் படையில் வல்லமை யுள்ள
ளாயினும் தங்களுடைய சேனா
த்தைவிட அவர்களுடைய சேனா
ம் குறைந்த தென்றும் முன்னொரு,
வை தங்களால் தோற்கடிக்கப் பட்
ர்கள் என்றும், மூன்றாவது எதிரி
ன சேனா பலம் பெரிதாயினும் அங்
சேனை மிக்க அலங்கோலப் பட்டி
த தென்றும், விரைவாகத் தாங்கள்
க்கும் பொழுது அது எதிர்த்து
கமுடியாத தென்றும் ஜெர்மானியர்
னைத்திருப்பார்கள். தங்களுடைய
னங்களுக்கிருந்த மனப்போக்கு
ந நேர் எதிரிடையாக, சத்துரு தே
களில் கட்சிப்பிரதி கட்சியும், கல
மும் ஓங்கி யிருந்ததையும் கவனித்தி
ப்பார்கள். ஆகையால் இந்த யுத்தத்
ல் தாங்கள் ஜயமடைந்து விட்டால்,
லகம் முழுமையையும் அடக்கியாளக்
டுமென்றும், ஆகையால், என்ன
ர்ந்தாலும் நேரட்டு மென்றும், ஜெர்
னியர் துணிந்து யுத்தத்தில் இறங்கி
து ஆச்சரியமாகாது. இன்னொரு அ
கூலமும் தங்களுக்குப் பெரிய பல
க இருக்குமென்று ஜெர்மானியர் நினைத்திருப்பார்கள். அதாவது அவர்களுடைய தேசமானது ஐரோப்பாவின் இருதயம்போல் நடுவில் இருக்கிறது. கிழக்காகவும் மேற்காகவும் பல ரயில் பாதைகள் தேசத்தின் வழியாகச் செல்வதுடன், அவை போடப் பட்டிருக்கிறமாதிரியானது ராணுவ சௌகரியங்களைக் கருதின தாயிருக்கிறது. இவ்விஷயமாகப் பிறகு விரிவாகச் சொல்வோம்.

ஆனால் ஜெர்மானியர்களுக்கிருந்த பிரதிகூலங்களையும் அவர்களின் தலைவர்கள் கவனிக்காமலிருந்திருக்க மாட்டார்கள். சட்டதிட்டங்களுக்கு அடங்கினவர்களாய் ஜனங்கள் இருந்த போதிலும், மிதமிஞ்சி அவ்வாறு அவர்கள் இருக்கவேண்டியிருக்குமானால் அவர்களுடைய அடக்க குணம் அதிருப்தியாக மாறிப்போய் விடக்கூடும். வெற்றி தங்களுக்குத்தான் கிடைக்குமென்ற நிச்சய புத்திமாறி, தோல்வி உண்டாய்விடு மென்ற எண்ணம் தோன்று மானால் அடக்கம் அதிருப்தியாய் விடும். ஒருவிதமான முடிவு ஏற்படாமல் யுத்தம் நீடித்துக்கொண்டே போகுமானால், அப்பொழுதும் அதிருப்தி உண்டாய் விடும். வெகு சீக்கிரத்தில் தங்களுக்கு வெற்றி உண்டாய் விடுமென்று அதிகாரிகள் முதலில் ஜனங்களுக்குச் சொல்லி இருந்தார்கள். பிறகு அதை மாற்றி சண்டை நீடித்து நடக்கு மென்றும், முடிவில், வெற்றி உண்டாகுமென்றும் சொல்ல ஆரம்பித்தார்கள். இப்பொழுது அந்த நம்பிக்கையைக் கை விட்டு, ஒரு கட்சியும் வெற்றியடையாத நிலைமையில் சமாதானம் ஏற்பட்டு விடுமென்று நம்பியிருக்கிறார்கள். இவ்வாறு மாறி மாறி அதிகாரிகள் சொல்லிவந்தும், ஜனங்கள் அந்தந்த சமயத்தில் அவர்கள் சொன்னதை நம்பியே யிருந்திருக்கிறார்கள்; ஆயினும் ஜெர்மன் ஜனங்களின் பொறுமைக்கும் ஒரு எல்லையிருக்கும்; அந்த எல்லையை

இப்பொழுது அவர்கள் அநேகமாக நெருக்கிவிட்டதாகத்தெரிகிறது.

இனி ஜெர்மனியின் சத்துருக்களைக் கவனிப்போம். இங்கிலாந்து யுத்தத்தில் இறங்கினபொழுது, யுத்தத்தை நடத்தி வெற்றிபெறும் முன், தாங்கள் இன்னது செய்ய வேண்டியிருக்குமென்று ப்ரிட்டிஷ் ஜனங்களுக்குத் தெரியாது. ஆனால் தாங்கள் செய்ய வேண்டியது இன்னதுதான் என்பதை ப்ரிட்டிஷ் ஜனங்கள் இப்பொழுது அறிந்துகொண்டு, என்ன தியாகங்களைச் செய்ய வேண்டுமோ அவைகளைச் செய்யத் தயாராயிருக்கிறார்கள். அதே மாதிரி, யுத்தம் நடக்க நடக்க, வெற்றி தங்களுக்குக் கிடைக்கிறதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்கிறதென்று பிரான்ஸிலும் ருஷ்யாவிலும் ஜனங்களுக்குள் தீர்மானம் அதிகரித்துவருவது, ஜெர்மனிக்குள்ள பிரதிகூலங்களில் ஒன்று. அதைக்கால வித்தியாசம் என்று சொல்வோம். இந்தக்கால வித்தியாசத்தால் ஜெர்மன் ஜனங்களுடைய நிச்சயபுத்தி மாறி வருகிறதுடன் ஜெர்மனியின் சத்துரு தேச ஜனங்களுடைய தீர்மானம் அதிகரித்து ஜெர்மானியரின் நிலைமை நாளுக்கு நாள் கேடாய் வருகிறது. ஜெர்மானியர், ஒன்று பெரிய வெற்றி அடைய வேண்டும், அல்லது நேச தேச ஜனங்கள் யுத்தம் நீடிக்கிறதைக் கண்டு மனந்தளர்ந்து போகவேண்டும்; இல்லையேல் இந்தக்கால வித்தியாசத்தால் ஏற்படும் பிரயோஜனம் மாறாது. ஜெர்மனி தேசத்தின் இயற்கை அமைப்பாலும் ரயில் பாதைகள் போடப்பட்டிருக்கிற மாதிரியாலும் ஜெர்மானியர்களுக்குள்ள அனுகூலந்தவிர மற்ற அனுகூலங்களெல்லாம் மேற்சொன்னபடி காலத்தினால் குறைந்து வருகின்றன.

ஜெர்மனிக்குள்ள இரண்டாவது பிரதிகூலமென்னவென்றால், இங்கிலாந்து கடல்களில் ஆதிக்கம் பெற்றிருப்பதாகும். ப்ரிட்டிஷ்கடற்படையானது விசேஷ ஆடம்பரம் செய்யாமல் இருந்து வந்தாலும், இந்த யுத்தத்தில் அதுபெரிய அம்சமாக இருக்கிறது; ஏனென்றால் ஜெர்மனிக்கும் வெளி உலகத்துக்கும் எவ்வித சம்பந்தமுமில்லாமல் அது செய்துவிட்டது. ஆகையால் நாலு பக்கத்திலும் சத்துருக்களால் சூழப்பட்ட ஒரு சேனை எப்படி வெளியிலிருந்து உதவி பெறக்கூடாமல் தன்னிட முள்ளவைகளைக் கொண்டே தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியிருக்குமோ அதே மாதிரி ஜெர்மனி செய்யவேண்டியிருக்கிறது, ஒரு விஷயத்தில் இந்த நிலைமையும் அனுகூல மானதுதான்; ஏனென்றால் யுத்தத்தை வெகு உக்கிரமாகச் செய்ய அது ஒரு தூண்டுதலாகும்; ஆயினும் காலமாகவாக நாலுபக்கத்திலும் சத்துருவால்சூழப்பட்டிருப்பதன் கஷ்டம் உண்டாகத்தான் உண்டாகும். இந்தக் கஷ்டத்தைத் தணிப்பதற்காக, யுத்தம் ஆரம்பித்த காலத்தில், ஸப்மரின்களைக் கொண்டும் சுரங்கங்களைக் கொண்டும், எதிர்பார்க்கப்படாத சமயங்களில் திடீரெனத்தங்கள் கப்பல்களை அனுப்பி, தனித்து நிற்கக்கூடிய ப்ரிட்டிஷ் கப்பல்களைத் தாக்கி ப்ரிட்டிஷ்கடல் படையின் பலத்தைக் குறைத்துவிட ஜெர்மானியர் எத்தனித்தனர். ஆனால் இதேவேலையை எதிர்க்கட்சியாரும் செய்யக்கூடும் என்பதைத்தான் ஜெர்மானியர் மறந்துபோய் விட்டனர்; உண்மையில் நடந்தது என்னவென்றால், ஜெர்மனியரை விடத் திறமையாக இந்த வேலையை ப்ரிட்டிஷார் செய்து விடவே, அவர்களுக்குக் கடலில் இருந்த ஆதிக்கம் முன்னிலும் அதிகமாகி விட்டது. ஆகையால் ஜெர்மனிக்கும் அதன் குடியேற்ற நாடுகளுக்கும் சம்பந்தம் அற்றுப்போய்விட்டதல்லாமல், அவைகளுக்குப் பாதுகாப்பு இல்லாமலும் போய் விட்டது; ஆயினும் இந்தயுத்தத்தினால் மிகப் பெரிய விபரீதங்கள் விளையக் கூடுமாகையால், குடியேற்ற நாடுகள்

போனால் போகட்டுமென்று ஜெர்மனி தன்னை தேற்றிக் கொள்ள வேண்டியதாய் விட்டது. ப்ரிட்டிஷ் கடற் படை உஷார் குறைவாயிருக்கையில் அதைத் தாக்கி விடலாமென்று ஜெர்மானியர் நம்பியிருந்தார்களாயினும், யுத்தம் ஏற்பட்ட உடனேயே பிரிட்டிஷ் கடற் படை அதிகாரிகள் உஷாராயிருந்து விட்டதால், ஜெர்மானியர் ஏமாந்து போயினர். ப்ரிட்டிஷ் அதிகாரிகள் உஷாராயிருந்ததன் பிரயோஜனம் என்னவாயிருந்ததென்றால், இங்கிலாந்து யுத்தத்தில் இறங்கின தினமாகிய 1914-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 4-ந்தேதி யன்று ப்ரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் எல்லாம் எங்கெங்கு எதெது இருக்கவேண்டுமோ அங்கங்கு அதது இருந்தது. ஆகையால் ஜெர்மானியர் உத்தேசித்திருந்த பல ஏற்பாடுகளிலும் கடல் சண்டை விஷயமாக அவர்கள் செய்திருந்த ஏற்பாடுதான் முற்றிலும் தவறுதலாய் முடிந்தது.

ஜெர்மனிக்குள்ள இன்னொரு பிரதிகூலம் என்னவென்றால், ஏக காலத்தில் இரண்டுதிக்குகளில் இரண்டு போர்க்களங்களில் சண்டை செய்ய வேண்டியிருப்பதாகும். வல்லமையுள்ள சத்துருக்களாகிய ருஷ்யாவை ஒரு புறத்திலும் பிரான்ஸை இன்னொரு புறத்திலும் அது எதிர்த்துச் சண்டை செய்யவேண்டியிருப்பதால், யுத்தத்தின் ஆரம்பகாலத்திலேயே அவ்விரண்டில் ஒன்றை நொறுக்கி விட்டாலொழிய, பிறகு அவைகள் பலத்தில் விருத்தியான நிலைமையில் அவைகளை, தான் ஜயிக்கமுடியாதென்பது அதற்குத் தெரியும். இந்தப் பெரிய பிரதிகூலத்திலிருந்து தப்பித்துக்கொள்ள ஜெர்மன் ராணுவஅதிகாரிகள் என்ன ஏற்பாடு செய்தனர்? இந்தப் பிரதிகூலம் தங்களை முழுமையும் பாதிக்காமல் செய்ய அவர்களுக்கு ஒரு அனுகூலமுண்டு. உள் நாட்டு ரயில் பாதைகளும் அவசரத்துக்குத் தக்கபடி உதவக்கூடிய ரயில் வண்டிகளும் இந்த அனுகூலமாகும். இருபக்கத்திலும் தாக்கப்பட்டால் தனக்கு நேரக்கூடிய அசௌக்கியத்தை இந்த ரயில்பாதை வசதியைக்கொண்டு தீர்த்துக் கொள்ளலாமென்று ஜெர்மனி நம்பியிருந்தது. தான் வலுவில் தாக்கவேண்டிய பொழுது ஒரு புறத்திலிருந்து இன்னொரு புறத்துக்குத் துருப்புகளைக் கொண்டு சேர்க்கவும் இந்த ரயில்பாதை வசதியையே ஜெர்மனி நம்பியிருந்தது.

## ஜெர்மனியின் உத்தேசம்.

யுத்தம் ஆரம்பித்த பொழுது ஜெர்மானியர் பின் வருமாறு யுத்தத்தை நடத்துவதாக உத்தேசம் செய்திருந்தார்கள்:— துருப்புகளும் பீரங்கிகளும் பிரஞ்சுக்காரர்களை விட அவர்களுக்கு அதிகமாக இருந்தன. சண்டையை ஆரம்பித்தது அவர்களாகையால், பிரஞ்சுக்காரர் படைகளை யுத்த சன்னத்தமாக்க ஆரம்பித்ததற்கு முன் அவர்கள் தங்களுடைய படைகளை யுத்த சன்னத்தமாக்கி பிரான்ஸின் எல்லைப்புறத்தில் கூட்டி விட்டார்கள். ருஷ்யப்படைகள் யுத்த சன்னத்தமாவதற்குத்தாமத மேற்படுமாகையாலும், ருஷ்யாவில்ரயில்பாதைகள் அதிகமாக வில்லையாகையாலும் ஆரம்பத்தில் ருஷ்யாவைப்பற்றி அவர்களுக்குக் கவலை இல்லை. ருஷ்யர்களால் பயமுண்டாகக் கூடியதற்குமுன் பிரஞ்சுக்காரருடன் சண்டைசெய்து பார்த்துவிட ஒருமாத மிருக்குமென்று ஜெர்மானியர் மதிப்பிட்டிருந்தனர். ருஷ்யர்கள் வந்து விட்டாலும், ஆஸ்டிரியர் அவர்களைப் பார்த்துக்கொள்வார்கள் என்று அவர்கள் நினைத்திருந்தார்கள். ஜெர்மானியர் செய்திருந்த உத்தேசத்தில் இதுதான் முக்கியமான விஷயம். அந்த உத்தேசப்படி நடக்காமல் தவறிப்போய் விடவே, அவர்கள் வெற்றிபெறக்கூடிய சந்தர்ப்பமே இல்லாமற்போய் விட்டது; ஆகையால் அவர்களின் உத்தேசத்தில் இந்த

அமிசம் மிகவும் முக்கியமான தென்பதை நாம் வற்புறுத்துகிறோம்.

ருஷ்யாவின்மேல் திரும்புகிறதற்கு முன், பிரான்ஸை நசுக்கிவிட ஜெர்மானியர் தீர்மானித்திருந்ததால், எந்த வழியாகத் தாக்குவது தங்களுக்குச் சுலபமாகவிருக்குமென்று நிதானிக்கவேண்டியிருந்தது. ஜெர்மனியின் எல்லையைச் சேர்ந்தாற்போல் வர்டுனுக்கும் பெல்போர்டுக்கும் இடையில் கோட்டைகளால் பிரஞ்சுக்காரர் பலப்படுத்தியுள்ள பிரதேசத்தின் வழியாகச் சென்று தாக்கலாம்; அவ்வழியாகத்தான் 1870-ம் வருஷத்தில் அவ்விரு தேசங்களுக்கும் யுத்தம் நேர்ந்தபொழுது ஜெர்மானியார் பிரான்ஸுக்குள் புகுந்து சண்டை செய்தனர். ஆனால் அதற்குப் பிறகு அந்த எல்லைப்புறத்தை பிரஞ்சுக்காரர் மிக்க பலப்படுத்தி விட்டனர். கோட்டைகளை இடித்துவிட, தங்களுடைய பீரங்கிகளுக்கு வன்மையுண்டென்று ஜெர்மானியருக்கு நம்பிக்கை உண்டாயினும், கோட்டைகளுக்குப் பின்பக்கத்தில் பிரஞ்சு சேனை அணிவகுத்து நிறுத்தப்படுமென்பது அவர்களுக்குத் தெரியும். கோட்டைகளை ஆதாரமாகப்பெற்ற ஒரு சேனை தன்னைப் பிளர்ந்துவிடக் கூடாமல் தடுக்க வல்லது. அதை ஒரு சமயம் பிளந்து விடக்கூடுமென்று வைத்துக்கொண்டால் கூட, எதிர் பாராத நிலைமையில் திடீரென்று அதைத்தாக்குவதென்பது நடக்கக்கூடாத விஷயம் பிரஞ்சுக் கோட்டைகளைத் தாக்கிக்கொண்டிருக்கும் சமயத்தில் ருஷ்யர் யுத்த சன்னத்தமாகி பலவானாய் விடுவார்கள். ஆகையால் கோட்டை வரிசைகளாகிய கிழக்கு மறைப்பை வளைந்து சென்று பிரஞ்சு சேனையைப் பக்க வாட்டில் தாக்க வேண்டுமென்று ஜெர்மன் ராணுவ அதிகாரிகள் தீர்மானஞ் செய்தார்கள். அப்படித் தாக்குவதென்றால், யுத்தத்தில் சம்பந்தப் படாத பெல்ஜியம், லக்ஸெம்பர்க் என்ற நடு நிலைமை நாடுகளின் வழியாக ஜெர்மன்சேனை செல்லவேண்டியிருக்கும். பெல்ஜியத்தினுடைய நடுநிலைமைக்கு விரோதமாகத் தாங்கள் நடப்பதால் இங்கிலாந்துடன் யுத்தம் ஏற்பட்டாலும் ஏற்படட்டுமென்று ஜெர்மானியர் துணிந்ததிலிருந்து பெல்ஜியத்தின் வழியாகச் சென்று பிரான்ஸைத் தாக்குவது எவ்வளவு சிரேஷ்டமென்று அவர்கள் நினைத்தார்களென்பது தெரியும். ஆனால் அவர்கள் நினைத்தது சரியல்லவென்று பிறகு நடந்த காரியத்தால் தெரிகிறது; ஏனென்றால் பெல்ஜிய சேனையானது வெகு முரட்டுத்தனத்துடன் ஜெர்மன் சேனையை எதிர்த்துச் சண்டை செய்து அதனுடைய முன்னேற்றத்தை 15 நாள் தாமதப்படுத்திவிட்டது. அந்தத்தாமதமானது நேசக்கட்சிக்கு வெகு சாதகமாக ஏற்பட்டது; எப்படியென்றால் கிழக்கெல்லையில் பிரஞ்சுக்காரர் நிறுத்தியிருந்த அவர்களது சேனையை அந்த 15-நாட்களுக்குள் வடக்கெல்லைக்கு மாற்றக்கூடியதாயிருந்த தல்லாமல் பிரிட்டிஷ் சேனையும் பிரான்ஸுக்கு வந்து சேரக்கூடியதாயிருந்தது. பெல்ஜியர்தான் நேசக்கட்சியைக் காப்பாற்றினர்; அதிதீரர்களாகிய பெல்ஜியரின் சிறு நாட்டை ஜெர்மானியர் பிறகு வெகு ஆத்தரத்துடன் காலின் கீழ் வைத்துத் தேய்த்ததிலிருந்து பெல்ஜியம் எதிர்த்துத் தடுத்ததானது ஜெர்மானியருக்கு எவ்வளவு ஏமாற்றத்தைக் உண்டாக்கிற்றுவென்பது விளங்கும்.

### 1915ம் வருஷ முடிய நடவடிக்கைகள்.

இவ்வாறு தாமத மேற்பட்டும் ஜெர்மானியர் எப்படி வெற்றியடைந்துவிடும் தருவாயில் இருந்தனரென்பதையும், பாரிஸ் நகரின் வாயிலண்டை எப்படிப்போய் சேர்ந்து விட்டனரென்பதையும், பிரஞ்சு சேனாதிபதியாகிய ஜெனரல் ஜாப்ரேயின் தீரத்தனத்தினாலும் சாமார்த்தியத்தினாலும் மாரன் என்ற நதிக்கரையிலிருந்து

எய்ஸன் என்ற நதிக்கரைக்கு ஜெர்மானியர் எப்படித் துரத்தப்பட்டன ரென்பதையும், அதனோடு ஜெர்மானியரின் வேகம் எப்படி அடங்கிப்போய் விட்டதென்பதையும் நாம் பிறகு சொல்லுவோம். எய்ஸன் நதிக்கரைக்கு ஜெர்மானியர்போய்ச்சேர்ந்ததும, பின் வாங்குவதை நிறுத்திக்கொண்டு பிராஞ்சுக்காரரை எதிர்த்து தங்களைக்காத்துக்கொள்ளும் நிலைமையில் அவர்கள் நின்று கொண்டு, ருஷ்யாவின் மேல் தங்களுடைய பலத்தைப் பிரயோகிக்க ஆரம்பித்தனர். இந்த இரண்டு வார மத்தியில் ருஷ்யாவானது தன்னுடைய சேனையை யுத்த சன்னத்தமாக்கி விட்ட தல்லாமல் ஜெர்மனியின் கீழ்பாகத்தில் புகுந்து விரைவாக முன் சென்று, ஜெர்மானியர் தன்னுடைய திக்கில் திரும்பும் படி செய்து விட்டது. ஆகையால் பிரான்ஸில் வெற்றியடைவது இனி சாத்தியமாகாது என்று ஜெர்மன் அஞ்சி, ருஷ்யாவுக்கு மிதமிஞ்சின பலம் உண்டாய் விடுகிறதற்குள் அதை எதிர்த்துச் சண்டைசெய்து நசுக்க விட அந்தத்திக்கில் திரும்பினர். ஆகையால் ஆஸ்டிரியருடன் சேர்ந்து அவர்கள் ருஷ்யாவை வலுவில் தாக்கினர்; போலண்டில் விஸ்டுலா நதிக்கெதிரில் நிறுத்தப் பட்டிருந்த ருஷ்ய சேனையை இவான் கிராடு நகருக்கெதிரில் ஜெர்மானியர் நேரில் தாக்க, ஆஸ்டிரியர் காலிஷியா விலிருந்து பக்கவாட்டில் தாக்கினர். ஜெர்மானியருடைய உத்தேசம் பலிக்காமல் அவர்கள் தோற்றுப்போய், பின்னுக்குத் துரத்தப்பட்டனர்! ஆஸ்டிரியர் செய்த பிரயத்தனம் அவர்களுக்கு அனர்த்தமாய் முடிந்தது; அப்படியடைந்த வெற்றியை ருஷ்யர்விட்டு விடாமல் மேல்போய் காலிஷியா என்ற ஆஸ்டிர்ய மாகாணத்தைத் தாக்கி, லெம்பர்க் என்றபெரிய பட்டணத்தைப் பிடித்துக்கொண்டதுடன் ஸான் என்ற நதிவரையில் அந்த மாகாணத்தின் கீழ்பாகத்தைப் பிடித்துக்கொண்டனர். லெம்பர்குக்கு மேற்கிலுள்ளதாகிய கராகோ என்ற பட்டணத்தையும் ருஷ்யர் பிடித்து விட எத்தனஞ்செய்து கொண்டிருந்தாலும் ஆஸ்டிரியசேனை அதைரிய மடைந்து ராணுவ ஒழுங்குக்கு உட்பட்டு நடக்கக் கூடாத நிலைமைக்குப் போய் விட்டதாலும், அச்சேனையை நடத்தும் வேலையை ஜெர்மானியர் தாங்கள் கைக்கொண்டு அதை மறுபடி ஒழுங்குக்குக் கொண்டு வரவேண்டியிருந்தது. ருஷ்யாவை எதிர்க்க ஜெர்மானியர் செய்த பிரயத்தனம் இவ்வாறு தவறிப் போய் விட்டதால், மறுபடியும் அவர்கள் மேற்கு திக்கில் திரும்பினார்கள்.

எய்ஸன் நதிக்கரையிலிருந்த நேசக்கட்சிச் சேனைகளை வளைந்து கொண்டு விட அவர்கள் எத்தனஞ் செய்ய, அதே சமயத்தில் நேசக்கட்சிச்சேனையானது, ஜெர்மன் சேனையை வளைந்து கொண்டுவிட அதுவும் எத்தனஞ்செய்தது. இவ்வாறு இரண்டு சேனைகளும் ஒன்றை யொன்று வளைந்து கொண்டு விட எத்தனஞ் செய்ததன் பிரயோஜனம் என்ன வாயிற்றென்றால் ஒன்றை ஒன்று முந்திக்கொண்டு விடுகிறதற்காக இரண்டு சேனைகளும் போட்டிபோட்டு சமுத்திரக் கரைக்குப் போய்ச் சேர்ந்தன. ஆகையால் ஜெர்மானியர் பிரஞ்சு ப்ரிட்டிஷ் பெல்ஜியச் சேனைகளை நேருக்கு நேர் தாக்க வேண்டியவர்களாய் விடவே, கலே என்ற துறைமுகப் பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு விடுகிறதற்காக இப்ரிஸ் என்ற பட்டணத்தின்மேல் விசேஷ பலத்தைப் பிரயோகிக்க ஆரம்பித்தனர். அதுவும் பிரயோஜனப் படவில்லை; பிரான்ஸில் இப்படி நடந்து கொண்டிருக்கும் பொழுது, கிழக்குதிக்கில் ருஷ்யர் வெற்றிமேல் வெற்றியடைந்துஆஸ்டிரியாவுக்குள் வெகுதூரம் சென்றுவிட்டபடியால், இப்ரிஸ் நகரை உத்தேசித்துச் செய்த பிரயத்தனம் வீணானதும்

கிழக்குதிக்கில் ஜெர்மானியர் மறுபடி திரும்பினர்.

ருஷ்யர்களை ஏமாற்றும் எண்ணத்துடன் காலிஷியாவிலுள்ள வார்டா என்ற நதிக்கரைக்கு ஆஸ்டிரிய ஜெர்மானியர் பின் வாங்குவது போல் பின் வாங்கி, அங்கிருந்து மறுபடி கிளம்பி போலண்டின் தலை நகராகிய வார்ஸாவை நோக்கி முன் செல்லுகையில் அப்பட்டணம் கண்ணுக்குத் தெரியக் கூடிய வரையில் அவர்கள் போய் விட்டதும் அவர்களுடைய முன்னேற்றம் தடுக்கப்பட்டது.

இரண்டு அரங்கங்களிலும் ஒரே காலத்தில் பெரிய நடவடிக்கைகளில் இறங்கிவிட்டால் தங்களுடைய பலம் சிதறுண்டு போகுமாகையால் அப்படிச் செய்யாமல் ஒரு அரங்கத்தில் தீர்மானமான முடிவு ஏற்படும்படி செய்வதே அவர்களுடைய நோக்கமென்பது யுத்தம் நடந்திருக்கிற மாதிரியைக் கவனித்தால் தெரிகிறது. மேற்கரங்கத்தில் நேசச்சேனைகளை மறித்து நிற்க எத்தனை படைகள் போதுமோ அத்தனை படைகளை அங்கு நிறுத்தி விட்டு, பாக்கிப் படைகளையெல்லாம் கிழக்கரங்கத்தில் ஏவி ருஷ்யாவுக்கு விரோதமாகப் பெரிய பிரயத்தனம் செய்துபார்த்து விடவேண்டுமென்பதே 1915-ம் வருஷத்தில் ஜெர்மனி நடத்தின நடவடிக்கைக்குக் காரணம்; ருஷ்யாவுக்கு குண்டுபலம் போதாதென்பது ஜெர்மனிக்குத் தெரியும். ஆயினும், நாசமேற்பட்டுவிடும் போலிருந்த ஸ்திதியிலிருந்து ருஷ்யர் தங்களுடைய சேனைகளைக் கொண்டு போய்ச் சேர்த்து விட்டனர். அந்த சமயத்தில் டார்டனல்ஸ் கரையில் நேசக்கட்சியார் துருக்கியைத் தாக்க ஆரம்பித்ததால், அதற்கு உதவிசெய்யஜெர்மனி ஆரம்பித்தது. பல்கேரியாவானது ஸெர்வியாவுக்கு துரோகம் செய்து ஜெர்மனியுடன் சேர்ந்து கொள்ளவே, துருக்கிக்கு ஜெர்மனி உதவி செய்வதுடன் பார்வைக்குப் பெருமையாக விளங்கும்படி ஸெர்வியாவுடன் சண்டை செய்ய ஆரம்பித்து, அந்தச் சண்டையில் வெற்றியடைந்தது. இவைகள் 1915-ம் வருஷத்தில் நடந்த விஷயங்கள். 1916-ம் வருஷத்திற்கு ஜெர்மனி என்ன யோசனை செய்திருக்கிறது? மேற் கரங்கத்தில் நேசக்கட்சிச் சேனைகளை எதிர்த்து யுத்தத்தை முடித்துவிட ஜெர்மனி எத்தனப்படுமா? அல்லது ருஷ்யாவின் பிரதான பட்டணங்களாகிய பீட்ரோகிராட், மாஸ்கோ என்ற நகரங்களைப் பிடித்துக் கொள்ளும் உத்தேசத்துடன் சென்ற வருஷத்தில் செய்ததுபோல் ருஷ்யாமேல் திரும்புமா? அல்லது துருக்கியுடன் சேர்ந்து கொண்டு ஈஜிப்டு தேசத்தைத் தாக்கியாவது அல்லது பெர்ஷியா, மெஸபொடோமியா வழியாகச் சென்று இந்தியாவைத்தாக்கியாவது ப்ரிட்டிஷ் ஏகாதிபத்யத்துடன் பிடிவாதமான சண்டை செய்ய ஆரம்பிக்குமா? சென்ற வருஷத்தில் இருந்ததை விட இவ்வருஷம் ருஷ்யசேனை பலமாயிருப்பதாலும் அச்சேனையை நாசமாக்கி விடுவதை விட, ஜெர்மானியருக்கு வேறு உத்தேசமிருக்க முடியாததாலும், சென்ற வருஷத்திலேயே அப்படிச் செய்ய முடியாமற்போய் விட்டதாலும் இந்த வருஷத்தில் ருஷ்யாமேல் ஜெர்மானியர் அநேகமாகத் திரும்பமாட்டார்கள். காகஸஸ் பிராந்தியத்தில் ருஷ்யா இவ்வருஷம் செய்திருக்கிற நடவடிக்கையால் துருக்கி தன்னுடைய இருப்பைக் காத்துக்கொள்ள மன்றாடவேண்டியதாய் விட்டதால், அது தான் வலுவில் தாக்க ஆரம்பிக்க முடியாது. ஆகையால் மேற்கரங்கந்தான் பாக்கியிருக்கிறது. எத்தனை சிரமமிருந்த போதிலும் அங்கு தான் தீர்மானமான முடிவையடைய ஜெர்மானியர் எதிர்பார்க்கிறார்கள். அங்கு அவர்கள் இனி நடத்தப் போகிற நடவடிக்கைகளுக்கு ஆரம்பமாக இப்பொழுது வர்டேன் சண்டை நடந்து கொண்டிருக்கிறது. அச்

சண்டையைப் பற்றி விரிவாகவேறொரு இடத்தில் எழுதியிருக்கிறோம். மேற் கரங்கத்தில் அவர்கள் நடத்தப் போகிற நடவடிக்கைகளால் அவர்களு டைய எண்ணம் கொஞ்சமும் பலிக்கா தென்பது நமக்குத் தெரியும்; அது பலிக்காது போகிறது முதல், யுத்தத் தின் முடிவுகாலம் ஆரம்ப மாகிவிடும்; ஏனென்றால் அது முதல் ஜெர்மனி தான் தாக்குவதற்குப் பதிலாகத் தன்னைக் காத்துக் கொள்ளும் நிலைமை க்கு வந்து, எந்த சமயததில் எந்த இடத்தில் தாக்கலாமென்று தான் தீர்மானித்துச் செய்கிறதற்குப் பதி லாக எல்லா அரங்கங்களிலும் ஒரே காலத்தில் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டியிருக்கும்.

ஜெர்மானியர் செய்திருந்த உத்தே சங்கள் இன்னவென்றும் அவை எவ் வளவு தூரம் பலித்திருக்கின்றன வென்றும் நாம்சிறிதுதெரிந்துகொண் டிருக்கிறோம் அவர்களுக்குப்பல அனு கூலங்கள் இருந்தபோதிலும், ஒரு பெரிய இடைஞ்சல் இருந்தது. அதா வது காலம் அவர்களுக்கு விரோதமா யிருந்தது அவர்களுடைய சேனு பலம், திரவிய பலம், தளவாட பலம் முதலியவை நேசக்கட்சியாரின் சேனு பலம், திரவிய பலம் தளவாட பலம் முதலியவைகளுக்குக் குறைந் தவை யென்பது கணக்கினல் தெரி கிறது. ஆனல் இந்த பலங்களையெல் லாம் யுத்தத்துக் காகும்படி ஒழுங்கு செய்திருந்தது தான் அவர்களுக் கிருந்த விசேஷ அனுகூலம். இந்த அனுகூலம் இது வரையில் அவர் களுக்கிருந்து வந்திருக் கிறதுடன் இப்பொழுதும் இருந்து வருகிறது. நேச ராஜ்யங்களும் தங்களுடைய பலங்களை அதே மாதிரி ஒழுங்கு செய்து கொள்ளும் வரையில், இந்த அனுகூலம் அவர்களுக்கு இருக்கவே யிருக்கும். இது வரையில் யுத்தம் ஒரு விதமான முடிவுக்கு வராவிடினும், நேசக்கட்சியாரின் பலங்கள் ஒழுங்கு செய்யப்பட்டு ஜெர்மனி முடிவில் தோல்வி அடையுமென்பது நிச்சயம்.

இனி நேசக்கட்சியைக்கவனித்து ஜெர்மானியர் தாக்குவதை எதிர்த் தடிக்க அவர்கள் என்ன ஏற்பாடுகள் செய்திருந்தனர் என்று பார்ப்போம். யுத்தம் ஆரம்பித்த பொழுது, மூன்று விதமான அமிசங்களை அவர்கள் பல மாக நம்பியிருந்தனர்; தாங்கள் விசே ஷப் பிரயத்தனஞ் செய்யாமல் அந்த அமிசங்களைக் கொண்டே யுத்தம் முடிந்துபோய் விடுமென்றும் அவர்கள் நம்பியிருந்தனர். ஜெர்மனிக்கு வெ ளித்தேசங்களிலிருந்து சாமான்கள் போகாமல் தடுத்து விடுவது முதல் அமிசம்; அப்படிச்செய்து விட்டால், ஒரு வருஷகாலத்திற்குள் அத்தேசத் தில் உணவுப் பஞ்சமேற்பட்டு, ஜெர் மானியர் பட்டினி கிடக்கவேண்டிய நிலைமைக்கு வந்து விடுவார்கள் என்று நேசக்கட்சியார் எதிர்பார்த்தனர். பணப்பஞ்சம் ஜெர்மனிக்கு உண்டாய் விடு மென்பது நேசக்கட்சியார் நம் பின இரண்டாவது அமிசம். இரண்டு அரங்கங்களில் ஜெர்மானியர் சண்டை செய்யும்படி யிருக்கிறது மூன்றுவது அமிசம். இங்கு மூன்றுவது அமிசத் தைமாத்திரம் ஆராய்வோம். முதலி ரண்டையும் வேறொரு வியாசத்தில் ஆராய்வோம்.

யுத்தம் செய்ய ஜெர்மனிக்கு எவ் வளவு பலமும் திறமையும் உண்டென் பதை நேசக்கட்சியார் யுத்த ஆரம்ப காலத்தில் அறிந்து கொள்ளவில்லை யென்பதற்குச் சந்தேகமேயில்லை. எந் தப் பிரயாசைப் பட்டாவது ருஷ்யா யுத்த சன்னத்தமாகுமுன் பிரான்ஸை நசுக்கி விடவேண்டு மென்பது ஜெர் மானியரின் உத்தேசமென்பது நேசக் கட்சிக்குத்தெரியும். ஆகையால் முதல் சில மாதங்களாகும் வரையில் எப்படி யாவது பிரான்ஸ் சமாளித்து விடுமா கில், ருஷ்யர் வெள்ளம்போல் புரண்டு, ஜெர்மனியின் கிழ்மாகாணங்களில் புகு ந்து முன்சென்று விடுவார்களென்

றும், அவர்களை எதிர்த்துமறிக்க ஜெர்மானியரால் கூடாதென்றும், ஆகையால் யுத்தம் வெகுசீக்கிரமாகமுடிந்துவிடு மென்றும் நேசக் கட்சியார் நினைத்தார்கள். இந்தத் தப்பெண்ணம் பரவும்படி இங்கிலாந்திலும் பிரான்ஸிலுமுள்ள அதிகாரிகள் வேண்டுமென்று செய்ததினுலேயே யுத்தம் இத்தனைகாலம் நீடித்துவிட்டது. ஏனென்ருல், அம்மாதிரி தைரியப் படுத்தினதானது ஜனங்களுக்குள் கிரமத் தப்பான ஒரு நம்பிக்கை முதிர்வதற்கு இடங்கொடுத்தது; முக்கியமாக இங்கிலாந்தில்தான் அவ்விதத் தப்பு நம்பிக்கை கெடுதலுக்குக் காரணமாயிருந்தது. "எப்பொழுதும் போல் காரியங்கள் நடக்கின்றன" என்று சொல்லிக் கொள்வதால், தங்களுக்கு விசேஷ பல மிருப்பதாகத் தெரியட்டுமென்று நினைத்தார்களே யல்லாமல், அப்படிச் சொல்லிக்கொள்வது ஒரு மூட நம்பிக்கையைக் காட்டினதாக நினைத்தார்களில்லை. கிழக்குப் பிரஷ்யாவில் டானன்பர்க் என்ற இடத்தில் ருஷ்யர் பெரிய நாசத்தை அடைந்தபோதிலும் அம்மாகாணத்துக்குள் புகுந்து முன் சென்றதாலும், லெம்பர்க் நகரையும் கிழக்கு காலிஷியாவையும் அவர்கள் பிடித்துக்கொண்டதாலும் மேலே நாம் பிரஸ்தாபித்த தப்பெண்ணம் இங்கிலாந்தில் ஓரளவு விருத்தி அடையக் கூடியதாயிருந்தது. மேற்கரங்கத்தில் பெல்ஜியர் ஜெர்மானியரை மறித்து விட்டதிலிருந்து ஜெர்மனியின் காலாட் படைகள் மட்டமானவை என்ற எண்ணம் உண்டாய் விட்டது. மாரன் நதிக்கரைச் சண்டைக்குப் பிறகு ஜெர்மானியர் நசுக்கப் பட்டுப் போய்விட்டதாக ஒரு எண்ணம் உண்டாய் விட்டது; எய்ஸன் நதிக்கரைக்குப்போய் அரண் சண்டையின் குணம் இன்னதென்று ஜெர்மானியர் காட்டின பிறகு தான் மேற் சொன்ன எண்ணம் மாறிற்று. கடலோரம் வரையில் இரண்டு கட்சிச் சேனைகளும் நீண்டு, இப்ரிஸ் நகரில் நேசச் சேனையைப்பிளந்துவிட ஜெர்மானியர் செய்த பிரயத்தனம் பலிக்காமல் போய்விடவே, கொஞ்சங் கொஞ்சமாக ஜெர்மானியரின் பலத்தைத் தாங்கள் குறைத்து விட முடியுமென்றும், அடுத்தாற்போல் கோடை வந்ததும் தாங்கள் அவர்களை வலுவில் தாக்கும்பொழுது அவர்கள் எதிர்த்து நிற்கச் சக்தியற்றவர்களாய் விடுவார்களென்றும் நினைத்தார்கள். நீமன்நதிக்கரையில் ருஷ்யர் அடைந்த வெற்றியாலும், வார்ஸாவைப்பிடித்து விட ஜெர்மனியர் செய்த பிரயத்தனம் பலிக்காமல் அவர்கள் செய்து விட்டதாலும், மேற்சொன்ன சொப்பனுவஸ்தை பலப்பட்டதல்லாமல், கார்பேதியன் பிரதேசத்தில் ருஷ்யர் முன்செல்ல ஆரம்பித்ததிலிருந்து ஆஸ்டிரியாவும் ஹெங்கேரியும் சீக்கிரத்தில் ஓய்ந்துபோய் விடுமென்று நேச தேசங்களில் நினைத்து விட்டார்கள். மேற்கரங்கத்தில் ஜெர்மன் சேனையின் பீரங்கிகள் திடீரென நின்றுவிட்டதைப் பற்றியும், அவர்களுடைய படைகள் அரங்கம் விட்டு அரங்கத்துக்குப் பெயர்க்கப் பட்டதைப்பற்றியும், அவர்களுடைய தைரியங் குறைந்து ராணுவஹத்து தவறிப்போய் விட்டதைப் பற்றியும் அவர்களுடைய பீரங்கிகள் தேய்ந்து போய் விட்டதைப் பற்றியும் நேசக் கட்சியார் தெரிந்து கொண்ட விஷயங்கள் மேற்சொன்ன அபிப்பிராயங்கள் உறுதிப்படக் காரணமாயின. இவ்விஷயங்களிலிருந்து, ஜெர்மன் படைகள் மிக்கக் கஷ்ட நிலைமைக்கு வந்துவிட்டதாகவும், அவர்களுடைய போர் முனை பிளவு படாமல் காப்பாற்றுவதே அவர்களுக்குப் பெரிய காரியமென்றும் நேசதேசத்தார் நினைத்தார்கள், ப்ரிட்டிஷாருக்குத் துணைப்படைகள் தயாராய் விட்டதும், பெல்ஜியத்திலிருந்தும் பிரான்ஸியிலிருந்தும் ஜெர்மானியர் துரத்தப் படுவார்களென்றும், அதே சமயத்தில் ருஷ்யர் ஆஸ்டிரியா

வையும் ஹங்கேரியையும் அடித்துப் போட்டு ஜெர்மனிக்குள் படையெடுத்து விடுவார்களென்றும் எதிர்பார்த்தார்கள். 1915ம் வருஷத்தில் இப்படி நடக்குமென்றுதான் நேசக்கட்சியார் உத்தேசித்திருந்தனர். தங்களுடைய பெரிய பலங்களை அவர்கள் கணக்கிட்டதில் ஒரு பிசகுமில்லை; ஆனால் ஜெர்மனியின் பலத்தைக் குறைவாகக் கணக்கிட்டதும், தாங்கள் எவ்வளவு பிரய்த்தனம் செய்யவேண்டுமென்று சரியாக மதிப்பிடத்தவறிப் போனதுமே அவர்கள்செய்த பிசகு. இவையல்லாமல், நேசக்கட்சியாருக்கு இன்னொரு குறையிருந்தது. இன்ன நடவடிக்கைகள் தான் நடத்துகிறதென்று அவர்கள் எல்லோரும் கலந்துகொள்ளவில்லை; ஜெர்மனியோ வென்றால் யுத்தம் ஆரம்பித்த வுடனேயே போரை நடத்தும் பொறுப்பை தான் முற்றிலும் ஏற்றுக் கொண்டுவிட்டது. ஆகையால் 1915ம் வருஷத்தின் யுத்த பலன் நேசக் கட்சிக்கு,பெரிய ஏமாற்றமாக ஏற்பட்டது; ஆனால் மறுபடியும் அதேமாதிரி தப்பு யோசனை செய்ய மாட்டார்களாகையால், அந்த ஏமாற்றமும் நல்லதுதான். சென்ற வருஷாரம்பத்தில் நேசக்கட்சியார் வலுவில் தாக்க ஆரம்பித்ததும், நியூசாபல் என்ற இடத்தில் நடந்த சண்டையிலேயே நேசக்கட்சியின் குறைகள் என்னவென்பது வெளியாய்விட்டன. நியூசாபலில் ப்ரிட்டிஷார் பீரங்கிகளை ஏராளமாகச் சேர்த்து வைத்துக்கொண்டு குண்டுகளைப் பெருவாரியாகச் சொரிந்தனர். போவர்களுடன் செய்த யுத்தத்தில் எத்தனை குண்டுகளைச் செலவிட்டனரோ அதை விட அதிகமாக நியூசாபல் சண்டை ஒன்றில் மாத்திரம் செலவிட்டனராம். கொஞ்சதூரம் போகும் வரையில் ப்ரிட்டிஷாரின் எண்ணம் பலித்ததுண்டு; ஆனால் அதற்குள் குண்டுகள் ஆய்விட்டதால், மேலே முன் செல்லப் பிரயத்தனஞ் செய்தபொழுது உயிர்ச்சேதம் அதிகமாக ஆரம்பித்தது. ஆகையால் சண்டையை நிறுத்திவிடவேண்டியதாய்விட்டது. இந்தச் சண்டையும் இதற்கடுத்தாற்போல் ஆபர்ஸ் என்ற குன்றை அவர்கள் தாக்கினதும் ஒரு பெரிய தப்பெண்ணத்தையும் குறையையும் வெளிப்படுத்திற்று. அதாவது குண்டுகள் எத்தனை தேவையாயிருக்குமென்று அவர்கள் உத்தேசித்திருந்தது, அவைகளைப்போர் முனைக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதற்காகச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகளும் போதாதென்று வெளியாயிற்று. உடனே இந்த யுத்தத்துக்குத்தேவையானபடி குண்டுகள் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டு, அந்த விசாரணை மிஸ்டர் லாயிட் ஜியார்ஜ் என்ற மந்திரியிடம் ஒப்புவிக்கப்பட்டது. ஆனால் இந்த வேலையானது காலக்கிரமத்தில் தான் நடக்கக்கூடியதாகையால், குண்டுகள் ஓயாமல் போக ஆரம்பிக்கப் பல மாதங்கள் செல்லவேண்டியதாயிருந்தது. ஆகையால் 1915-ம் வருஷத்தில் தாங்கள் வலுவில் தாக்க உத்தேசித் திருந்ததைப் பல மாதம் நேசக்கட்சியார் ஒத்திவைக்க வேண்டியதாய்விட்டது. மழை காலத்தில் ஜெர்மானியரை வலுவில் தாக்க பிரெஞ்சுக்கார் ப்ரிட்டிஷாரை விட சிலாக்கியமான ஏற்பாடு செய்திருந்தார்கள்; ஆனால் ஆர்டாய்ஸ் என்ற பிரதேசத்தை அவர்கள் தாக்கினதிலிருந்து ஜெர்மானியர் தங்களைக் காத்துக்கொள்ள எவ்வளவு பலமாக ஏற்பாடுசெய்திருந்தார்களென்பது வெளிப்பட்டதால், போர்முனை நெடுக ஓரே காலத்தில் தாக்கி, பீரங்கிகளும் ஜெர்மானியருக்குள்ளதைவிடத் தங்களுக்கு மிகவும் ஏராளமாக இருந்து அநேகம் இடங்களில் அதிக உக்கிரத்துடன் நெருங்கித் தாக்கினாலொழிய தங்களுடைய எண்ணம் பலிக்க முடியாதென்று அவர்கள் கண்டுகொண்டார்கள். ஆனால் இந்த மத்தியில் ஜெர்மானியர் சும்மா விருந்து விட வில்லை 1915-ம் வருஷத்திய

சண்டைக்காக மாரி கால முழுமையும் அவர்கள் தங்களுடைய பலங்களை யெல்லாம் திரட்டி வந்ததால், ஏராளமான குண்டுகளைச் செய்து குவித்து விட்டார்கள். அந்த தைரியத்தைக் கொண்டு இப்ரிஸ் நகரில் நேசச் சேனையைப் பிளந்து விட அவர்கள் முயன்றனர். ஆனால் அது வீணாய் விடவே, மேற் கரங்கத்தில் தங்களைக் காத்துக் கொள்ளும் நிலைமையை வகித்து நின்று, ருஷ்யாமேல் திரும்பினர்; ருஷ்யசேனைக்கு வேண்டிய சாமான்களையும் குண்டு முதலிய தளவாடங்களையும் சேகரம் செய்து போர்முனைக்கு அனுப்பும் விஷயத்தில் ருஷ்யாவுக்கிருந்த கஷ்டங்களை நேசக் கட்சியார் தெரிந்து கொண்டிருந்ததை விட ஜெர்மானியர் நன்றாய்த் தெரிந்து கொண்டிருந்ததாகத் தோன்றுகிறது. அந்தச்சண்டையை இங்கு விரிவாக எடுத்துச் சொல்ல அவசியமில்லை. ஆனால் ருஷ்யர் பின் வாங்கினதாலும் அதனாலேற்பட்ட நெருக்கடியாலும் ருஷ்யர் வலுவில் தாக்குகிறதென்ற எண்ணத்தை ஒத்திவைக்க வேண்டியதாய் விட்டது. இதற்கப்புறம் பிரஞ்சு பிரிட்டிஷார் ஒரு தடவை தான் வலுவில் தாக்கினர்; எதற்காகத் தாக்கினர் என்று தெளிவாக வெளிப்படவில்லையாயினும், தாங்கள் மேற்கரங்கத்தில் ஜெர்மானியரைத் தாக்கினால் அவர்கள் கிழக்கரங்கத்தில் ருஷ்யரைத்தாக்கும் வேகம் குறையுமென்று நினைத்துஅப்படிச்செய்தார்கள் என்று நாம் வைத்துக்கொள்ளலாம். ஸெப்டம்பர் மாதத்தில் அவர்கள் ஜெர்மானியரைத் தாக்கினதானது ஜயமாகவே முடிந்தது; ஆனால் அந்த ஜயம் சிறியதே; இதற்கிடையில் ருஷ்யாவுக்கு உதவி செய்யும் உத்தேசத்துடன், டார்டனல்ஸ் கரையில் துருக்கியரைத் தாக்க பிரிட்டிஷார் ஆரம்பித்தனர்; ஆனால் அந்தப்பிரயத்தினம் பலிக்காமல் சேதம் அதிகமானதால், திரும்பிவிட வேண்டியதாய் விட்டது. இந்த சமயத்தில் ஜெர்மானியர் திடீரென்று ருஷ்யாவைத் தாக்குவதை நிறுத்திக் கொண்டு, பால்கன் நாட்டில் புகவே, நேசக் கட்சியார் அவர்களை எதிர்க்கத் தயாரா யில்லாமற் போய் விட்டனர். ஆகையால் ஸெர்வியாவைக் காப்பாற்ற அவர்களால் கூடவில்லை. பிறகு ஜெர்மனிக்கும் கான்ஸ்டான்டிநோபிளுக்கும் நேர்வழியேற்பட்டு விடவே, ஈஜிப்டு தேசத்துக்கும் மெஸபொடோமியாவிலிருந்த இந்தியாவின் சேனைக்கும் அபாயம் சமீபித்து விட்டது. ஸெர்வியாவைக் காப்பாற்ற நேசக்கட்சி சமயத்தில் தயாராயில்லை யாயினும், ஸலோனிகாத் துறை முகத்தில் ஒரு பெரிய படையைக்கூட்டி அப்பட்டணத்தைப் பலப்படுத்தி, ஜெர்மானியருக்கும் பல்கேரியருக்கும் பக்கவாட்டில் தாங்களிருந்து அவர்களுடைய நிலைமையை அபாயத்துக்குள்ளாக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள். இந்த யோசனை சரியா அல்லவாவென்பது இனியே தெரிய வேண்டும்.

## நேசக்கட்சியின் தற்கால பலங்கள்.

மேற்சொன்ன விஷயங்களே 1915ம் வருஷத்தில் நடந்தவை. இனி நாம் 1916ம் வருஷத்திய யுத்தத்தை கவனிப்போம். இவ்வருஷத்தில் நேசக் கட்சியார் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறார்களென்று தெரிந்து கொள்வது முதலில் அவசியமாகும். விசேஷப் பிரயத்தனங்கள் செய்யாமலே தாங்கள் ஜயித்துவிடக்கூடுமென்ற அவர்களுடைய நம்பிக்கை மாறி, தாங்கள் பிரமாதமான தியாகங்களைச் செய்யவேண்டு மென்றும், எப்பாடு பட்டாவது ஜயித்துவிடவேண்டும் மென்றும் இப்பொழுது அவர்களுக்குத் தீர்மானம் உண்டாயிருக்கிறது. 1915ம் வருஷத்தில் யுத்தத்தின் பொருட்டு அவர்கள் ஏற்பாடு செய்திருந்ததை விட இந்த வருஷத்தில் சிலாக்கியமான ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். மேற்கரங்கத்தில் சத்துருக்களுக்குள்ளதை விட அவர்களுக்கு அதிகமாகவும்,கிழக்

ரங்கத்தில் சமமாகவும் குண்டுகள் இருக்கின்றன. இப்பொழுது எல்லா நேச தேசங்களின் ராணுவ அதிகாரிகளும் கலந்து யோசனை செய்து முன்ன ராணுவ நடவடிக்கைகளைத் தான் நடத்தவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார்கள். அவர்களுடைய துணைப்படைகள் அதிகமாயிருக்கின்றன; ஜெர்மானியருடைய துணைப்படைகளோ கட்டாயம் குறைந்திருக்கும்.

இம்மாதிரி நாம் சொல்வதிலிருந்து ஜெர்மானியர் இது வரையில் எவ்வளவு சேதமடைந்திருக்கின்றனர் என்ற கேள்வி உண்டாகிறது. அதைப் பற்றி பலர் பல விதமாக அபிப்பிராயப் படுகிறார்கள். அவர்களுடைய சேதத்தைப்பற்றி 1915-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் பிரஞ்சு ராணுவ அதிகாரிகள் சில கணக்குகளைப் பிரசுரம் செய்தார்கள். அக்கணக்குகளைக் கீழே சொல்லுகிறோம் :—

| | |
|---|---|
| ஜெர்மனிக்கிருந்த மொத்தம் துருப்புகள். | 90-லட்சம். |
| ரயில் பாதைகளிலும் தொழிற்சாலைகளிலும் வேலையிலிருந்தார்கள். | 5-லட்சம். |
| சேதம். | 18-லட்சம். |
| முதலில் காயம்பட்டு பிறகு சேவகத்துக்குத் திரும்பி வந்தவர்கள். | 5-லட்சம். |
| வாஸ்தவச்சேதம் | 13-லட்சம். |
| போர்முனையில். | 40-லட்சம். |
| பின் பலம் மொத்தம். | 32-லட்சம். |
| 39 வயதுக்கு மேற்பட்டவர்களையும் மறுபடி லாயக்கில்லாதவர்களையும் நீக்கி | 20-லட்சம். |
| பின் பலம். | |

ஜெர்மன் சேனையில், முதலில் காயம் பட்டு பிறகு சேவகத்துக்குத் திரும்பி வந்து விடுகின்றவர்களைக் கழித்து மாதந்தோறும் நிச்சயமாக 2 லட்சத்து 60 ஆயிரம் பெயர்கள் சேதமாய் விடுகிறதாக பிரஞ்சு ராணுவ அதிகாரிகள் கணக்கிட்டிருக்கிறார்கள். இந்த மதிப்புப்படி, 1916-ம் வருஷம் பிப்ரவரி மாதம் முடிய ஜெர்மன் சேனையில் 46 லட்சத்து 80 ஆயிரம் பெயர்கள் சேதமாயிருக்கவேண்டும். ஆனால் பிரஞ்சு திட்டமானது வாஸ்தவத்துக்கு அதிகமாயிருக்கலாம். நடு நிலைமைத் தேசமாகிய ஸ்விட்ஸர்லாந்து தேசத்து ராணுவ அதிகாரியாகிய சர்னர் பெய்லர் என்பவர் ஜெர்மன் சேனையில் மாதந்தோறும் ஒரு லட்சத்து 90 ஆயிரம் பெயர்கள் சேதமாகிறதாகக் கணக்கிட்டிருக்கிறார்; அந்தக் கணக்குப்படி சென்ற பிப்ரவரி முடிய 34 லட்சத்து 20 ஆயிரம் பெயர்கள் சேதமாயிருப்பார்கள்; அநேகமாக இந்தக் கணக்கே உண்மையாகயிருக்கலாம். ஜெர்மனியின் அதிகாரிகள் பிரசுரம் செய்யும் கணக்குப்படி 26 லட்சம் பெயர்கள் தான் சேதமாயிருக்கின்றனர்.

அவர்களில், மறுபடி சேவகத்துக்குத் திரும்பி வந்து விட்டவர்களைக் கழித்து விட்டால், 20 லட்சம் துருப்புகளே மறுபடி உபயோகப்படக்கூடாமல் சேதமாயிருப்பார்கள். இரண்டு கட்சித் துருப்புகளிலும் இத்தனை பெயர்கள் சேதமாயிருப்பார்களென்று அமெரிக்கா தேசத்து ராணுவ நிபுணர் ஒருவர் கணக்கிட்டிருக்கிறார். அவருடைய கணக்கு பின் வருமாறு:—

ஜெர்மன் கட்சி.

| | ஜனத்தொகை. | சேனை பலம். | நூற்றுக்கு எத்தனை. |
|---|---|---|---|
| ஜெர்மனி | 650-லட்சம் | 78-லட்சம் | 12 |
| ஆஸ்டிரியா ஹங்கேரி | 500-லட்சம் | 50-லட்சம | 10 |
| துருக்கி | 20 '-லட்சம் | 16-லட்சம் | 8 |
| பல்கேரியா | 50-லட்சம் | 4-லட்சம் | 8 |
| மொத்தம் | 1400 லட்சம் அல்லது 14 கோடி. | 148 லட்சம் | |

நேசக் கட்சி.

| | ஜனத்தொகை | சேனுபலம் | நூற்றுக்கு இத்தனை. |
|---|---|---|---|
| பிரான்ஸ் | 400 லட்சம் | 48 லட்சம் | 12 |
| ருஷ்யா | 1,650 லட்சம் | 132 லட்சம் | 8 |
| இங்கிலாந்து | 450 லட்சம் | 45 லட்சம் | 10 |
| குடியேற்ற நாடுகள் | 130 லட்சம் | $7\frac{1}{2}$ லட்சம் | 6 |
| இடாலி | 350 லட்சம் | 35 லட்சம் | 103 |
| பெல்ஜியம் | 75 லட்சம் | $2\frac{1}{2}$ லட்சம் | |
| ஸெர்வியா | 55 லட்சம் | 3 லட்சம் | |
| மொத்தம் | 3,110 லட்சம் | 273 லட்சம் | |

ஒவ்வொரு கட்சிக்கும் சேதம் எத்தனை இருக்குமென்று அந்த ராணுவ நிபுணர்கணக் கிட்டி ருக்கிறபடி,

நேசக் கட்சியில் :—போர்க்களத்துக்குச் சென்றிருக்கிற 150 லட்சம் துருப்புகளில் $62\frac{3}{4}$ லட்சம் சேதமாயிருப்பார்கள்.

ஜெர்மன் கட்சியில் :—போர்க் களத்துக்குச் சென்றிருக்கிற 110 லட்சம் துருப்புகளில் $52\frac{1}{2}$ லட்சம் சேதமாயிருப்பார்கள்.

எந்தக் கட்சியில் சேனுபலம் அதிகமாயிருக்கிறதென்பது இதிலிருந்து தெரியும். ஆனல் சேனுபலத்தினல் மாத்திரம் வெற்றி உண்டாய்விடாது. இயந்தரங்கள், பீரங்கிகள், குண்டுகள் முதலியவைகள் வெற்றி உண்டாவதற்குப் பெரிய சாதனங்களாகும். இரண்டு கட்சிகளுக்கும் இந்த சாதனங்கள் ஒத்திருக்குமாயின், சேனுபலம் உள்ள கட்சி அப்பொழுது வென்றுவிடும். அப்பொழுதுகூட, தங்களுக்கு அதிகச் சேதமேற்படாமல் சத்துருக்களை நசுக்கிவிடக் கூடிய சமயத்தை நேசக் கட்சியார் எதிர்பார்க்கவேண்டும்; ஆனல் யுத்தத்தினல் ஒவ்வொரு வழியிலும் நேர்ந்து வரும் சிரமத்தை உத்தேசித்து எவ்வளவு சீக்கிரத்தில் தாங்கள் அதிகச் சேதப்படாமல் வெற்றி பெறக்கூடுமோ அவ்வளவு சீக்கிரத்தில் பெற முயலவேண்டியதும் அவசியம். அந்த சமயம் விரைவுடன் நெருங்கி வருகிறதாக அவர்கள் நினைக்கிறார்கள். அதிக நம்பிக்கையுள்ளவர்கள் இந்தக் கோடையில் அந்தசமயம் வந்து விடுமென்றும், அதிக நிதான முள்ளவர்கள் அடுத்த பிப்பரவரி மாதத்தில் வருமென்றும் கருதுகிறார்கள். அந்த சமயம் வரும் வரையில், இப்பொழுது வர்டூனை ஜெர்மனியர் தாக்கிவருவது போல் எத்தனை தடவை தாக்கினலும் அதெல்லாம் நேசக்கட்சிக்கு நல்லதுதான். ஏனென்றால், ஜெர்மனியாருக்குச் சேதம் அதிகமாகவும் நேசக்கட்சிக்குச் சேதம் குறைவாகவும் இருக்கிறபடியால், முடிவான சண்டை அவ்வளவுக் கவ்வளவு சமீபத்தில் வந்துவிடும். ஆயினும் ஜெர்மானியர் தாக்கும்படிவிட்டு விட்டுத் தாங்கள் சும்மா விருப்பது நேசக்கட்சியின் நோக்கமல்ல. ஜெர்மனி நடுவில் சளைத்துப் போவதால் யுத்தத்தின் முடிவு சீக்கிரம் வருமென்பதே அவர்களுடைய உத்தேசம். எல்லாப்போர் முனைகளிலும் சேர்ந்தாற்போல் நேசக்கட்சியார் தாக்க ஆரம்பிக்கும் பொழுது, யுத்தத்தின் முடிவு காலம் ஆரம்பமாகும்.

## மேற்கரங்கத்தில் யுத்தம்.

### யுத்த பூமியின் விசேஷம்.

இந்த மஹா யுத்தமானது ஜெர்மனிக்கும் பிரான்ஸுக்கும் ஆரம்பமான போது, யுத்த அரங்கத்தின் பலாபலம் பின்வருமாறு இருந்தது. கிரமமான வழிப்படி ஜெர்மனி முன் செல்லுவதானால், பிரான்ஸின் எல்லையை ஒட்டினாற் போலுள்ள தன்னுடைய எல்லைப் பிரதேசத்தில் ஜெர்மனி தன்னுடைய நடவடிக்கைகளை நடத்த வேண்டும். அந்த எல்லைப் பிரதேசமானது வடக்கிலுள்ள "லாங்வே" முதல் தெற்கில் பெல்போர்ட்டு வரையில் 150 மைல் நீளமுள்ளது. இந்த 150 மைல் நீள பூமியில் ஒரு இடைவெளி இருக்கிறது. அதன் வழியாக ஜெர்மனி புகுந்து பிரான்ஸைத் தாக்கக்கூடும். அந்த இடைவெளியானது ஸ்விட்ஜர்லாந்து தேசத்து மலைகளுக்கும், வாஸ்ஜெஸ் என்ற மலைக்கும் நடுவிலுள்ளது. ஆனால் அந்த வழியாக ஜெர்மானியர் புகுந்துவிடாமல் தடுக்க, பெல்போர்ட்டு என்ற கோட்டை ஏற்பட்டிருக்கின்றது. வாஸ்ஜெஸ் என்ற மலையானது, பெல்போர்ட்டு கோட்டைக்குவடக்கில் ஆரம்பமாகி, 70 மைல் நீளம் வழியை மறித்து நிற்கிறது. அந்த மலையும் கோட்டை முதலியவைகளால் பலப்படுத்தப்பட்டிருக்கிறது. அதற்கடுத்தாற்போல் நான்ஸி என்ற பட்டணத்திற் கருகில் ஓர் இடைவெளி இருக்கிறது. அங்கு மலை கிடையாது. அந்த இடைவெளிக்கு வடக்கில் டூல் என்ற கோட்டையும், தெற்கில் எபினால் என்ற கோட்டையும் ஏற்பட்டிருக்கின்றன. டூலுக்கு வடக்கில் வர்டூன் வரையில் மியூஸ் நதிக் குன்றுகளிருக்கின்றன. அவைகள் கோட்டை முதலியவைகளால்பலப்படுத்தப்பட்டவை. வர்டூனுக்கு வடக்கில் லாங்வே என்னுமிடத்தில் மறுபடியும் ஓர் இடைவெளி இருக்கிறது. அந்த இடைவெளிக்குக் காவலாக லாங்வேயில் ஒரு கோட்டை ஏற்பட்டிருக்கிறது. ஆகையினால் தொடர்ந்தாற் போல் நிற்கக் கூடாமல் கொஞ்சங் கொஞ்ச நீளம் நின்றே ஜெர்மானியர் தாக்கக் கூடும். ஏனென்றால் லாங்வே கோட்டையை அடக்கி விட்டாலும் அந்த இடைவெளியானது 30 மைல் நீளம் தான் உள்ளது. நான்ஸிக்கு அருகிலுள்ள இடைவெளி 50 மைல் நீளமுள்ளது. ஆகையால் ஜெர்மானியர் தங்களுடைய சேனாபலத்தை முற்றிலும் உபயோகிக்க வேண்டுமானால், நீளமாகச் சேனையை நிறுத்தித் தாக்க வசதியில்லை. ஆகையினால் கோட்டைகளால் காவல் செய்யப்பட்டுள்ள எல்லைப் புறத்தை அவர்கள் தாக்கிப் பிடித்துக்கொண்டாலொழிய, பிரான்ஸைப்பிடித்துக் கொள்ள முடியாது. ஆனால் கோட்டைகளைத் தாக்கி அடக்குவதானது காலக்கிரமத்தில் நடக்கக்கூடிய காரியம். அப்படி சாவகாசமாக நடவடிக்கைகளை நடத்த அவர்களால் முடியவில்லை. காலதாமதமில்லாமல் விரைவாக நடவடிக்கைகளை நடத்தி முடிக்க வேண்டியதே அவர்களுக்கு முக்கிய அவசியம். ஆகையால் லக்ஸம்பெர்க், பெல்ஜியம் என்ற நடு நிலைமை நாடுகள் வழியாகச் சென்று பிரான்ஸைத் தாக்க வேண்டுமென்று அவர்கள் தீர்மானம் செய்தார்கள். அந்த நடுநிலைமை நாடுகளுக்குப் பக்கத்திலுள்ள பிரஞ்சு எல்லையிலும் பிரஞ்சுக்காரர்கள் மாபூஜ், மெஜீர்ஸ், மாண்டிமெடி முதலிய இடங்களில் கோட்டைகளைக் கட்டி அந்த எல்லையையும் பலப்படுத்தியிருந்தார்கள். ஆயினும், கிழக்கு எல்லையில் பூமியின் விசேஷம் பிரஞ்சுக்காரர்களுக்கு அனுகூலமாயிருப்பது போல், வடக்கு எல்லையில் இல்லை யாகையால், வடக்கெல்லைக்காவலானது கிழக்கெல்லைக்காவலைவிட பலஹீனமாய் இருந்தது. பெல்ஜியம், லக்ஸம்பெர்க் என்றநாடுகளின் நடுநிலைமைக்குவிரோதமாக ஜெர்மானியர் அவைகளின் வழியாக பிரான்ஸுக்குள் புகுவார்களானால், 100 மைல் நீளத்திற்குச் சேனைகளை

கிறுத்தவும், அவர்களுடைய சேனா பலத்தை முற்றிலும் உபயோகப்படுத்தவும் இடமுண்டாகக் கூடியதாயிருந்தது. ஆகையால் அத்தேசங்களின் வழியாக முன் செல்லுவதாகவும், அதே சமயத்தில் மெட்ஸ் என்ற தங்களுடைய கோட்டையிலிருந்து புறப்பட்டு பிரான்ஸின் கிழக்கெல்லையைத் தாக்குவதாகவும் ஜெர்மானியர் தீர்மானித்துக்கொண்டனர். பிரான்ஸினுடைய படைகள் அநேகமாகக் கிழக்கெல்லையை ஒட்டினாற்போல் கூட்டப்பட்டிருந்தபடியால், தாங்கள் இரண்டு பக்கத்திலிருந்தும் முன் செல்லுவதால், பிரஞ்சு சேனை இடையில் அகப்பட்டுக் கொண்டு விடுமென்று ஜெர்மானியர் எதிர்பார்த்தனர்.

### பிரஞ்சுக்காரர் செய்திருந்த யோசனை.

ஜெர்மானியரின் உத்தேசம் பலிக்காமல் செய்ய, பிரஞ்சுக்காரர்கள் பின் வருமாறு யோசனை செய்திருந்தனர். கிழக்கெல்லையில் தங்களுடைய படைகளைக் கூட்டி, அல்ஸேஸ், லோரேன் என்ற நாடுகளுக்குள் முன் சென்று, மெட்ஸ் என்ற கோட்டையைத் தாக்கினால், ஜெர்மானியரின் பக்கவாட்டுக்கு அபாயமுண்டாகி, வடக்கு சேனை பெல்ஜியத்தினின்றும் பின் வாங்கிவிடுமென்றும், கிழக்கு சேனை ரயின் நதிக்கரையை ஒட்டினாற்போல் போய்விடுமென்றும், எதிர்பார்த்தார்கள். ஆகையால் ஆகஸ்டு மாதம் 4-ம் தேதியன்று ஜெர்மானியர் பெல்ஜியத்திற்குள் படையெடுத்து விசேஷச் சேதமடைந்து, ஆகஸ்டு மாதம் 7-ம் தேதிக்குள், லீஜ் என்ற கோட்டையைப் பிடித்து விட்டார்களாயினும், அதற்குள் பிரஞ்சுக்காரர்களும் அல்ஸேஸ் மாகாணத்திற்குள் முன் சென்று, மூல்ஹாஸன் என்ற இடத்தை ஆகஸ்டு மாதம் 8-ம் தேதிக்குள் பிடித்துவிட்டனர். ஆனால் இந்த வெற்றி நீடித்து நிற்கவில்லை. துணைப்படைகள் ஜெர்மானியருக்குப் போய்ச் சேரவே, பிரஞ்சுக்காரர் அப்பட்டணத்தைக் காலிசெய்து, தங்கள் எல்லையை ஒட்டினாற்போல் பின்சென்றுவிட்டனர்.

### சண்டையின் ஆரம்பம்.

பெல்ஜியத்தின் வழியாய் ஜெர்மானியர் முன் சென்றதை மறுபடியும் கவனிப்போம், அவர்கள் மூன்று சேனைகளாக முன்சென்றனர். வலது பக்கத்துக் கோடிச்சேனை வான்கிளாக் என்றவராலும், நடுச்சேனை வான் பியுலோ என்றவராலும், இடது புறத்துக்கோடிச் சேனை ஸாக்ஸனி நாட்டு இளவரசராலும் நடத்தப்பட்டன. ஆகஸ்டுமாதம் 20 தேதிக்குள், வலது கோடிச் சேனையானது, பிறைச்சந்திரன்போல் வளைந்து, பிரஸ்ஸல்ஸ் நகருக்கு மேற்காகப் போய்விட்டது. நடுச்சேனை நாமூருக்கு எதிராகப் போய்விட்டது இடது பக்கத்துச் சேனை மியூஸ் நதிக்கரையோடு டினாண்டு என்ற இடம்வரையில் போய்விட்டது. பெல்ஜியர்களுடைய நிலைமை வெகு கஷ்டமாக இருந்தபோதிலும், ஜெர்மன் சேனையை அவர்கள் எதிர்த்து அதைத் தாமதப்படுத்திவிட்டார்கள். ஆனால் அதை மறித்து அவர்கள் நிறுத்திவிடக்கூடவில்லை என்றாலும், அந்தத் தாமதமானது, நேசக்கக்ஷிக்கு வெகு அனுகூலமாக ஏற்பட்டது.

இதற்கிடையில் பிரஞ்சுக்காரர், அல்ஸேஸ் லோரேன் என்ற நாடுகளில், ஜெர்மானியரை வலுவில் தாக்கவாரம்பித்து, முதலில் வெற்றியடைந்தனர். ஆகஸ்டு 19-ம்தேதிக்குள் மெட்ஸ் கோட்டைக்குத் தெற்கிலுள்ள கோட்டையில் ஜெர்மானியர் பின்வாங்கி தங்களுடைய பூமிக்குள் போய்ச்சேர்ந்துவிட்டனர். ஆனால் ஜெர்மானியர் வெகு பலத்துடன் பிரஞ்சுக்காரர்களை திருப்பியடிக்க ஆரம்பித்து, ஆகஸ்டு 23-ம் தேதிக்குள் அவர்களைநன்றாய்த்தோற்கடித்துவிட்டனர். ஆகையால் பிரஞ்சுக்காரர் பின் வாங்கி, தங்களுடைய பூமிக்குள் புகுந்து விடவேண்டியதாய் விட்டது. அந்தத் தேதியில் பிரஞ்சுப்போர் முனையானது, நான்ஸியிலி

ருந்து வியூனி வில்லி வரையில் ஸெமாபி ண்டு டை, மன்ஸ்டர், முதலிய இடங்கள் வழியாகச் சென்றிருந்தது. இந்த சமயத்தில் ஒரு பிரமாதமான சண்டை ஏற்பட்டது. அதனுடைய முடிவு நேசக்கக்ஷிக்கு அதிக அனுகூலத்தை உண்டு பண்ணிற்று. அதாவது நான்ஸியைப் பிடித்துக்கொண்டு அந்த இடைவெளி வழியாக ஜெர்மானியர் உட்புகப் பிரயத்தினம் செய்தனர். அந்தப் பிரயத்தனம் பலித்திருக்குமானால், பிரான்ஸின் கிழக்கு சேனையை அவர்கள் வளைந்து கொண்டிருப்பார்கள் செப்டம்பர் 12-ம் தேதிவரையில் நடந்த அச்சண்டை ஜெர்மானியருக்குத் தோல்வியாக முடிந்து, அவர்கள் சில மைலில் தூரம் பின் தள்ளப்பட்டனர். அதன் மேல் பிரஞ்சுக்காரர்களுடைய கிழக்குக் காவல் பலமாய் விட்டது.

### வான்கிளக் செய்த பிசகு.

ஆகஸ்டு மாதம் 21-ம் தேதிக்குள் பெல்ஜிய சேனையானது, ஆண்டுவெர்ப் கோட்டைக்குள் போய் புகுந்துகொண்டுவிட்டது. பிரஞ்சு சேனையும் பிரிட்டிஷ் சேனையும் காண்டி முதல் மான்ஸ் வரையிலும், பிஞ்சி முதல் சார்லிராய் வரையிலும், சாம்பர் நதிக்கரையோடு நாமூர் கோட்டை வரையிலும், வழியை மறிக்க முயன்றன. நாமூரிலிருந்த சேனையானது தெற்கு முகமாகத் திரும்பி மியூஸ் நதிக்கரையோடு சென்றிருந்தது. அந்தச் சேனையை அதன் மத்திய பாகத்தில் சார்லிராய் என்ற இடத்தில், ஜெர்மானியர் தாக்கிப்பிளந்துவிடவே, நேசச் சேனைகளெல்லாம் பின்வாங்கிவிட வேண்டியதாய் விட்டது அப்படிப் பின்வாங்கியபோது நடந்த சண்டைகளை எல்லாம் நாம் விரிவாகச் சொல்லவேண்டிய அவசியமில்லை; ஆனால் ஒரு விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். பிரஞ்சுசேனை பிளவு பட்டதால் எல்லாச் சேனைகளும் பின்வாங்க நேரிட்டபோதிலும், ஜெனரல் ஜாப்ரே இஷ்டப்பட்டிருந்தாரானால், பின் வாங்குவதை நிறுத்தி, ஜெர்மானியர் முன் செல்வதைத் தடுத்திருக்கக்கூடும். ஆனால் துணைப்படைகள் ஒன்று சேரவேண்டியதற்காகவும், சத்துரு ஏதேனும் பிசகு செய்தால் அதைத் தமக்கு அனுகூலமாக உபயோகப் படுத்திக் கொள்ளுவதற்காகவும், ஜெனரல் ஜாப்ரே சமயத்தை எதிர் பார்த்திருந்தார். செப்டம்பர் 4-ம் தேதி யன்று வான் கிளக் என்ற தளகர்த்தரால் நடத்தப்பட்ட ஜெர்மானியரின் வலது பக்க வாட்டுச் சேனை, பாரிஸ் நகரின் வாயில் வரையில் போய் விட்டது. ஆனால் அக்கோட்டையை வான் கிளக் தாக்காமல் தென்கிழக்கு திக்கில் திரும்பிக் கொண்டார். ஜெர்மானியருக்கு அனர்த்தமாக முடிந்த இந்த நடவடிக்கையை வான் கிளக் எந்த உத்தேசத்துடன் செய்தாரென்று வெகுவாக அநேகர் ஆலோசனை செய்திருக்கிறார்கள். ஆனால் அவருடைய உத்தேசம் இன்னதென்று, எவர் சொல்லியதும் திருப்தியாயிருக்கவில்லை.

### யுத்தம் முடிந்துவிடலாம் போலிருந்தது

இந்த சமயம் நேசக்கக்ஷியின் படைகள் கிராண்டு மோரின் என்ற ஆற்றின் கரையில் இருந்தன ஆனால் வேறொரு பிரஞ்சுசேனை, பாரிஸ் நகருக்கு வடக்காகச் சுற்றிக்கொண்டுவந்துவிட்டது. வான்கிளக் தங்களுக்கு எதிராகத் தம் சேனையை செலுத்தினதால், பிரிட்டிஷார் அதைத் தாக்க இடமேற்பட்டது. அதே சமயத்தில் பிரஞ்சுக்காரர்கள் வான்கிளக் பக்கவாட்டைத்தாக்கினார்கள். ஆகையால் செப்டம்பர் 12-ம் தேதிக்குள், ஜெர்மானியருடைய வலது பக்கவாட்டுப் படை எய்ஸன் நதிக்கப்பால், துரத்தப்பட்டுப் போய்விட்டது. ஜெர்மன் சேனையின் மத்திய பாகமும், ஜெனரல் போச் என்பவரால் துரத்தப்பட்டுப் போய்விட்டது. அதற்குள் நான்ஸி சண்டையும் முடிந்து, பிரான்ஸின்மேல் ஜெர்மானியர் படையெடுத்தது தடுக்கப்பட்டுப் போ

ய்விட்டது. மேற்கரங்கத்தில் ஆரம்ப நடவடிக்கைகளின் முடிவு இதுதான். ஜெர்மானியரை நேசப்படைகள் பின் தொடர்ந்தால் யுத்தம் முடிவுக்கு வந்து விடும்போல் தோன்றிற்று. அப்பொழுது போர் முனையானது, காம்பெயின் என்னுமிடத்திலிருந்து, எய்ஸன் நதிக்கரையோடும், ஸியூப்ஸ் என்ற நதிக்கரையோடும் சாம்பெயின், ஆர்கோன் என்ற பிரதேசங்களோடும் வெர்டூன் வரையில் போய், நேர் தெற்காய்த் திரும்பி எல்லைப்புற தேசத்தோடு சென்றது.

### எய்ஸன் சண்டையின் அதிசயம்.

அடுத்த சண்டை எய்ஸன் நதிக்கரையில் ஆரம்பமாயிற்று. பாரிஸ் நகரை நோக்கி ஜெர்மானியர் முன் சென்ற காலத்தில், எய்ஸன் நதிக்கரையில் அவர்கள் அரண்கள் வெட்டி தற்காப்புக்கு வேண்டிய ஜாக்கிரதைகளைச் செய்திருந்தார்கள். ஆகையால் அவர்கள் பின் வாங்க நேர்ந்த பொழுது, நேசப்படைகளின் முற் போக்கைத் தடுக்க அந்த அரண்கள் மிகவும் உபயோகமாயிருந்தன. மெஷின் பீரங்கிகளைக்கொண்டும், சிற்சில இடங்களில் பெரிய பீரங்கிகளை வைத்தும், சண்டை செய்தால், தற்காப்புக்கு அரண்கள் மிகவும் சிரேஷ்டமானவை என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். நேரிலிருந்து தாக்கினால் அரண்களிருப்போரை வெளிப்படுத்த முடியாதென்பது அவர்களுடைய அபிப்பிராயம். அவர்களுடைய அபிப்பிராயம் சரியென்று எய்ஸன் சண்டையினால் முடிவாயிற்று. ஏனெனில் அந்தச் சண்டையில் நேசக் கக்ஷியின் உத்தேசம் பலிக்கவில்லை. ஆகையால் ஜெர்மானியரைக் கொஞ்சங் கொஞ்சமாய்ச் சேதமாக்க வேண்டி நேசக்கக்ஷியார் அவர்களுக்கு எதிரிலிருந்து கொண்டு சண்டை செய்ய ஆரம்பித்தார்கள். அரண் சண்டையின் விசேஷத்தை விளக்கியதான, அந்த எய்ஸன் சண்டை, நேசச்சேனையின் முற்போக்கைத்தடுத்துவிட்டது. இதற்குள் பிரஞ்சுக்காரருடைய வலது பக்கவாட்டில் வர்டூனிலும் மியூஸ் நதியை ஒட்டின குன்றுகளிலும், ஜெர்மானியர் ஓர் முக்கியமான நடவடிக்கையை ஆரம்பித்துக் கொண்டனர். வர்டூனில் அவர்கள் திருப்பியடிக்கப்பட்ட போதிலும், ஸெயிண்டு மிஹீல் என்ற இடத்தில் மியூஸ் நதியைத்தாண்டி விட்டனர். ஆயினும் இந்த அனுகூலத்தைப் பெரிதாக்கிக் கொள்ள அவர்களால் கூடவில்லை. அது முதல் இது வரையில் ஸெயிண்டு மிஹீலானது ஒரு முக்கியமான கோணமாக இருந்து வந்திருக்கிறது. ஜெர்மானியரை வளைந்து கொண்டுவிடுவதற்காக, பிரஞ்சுக்காரர்கள் தங்கள் இடது பக்கவாட்டுப் படையைச் செலுத்த ஆரம்பித்ததிலிருந்து, மூன்றாவது நடவடிக்கை ஆரம்பமாயிற்று. வடக்கில் சென்றிருந்த பிரஞ்சு இடதுபக்க வாட்டுப் படையானது, புதிதாகவந்த இரண்டு சேனைகளைக் கொண்டு, அராஸ், லென்ஸ் என்ற பட்டணங்கள் வரையில் நீண்டிருந்தது. எய்ஸன் நதியிலிருந்த பிரிட்டிஷ் சேனை, அங்கிருந்து இழுக்கப்பட்டு, ஜெர்மன் சேனையை வளைந்துகொள்ள பிரஞ்சு சேனையுடன் கலந்துழைக்க அனுப்பப்பட்டது. தங்களுடைய போக்குவரத்து வழிகளுக்கு, அபாயம் ஏற்பட்டு விட்டதை ஜெர்மானியர் அறிந்து, தங்களுடைய வலதுபக்கவாட்டுப் படையையும் முன்னே நீட்டிவிட ஆரம்பித்தார்கள். இதற்குள் ஆண்ட்வர்ப் பிடிபட்டுப்போய்விட்டதால் அங்கிருந்த ஜெர்மன் சேனைகள் வேறு வேலைக்கு உதவக்கூடியவையாய் ஆகிவிட்டன. உள்நாட்டுப் பாதைகள் ஜெர்மானியர் வசமிருந்த அனுகூலத்தினால் நேசக்கக்ஷியாருடைய உத்தேசம் பலிக்காமல்செய்யவும் தாங்கள் அவர்களை வளைந்துகொள்ளவும், அவர்கள் துருப்புகளை அனுப்பினார்கள். ஒன்றையொன்று வளைத்துகொண்டுவிடும் யத்தனத்தில், இர

ண்டு கக்ஷிச் சேனைகளும் கடற்கரைக்குப்போய் சேர்ந்துவிட, அதற்கப்புறம், அந்த எத்தனத்தை நிறுத்திவிட வேண்டியதாய்விட்டது. பெல்ஜியத்திலுள்ள நியூபோர்ட் என்ற கடற்கரைப் பட்டணத்திலிருந்து, ஈஸர் நதிக்கரையோடு டிக்ஸ்மூடு என்ற பட்டணம் வரையிலும், அங்கிருந்து வளைந்து தெற்காகவும், ஆர்மண்டீர்ஸ் நகரத்துக்கு கிழக்காகவும், மறுபடியும் லாபாஸிக்குத் தென்மேற்காகவும், அங்கிருந்து லென்ஸ் என்ற பட்டணத்திற்கு மேற்காக, அரூஸ் என்ற பட்டணத்திற்கு கிழக்குவரையிலும் போர்முனை போய், அங்கிருந்து எய்ஸன் நதிக்கரையோடு போக ஆரம்பித்தது. இவ்வாறு மூன்றாவது நடவடிக்கையும் ஒருவருக்கும் பிரயோஜனமில்லாமல் வீணாய்விட்டது. இந்த நடவடிக்கை செப்டம்பர் 20 முதல் அக்டோபர் 20 வரையில் நடந்தது. அதற்கப்புறம் இருதிறத்தாரும்அரண்களிலிருந்தபடி ஒருவரை ஒருவர் தாக்குவதையே, மேற் போட்டுக்கொண்டார்கள்.

### போர்முனையின் வருணனை.

இதனுடன் சேனைகளின் நடமாட்டச்சண்டை மேற்கரங்கத்தில் முடிவாகிவிட்டது இனிமேல் ஒருவரை ஒருவர் பிளந்து கொண்டு முன் சென்று விட முயன்றதே இதற்கப்பால் நடந்த நடவடிக்கை. ஆனபோதிலும் 1914ம் வருஷம் அக்டோபர் மாதம் 20-ம் தேதி போர்முனை இருந்த ஸ்திதியிலேயே இப்பொழுது மிருக்கிறது. ஆகையால் வடகடலிலிருந்து ஸ்விட்ஜர்லாந்து எல்லை வரையில் போர்முனை சென்றுள்ள இடங்களைக் கீழே குறிப்பிடுவோம். நியூபோர்ட்டிலிருந்து ஈஸர் நதிக்கரையோடு டிக்ஸ் மூடுவரையில் போர்முனையானது கிழக்குதிக்கில் சென்று அங்கிருந்து தெற்காகத் திரும்பி, பிக்ஷிட் வரையில் போகிறது. பிக்ஷிட்டிலிருந்து இப்ரிஸ் கோணம் ஆரம்பமாகிறது. ஜெர்மானியரை நேசக்கக்ஷியார் வளைந்து கொண்டுவிட நடத்தின நடவடிக்கைகளின் பலனாக, இந்த இப்ரிஸ் கோணம் ஏற்பட்டது. அந்தக் கோணமானது அரைச்சந்திர வடிவமாக வளைந்திருக்கிறது. வட்டத்திற்கும் இப்ரிஸுக்கும் 5 மைல் தூரம் உண்டு. கோணத்தின் தெற்குக் கோடியில் ஹாலிபெக் என்றஊர் இருக்கிறது. அங்கிருந்து போர்முனை தென்கிழக்காகத்திரும்பி, லிஸ் என்ற கால்வாயைத் தாண்டிக்கொண்டு, ஆர்மண்டீர்ஸ் என்ற பட்டணத்திற்குக்கிழக்காகப்போய், லாபாஸிக்கு மேற்கில் மறுபடியும் தென்மேற்காகத் திரும்பி, மறுபடியும் அரூஸுக்கு கிழக்காகப் போய் அங்கிருந்து காம்பெயின் என்ற இடத்திற்குத்தென்கிழக்காகப் போகிறது. அதுமுதல் எய்ஸன் நதிப்போர்முனை ஆரம்பமாகிறது. அந்தப்போர் முனையானது ஆற்றின் வடகரையோடு, பெரிஆபெக் என்ற இடம் வரையில் போய், அதுமுதல் ஸுயிப்ஸ் என்றநதிக்கரையோடு ரீம்ஸ் நகருக்கு வடக்கு வரையில் சென்று, அதற்கப்புறம் சாம்பெயின் பிரதேசத்திற்குத் தென்கிழக்காகப்போய், ஆர்கோன் பிரதேசம் வழியாகப்போய், மியூஸ் நதியைக்கடந்து, வர்டூனுக்கு வடக்காகப் போய் நிற்கிறது. அங்கிருந்து ஸெயின்டு மிஹீல் கோணம் ஆரம்பமாகிறது. அது வர்டூனிலிருந்து தென்கிழக்காக, ஸெயின்டு மிஹீல் வரையில் போய், அங்கிருந்து திரும்பி, நேர் கிழக்காக பாண்ட மௌஸன் என்ற இடம் வரையில் போகிறது. அந்த பாண்ட மௌஸன் ஜெர்மனியின் எல்லைக்கருகில் உள்ளது. அங்கிருந்து போர் முனையானது, எல்லைக் எதிராக நெடுகச் சென்று, வாஸ்ஜெஸ் பிரதேசத்தின் எல்லையைக் கடந்து, மன்ஸ்டர் பட்டணத்திற்குக் கிழக்காகப் போய் ஸ்விட்ஜர்லாந்தின் எல்லை வரையில் போகிறது.

### கலே நகரைப் பிடிக்க முயன்றனர்.

வெகு காலம் இழுத்துக்கொண்டு நின்ற இந்தப் புது மாதிரிச் சண்டையை ஜெர்மானியர் ஆரம்பம் செய்து, நியுபோர்டு முதல் அரூஸ் வரையில்

நேசப் போர்முனையைத் தாக்கினர். அரண் சண்டைக்காகச் செய்யவேண்டிய முஸ்திப்புகளை நேசக் கட்சியார் செய்யாமல் தடுப்பதற்காக ஜெர்மானியர் தாக்கினதாக நாம் வைத்துக்கொள்ளலாம். வேறு உத்தேசமும் அவர்களுக்குண்டு. நியூபோர்டுக்கும் ஆருஸுக்கு மிடையில் நேசப் போர்முனை எங்காவது பிளவு பட்டிருக்குமாயின், அந்தப் பக்கத்திலிருந்த நேசச் சேனை அபாயத்துக்குள்ளாயிருக்கக் கூடியதல்லாமல், கலே நகருக்குப்போக ஜெர்மானியருக்கு வழியுமுண்டாயிருக்கும் கலேயானது அவர்களுடைய வசப்பட்டு விட்டால், இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் போக்கு வரத்துக்கு இடையூறு எற்பட்டுவிடக்கூடியதுடன், ஜெர்மானியர் பிரான்ஸின் கடலோரத்தை நோக்கி முன் செல்லவும் அதன் பலனாக இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் இடையிலுள்ள "இங்கிலீஷ் சானல்" என்ற சிறு கடல் அவர்களுடைய ஆதிக்கத்துக்குட்படவும் கூடுமாயிருக்கும். அக்டோபர் 20-ம்தேதி முதல் ஒரு மாதகாலம் நடந்த சண்டையை கலேக்காக நடந்த சண்டையென்று சொல்லப்படுகிறது. ஆனால் அது ஒரு சண்டை யல்ல; குறைந்தது அப்பொழுது நாலு சண்டைகள் நடந்தன. அந்த நாலு சண்டைகளிலும் முக்கியமானது இப்ரிஸ் சண்டை; அதில் தான் ப்ரிட்டிஷார் சம்பந்தப்பட்டனர். போர்முனையைப் பலவிடங்களில் பிளந்து விடுகிறதற்காக ஜெர்மானியர் நடத்தின நடவடிக்கைகளால் மேற்சொன்ன நாலு சண்டைகளும் நாலு இடங்களில் நடந்தன. மேற்குக் கோடியில் நியூபோர்டுக்கும் டிக்ஸ் மூடுக்குமிடையில் பெல்ஜியர்களையும், லாபாஸிக்கருகிலும், அரூஸிலும் பிரஞ்சுக்காரர்களையும், இப்ரிஸில் பிரிட்டிஷாரையும் விசேஷ சேனாபலத்துடன் ஜெர்மானியர் தாக்கினார்களாயினும், ஒரு இடத்திலும் அவர்களுடைய உத்தேசம் நிறைவேறவில்லை. நாலு இடங்களிலும் ஜெர்மானியர் 2½ லட்சம் துருப்புகளைச் சேதமாக்கினர். நேசக்கக்ஷியார் லட்சம் துருப்புகளை இழந்தனர். அதில் பிரிட்டிஷார் மாத்திரம் 40 ஆயிரம் துருப்புகளை இழந்தனர். ஆகையால் கலேக்காக நடந்த சண்டையைப்போல் இதற்குமுன் ஒரு இடத்திலும் இவ்வளவு பெரிய சண்டை நடந்ததில்லை. அரண் சண்டைகளின் விசேஷம் முதலில் இங்குதான் வெளிப்பட்டது. சாதாரணமாய், எதிரியைத் தாக்கும் சேனையானது, ஒன்று வெற்றிபெறும் அல்லது தோற்றுப்போகும். தோற்றுப்போனால் அது தன்னுடைய இடத்தைவிட்டு நகர்ந்து பின்வாங்கவேண்டும். ஆனால் கலேக்காக நடந்த சண்டையில் ஏவப்பட்ட துருப்புகள் பெருவாரியாக இருந்ததால், ஜெர்மனியருடைய தோல்வியானது, சாதாரணத் தோல்விபோல் ஏற்படவில்லை. அவர்களுடைய பிரயத்தனம் வீணாய்ப்போய் விட்டது உண்மை. ஆனால் முன் எங்கு இருந்தார்களோ, அந்த இடத்தில் தான் தோற்றபிறகும் இருந்தார்கள். அதிகச் சேதமடைந்ததுதான் இடையில் நேர்ந்த விசேஷம். கலேச் சண்டையினால், அரண் சண்டைக்குள்ள பெருமை விளங்கியதுடன், நேருக்கு நேர்நின்று தாக்கும்பொழுது, ஜனப்பெருக்கம் மாத்திரம் வெற்றியைத் தந்து விடாதென்றும் வெளியாயிற்று. ஆனால் வேண்டியதென்னவென்றால் ஜனப்பெருக்கத்துடன், பீரங்கிபலமும் ஏராளமாக இருக்கவேண்டும். சத்துருவின் போர்முகத்தைப் பிளந்துவிடும் வரையில், பீரங்கிகளைக்கொண்டு ஒவ்வொரு அரணைப் உடைத்தெறிந்துவிட வேண்டும். ஜெர்மானியரும், பிரஞ்சுக்காரரும் இந்த உண்மையை ஆதியில் அறிந்து, பீரங்கிகளும். குண்டுகளும் செய்யத் தங்களுடைய சக்திகளை எல்லாம் உபயோகிக்க ஆரம்பித்தனர். ஆனால் இங்கிலாந்திலோவென்றால், சேனாபலம் அதிகமாக வேண்

டிய விஷயத்தில் கவனம் செலுத்தப்பட்டு, துருப்புகளைச் சேர்க்கும் விஷயத்திலும், அவர்களைப் பயிற்றுவிக்கும் விஷயத்திலும், பிரயாசை எடுக்கப்பட்டது. எவ்விதமான குண்டுவேண்டும் என்ற விஷயமும், சரியாய் அறியப்படாதிருந்ததுடன், மூலஸ்தானத்திலிருந்து போர் முகத்துக்கு குண்டுகளைக்கொண்டுபோய் சேர்க்கவேண்டிய ஏற்பாடுகளும் குறைவாக இருந்தன். இதன்பலனாக நேசக்கக்ஷியின் 1915-ம் வருஷத்துச் சண்டையும் வீணாய்விட்டது. மேற்சொன்ன நடவடிக்கைகள் முடிந்தபிறகு மழைக்காலத்தின்கஷ்டங்கள் அதிகமாகிவிடவே, அடுத்த வசந்தகாலம் வரையில் பெரிய நடவடிக்கை எதுவும் நடத்த சாத்திய மில்லாமல் போய்விட்டது. ஆகையால் இருதிறத்தாரும் அரண்களிலிருந்த படியே ஒருவரை ஒருவர் தாக்குவதையே, வேலையாகக் கொண்டனர். ரணரங்க பீரங்கிகளையும் செங்குத் தாய்ச்சுடும் மார்டர் என்ற பீரங்கிகளையும் சுட்டும் குறிப்பாளிகளை எதிர்க்கக்ஷி உத்தியோகஸ்தர்களைச் ஏவி சுட்டுக்கொன்றும் சண்டை செய்தனர். இவைகளே மாரிகாலத்தில் நடந்த முக்கிய நடவடிக்கைகளாயினும், சிற்சில இடங்களில் நெருங்கி கைகலந்து சண்டை செய்ததும் உண்டு. டிசம்பர் மாதம் முதல்வாரத்தில் லாபாஸிக்குத் தெற்கில் பிரஞ்சுக்காரர்கள் சிறிது முன் சென்றனர். நியூசாபல் என்ற இடத்தில், பிரிட்டிஷார் ஜெர்மானியரைத் தாக்கி வீண் போயினர். ஆர்கோன் பிரதேசத்தில், சிறிது சண்டை நடந்தது. அங்கு பிரஞ்சுக்காரர் சிறிது பூமியைப் பிடித்துக்கொண்டனர். வாஸ்ஜெஸ் பிரதேசத்திலும் பிரஞ்சுக்காரர் சிறிது முன் சென்றனர். அந்த வருஷக் கடைசிக்குள், அநேக மிடங்களில் நேசக்கக்ஷியார் கொஞ்சங் கொஞ்சம் முன் சென்றிருந்தனர். ஜெர்மானியார்போர் முனை நெடுகத் தங்கள் கவனத்தை செலுத்தும் படியும், ஒரு இடத்தில் கூட்டம் கூட்டாத படிக்கும் இவ்வித சிறுவெற்றிகள் செய்ததானது, அவைகளால் உண்டான பிரயோஜனம். இம் மாதிரிச் சண்டையை "மேய்வது" என்று சொல்வது வழக்கமாய் விட்டது. இந்த மேய்ச்சலால் ஏதோ சிறிது அனுகூல முண்டாயிற்றே ஒழிய விசேஷலாபம் ஒரு சக்ஷிக்கும் உண்டாகிவிடவில்லை

இவ்வித நடவடிக்கைகளால் ஜெர்மானியருக்கு அதிகச் சேதம் ஏற்பட்டு வந்த போதிலும், நேசக்கக்ஷிக்கும் ஓரளவு சேதம் ஏற்பட்டுத்தான் வந்தது. ஆகையால் பெருவாரியாக வலுவில் தாக்கு வதற்கு இந்த முறை சமமாகாது என்று நேசக்கக்ஷியார் அறிந்து கொண்டனர்.

### 1915ம் வருஷச் சண்டையின் ஆரம்பம்.

சென்ற வருஷத்தின் முற்பாகத்தில் லாபாஸிக்கருகில் சண்டை பலமாக நடக்க, அதன் பலனாக ப்ரிட்டிஷார் சிறிது முன் சென்றார்கள்; எய்ஸன் நதிக்கரையிலும் சண்டை நடக்க, அதன் பலனாக ஸாய்ஸன்ஸ் என்ற இடத்தில் பிரஞ்சுக்காரர் சிறிது அபஜயமடைந்தனர்; சாம்பேன் ஜில்லாவில் நடந்த சண்டையின் முடிவாக பிரஞ்சுக்காரர் சிறிது முன்னேற்றமடைந்து ஜெர்மானியருக்குப் பெருஞ் சேதம் விளைவித்தனர்; வாவர் ஜில்லாவில் லெஸ்எபர்ஜஸ், பாண்ட மௌஸன் என்றஇடங்களில்பிரஞ்சுக்காரர்சிறிது முன்னேற்ற மடைந்ததுடன், வாஸ்ஜஸ் பிரேதேசத்திலும் முன்னேற்றமடைந்தனர். யுத்தரங்கத்தில், இயற்கையில் பலமுள்ள ஸ்தலங்களைப் பிடித்துக் கொள்வதற்காகவே, மேற் சொன்ன இடங்களில் சண்டை செய்தனர். ஒருவரை யொருவர் வளைந்துகொண்டு விடுகிறதற்காகப் போட்டி போட்டு இருதரத்தாரும் கடலோரம் வரையில் போய்ச் சேர்ந்த பொழுது, ஆர்மண்டியர்ஸுக்கும் அரஸுக்கு மிடையிலு

ள்ள உயர்ந்த பூமிமுழுமையையும் ஜெர்மானியர் வசப்படுத்திக்கொண்டு விட்டனர்; எய்ஸன் ஜில்லாவில் அந்த நதிக்கு வடக்கில் ஜெர்மானியரால் பலப்படுத்தப் பட்டிருந்த குன்றுகளைப் பிடித்துக் கொண்டு விடவேண்டியது, பிரஞ்சுக்காரரின் உத்தேசம்; சாம்பேன் ஜில்லாவில் ஜெர்மானியரின் போர் முனைக்குப் பின் பக்கத்தில் குறுக்காகப் போகும் ரயில் பாதையைப் பிடித்துக்கொள்ளவேண்டியதும் பிரஞ்சுக்காரரின் உத்தேசம். அந்தப் பாதை மூலமாகவே எய்ஸன் பிரதேசத்துக்கும் ஆர்கோன் பிரதேசத்துக்கும் போக்குவரத்து நடந்து வந்தபடியால், அதை பிரஞ்சுக்காரர் பிடித்து விட்டால், ஆர்கோன் சேனையின் போக்குவரத்து அழிந்துபோய்விடும். வாவர் ஜில்லாவில் அங்குள்ள குன்றுகளைப் பிடித்துக்கொள்ளவேண்டுமென்பதும் பிரஞ்சுக்காரர்களின் உத்தேசம். ஸெயிண்டு மிஹீலுக்குப் போகும் பாதைகளையும் மறித்துவிட பிரஞ்சுக்காரர்கள் முயன்றனர். வாஸ்ஜஸ் பிரதேசத்தில் அல்ஸேஸ் மாகாணத்தை அடுத்தாற்போலுள்ள குன்றுகளைப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்பது அவர்களுடைய உத்தேசம். அக்குன்றுகளிலெல்லாம் "ஹார்ட்மான்ஸ் வேலர்காப்" என்ற குன்றுதான் மிகவும் முக்யமானது. இந்த உத்தேசங்கள் முற்றிலும் நேசக்கக்ஷியாருக்குப் பலிக்கவில்லையாயினும் சிறிது அவர்கள் பலனடைந்து, ஜெர்மானியர்களுக்கு கஷ்டங்களை யுண்டுபண்ணி, அவர்களுடைய பாதைகளை சிற்சில இடங்களில் தடுத்து, மறித்துவிட்டனர். புதிதாகத் திரட்டப்பட்டு வந்த பிரிட்டிஷ் சேனைகள் வசந்த காலத்து யுத்தத்துக்கு தயாராகிவிடுமாகையால், அச்சேனைகளைக்கொண்டு ஜெர்மானியரை வலுவில் தாக்கும்பொழுது, மேற்சொன்ன பிரயத்தனங்கள் மிகவும் உபயோகமாக இருக்குமென்று நேசக்கக்ஷியார் நம்பினர். மழை நாளைச் சண்டை இவ்வாறு முடிந்தது. ஜெர்மானியருடைய பின்பலத்தைக் குறைத்தும், ஆங்காங்குள்ள பலமான ஸ்தலங்களைப் பிடித்துக்கொண்டும், விட்டால் 1916ம் வருஷத்திய கோடைகாலச் சண்டைக்கு மேற்சொன்ன பிரயத்தனங்கள், உபயோகமாக இருக்குமென்று நம்பி, நேசக்கக்ஷியார் மேற்சொன்ன நடவடிக்கைகளை மழைகாலத்தில் நடத்தினர்.

## நியூசாப்பல் சண்டை.

ஆனல் நேசக்கக்ஷியார் அவர்களில் முக்கியமாக பிரிட்டிஷார், 1915ம் வருஷத்திய சண்டைக்குப் போதுமான முஸ்தீப்புகள் செய்யவில்லையாகையால், அந்த சண்டை பலன் தராமல் வீணாய்விட்டது. நியூசாப்பல், ஆர்ட்டாய்ஸ் என்ற இடங்களில் நடந்த சண்டையும் வாவர்ஜில்லாவில் பிரஞ்சுக்காரர் அடைந்த வெற்றியும், லூஸ் என்ற இடத்தில் நடந்த சண்டையும், சாம்பெயின் ஜில்லாவில் நடந்த சண்டையுமே, சென்ற செப்டம்பர் மாதத்தில் நேசக்கக்ஷியார், வலுவில் நடத்தின நடவடிக்கைகளின் பலனாகும். ஜெர்மானியருடைய போர்முனையைப் பிளந்துவிடுவதும், லில்லி என்ற மைதானத்தில் முன்னேறி, அவர்களுடைய பாதைகளுக்கு அபாயத்தை விளைவித்து, அவர்களை வட பிரான்ஸிலிருந்து பின்வாங்கும்படி செய்வதும், பிரிட்டிஷாரின் உத்தேசங்கள். இந்த உத்தேசங்கள் பலிக்காவிடில், ஆபர்ஸ் என்ற குன்றைப் பிடித்து கொள்வதாவது அவர்களுடைய உத்தேசம். அக்குன்று அவர்கள் வசப்பட்டால் ஒரு பலமான ஸ்தலம் அவர்களுக்குக்கிடைக்கும். அந்த இடத்தில் அபாயமுண்டாகும்படியானதாக வளைந்திருந்த பிரிட்டிஷ் போர்முனையை நிமிர்த்து விட வேண்டியதும் அவர்களுடைய உத்தேசம். இதற்காக பீரங்கிகளை பெருவாரியாக அவர்கள் கூட்டி, ஜெர்மன் அரண்களை நொறுக்க வாரம்பித்தார்கள், மார்ச்சு மாதம் 10ம் தேதி

சண்டை ஆரம்பித்த பொழுது, பீரங்கிகளைக்கொண்டு தகர்க்கும் வேலையே அதிகமாக நடந்தது அதன் பலனாக நியூசாப்பல் என்ற ஸ்தலத்தை பிரிட்டிஷார் பிடித்துக்கொண்டு, ஜெர்மானியருக்கு விசேஷச் சேதம் உண்டாக்கினராயினும், தாங்கள் அதிகச் சேதம் அடையவில்லை. ஆனால் அவர்கள் முன்செல்ல ஆரம்பித்ததும், இரண்டாவது வரிசை அரண்களிலிருந்த ஜெர்மானியர் பலமாக எதிர்த்து மறித்தனர்.

ஏற்கனவே பீரங்கிகளைக் கொண்டு தகர்த்த பொழுது, அவைகள் பழுதாகவில்லை, ஆகையால் ஆபர்ஸ் என்ற குன்றை பிரிட்டிஷார் அடையமுடியவில்லையாயினும், கோணலாக இருந்த அவர்கள் போர்முனை நிமிர்ந்துவிட்டது. அச்சண்டையில் ஜெர்மானியருக்கு 20 ஆயிரம் துருப்புகளும், பிரிட்டிஷாருக்கு 12 ஆயிரம் துருப்புகளும் சேதமாயினர். ஜெர்மானியரைப் பிளந்துவிட நேசக்கக்ஷியார் முதல் முதல் நியூசாப்பலில் தான் பிரயத்தனம் செய்தார்களாகையால், அது விசேஷமாகக் கருதப்படும்; அல்லாமல் அந்தச் சண்டையின் முடிவாக நேசக்கக்ஷியார் தெரிந்துகொண்ட அநேகம் உண்மைகளை உத்தேசித்தும் அச்சண்டை விசேஷமான தாகும். பீரங்கிகளை முதலில் பிரயோகித்து அரண்களை இடித்துவிடக்கூடுமாயினும், அப்படிச் செய்ய ஏராளமான குண்டுகள்வேண்டுமென்று அந்தச் சண்டையினால் வெளியாயிற்று. ஆப்பிரிகாவில் போவர்களுடன் நடந்த சண்டை முழுவதிலும், எத்தனை குண்டுகள் செலவாயினவோ, அதைவிட அதிகக் குண்டுகள், நியூ சாப்பல் சண்டை ஒன்றில் மாத்திரம் செலவாயின. போர்முனையைப் பிளப்பதற்குமுன் ஒவ்வொரு வரிசை அரணையும், அழிக்க வேண்டுமென்றும் அச்சண்டையினால் வெளிப்பட்டது. ஆகையால் ஒரு வரிசை அரண்களை அழித்து இன்னொரு வரிசை அரண்களை நெருங்கு முன், குண்டுச் செலவு ஏராளமாக இருக்குமாயினும், முன்னேற்றம்உபாயமாகத்தான் இருக்குமென்றும் தெரிந்தது. இச்சண்டையினால் அறியப் பட்ட விஷயங்கள் மிகவும் சிரேஷ்டமான உண்மைகளாயினும், ஜெர்மானியரைத் தவிர மற்றவர்கள் அவ்வுண்மைகளை மனதில் கொண்டதாகத் தெரியவில்லை. கிழக்கு ரங்கத்தில் "டுனாஜக்" என்ற நதிக்கரையில் இந்த அறிவை ஜெர்மானியர் தான் அனுபோகத்தில் உபயோகப் படுத்தினர்.



## இப்ரீஸில் மற்றொரு சண்டை.

மேற்குப் பக்கத்தில் ஜெர்மானியர் வலுவில் தாக்குவதற்காகச் செய்த ஒரே பிரயத்தனத்தை அடுத்தாற்போல் நாம் கவனிக்க வேண்டும். மழை காலத்தில் இப்ரீஸில் அவர்கள் தோற்றுவிட்டார் களாயினும், கலே நகரைப் பிடித்துக் கொள்ள அவர்கள் கொண்டிருந்தஉத்தேசத்தை அவர்கள் விட்டுவிடவில்லை. ஆகையால் 'இப்ரீஸைப்' பிடித்துஅங்குபோர்முனையில் ஏற்பட்டிருந்த கோணலை நிமிர்த்திவிட இன்னொரு பிரயத்தனம் செய்தனர். ஸெயின்டு இலாய் என்ற இடத்தில் பிரிட்டிஷார் வலுவில் தாக்க ஆரம்பித்ததால் மேற்சொன்ன எண்ணம் ஜெர்மானியருக்கு உண்டாயிருக்கலாம். ஏனென்றால் இப்ரீஸிலிருந்து பிரிட்டிஷார் முன் செல்லுவார்களோ என்ற எண்ணம் அவர்களுக்குத் தோன்றி இருக்கும். வருஷாரம்பத்தில் இப்ரீஸ் கோணமானது எப்படி இருந்ததென்று நாம் ஏற்கனவே சொல்லியிருக்கிறோம். அது ஒரு அரைச்சந்திரன் போல் வளைந்திருந்தது. அந்த வட்டத்தின் மத்தியாக இப்ரீஸ் இருந்தது. இப்ரீஸிலிருந்து வட்டத்தின் எந்த இடத்துக்கும் 5 மைல் தூரமிருக்கும். இம்மாதிரிக் கோணமானது அசௌகரியங்களுக்கு இடமாகும். பெரிய பீரங்கிக்குண்டுகள் வந்து விழக்கூடியதாக மேற்படி வட்டத்திற்

குட்பட்ட இடங்களெல்லாம் இருந்தன. சாமான்கள் வருவதற்கும், இதர போக்குவரத்துகளுக்கும் அவசியமான பாதைகளெல்லாம் இப்ரீஸ் வழியாகவே சென்றன. ஆகையால் நேசக்கக்ஷியாரின் பாதைகளை, மறித்துவிடக்கூடிய சௌகரியம் ஜெர்மானியருக்கு இருந்தது. இவ்வித அபாயகரமான நிலைமையிலிருந்த கோணத்தை பிடிவாதமாக நேசக்கக்ஷியார் எதன்பொருட்டு வைத்துக் கொண்டிருந்தனர் என்று ஓர் ஆச்சரியம் உண்டாகலாம். அதற்கு நிச்சயமான பதில் சொல்ல முடியவில்லை.

தங்கள் வசமிருந்த பூமியை விட்டு விடக்கூடாது என்கிற ரோஷம் ஒரு காரணமாக இருக்கலாம். அந்தக்கோணத்திலிருந்து புதிதாய் முன்சென்றால், ஜெர்மானியர்களுடைய பாதைகளுக்குப் பின் பக்கமாய் போய்விடக்கூடுமாகையால், அதைவிட்டு விடக்கூடாதென்பதும் ஒரு காரணமாகவிருக்கலாம். எப்படியிருந்தாலும், அந்தக் கோணத்தின் மீது தாக்க வேண்டுமென்ற ஆசை ஜெர்மானியருக்கு அதிகமாகஇருந்தது. ஏனென்றால் அதனுடைய இரண்டு முனைகளையும் தாக்கினால், பிரிட்டிஷாருடைய பின்பக்கத்துச்குப் போய் விடக்கூடியதாக விருந்தது. ஏப்ரல் 22-ம்தேதியன்று நடந்தது மிதுவே. விஷக்காற்றை ஜெர்மானியர் உபயோகப் படுத்தி அந்தக் கோணத்தின் வடக்குப் புறத்தில் போர்முனையைப் பிளந்து விட்டார்கள். அந்த இடத்தில் போர்முனையானது கால்வாயை விட்டுப் பிரிந்து, கிழக்காகப் போகிறது. அந்த பாகம் பிரஞ்சுக்காரரால் காவல் செய்யப்பட்டு வந்தது. ஏப்ரல் 22-ம் தேதியன்று போர்முனை பிளவுபட்டதும், இப்ரீஸுக்குப் போகும்வழி திறந்து போய்விட்டது. ஆனால் எந்தக்காரியத்தை உத்தேசித்தோ ஜெர்மானியர் முன் செல்வது தாமதப்பட்டதால், அது நேசக்க்ஷிக்கு சாதகமாக ஏற்பட்டது. அதற்குள், நேசக்கக்ஷியார் மறுபடி ஒன்றுகூடி போர்முனையை மறித்துவிட்டார்கள். அதன் மேல் ஜெர்மானியார், வடகிழக்கு, கிழக்கு, தென்கிழக்கு பக்கங்களில் தாக்க வாரம்பித்தனர். அப்பொழுது நடந்த பலமான சண்டையை பிரிட்டிஷார் சமாளிக்கவேண்டியதாக இருந்தது. அதன் முடிவாக அந்தக்கோணமானது ஓரளவு நிமிர்ந்து இப்ரீஸுக்கும் போர்முனைக்கும் இருந்ததூரம் மூன்றுமைலாகக் குறைந்தது. இருதிறத்தார்களுக்கும் சேதம் அதிகம். ஜெர்மானியரின் சேதத்தை விடநேசக்கக்ஷியின் சேதமே அதிகமாக இருந்திருக்கலாம்.

## ஆர்ட்டாய்ஸ் பிரதேசத்தில் சண்டை.

மேமாதம் முதல் வாரத்தில் ஆர்ட்டாய்ஸ் பிரதேசத்தில் பிரஞ்சுக்காரர் வலுவில் தாக்க ஆரம்பித்தனர். இப்ரீஸில் ஜெர்மானியர் நெருக்காமல் தவிர்க்கவும், வைமி என்ற மலையையும் லென்ஸ் என்ற பட்டணத்தையும் பிடித்துக்கொள்ளவும், லாபாஸிக்கும், அரூஸ் என்ற பட்டணத்திற்கும் இடையில் ஜெர்மானியரின் போர்முனை வளைந்திருந்ததை நிமிர்க்கவும் எதிர்பார்த்து அவர்கள் ஆர்ட்டாய்ஸை தாக்க உத்தேசித்தனர். அந்தப் பிரதேசத்தில் மேடான பூமி ஜெர்மானியர் வசமிருந்ததால், அதைத்தாங்கள் பிடித்துக்கொண்டு, அவர்களை சமதரைக்குத் தள்ளிவிட பிரஞ்சுக்காரர் உத்தேசித்தனர். ஆர்ட்டாய்ஸ் பிரதேசத்தில் வைமி என்ற மலைதான் முக்கியமான ஸ்தலம். அதனுடைய கோடிமுனை "நோட்டர்டேம் டீலோரெட்" என்ற குன்று. அதை ஜெர்மானியர் பலமாய்க் காவல் செய்திருந்தனர். ஸொாச்சஸ், ஆப்ளேன், ஸெயிண்டு மஜேர், ஜிவஞ்சி என்ற கிராமங்கள் அதற்குப் பின் புறத்திலிருந்தன. அவைகளுக்கப்பால் கிழக்கில் வைமி என்றமலை இருக்கிறது. அதன் வழியாக லென்ஸிலிருந்து அரூஸுக்குப்

போக ஒரு பாதை இருந்தது. இந்தப் பிரதேசம் முழுமையும், மிகவும் பலமாகக் காவல் செய்யப்பட்டு இருந்ததோடு, அருஸ் நகருக்கு வடக்கில் சன்னபின்னலாக அரண்கள் வெட்டப்பட்டிருந்த "லாபிரிந்து" என்ற இடம், கடக்க கூடாததாக இருந்தது. பிரஞ்சுக்காரர்கள் மேமாதம் முதல் வாரத்தில், பீரங்கிகளை கனமாகப் பிரயோகித்து, காரன்ஸி, நீயுவில், லோரெட் என்ற இடங்களைப் பிடித்துக்கொண்டு முன்சென்றனராயினும், அவர்களுக்கு அதிகச் சேதமில்லை. ஆனால் அரண்கள் சன்னபின்னலாக வெட்டப்பட்டிருந்த "லாபிரிந்து" என்ற இடம் போனதும் அவர்களுடைய முன்னேற்றம் தடுக்கப்பட்டுப்போய்விட்டது. கடைசியாக அதையும் பிரஞ்சுக்காரர்கள் பிடித்து விட்டன ராயினும், அதற்குள் ஜெர்மானியர்களுடைய பலம் அங்கு அதிகமாகிவிட்டதால், சண்டை இழுத்துக்கொண்டு நிற்க ஆரம்பமாயிற்று. பிரஞ்சுக்காரர்களுடைய உத்தேசம் கைகூடவில்லையாயினும், சீக்கிரம் நிறை வேறக்கூடிய நிலைமையிலிருந்தது. ஜெர்மானியர்க்குச் சேதம் அதிகம். மொத்தமாகப் பார்த்தால், அந்தச் சண்டையின் முடிவு, பிரஞ்சுக்காரர்களுக்கு அனுகூலமாயிருந்ததென்றே சொல்லவேண்டும்.

இதே காலத்தில் பிரிட்டிஷாரும் மேற்சொன்னவாறே வலுவில் தாக்கி வந்தனர். ஆனால் குண்டுகளில்லாத குறையால், அவர்களுடைய எத்தனம் பலிக்கவில்லை. இன்னும் சில மாதங்கள் தங்களால் வலுவில் தாக்க முடியாது என்று அவர்கள் நினைக்கும்படி ஏற்பட்டது. காலிஷியாவில் ருஷ்யர்கள் தோற்றுப்போய் விட்டதால், இன்னும் ஒருவருஷத்தில் நேசக்கக்ஷியார் வலுவில் தாக்கக் கூடாதென்றும் வெளியாயிற்று. கோடை காலத்தில் போர் முனையில் அநேக இடங்களில் பிரஞ்சுக்காரர் சண்டைசெய்து வாவர் ஜில்லாவில் லெஸ்எபர்ஜஸ் என்ற குன்றைப் பிடித்துக்கொண்டனர். அது ஸெயின்டு மிகில் கோணத்தில் மிகவும் முக்கியமான இடம்.

### செப்டம்பர் மாதத்தில் நேசக்கக்ஷியின் பெருமுயற்சி.

ஸெப்டம்பர்மாதத்தில் நேசக் கட்சியார் வலுவில் தாக்கினதை இனி நாம் சொல்லவேண்டும்; அந்தக் காலத்திற்குள் ருஷ்யர் வெகு தூரம் பின்தள்ளப்பட்டு, பால்டிக் கடலோரமாகாணமாகிய கூர்லாண்டையும், போலண்டையும், அநேகமாக காலிஷியா முழுமையையும் இழந்து விட்டனர். ஆகையால் மேற்கரங்கத்தில் நேசக் கட்சியார் நடவடிக்கை நடத்தி அதன் பலனாக கிழக்கரங்கத்தில் ருஷியர்களுக்கு சிறிது நெருக்கடி குறைந்தால் நலமாயிருக்கு மாகையால், அதை முக்கியமாக உத்தேசித்தே பிரஞ்சுக்காரர் ஸெப்டம்பர் மாதத்தில் ஜெர்மானியரை வலுவில் தாக்க ஆரம்பித்தனர்; ஜெர்மானியருடைய போர்முனையைப் பிளந்துவிட பெரிய பிரயத்தனஞ்செய்யப்பட்டதென்பதற்குத் தடையில்லை. தாங்கள் தாக்கும் வேகமானது ஜெர்மன் போர்முனையைப் பிளந்து விடுமென்று நம்பியுமிருக்கலாம். இந்தப் பிரயத்தனம் செய்யப்பட்டபொழுது, சண்டைக்கு அனுகூலமான காலம் அநேகமாக ஆய்விட்டதால், இந்தப் பிரயத்தனம் தவறினால் மறுபடியும் பிரயத்தனம் செய்யலாமென்று நேசக்கக்ஷியார் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். செப்டம்பர் மாதக் கோடியில் ஆர்ட்டாய்ஸ் பிரதேசத்திலும், சாம்பேயின் ஜில்லாவிலும் நேசக்கக்ஷியார் பிரயத் தனஞ்செய்து, ஆர்ட்டாய்ஸ் பிரதேசத்தில் வர்மிலிஸ் என்ற இடத்திலிருந்து, ஹல்லக், லென்ஸ் என்ற இடங்களை நோக்கி பிரிட்டிஷார் முன்சென்றனர். அதே காலத்தில் தெற்கில் வைமி என்ற குன்றை நோக்கி பிரஞ்சுக்காரர்கள் முன்சென்றனர். சாம்பேயின் பிரதேசத்தில்

பெர்திஸ், போஸிஜோர், மெஸ்நில் என்ற கிராமங்களுக்குப் பின்புறமாயிருந்த ரயில்பாதையைப் பிடித்துக்கொள்ளுவதற்காக, ஜெர்மன் போர்முனையை பிரஞ்சுக்காரர் வெகுதூரத்துக்கு வெகுதூரம் தாக்கினார்கள். பிரஞ்சுக்காரரும் பிரிட்டிஷாரும் நெருங்கித் தாக்குவதற்கு முன்பாக பீரங்கிகளை வெகுவாக பிரயோகித்ததின் பலனைசொல்பகாலம் அவர்கள்நல்ல பலன் அடைந்தனர். ஜெர்மன்போர்முனையின் முதல் இரண்டு அரண் வரிசைகளைப் பிளந்து பிரிட்டிஷார் வெகுதூரம் முன் சென்றனர். ஆனால் காரணமாக அவர்கள் சில தப்புகளைச் செய்துவிட்டதால் முதலில் அடைந்த வெற்றியின் முழுப்பலனையும் அவர்கள் அடையக் கூடவில்லை. ஆகவே தாங்கள் பிடித்துக்கொண்ட இடங்களில்சில வற்றை விட்டு விடவேண்டியதாய் விட்டது. பிரிட்டிஷாருக்கு சேதம் அதிகமாக நேர்ந்தது. லூஸ் சண்டை ஒன்றில் மாத்திரம் 50 ஆயிரம் துருப்புகளை இழந்தனர். ஜெர்மானியருக்கும் பலமான சேதம் நேர்ந்திருக்கலாம். பிரிட்டிஷார் அதிக பூமியை வசப்படுத்திக் கொண்டு ஜெர்மானியரின் போர் முனைக்கு எதிரில் ஒரு கோணத்தை அமைத்து விட்டனர். பிரிட்டிஷாருக்குத் தென்பக்கத்தில் பிரஞ்சுக்காரர்களும் விசேஷ முன்னேற்றம் அடைந்தார்களாயினும் அவர்கள் செய்ய வேண்டிய வேலை மிகவும் கஷ்டமாயிருந்த படியால் அவர்களுக்கு நேர்ந்த சேதம் அதிகம். சாம்பெயின் ஜில்லாவில் 15 மைல் நீளமுள்ள போர் முனையை பிரஞ்சுக்காரர்கள் தாக்கி, சில இடங்களில் $1\frac{1}{2}$ மைல் தூரமும், சில இடங்களில் 3 மைல் தூரமும் முன் சென்று விட்டனர். ஆனால் பின் பக்கமாக இருந்த ரயில் பாதையை அவர்கள் பிடிக்கக்கூடவில்லை. செப்டம்பர் மாதத்தில் நடந்த நடவடிக்கையானது, யாருடைய பலம்எவ்வளவென்று காட்டக்கூடியதாக இருந்தது. இரண்டு பக்கத்திலும் சேதம் அநேகமாக சரியாக விருந்தது. இந்தச் சண்டைகளிலிருந்து சில விஷயங்கள் வெளியாயின. பீரங்கிப் பிரயோகத்தினால் அரண்களை உடைத்து விடக்கூடுமாயினும், போர் முனையைப் பிளந்து விடுவது மெதுவாக நடக்கக் கூடியகாரியந்தான் என்றும், வலுவில் தாக்குகிறவர்களுக்கு சேதம் குறைவாக இருக்க வேண்டுமானால், எதிர்க் கட்சியின் பீரங்கி பலத்தைவிட தாக்குகிறவர்களின் பீரங்கி பலம் பலமடங்கு அதிகமாக இருக்க வேண்டு மென்றும், அப்படி இருந்த போதிலும் போர் முனையின் ஒவ்வொரு இடங்களில் மெஷின் பீரங்கிகள் மறைத்துவைக்கப் பட்டு இருப்பதால் சேதம் அதிகமாக இருக்கு மென்றும், போர்முனையை வெகு தூரத்துக்கு வெகுதூரம் தாக்க வேண்டியது அவசிய மென்றும், அந்தச்சண்டைகளால் வெளியாயின.

மழைகாலத்தில் மற்றப் போர்முனைகளில் நடந்த விஷயங்கள், மேற் கரங்கத்தில் நடந்த விஷயங்களை மறைத்து விட்டதுடன், அதற்கு முந்தின வருஷத்தில் நடந்ததைவிட விசேஷம் எதுவும் நடக்க வில்லை.

## வர்டூன் சண்டையின் ஆரம்பம்.

இனி 1916-ம் வருஷத்து சண்டையை நாம் கவனிக்க வேண்டும். ஏப்ரல் மாதக் கடைசியிலிருந்து, அதாவது வசந்த காலத்தில், வலுவில் தாக்குவது நேசக்கக்ஷியாரின் உத்தேசமென்று தெரிகிறது, அதற்கு வேண்டிய குண்டுகளையும் தயார் செய்திருக்கிறார்கள். அவர்கள் அப்படி ஆரம்பிப்பதற்கு முன் தாங்கள் அவர்களைப் பலமாகத் தோற்கடித்து விடவேண்டுமென்று ஜெர்மானியர் பிப்ரவரிமாதம 20-ம் தேதி முதல் வர்டூனைத்தாக்கி வருகிறார்கள். அந்தச்சண்டை இன்னும் தான்நடக்கிறது. அதன் முடிவு வெகு விசேஷ மானதாக இருக்கும். தங்களுடைய பின் பலம் குறைந்து போய் விட்டதையும், வசந்த காலத்தில் எல்

..ாப்போர் முனைகளிலும் சேர்ந்தாற்போல் தாங்கள் எதிர்த்துச் சண்டை செய்ய வேண்டியயிருக்குமென்பதையும் உத்தேசித்து, தாங்கள் கடைசித் தடவையாக, தங்களால் கூடியதைச் செய்துவிடுகிற தென்று தாக்கி வருகிறார்களா என்று சொல்லுவது கூடாத விஷயம். நேசக்கக்ஷியின் போர் முனையைப் பிளந்து அதன் வழியாய் தாங்கள் புகுந்து பாரிஸ் நகருக்குப் போகும் பாதை திறந்துபோகும்படி பிரஞ்சுக் காரர் பின்வாங்கும் படி செய்வதும், அல்லது தங்களுடைய தற்காப்புக்கு மிகவும் அவசியமான தாகிய வர்டூன்கோட்டையையும், மியூஸ்நதிக்கரையிலுள்ள குன்றுகளையும் பிடித்துக் கொள்வதும், வர்டூன் கோணத்தை நிமிர்த்து, ஸெயிண்ட் மிஹீல்என்ற இடத்தில் தங்களுடைய போர்முனைக்கு அபாய மேற் படக்கூடியதாயிருக்கும் நிலைமையை மாற்றிக் கொள்ளவும், அல்லது, பிரஞ்சுக் காரர்களுடைய பின் பலத்தை பாழாக்கி, அவர்கள் வசந்த காலத்தில் தாக்காமல் செய்வதும், மேற்கரங்கத்தில் ஜெர்மானியர் வலுவில் தாக்கக்கூடியவர்கள் என்று காட்டி ஜெர்மனியில் உண்டாயிருக்கிற உணர்ச்சியை மாற்றுவதும், அவர்களுடைய உத்தேசங்களாக இருக்கலாம். இந்தசமயம் ஜெர்மானியர், எவவளவு முன்சென்றிருக்கிறார்களோ, அவ்வளவுதூரம், அரண் சண்டை ஆரம்பித்ததுமுதல்இருதிறத்தார்களும் முன் சென்றதில்லை. வர்டூனுக்கு ஏற்பட்ட காவல்களை நாலு மைல் தூரம்பின் தள்ளிவிட்டனர்; ஆயினும் இன்னமும் முதல் காவல்களைத் தாக்கி வருகிறார்களே யல்லது, வர்டூனை அவர்கள் சீக்கிரம் பிடித்துக் கொள்ளுவார்களென்று சொல்லுவதற்கில்லை. $2\frac{1}{2}$ லட்சம் துருப்புகளுக்குக் குறையாமல் லட்சம் துருப்புகளுக்கு மேற் படாமல் சேதமடைந்திருக்கின்றனர். எல்லாவிஷயங்களையும் யோசித்துப்பார்த்தால், மேலே சொன்ன அவர்களுடைய உத்தேசங்களில் ஏதாவது நிறைவேறுமென்று சொல்லுவதற்கில்லை.

## கிழக்கரங்கம்.

மேற்கரங்கத்திற்கும் கிழக்கரங்கத்திற்கும் அதனதனுடைய இயற்கையில் மிகவும் பேதமிருக்கின்றது. அதனால் கிழக்கரங்கத்தில் யுத்தநடவடிக்கைகள் நடப்பது கொஞ்சம் கடினமாகவே யிருக்கும்; மேற்கரங்கத்தில் நடக்கிறமாதிரி கிழக்கில் யுத்தநடவடிக்கைகள் நடக்க சாத்தியப்படாது. அது எந்த காரணங்களினாலென்பது விவரமாகப் பின்னால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது :—

முதலாவது, கிழக்கரங்கத்தில் இப்பொழுது யுத்த நடவடிக்கைகள் நடந்து கொண்டிருக்கும் பிரதேசமானது மிகவும் விஸ்தாரமாயிருக்கிறது. ஆகையினால், இந்தப் பிரதேசத்தில் அரண்களிலிருந்து சண்டைசெய்வது சாத்தியமற்றகாரியமாகும்; இல்லையென்றாலும், மேற்கரங்கத்தில் நடக்கிறமாதிரியாக அவ்வளவு திறமையுடனும் திருப்திகரமாகவும் கிழக்கரங்கத்தில் அரண்சண்டை நடக்க முடியாது. மேலும், போர் முனை மிகவும் விஸ்தாரமாயிருப்பதனால் அரண்களைப் பாதுகாத்துக் கொண்டு, அவைகளில் தேவையானவளவு பீரங்கிப்படையை வைத்து, வெகுகாலம் வரை நீடித்து அரண் சண்டையை நடத்தமுடியாது. ஆகையால், இவைகளை யெல்லாம யோசித்துப் பார்த்தால், கிழக்கரங்கத்தில் சண்டையை நடத்த மற்ற சௌகரியங்களைக் காட்டிலும் சேனைகளின் நடமாட்டத்திற்கு அதிக சௌகரியமா யிருக்குமென்றும், மேற்கரங்கத்தைப்போல், இந்த அரங்கத்திலும் ஒரு பக்கத்தில் கடலும், இன்னொரு பக்கத்தில் ஒரு நடுநிலைமை தேசத்தின் எல்லையும் இருந்த போதிலும், போர்முனையின் எந்த பாகத்திலாவது சேனையையும் பீரங்கிப் படையையும் கனமாகக்

கூட்டி விட்டால் சத்துருக்களின் போர் முனையைத் தாக்கி, பிளந்து, கலைத்துவிட முடியுமென்றும், அப்படி ஒரு தடவை செய்யும் பக்ஷத்தில், சத்துருக்களின் சேனையினுடைய நடமாட்டங்களை கண்டறிந்துகொண்டு, அவைகள் இப்படியப்படி நடமாட வொட்டாமல் செய்வதற்குப் போதுமானவளவு இடமும் சௌகரியமும் ஏற்படு மென்றும் நன்கு தெரியவருகிறது.

இரண்டாவது காரணமென்னவென்றால், ஒருமுக்கியமான இடத்திலிருந்து எதிர்த்து ருஷியர்களை சிதறிப்போய் விடும்படி கலைத்து விடுவதற்குத் தகுந்த ஸ்தலம் ஒன்றுமில்லை. சுமார் 100 வருஷங்களுக்கு முன் நெப்போலியன் என்னும் போர்வீரன் மாஸ்கோ என்னும் நகரம் வரை முன் நோக்கிச்சென்று, கடைசியாக ருஷியரை யாதொரு சமாதான உடன்படிக்கைக்கும் கட்டுப்படுத்தாமல் திரும்பிவந்து சேர்ந்தார். தற்பொழுது ஜெர்மானியரும் ருஷியாவில் வெகு தூரம்வரை உள்ளே நுழைந்து சென்றிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் ருஷியரின் நாட்டில் பிரவேசித்தும், ருஷியரின் சேனைக்கு மிகுந்த சேதத்தை விளைவித்தும் இருந்தபோதிலும், இந்த யுத்தத்தில் முடிவான வெற்றியை கொஞ்சமேனும் அடையவில்லை, ஐரோப்பா கண்டத்தில் ஏறக்குறைய பாதி விஸ்தாரணம் பரவியிருக்கும்படியான ருஷியா தேசத்தில் அதன் ராஜாங்கம் கொஞ்சம் பாகத்தை சொல்ப காலம் வரை நஷ்ட மடைந்திருப்பதனால் அதற்கு பாதகமில்லை. பிரான்ஸின் வடபாகத்தில் ஜெர்மானியர் வந்து சேர்ந்திருப்பதனால் பிரான்ஸின் பலம் கொஞ்சம் அசைந்திருக்கிறது. ஆனால், ருஷியாவின் விஷயத்தில் அவ்விதமாகச் சொல்லமுடியாது. ருஷியாவில் சிலபிரதேசங்களை ஜெர்மானியர் வசப்படுத்திக் கொண்டிருப்பதனால் ருஷியன் தேசத்துக்கு அது ஒரு ஊனமாயிராது.

மூன்றாவது காரணமென்னவென்றால், கிழக்கரங்கத்தில் சரியான போக்கு வரத்து கிடையாது. அரண் சண்டை செய்வதற்கு சாதகமானது சரியான போக்கு வரத்துகள். அவை பூமிக்குள்ளாகவு மிருக்கவேண்டும், போர் முனைகளுக்கு பக்கவாட்டுகளிலு மிருக்கவேண்டும் அப்படி யிருந்தால்தான் யுத்த நடவடிக்கைகள் சரியாக நடைபெறும். ருஷியாவில் இந்த சௌகரியம் கொஞ்சமேனும் கிடையாது. இருப்புப் பாதைகள் இங்கு மங்கும் ஏதோ கொஞ்சமாக இருக்கின்றன. சாலைகளும் பாதைகளும் அதிகமாகக் கிடையா.

## யுத்த மண்டலத்தின் அமைப்பு.

இவைகளை யெல்லாம் நாம் ஓர் பக்கத்தில் வைத்துக்கொண்டு, இந்த யுத்தம் ஆரம்பமான போது, போர் முனையின் நிலைமை யுத்ததந்திரத்தை யனுசரித்து எப்படியிருந்ததென்று அறிந்து கொள்வோம். நாம் பூகோளப்படத்தை சற்று பார்க்கும் பக்ஷத்தில் ருஷியாவின் நிலைமையும், அது எம்மாதிரியாக யுத்த தந்திரத்திற்கு இசைந்திருக்கிற தென்பதும் நமக்கு நன்கு தெரியவரும். போலண்டு என்னும் ருஷியப் பிரதேசம் ஜெர்மானிக்குள் முட்டிக்கொண்டு உட்செல்லுகிறது போலிருக்கிறது. வடக்கே கிழக்குப் பிரஷ்யா என்றஜெர்மன் மாகாணமானது, ஏறக்குறைய போலண்டின் வடமேற்கு பாகத்திலிருந்து வடகிழக்கு பாகம்வரை வியாபித்திருக்கிறது. தெற்கே, ஆஸ்ட்ரியாவைச் சேர்ந்த காலிஷியா என்னும் பிரதேசமும அப்படியேதான். இம்மாதிரியாக, போலண்டு பிரதேசமானது, மூன்று பக்கங்களிலும் சத்துருக்களின் தேசங்களால் சூழப்பட்டிருக்கிறது. ஆகையால், இந்த போலண்டு பிரதேசத்தை சாதாரணமான நிலைமையிலே பாது காப்பது மிகவும் கஷ்டமாயிருக்கும். ஏனென்றால், அது சத்துருக்களின் தேசங்களில் போய் முட்டிக்கொண்டு பிரதானமாகத் தலையை காட்டிக்

கொண்டு தன் இரு பக்கங்களையும் சத்துருக்கள் சுலபமாய் எதிர்க்கும்படி நின்று கொண்டிருக்கிறது. ஆயினும் அதனுடைய நிலைமையானது சாதாரணமான தல்ல. ஏனெனில், போலண்டில் சிற்சில அசௌகரியங்களிருந்தன. முதலாவது அதில் போதுமானவரையில் சரியான இருப்புப்பாதைகள் இல்லை. துருப்புகளை அதன் எல்லையில்கொண்டு போய்விடும்படியாக வெகு நேர்த்தியான இருப்புப்பாதைகளை ஜெர்மானியர் தங்கள் எல்லைப்புறத்தில் போட்டு வைத்திருந்தார்கள். அதே மாதிரியாக ஆஸ்ட்ரியரும் போட்டிருந்தார்கள். ஆகையால், போலண்டில் ஏற்பட்ட கஷ்டமாவது, சேனையை ஒன்று கூட்டுவதாகும். தகுந்த இருப்புப்பாதைகள் ஜெர்மனிக்கு இருப்பதனால் ருஷியாவை காட்டிலும் வெகு சீக்கிரமாய்த் தன்னுடைய துருப்புகளை எல்லையில் அது சேர்த்து வைக்கக்கூடும். சண்டையானது எல்லை பிரதேசத்திலிருந்து உள் நாட்டுக்குப் போனாலொழிய, ஜெர்மானியருக்கு, ருஷியரைக் காட்டிலும் துருப்புகள் இன்னும் சீக்கிரமாகவும் சுலபமாகவும், அதிகமாகவும் வந்து சேருமென்பது தெரிந்த விஷயமே. இதை சரிப்படுத்திகொள்வதற்காகத்தான், ருஷியர் தங்களுடைய பாதுகாப்பு வரிசையை போலண்டிலிருந்து இன்னுங் கொஞ்சம் உட்புறமாகவே இழுத்துக்கொண்டார்கள். அவர்களுடைய பாதுகாப்பு வரிசை வார்ஸா என்னுமிடத்திலிருந்து விஸ்டுலா என்னும் நதிக்குப்போய் அங்கிருந்து தெற்கே திரும்பியிருந்தது. விஸ்டுலாவுக்கும் பக் என்னும் நதிக்கும் மத்தியில் அவர்கள் சேனை கூட்டுமிடத்தை ஏற்பாடு செய்துகொண்டு, அதை நான்கு மூலைகளிலும் நான்கு கோட்டைகளால் பாதுகாப்பு செய்துகொண்டார்கள். அதாவது, நோவோ ஜார்ஜிவிஸ்க், வார்ஸா, இவான் கிராடு ப்ரஸ்டு லிடாவ்ஸ்க் என்பவைகளாகும். பக்கவாட்டில், இந்தப்பிரதேசம் நீமன், நேரு என்னும் நதிக்கரைகளிலுள்ள கோட்டை வரிசைகளால் பாதுகாக்கப்பட்டு வந்தது. தெற்கே, பந்தோபஸ்தான இடங்களில்லை. ஏனென்றால் காலிஷியாவுக்கு வடக்கே லஸ்க், டப்னோ, ரோவ்னோ ஆகிய இம்மூன்று கோட்டைகள் மட்டுமே யிருக்கின்றன.

### ருஷியரின் காப்புஸ்தலங்கள்.

ஆகையால் ருஷியரின் யுத்ததந்திரத்திற்குத் தகுந்த பாதுகாப்பு ஸ்தலங்கள் அவசியமாயிருந்தன. அவர்கள் முன்நோக்கிச் செல்லுவதற்கு விரும்பினால், அவர்களுக்கு நேரும்படியான கஷ்டம் அற்பசொற்பமாயிராது. ஏனென்றால், போலண்டு பிரதேசத்தில் இருபக்கங்களிலுமிருக்கும்படியான அபாயத்தை நிவர்த்திசெய்துகொண்டாலொழிய, அந்தப் பிரதேசத்தின்வழியாக முன்நோக்கி செல்ல முடியாது. இருபக்கங்களிலும் பயமில்லாது செய்துகொள்வதற்கு அநேகவிதமான கஷ்டங்கள் ஏற்பட்டன. வடக்கிலே, கிழக்குப் ப்ரஷ்ஷியா என்ற ஜெர்மன் மாகாணமிருக்கிறது அது சேற்றுபூமிகளினாலும், நதிகளினாலும் நிறைந்திருக்கிறது. ஆகையால் அதில் சேனை தாராளமாய் நடமாடமுடியாது. அந்தப் பிரதேசத்தின் நிலைமையைமுழுதும் அறிந்துகொண்டிருக்கும்படியான ஜெர்மன் துருப்புகளும், ஜெர்மானிய சேனாபதிகளும்தான் நன்றாக நடமாடமுடியும். கிழக்குப் ப்ரஷ்ஷியாவில் இருக்கும்படியான சத்துருக்களின் பயத்தை ஒருக்கால் நிவர்த்தி செய்துகொள்ள முடியாவிட்டாலும், அதனால் மற்ற இடங்களில் ருஷியரின் யுத்த நடவடிக்கைகளுக்கு பாதகமுண்டாகாமல் இருக்கவேண்டுமல்லவா? இந்த உத்தேசத்துடன்தான் நீமன் நதி பிரதேசத்திலும், நேருநதிப் பிரதேசத்திலும் பாதுகாப்பு ஏற்பாடுகள் மிகவும் பலமாய் செய்யப்பட்டன. காலிஷியாவின் தெற்குப் பிரதேசத்தில் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்ய இன்

னும் சௌகரியமான இடமிருந்தது. ஆனால் அதற்குத்தெற்கே கார்ப்பேத்தியன்குன்றுவரிசையிருந்தது. அதனால், அந்தப் பிரதேசம் கரடுமுரடாகவும், பந்தோபஸ்துக்கு லாயக்காயில்லாமலுமிருந்தது. ஆயினும் காலிஷியா மார்க்கமாய் ஜெர்மனிக்குள் செல்லுவதற்கு ஒரு விதத்தில் அனுகூலமாயிருந்தது. ஏனென்றால், ருஷியர், அதன் வழியாக ஜெர்மனிக்குள் சென்றுதான் எல்லைப் பிரதேசத்திலிருக்கும்படியான பாதுகாப்பு ஸ்தலங்களிலிருந்து ஜெர்மானியரை அப்புறப்படுத்தி, அவர்களை ஜெர்மனியின் மத்திய பிரதேசத்திற்கு பின்னடைந்து செல்லும்படிசெய்யலாம். அதாவது கைத்தொழில் முதலிய விஷயங்களில் மிகவும் முக்கியமானபிரதேசமாகிய ஸைலீஷியாவுக்கு பின்னடைந்து செல்லும்படி செய்யலாம்.

இவைகளையெல்லாம் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும் பக்ஷத்தில், யுத்தம் ஆரம்பித்தகாலத்தில் இருகக்ஷியிலும் அனுஷ்டிக்கப்பட்ட யுத்த தந்திரத்தைப்பற்றி நாம் கொண்டாடத்தக்கதாயிருக்கும். ஜெர்மானியரின் கக்ஷியிலோ, அவர்கள் பூரணமாக பாதுகாப்பு ஏற்பாடுகளையே செய்துகொண்டார்கள். ஏனென்றால், அவர்கள், ருஷியர் வலுவில் தாக்க ஆரம்பிப்பதற்குத் தயார்செய்துகொள்வதற்கு இன்னும் ஒரு மாதகாலம் செல்லுமென்று நம்பி, ருஷியாவை எதிர்ப்பதற்கு முன்னம் பிரான்ஸை எதிர்ப்பதற்காக தேவையாயிருக்கும்படியான ஏற்பாடுகளையெல்லாம் செய்துகொண்டு, சேனையைத்தயார் செய்துகொள்வதற்கு விரும்பினார்கள். ருஷியர்களோ, காலிஷியாவிலும், கிழக்குப் பிரஷ்ஷியாவிலும், அக்கம்பக்கங்களிலுமிருந்து சத்துருக்களை அப்புறப்படுத்தி, அவர்களை வெகு தூரத்திற்கப்பால் துறத்திவிட்டு, தங்களுடைய போர்முனையை பலப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று விரும்பினார்கள். அவர்களுடைய எண்ணம் முழுதும் நிறைவேறுவதற்கு, கீழ் கண்டவைகள் அனுகூலமாயிருந்தன. அதாவது, ஜெர்மானிய சேனையின் பெரும்பாகம் பிரான்ஸிலிருந்தது. ருஷியர் சேனையைக் கூட்டினது ஜெர்மானியர் எதிர்பார்த்ததற்கு இரண்டு வாரம் முன்னதாகவே முடிந்துவிட்டது பிரான்ஸிலிருந்த நிலைமையினால், ஒரு பலமான படை வகுப்பை ருஷ்யர் எதிர்ப்பது சாத்தியமாகத் தோன்றிற்று. இம்மாதிரியாக அவர்கள் வடபாகத்தில், கிழக்குப் பிரஷ்ஷியாவைத் தாக்க எத்தனித்தார்கள்.

### கிழக்குப் பிரஷ்ஷ்யாவின்மீது ருஷியரின் படையெடுப்பு.

இந்த நடவடிக்கையானது, கிழக்குப் பிரஷ்ஷியாவின்மீது ருஷ்யர் படையெடுப்பதாகும். நீமன் நதிக்கரையிலிருந்த சேனையானது மேற்கு திசையாக முன் நோக்கி சென்றது; நேரு நதிப் பிரதேசத்திலிருந்த சேனையானது வடக்குதிசையை நோக்கிச்சென்றது. ஜெர்மானியர் ஆகஸ்டுமீ 16-ந் தேதி ரென்னென் காம்பு என்னும் தளகர்த்தரின் கீழிருந்த ருஷிய துருப்புகளைத் தாக்கி பலனடையாமல், கோனிக்ஸ்பெர்க் என்னுமிடத்திலிருக்கப்பட்ட கோட்டைக்குப் பின்னடைந்து சென்றார்கள். இதன் நடுவே, நேருநதிப் பிரதேசத்திலிருந்து புறப்பட்ட சேனை, ஸாம்ஸனாப் என்பவரின் அதிகாரத்தின் கீழ் முன் நோக்கிச் சென்று வரிக்கு மேற்கிலுள்ளபிரதேசத்தில் நுழைந்தது. அங்கு அவர்கள் மிகவும் நல்ல பலனை யடைந்து ஜெர்மன் சேனையில் ஒரு பாகம் தென் மேற்குதிசையை நோக்கிப்பின்னடைந்து செல்லும்படியாகவும் வடக்கே கோனிக்ஸ்பேர்க் என்னுமிடத்தை நோக்கி ஒரு பாகம் பின்னடைந்து செல்லும் படியாகவும் செய்துவிட்டார்கள். இம்மாதிரியாக ஜெர்மானியர் ஒரேசமயத்தில் கிழக்கிலிருந்தும், தெற்கிலிருந்தும் பின்வாங்கிச் செல்லும்படி செய்யப்பட்டதனால், கிழக்குப் பிரஷ்ஷியாவின் அவர்களுடைய

நிலைமையானது மிகவும் கடினமானதாயிருந்தது. ஏனென்றால், அவர்களுடைய சேனையானது, தொகையில் சொற்பமாயிருந்தது. மற்றும் கொஞ்சபாகம் கோனிக்ஸ் பேர்க் என்னும் கோட்டையில் போய் பத்திரமாய் தங்கியிருக்கும்படியாக செய்யப்பட்டது. ருஷ்யர் டில்ஸிட் என்னுமிடத்தை வசப்படுத்திகொண்டு, கோனிக்ஸ் பேர்க் என்னும் ஸ்தலத்தை நோக்கிசென்றார்கள். அங்கிருக்கும் கோட்டையை சூழ்ந்து கொண்டு, நீமன் நதிக்கரையிலிருந்த சேனை இன்னும் முன் நோக்கிசென்றுகொண்டிருந்தது. ருஷ்யர் முன்னேற்றமடைந்து கொண்டிருந்ததைப் பார்த்தால், அது மிகவும் திருப்திகரமாகவே யிருந்தது. அவர்கள் சீக்கிரத்திலேயே ஜெர்மனியின் முக்கியபட்டணமாகியபேர்லின் நகரில் வந்துசேர்ந்துவிடுவார்களென்று நினைக்கப்பட்டது. ஜெர்மனியில்எல்லாருக்கும் மிகவும் பயமாகத்தானிருந்தது. ஏனென்றால், பிரஷ்ஷியாவின் கிழக்குபாகமாவது ஜெர்மனிக்கு மிகவும் பிரதானமானபாகமென்று, ராணுவ உத்தியோகஸ்தர்களால் நினைக்கப்பட்டு வருகிறது. ஆகஸ்டு மாதத்தின் கடைசிவாரத்தில் கிழக்கரங்கத்தின் நிலைமையானது இம்மாதிரியாக இருந்தது.

போலாண்டின் தென்பாகத்திலிருக்கும் படியான நிலைமைகளைப்பற்றி கவனிக்க ஆரம்பிப்பதற்குமுன், பிரஷ்ஷியாவின் கிழக்குபாகத்திலிருந்து இந்தப் பிரதேசம் வரையில் என்னென்ன யுத்தநடவடிக்கைகள் நடந்தனவென்று யோசித்துப் பார்த்துக்கொண்டு வருவோம். ருஷியர் ஜயமடைந்துகொண்டிருந்ததால், பெர்லின் நகரைப்பற்றிஜனங்களுக்கு மிகுந்த பயமுண்டாய்விட்டது. மேற்கரங்கத்திலிருந்து துருப்புகள் கிழக்கரங்கத்திற்கு மாற்றப்பட்டன; மூலபலங்களை ஒன்றுகூட்டி, அவைகளுக்கு சகாயமாக விஸ்டுலா என்னும் நதிக்கரையிலிருக்கும் பெரிய கோட்டைகளிலிருந்து கனத்த பீரங்கிகளுடன் துணைப் படைகளைக்கொண்டுவந்து சேர்த்தார்கள். அந்தச் சேனையை, ஏரிப்பிரதேசம் முழுதும் நன்கு அறிந்துகொண்டிருந்தஜெனரல் வான் ஹின்டேன்பேர்க் என்பவரின் அதிகாரத்தின் கீழ்வைக்கப்பட்டது. அவர் இருப்புப்பாதைகளை சரியானபடி உபயோகிப்பதில் மிகுந்த திறமையுடையவர். விஸ்டுலா நதிக்கரை நோக்கிச் சென்று கொண்டிருந்த ருஷிய சேனைக்கு, ஒரு பலத்த ஜெர்மானிய சேனை தன்னை எதிர்க்க சித்தமாயிருக்கிறதென்று தெரியவில்லை. ஆகையால் ருஷியர்களின் சேனை ஒரு விசாலமான போர்முனையில் சிதறிப்போய் இங்குமங்கும் சேற்றுபூமிகளால் பிரிவுபட்டு, அகப்பட்டுக் கொண்டது. வான் ஹின்டன்பெர்க் மிகவும் புத்திசாலித்தனமாக முன்னோக்கிச் சென்று ஐந்து தினச் சண்டையில் ருஷிய சேனையை டானேன்பர்க் என்னு மிடத்தில் முழுதும் சேதமாக்கிவிட்டார். ஒரு சேனைப்படையிலிருந்த ஐந்து படை வகுப்புகளில் ஒரு படை வகுப்புதான் தப்பித்துக்கொண்டுபோயிற்று. பாக்கிப் படை வகுப்புகளில் சில பிடித்துக்கொள்ளப்பட்டன, மற்றும் சில சேற்றில் முழுகிபோய்விட்டன. ருஷியருக்கு நேர்ந்த விபத்தானது மிகவும் பயங்கரமானதாயிருந்தது. ரேன்னன்காம்ப் என்பவரின் நிலைமை மிகவும் பயங்கரமாகவேயிருந்தது. ஏனென்றால், வான் ஹின்டன்பர்க் அவர் பின்னடைந்து செல்வதைத் தடுப்பதற்காக வடகிழக்கே திரும்பிக்கொண்டிருந்தார். ருஷியர்களின் சத்துருக்களை அப்புறப்படுத்திவிடும்படியான பாதுகாப்பு வரிசைகளின்பின்னால் நீமன் நதிக்கரையில் ரென்னன்காம்ப் வேகமாய் பின்னடைந்து சென்றார். வான்ஹின்டன்பர்க டான்னென்பேர்க் என்னும் ஸ்தலத்துடன் திருப்தி யடைந்திருக்க வேண்டும். அப்படி யிராமல், அவர் நீமன் படை வரிசையைப் பிளந்துகொண்டு உள்ளே நுழைவதற்கு விரும்பினார். அவர்

ருஷிய எல்லையைக்கடந்து நீமன் நதி
யை நோக்கி வந்தார் அதனால், கஷ்
டத்தில் சிக்கிக் கொண்டதாக அவருக்
குஉடனே தெரியவந்தது; ஏனென்றால்,
யுத்த தந்திரத்தில் சிறந்ததாயிருக்
கும் இருப்புப்பாதைகளினால், பிரஷ்
ஷியாவின் கிழக்கு பாகத்தில் சேனை
யைத் தருவித்துக் கொள்வதற்கு இனி
கொஞ்சங்கூட சாத்திய மில்லையென்
றும், நீமன் நதிக்கும் கிழக்குப் பிரவுக்
கும் மத்தியிலுள்ள பிரதேசம் சதசத
ப்பான பூமியாகையால் அந்தப்பிரதே
சத்தில்நல்லபோக்குவரத்துகள் இல்லை
யென்றும் அவர் கண்டுகொண்டார்.
செப்டெம்பர் மாதம் 7-ந்தேதி அவர்
நீமன் வரிசையில், கோவ்னோ என்னு
மிடத்திலிருந்து கிராட்னோ என்னு
மிடம்வரையிலுள்ள விசாலமானபோர்
முனையில்முன் நோக்கிச்சென்றார். செ
ப்டம்பர் 27-ந் தேதிக்குள் அவருக்கு
நீமன் நதிக்கரையிலிருந்தசேனையின்பலம்
தெரிந்துவிட்டது; ஆகையால், அவர்
ருஷியரால் பின்தொடர்ந்து வரப்
பட்டவராய்ப்பின்னடைந்துசென்றார்.
அகஸ்டோவோ என்னுமிடத்தில் நட
ந்த சண்டையில் ருஷியர் அக்டோபர்
மாதம் 9-ந்தேதி யன்று ஹின்டன்
பர்க்கை எதிர்த்து மிகுந்த நஷ்டத்
தை விளைவித்தார்கள். ருஷியர் மிகு
ந்த சேதத்தை யடைந்தபிறகு தங்க
ளுடைய போர்முனையின் வடக்கு பக்
கத்தை சத்துருக்களிடத்தினின்றும்
நிவர்த்தி செய்து கொள்வதற்கு எத்
தனித்து, கடைசியாக முன் ஸ்திதிக்கு
அதைக்கொண்டு வந்தார்கள். இப்பொ
ழுது நாம், கலிஷியா பக்கத்திலிருந்து
வலுவில் தாக்கின ஆஸ்ட்ரோ ஜெர்மா
னியரின் கதியைப் பற்றி யோசிக்க
ஆரம்பிக்க வேண்டும்.

விஸ்டுலா நதிக்கரையின் மேலிருக்
கும் படை வரிசையை லுப்ளின் கோ
ம என்னுமிடத்தை நோக்கி இன்னுங்
கொஞ்சம் வடக்கே ஒதுக்க வேண்டு
மென்றும், அதேசமயத்தில் ஜெர்
மானியர் அந்தப்படைவரிசையை மேற்
கிலிருந்து தாக்கவேண்டு மென்றும்
உத்தேசித்தே அவர்கள் முன் நோக்கிச்
சென்றார்கள். அவர்கள் 300,000 பேர்
அடங்கிய ஒரு ஆஸ்டிரியசேனை அவ்
விரண்டு நகரங்களை நோக்கிச் செல்ல
ஆரம்பித்தன. அப்பொழுது அவர்
களை ஒரு சிறிய ருஷிய சேனை எதிர்
த்து, பிறகு கொஞ்சங் கொஞ்சமாய்ப்
பின்னடைந்து சென்றது. இந்த சமய
த்தில், இன்னொரு ருஷியசேனை காலி
ஷியா பிரதேசத்தை நோக்கி, தென்
மேற்காக சென்று, எல்லையைக் கட
ந்து, லெம்பர்க் பிரதேசத்திலும் கலி
ஷியாவின் கிழக்கு பாகத்திலு மிருந்த
ஆஸ்டிரிய சேனையை எதிர்த்து நின்
றது. அதே ஆஸ்டிரிய சேனையை
எதிர்ப்பதற்கு மூன்றாவது ருஷியன்
சேனையானது அதே சமயத்தில்,
கிழக்கு பக்கத்திலிருந்து கலிஷியாவில்
நுழைய முயற்சி செய்தது. இதனால்,
லெம்பர்க்கிலிருந்த ஆஸ்ட்ரிய சேனை
க்கு திகிலுண்டாயிற்று. ஆகவே,
ஆகஸ்டு மாதக் கடைசிக்குள், ஆஸ்ட்
ரிய சேனையின் ஒரு வகுப்பு ருஷிய
ரைச் சேர்ந்த ஒரு சிறிய சேனையை
லுப்லின் என்னு மிடத்திற் கருகில்
எதிர்த்தபோது, ஆஸ்டிரிய சேனை
யின் மற்றொரு பகுதி லெம்பர்க் நகரத்
தில் ருஷிய சேனையின் இரண்டு வகுப்
புகளினால், எதிரிலிருந்தும் பக்கவா
ட்டுகளிலிருந்தும் எதிர்க்கப் பட்டு,
மிகவும் அபாயமான நிலைக்குவந்தது.
செப்டம்பர் மாதம் முதல்தேதி, 2-ந்
தேதியும் லெம்பர்க்கில் நடந்த சண்
டையில் ருஷியர் நல்ல பலனை யடைந்
தார்கள். ஆஸ்ட்ரிய சேனையின் இரண்
டாவது பகுதியில் சுமார் லக்ஷம்பேர்
கைதிகளாகப் பிடித்து கொள்ளப் பட்
டவர்களாய், அந்தப் படைவகுப்பு மிக
வும் சேதமடைந்துபோய் விட்டது.
ருஷியர் லெம்பெர்க் நகரை வசப்படுத்
திக்கொண்டு, புகோவினா ப்ரதேசத
தைக் கடந்து, கார்பேதியன் மலையின்
கீழண்டை கணவாய்களைப் பிடித்து
கொண்டு, மேற்கு திசையை நோக்கிச்

சென்றார்கள். ஆஸ்ட்ரியரின் சேனை யில் மிகுதி யிருந்தவர்களோ, ரிஸமில் என்னும் ஒரு பெரிய கோட்டையை முக்கியமான பாது காப்புஸ்தல மாக வைத்துக் கொண்டு, ஸான் என்னும் நதியின் கரையின்மேல் ஒரு ஸ்தலத் தை வசப்படுத்தி கொண்டார்கள்.

இதன் நடுவே, ஆஸ்ட்ரிய சேனை யின் முதல் வகுப்பைச் சேர்ந்தவர் கள், தங்களுடைய பழைய நிலைமை யைப் திருப்பியடைவதற்கு பிரயத் தனப்பட்டார்கள். ஆனால், செப்டம் பர்மாதம் 4-ந்தேதி அவர்கள் ருஷி யரை எதிர்த்ததில் பலனடையவில்லை. ருஷியர் அப்பொழுது வலுவில் தாக்க ஆரம்பித்து, செப்டம்பர் மாதம் 10-ந் தேதிக்குள், ஆஸ்ட்ரியரை முழுதும் சின்னாபின்னஞ்செய்து, அவர்களுடை யசேனையைக் கலைத்து விட்டார்கள். காலிஷியா முழுமையும் கிரேகோ என் னும் பிரதேசம்வரை ருஷியருக்குத் திறந்த வெளியாகிவிட்டது. செப்டம் பர் மாதம் 20-ந் தேதி ஜாரேஸ்லாவ் என்னும் கோட்டை பிடித்துக்கொள் ளப்பட்டது. ரிஸமில் என்னும் கோட்டையிலிருந்த பாதுகாப்புப் படை பின்னடைந்து சென்ற ஆஸ்ட்ரிய சேனையில் மிகுதிபட்டவர் களை உபயோகித்துக் கொண்டது. ஆகையால்அந்தக்கோட்டையும்வெகு சுலபமாய் சூழ்ந்துகொள்ளப்பட்டது செப்டம்பர் மாதம் 29-ந்தேதிக்குள் ருஷியர் விஸ்லோகா என்னும் நதிக்க ரையின் மேல்வந்து சேர்ந்து, கரே கோ என்னும் பிரதேசத்தை பயமுறு த்திகொண்டிருந்தார்கள். ஆகையால் ஆஸ்ட்ரியருக்கு சகாயமாகச் சென்று, அவர்களை கஷ்டத்தினின்றும் கட் டாயம் விடுவிக்கவேண்டிய பொறுப்பு ஜெர்மானியாருடையதாகி விட்டது. அதற்காக டானன்பொக் என்னு மிடத்தில் வெற்றியை யடைந்த சே னாதிபதி நியமிக்கப்பட்டார். அவர் அப்படியே சென்று, வெகு தீரத்தன மாய் வார்ஸா நகரையும், விஸ்டுலா நதியையும்நோக்கி, மத்தியப்படையை பிளந்துகொண்டு சென்று, கலிஷியா விலிருந்த ருஷிய இடதுபக்கவாட் டுப்படையை ஸான் நதிக்கரைக்கு பின்னடைந்து செல்லும்படி செய்தார்.

வான்ஹின்டன்பர்க்கின் ஏற்பாடு என்னவென்றால், தமக்கு வலதுபக்கத் தில்ஆஸ்ட்ரியர்ஸான்நதியைக்கடந்து சென்று, ருஷியரை ப்ரேஸ்மிஸில் என் னும் கோட்டைக்குபின்னால்ஒதுங்கிச் செல்லும்படி செய்யவேண்டுமென்கிற விருப்பம். அவருடைய இடதுபக் கத்தில் தாரன் என்னுமிடத்திலிருந்து விஸ்டுலா நதிக்கரையின்மேலே ஆஸ்ட் ரிய சேனை முன்னோக்கி செல்லவேண் டுமென்று அவருடைய விருப்பம். முக் கியமான சேனை, மத்திய பிரதேசத் தில், ருஷிய எல்லைப் பிரதேசத்திலி ருந்து கிழக்கு திசையை நோக்கி அதாவது, காலீஷ் என்னுமிடத்தி லிருந்து லோட்ஸ என்னுமிடத்திற்கு செல்லும்படியானஇருப்புப்பாதைவழி யாகவும், ஜென்ஸ்டோசாவா என்னு மிடத்திலிருந்து பெட்ரிகாவ் என்னு மிடத்திற்கு செல்லும்படியான இருப் புப்பாதை வழியாகவும், முன்னோக்கி செல்லவேண்டுமென்றும், இன்னொரு படைவரிசை, விஸ்டுலா நதியின்மே லிருக்கும் டோஸ்வால் என்னும் பாலத்தைநோக்கி, கைடு ரோடோ வோ இருப்புப்பாதை வழியாகவே செல்லவேண்டு மென்றும், ஏற்பாடு செய்யப்பட்டது. கடைசியாக செய் யப்பட்ட இந்த ஏற்பாடுதான் யுத்த தந்திரத்தில் மிகவும் முக்கியமான தாயிருந்தது. ஏனென்றால், இந்த ஏற்பாட்டின் பிரகாரம் விஸ்டுலா படை வரிசையை பிளந்துகொண்டு நுழைய வேண்டுமென்றும் ருஷிய சேனையை இரு பக்கத்திலிருந்தும் கௌவிக்கொண்டு, முன் நோக்கி சென்று, ருஷியரை வடகிழக்கு திசை யை நோக்கி பின்னடைந்து செல்லும் படி செய்யவேண்டு மென்றும், விஸ்டு லா போர்முனைமொத்தத்தையும் சாலி

செய்து விடவேண்டுமென்றும் ஆலோசனை செய்யப்பட்டது. அக்டோபர் மாதம் 10-ந் தேதிக்குள் ஜெர்மனிய சேனையுன் மத்தியபிரதேசம் லேர்ட்ஸ் என்னு மிடத்திலிருந்தது 15-ந் தேதிக்குள் ப்ளாக், லோட்ஸ், ஆஸ்ட்ரோவிஸ் என்னும் ஸ்தலங்களை ஆக்ரமித்து கொண்டிருந்தார்கள். பிறகு அவர்கள் எதிர்த்ததெல்லாம் வார்ஸா நகரைதான். அக்டோபர் மாதம் 21-ந் தேதி ஜெர்மானியர் டோவிவாவி என்னுமிடத்தில் விஸ்டுலா நதியை கடந்து, இவான் கௌராட் என்னு மிடத்தை நோக்கி சென்றூர்கள். ஆனால், ஐவான் கொராட் என்னு மிடத்திற்கு தெற்கேயிருக்கும் நோவேட்சி அலெக்ஸண்டியா என்னு மிடத்தில் ருஷியர் அவர்களை திருப்பி எதிர்த்து, விஸ்டுலா நதியை கடந்த பெரிய சேனையை சேதப் படுத்தி விட்டார்கள். பிறகு, அதேமாதிரியாக ருஷியர்கள் அவர்களை விடாமல் அப்புறபடுத்திகொண்டேயிருந்தார்கள். இந்த இடத்தில் கடுஞ்சண்டை நடந்தது. அக்டோபர் மாதம் கடைசியில் ஜெர்மானியர் தங்களுடைய எல்லைபிரதேசத்தை நோக்கியே முழுதும் பின்னடைந்து சென்றுவிட்டார்கள். இது நடுவே, வார்ஸா என்னுமிடத்தில் நோவோஜார் ஜிவிஸ்க் என்னுமிடத்திலிருந்து ருஷியர்கள் ஜெர்மானியரை பக்கவாட்டிலிருந்து எதிர்த்து, அவர்களை வார்டா என்னும் நதிக்கரையின் மேலேயே பின்னடைந்து செல்லும்படி செய்தார்கள். காலிஷியாவில் ஆஸ்ட்ரியர் ஸான் என்னும் நதியை அடைந்து ரிஸமில்ஸ் என்னும் கோட்டையை ருஷியரிடத்திலிருந்து மேற்குதிசையில் மட்டும் விடுவித்தனர். ஆயினும் போலண்டு பிரதேசத்தில் ஜெர்மானியர் பின்னடைந்து செல்லுகிறூர்களென்று கேட்ட மாத்திரத்தில், அவர்களுடைய தைரியமும் ஒடுங்கிப்போய், இனி அவர்களுடையபலம் பலிக்காதென்று நினைத்து சும்மாவிருந்து விட்டார்கள். ஆகவே, வார்ஸா நகரத்தை நோக்கி ஜெர்மானியர் எதிர்ப்பதற்கு முதல் முதல் எத்தனித்தத் பலிக்காமல் போய்விட்டது. ருஷியர் ஜெர்மானியரை பின்தொடர்ந்தனர். அவர்களுடைய வலதுபக்கவாட்டு படையானது ஜெர்மனியில்கூட நுழைந்துவிட்டது. அவர்களுடைய இடதுபக்கவாட்டுப் படையானது மறுபடியும் க்ரேகோ நகரத்தை நோக்கிச்சென்றது. நவம்பர் மாதம் 13ந் தேதிக்குள் அவர்கள் அங்கிருக்கும் கோட்டைக்கு 20 மைல் தூரத்திலிருந்தார்கள்.

வான்ஹின்டன்பர்க் இந்த சந்தர்பத்தில் ருஷியரை திருப்பி எதிர்ப்பதற்கு தயார் செய்து கொண்டிருந்தார் அவருக்கு இப்பொழுது கூட யுத்ததந்திரத்திற்கு சாதகமான இருப்புப்பாலதகளிருந்தன. ருஷியருக்கு நல்ல போக்குவரத்தும் கிடையாது. வார்ஸா என்று மிடத்திலிருந்து போடப்பட்டிருந்த சில இருப்புப் பாதைகள் ஜெர்மானியர் பின்னடைந்து சென்றபோது சேதமாக்கி விடப்பட்டன. ஆகையினால், ருஷியருக்கு பக்க வாட்டிலி ஒரு விதமான போக்கு வரத்துகளுமில்லை யென்று தெரிய வந்தது. ஆகையால், அவைகளுடைய சேனை அநேக பிரிவுகளாகபிரிவு பட்டு போய்விட்டன, ஒன்றுக்கொன்று சம்பந்த மில்லாமலிருந்தது. ஆகையால் ஏதாவது ஒரு பிரிவில் அபாயம் நேரும் பக்ஷத்தில் அதற்கு சகாயமாக துணைப்படைகளையனுப்புவதற்கு சாத்திய மில்லாமலிருந்தது.

வான்ஹின்டென்பேர்க் இதை தான் நினைத்து கொண்டிருந்தார் ஏனென்றால், அவர் ருஷ்யரின் வலதுபக்கவாட்டு படையை த்வம்ஸஞ் செய்வதற்கு தமது இடது பக்க வாட்டில் தார்ன் என்னுமிடத்தில் தம்முடைய முக்கிய சேனையை சேகரித்து சேர்த்துவைத்து கொண்டிருந்தார்.

இந்த சமயத்தில் டிசம்பர் மாதம் ஆரம்பத்தில் கிராகோ நகரத்திற்கருகிலிருந்து கொண்டு, அந்த கோட்டையை பயமுறுத்தி கொண்டிருந்த ருஷியரின் இடது பக்க வாட்டு படையை, காலிஷியாவில் ஆஸ்ட்ரியர்கள் பலமாய் எதிர்த்தார்கள். கார்ப்பேத்தி மலைச்சரிவிலிருந்த ருஷிய பக்கவாட்டு படைக்கு ப்ரஸ்லாப் என்னும் சேனைபதியின் கீழ் ஒரு சேனை சகாயமாயிருந்தது. க்ரேகேவுக்கு தென் மேற்கிலும் டுக்லா லப்கோஆகிய இவ்விரண்டு கணவாய்களின் வழியாகவும் அதே சமயத்தில் ஆஷ்ட்ரியர் ருஷியர்களை எதிர்த்து, ருஷியரை அந்த பிரதேசத்தை விட்டு பின்னடையும்படி செய்வதற்காகவும், ரிஸமில் என்னும் கோட்டையை விட்டு அப்புறம் செல்லும்படி செய்வதற்காகவும் பிரயத்தனப்பட்டார்கள். எதிரிலிருந்தும், பக்கங்களிலிருந்தும் ருஷியர்கள் எதிர்க்கப்பட்டவர்களாய், அவர்கள் பின்னடைந்து செல்லும்படி நேரிட்டது. ருஷியரின் இடது பக்கவாட்டு படை இப்பொழுது கிராகோ என்னுமிடத்திற்கு கிழக்கே சுமார் 50 மைல் தூரத்தில் நைடா என்னும் நதிக்கரையிலும் டையாலா என்னும் நதிக்கரையிலும் ஒரு ஸ்தலத்தை வசப்படுத்திகொண்டிருந்தார்கள். டிசம்பர் மாதம் கடைசியில் ருஷியர் ஆஸ்ட்ரியரை திருப்பி எதிர்த்து, டுக்லா, லப்கோ, உஷாக் ஆகிய இம்மூன்று கணவாய்களிலுமிருக்கப்பட்ட ஸ்தலங்களை பிடித்து கொண்டார்கள் இடது பக்கவாட்டு படை டுஞெஜெட்ஸ் என்னும் நதிக்கரைக்கு முன்நோக்கி சென்றது.

வடக்கே, வான் ஹின்டன்பர்க் ருஷியரின் வலது பக்கவாட்டுப் படையை நோக்கி திருப்பி எதிர்ப்பதற்கு தயார்செய்து கொண்டிருந்தார்களென்று இதற்குமுன்னுல் தெரிந்து கொண்டோம். நவம்பர் மாதம் 15ந் தேதிக்குள் மிகவும் பலக்குறைவடைந்திருந்த ருஷிய வலது பக்கவாட்டுப்படை அப்புறப்படுத்தி விடப்பட்டதாய், இன்னொரு தடவை பின்னடைந்து சென்றது. இந்த பக்கவாட்டுப் படையின் வலது பக்கம் கோடியிலிருந்தவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் அதிவேகமாய் பின்னடைந்து சென்றார்கள். நவம்பர் மாதம் கடைசி வாரத்தில் அவர்களுடைய போர்முனை வார்ஸா நகரத்திற்கு மேற்கேயிருக்கும் ஜீரா என்னும் நதிக்கரையிலிருந்து, தென் மேற்கு திசையாக, கலிஷியா விலிருக்கும் டுஞெஜெக் என்னும் நதிக்கரையோடு அமைந்திருந்தது. ஜெர்மானியரின் உத்தேசமென்ன வென்றால், இந்த போர்முனையை பிளந்து கொண்டு ருஷ்யரின் வலது பக்க வாட்டுப் படையை மத்தியிலிருக்கப்பட்ட பிரதானமான படையிலிருந்து சம்பந்த மில்லாமல் அறுத்து விடவேண்டு மென்றிருந்தது. அவர்கள் லோட்ஸ் என்னு மிடத்திற்கு சற்று பக்கத்தில் வேண்டியவளவும் எத்தனித்தார்கள். இரண்டுஜெர்மானிய படைவகுப்புகள் ருஷ்யரின் படை வரிசையை பிளந்து கொண்டே, லோட்ஸ் என்னு மிடத்திற்கு தெற்கு பிரதேசம் வரை முன் நோக்கி சென்றன. இந்த சமயத்தில், ருஷியர்கள் துணைப்படைகளை வெகு சீக்கிரமாய் தயார் செய்து, அவைகளைக் கொண்டு சத்துருக்களை இன்னும் மேன் மேலும் முன்னேற்றத்தை யடைய வொட்டாமல் தடுத்தார்கள். ஆகவே, இப்பொழுது அந்த ஜெர்மன் படை வகுப்புகள் ஒரு பையில் அகப்பட்டு கொண்டது போலிருந்தன. அவை முன் நோக்கி செல்லவும் முடியாமல் பின்னடைந்து செல்லவும் முடியாமல், சுருக்கில் அகப்பட்டுக் கொண்டா போலிருந்தன ஏனென்றால், ருஷியர் அந்த சுருக்குபையை இரண்டு பக்கத்திலிருந்தும் குறுக்கிக்கொண்டிருந்தார்கள். அவ்விரண்டு படைகளும் மிகுந்த சேதத்தை யடைந்தவைகளாய், தப்பித்து கொண்டுபோய் விட்டன. அந்த வரிசை

மறுபடியும் குறுக்கப்பட்டது. ருஷியரின் வரிசையை பிளப்பதற்கு எத்தனித்து அது பலிக்காமல் போய்விட்டதனால், வான் ஹின்டன்பர்க் வார்ஸாவை பிடித்துக்கொள்ளவேண்டுமென்று சேனையைச்சேர்த்து கொரு வதற்கு ஆரம்பித்தார். டிசம்பர் மாதம் முழுதும் சண்டை நடந்தது. ருஷியர்கள் வார்ஸா நகரத்திற்கு சுமார் 30 மைல் மேற்கே யிருக்கும் ஜூரா என்னும் நதிக்கரையின் மேலும், ராவா என்னுமிடத்திலும் போர்முனையை வசப்படுத்திக் கொண்டிருந்தார்கள். அங்கு, அவர்களுடைய சேனை மிகவும் பலமாய் தயார் செய்யப்பட்டு சேர்க்கப்பட்டிருந்தது அதை நோக்கி வான்ஹின்டன் பர்க் மிகுந்த சேதத்தையடைந்து கொண்டு வீணாக எதிர்த்தார் அந்த வருஷம் முடிவதற்குள், ஜெர்மானியர் வார்ஸா என்னு மிடத்தை இரண்டாவது தடவை தாக்குவதற்கு பிரயத்தனப்பட்டது கூட பிரயோஜனப்படாமல் போய்விட்டது. எல்லா நடவடிக்கைகளுக்கும் இப்பொழுது கால நிலைமையும் சரியாயில்லாமல், தடங்கலாய் போய்விட்டது. யுத்த தந்திரத்தின் பெரும்பாகமும் மறுபடியும் ஆரம்பிப்பதற்கு, ஏப்ரல் மாதம் முடிவுவரையில் நாம் காற்றுக் கொண்டிருக்கவேண்டியதாயிருக்கிறது. இனி மாரிகாலத்தில் ருஷியாவில் நடந்தயுத்த நடவடிக்கைகளைப் பற்றி சுருக்கமாய் சொல்லுவோம். பிப்ரவரி மாதம் முதலில் ஜெர்மானியர் விசேஷ சேனையையும், பீரங்கிப் படையையும் சேகரித்து கொண்டு, ஜூரா என்னும் நதியின் மேலும், ராவா என்னு மிடத்திலு மிருந்த ருஷியன் ஸ்தலங்களை எதிர்த்து கொண்டு. மூன்றாவது தடவை வார்ஸா நகரை தாக்குவதறகு எத்தனித்தார்கள். அப்பொழுதும் அவர்கள மிகுந்த சேதத்துடன் பின்னடையும்படி செய்யப்பட்டார்கள்; ருஷியரின் படைவரிசையும் முன்னிருந்த நிலைமைக்கே வந்து விட்டது. வார்ஸா நகரை எதிரிலிருந்து தாக்குவதற்கு எத்தனித்து, பலிக்காமல் போய், வான்ஹின்டன்பர்க் மனந்தளர்ந்து போனவராய், நீமன் படை வரிசையை பிளந்து கொண்டு வார்ஸா நகரத்துக்கிருக்கும் போக்கு வரத்துக்களை சேதப்படுத்தி விட வேண்டுமென்று பிரயத்தனபட்டார்கள். ருஷியர்களோ, மறுபடியும்பிரஷ்ஷியாவின் கிழக்கு பாகத்திற்கு ரோட்டுகளைப் போட்டு கொண்டு, பிப்ரவரி 6-ந் தேதிக்குள் டில்ஸிட் கம்பூமினேன், ஜோஹான்ஸ்போக், இந்த பிரதேசத்தில் சேனையை கொண்டு வந்து விட்டார்கள். இன்னும் அநேக மாதகாலம் வரை சுறு சுறுப்பற்று, சும்மா விருக்கும்படி அவ்வளவு பலமாய் பிரஷ்ஷியர்களை எதிர்ப்பதற்கும் ஜெர்மானியரின் நோக்கத்தை மேற்கு முனைக்கு செலுத்தும்படி செய்வதற்கும் கிழக்குப் பிரஷ்ஷியால் ஒரு பலத்த சேனை கூட்டி வைக்கப்பட்டிருந்தது. வான்ஹின்டன்ர்க் ருஷியரை மிகவும் உக்கிரமாய்எதிர்த்து, பிப்ரவரி மாதம் 15-ந்தேதிகுள் அவர்களை கிழக்கு பிரஷ்ஷியாவிலிருந்து ஆயுத்தப்படுத்தி, பின்னடைந்து சென்று கொண்டிருந்தது. சேனையை கூட பின் தொடர்ந்து சென்றார். ருஷியர் மிகுந்த சேதத்தையடைத்தார்கள் ஆனால், அவர்களுடைய சேனையின் முக்கியமானபாகம் சேதமடையாமல் தப்பித்துக்கொண்டுபோய்விட்டது. நேருநகிப்பிர தேசத்திலிருந்தபடைவரிசையினாலும், நீமன்நதிக்கரையிலிருந்தபடைவரிசையினாலும் ஏற்பட்ட முக்கோண பிரதேசத்தை நோக்கி ஜெர்மானியர் எதிர்க்க எத்தனித்தார்கள். நீமன் வரிசை மூலமாய் தான் வார்ஸா நகருக்கும் பெட்ரோகிராடுக்கும் முக்கியமான இருப்புப்பாதை போய்கொண்டிருந்தது. க்ராட்னோ ஒஸ்வோவட்ஸ் ஆகிய இந்த ஸ்தலங்களை நோக்கி ஜெர்மானியர் எதிர்த்தார்கள், ஆனால் அவர்கள் பலனடைய வில்லை. மார்ச்சு மா

ம் முதலிலேயே நீமன் நதிக் கரையி ந்த படை வரிசை கொஞ்சமேனும் அசைக்க முடியவில்லையென்றுந் தெரியவந்தது. இந்த சந்தர்ப்பத்தில் ஜெர்மானியர் நேரு நதிக்கரையிலிருந்த படைவரிசையை பிளந்துகொண்டு போலண்டை பாதுகாத்து கொண்டிருந்த பக்கவாட்டு படைகளை பிளந்து கொண்டு உள்ளே நுழைவதற்கு எத்தனித்தார்கள். அவர்கள் தென் கிழக்கு திசையை நோக்கி ஒரு விசாலமான போர் முனையில் முன் நோக்கி சென்றார்கள். ஆனால், ப்ராசினிஸ் என்னுமிடத்தைச் சுற்றி கடுஞ்சண்டை நடந்தது. அவர்கள் பின் தள்ளிவிடப் பட்டார்கள். தென்னண்டை பக்கவாட்டு படைகளில் கூட அதே மாதிரியான நடவடிக்கைகள் நடந்தன கார்பேத்தியன் மலையின் முக்கியமான கணவாய்கள் ருஷியரின் சுவாதீனத்திலிருந்தன. ஆனால் அவர்கள் பலமான ஆஸ்டிரிய சேனையினால் எதிர்க்கப் பட்டார்கள். அவர்களை மீறி முன்நேக்கிச் செல்வதற்கு சாத்திய மில்லாமலிருந்தது. ஆஸ்ட்ரியர் இன்னொரு தடவை காலிஷியாவிலிருந்து ருஷியரை அப்புறப்படுத்திக் கொண்டும், ரிஸமில் கோட்டையை முற்றுகையிலிருந்து விடுவித்து கொண்டும் ருஷியரை எதிர்க்க பிரையத்தினப் பட்டார்கள். ஆரம்பத்தில் அவர்களுக்கு சொற்ப பலன் கிடைத்தது. அவர்கள் புகோவினா பிரதேசத்தில் ஜேர்னுவிட்ஸ் என்னுமிடத்தை மறுபடியும் வசப்படுத்திக்கொண்டு, ருஷியரின் பக்கவாட்டு படைகளை பயமுறுத்திகொண்டிருந்தார்கள். அவர்கள் காலிஷியாவை சேர்ந்த கணவாய்களிலிருந்து போய் ரிஸமில் என்னும் கோட்டையை விடுவிக்க எத்தனித்து கோஷியோவா என்னுமிடத்தில் நடந்த சண்டையில் பின்னடையும்படி செய்யப்பட்டார்கள், மார்ச்சு மாதம் நடுவில் ருஷியருக்கு துணைப் படைகள் வந்து சேர்ந்தன, ஆஸ்ட்ரியர்கள் மறுபடியும் பின்னடைந்து சென்றார்கள். மார்ச்சு மாதம 22-ந் தேதி ரிஸமில் என்னும் கோட்டை கூட ருஷியரின் வசமாகி விட்டது. அதோடு 130, 000 மனிதர்களடங்கிய ஒரு பாதுகாப்புப்படையும் ருஷியரின் வசமாகி விட்டது. இது அவர்களுக்கு கிடைத்த ஒரு முக்கியமான பலன். ஏனென்றால், காலிஷியாவில் ருஷியரின் போக்கு வரத்துகளுக்கு மிகவும் சுலபமாகி விட்டது. மேலும் அந்த கோட்டையை சூழ்ந்துகொண்டிருந்த சேனையை இன்னும் எங்கேயாவது உபயோகப்படுத்திகொள்ளும்படியாக விடுதலையடைந்திருந்தது.

ஆகவே, ஏப்ரல் மாதம் ஆரம்பத்தில் ருஷியரின் நிலைமை மிகவும் நன்றாகவும் அனுகூலமாகவுமிருந்தது. ஜெர்மனியர் வலுவில் தாக்குவதற்கு எத்தனித்த போதெல்லாம் ருஷியர்கள் அவர்களை பின்னடையும்படி செய்தார்கள். அவர்கள் ஹங்கேரி நாட்டை பயமுறுத்தி கொண்டிருந்தார்கள். வருகிற வசந்த காலத்தில் அவர்களுக்கு புதிய துணை படைகள் வந்து சேரும் அவைகளை கொண்டு அவர்கள் சத்துருக்களை வெகு சீக்கிரமாய் எதிர்க்க உத்தேசித்திருக்கிறார்கள். ஜெர்மானியர் பிரமாத மாக வலுவில் தாக்குவதற்கு ஆரம்பித்த போது. அங்குள்ள நிலைமை இம்மாதிரியாக இருந்தது. இந்த ஏற்பாட்டில் மிகவும் அதிகமான ஜனங்கள் சேர்த்து கொள்ளப்பட்டிருப்பதனாலும், இருகக்ஷியிலும் விசேஷமான சேதம்கிடைத்துகொண்டிருப்பதனாலும், விஸ்தாரமான போர் முனையில் யுத்த நடவடிக்கைகள் நடந்துகொண்டிருப்பதனாலும், இது தான் எல்லாவற்றைக் காட்டிலும் பெரிய ஏற்பாடென்று எண்ண வேண்டும். ருஷியர்கள் தங்களுடைய துணைப்படைகளை ஆயுதங்களினால் பலப்படுத்திகொண்டிருக்கிறார்களென்று ஜெர்மானியருக்கு தெரியும். மேலும், தங்களுடைய ஏற்பாடுகளில் அநேக வித

மானவற்றக்குறைச்சல்களிருக்கின்றன
வென்றும், ருஷியாவில் தள்ளாட சங்
கடமொன்று ஏற்பட்டு கொண்டிருக்
கிறதென்றும், கூட ஜெர்மனிக்கு தெ
ரியும். இந்த வசந்த காலத்திலும்
கோடைகாலத்திலும் ருஷியரை எதி
ர்க்காமல் படிக்கு விட்டு விட்டால்,
அவர்களை எதிர்ப்பதற்கு ஏற்ற நல்ல
சமயம், தவறிப் போய் விடுமென்று
ஜெர்மனிக்கு தெரியும். இதோடு, ருஷி
யர்கள் ஹங்கேரியை பயமுறுத்தி
கொண்டிருப்பதனல், ஹங்கேரி நாடு
தானகை சொந்தமாய் தன்னை பாது
காத்துகொண்டிருப்பதற்கு ஊனமாகி
விடுகிறது. ஆகையால் 1915-ம் வரு
ஷம் முழுதும் ருஷியாவை எதிர்ப்பதி
லேயே ஜெர்மனி முழுகி யிருந்தது.
நேசக்கக்ஷிகளை மேற்கு போர் முனை
யில் எதிர்த்து நிற்க முடியு மென்று
ஜெர்மனி நம்பி யிருந்தது. ஆனல்
அந்த நம்பகத்துடன் ருஷியாவை எதி
ர்த்து நின்றபோது அதன் பலம் மிக
வும் ஒடுங்கிப் போய், அநேகமாத கா
லம் வரை உபயோக மில்லாமல் போய்
விட்டது, ருஷியர் போர்முனையில்
வருமாறு ஆக்கிரமித்திருந்தது.

அது பால்டிக் கடற் கரையில் லீபா
என்னு மிடத்திற்கருகாமையிலிருந்து
பிரஷ்ஷியாவின் கிழக்கு பாகத்திலிரு
க்கும் எல்லைக்கு கொஞ்சம் கிழக்கே,
அந்த எல்லைக்குச் சரியாக நேராக
போய், பிறகு பாபர் என்னும் நதிக்
கும் நேரு என்னும் நதிக்கும் நேராக
மேற்கு திசையைநோக்கி சென்றது.
இந்த இடத்தில்அது விஸ்டுலாநதியை
கடந்து,தெற்கு திசையைநோக்கி திரு
ம்பி, ஜுராஎன்னும் நதி வழியாகவும்,
ராவா என்னு மிடத்தின் வழியாகவும்,
சென்று,காலிஷியாவின்எல்லையைநோ
க்கி தென் திசையாக சென்று டுனஜக்
என்னும் நதியோடு கூடவே கார்பேதி
யன் பிரதேசம் வரை சென்று அங்கு
மறுபடியும் கிழக்கு திசையை நோக்கி
திரும்பி பேஸ்ஸரேபியன் எல்லைக்கு
போய் சேர்ந்தது. ருஷியர் கார்பேத்தி
யன் மலையை கடந்து செல்லுவார்க
ளேயானல், அவர்களுக்கு ஏற்படும்
ஒரு பக்க வாட்டு படையை சத்துருக்
கள் எதிர்க்கவே முடியாமலிருக்கும்
ஆகையினல்ருஷியரைச்சேர்ந்த கார்ப்
பேதியன் போர்முனையை நோக்கி ஜெ
ர்மானியர் எதிர்க்க ஆரம்பித்தார்கள்.
இதற்காக, மிகவும் பலமான பீரங்கிப்
படை டுனஜக் என்னும் நதியோரமாக
தயார் செய்து நிறுத்தி வைக்கப்பட்
டது. மேலும், இந்த போர்முனை
யில் பத்து படைகளடங்கிய ஒரு பெரி
யசேனையும் கூட்டி வைக்கப்பட்டது.
ஜெர்மானியரின் வலது பக்க வாட்டுப்
படை கலிஷியாவுக்கு முன் நோக்கி
சென்றதனல், எப்ரல் மாதம் 28-ந்
தேதி இந்த பிரதேசத்தில் யுத்த நட
வடிக்கை ஆரம்பித்தது. சத்துருக்களு
க்கு சேனையில் ஜனங்கள் அதிக மாயி
ருப்பதனலும், பீரங்கிப்படை பலமா
யிருப்பதனலும், சில நாள்கள் கழி
த்து, டுனஜக்நதிக்கரையிலிருந்த ருஷி
யரின் படை வரிசை பிளக்கப்பட்டு,
அவர்கள் மிகுந்த சேதத்துடன் விஸ்
லோகா என்னும் பிரதேசத்திற்கு பின்
னடைந்து செல்லும்படி நேரிட்டது.
மே மாதம் 11-ந் தேதிக்குள் இந்த
வரிசையும் பிளந்து கொண்டு நுழைய
ப்பட்ட படியால் கார்ப்பேத்தியன் போ
ர் முனையின் பின்பாகம் அபாய மான
ஸ்திதியிலிருந்தது. ஆகையால், போர்
முனையின் இந்த பாகம் சங்கட மான
நிலைமைக்கு வந்து விட்டது. புதிய
வரிசையானது கார்ப்பேத்தியன் குன்
றின் அடிவாரத்தில் ஸான் நதியோர
மாககோவியோவா என்னுமிடத்திற்கு
போய்கொண்டிருந்தது. ஜெர்மானிய
ரின் முக்கியமான உத்தேசம் அதாவ
து ருஷியரை கார்ப்பேத்தியன்விலிரு
ந்து பின் தள்ளவேண்டுமென்பது இப்
பொழுது பூர்த்தியாகி விட்டது. ருஷி
யருக்கு மிகுந்த சேதம் விளைவிக்கப்
பட்டது. ஆனல் அவர்களுடைய
போர் முனை கொஞ்சமேனும் அசைக்
கப்படாமல் அப்படியே யிருந்தது

ஜெர்மானியரின் மிகுதி உத்தேசங்கள் நிறைவேற வேணுமென்றால், இந்தப் போர் முனையை முன்னதாக பிளக்கவேண்டும். ஸான் நதிக்கரையில் சண்டை மே மாதம் 15ந் தேதி ஆரம்பித்தது. இது நடுவே, போலண்டு பிரதேசத்தின் தென்பாகத்தில் ருஷியர், ஜோஸஃபு என்னுமிடத்தில் முன்னேறிச் சென்று கொண்டிருந்த ஆஸ்ட்ரியரை எதிர்த்து, மிகவும் கீர்த்தி பெறத்தக்கதாகவே பலனடைந்தார்கள். ஸான் என்னும் நதிக்கரையில் மறுபடியும் சண்டை ஆரம்பித்தது. ஜெர்மானியர் ஸான் நதியைக் கடந்து வடக்கிலிருந்து ரிஸமல் என்னும் கோட்டையை சூழ்ந்து கொண்டார்கள். தெற்கில், ஆஸ்டிரியரோ வென்றால், ருஷியருடன் மிகவும் கடுமையாக சண்டைசெய்து ரிஸிமல்லெம்பர்க் இருப்புப்பாதை பிரதேசத்திற்குவந்து சேர்ந்தார்கள். ஆகவே, ருஷியர்கள் இப்பொழுது நடந்துக்கொண்டிருக்கும் யுத்த நடவடிக்கைகளில் திறமையுடனே தப்பித்துக்கொண்டு வெளியே வந்து விட்ட போர் முனையின் அநேக முக்கியமான பாகங்களில் இந்த பாகம் தான் முதலாவது. இதை பிடித்துகொண்டிருக்க முடியவில்லை. ஜூன் மாதம் 2-ந் தேதி ஆஸ்ட்ரோ ஜெர்மானியர் அந்த கோட்டையை திருப்பிப் பிடித்துக் கொண்டார்கள். அடுத்தாப்போல் ருஷியர் ஆக்கிரமித்து கொண்ட இடமென்னவென்றால், நீஸ்டர் நதிக்கரை யோரமாய் கிழக்கே, க்ரோடேக் ஏறிக்கரையில் லெம்பர்க்குக்கு மேற்கே யுள்ள பிரதேசம். நீஸ்டர் நதிக்கரையிலிருந்த பக்கவாட்டு படையை எதிர்ப்பதற்கு ஆஸ்ட்ரியர் எத்தனித்து, ஸூரானோ என்னு மிடத்தில் அந்தப்படையைப் பிளந்து கொண்டு நுழைந்து, நதியைக் கடந்தார்கள். ஆனால், அவர்கள் மிகுந்த சேதமடைந்தவர்களாய், 15,000 பேரை கைதிகளாக இழந்து பின்னடைந்துசென்றார்கள். இந்தப் பிரதேசத்தில் ஆஸ்ட்ரியர் பலனடைந்ததினால், முக்கியமான சேனையின் நிலைமை மாறுபாடாக வில்லை, ஏனென்றால், சத்துருக்கள் முக்கியமாய் எதிர்த்த தெல்லாம், கிராடேக் பிரதேசத்திலும், ராவருஸ்கா என்னும் பிரதேசத்திலும் தான். வான்மாக்கன் ஸனின் ஏற்பாடு பிரகாரம் கனத்த பீரங்கிப் படை ராவருஸ்கா பிரதேசத்தில் விசேஷமாய்ச்சேர்த்து வைக்கப்பட்டு, ருஷியரின் நிலைமை மொத்தமும் மாற்றிவிடப் பட்டு, ருஷியரை லெம்பர்க் என்னும் பிரதேசத்தை விட்டு பின் செல்லும்படி செய்யப்பட்டது. ஜூன் மாதம் 22-ந் தேதி சத்துருக்கள் லெம்பர்க் நகரில் நுழைந்தார்கள். இது அவர்களுக்கு மிகவும் யுத்த சாதகமுள்ள முக்கியமான ஸ்தலமாயிருந்தது. க்னியா லிபா, ஸ்லோட லிபா, ஸ்டிரிபா, ஆகிய இந்த நதிகளின்மேலிருக்கும்படியான ஸ்தலங்களை ருஷியர் வசப்படுத்தி கொண்டார்கள். அங்கு சத்துருக்கள் முன்னேற்ற மடைவது தடுக்கப்பட்டது. ஆனால், லெம்பர்க் என்னும் ஸ்தலத்தை திருப்பிப் பிடித்து கொண்டது தான் காலிஷியாவில் நடந்த யுத்த நடவடிக்கைகளின் முடிவாகும்.

## பழைய நிலைமைதான் ஏற்பட்டது.

ஜெர்மானியருடைய வெற்றியின் பிரயோஜனங்கள் பிரமிக்கும்படி இருந்த போதிலும் எவ்விதமான முடிவையும் உண்டு பண்ணக் கூடியனவாயில்லை. மிகவும் அதிகமான சேதத்தை சத்துருக்கள் தங்களுடைய எதிரிகளுக்கு உண்டுபண்ணினது போல் தாங்களும் அதிகமான சேதத்தை அடைந்தனர். ஹங்கேரிநாட்டுக்கு ஏற்படக் கூடியதாயிருந்த பயத்தை ஒழித்து விட்டார்களாயினும், காலிஷியா நாட்டின் பெரும் பாகத்திலிருந்து ருஷ்யரை அப்புறப்படுத்தி விட்டார்களாயினும், யுத்தம் ஆரம்பமான காலத்தில் என்ன நிலைமையிருந்ததோ

அதே நிலைமைதான் மேற் சொன்ன நடவடிக்கைகளின் முடிவாகவும் ஏற்பட்டது. ருஷ்ய சேனைகள் இன்னும் உருக்குலையாமல்தான் இருந்தன; அவைகளை நசுக்கி விட்டாலொழிய ஆஸ்டிரிய ஜெர்மானியர் அடைந்து விட்ட சேதத்துக்குத் தக்க பலன் ஏற்படாது. ஆகையால்தான் போலண்டில் ருஷ்ய சேனையைத் தாக்க, சத்துருக்கள் ஆரம்பம் செய்தனர்.

## வார்ஸாவைப் பிடித்தல்.

இதுவரையில் ஜெர்மானியரும் ஆஸ்டிரியரும் செய்துவந்த நடவடிக்கைகள் தற்காப்பின் பொருட்டு நடத்தப்பட்டன வென்பது தெரிந்த விஷயம். அதாவது ஹங்கேரி நாட்டுக்கு அபாயமேற்படாமல் தவிர்க்கவும் தாங்கள் இழந்து விட்ட பூமியை மீட்டுக்கொள்ளவும் நடவடிக்கை நடத்தினார்கள். காலிஷியாவுக்குள் அவர்கள் பெருவாரியாக உட்சென்ற காரணத்தால், ருஷ்யப் போர்முனையில் ஒரு பலமான கோணம் ஏற்பட்டுவிட்டது. அந்தக் கோணத்தை அவர்கள் அழித்துவிட்டா லொழிய காலிஷியாவில் அவர்களுடைய போக்கு வரத்துப் பாதைகளுக்கு அபாயமுண்டாய் இவான் கிராடிலிருந்து ப்ரெஸ்டு-லிடாவ்ஸ்கு நகரை நோக்கி அவர்கள் முன் செல்வதானது ஆபத்தாய் விளையக் கூடும். போலண்டின் எல்லைப் புறத்தில் ருஷ்யப் போர் முனையில் ஏற்பட்டிருந்த கோணத்தை அழித்து விடுவதால், விஸ்டுலா நதியைக்கடந்து செல்லவும் வார்ஸா நகரைப் பிடித்துக் கொள்ளவும் கூடியதாயிருந்தது; அதனால் இதர தேசத்தாரின் அபிப்பிராயமானது அவர்களுக்கு அனுகூலமாக மாறக்கூடிய பெரிய சாதகமுமிருந்தது. ஆகையால் இரண்டு திக்கிலிருந்தும், அந்தக் கோணத்தின் இருபக்க வாட்டுகளையும் தாக்க சத்துருக்கள் தீர்மானித்துக்கொண்டனர். இந்த உத்தேசத்துடன் அவர்கள் நடவடிக்கைகளை ஆரம்பித்த பொழுது, போலண்டின் தென்பாகத்தில் கிழக்கு மேற்காக லுப்ளின், கோம் என்ற நகரங்களின் வழியாகச் செல்லும் ரயில் பாதையைப் பிடித்துக்கொள்வதற்கு வேண்டிய பிரயத்தனங்களைச் செய்ய ஆரம்பித்தனர். அந்த ரயில்பாதையானது வார்ஸா நகருக்கும் கோவல் நகருக்குமிடையில் குறுக்காகப் போவதால், ஜெர்மானியருடைய முக்கிய உத்தேசம் நிறை வேறுவதற்கு அவர்களுடைய வசமாக வேண்டியது வெகு அவசியம். ஆஸ்ட்ரிய ஜெர்மானியர் கிராஸ்னிக் என்ற பட்டணத்தை நோக்கி முன்செல்லுகையில், ஜூலை மாதத்தில் ருஷ்யரின் முக்கிய சேனையானது அவர்களுடைய முன்னேற்றத்தை மறித்து விட்டது. கிராஸ்னிக் நகரில் ஆஸ்ட்ரியர் பெரிய தோல்வியை அடையவே, அவர்களில் 15 ஆயிரம் துருப்புகள் சிறை பிடிக்கப்பட்டனர். இப்படி நடக்கையில் விஸ்டுலா நதிக்கரையில் ஜெர்மானியர், ருஷ்யரைப் பின்னுக்குத் தள்ளி, இவான்கிராடுக்கு வடக்கில் விஸ்டுலா நதியைக் கடந்து விட்டனர். இதே சமயத்தில் போலண்டின் வடபாகத்தில் பிராஸ்னிஸ் நகர்ப்புறத்திலும் இன்னும் வடக்கில் பால்டிக் மாகாணத்திலும் ஜெர்மானியர் பெரிய நடவடிக்கைகளை நடத்தி வந்தனர். ருஷ்யர் பிடிவாதமாய் சண்டை போட்டனராயினும், நேரு, பாபர் என்ற நதிக் கரையால் ஏற்பட்டிருந்த தங்களுடைய முக்கியமான காவல் ஸ்தலங்களுக்குப் பின்வாங்கி விட்டனர். ஜூலை மாதம் 23ந் தேதிக்குள், நேரு நதியைக் கடக்கக் கூடிய சிலதுறைகளை ஜெர்மானியர் தங்களுடைய பீரங்கி பலத்தால் பிடித்துக்கொண்டு, ருஷ்யப்போர் முனையில் ஏற்பட்டிருந்த கோணத்தைச் சில விடங்களில் அழித்து விட்டபடியால், வார்ஸாவிலிருந்து பீட்ரோகிராடுக்குப் போகும் ரயில் பாதைக்கு அபாய மேற்படக்கூடிய நிலைமை உண்டாய்விட்டது. தெற்கில், வான் மாக்கென்ஸன் என்ற

ஜெர்மன் தளகர்த்தர் தம்முடைய பிரங்கிபெருத்த படையைக் கொண்டு ருஷ்யர்களைத் தாக்கி,லுப்ளின்—கோம் ரயில் பாதைக்குத் தெற்கில் இருந்து கொண்டு தம்மை வழிமறித்து நின்ற ருஷ்ய சேனை ஜூலை 1ம் தேதிக்குள் பின் வாங்கி அப்பாதையை நெருங்கும் படி செய்து விட்டனர். அம்மாதக் கடைசிக்குள் ஜெர்மானியர் அப்பாதையையும் பிடித்து விட்டபடியால், வார்ஸாவைச்சுற்றி ருஷ்யர் இருந்து வந்த ஸ்தலங்களை ஒன்று அவர்கள் காலி செய்து உருக்குலையாமல் பின் வாங்க வேண்டும், அல்லது அவ்விடங்களிலேயே இருந்து இரு கங்கிலும் தங்களுடைய சேனை துண்டாக்கப் படக்கூடியதற்கு உட்படவேண்டும். காலி செய்து உருக்குலையாமல் பின் வாங்குவதே சிரேஷ்ட மென்று ருஷ்யர் தீர்மானித்தனராயினும், அந்தத் தீர்மானப்படி நடப்பதும் கஷ்டமாய் ஏற்பட்டு விட்டது. ஏனென்றால், நடுச்சேனை பின் வாங்கிச் செல்லும் வரையில் பக்கவாட்டுச் சேனைகளிரண்டும் சத்துரு சேனையை வழி மறித்து நிற்கக்கூடியவைகளாயிருக்கவேண்டும். நடுச்சேனை பின் வாங்கிப்போகவே இரண்டு வார காலம் செல்லும். நடந்த காரியங்களை விபரமாக நாம் சொல்ல சாவகாச மில்லை; ஆனால் நடுச்சேனை வார்ஸா பிரதேசத்தைக் காலி செய்து போகும் வரையில் இரண்டு பக்க வாட்டுச் சேனைகளும் சத்துரு சேனையை மறித்து நின்று, அசாத்தியமான காரியத்தைச்செய்து விட்டன.

### ருஷியப் போர்முனையில் மாறுதல்கள்

ஆகஸ்டு மாதத்தின் மத்திக்குள் ருஷ்யப்போர் முகம் நிமிர்ந்து பால்டிக் கடல் முதல் கோவ்னோ நகர் வரையிலும், அங்கிருந்து தெற்கே பக் நதிக்கரையை ஒட்டினாற் போலும் ஏற்பட்டு விட்டது. அந்தப் பக் நதியை வான் மாக்கென்ஸன் விலாடோவா என்ற ஸ்தலத்தில் கடந்து விட்டதால், அந்நதிக்கரையிலுள்ள பிரஸ்டுலிடாவ்ஸ்க் நகருக்கு அபாயமேற்படக் கூடிய நிலைமை ஏற்பட்டு விட்டது; ஆகையால் மேற்சொன்ன ஒழுங்கில் ருஷ்யர் தங்கி நிற்பது கூடாத காரியமாய் விட்டது இந்த சமயத்தில் ஜெர்மானியர் மறுபடி தாக்க ஆரம்பித்து, ஆகஸ்டு மாதம் 17-ந் தேதியன்று கோவ்னோ நகரைப்பிடித்துக் கொண்டு விட்டதால் ருஷ்யப்போர்முனை மறுபடியும் பின் வாங்க வேண்டியதாய் விட்டது; ஆகையால் ருஷ்யர் ப்ரஸ்டு-லிடாவ்ஸ்க் நகரைக் காலி செய்து எல்லாப் பக்கங்களிலும் பின் சென்றனர். இந்தச் சமயத்தில் ருஷ்ய சேனையின் மத்தியபாகம், பின்ஸ்க் என்ற பட்டணத்துக் கருகிலுள்ள சேற்றுப் பூமியிலிருந்து வந்தது. அங்கோ,பெரிய நடவடிக்கைகளை நடத்துவது கூடாத காரியமாகையால், ஜெர்மானியர் ரீகாவுக்கும் ப்ரஸ்டு-லிடாவ்ஸ்குக்கு மிடையிலேயே தங்களுடைய பிரயத்தனங்களை யெல்லாம்செய்யவேண்டியிருந்தது.பால்டிக் மாகாணத்தில் பிரடரிக்ஸ்டாடு என்ற இடத்தில் டுனு நதியைக் கடந்து விட அவர்கள் செய்த முயற்சி பலிக்கவில்லை. ருஷயப் போர்முனை நேர் ஒழுங்காகச் செல்லாமல் கோணமாக வளைந்து கொள்ளும்படி செய்து, அக்கோணங்களின் கால்களைத்துண்டித்து விட, பிறகு ஜெர்மானியர் செய்த பிரயத்தனங்களும் பலிக்க வில்லை. இவ்வாறு ஜெர்மானியர் செய்ய முயன்ற கிராட்னோ, வில்னு என்ற இடங்களிலிருந்து ருஷ்யர் தப்பித்துக் கொண்டு, தங்களுடைய போர்முனை மறுபடி நேராய் விடும்படி செய்து விட்டனர்.

### பிறகு நடந்த நடவடிக்கைகள்.

இதற்குள், ருஷ்யர் முதலிலடைந்த சிரமத்திலிருந்து தெளிந்து ஆங்காங்கு ஜெர்மானியரைப்பின் தள்ளுகிறதற்காக அவர்களை வலுவில் தாக்கக் கூடிய நிலைமைக்கு வந்து விட்டனர். காலிஷியாவில்தான் முதல் முதல் அப்ப

டிச் செய்ய ஆரம்பித்து, ஆஸ்டிரியர் வெகு சேதத்துடன ஸ்டிரிபா நதிக்கரைக்குப் பின் வாங்கும்படி செய்தனர். ஸெப்டம்பர் மாத ஆரம்பத்தில் ஜெர்மானியர் வில்னு நகரத்தைப் பிடித்தார்கள். இப்படி இருக்கையில், மேற் கரங்கத்தில் நேசக்கட்சியார் ஜெர்மானியரை வலுவில் தாக்கி வந்ததன் பலனாக ருஷ்யரை ஜெர்மானியர் நெருக்கிக் கொண்டிருந்தது சிறிது தணிந்தது; ருஷ்யருக்கு குண்டுகளில்லாக் குறையும் நிவர்த்தியாயிற்று.

ஆகையால் இனித்தாங்கள் முன் செல்லக் கூடாதென்று ஜெர்மானியர் அறிந்து கொண்டனர். ஆயினும் டுனா நதியைக் கடக்கவும் அங்கிருந்த ருஷ்ய சேனையை வளைத்துக் கொண்டு விடவும் ஜெர்மானியர் கடைசியாகஒரு முயற்சி செய்தனர்; ஆனால் அது பலிக்காமல் விசேஷச் சேதந்தான் அவர்களுக்கு ஏற்பட்டது.

அது முதல் அரண்களி லிருந்தபடி ஒருவர்மேல் ஒருவர் சுடுவதைத் தவிர கிழக்கரங்கத்தில் பெரிய நடவடிக்கைகள் எதுவும் நடக்கவில்லை; சிற்சில சமயங்களில் ஜெர்மானியரைப் பின்னுக்குத் தள்ள ருஷ்யர் வலுவில் தாக்கி யிருக்கிறார்கள். இம்மாதிரிச் செய்த முயற்சிகளின் பலனாக ருஷ்யர் ரீகா நகருக்கு மேற்குப் பக்கத்தில் போய் விட்டதால், அப்பட்டணத்துக்கு ஜெர்மானியரால் அபாயம் ஏற்படக் கூடாமல் செய்து விட்டனர். காலிஷியாவிலும், புகோவினா ஜில்லாவிலும் ருஷ்யர் சில நடவடிக்கைகளை நடத்தினாராயினும், அவைகளில் எதுவும் பெரிய திட்டத்தின்மேல் நடத்தப் பட்டதல்ல; சென்ற அக்டோபர் முதல் இன்று வரையில் கிழக்கரங்கம் அநேகமாக அமைதியாகவே இருந்து வந்திருக்கிறது.

இதுவரையில் இந்த உலகங் கண்டிராத பெரிய ராணுவ நடவடிக்கையின் விருத்தாந்தம் இவ்வாறாகும்; ஜெர்மானியர் வெற்றியடைந்தது உண்மையாயினும், அவர்களுடைய உத்தேசம் பலிக்காமற் போய்விட்டது. அவர்களுக்கு ச்சேதம் அதிகமாக ஏற்பட்டதேயல்லாமல் ருஷ்யாவை நசுக்கித்தாங்கள் சொல்லுகிற சமாதான நிபந்தனைகளுக்குக் அது கட்டுப்படும்படி செய் அவர்களுக்குக் கூடாமற் போய்விட்டது. அப்படிச் செய்தால் தான், நேசக்கட்சியை வெல்லக்கூடுமென்ற அவர்களுடைய நம்பிக்கை ஏமாற்றமாய் முடிந்து விட்டது.

## யுத்த கடன்கள்.

கிரேட் பிரிட்டன், ஜெர்மனி, யுத்தத்தி லிருக்கிற மற்ற தேசங்கள் ஆகிய இவைகள் வாங்கி யிருக்கும் கடன்.

1915ம் வருஷம் அக்டோபர்மாதம 15-ந் தேதி வரை யுத்தத்தில் சம்பந்தப்பட்டிருக்கிற தேசங்கள் 4,377,000,000 பவுன்களு க்கு மேலாகவே கடன் வாங்கி யிருக்கின்றன. இந்த மொத்தக் கடனை எந்தெந்த தேசங்கள் எவ்வளவு வாங்கிற்று என்னும் விவரம் பின்வருமாறு:—

| | |
|---|---|
| கிரேட் பிரிட்டன் | 1,000,000,000. |
| பிரான்சு | 1,070,000,000. |
| ருஷியா | 600,000,000. |
| இடாலி | 99,000,000. |
| ஜெர்மனி | 1,274,500,000. |
| ஆஸ்டிரியா | 333,500,000. |
| மொத்தம், | 4,377,000,000. |

இந்த யுத்தத்திற்கு முந்தி, தேசத்தி லிருந்தே ஜாஸ்திக் கடனைவாங்கினது பிரான்சு தேசமாகும். 1871 வருடத்தில் 12-கோடி பவுன் 1872-வருடத்தில் 8-கோடி பவுன் இந்த 20-கோடி பவுன்களும் ஜெர்மனியுடன் பிரான்சு சண்டை போட்டதில் நஷ்டஈடுசெய்ய வேண்டியதற்காக கடன் வாங்கப்பட்டனவாகும்.

## வியாபாரக் கப்பல்களின் சேதம்.

கடலடைப்புக்கு முந்தி சத்துருவின் சப்மரீன்களால் முழுகடிக்கப்பட்ட பிரிட்டிஷ் வியாபாரக் கப்பல்களின் சங்கியை பிரிட்டிஷ் உத்தியோக முறை தாஸ்தாவேஜ்களின்படி கீழே கண்டமாதிரி இருந்தது.

| | | | சங்கியை |
|---|---|---|---|
| அக்டோபர் மாதம் 21-ந் தேதி வாரக்கடைசியில் | | | 1 |
| நவம்பர் | 25 | வாரக்கடைசியில் | 1 |
| டிசம்பர் | 2 | ,, | 1 |
| ஜனவரி | 27 | ,, | 1 |
| பிப்ரவரி | 3 | ,, | 6 |
| பிப்ரவரி | 10 | ,, | 0 |
| பிப்ரவரி | 17 | ,, | 1 |

கடலடைப்புக்கு முந்தி 11 கப்பல்கள் முழுகடிக்கப்பட்டன.

பிப்ரவரி மாதம் 24-ந் தேதியுடன் முடிவாகிற வாரக்கடைசி முதல் அக்டோபர் 13-ந் தேதியுடன் முடிவாகிற வாரக்கடைசி வரையில் ஒவ்வொரு வாரமும் முழுகடிக்கப்பட்ட கப்பல்களின் விவரம்.

| | | | சங்கியை |
|---|---|---|---|
| பிப்ரவரி | 24 | வாரக்கடைசியில் | 7 |
| மார்ச்சு | 3 | ,, | 0 |
| மார்ச்சு | 10 | ,, | 4 |
| மார்ச்சு | 17 | ,, | 8 |
| மார்ச்சு | 24 | ,, | 8 |
| மார்ச்சு | 31 | ,, | 6 |
| ஏப்ரல் | 7 | ,, | 5 |
| ஏப்ரல் | 14 | ,, | 2 |
| ஏப்ரல் | 21 | ,, | 1 |
| ஏப்ரல் | 28 | ,, | 1 |
| மே | 5 | ,, | 5 |
| மே | 12 | ,, | 6 |
| மே | 19 | ,, | 2 |
| மே | 26 | ,, | 1 |
| ஜூன் | 2 | ,, | 8 |
| ஜூன் | 9 | ,, | 9 |
| ஜூன் | 16 | ,, | 7 |
| ஜூன் | 23 | ,, | 3 |
| ஜூன் | 30 | ,, | 7 |
| ஜூலை | 7 | ,, | 10 |
| ஜூலை | 14 | ,, | 4 |
| ஜூலை | 21 | ,, | 0 |
| ஜூலை | 28 | ,, | 3 |
| ஆகஸ்டு | 4 | ,, | 7 |
| ஆகஸ்டு | 11 | ,, | 2 |
| ஆகஸ்டு | 18 | ,, | 13 |
| ஆகஸ்டு | 25 | ,, | 20 |
| செப்டம்பர் | 1 | ,, | 4 |
| செப்டம்பர் | 8 | ,, | 12 |
| செப்டம்பர் | 15 | ,, | 3 |
| செப்டம்பர் | 22 | ,, | 2 |
| செப்டம்பர் | 29 | ,, | 6 |
| அக்டோபர் | 6 | ,, | 8 |
| அக்டோபர் | 13 | ,, | 4 |

இன்னும் 7 கப்பல்கள் உடைக்கப்பட்டன. ஆனால் இவைகள் துறைமுகம் சேர்ந்து விட்டன.

மேற்சொன்ன காலத்தில் 183 கப்பல்கள் முழுகடிக்கப் பட்டன. தவிரவும் 144 பிரிட்டிஷ் மீன்கப்பல்களும் நாசமாக்கப் பட்டன

ஆகஸ்டு மாதம் 25-ந் தேதியோடு முடிவாகிற வாரத்தில் தான் அதிக பளுவுள்ள அதாவது 79727 டன் நிறையுள்ள சாமான்களை எடுத்துக் கொண்டு போகக்கூடிய கப்பல்கள் முழுகடிக்கப் பட்டன.

ஒரு வாரத்தில் கிரேட் பிரிட்டனுக்கு வந்து போகும் கப்பல்களின் சராசரி சங்கியை 1400 ஆகையால், சேதம் ஜாஸ்தியென்று சொல்லக்கூடாது.

## யுத்தம் ஆரம்பித்த தேதிகள்.

பற்பல தேசங்களும் யுத்தந் தொடங்கிய தேதிகளின் விவரங்களைக் கீழே காணலாம்.

1914-வருடம் ஜூலை 28-தேதி ஸெர்வியாவின் பேரில் ஆஸ்டிரியா யுத்தம் தொடங்கியது.

ஆகஸ்டு 1-தேதி ருஷியாவின்மீது ஜெர்மனி யுத்தமென்று வெளிப்படுத்தியது

ஆகஸ்டு 2-தேதி பெல்ஜியத்துடன் ஜெர்மனி சண்டை ஆரம்பித்தது.

ஆகஸ்டு 3-தேதி பிரான்சுடன் யுத்தமென்று ஜெர்மனி வெளிப்படுத்தியது.

ஆகஸ்டு 4-தேதி கிரேட் பிரிட்டன் ஜெர்மனியுடன் யுத்தம் வெளிப்படுத்தியது.

ஆகஸ்டு 10-தேதி ஆஸ்டிரியாவுடன் பிரான்ஸ் யுத்தம் ஆரம்பித்தது.

ஆகஸ்டு 12-தேதி கிரேட்பிரிட்டன் ஆஸ்டிரியாவின்மீது யுத்தமென்று வெளிப்படுத்தியது.

ஆகஸ்டு 23-தேதி ஜப்பான் தேசமானது ஜெர்மனியுடன் யுத்தமென்று வெளிப்படுத்தியது.

நவம்பர் 5-தேதி துருக்கியுடன் யுத்த மென்று கிரேட்பிரிட்டன் வெளிப்படுத்தியது.

1915-ம் வருஷம் மே மாதம் 23-ந் தேதி ஆஸ்ட்ரியாவின்மீது யுத்தமென்று இடாலி தெரிவித்தது.

ஆகஸ்டு 21-ந் தேதி துருக்கியுடன் யுத்த மென்று இடாலி தெரிவித்தது.

அக்டோபர் 4-ந் தேதி ருஷியாவானது பல்கேரியாவுக்கு இறுதிச்சுடிதமனுப்பியது.

## ஜெர்மானியர் வசப்படுத்திக்கொண்ட பிரஞ்சு பூமி.

பிரான்சு தேசத்தில் ஜெர்மானியர் கை வசப்படுத்திக்கொண்ட ஸ்தல விபரம்:—
மொத்தம் 390 லட்சம் ஜன சங்கியையில் சுமார் 90 லட்சம் ஜனசங்கியை யடங்கின பிரதேச இடங்கள் ஜெர்மனியின் வசமிருக்கின்றன.

பேர்போன பிரெஞ்சு ஜனத் தலைவரான எம். ஹென்ரி பிரெங்சர் என்பவர் அடியில் கண்டசங்கதிகளைச் சொல்லுகிறார்.

பிரெஞ்சு உலோகத் தொழிலில் 100-க்கு 77 பங்கு தொழில்களுள்ள இடம் ஜெர்மனியின் வசமிருக்கிறது.

பிரெஞ்சு யந்திர சாலைகளில் 100-க்கு 34 பங்கு சாலைகளுள்ள இடம் ஜெர்மனி வசமிருக்கிறது.

பிரான்சில் நிலக்கரி கனிகளையுடைய இடங்களில் 100-க்கு 68 பாகம் ஜெர்மனி வசமிருக்கிறது.

பிரான்சில் சுட்ட நிலக்கரி விளையுமிடத்தில் 100க்கு 7½ பாகம் ஜெர்மனி வசமிருக்கிறது.

பிரான்சில் எஃகு விளையுமிடத்தில் 100-க்கு 70 பாகம் ஜெர்மனி வசமிருக்கிறது.

ஜெர்மனியின் வசமிருக்கிற பூமியில் பருத்தித்தொழிற் பிரதேசங்களிருக்கின்றன. இதற்கு பிரெஞ்சு லங்காஷயர் என்று பெயர். இதில் இருக்கும் லில்லி என்னும் நகரை இங்கிலாந்திலுள்ள மஞ்செஸ்டர் நகருக்கு ஒப்பிடுகிறார்கள். ஜெர்மானியரின் வசமிருக்கும் பிரதேசங்களிலே, பெல்ஜியத்தில் எவ்வளவு ஜனசங்கிகள் உண்டோ அவ்வளவு ஜனங்கள் இருக்கிறார்கள்.

## யுத்தத்தில் நடந்த சில்லரை கடற்படை சங்கதிகளை அடியிற் காணலாம்.

1914 அக்டோபர் 17-ந் தேதி ஜெர்மன் டெஸ்டிராயர் என்ற யுத்த கப்பல் இனுசைச் சேர்ந்த நான்கு ஜெர்மன் கப்பல்கள் பிரிட்டிஷ் டெஸ்டிராயர்களால் முழுகடிக்கப் பட்டன.

அக்டோபர் 18—பெல்ஜியம் தேசத்து சமுத்திரக்கரையை பிரிட்டிஷ் கப்பல்கள் முற்றுகை போட்டது. அது நவம்பர் மாதம்வரை நடந்தது.

அக்டோபர் 24 ஒரு ஜெர்மன் சப்மெரீன் பாட்ஜர் என்னும் கப்பல்தாக்கி முழுகடித்த தாகச் சொல்லப்பட்டது.

அக்டோபர் 31 டோவர் ஜல சந்தியில் ஹெர்ம்ஸ் என்ற பிரிட்டிஷ் யுத்த கப்பல் டார்ப்பிடோ வெடியினால் உடைக்கப்பட்டது.

நவம்பர் 10—கீழ் ஆபிரிக்கா ரூபிஜி ஆற்றில் கோனிக்ஸ்பர்க் என்னும் ஜெர்மன் கப்பல் தரைதட்டிப் போயிற்று.

நவம்பர் 11 இங்கிலீஷ் கடலில் நைகர், என்ற பிரிட்டிஷ் பீரங்கிபடகு டார்ப்பிடோவினால் உடைக்கப்பட்டது.

நவம்பர் 23 U. 18 என்ற ஜெர்மன் சப்ரின் கப்பல் முழுகடிக்கப்பட்டது கப்பலிலிருந்தவர்கள் காப்பாற்றப்பட்டார்கள்.

1914 நவம்பர் 26— புல்வார்க் என்னும் பிரிட்டிஷ் கப்பல் வெடித்து நாசமாய் விட்டது.

டிசம்பர் 11 ப்ரீட்ரிச் கார்ல் என்னும் ஜெர்மன் கப்பல் நஷ்டமாய் விட்டதாக தெரியப்படுத்தப்பட்டது.

1915 ஜனவரி 1—ஒரு சப்மரினால் பார்மிடேபில் என்னும் பிரிடிஷ் யுத்தக் கப்பல் முழுகடிக்கப் பட்டது.

ஜனவரி 20—விக்னோர் என்னும் பிரிட்டிஷ் கப்பல் உடைக்க பட்டது அதிலிருந்தவர்கள் எல்லாரும் இறந்து போனார்கள்.

பிரவரி 1 அஸ்ரேரியால் என்னும் ஆஸ்பத்திரிக்கப்பலை ஒரு ஜெர்மன் சப்மரீன் உடைக்க எத்தனப்பட்டது.

பிப்ரவரி 24—ஆயுதந் தரித்த க்ளான்மகுடன் என்னும் பிரிட்டிஷ் சப்பல் இழக்கப்பட்டதாக தெரிவிக்கப்பட்டது.

ப்ரவரி 27 - யுனைடெட் ஸ்டேட்டில் காழிப்புக்கு வைக்கப்பட்டிருந்ததும் ஒரு ஜர்மன் அமெரிக்கனுல்வாங்கப்பட்டு ஆகாரத்துடன் ஜெர்மனிக்கு அனுப்பப்பட்டது ன உப எஸ் ஸ்டீமர் டாஷியா என்பது பிரெஞ்சு க்ரூஸரினுல் பிடிக்கப்பட்டு. பிறகு கவர்ன்மெண்டால் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

1915 பிப்ரவரி 28—ஒரு ஜெர்மன் சப்மரீன், தாராய்ஸ் என்னும் கப்பலால் தாக்கப்பட்டது. பிறகு முழுகிப்போய் விட்டதாகத் தெரியப்படுகிறது.

மார்ச்சு 4—U. 8 என்ற ஜெர்மன் சப்மரீன் இங்கிலீஷ் (சானலில்) கடலில் தாக்கப்பட்டு முழுகடிக்கப்பட்டது. அதிலிருந்தவர்கள் பிடிக்கப்பட்டார்கள்.

மார்ச்சு 5—நேசக் கடற்படையினுல் துருக்கியிலுள்ள ஸ்மரினு நகரம் தகர்க்கப்பட்டது.

மார்ச்சு 10—U. 12 என்னும் ஜெர்மன் சப்மரின் ஏரியல் என்னும் கப்பலால் தாக்கப்பட்டு முழுகடிக்கப்பட்டது.

மார்ச்சு 12—ஆயுதபாணியா யிருந்த பாயினு என்ற சத்துருக் கப்பல் உடைக்கப்பட்டுப் போனதாக அட்மிரால்டியால் தெரிவிக்கப்பட்டது.

மார்ச்சு 25— U 29 என்ற ஜெர்மன் சப்மரின் யுத்தக் கப்பல்களால் முழுகடிக்கப்பட்டது.

மார்ச்சு 28—U 28 என்ற ஜெர்மன் சப்மரினுல் பலாபா கப்பல் முழுகடிக்கப்பட்டது. யுத்தத்தில் சம்பந்தப்படாத 112 பேர்கள் அதில் கொல்லப் பட்டார்கள்.

மார்ச்சு 30 ஒரு பிரெஞ்சு க்ரூஸர் ஒரு சப்மரீனை மோதி முழுகடித்தது.

ஏப்பிரல் 3—கருங்கடலில் மெட்ஜிடே என்னும் துருக்கி க்ருய்ஸர் சுரங்கத்தினுல் முழுகடிக்கப்பட்டது.

ஏப்பிரல் 17—பிரிட்டிஷ் டிரான்ஸ் போர்ட் கப்பல் மாணிடன் என்பதை, ஏஜியன் கடலில் துருக்கி யுத்த கப்பலாகியஹிஸ்ஸார் என்பது உடைத்து நாசமாக்கிவிட்டது. 51 பேர்கள் முழுகிப் போனுர்கள்.

மே 1—ஹாலண்ட் தேசத்து சமுத்திரக் கரைக்கு அப்பால் ஒரு ஜெர்மன் சப்மரீனுல், ரிக்ரூட் என்னும் நாசகாரி முழுகடிக்கப்பட்டது. 2 ஜெர்மன் டார்பிடோ படகுகள் பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்களால் முழுகடிக்கப்பட்டன.

மே 7—லூஸிடானியா என்னும் கப்பல், ஒரு ஜெர்மன் சப்மரீனுல் முழுகடிக்கப் பட்டது.

ஜூன் 10—10, 12 நெம்பர்களுள்ள டார்பிடோ படகுகள் கீழ் கரைக்குத் தூரமாய் ஒரு ஜெர்மன் சப்மரீனுல் முழுகடிக்கப்பட்டது.

ஜூன் 28—வின்டா என்ற ருஷியத் துறைமுகத்தை கப்பல் படை தகர்த்தது.

ஜூன் 30—டிஸ்டிராயர் லட்னிங் என்பது சுரங்கத்தினுல் நாசமாக்கப்பட்டது.

ஜூலை 4—ஜெர்மன் க்ரூஸர் கோனிக்ஸ்பர்க் ரூபிஜிஆற்றில் பிட்டிஷ்மானிட்டர் கப்பல்களால் நாசமாக்கப் பட்டது.

ஜூலை 26—ஒரு ஜெர்மனி வட கடலில் ஒரு பிரிட்டிஷ் சப்மரீனுல் முழுகடிக்கப் பட்டது.

ஜூலை 27—டார்டெனல்ஸ் ஜலசந்தியில் மாரியாட் என்னும் ப்ரெஞ்சு சப்மரீன் முழுகடிக்கப் பட்டது.

ஆகஸ்டு 8—வடகடலில் உலாவித்திரிந்து கொண்டிருந்த ராம்ஸே கப்பலை ஆயுதபாணியாயிருந்த ஒரு ஜெர்மனி மேடியார் என்னும் கப்பல் முழுகடித்தது. பிரிட்டிஷ் க்ரூய்ஸர்கள் சமீபத்தில் வரவே மேடியார் விட்டு விடப் பட்டது. நார்வே கடலில் ஒரு ஜெர்மன் சப்மரீனுல் ஆயுதபாணியா யிருந்த இந்தியா என்ற கப்பல் முழுகடிக்கப் பட்டது.

ஆகஸ்டு 9—வடகடலில் சுரங்கத்தினுல் பிரிட்டிஷ் டிஸ்டிராயர் லின்க்ஸ் என்பது முழுகடிக்கப் பட்டது.

ஆகஸ்டு 11:—ஒரு இடாலி சப்மரீனுல் ஆஸ்டிரியன்சப்மரீன் முழுகடிக்கப்பட்டது.

ஆகஸ்டு 13—ஒரு ஆஸ்டிரியின் சப்மரீன் பிரெஞ்சுக் காரர்களாலும் இடாலியர்களாலும் முழுகடிக்கப் பட்டது.

ஆகஸ்டு 16—ஒரு ஜெர்மன் சப்மரீன் வைட் ஹேவன், கம்பெர்லண்ட் என்னுமிடங்களிலுள்ள கடற்கரையை குண்டுகள் போட்டு சுட்டது.

ஆகஸ்டு 19—டென் மார்க் சமுத்திரக் கரையில் பிரிட்டிஷ் சப்மரின் இ 13 தரை தட்டியது. ஜெர்மானியர்களால் குண்டுகள் போட்டு சுடப்பட்டது. கப்பலிலிருந்தவர்கள் தண்ணீரில் குண்டுபோட்டு சுடப் பட்டார்கள்,

ஸெப்பளீன்களால் 1915-ம் வருஷத்திய சேதம்.

ஜெர்மானியரின் ஆகாய ரதமாகிய ஸெப்ளீன்களால் காயமடைந்தவர்களுடையவும், கொல்லப்பட்டவர்களுடைய்வும் கணக்கு கீழே குறிக்கப்பட்டிருக்கிறது.

| தேதி. | தாக்கப்பட்ட இடங்களின் விவரம். | கொல்லப்பட்டவர்களின் மொத்தம். | காய மடைந்தவர்களின் மொத்தம். |
|---|---|---|---|
| 19–ஜனவரி ... | யார்மத், லின். ஜில்லா. ... | 4 | 9 |
| 14–ஏப்ரல் ... | டினிஸைட். ... | 0 | 2 |
| 16– ,, ... | லோஸ்டாப்டும் கீழ்கரையும். ... | 0 | 0 |
| 10–மே ... | ஸௌதெண்ட். ... | 1 | 0 |
| 17– ,, ... | ராம்ஸ்கேட். ... | 2 | 8 |
| 27– ,, ... | ஸௌதெண்ட். ... | 3 | 0 |
| 31– ,, ... | லண்டன் வெளிப்புறம். ... | 6 | 0 |
| 4—ஜூன் ... | கீழ் தென்கிழக்குக் கரைகள். ... | 0 | 0 |
| 6— ,, ... | கீழ்கரை. ... | 24 | 40 |
| 13– ,, ... | வடகிழக்குக் கரை. ... | 16 | 14 |
| 9—ஆகஸ்ட் ... | கீழ்கரை. ... | 15 | 14 |
| 12– ,, ... | கீழ்கரை. ... | 6 | 23 |
| 17– ,, ... | கீழ் ஜில்லாக்கள். ... | 10 | 36 |
| 7—செப்டம்பர் ... | கீழ் ஜில்லாக்கள். ... | 17 | 39 |
| 8— ,, ... | கீழ் ஜில்லாக்களும் லண்டன் ஜில்லாவும் ... | 38 | 124 |
| 11– ,, ... | கீழ்கரை. ... | 0 | 0 |
| 12– ,, ... | கீழ்கரை. ... | 0 | 0 |
| 13– ,, ... | கீழ்கரை. ... | 0 | 0 |
| 13–அக்டோபர் ... | லண்டனும் கீழ் ஜில்லாக்களும். ... | 55 | 114 |
| | மொத்தம். ... | 197 | 423 |

இந்த மொத்தத்தில் கொல்லப்பட்டவர்களில் 39 பேர் தவிர மற்றவர்களெல்லோரும் யுத்தத்தில் சம்பந்தப்படாதவர்கள். செப்டம்பர் மாதம் 13-ந்தேதி கெண்ட் ஜில்லா சமுத்திரக் கரையில் ஒரு ஆகாய விமானக் கொள்ளையில் 7 பேர்கள் காயமடைந்தார்கள்.

# ..மகாயுத்தத்தின் விருத்தாந்தம்.

[ஐரோப்பிய மகாயுத்த புத்தகத்தின் ஆசிரியரான
டி. எஸ். விசுவநாத அய்யர், பி. ஏ., எழுதியது.]

### யுத்தத்தின் காரணங்கள்.

ஆஸ்டிரிய சக்கரவர்த்தியின் மறுமகனும் ஆஸ்டிரிய ஏகாதிபத்யத்தின் இளவரசருமாகிய ஆர்ச் டியூக் பிரான்ஸிஸ் பர்டினன்ட் 1914-ம் வருஷம் ஜூன் மாதம் பாஸ்னியா மாகாணத்தில்தமது துருப்புகளைப் பார்வையிடப்போனார். 28ந்தேதியன்று அந்தமாகாணத்தின் முக்கிய ஸ்தலமாகிய ஸராஜிவோ நகரத்தில், இளவரசரும் அவருடைய மனைவியும் ஊர்வலஞ் சென்று கொண்டிருக்கையில் ஒரு ஸெர்வியனால் அவ்விருவரும் சுடப்பட்டு மாண்டுபோனார்கள். இக்கொலை சம்பவத்தின் பலனாக ஐரோப்பா கண்டத்தில் உதிரப் பிரவாகம் பெருகு மென்று அப்போது எவர் எதிர்பார்த் திருப்பார்கள்? சுமார் ஒரு மாத காலத்திக்குப் பிறகு ஆஸ்டிரிய கவர்ன்மெண்டார் ஸெர்விய கவர்ன்மெண்டாருக்கு முடிவான கடிதமொன்று அனுப்பினார்கள்; ஆஸ்டிரிய ராஜாங்கத்துக்கு விரோதமாய் சதியாலோசனைகள் ஸெர்வியாவில்செய்யப்பட்டு வந்தனவென்றும், அந்த யோசனைகளுக்கு ஸெர்விய கவர்ன்மெண்டார் உடந்தையாயிருந்தார்களென்றும் ஆஸ்டிரிய கவர்ன்மெண்டார் குற்றஞ் சாட்டினார்கள். ஆகையால் அக்கடிதத்தில் அறிவித் திருந்த மாதிரி ஸெர்விய கவர்ன்மெண்டார் அக்குற்றத்துக்குப் பரிகாரம் செய்ய ஒப்புக்கொண்டு 48-மணி நேரத்துக்குள் பதில் அனுப்பவேண்டுமென்று ஆஸ்டிரிய கவர்ன்மெண்டார் அவர்களுக்கு அறிவித்தார்கள். ஸெர்வியா அனுப்பின பதில் ஆஸ்டிரியாவுக்குத் திருப்தி கொடுக்கவில்லை. ஜூலை 28ந் தேதியன்று ஸெர்வியாவின் மீது யுத்தம் தொடங்குவதாக ஆஸ்டிரியா அறிவித்தது. அதற்குள்ளாக அவ்விரண்டு தேசங்களின் விவகாரங்களில் மற்ற வல்லரசுகளெல்லாம் பிரவேசிக்கவே ஐரோப்பாவின் நிலைமை மிக்க கவலைக்கிடமாகி விட்டது. ருஷியாவும் ஜெர்மனியும் என்ன செய்யுமென்று ஐரோப்பா முழுவதும் பேச்சாக விருந்தது. ருஷிய கவர்ன்மெண்டார் தங்களுடைய சுஜாதிகளாகிய ஸ்லாவ் ஜனங்கள் வசிக்கும்படியான ஸெர்வியா தேசத்துக்கு ரக்ஷகர்களாக முன் வந்தார்கள்; அவர்கள் ஆஸ்டிரியாவின் நடவடிக்கைகளுக்கு ஆக்ஷேபித்தார்கள். ஸெர்வியா கக்ஷியில் ருஷியா சேர்ந்துகொண்டு யுத்தஞ் செய்தால், ஆஸ்டிரியாவுக்கு ஜெர்மனி துணைசெய்ய உடன் படிக்கையால் கட்டுப்பட் டிருக்கிறது. அவ்வாறு ஜெர்மனியும் ஆஸ்டிரியாவும், ருஷியாவுடன் யுத்தம் தொடர்ந்தால், ருஷியாவுக்கு பிரான்ஸூம் கிரேட் பிரிட்டனும் உதவிசெய்வார்கள். ஏனெனில் பின்சொல்லிய மூன்று ராஜ்யங்களும் ஒன்றையொன்று ஆதரிப்பதாக ஓர் உடன்படிக்கையில் ஏற்பாடு செய்து கொண்டிருக்கின்றன. ஆகையால் ஆஸ்டிரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் நடந்த தகராறு பெரிய ஐரோப்பா யுத்தமாக மாறும் போலிருந்தது.

### யுத்த முயற்சிகள்.

ஐரோப்பாவின் நிலைமை எவ்வளவு சீக்கிரமாய் மாறிய தென்பதையும், யுத்தக்கிளர்ச்சி ஐரோப்பிய வல்லரசுகளை எவ்வளவு விரைவாய்ப் பீடித்த தென்ப

ளைதயும் கவனிக்கவேண்டும். ஜூலை 23-ந் தேதி ஆஸ்டிரியா, ஸெர்வியாவின் மீது குற்றங்கண்டு கடிதம் அனுப்பிற்று. பிறகு ஐந்து தினங்களுக்குள்ளாக அதாவது 28-ந்தேதி ஆஸ்டிரியா, ஸெர்வியாவின்மீது யுத்தந்தொடங்குவதாக அறிவித்தது. இந்த யுத்த அறிவிப்பைக் கண்ட மறுதினமே (29-ந்தேதி) ருஷியா, ஆஸ்டிரியாவின் எல்லைக்கருகிலுள்ள தன்னுடைய சேனையை யுத்தத்துக்குத் தயாராகும்படி உத்தரவிட்டது. ஆஸ்டிரியாவுக்கும் ஸெர்வியாவுக்குமிருந்த தகராறில் ருஷியா அவ்வாறு யுத்த ஸன்னத்தமாய்ப் பிரவேசித்தவுடனே, மற்ற வல்லரசுகளெல்லாம் வெகு விரைவாய் யுத்தச் சுழலில் இழுக்கப்பட்டனர். ருஷியாவின் ராணுவ உத்தரவைக்கண்டவுடனே ஆஸ்டிரியா, 30-ந்தேதி தன்னுடைய படைகளையெல்லாம திரட்ட ஆரம்பித்தது. மறுதினம் 31-ந்தேதி ருஷியா தன்னுடைய ஏகாதிபத்தியத்திலுள்ள சேனைகளையெல்லாம் கூட்ட உத்தரவு செய்தது. தக்ஷணமே ஜெர்மனி, ருஷியாவுக்கும் பிரான்ஸுக்கும் இறுதிக் கடிதம் அனுப்பி மறுதினம் யுத்தம்தொடங்குவதாக அறிவித்தது. ஆகவே, ஆஸ்டிரியா ஸெர்வியாவின் மீது யுத்தந்தொடங்கி நான்கு தினங்கள் ஆவதற்குள்ளாக நான்கு வல்லரசுகள் ஆயுத பாணிகளாய் யுத்தத்துக்குக் கிளம்பிவிட்டனர். இந்த மகா யுத்தத்தில் கடைசியாகக் கலந்துகொண்டது கிரேட் பிரிட்டன். பிரிட்டிஷ் கடற்படைக்கு அஞ்சி அத்தேசத்தை யுத்தத்தில் கலக்காமலிருக்கச்செய்வதற்கு ஜெர்மனி பல முயற்சிகள் செய்தும் அதன் நோக்கம் நிறைவேறவில்லை. இந்த யுத்தத்தில் எவ்விதத்திலும் சம்பந்தப்படாத பெல்ஜிய தேசம் வல்லரசுகளால் படையெடுக்கப்படமாட்டாதென்று உறுதிகொடுக்கப்பட்டிருந்தும், அந்த வல்லரசுகளில் ஒன்றாகிய ஜெர்மனி பெல்ஜியத்தின் மீது தன் படைகளைச் செலுத்தியது. அந்த காரணமாக கிரேட்பிரிட்டன் யுத்தம் தொடங்கியது. அது வரையில் ஐரோப்பாவில் சமாதானம் நிலைத்திருப்பதற்காக, கிரேட்பிரிட்டன் பலவிதமாய் முயன்று வந்தது. ஆனால் பெல்ஜியத்தின் நடுநிலைமை ஜெர்மானியரால் கெடுக்கப்பட்டவுடன், அந்தக் காரணத்தைக் காட்டி கிரேட்பிரிட்டன் ஆகஸ்ட் 4-ந் தேதி யுத்தத்தில் கலந்துகொண்டது.

ஆகவே, 1914-ம் வருஷம் ஆகஸ்ட் மாத ஆரம்பத்தில் தொடங்கிய இந்த மகாயுத்தத்தில், ஜெர்மனியும் ஆஸ்டிரியாவும் ஒரு கக்ஷியில் சேர்ந்திருக்க, ருஷியா, பிரான்ஸ், கிரேட் பிரிட்டன், ஸெர்வியா பெல்ஜியம் ஆகிய இந்த நேசராஜ்யங்கள் எதிர்க் கக்ஷியாகச் சேர்ந்திருந்தன.

### யுத்தக்கக்ஷிகளின் ராணுவபலம்.

யுத்தம் தொடங்கியவுடனே, அந்தந்த தேசங்களில் வைக்கப்பட்டிருந்த நிரந்தரமான துருப்புகள்தான் யுத்தஞ் செய்வதற்கு புறப்படமுடியும். யுத்தத்துக்கு முன்னால் அதாவது சமாதான காலத்தில் வைக்கப்பட்டிருந்த சேனைதான் காலதாமஸமின்றி யுத்த நடவடிக்கைகளை ஆரம்பிக்க முடியும். எல்லா தேசங்களிலும் ஏராளமான மூலபலங்கள் இருக்கின்றன. சமாதான காலத்தில், சாமான்ய ஜனங்கள் சேனையில் சொற்பகாலம் அமர்ந்து ராணுவப் பயிற்சி பெற்றபிறகு அவர்கள் ராணுவத்தினின்றும் விலகி, தங்களுக்கு வழக்கமாயுள்ள பற்பல வழிகளில் ஜீவனஞ் செய்கிறார்கள். ஆகையால் ஐரோப்பிய தேசங்களில் திடகாத்திரமுள்ள ஒவ்வொருவனும் சிறிது ராணுவப்பயிற்சி பெற்றவனாவான். இவர்களெல்லோரும் மூலபலங்களாகக் கருதப்படுவார்கள். ஆனால் திடீரென்று யுத்தம் தொடங்கியவுடன், மூலபலத்தை யுத்தத்துக்கு அனுப்ப சாத்தியப்படாது. ஏனெனில் அவர்கள் ராணுப்பயிற்சியை மறந்துவிட்டிருப்பார்களாகையால் அவர்களை

மறுபடியும் சொற்பகாலம் சேனையில் பழக்கவேண்டும்; மேலும், அவர்களுக்குத் தேவையான உடைகள் ஆயுதங்கள், உணவுப்பொருள்கள் முதலிய பற்பல விதமான சாமான்களை யெல்லாம் சேகரிப்பதற்கு காலதாமஸமாகும். ஆகையால் யுத்தம் தொடங்கியவுடன் அந்தந்த தேசங்களிலுள்ள நிரந்தரமான சேனைகளையே அவைகளின் ராணுவ பலமாகக் கொள்ளவேண்டும்.

ஜெர்மன்கக்ஷியின் பலக்குறைவு.

யுத்தம் தொடங்கிய உடனே, ஜெர்மனி பத்துலக்ஷம் துருப்புகளைத் தயாராய் வைத்திருந்தது. அதன் கிழக்கு எல்லையில் ருஷியரும் மேற்கெல்லையில் பிரஞ்சுக்காரரும் யுத்தம் நடத்துவார்களாகையால், ஜெர்மன் சேனை இரண்டு பாகமாகப் பிரிக்கப்பட்டது. அவ்வாறு ஜெர்மனிக்கு இரண்டு எல்லைப் புறங்களிலும்ஏககாலத்தில் சண்டைசெய்யும்படி நேரிட்டது. அதனால் ஜெர்மனி தன் சேனையின் சிறுபாகத்தைக்கொண்டு ஒரு எல்லைப்புறத்தைக் காத்து வந்து சேனையின் பெரும் பாகத்தையும் மற்றொரு எல்லையில் குவித்து சிறந்த வெற்றிகள் பெற வேண்டுமென்று நோக்கங்கொண்டது. ஏககாலத்தில் பல திசைகளில் சண்டை செய்யும்படி நேர்ந்தால் மிகவும் முக்கியமானதோர் திசையில்மட்டும் ஏராளமான பலத்தைத் திரட்டி முடிவான வெற்றி பெற முயலவேண்டுமென்பது யுத்த தந்திரங்களுக்குள் ஒன்றாகும். அதை அனுசரித்து ஜெர்மனி ஒரு லக்ஷம் துருப்புகளை ருஷிய எல்லையில் காவல் செய்யும்படி நிறுத்திவிட்டு, மற்ற ஒன்பது லக்ஷம் துருப்புகளையும் பிரஞ்சு எல்லையில் செலுத்திமுடிவான வெற்றியைப் பெற நிச்சயித்தது.

பிரான்ஸ் 8 லக்ஷம் துருப்புகளை வைத்திருந்தது. அது ஆப்பிரிகாவிலுள்ள தன்னுடைய குடியேற்ற நாட்டில் சிலபடைகளைக் காவலாக வைத்திருக்க வேண்டியிருந்தது. இடாலிதேசமானது ஜெர்மன் கக்ஷியுடன் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டிருந்ததால், அது இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளக் கூடுமென்று தோன்றிற்று. ஆகையால் பிரான்ஸ் தன்னுடைய இடாலிய எல்லைப்புறத்தில் சில படைகளைக் காவலாக வைக்கும்படி நேரிட்டது. அதனால் இந்தயுத்தம் தொடங்கின உடன், ஒன்பது லக்ஷம் ஜெர்மன் துருப்புகளை எதிர்ப்பதற்காக, சுமார் 7 லக்ஷம் பிரஞ்சுத் துருப்புகளே ஆயத்தமாயிருந்தன. ஆனால் பிரான்ஸுக்கு பெல்ஜிய சேனையின் உதவி கிடைத்தது; சுமார் $1\frac{1}{2}$ லக்ஷம் பிரிட்டிஷ் துருப்புகளும் துணை செய்ய வந்தன.

ஆஸ்டிரியா ஏகாதிபத்தியத்தில் சுமார் $8\frac{1}{2}$ லக்ஷம் துருப்புகளிருந்தன. அதில் $2\frac{1}{2}$ லக்ஷம் ஆஸ்டிரியத் துருப்புகள் ஸெர்வியாவின் மீது படையெடுக்கவும் மற்ற 6 லக்ஷம் துருப்புகள் ருஷியரை எதிர்க்கவும் அனுப்பப்பட்டன. ஸெர்வியாவில் 3 லக்ஷம் ஸெர்வியத் துருப்புகளிருந்தன. 16 லக்ஷம் ருஷியத்துருப்புகள் ஆஸ்டிரியாவின் மீது படை யெடுக்கத் தயாராயிருந்தன. ஆகையால், ஆஸ்டிரியாவின் சேனா பலம் அதன் தேவைக்குச் சிறிதும் போதுமானதாயில்லை. யுத்தம் தொடங்கியபோது, ராணுவ பலத்திலும் ராணுவத்திறமையிலும் ஆஸ்டிரியா தனது எதிரிகளை விட, கீழ்ப்பட்டிருந்ததென்று விளங்கிற்று.

நேசக்கக்ஷிக்கு சில சாதகங்கள்.

நேசக்கக்ஷியின் சேனாபலம் ஜெர்மன் கக்ஷியைவிட பலமடங்கு அதிகமென்று தெரியவரும். இரண்டு கக்ஷியைச் சேர்ந்த தேசங்களின் ஜனத்தொகையைக் கவனித்தாலே அது தெளிவாய் விளங்கும். ருஷிய ஏகாதிபத்தியத்தின் ஜனத்தொகை மட்டும் ஜெர்மன் கக்ஷியாரின் ஜனத்தொகையை விட அதிகமாயிருக்கிறதென்றால் மற்ற நேச ராஜ்யங்களின் ஜனசங்கையைக் கணக்கிடவேண்டியதில்லை. ஆயினும் இங்கு ஜனத்தொகையை ஒப்பிட்டுப் பேசும்போது அத்தொகை அனை

த்தும் சேனை பலமாகக் கருதி விடலா மென்று சொல்லுவதற்கில்லை. ஏனெனில், ஜனங்களை ராணுவத்தில் பழக்குவதும், அவர்களுக்குத் தேவையான உடைகளையும் ஆயுதங்களையும் சேகரிப்பதும், காலாட் படைகளுக்குத் தக்கவாறு பீரங்கிப்படைகளைச் சேர்ப்பதும், பீரங்கிகளைச் செய்வதோடு கூட அவைகளுக்கு ஏராளமான பல தினுசுக் குண்டுகளைச் செய்வதும் சாமான்ய காரியமென்று நினைத்து விடக்கூடாது. மேலும் அக்காரியங்களெல்லாம் காலக்கிரமத்தில் செய்து முடிக்கக் கூடியவையென்றாலும், சமயத்தில் செய்து முடிப்பது எளிதல்ல. யுத்த காலத்தில் சமயத்துக்கேற்ற தேவைகளுக்கெல்லாம் போதுமான படைகளைக்குறித்த காலத்துக்குள் தயார் செய்ய வேண்டு மென்ற பெரியதோர் நிர்ப்பந்தம் ஏற்படுகின்றது. ஆகையால் குறித்த காலத்துக்குள் தேவையான சமயங்களுக்கு புதுப்படைகளை நிர்மாணிப்பது எளிதாய் செய்துவிடக் கூடியதல்ல.

தவிர, ஜெர்மனியிலும் ஆஸ்டியாவிலும், திடகாத்திரமுள்ள எல்லாப் பிரஜைகளும் ராணுவப்பயிற்சி பெற்றவர்களாயிருக்கிறார்கள். அவர்களையுத்த காலத்தில் படைகளில் சேர்ப்பதற்காக சகல ஏற்பாடுகளும் முன்னதாகவே ராணுவ ஒழுங்குகளின்படி செய்து வைக்கப்பட் டிருக்கின்றன. கிரேட் பிரிட்டனில் ஜனங்கள் முன்னதாகப் பயிற்சி பெற்றவர்களல்ல, ஆகையால் ஜெர்மனி முதலிய தேசங்களிலுள்ள மூல பலங்களைவிட, ராணுவப் பயிற்சியே பெறாதவர்களை மூலபலமாக சேர்ப்பது அதிக தாமஸமாகும். அவ்வாறு நேசக்கக்ஷிக்குத் தாமஸமான போதிலும்அதைச்செய்து முடிப்பதற்கு அக்காக்ஷியார்சாதகங்களைப்பெற்றிருக்கிறார்கள். நேசக்கக்ஷியார் தங்களுடைய ஜனங்களிலிருந்து புதிய படைகளைச் சேர்ப்பதற்குத் தேவையான சகல சாதகங்களையும் பெறுவதற்கு அவர்களுடைய கடற்படையானது மிகவும் உபயோகமாயிருக்கிறது.

நேசக்கக்ஷிக்கு கடற் படையின் சாதகம் இருப்பதுபோல ஜெர்மன் கக்ஷிக்கு இல்லை. நேசக் கக்ஷியின் கடற்படைகள் அதிக வன்மையைப் பெற்றிருப்பதோடு, அதிக ஒற்றுமையாய் உழைப்பதற்கும் சாத்தியப்படுகிறது. அவைகள் எல்லாக் கடல்களிலும் சஞ்சாரஞ் செய்து ஒன்றுக்கொன்று உதவி புரியலாம். ருஷியக்கடற்படை மட்டும் பால்டிக் கடலில் ஜெர்மானியரால் அடைக்கப் பட்டிருப்பதினால் அது மற்ற நேசக் கக்ஷியின் கடற்படைகளோடு ஒத்துழைப்பதற்கில்லை. ஆயினும் ருஷியக் கடற்படையைத் தவிர மற்ற நேசராஜ்யங்களின் கடற்படைகளெல்லாம் சகல கடல்களையும் தம் அதிகாரத்துக்குள் அடக்கி வைத்திருக்கின்றன. அதனால் நேசக் கக்ஷிகள் ஒன்றோடொன்று போக்குவரத்து செய்யச் சாத்தியப்படுகிறது. பூகோள அமைப்பின்படி நேசதேசங்கள் பிரிந்திருப்பதால், அந்தக் குறையை நிவர்த்திப்பதற்கு கடற்படையானது சாதகமாயிருப்பதைக் கவனிக்க வேண்டும். கடற்படையின் உதவியால் தான், யுத்தம் தொடங்கிய உடனே பிரிட்டிஷ் சேனை இங்கிலீஷ் கடலைக் கடந்து பிரான்ஸுக்கும் பெல்ஜியத்துக்கும் உதவி செய்யச் சாத்தியப்பட்டது. கடற்படையின் உதவியால் தான், பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டுத் துருப்புகளும் இந்தியத் துருப்புகளும் அநேக கடல்களைக் கடந்து பிரான்ஸ் தேசத்தில் வந்திறங்கி ஜெர்மானியரை எதிர்க்கச் சாத்தியப்பட்டது.

ஜெர்மன் கடற்படையும் ஆஸ்டிரியக் கடற்படையும் வெவ்வேறு கடல்களில் பிரிந்திருக்கின்றன.

ஆனால், கப்பற்படையினால் கடல்களைக் காப்பது மட்டும் போதாது. தூரதேசங்களில் யுத்தம் நடத்துவதற்கு ஏராளமான வியாபாரக் கப்பல்

களும் தேவையாகும். துருப்புகளை ஏற்றிக்கொண்டு போவதற்கும், அவர்களுக்கு ஆகாரம் உடை ஆயுதம் குண்டு முதலியவைகளை இடைவிடாமல் ஒழுங்காய்க் கொண்டு போவதற்கும், வியாபாரக் கப்பல்கள் அவசியமாகும். கிரேட் பிரிட்டன் கடலால் சூழப்பட்ட தீவாகையால், அத்தேசத்திலிருந்து புறப்பட்டுப் போர்புரிகின்ற ஒவ்வொரு பிரிட்டிஷ் துருப்பும் அவ்வாறு கப்பல் மூலமாய் ஆதரிக்கப்படுகிறான். பிரஞ்சு துருப்புகள் பிரான்ஸை விட்டுப் புறப்பட்டு இதர போர் முனைகளில் போர்புரிவதற்கும் அவ்வாறே கப்பல்களின் உதவி அத்யாவசியமாகும். இவைகளுக்கெல்லாம் ஏராளமான வியாபாரக் கப்பல்கள் தேவையாகும்.

மேலும், நேசராஜ்யங்கள் ஒன்றோடொன்று போக்கு வரத்து செய்வதற்கும் வியாபாரக் கப்பல்கள் தேவை. உதாரணமாக, ருஷியாவுக்கு யுத்ததளவாடங்கள் அனுப்ப வேண்டியிருக்கின்றன. ஸெர்வியா தேசத்தை ஜெர்மானியர் ஸ்வாதீனப் படுத்திக் கொண்டதற்கு முன்பு ஸெர்வியர்களுக்குத் தளவாடங்களும் ஆகாரமும் இன்னும் பல சாமான்களும் நேசக்கக்ஷியார் உதவும்படி நேரிட்டது.

தவிர, நேச ராஜ்யங்களில் சாமான்யஜனங்களை ராணுவத்தில் சேர்ப்பதற்கு அவர்களுக்கு உடை ஆயுதம் குண்டு முதலியவைகளைச் சீக்கிரமாய்ச் சேர்க்கவேண்டுமாகையால், அந்த சாமான்கள் அமெரிக்கா முதலிய அந்நிய தேசங்களிலிருந்து கப்பல் மூலமாய்த் தருவிக்கப்படுகின்றன. இவ்வேலைகளுக்கும் வியாபாரக் கப்பல்கள் தேவை.

தவிர நேச ராஜ்யங்களிலுள்ள ஜனங்களில் பெரும்பாலோரும் ராணுவத்தில் சேர்க்கப்பட்டால், அத்தேசங்களில் வழக்கமாய்ச் செய்யப்பட்டுவந்த பொருள்கள், தொழிலாளிகளின் குறைவால் செய்யப்பட முடியா. அதனால், அத்தேசத்திலிருக்கும் ஜனங்களின் ஜீவனத்துக்கு அத்யாவசியமான உடை, உணவு, முதலிய பொருள்கள், அந்நிய தேசங்களிலிருந்து தருவிக்க நேரிடும். இவ்வேலைகளுக்கும் வியாபாரக் கப்பல்கள் தேவை. ஆகையால் நேசக் கக்ஷியாருக்கு, கடற்படை வன்மையாயிருப்பதோடு கூட வியாபாரக் கப்பல் களும் ஏராளமாகத் தேவையாயிருக்கும்.

ஆனால் நேசக்கக்ஷியாரின் வியாபாரக் கப்பல்களைக் குறைக்க வேண்டுமென்பது ஜெர்மானியரின் நோக்கமாகும். ஜெர்மானியர் தங்களுடைய சப்மரின் கப்பல்களை ஏவி சுமார் 500 வியாபாரக் கப்பல்களை அழித்தார்கள். யுத்தம் தொடங்கினவுடன் நடு நிலைமைத் தேசத்தார் சில சமயங்களில் ஜெர்மானியரின் தூண்டுதலின் மேல் சுமார் 400 வியாபாரக் கப்பல்களை நேசக் கக்ஷியாரிடமிருந்து விலைக்கு வாங்கிவிட்டார்கள். ஆனால் அவ்வாறு கப்பல்களை விற்கக்கூடாதென்று இங்கிலாந்தில் சட்டம் விதிக்கப்பட்டது. ஜெர்மானியர் அந்த முயற்சிகளைச் செய்தபோதிலும், நேசக் கக்ஷியாருக்கு வியாபாரக் கப்பல்கள் ஏராளமாயிருக்கின்றன. முக்கியமாய் கிரேட் பிரிட்டனில்தான் அக்கப்பல்கள் அதிகமாயிருப்பதோடு புதிய கப்பல்களும் கட்டப்பட்டு வருகின்றன. அத்தேசத்தில் கிடைக்கக்கூடிய கூலியாட்களையெல்லாம் அமர்த்தி முதலில் தேவையான யுத்தக்கப்பல்கள் கட்டப்பட்டு, பிறகு வியாபாரக்கப்பல்களும் செய்யப்படுகின்றன.

தவிர, நேசக்கக்ஷியார் தங்கள் கப்பற்படைகளைக்கொண்டு சத்துருக்களைச் சுற்றிலுமுள்ள கடல் வழிகளை அடைத்திருக்கிறபடியால், சத்துருக்கள் அந்நிய தேசங்களுடன் போக்குவரத்து செய்யமுடியாமல் முற்றுகையிடப்பட்டதுபோல வருந்துகிறார்கள். இவ்வாறு நேசக்கக்ஷியாருக்கு ராணுவ பலம் அதிகமாயிருப்பதோடு கடற்படையினால் உண்டாகும் சாதகங்களும் அநேகமிருக்கின்றன.

## ஜெர்மனிக்குச் சில சாதகங்கள்.

ஜெர்மன் கக்ஷியின் ராணுவபலம் குறைவாயிருந்த போதிலும் அக்கக்ஷி வேறுசிலசாதகங்களைப்பெற்றிருந்தது. மகா யுத்தம் தொடங்கிய நாள் முதல், ஆஸ்டிரியாவும் ஜெர்மனியும் மிகுந்த ஒற்றுமையாய் யோசனைகள் செய்து அவைகளை நிறைவேற்ற முயன்றதைக் கவனிக்கவேண்டும். ராணுவவிஷயங்களில் அவ்விரண்டு தேசங்களும் காட்டுகின்ற அன்னியோன்யமே அவைகளுக்கு அதிக வன்மையைக் கொடுக்கின்றது. யுத்தஞ் செய்ய வேண்டிய சகல போர் முனைகளிலும் எவ்விதமாய் யுத்தம் நடத்தவேண்டுமென்பதைப் பற்றி அவ்விரண்டு தேசத்து ராணுவத் தலைவர்களும் ஒன்றுகூடி ஆலோசனைசெய்து தீர்மானிக்கிறபடியே சகல யுத்த நடவடிக்கைகளும் எவ்வித சிக்கலுமின்றி தொடங்கப் படுகின்றன. அவ்விரண்டு தேசங்களின் பூகோள அமைப்பே அவைகளின் ஒத்துழைப்புக்குச் சாதகமாயிருக்கின்றது. அவ்விரு தேசங்களும் ஒன்றின்பக்கத்தில் ஒன்றாய் அமைந்திருக்கின்றன. தவிர அவைகள் ஐரோப்பா கண்டத்தின் மத்தியிலிருக்கின்றன. அதனால் ஐரோப்பாவிலுள்ள முக்கியமான ரயில்பாதைகளும் ரோட்டுகளும் சாதாரணகாலங்களிலும் அவ்விரண்டு தேசங்களையும் கடந்து செல்லுகின்றன. அத்தேசங்கள் ஒன்றோடொன்று மிகவும் எளிதாயும் துரிதமாயும் போக்குவரத்து நடத்தலாம். ஆனால் நேசக்கக்ஷியில், ருஷியாவானது மற்ற நேச தேசங்களுடன் அவ்வாறு நேராகப் போக்கு வரத்து செய்வது சாத்தியமில்லை. ஐரோப்பாகண்டத்துக்குகிழக்கிலுள்ள ருஷியாவும் அக்கண்டத்துக்கு மேற்லுள்ள பிரிட்டன் பிரான்ஸ் ஆகிய இத்தேசங்களும் வெகுதூரம் விலகி யிருக்கின்றன; அவைகளுக்கு இடையில் அநேககடல்களும் அந்நிய ராஜ்யங்களும் சத்துருப் பிரதேசங்களும் குறுக்கிடுகின்றன. பூகோள அமைப்பில் நேசக்கக்ஷிகள் அவ்வாறு தனியாகப் பிரிந்திருக்கும் விஷயத்தை ஜெர்மானியர் தங்களுக்குச் சாதகமாய் உபயோகித்துக்கொண்டார்கள். அந்த முக்கிய விஷயத்தையே ஆதாரமாகக்கொண்டு அவர்கள் தங்களுடைய யுத்த நடவடிக்கைகள் அனைத்தையும் நிச்சயித்து முடிவில் வெற்றியும் பெறநிச்சயித்தார்கள். பூமியமைப்பின்படி, ருஷியசேனை வேறாகவும், பிரிட்டிஷ் பிரஞ்சுசேனைகள் வேறாகவும் அவைகளுக்கு இடையில் ஜெர்மானியரும் ஆஸ்டிரியரும் ஒன்று சேர்ந்தும் இருக்கிறார்கள். அந்த நிலைமையில் ஜெர்மானியர் யுத்தஞ் செய்வதற்கு மிகவும் சாதாரண யுத்த தந்திரத்தை அனுசரித்தார்கள். அதென்னவென்றால் ஜெர்மானியர் குறித்த காலத்தில் ஏதாவதொரு திசையில் சொற்ப துருப்புகளை வைத்துத் தடுத்துநின்று, மற்றொரு திசையில் தங்களால் கூடுமான பலத்தையெல்லாஞ் சேர்த்து அடிப்பதால் நிச்சயமான வெற்றியைப் பெற வேண்டுமென்பதாகும். ஒருதிசையில் ருஷிய சேனையும், மற்றொரு திசையில் பிரெஞ்சுபிரிட்டிஷ் சேனைகளும் வெவ்வேறாய் பிரிந்திருப்பதால் தான் அது சாத்தியப்பட்டது. இவ்வாறு ஜெர்மானியரும் ஆஸ்டிரியரும் தங்களுடைய மொத்த சேனாபலத்தை அந்தந்த சமயத்துக்குத் தக்கபடி மிக்க ஜாக்கிரதையாயும் கணக்காயும் பிரித்து அனுப்பினார்கள். அவர்கள் தங்களுடைய எதிரிகளுக்கிடையே ஓர் மத்தியஸ்தானத்தில் இருந்து வருவதால் தான், அவர்கள் தங்களுடைய சேனாபலத்தை அவ்வாறு அடிக்கடி பிரித்தனுப்புவதற்குச் சாத்தியப்படுகிறது.

இதற்கு அனுகூலமாக மற்றொரு சாதகம் ராணுவ சம்பந்தமாய் அவர்கள் பெற்றிருப்பதையும் கவனிக்கவேண்டும். அவ்விரு தேசங்களின் ராணுவ அமைப்பும் ராணுவ முறைகளும் அநேக அம்சங்களில் ஒத்திருக்கின்

றன. ராணுவநோக்கத்துடன் அவ்விரு தேசங்களில் போடப்பட்டுள்ள ரயில் பாதைகளானவை எதிரிகளுடைய எல்லைப் புறங்களில் ஏராளமான படைகளைக் குவிப்பதற்குச் சாதகமாயிருக்கின்றன. ஆஸ்டிரிய ஜெர்மானிய ஏகாதிபத்தியத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு அவர்களுடைய துருப்புகளை அதிக விரைவாய் செலுத்தலாம். அவ்விரு தேசத்தாரும் ஒருவருக்கொருவர் துணைப்படைகளை அனுப்பிக்கொள்வதற்கும் ரயில் பாதைகள் வகையாய்ப் போடப்பட்டிருக்கின்றன. மேலும், ஆஸ்டிரிய ராணுவத்தில் ஜெர்மன்பாஷை அனுசரிக்கப்படுகிறது. அதனால், அவ்விரண்டு தேசத்துப் படைகளும் ஒன்றோடொன்று கலந்துகொண்டு போர் செய்யலாம். அநேக ஆஸ்டிரியப் படைகளுக்கு ஜெர்மன் உத்தியோகஸ்தர்கள் தலைமை வகித்து அப்படைகளைப் போர்க்களத்தில் செலுத்துவதாகத் தெரிகிறது. ஒரு தேசத்து ராணுவத்துக்கு மற்றொரு தேசத்தார் தலைமை வகித்துச் செலுத்துவது அபூர்வமான சம்பவமென்றே கருதவேண்டும்.

ஜெர்மன் யுத்த முறைகளே ஆஸ்டிரிய ராணுவத்திலும் அனுசரிக்கப்படுகின்றன. துருப்புகளை மிகவும் கடுமையான ஒழுங்குகளின் கீழ் அடக்கி வைப்பதில் இரு தேசத்தாரும் ஒரே மனதாயிருக்கிறார்கள்.

ராணுவத்தைப் போல ராஜாங்க விஷயங்களிலும் அவர்கள் ஒற்றுணர்ச்சிகொண்டிருப்பது கவனிக்கத்தக்கது. அவ்விரண்டு தேசங்களும் சுயேச்சாதிகாரம் பெற்ற சக்கரவர்த்திகளால் ஆளப்பட்டு வருவதால், ஜனங்கள் கடுமையான ராஜாங்க அதிகாரங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கப் பழக்கப்பட்டவர்கள். அந்நிய தேச விவகாரங்களிலும் அவ்விரு ராஜ்யங்கள் ஒரே விதமான கொள்கைகளை அனுசரித்து வந்தன. ஆஸ்டிரியா ஏகாதிபத்யம் மிகவும் பலஹீனமாயிருப்பதால் அது வலுவாய் நிலைத்திருப்பதற்கு ஜெர்மனியின் உதவி அத்தியாவசியமானதென்பதை ஆஸ்டிரியர்கள் உணர்ந்திருந்தார்கள். ஆகையால் ஆஸ்டிரியர்கள் ஜெர்மானியரின் உதவி இன்றியமையாததென்ற ஆழ்ந்த உணர்ச்சியால் அவ்வுதவியை வெகுவாய் மதித்திருந்தார்கள்.

மேலும், யுத்தம் தொடங்கியபோது ஜெர்மன் கக்ஷியில் இரண்டு ராஜ்யங்களே சேர்ந்ததால், அவைகளுக்குள் மிக்க எளிதாய் ஒற்றுமை ஏற்பட்டு வந்தது. சகல யோசனைகளும் நடவடிக்கைகளும் எவ்வித காலதாமஸமும் சிரமமுமில்லாமல் சௌகரியமாய் செய்யப்பட்டுவந்தன. ஆனால் யுத்தம் ஆரம்பித்து சில மாதங்களுக்கெல்லாம் துருக்கி அக்கக்ஷியில் சேர்ந்துகொண்டது. அப்போது ஜெர்மன் கக்ஷியில், இதுவரையில் மேலே சொல்லப்பட்டு வந்த சாதகங்கள் குறைந்து போயின. ஏனெனில் ஜெர்மானியர் துருக்கியுடன் எளிதாய்ப் போக்குவரத்து செய்யச் சாத்தியப்படவில்லை; அதனால் ஜெர்மானியர் துருக்கியருக்குத் தேவையான உதவிகளை இஷ்டப்படி செய்ய முடியவில்லை; அதனால் ஜெர்மன் கக்ஷியின் ராணுவ யோசனைகளெல்லாம் முன்போல அவ்வளவு ஒழுங்காயும் திட்டமாயும் நிச்சயிக்க முடியாமலிருந்தது. ஆனால் சில மாதங்களுக்குப் பிறகு, பல்கேரியா நாடு ஜெர்மன் கக்ஷியில் சேர்ந்துகொண்டு ஸெர்வியா நாட்டை சுவாதீனப்படுத்திக்கொண்டபோது, முன்பிருந்த சகல ஒற்றுமையும் மறுபடியும் ஏற்பட்டுவிட்டது. ஏனெனில் ஜெர்மனி, ஆஸ்டிரியா, ஸெர்வியா, பல்கேரியா, துருக்கி ஆகிய இந்த தேசங்களெல்லாம் ஒரே ஒழுங்காய் ஒன்றின்பின் ஒன்றாக அமைந்திருக்கின்றன. அவ்வாறு ஒரே தொடர்ச்சியாய் அமைந்துள்ள தேசங்களெல்லாம் ஜெர்மன் கக்ஷிக்கு உட்பட்டதாகிவிட்டதால், சகல ராணுவயோசனைகளும் நடவடிக்கைகளும் ஏகோ

பித்து நிறைவேற்றப் பட்டன. உண்மையில், ஜெர்மன் தலைநகரமாகிய பெர்லினிலிருந்து புறப்படும் ரயில் வண்டியானது, ஆஸ்டிரியத் தலைநகராகிய வியன்னா வழியாகவும், ஸெர்வியத் தலைநகராகிய பெல்கிரேட் வழியாகவும், பல்கேரியத் தலைநகராகிய சோபியா வழியாகவும், துருக்கித் தலைநகராகிய கான்ஸ்டாண்டிநோபிள் வழியாகவும் எவ்வித மாறுதலுமின்றி நேராகச் செல்கின்றது. ஜெர்மன் கக்ஷியைச் சேர்ந்த சகல தேசங்களும் அவ்வாறு தொடர்ச்சியாய் அமைந்து ரயில்பாதையால் பிணைக்கப்பட்டிருப்பதால் அவைகளுடைய யோசனைகளும் நடவடிக்கைகளும் ஒரே ஒரு பிரதான நோக்கத்தை மேற்கொண்டு அதையே அநுசரித்து செய்யப்படலாம்.

இவ்வாறெல்லாம் ஜெர்மன் கக்ஷியில் ஒற்றுமையான நடவடிக்கைகளுக்குச் சாதகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அக்கக்ஷியினுடைய ராணுவபலமானது நேசக்கக்ஷியைவிடக் குறைவாயிருந்தபோதிலும், அந்த சாதகங்கள் ஒருவாறு அதற்கு ஈடு செய்கின்றன. அவர்கள் அந்த சாதகங்களைப் பெற்றிருப்பதால்தான், அவர்கள் குறைவான சேனாபலத்தைக்கொண்டு நேசக்கக்ஷியுடன் இக்காலம் மட்டும் யுத்தம் நடத்த சாத்தியப்பட்டிருக்கிறது.

ஜெர்மன் கக்ஷியின் ராணுவ பலம் நேசக்கக்ஷியைவிடக் குறைவென்று மொத்தத்தில் பார்த்தால் தெரிய வருகிறதாயினும், ஜெர்மன் கக்ஷியின் மூலபலங்கள் சீக்கிரமாய்த் தயாராகிவிடும். ஏனெனில் ஜெர்மனியிலும் ஆஸ்டியாவிலுமுள்ள திடகாத்திரமான பிரஜைகள் ஒவ்வொருவரும் ராணுவப் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். ஆகையால் அவர்களை சிக்கிரமாய் சேனையில் சேர்ப்பதற்கு சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. ஆயினும் இந்த மூலபலங்கள் யுத்தத்தின் ஆரம்பத்திலேயே போர் முனைக்குச் செல்ல தகுதியற்றவர்கள். அவர்களை மறுமுறை ராணுவத்தில் பழக்குவதற்கும், அவர்களுக்காக ஆயுதங்களையும் பீரங்கிகளையும் சேகரிப்பதற்கும் எவ்வளவு அவசரப்பட்டாலும் சில மாதங்களாவது ஆகுமென்பதில் தடையில்லை. ஆயினும் ஜெர்மனி, ஆஸ்டிரியா இவைகளிலுள்ள நிரந்தரமான சேனைகளோ அதிக விரைவாய்த் திரட்டப்பட்டு, போர் முனைக்குச் செல்லக் கூடியவை. யுத்த தளவாடங்கள் தேவையான அளவு கிடைக்கும் சௌகரியமும், ரயில் பாதைகளின் சௌகரியமும் அவ்வாறு முன்னதாகவே செய்து வைக்கப்பட்டிருக்கின்றன. சேனைக்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் முன்னதாகவே யோசனை செய்து அவைகளைத் தேவையான அளவும் தேவையான காலத்திலும் தேவையான இடத்திலும் செய்து முடிக்கும் ஏற்பாடுகளே ஜெர்மன் சேனையின் வன்மைக்குக் காரணமாகும். அந்த ராணுவத்தில் கண்டிப்பான ஒழுங்குகளும் உறுதியான ஏற்பாடுகளும் கட்டுப்பாடுமே முக்கியமானவை.

“அவ்வாறு ஜெர்மன் சேனையைப் பற்றிய ஒவ்வொரு அற்ப விவரமும் மிகவும் கவனமாய் யோசனை செய்யப்பட்டு கண்டிப்பான ஏற்பாடுகள் முன்னதாகச்செய்யப்பட்டிருப்பதால், ஜெர்மன் சேனை யுத்தமண்டலத்தில், அதி விரைவாய் நடமாடும் சக்தியை விசேஷமாய்ப் பெற்றிருக்கிறது. ஜெர்மன் துருப்புகள் அதிகப் பளுவைச் சுமந்து மற்ற தேசத்துப் துருப்புகளை விட மெதுவாக வழி நடந்து சென்றாலும், அவர்கள் குறித்த காலத்தில் பிரயாணஞ் செய்து முடிக்கக் கூடிய தூரம் வியக்கத்தக்கதாயிருக்கிறது. இதற்குக் காரணம் ஜெர்மன் சேனையிலுள்ள ஒழுங்கான ஏற்பாடுகளாகும். ஜெர்மன் சேனை பெற்றிருக்கிற ஏராளமான வன்மை, துருப்புகளின் போர்த்திறமையால் உண்டானதல்ல; யுத்தகளத்தில் படைகளை கிரமமின்றி பொம்மை

கள்போலக் கையாடுந் திறமையாலுண்டானதாகும்.

"ஜெர்மன் ராணுவ யந்திரம் பிரமாண்டமா யிருந்தபோதிலும் மிகவும் உறுதியாயும் எளிதாகச் செலுத்தக் கூடியதாயும் செய்யப்பட் டிருக்கிறது. ஒவ்வொரு பாகமும் சற்றும் சிக்கலின்றி ஸன்னமாயும் ஒழுங்காயும் வேலை செய்யும்படி வெகு ஜாக்கிரதையாய் அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு அநேக வருஷங்களாய் மேன்மேலும் யோசனை செய்து நிர்மாணிக்கப்பட்ட ராணுவத்தின் உறுதியும் கட்டுப்பாடும் சாமான்யமானதல்ல. திடீரென்று பெரிய யுத்தத்தை ஆரம்பித்து, முழுப் பலத்தையும் போர்க்களத்தில் குவித்து தேவையாயுள்ள சகல சௌகரியங்களையும் எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் பெற்று, போர் விளைக்கக்கூடியதாய் ஜெர்மன் சேனை தயார் செய்யப்பட்டிருப்பதுபோலவேறு எந்தசேனையுமில்லை." (ஐரோப்பிய யுத்தசரித்திரத்திலிருந்து எடுக்கப்பட்டது.)

### யுத்தம் தொடங்குவதைப் பற்றி ஜெர்மானியரின் யோசனை.

அவ்வாறு ஜெர்மானியர் தங்களுடைய சேனையை விரைவாய்ச் செலுத்து வதற்கு ஏற்பாடு செய்திருப்பதின் நோக்கமென்ன? ருஷியசேனை திரட்டப்பட்டு முழு பலதுடன் போர் முனையில் வருவதற்கு காலதாமஸமாகும். அவ்வாறு தாமஸமாகும் காலத்தில், ஜெர்மன் சேனையின் சிறுபாகத்தை ருஷிய எல்லையில் காவலாக நிறுத்தி விட்டு, அச்சேனையின் பெரும் பாகத்தையும் பிரஞ்சு எல்லையில் குவித்து முடிவான வெற்றி பெற வேண்டுமென்று ஜெர்மனியர் நோக்கங்கொண்டார்கள். ருஷிய சேனை முழுவதும் திரட்டப்படுவதற்கு முன் ஜெர்மானியர் பிரஞ்சுக்காரரை முறியடிப்பதற்கு போதுமான சாவகாசம் கிடைக்குமென்று எண்ணினார்கள். ருஷிய சேனை முழுபலத்துடன் போர் முனைக்கு வருவதற்குள்ளாக ஜெர்மானியர் பிரஞ்சுக்காரரை முறியடித்து ருஷிய சேனையை எதிர்க்கத் திரும்பி வரலாமென்று நினைத்தார்கள். ஜெர்மானியர் மத்தியஸ்தானத்திலிருப்பதால் தங்களுடைய படைகளை அவ்வாறு எந்தத்திசைக்கும் விரைவாய்ச் செலுத்தல் சாத்தியமாயிருந்தது.

ஆகையால் பிரான்ஸின்மீது படையெடுப்பதில் எவ்வித தாமஸமும் நேரிடக்கூடாதென்றும் பிரஞ்சு சேனையை மிகவும் விரைவாய் முறியடிக்க வேண்டுமென்றும் அவர்கள் நிச்சயித்தார்கள். அவர்களுடைய நோக்கம் நிறைவேற வேண்டுமானல் அவர்களுடைய யுத்த நடவடிக்கைகள் மிகவும் விரைவாய் நடத்தப்பட வேண்டியதின் அவசியம் புலப்படும். அவர்களுடைய ராணுவ ஏற்பாடுகளெல்லாம் அந்த நோக்கத்தை அனுசரித்தே செய்து வைக்கப்பட்டிருக்கிறதென்றும் சொல்லி யிருக்கிறோம்.

ஜெர்மானியர் பற்பல திசைகளில் அநேக நேச ராஜ்யங்களால் ஏககாலத்தில் தாக்கப்படும் போது, மேற்சொல்லிய யுத்ததந்திரத்தை மிகவும் ஒழுங்காயும் சாமர்த்யமாயும் அனுசரிப்பதைத்தவிர வேறு வழியில்லை. அந்த யுத்த தந்திரமென்ன வென்றால், ஏதாவதொரு குறித்த திசையில் மட்டும் ஏராளமான பலத்தைத்திரட்டி வெற்றி பெற முயன்று, மற்றத் திசைகளிலெல்லாம் மிகக்குறைவான பலத்தைக் கொண்டு தடுத்து நிற்பதாகும்.

அந்த நோக்கம் எவ்வளவு தூரம் நிறைவேறிற்று என்பதை பிரான்ஸில் நடந்த யுத்த சம்பவங்களிலிருந்து தெரியவரும்.

பிரான்ஸ் ருஷியா இவைகளின்மீது யுத்தம் தொடருவதாக ஜெர்மனி அறிவித்தவுடனே அது தன் மேற்கு எல்லையில் அதாவது பிரான்ஸ் தேசமிருக்கிற திசையில் திரட்ட ஆரம்பித்தது. ஆனல் ஜெர்மனியின் மேற்கு எல்லைப் புறத்தில் பிரான்ஸ் தேசமட்டுமல்ல, லக்ஸம்பர்க், பெல்ஜியம் ஆகிய இவ்

விரு தேசங்களுமிருக்கின்றன. ஜெர்மனிக்கு அடுத்தாற்போலுள்ள பிரஞ்சு எல்லைப்புறம் மிகவும் குறுகலாயிருப்பதால், அந்த விஸ்தீரணத்துக்குள் ஏராளமான படைகளைச் செலுத்துவது சாத்தியமல்ல. தவிர அந்த குறுகிய பிரஞ்சு எல்லையில் மிக்க வலுவான கோட்டைகள் கட்டப்பட்டிருக்கின்றன. வர்டுன் நகரத்திலிருந்து தெற்கு திசையில் ஸ்விட்ஜர்லாந்து தேசத்துக் கருகிலுள்ள பெல்போர்ட் நகரம் வரையில் அநேக கோட்டைகளிருக்கின்றன. மலைகளும், காடுகளும், காட்டாறுகளும் நிரைந்த பிரதேசத்தில் அக்கோட்டைகளிருப்பதால் அவைகளின் வன்மை அதிகமாகின்றது. அப்படிப்பட்ட வன்மைகொண்ட கோட்டைகளை எதிர்ப்பதும் அந்த குறுகலான பிரதேசத்துக்குள் லக்ஷக் கணக்கான துருப்புகளை அணி வகுப்பதும் எளிதான காரியமல்ல. ஆகையால் அவ்வழியாக பிரான்ஸுக்குள் நுழைந்துவிட ஜெர்மானியர் உத்தேசிக்கவில்லை. அதனால்தான், ஜெர்மானியர் பெல்ஜியம் லக்ஸம்பர்க் இவ்விரு தேசத்தின் நடு நிலைமையை மதிக்காமல் அவைகளின்மீது படையெடுத்துச் சென்று பிரான்ஸுக்குள் புகுந்து செல்லத் தீர்மானித்தார்கள். ஜெர்மானியர் ஆகஸ்ட் 1ந்தேதி தங்களுடைய துருப்புகள் பெல்ஜியத்துக்குள் பிரவேசிப்பதற்கு அத்தேசத்துக் கவர்ன்மெண்டை அனுமதி கேட்டார்கள். பெல்ஜிய கவர்ன்மெண்டு அதை மறுத்துவிட்டவுடன், ஜெர்மானியர் பெல்ஜியத்தின்மேல் படையெடுத்து, அதனால் பிரிட்டிஷார் இந்த யுத்தத்தில் பிரவேசித்ததற்கு ஒரு நல்ல காரணம் ஏற்படவும் உலகத்தாருக்குக்கோபம் உண்டாகவும் அவர்கள் இடங் கொடுத்தார்கள்.

பிரான்ஸின்மீது விரைவாய்ப் படையெடுக்க வேண்டுமென்ற ராணுவ நோக்கத்துக்கு ஜெர்மானியர் பெல்ஜியத்தில் பிரவேசிப்பது அத்யாவசியமாயிருந்தபடியால், அவர்கள் சிறிதும் தாமஸமின்றி பெல்ஜியத்தை ஸ்வாதீனஞ் செய்துகொண்டார்கள். ஜெர்மானியரின் படையெடுப்பை மூன்று பாகங்களாகப் பிரித்து விவரிப்போம். ஜெர்மன் சேனையின் வடக்குபாகம் பெல்ஜியத்தின் வழியாகவும், மத்தியபாகம் லக்ஸம்பர்க் வழியாகவும், தெற்குபாகம் அல்ஸேஸ், லொரேன் என்ற ஜெர்மன் மாகாணங்களின் வழியாகவும் முன் சென்றன.

பெல்ஜியத்தின்மேல் படையெடுப்பு.

ஜெர்மானியர் பிரான்ஸுடன் எப்போதாவது யுத்தஞ் செய்ய நேரிடுமானல், அவர்கள் பெல்ஜியத்தின் மீது படை யெடுப்பது அவசிய மென்று வெகுகாலமாகவே நோக்கங் கொண்டிருந்தார்கள். ஜெர்மன் ராணுவதந்திரிகளின் நோக்கம் அவ்வாறு ஏற்கெனவே நிச்சயிக்கப் பட்டிருந்த தென்பது அவர்கள் தயார் செய்திருந்த ஏற்பாடுகளிலேயே தெரிகின்றது, அவர்கள் பெல்ஜிய எல்லைக்கருகில் அநேக ரயில்பாதைகளைப் போட்டிருந்ததோடு அநேக ராணுவக் கிடங்குகளையும் ஸ்தாபித்திருந்தார்கள். ஆகையால் ஜெர்மானியர் பெல்ஜியத்தின் மீது படையெடுக்க வேண்டு மென்பது முன்னதாகவே யோசனை செய்ததாகும். பெல்ஜிய கவர்ன் மெண்டார் ஜெர்மன் துருப்புகளின் பிரவேசத்துக்கு ஆக்ஷேபிக்காமல் வழிவிட்டு விடுவார்களென்று ஜெர்மானியர் நினைத்திருந்தார்கள்; ஆனல் அவ்வாறில்லாமல் பெல்ஜிய சேனை ஜெர்மானியரைப் போர்களத்தில் தடுத்துயுத்தஞ்செய்யக்கூடுமென்றும் ஜெர்மானியர்எதிர்பார்த்திருக்கவேண்டியதே. ஆயினும் பெல்ஜியரால் ஏற்பட்ட தடையானது ஜெர்மனியாரின் நோக்கத்தை நிறை வேருமற் செய்துவிட்டது. ஏனெனில், பெல்ஜிய சேனை ஜெர்மானியருக்கு வழிவிடாமல் 20 தினங்களாக மறித்து நின்றதால் ஜெர்மானியர் பிரஞ்சு சேனையை முறியடிப்பதற்குப் போதுமான சாவகாசத்தை பெறவில்லை. அந்தமுக்கியமான விஷ

யம் பின் வரும் யுத்த விவரங்களால் தெரிய வரும்.

ஜெர்மானியர் பெல்ஜியத்துக்குள் விரைவாய்ப் புகுந்து சென்று ஆகஸ்ட் 4 ந் தேதியே லீஜ் நகரத்திலுள்ள பெல்ஜியக் கோட்டைகளைத் தாக்கினார்கள். ஆனால் அந்த ஜெர்மன் துருப்புகளோடு கூட அவர்களுடைய பெரிய முற்றுகைப் பீரங்கிகளும் விரைவாய்க் கொண்டு போகப்படவில்லை யாகையால், அவர்கள் லீஜ் கோட்டையைத்தாக்கினது பயன் படவில்லை. மறுதினம் அந்த முற்றுகைப் பீரங்கிகள் விரைவாய்க் கொண்டுவரப்பட்டு, லீஜ் கோட்டைகள் இரண்டு தினங்களுக்குள் பொடி செய்யப்பட்டன. ஆகஸ்ட் 7 ந் தேதி ஜெர்மானியர் லீஜ் நகரத்தையும் கோட்டைகளையும் வசப்படுத்திக் கொண்டார்கள். பெல்ஜியத்துருப்புகள் ஜெர்மானியாரைத் தடுத்து நிற்க மிகவும் துணிகரமாயும் உக்கிரமாயும் சண்டை செய்தன. பெரிய பிரவாகம் போல்மிகுந்த வேகமும் விரைவுங்கொண்டு புறண்டு வந்த ஜெர்மன் படைகளை எதிர்ப்பது அசாத்திய மென்று தெரிந்திருந்தும் அந்தச் சிறிய பெல்ஜியப் படைகள் போர்க்களத்தில் காட்டின தைரியமும் மனோதிடமும் அதிசயமாயிருந்தன. ஜெர்மன் குதிரைப்படைகள் பெல்ஜியத்தின் வடக்கு பாகத்திலும் தெற்கு பாகத்திலும் புகுந்து அங்கிருந்த பெல்ஜியப்படைகளைப் பின் தள்ளிக்கொண்டு சென்று, வழியிலுள்ள நகரங்களையும் கிராமங்களையும், வசப்படுத்திக்கொண்டன.

சில பிரஞ்சு படைகள் பெல்ஜிய சேனைக்கு உதவிசெய்ய வந்தன. ஆனால் ஆகஸ்ட் 17ந் தேதியன்று ஜெர்மானியர் வாவர் என்ற ஸ்தலத்தைத் தாக்கிப் பிடித்து, பெல்ஜியப்படைகளையும் பிரஞ்சுப் படைகளையும் இருதுண்டாய்ப் பிரித்துவிட்டார்கள். அதேதினத்தில் பெல்ஜிய சேனை லோவேன் நகரத்தில் தோற்கடிக்கப்பட்டது. பிறகு அந்த பெல்ஜியசேனை ஆண்ட்வர்ப் நகரத்துக் கோட்டைகளை நோக்கிப் பின் சென்றது. ஆகஸ்ட் 20ந் தேதி ஜெர்



மானியர் பெல்ஜியத்தலைநகரமாகிய ப்ருஸல்ஸில் பிரவேசித்தனர். நாமூர் நகரத்துக் கோட்டைகள் 22ந் தேதியன்று பிடிபட்டன. அந்த தினத்தில் நாமூர் நகரத்துக்கு வடக்கிலும் தெற்கிலுமிருந்த ஜெர்மன் படைகள் பிரஞ்சு பூமியை அடைந்தன. அவ்வாறு ஜெர்மானியர்பெல்ஜியத்தின்மீது படையெடுத்துச் சென்று பிரான்ஸுக்குள் காலடி வைப்பதற்கு 19 தினங்கள் தாமஸமாயின.

பிரான்ஸின்மீது படையெடுப்பு.

மேற்சொல்லியவாறு பெல்ஜியத்தை வசப்படுத்திக் கொண்ட ஜெர்மன் படைகள் இன்னும் அநேக ஜெர்மன் படைகளுடன் சேர்ந்துகொண்டு பிரான்ஸின்மீது ஏககாலத்தில்படையெடுத்தபோது, அவைகள் எந்த நிலைமையில் அணிவகுத்து நின்றனவென்பதையும் எந்த நோக்கங்களுடன் சென்றனவென்பதையும் விளக்குவோம். பெல்ஜியத்தின் வழியாய்ச் சென்ற ஜெர்மன் படைகள் பிரஞ்சு எல்லையைநெருங்கினவுடன் அவைகள் அங்கு பிரிட்டிஷ் படைகளையும் பிரஞ்சுபடைகளையும் சந்தித்தன. மான்ஸ் என்ற பெல்ஜிய நகரத்துக்கருகில் பிரிட்டிஷ்படைகள் ஜெர்மானியரைத் தடுத்து நின்றன. அவைகளுக்குத் தெற்கில் பிரஞ்சுப்படைகள் ஷார்லிராய் நகரத்




துக் கருகில் நிலைபெற்றிருந்தன அந்த பிரிட்டிஷ் படைகளையும் பிரஞ்சுப்படைகளையும் தாக்கவேண்டுமென்று பெல்ஜியத்தின் வழியாய்ச் செ

ன்ற ஜெர்மன்படைகள் நோக்கங்கொண்டிருந்தன. அந்த ஜெர்மன்படைகள் ஜெர்மன்சேனையின் வடக்குக் கோடியில் இருந்த பாகமாகும்.

அதற்குத் தெற்கில் ஜெர்மன் சேனையின் மத்திய பாகம் இருந்தது. அது லக்ஸம்பர்க் நாட்டின்வழியாய் பிரான்ஸுக்குள் புகுந்து, வர்டூன் நகரத்துக்கு வடக்கில் வந்து யுத்தஞ்செய்ய வேண்டுமென்று நோக்கங் கொண்டிருந்தது.

ஜெர்மன் சேனையின் தெற்கு பாகம் லொரேன் அல்ஸேஸ் என்ற ஜெர்மன் மாகாணங்களிலிருந்து புறப்பட்டு, பிரஞ்சு எல்லையிலுள்ள கோட்டைகள் நோக்கிச் சென்றது. இந்த ஜெர்மன் சேனையின் தெற்கு பாகம், வர்டூன் நகரத்திலிருந்து பெல்போர்ட் நகரம் வரையிலுள்ள கோட்டைவரிசையைத் தாக்கவோ அல்லது அங்குள்ள பிரஞ்சுக்காரரைத் தடுத்து நிற்கவோ முயற்சி செய்தது.

இவ்வாறு பெல்ஜிய எல்லையில் ஜெர்மன் சேனையின் வடபாகமும், லக்ஸம்பர்க் நாட்டு எல்லையில் ஜெர்மன் சேனையின் மத்திய பாகமும், அல்ஸேஸ் லொரேன் இந்த மாகாணங்களின் எல்லையில் ஜெர்மன் சேனையின் தென் பாகமும் நிலைபெற்றிருந்தன. அவைகள் எவ்வாறு நிலை பெற்றிருந்தன வென்பதையும் அந்தந்தப் படைகளின் சேனாபதிகளின் பெயரையும் இரண்டு படங்களிலிருந்தும் அறியலாம். எப்போதும் படத்தின் தலைப் பக்கம் வடக்கு, வலது பக்கம் கிழக்கு, அடிப்பக்கம் தெற்கு, இடது பக்கம் மேற்கு. எல்லைப்புறம் + + + இம்மாதிரியாய் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

சிறிய படத்தில் பிரான்ஸ் தேசத்தின் எல்லைப் புறத்தில், பெல்ஜியம், லக்ஸம்பர்க் என்ற நாடுகளும், அல்ஸேஸ் லொரேன் என்ற ஜெர்மன் மாகாணங்களு மிருப்பதைக் காணலாம். படத்தில் குறிப்பிட்டுள்ள ▭ இம்மாதிரியான வெளுப்புக் கட்டங்கள் ஜெர்மன் படைகளையும், கறுப்புக் கட்டங்கள் பிரஞ்சுப் படைகளையும் அறிவிக்கின்றன. பெல்ஜியத்திலுள்ள ஜெர்மன் படைகளை, ஜெனரல் வான் கிளக், பியுலோ, ஹாஸன், டியுக் அப் வர்ட்டம்பர்க் ஆகிய நான்கு சேனாபதிகள் செலுத்தினதும் பெரிய படத்தில் குறிப்பிட்டிருக்கிறது. லக்ஸம்பர்க் நாட்டிலிருந்து ஜெர்மன் இளவரசரும், லொரேன் மாகாணத்திலிருந்து பவேரிய இளவரசரும், அல்ஸேஸ் மாகாணத்தில் ஜெனரல் வான் ஹீரிஞ்சனும் ஜெர்மன் படைகளைச் செலுத்தினார்கள்.

## இரண்டு கக்ஷிகளின் நோக்கங்கள்.

ஜெர்மானியரின் படையெடுப்பைத் தடுப்பதற்கு, பிரஞ்சு சேனாதிபதியாகிய ஜெனரல் ஜாப்ரே எவ்வாறு யோசனை செய்திருந்தார் என்பதையும் சொல்வோம். ஜெர்மானியர் தங்கள் சேனையின் பெரும் பாகத்தையும் அல்ஸேஸ், லொரேன் மாகாணங்களில் திரட்டி அவ்வழியாய் பிரான்வின்மீது அதிக பலத்துடன் படையெடுப் பார்களென்று பிரஞ்சு சேனாதிபதி நினைத்தார். ஜெர்மானியர் தங்களுடைய சொந்த பூமியாகிய அவ்விரண்டு மாகாணங்களில் எளிதாய்த் தங்கள் படைகளைச்சேர்த்து, அருகில் பிரஞ்சு எல்லையிலுள்ள கோட்டைகளைத் தாக்கி பாரிஸ் நகரத்தை நெருங்க முயற்சி செய்யலாமென்று அவர் கருதினார். ஜெர்மானியர் பெல்ஜியத்தைக் கடந்து பாரிஸ் நகரத்துக்கு வருவதென்றால், அதிக தூரம் செல்லவேண்டியிருப்பதோடு காலதாமஸமும் ஆகுமாகையால், ஜெர்மானியர் அந்தத்திசையில் சொற்பப் படைகளை அனுப்பி, அல்ஸேஸ்மாகாணத்தில் ஏராளமான படைகளைத் திரட்டி பெரு முயற்சி செய்யலாமென்று பிரஞ்சு சேனாதிபதி எண்ணினார். அதனால் அவர் பிரஞ்சு சேனையின் பெரும்பாகத்தையும் அல்ஸேஸ் மாகாணத்துக் கருகில் நிலை பெறச்

செய்தார். பெல்ஜியத்துக் கப்பால் சொற்ப பிரஞ்சு படைகளே இருந்தன.

ஆனால் ஜெர்மானியரின் நோக்கமும் செய்கையும் வேறு யிருந்தன. அவர்கள் பெல்ஜிய எல்லைக் கருகில் தான் தங்களுடைய சேனையின் பெரும்பாகத்தையும் குவித்து மிகவும் விரைவாய் பாரிஸ் நகரத்தை நோக்கிச் செல்ல முயன்றார்கள். அதனால் பெல்ஜியத்திலிருந்து புறப்பட்ட ஏராளமான ஜெர்மன் படைகள் தங்களை எதிர்த்து நின்ற நேசக்கக்ஷிப் படைகள் சொற்பமாயிருந்தபடியால், மிக்க எளிதாயும் விரைவாயும் முன்னேறிச் சென்றன.

## ஜெர்மானியர் பிரிட்டிஷாரைத் தாக்குதல்.

பெல்ஜியத்திலிருந்து புறப்பட்ட ஜெர்மன் படைகள் ஆகஸ்டு 22ந் தேதி பிரஞ்சு எல்லைக் கருகில்வந்து அங்கு பிரிட்டிஷ் படைகளையும் பிரஞ்சு படைகளையும் சந்தித்தன. யுத்தம் தொடங்கியவுடனே பிரிட்டிஷ் படைகளை பிரான்ஸுக்கு அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டன. பிரிட்டிஷ் படைகள் இங்கிலாந்திலிருந்து புறப்பட்டு இங்கிலீஷ் கடலைக்கடந்து பிரான்ஸில்வந்திறங்கி பெல்ஜியத்தை நோக்கி விரைந்து சென்றன.

ஆகஸ்ட் 22ந்தேதி பிரிட்டிஷ் படைகள் பெல்ஜிய எல்லையிலுள்ள மான்ஸ் நகரத்துக் கருகில் அணி வகுத்து நின்றன. மறுதினமே ஜெர்மானியர் பிரிட்டிஷ் படைகளை மான்ஸ் நகரத்திலும், பிரஞ்சு படைகளை ஷார்லிருய் நகரத்திலும்தாக்கிபின்வாங்கச்செய்தார்கள்.

மறுதினம் (ஆகஸ்டு 24ந் தேதி) மாலை, பிரிட்டிஷ் படைகள் வாலன்ஸீன் நகரத்துக்குக் கிழக்கே தங்கி, ஜெர்மானியரைத் தடுக்க முயன்றன. ஆனால் ஏராளமான ஜெர்மன் படைகள் 'மிக்க கடுமையாய்த் தாக்கி பிரிட்டிஷ் படைகளை மறுபடியும் பின் வாங்கும்படிச் செய்தன. ஆகஸ்ட் 26ந் தேதி இரவில் பிரிட்டிஷார் லாகாடோ நகரத்துக்கருகில் நிலைபெற்று ஜெர்மானியரைத் தடுத்து சண்டை செய்தார்கள். அன்று தினமும் மறுநாளும் ஜெர்மானியர் பிரிட்டிஷாரை ஏராளமான பீரங்கிகளால் தாக்கி சூழ்ந்துகொள்ள எத்தனித்தார்கள். பிரிட்டிஷ் படைகள் மிகவும் ஆபத்தான நிலைமையிலிருந்த போதிலும் பிரிட்டிஷ் சேனாபதியாகிய ஸர் ஜான் பிரன்சும், இரண்டு பிரிட்டிஷ் சேனைத் தலைவர்களாகிய ஸ்மித் டோரியன், டக்லஸ் ஹேக் ஆகிய இவர்களும் மிகவும் சாமர்த்தியமாய்ப் பின்வாங்கித் தப்பினார்கள். ஸிமித் டோரியன் தம்முடைய பிரிட்டிஷ் படைகளை, பெரிய ஆபத்தினின்றும் காத்ததை பிரிட்டிஷ் சேனாபதி புகழ்ந்திருக்கிறார். 26ந் தேதி ஸ்மித் டோரியன் தம்முடைய படைகளைப் பின்புறஞ் செலுத்துவதற்கான ஏற்பாடுகளை, தாமே நேரிலிருந்து செய்தார். பிரிட்டிஷ் பீரங்கிப் படையையும் குதிரைப் படையையும் போர்க்களத்தில் நிறுத்தி ஜெர்மானியரெல்லோரையும் தடுத்துக்கொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்தார். மற்ற பிரிட்டிஷ் படைகளெல்லாம் பின்வாங்கிவிட்டன. பிரிட்டிஷ் பீரங்கிப் படையும் குதிரைப் படையும் மிகுந்த சேதமடைந்த போதிலும் ஜெர்மானியரின் கடுமையான தாக்குதல்களை எல்லாம் தாங்கி நின்றன. பிரிட்டிஷ் சேனாபதி அவரைப்பற்றி புகழ்ந்திருப்பதை இங்கு குறிப்பிடவேண்டும். "நிதான புத்தியும் தைரியமும் மனவுறுதியும் அபூர்வமாய்ப் பெற்ற ஒரு சேனைத்தலைவர் நேரில் படைகளைச் செலுத்தியிராமற் போனால் ஆகஸ்ட் 26ந் தேதி யன்றுகாலையில் பிரிட்டிஷ் சேனையின் இடது பாகம் தப்பிப்பிழைத் திருக்காதென்று சொல்லத் தடையேயில்லை" என்று ஸர் ஜான் பிரன்சு, ஸ்மித்டோரியனைப்பற்றிப் புகழ்ந்திருக்கிறார்.

26ந் தேதி யன்று இரவும் பகலும் பிரிட்டிஷ் சேனை முழுவதும் பின்வாங்

கிச் சென்றுகொண்டிருந்தது. அவ்வாறு ஏராளமான ஜெர்மன் படைகள் பிரிட்டிஷாரை உக்கிரமாய்த்தாக்கிக் கொண்டிருந்ததால், சில பிரஞ்சுப் படைகள் அவர்களுடைய உதவிக்குச் சென்றன. ஆகஸ்ட் 28ந் தேதி வரையில் பிரிட்டிஷ் படைகள் பின்வாங்கிச் சென்று ஆய்ஸ் நதிக்கரையில் வந்து தங்கின.

நேசப்படைகள்.
புது மாதிரியாய் அணிவகுத்தல்.

பெல்ஜியத்திலிருந்து புறப்பட்டு பிரான்ஸுக்குள் நுழைந்து சென்ற ஜெர்மன்படைகள் ஏராளமான வன்மையைப் பெற்று மிகவும் விரைவாய் முன் சென்று வந்ததை பிரஞ்சு சேனாதிபதியாகிய ஜெனரல் ஜாப்ரே இப்போது கவனித்தார். ஜெர்மானியர் 6 தினங்களில் சுமார் 75 மைல் தூரம் முன்னேறிச்சென்ற வேகம் சாமான்யமல்ல. அதைத் தடுப்பதற்கு அங்குள்ள பிரஞ்சுப் படைகளின் வன்மையை அதிகரிக்கவேண்டுமென்று ஜெனரல் ஜாப்ரே தீர்மானித்தார். அவர் அல்ஸேஸ் மாகாணத்தில் அதிகமாய்த் திரட்டிவைத்திருந்த பிரஞ்சுப் படைகளில் சிலவற்றை, பிரிட்டிஷ் சேனைக்கருகில் கொண்டுவந்து நிறுத்தினார்.

அல்ஸேஸ் மாகாணத்து எல்லையில் பிரஞ்சு சேனையின் பெரும்பாகமும் யுத்த ஆரம்பத்தில் திரட்டப்பட்டு அந்த ஜெர்மன் மாகாணத்தின் மீது படையெடுத்தது. அங்குஜெர்மன்படைகள் அதிகமாயில்லாதபடியால் அந்த பிரஞ்சு படைகள் சில வெற்றிகளைப் பெற்று முன் சென்றன. ஆனால் சில தினங்களில் புதிய ஜெர்மன் படைகள் அவ்விடத்துக்குவந்து பிரஞ்சுப் படைகளைப் பின் தள்ளின. அந்த புதிய ஜெர்மன் படைகள் எங்கிருந்துகொண்டுவரப்பட்டன என்று தெரியவில்லை. ஆயினும் பெல்ஜியத்திலிருந்து புறப்பட்ட ஜெர்மன் சேனையின் வன்மை சிறிதுங் குறையாமலிருந்தது. ஆகையால் பிரஞ்சு சேனாதிபதியாகிய ஜெனரல் ஜாப்ரே தமது சேனையின் பெரும்பாகமும் அல்ஸேஸ் மாகாணத்துக் கருகிலிருப்பது அனாவசியமென்றுகருதி, அங்கிருந்து அநேக படைகளை பிரிட்டிஷ் சேனைக்கு உதவியாக அனுப்பினார்.

ஆகையால் பிரிட்டிஷ் சேனைக்கு இடதுபுறத்தில் ஒரு பிரஞ்சுப்படையும்வலது புறத்தில்மற்றொரு பிரஞ்சு படையும் அணிவகுத்து ஜெர்மானியரைத்தாக்கின. ஆய்ஸ் நதிக்கரையிலுள்ள கீஸ் என்னும் நகரத்தில் சண்டைநடந்ததில் பிரஞ்சுப்படைவெற்றியடைந்தது. ஆயினும் ஜெர்மன் துருப்புகள் மேற்கு பக்கமாய்வளைந்து சென்று மிகவும் கடுமையாய்த் தாக்கினபடியால்,நேசப்படைகளெல்லாம் பின்வாங்கும்படி நேர்ந்தது. அதனால், பிரிட்டிஷ் சேனைக்கருக்கில் இன்னும் சில பிரஞ்சுப்படைகளை அனுப்புவது அவசியமென்று ஜெனரல் ஜாப்ரே அறிந்துகொண்டார். பிரஞ்சுப்படைகள் பெரும்பாகமும் அல்ஸேஸ் மாகாணத்துக்கருகில் இருந்தபடியால், அங்கிருந்துஅவைகளை ஆய்ஸ்நதிக்கருகில் கொண்டுவருவதற்கு தாமஸமாகுமென்று கருதி, நேசப்படைகளை பாரிஸ் நகரத்துக் கருகில் பின்வாங்கும்படி அவர் உத்தரவு செய்தார். ஏனெனில், நேசப்படைகள் பாரிஸ் நகரத்துக்குக் கிழக்கில் வந்து சேர்வதற்குள்ளாக, அல்ஸேஸ் மாகாணத்திலிருந்து பிரஞ்சுப்படைகளைத் தருவித்துவிடலாமென்பது அவருடைய கருத்து. செப்டம்பர் 3ந் தேதி நேசப் படைகள் பாரிஸ் நகரத்துக்குக் கிழக்கிலுள்ள மாரன் நதியைத் தாண்டி, தெற்கு நோக்கிப் பின்வாங்கின. அவைகள் இன்னும் பின்வாங்கி ஸேன் நதிக்கரையில் நிலை பெறவேண்டுமென்று ஜெனரல் ஜாப்ரே உத்தரவு செய்தார்.

ஜெர்மானியரின் முன்னேற்றம்.

செப்டம்பர் 5ந்தேதி யன்று நேசப் படைகள் ஸேன் நதிக்கருகில் வந்து சேர்ந்தன. ஜெர்மானியர் இரண்டு

தினங்களுக்கு முன் மாரன் நதிக்கரையைத்தாண்டி முன் வந்தார்கள். பெல்ஜிய எல்லையிலிருந்து ஆகஸ்ட் 23ந் தேதி யன்று புறப்பட்ட ஜெர்மன் படைகள், பாரிஸ் நகரத்தை நோக்கி 11 தினங்களில் சுமார் 120 மைல் தூரம் முன்னேறி வந்தன. லக்ஸம்பர்க் நாட்டிலிருந்து புறப்பட்ட ஜெர்மன் இளவரசர், வர்டுன் நகரத்துக்கு வடக்கில் வந்து நிலைபெற்றூர். லொரேன் அல்ஸேஸ் இந்த மாகாணங்களிலிருந்து புறப்பட்ட ஜெர்மன் படைகள் சிறிது முன் சென்றதைத் தவிர வேறு விசேஷ நடவடிக்கைகளைத் தொடங்கவில்லை. அந்த ஜெர்மன் படைகளெல்லாம் ஒரே ஒழுங்காய் நிலைபெற்றிருந்தன. அதாவது, மாரன் நதிக்கருகில் வந்த ஜெர்மன் படைகளும் வர்டுனுக்கு வடக்கில் வந்த ஜெர்மன் படைகளும், லொரேன் அல்ஸேஸ் மாகாணங்களின் எல்லையிலிருந்த ஜெர்மன் படைகளும் ஒன்றோடொன்று சேர்ந்து வரிசையாய் அணிவகுத்து நின்றன.

## ஜெர்மானியரின் புதியநோக்கம்.

மேற்சொல்லிய விவரங்களிலிருந்து, ஜெர்மானியர் பாரிஸ் நகரத்துக்குக் கிழக்கில் மாரன்நதிக்கப்பால் வர்டுன் நகரத்துக் கருகில் வரையிலும் நிலைபெற்றூர்களென்று தெரியவரும். அதன் பிறகு ஜெர்மானியர் பாரிஸ் நகரத்தைப்பிடிக்க முயல்வார்களா? அவர்கள் பிரான்ஸின் மீது படையெடுப்பதாக உத்தேசித்து யுத்தத்தை ஆரம்பித்த போது, அவர்களுடைய முடிவான நோக்கம் இன்னதென்று நாம் திட்டமாய்ச் சொல்வதற்கில்லை. அவர்கள் பாரிஸ் நகரத்தைப் பிடிப்பதாக எண்ணியிருக்கலாம். ஏனெனில் பிரான்ஸ் தேசத்தின் தலைநகரமாகிய பாரிஸைப்பிடிப்பது அவர்கள் யுத்தநடவடிக்கைகளின் ஒரு முக்கிய நோக்கமாகக் கருதவேண்டும். பாரிஸ் நகரம் அத்தேசத்துக்குத் தலைமை ஸ்தலமாயிருப்பதோடு அந்த நகரத்திலிருந்து எல்லாத்திசைகளுக்கும் அநேக ரயில் பாதைகள் செல்கிற படியால், ராணுவ நடவடிக்கைகளுக்கு அந்த நகரம் மிகவும் சாதகமாயிருக்குமென்பதில் தடையில்லை. ஜெர்மானியருடைய ஆரம்பநோக்கம் எப்படியிருந்தபோதிலும், அவர்கள் பாரிஸ் நகரத்துக்குக் கிழக்கே வந்தவுடன் அவர்கள் அந்த நகரத்தைப் பிடிக்கும் நோக்கத்தைக் கைவிட்டார்கள் என்று மட்டும் நிச்சயமாய்த் தெரிகிறது.

ஜெர்மானியர் செப்டம்பர் 3ந்தேதி மாரன்நதியைக் கடந்தபோது, அவர்கள் எதிர்பாராத சில முக்கியமான சம்பவங்கள் வேறொரு திசையில் நடந்தன. செப்டம்பர் 2ந்தேதியன்று கிழக்கரங்கத்தில் ருஷியசேனையானது லெம்பர்க் நகரத்தில ஆஸ்டிரியப் படைகளை முறியடித்துவிட்டது. வேறு பல ஆஸ்டிரியப் படைகள் ருஷிய பூமியாகிய போலண்டில் மிகவும் ஆபத்தான நிலைமையில் சிக்கிக்கொண்டன. அதனல் ஜெர்மானியர் ஆஸ்டிரியருக்கு அச்சமயம் உதவி செய்யாவிட்டால, ஆஸ்டிரியச்சேனை செயலற்றுப் போய்விடுவதோடு ஆஸ்டிரியப் பிரதேசமும் ருஷியருக்கு சுவாதீனமாகிவிடும் போலிருந்தது. ஆகையால் ஜெர்மானியர் ஆஸ்டிரியருக்கு நேர்ந்த ஆபத்தைக் கருதி அவர்களுக்கு தக்ஷணமே உதவி செய்யத் தீர்மானித்தார்கள். ஆகையால் ஆகஸ்ட் மாசக் கடைசியிலும் செப்டம்பர் மாசத்துவக்கத்திலும் அநேக ஜெர்மன் படைகள் பிரான்ஸிலிருந்து புறப்பட்டு ஆஸ்டிரியாவுக்குச் சென்றன. இச்சம்பவத்தை மிகவும் முக்கியமானதாகக் கருதவேண்டும். ஏனெனில், ஜெர்மானியர் பாரிஸுக்கருகில் வந்து பிரஞ்சுச் சேனையுடன் முடிவானசண்டை செய்வதாக நினைத்திருந்த சமயத்தில், ஜெர்மானியருடைய சேனை பலஹீனமடைந்துவிட்டது.

பிரான்ஸின்மீது படையெடுத்துச் சென்ற ஜெர்மன் சேனையில் ஆகஸ்ட் 22ந்தேதியன்று சுமார் 100 டிவிஷன்கள் இருந்தன. (ஒரு டிவிஷன் சுமார் 40,000 பேர் கொண்டது.) பிரஞ்சு பிரிட்டிஷ் சேனையில் 75 டிவிஷன்கள் இருந்தன. செப்டம்பர் மாத ஆரம்பத்தில் ஜெர்மன் சேனையில் 80 டிவிஷன்கள் தானிருந்தன. பிரஞ்சு பிரிட்டிஷ் சேனைகளில் 95 டிவிஷன்கள் இருந்தன. புதிய பிரிட்டிஷ் படைகளும் புதிய பிரஞ்சு படைகளும் சேர்க்கப்பட்டதால் நேசக்கக்ஷியின் பலம் அவ்வாறு அதிகரித்து விட்டது.

ஜெர்மன் சேனை அவ்வாறு பலஹீனமடைந்த போதிலும், ஜெர்மன் சேனுதிபதி மிகவும் துணிகரமான யுத்த தந்திரத்தை நிறைவேற்றத் தீர்மானித்தார். பலஹீனமான ஜெர்மன் சேனையைக் கொண்டு பாரிஸ் நகரத்தைச் சுற்றியுள்ள விஸ்தாரமான கோட்டைகளைச் சூழ்ந்து முற்றுகை போடுவது சாத்தியமல்ல. மேலும், பாரிஸ் கோட்டைகளை முற்றுகை போடுவதற்கு முன்னுல், அங்குள்ள பிரஞ்சுபடைகள் எல்லாவற்றையும் தெற்கு திசையில் வெகுதூரம் பின் தள்ளவேண்டும். பிரஞ்சு சேனை முழுவதும் பாரிஸ் நகரத்திலிருந்து வெகு தூரம் விலகிச் சென்றுலொழிய பாரிஸை ஜெர்மானியர் முற்றுகை போடமுடியாது. ஆனுல் பிரஞ்ச சேனையின் பலம் அதிகரித்திருந்தது; பிரஞ்சு சேனையானது இடது புறத்தில் பாரிஸ் நகரத்துக் கோட்டைகளை ஆதரவாகவும் வலதுபுறத்தில் வர்டுன்கோட்டைகளை ஆதரவாகவும் பெற்றிருந்தது. பிரஞ்சு சேனை பாரிஸிலும் வர்டுனிலும் வலுவாய் ஊன்றிக்கொண்டு அவ்விரண்டுக்குமிடையில் அரைவட்டமாக வருத்துநின்றது. அவ்வாறு இரண்டு பக்கங்களிலும் வலுவாய் ஊன்றியிருந்த பிரஞ்சுசேனை முன்புறத்தில் போர்புரியத் தயாராயிருக்கும்போது, ஜெர்மானியர் பாரிஸ் நகரத்தைப் பிடிக்க முயல்வது சரியல்ல வென்று நிச்சயித்தார்கள். ஆகையால் ஜெர்மானியர், பிரஞ்சு சேனைக்கு ஆதாரமாயுள்ள வர்டுனைப் பிடிப்பதாக நிச்சயித்தார்கள். அவ்வாறு ஜெர்மானியர் வர்டுனைவசப்படுத்திக்கொண்டால் பிரஞ்சுசேனை தனது ஒரு பக்கத்துப் பிடியை இழந்து பலஹீனமடையும். பிரஞ்சுசேனை அப்படி பலஹீனமடைந்தவுடன் அதை முறியடிப்பதாக ஜெர்மானியர் எண்ணினுர்கள்.

வர்டுன் கோட்டை மிகவும் முக்கியமான ஸ்தானத்தில் அமைந்து, பிரஞ்சுக்காரருக்கு எவ்வளவு சகாயமாயிருந்ததென்பதை கவனிக்கவும். ஜெர்மானியர் பெல்ஜியத்தின் வழியாய் பிரான்ஸின் மீது படையெடுத்த போது, பிரஞ்சு சேனை எவ்வாறு பின் வாங்கிச் சென்றது? வர்டுனுக்கு வடக்கே பெல்ஜிய எல்லை வரையில் வியாபித்திருந்த பிரஞ்சு படைகள் வர்டுன் நகரத்தில் ஊன்றிக்கொண்டு அந்நகரத்துக்கு மேற்கே சுழன்று வந்தன. பாரிஸுக்கும் வர்டுனுக்கும் இடையிலிருந்த பிரஞ்சு சேனையை முறியடிக்கவேண்டுமானுல், பாரிஸையாவது வர்டுனையாவது ஜெர்மானியர் பிடித்துத் தீரவேண்டும். பாரிஸை பிடிப்பதைவிட வர்டுனைப் பிடிப்பதே ஜெர்மானியருக்கு எளிது. ஏனெனில் வர்டுன் கோட்டைகள் ஜெர்மன் எல்லைக்கு அருகிலுள்ளது. ஜெர்மன் தேசத்திலிருந்து வர்டுனுக்கு நல்ல ரயில்பாதை செல்கிறது. தவிர, பாரிஸ் நகரத்தின் மீது ஜெர்மானியர் மோகம் வைத்திருந்தார்கள் என்று பிரஞ்சுக்காரர் எண்ணி அவர்கள் அநேக பிரஞ்சு படைகளை பாரிஸுக்கருகில் திரட்டக்கூடும். ஆதலால் வர்டுனுக்கருகில் அவ்வளவாக பிரஞ்சு படைகள் இருக்கமாட்டா என்று ஜெர்மானியர் எண்ணினுர்கள். ஆகையால் செப்டம்பர் 5ந்தேதி யன்று வர்டுனைப்பிடிப்பதாகவே ஜெர்மானியர் தீர்மானித்தார்கள். ஜெர்மானியர் இந்த நோக்கத்தை

நிறைவேற்றுவதற்காக, வர்டூனிலிருந்த பிரஞ்சுபடைகளை வேறு திக்கில் போய்விடும்படிசெய்ய ஒருயோசனை செய்தார்கள். பாரிஸ் நகரத்துக்கருகிலிருந்த ஜெர்மன் படைகள் வெகு துணிகரமாய் முன்சென்று ஏராளமான பிரஞ்சு படைகளை அத்திசையில் இழுத்துக்கொள்ள முயன்றன. பாரிஸ் நகரத்துக்கருகில் வந்த ஜெர்மன் படைகளுக்கு ஜெனரல் வான்கிளக் தலைவராயிருந்தார். ஆகையால் அவருடைய ஜெர்மன் படைகள் வெகு துணிகரமாய் முன் சென்று ஏராளமான பிரஞ்சு படைகளை அத்திசையில் இழுத்துக்கொள்ள முயன்றன. ஆகையால் ஜெர்மானியர் செப்டம்பர் 5-ந்தேதி பாரிஸுக்குக் கிழக்கில் மாரன் நதிக்கரையில் வந்தபோது, வர்டூன் கோட்டைகளைப் பிடிப்பதாக நோக்கங் கொண்டார்கள்.

## பிரஞ்சுக்காரரின்.
## புதிய நோக்கம்.

பிரஞ்சு சேனாதிபதியாகிய ஜெனரல் ஜாப்ரே, பாரிஸ் நகரத்துக்கருகில் பிரஞ்சுபடைகளை வரவர அதிகப்படுத்தினாரென்று ஏற்கனவே சொல்லியிருக்கிறோம். அவர் அல்ஸேஸ் மாகாணத்திலிருந்த பிரஞ்சு படைகளில் பலவற்றை பாரிஸ் நகரத்துக்கருகிலிருந்த பிரிட்டிஷ் சேனைக்கு உதவியாய் அனுப்பிக்கொண்டிருந்தார். செப்டம்பர் 5-ந் தேதியன்று மாரன் நதியைத் தாண்டின ஜெனரல் வான்கிளக் தம்முடைய ஜெர்மன் படைகளை மாரன் நதிக்கப்பால் தெற்கு நோக்கி செலுத்தினர். அந்த ஜெர்மன் சேனாபதிக்கு மேற்கில் பாரிஸ் நகரம் இருந்தது. ஆகையால் பாரிஸ் நகரத்திலிருந்து சில பிரஞ்சு படைகள் புறப்பட்டு அந்த ஜெர்மன் சேனாபதியை பக்கவாட்டில் தாக்கவேண்டுமென்று ஜெனரல் ஜாப்ரே யோசனை செய்தார். அதாவது, ஜெனரல் வான்கிளக், மாரன் நதியைத்தாண்டி தெற்கே போய்க்கொண்டிருந்தார். ஆகையால் பாரிஸிலிருந்து பிரஞ்சு படைகள் புறப்பட்டு மாரன் நதியிலுள்ள பாதைகளைப் பிடித்துக்கொண்டால், ஜெர்மன் சேனாபதி பின் புறம் தப்பிச் செல்ல முடியாமல் சிக்கிக்கொள்வார், இந்த நோக்கத்துடன் ஜெனரல் ஜாப்ரே அநேக பிரஞ்சு படைகளை பாரிஸ் நகரத்தில் திரட்டி வைத்தார்.

## மாரன் நதிச்சண்டை.

ஜெனரல் வான்கிளக் மாரன் நதியைக் கடந்தவுடன் தமது ஜெர்மன் படைகளை ஸேன் நதிநோக்கிச் செலுத்தினர். அப்போது நடந்த பெருஞ் சண்டையானது மிக்க கடுமையாயும் பிடிவாதமாயுமிருந்ததோடு, மிகவும் முக்கியமானதாகவும் கருதப் படுகிறது. ஜெனரல் வான்கிளக், மாரன் நதியைக் கடந்து செல்வதற்கு முன்னால், அந்த நதியும் அவுர்க் நதியும் சேருகிற இடத்துக்கருகில் காவற் படைகளை வைத்தார். அவ்வாறு அவுர்க் நதிக்கருகில் அவர் சில காவற் படைகளை வைத்து விட்டு, மற்ற ஜெர்மன் படைகளை மாரன் நதிக்குத் தெற்கே செலுத்தினர். அவருடைய நோக்கம் என்னவென்றால் தமக்கெதிரிலுள்ள பிரஞ்சு படைகளை உக்கிரமாய்த் தாக்கி அங்கு இன்னும் பல பிரஞ்சு படைகளை இழுத்துக் கொள்வதாகும். அவ்விதம் செய்தால், வர்டூனுக் கருகிலிருந்த பிரஞ்சுப் படைகள் பலஹீனமடைந்து தோற்று விடக் கூடுமென்று ஜெர்மானியர் நினைத்தார்கள்.

ஜெனரல் வான்கிளக் மாரன் நதிக்குத் தெற்கே முன் சென்றபோது அவருக்குத் தென் மேற்கில் பிரிட்டிஷ் சேனையும் தெற்கில் 5-வது பிரஞ்சு சேனையுமிருந்தன. அவருக்குப் பின் புறத்திலும் ஒரு பிரஞ்சு சேனை விரைவாய்ச் சென்று தாக்கியது. அதாவது பாரிஸிலிருந்து 6-வது பிரஞ்சு சேனை புறப்பட்டு மாரன் நதியும் அவுர்க் நதியும்




கூடுகிற இடத்தில் சென்று தாக்கியது. அவ்வாறு அவர் மூன்று பக்கங்களிலும் வலுவான நேசப்படைகளால் சூழப்பட்டிருந்த போது, அவர் முன்புறஞ் சென்று 5-வது பிரஞ்சு சேனையின் மீது விழுந்து தாக்கினது மிகவும் துணிகரமான செயலென்றே சொல்லவேண்டும்.

### ஜெர்மானியர் மூன்று பக்கங்களிலும் தாக்கப்பட்டனர்.

செப்டம்பர் 6ந் தேதியன்று பிரிட்டிஷ் சேனை முன்சென்று ஜெர்மன் படைகளின் பக்க வாட்டில் தாக்கிற்று. அதே தினத்தில் அவுர்க் நதிக் கரையிலிருந்த ஜெர்மன் காவற் படையை 6-வது பிரஞ்சு சேனை தாக்கிற்று. அவுர்க் நதிக்கரையில்தான், சண்டை மிகவும் உக்கிரமாயும் நீடித்தும் நடந்தது. வனேனில் பிரஞ்சுப் படைகள் அங்குள்ள பாதைகளைப் பிடித்துக் கொண்டு ஜெர்மானியரின் பின்புறத்து வழிகளை மறித்து விடவேண்டுமென்று ஜெனரல் ஜாப்ரே முக்கிய நோக்கங்கொண்டிருந்தார். அவுர்க் நதிக் கரையில் 5 ஜெர்மன் டிவிஷன்களும் அநேக பெரிய பீரங்கிகளுமிருந்தன. இந்த ஜெர்மன் படைகளை தோற்கடிப்பதற்காக ஜெனரல் ஜாப்ரே

6-வது பிரஞ்சு சேனையை அனுப்பினார். அந்த சேனையில் 7 பிரஞ்சு டிவிஷன்கள் இருந்தன. அவுர்க் நதிக்கரையிலிருந்த ஜெர்மன் காவற் படையைநம்பியே ஜெர்மன் சேனபதி முன்புறஞ்சென்று சண்டை செய்துகொண்டிருந்தாராகையால், அந்த காவற்படை தோல்வி யடையாமலிருப்பது அவருக்கு அத்தியாவசியமாகும். அந்த ஜெர்மன் காவற்படை அந்த ஸ்தானத்தின் முக்கியத்தை செவ்வையாய் அறிந்துமிக்கபிடிவாதத்துடன் ஓயாமற்சண்டை செய்தது. 6-வது பிரஞ்சு சேனை அதிக பலங்கொண்டு, மூன்று தினங்களாக மிக்க சவுரியங்காட்டி போர் செய்து, வெற்றியும் தோல்வியும் மாறி மாறி யடைந்ததால் எவ்வித முடிவான பலனும் கிடைக்கவில்லை. ஜெனரல் ஜாப்ரே அந்த 6-வது பிரஞ்சு சேனைக்கு இன்னுஞ் சில துணைப் படைகளை அனுப்பியிருந்தால் அதற்கு வெற்றி கிடைத்திருக்கலாம்; ஆனால் வர்டூன் பிரதேசத்தில் அநேக ஜெர்மன் படைகள் பயங்கரமான போர் தொடங்கி விட்டபடியால் கையிருப்பிலுள்ள பிரஞ்சு படைகளை வர்டூனுக்கு அனுப்பவேண்டிவந்தது; அவுர்க் நதிக்கு துணைப்படைகளை அனுப்ப முடியவில்லை. அதனால் அவுர்க் நதியை 6-வது பிரஞ்சு சேனை விரைவாய்த் தாண்டி முன் செல்ல முடியவில்லை. 6, 7, 8ந்தேதிகளில் ஜெர்மன் காவற்படைகள் அவுர்க் நதிக்கரையிலிருந்த பிடிவாதத்துடன் சண்டை செய்து மடிந்துகொண்டிருந்தபோது, அதே தினங்களில் ஜெனரல் வான் கிளக் தெற்கு திசையில் செலுத்திய ஜெர்மன் படைகளை பிரிட்டிஷ் சேனை தாக்கிற்று. 8-ந்தேதிக்குள்ளாக, பிரிட்டிஷ் சேனையும் 5வது பிரஞ்சு சேனையும் சேர்ந்து ஜெனரல் வான் கிளக்கினுடைய படைகளைப் பின் வாங்கச் செய்தன. ஜெனரல் வான் கிளக் மாரன் நதிக்குப் பின் வாங்கும்படித் தள்ளப்பட்டார். வர்டூன் பிரதேசத்தில் ஜெர்மன் படைகள் இன்னமும் முடிவான வெற்றியை அடையவில்லை. ஆகையால், ஜெனரல் வான் கிளக் அதற்குள்ளாகப் பின் வாங்கிப் போய் விடக்கூடாதென்று நிச்சயித்து அவர் கடைசியான பிரயத்தனம் செய்தார். அவர் பின் வாங்கிச்சென்றதை நிறுத்தி மாரன் நதிக்கரையில் பெரும் போர் விளைப்பது போல தமது படைகளை யெல்லாம் அணிவகுத்து மிகவும் கடுமையாகத்தாக்க ஆரம்பித்தார். அவர் வர்டூன் பிரதேசத்தில் நடந்த சண்டையின் பலனை அச்சமயம் எதிர் பார்த்திருந்தார்.

### வர்டூனில் ஜெர்மானியரின் பெரு முயற்சி.

வர்டூன் பிரதேசத்தில்தான் ஜெர்மானியர் முக்கியப் பிரயத்தனம் செய்வதாக ஏற்கனவே தீர்மானித்தார்களென்று சொல்லியிருக்கிறோம். வர்டூன் கோட்டைகளை ஜெர்மானியர் மூன்று பக்கங்களிலும் தாக்கினார்கள். வர்டூன் நகரம் மியுஸ் நதிக்கரையிலிருக்கிறது. வர்டூனுக்குத் தெற்கே மியுஸ் நதியின் இரண்டு கரைகளிலும் அநேக குன்றுகளும் காடுகளும் இருக்கின்றன. இரண்டு கரையின் ஓரமாக குன்றுகளின் மேல் அநேக கோட்டைகள் கட்டப்பட்டிருக்கின்றன. அப்படிப்பட்ட வலுவான பிரதேசத்தை ஜெர்மானியர் வசப்படுத்திக்கொள்ள எண்ணினார்கள். வர்டூன் கோட்டைகளை ஜெர்மானியர் மூன்று பக்கங்களிலும் தாக்கினார்கள். ஜெர்மன் இளவரசர் வர்டூனுக்கு வடக்கிலிருந்த 3-வது பிரஞ்சுசேனையைப் பின் தள்ளி மியுஸ் நதியின் மேற்குக்கரையை நோக்கி அச்சேனையை நெருக்கிக் கொண்டிருந்தார். பவேரிய இளவரசர் மியுஸ் நதியின் கிழக்குக் கரையை நோக்கி 2-வது பிரஞ்சு சேனையைப் பின் தள்ளிக்கொண்டே சென்றார். 8-ந்தேதியில் வர்டூனுக்கு வடக்கிலும், அந்நகரத்துக்குத் தெற்கே

மியுஸ்நதியின் இருகரைகளிலும் அந்த பிரஞ்சு சேனைகள் ஜெர்மானியரால் நெருக்கப்பட்டு கடுமையாய்த் தாக்கப்பட்டன. அந்த பிரஞ்சு சேனைகள் மியுஸ் நதியின் இருகரைகளிலுள்ள கோட்டைகளிலும் குன்றுகளிலும் காடுகளிலும் நிலை பெற்று ஜெர்மனியரின் உக்கிரத்தைத் தாங்கிக்கொண்டனர். ஜெர்மானியர் வர்டூனுக்கு 20 மைல் தெற்கே மியுஸ் நதிக்கரையிலுள்ள செண்ட் மிஹில் ஸ்தலத்தைப் பிடித்தனர். ஜெர்மானியர் தங்களுடைய முற்றுகை பீரங்கிகளிற் சில வற்றைக்கொண்டு வந்து சில கோட்டைகளைத் தகர்த்தனர். ஸெண்ட் மிஹிலுக்கு வடக்கிலுள்ள டிரயன் கோட்டையைத்தகர்த்தனர். ஆனால் அவ்வாறு ஒவ்வொரு கோட்டையும் தகர்த்து பிறகு காலாட்படைகளால் தாக்கிப் பிடிப்பதற்குப் போதுமானசாவகாசமும் படை பலமும் ஜெர்மானியருக்கில்லை. வர்டூனைப்போன்ற வலுவான பிரதேசத்தை விரைவாய் வசப்படுத்திக்கொள்வதற்கு ஜெர்மனியர் ஏராளமானபலத்தைப்பெற்றிருக்கவேண்டும். அவர்கள் ஆஸ்டிரியருக்கு உதவிசெய்ய அநேக படைகளை ஏற்கனவே அனுப்பிவிட்டார்களென்று சொல்லியிருக்கிறோம். ருஷியர் கிழக்கரங்கத்தில் வெற்றியடைந்ததினால், மேற்கரங்கத்தில் ஜெர்மனியரின் நிலைமை எவ்வாறு பலவீனப்பட்ட தென்பதை அறியவும். ஜெர்மானியர் வர்டூனைப் பிடிக்க சாத்தியப்படவில்லை; அதனால் பாரிஸைப்பிடிக்கும் எண்ணத்தையும் கைவிடும்படி நேரிட்டது.

## ஜெனரல் வான் கிளக் பின்வாங்கினர்.

பாரிஸுக்குக் கிழக்கே மாரன் நதிக்கரையில் கடும் போர்செய்து வந்த ஜெனரல் வான்கிளக் மூன்று பக்கங்களிலும் பிரஞ்சுப் படைகளாலும் பிரிட்டிஷ் படைகளாலும் தாக்கப்பட்டு மிகுந்த அபாய நிலைமையிலிருந்தார், 9, 10ந் தேதிகளில் அவர் வடக்கிலுள்ள எய்ஸன் நதிக்குப் பின்வாங்கும் பொருட்டு சகல ஏற்பாடுகளையும் செய்தார். மாரன் நதிக்கரையிலும் அவுர்க் நதிக்கரையிலும அவர் சில ஜெர்மன் பின்படைகளை வைத்து நேசப்படைகள் தம்மை எய்ஸன் நதிக்குப் பின் தொடர்ந்து வாராமல் தடுத்தார். அந்த நதிகளில் காவலாயிருந்த பின்படைகள் சேதத்தை லக்ஷியஞ்செய்யாமல் 9, 10 ந் தேதிகளில் அதிசயமான பராக்கிரமத்துடன் போர்புரிந்தன. 10ந் தேதி யன்று நேசப்படைகள் முன் சென்றபோது அந்த பிரதேசம் காலியாயிருந்தது. ஏனெனில் அங்கிருந்த ஜெனரல்வான் கிளக் தமது படைகளையெல்லாம் ஆச்சரியமான வேகத்துடன் எய்ஸன் நதிக்குக் கொண்டு போய் விட்டார். பெரிய பிரங்கிகளும் துருப்புகளும் தளவாடங்களும் ஏராளமான மோட்டார்களில் ஏற்றப்பட்டு இரவும் பகலுமாய் விரைந்து சென்றன ஆனால் மாரன் நதிக்கரையிலிருந்த ஜெர்மன் பின்படைகள் நேசக்கக்ஷியால் உக்கிரமாய்த் துரத்தப்பட்டு அதிகசேதமடைந்தன. 13 ஜெர்மன் பீரங்கிகளும், 2000 ஜெர்மன் துருப்புகளும் ஏராளமான தளவாடங்களும் நேசப்படைகளால் பிடிக்கப்பட்டன.

செப்டம்பர் 11 தேதியோடு மாரன் நதிச்சண்டை முடிந்தது. ஜெனரல் வான் கிளக் எய்ஸன் நதிக்குப்பின் வாங்கி அங்கு நிலைபெற்றபோது, வர்டூன் பிரதேசத்தில் முன்னேறியிருந்த ஜெர்மன் படைகளும் விரிசைக்கிரமமாய்ப் பின்வாங்கி ஒழுங்கான நிலைமையில் நிலைபெற்றன.

## வெற்றியின் சிறப்பு.

பிரிட்டிஷ் சேனைக்கும் பிரஞ்சு சேனைக்கும் சேனாதிபதி ஸ்தானத்தை வகித்த ஜெனரல் ஜாப்ரே ஜெர்மானியரை பக்கவாட்டில் தாக்குவதற்கு யோசனை செய்த யுத்த தந்திரம் நல்

லயலல் கொடுத்தது. ஜெனரல் வான்கின் செலுத்திய ஜெர்மன் படைகளை பக்கவாட்டில் தாக்கி அவருக்குப் பின்புறத்திலுள்ள வழிகளைப் பிடித்துக் கொண்டு அவருடைய படைகளை அழித்து விடவேண்டுமென்று ஜெனரல் ஜாப்ரே நோக்கங் கொண்டிருந்தார். ஜெனரல் ஜாப்ரே பாரிஸிலிருந்து வேறு பிரஞ்சு சேனையை அனுப்பினர். அந்த பிரஞ்சுசேனை மாரன் நதிக்குக்குறுக்கே செல்கிற பாதைகளைப் பிடித்துக்கொள்ள முடியவில்லை யாயினும், அங்கிருந்த ஜெர்மன் படைகளைப் பின்வாங்கும்படிச் செய்ததென்பதில் சந்தேகமில்லை. ஜெர்மானியர் ஆகஸ்ட் 23ந் தேதியிலிருந்து தடுத்தற்கரிய வேகமும் விரைவுங்கொண்டு, பிரிட்டிஷ் படைகளையும் பிரஞ்சுபடைகளையும் சேர்த்துப் பின்தள்ளி பாரிஸுக்கு கிழக்கே பெரும் போர்விளக்க அணிவகுத்தபோது, ஜெனரல் ஜாப்ரே அவர்களை மிக்கத் துணிகரமாய்த் தாக்கிப் பின்னடையச் செய்த தானது சிறந்த வெற்றியாகக்கருதவேண்டும். ஜெர்மானியர் ஜயசீலராய் வெள்ளம்போல புரண்டு வந்ததை அவ்வாறு ஜெனரல் ஜாப்ரே திடீரென்று பின் புறம் திரும்பியது சாமான்ய காரிய மல்ல. பிரஞ்சு கவர்ண்மெண்டும் ஜனங்களும் காலிசெய்துவிட்ட தலைநகரமாகிய பாரீஸ் நகரத்துக்கு கிழக்கே 15 மைல் தூரத்தில் ஜெர்மானியரின் குதிரைப் படைகள் வட்ட மிட்டும் ஜெர்மன் பீரங்கிகள் அதிர்ந்துகொண்டுமிருக்க, பிரான்ஸ் தேசத்தின் கிழக்கு வாசற்படியாகிய வாடூனை ஜெர்மானியர் பயமுறுத்திக் கொண்டிருக்க, நேசப்படைகள் சற்றும் தளர்ச்சி யடையாமல் மிகுந்த தீரங்காட்டி வெற்றி பெற்றார்கள்: மாரன் நதிச்சண்டையின் வெற்றியால் பாரிஸ்காக்கப் பட்டது; வர்டூனும் தப்பி விக்கப்பட்டது; ஜெர்மன் சேனை முழுவதும் எய்ஸன் நதிக்குப் பின்தள்ளப் பட்டது.

### எய்ஸன் நதிச் சண்டை.

#### ஜெர்மானியரின் புதிய யுத்தமுறை.

ஜெர்மானியர் ஆஸ்டிரியருக்குக் கிழக்கரங்கத்தில் உதவிசெய்ய நேரிட்டதால், பிரான்ஸில் சண்டை செய்த ஜெர்மன் சேனை பலஹீனமடைந்து மாரன் நதிச்சண்டையில் தோல்வி யடைந்ததென்பதை அவர்கள் அறிந்தார்கள். கிழக்கரங்கத்திலோ ருஷிய சேனை வெற்றிமேல் வெற்றி அடைந்து ஏராளமான வன்மை கொண்டிருந்தபடியால் இனி அத்திசையிலேயே ஜெர்மானியா தங்களுடைய ராணுவ பலத்தைத் திருப்பவேண்டிவரு மென்பதையும் அவர்கள் அறிந்தார்கள். நேசப்படைகளின் பலம் நாளுக்கு நாள் அதிகரித்து வந்ததையும் அவர்கள் அறிந்தார்கள். ஆகையால், மாரன் நதிச் சண்டையில் தோல்வியடைந்து எய்ஸன் நதிக்குப் பின்வாங்கி நிலை பெற்ற ஜெர்மன் சேனை யானது இனி புதிய துணைப் படைகளை எதிர்பார்ப்பதில் பயனில்லை. அதனால் ஜெர்மன் சேனை எய்ஸன் நதிக்கரையில் வெகுகாலம் வலுவாய் நிலை பெற்றிருந்து நேசப் படைகளைத் தடுத்து நிற்பதே நோக்கமாகக் கொண்டது. யுத்தத்தின் ஆரம்பத்தில் பிரான்ஸின்மீது ஜெர்மன் சேனை தொடங்கின படை யெடுப்பை இனி மேலும் அது தொடர்ந்துசெல்ல உத்தேசிக்கவில்லை. கிழக்கரங்கத்தில் ஜெர்மானியர் ருஷிய சேனையின் வன்மையை அடக்கிவிட்ட பிறகு தான், அங்கிருக்கும் ஜெர்மன் படைகளிலிருந்துபிரான்ஸுக்குத் துணைப்படைகள் அனுப்புவது சாத்தியமாகும். அவ்விதஞ்செய்வதற்கு வெகுகாலம் ஆகுமாதலால், பிரான்ஸில் ஜெர்மன் சேனை வலுவான பிரதேசத்தில் அசையாமல் நிலை பெற்றிருக்கவேண்டும். ஆகையால் எய்ஸன் நதிக்கரையில் ஜெர்மன் சேனை நிலைபெற்றபோது, அதின் நோக்கம் என்னவென்றால், நாளுக்கு நாள் விருத்தியாகிவந்த நேசப்படைகளை முன்னேற விடாமல் தடுத்து அ




வைகளின் வன்மையை அடக்கி வைத்திருப்பதாகும். ஜெர்மன் சேனை தன்னல்வெல்லப்பட்ட பூமியைஇழக்காமலும் தானிருந்த இடத்தை விட்டு அசையாமலும் இருப்பதற்கே முயற்சி செய்தது.

அந்த நோக்கம் கைகூடுவதற்காக ஜெர்மானியர் எவரும் ஆச்சரியப்படும்படியானதோர் நூதன யுத்த முறையை அனுசரித்தார்கள். பூமிக்கடியில் ஆழமான அகழ்களையும் குகைகளையும் தோண்டி அவைகளைப் பற்பல உபாயங்களால் காவல் செய்து, துருப்புகளும் பீரங்கிகளும் குதிரைகளும் பூமியின் கீழாகவே சகல நடவடிக்கைகளையும் நடத்தும்படியாக ஏற்பாடு செய்யப்பட்டது. அகழ்களுக்கு முன்னால், இரும்பு முள்களையுடையகம்பிகள் விஸ்தாரமாய்ப்பெரிய வலை போலப் பின்னிவைக்கப்பட்டு எதிரிகள் அருகில் நெருங்கவிடாமல் தடுக்கப்பட்டார்கள். அநேக துப்பாக்கிகளின் பலத்தை அமையப்பெற்ற "மெஷின் பீரங்கிகள்" ஏராளமாய் அகழ்களில் வரிசையாய் வைக்கப்பட்டன. பூமியின் கீழ் ஆழமாய்த்தோண்டப்பட்ட குகைகளுக்குள்ளே பெரிய பீரங்கிகள் யுக்தியாய் ஒளித்து வைக்கப்பட்டன. இவ்வாறு பல பீரங்கிகளால் ஜெர்மானியரின் போர் முனை காவல் செய்யப்பட்டு முற்காலத்துக் கோட்டைகளை விட அதிக வன்மையைப் பெறும்படி செய்யப் பட்டது. பூமிக்கடியில் ஒளிந்த வண்ணமாய் சகல விதமான படைகளும் போர் புரியும்படி ஜெர்மானியர் அனுஷ்டித்த யுத்த முறையானது யாவரும் எதிர்பாராத நூதன மென்றே சொல்லவேண்டும்.

இந்த மகாயுத்தம் தொடங்குவதற்குமுன்னால், ஜெர்மானியர் தங்களுடைய சத்துருக்களை எவரும் எதிர்பாராத வேகத்துடன் தாக்கி அழிப்பதிலேயே மிகுந்த சாமார்த்தியம் பெற்றவர்களென்று கருதப் பட்டார்கள். ஆனால் இந்த யுத்தம் தொடங்கிய பின், ஜெர்மன் சேனையைப் பற்றிய அந்த அபிப்ராயம் வேறுவிதமாய்மாறியது. ஜெர்மன் சேனை தன் சத்ருக்களைத்தாக்குவதைவிட, தடுத்து நிற்பதில் அதிக சாமார்த்தியங் கொண்டதாகத் தெரிய வந்தது. ஜெர்மானியர் செப்டம்பர் மாதம் 12 ந் தேதி எய்ஸன் நதிக்கரையில் நிலை பெற்றிருந்த போர் முனையானது ஒன்றரை வருஷத்துக் கதிகமாகியும் அநேகமாய் மாறாத ஸ்திதியிலேயே காணப்படுகிறது. அந்த அரண்களின் வன்மையும் யுத்த முறையின் சிறப்பும் அப்படிப்பட்டவைகளாகும். நேசக்கக்ஷியாரும் அந்த யுத்தமுறையை அனுசரித்து ஜெர்மன் போர் முனைக்கெதிரில் தாங்களும் அசையாமல் நிலை பெற்றார்கள். அவ்வாறு இருகக்ஷியாரும் பூமிக்கடியில் நிலைபெற்ற பிறகு, ஜெர்மானியர் முடிவில் தாங்கள் எவ்வாறு நேசப்படைகளை வெல்வதாக உத்தேசித்தார்கள்? அளவிறந்தவேகமும் உக்கிரமும் வன்மையுங் கொண்ட மிகப்பெரிய பீரங்கிகளாலல்லாமல் வேறெவ்விதத்தாலும் அந்த அரண்களை அழிக்க முடியாது. பூதம் போன்ற பெரிய பீரங்கிகளை ஏராளமாய்ச் சேர்த்து வரிசைமேல் வரிசையாய் அடுக்குவதால் பூகம்பத்தைவிட மிகக் கடுமையாய் பூமியைப் பிளந்து புரட்டினாலொழிய அந்த அரண்களை அழிப்பதென்பது சாத்தியமல்ல. அப்படிப்பட்ட வன்மையுடைய பீரங்கிகளை தாங்கள் பெற்றிருப்பதாக எண்ணி ஜெர்மானியர் தைரியமாயிருந்தார்கள். ஆனால் நேசக்கக்ஷியாரும் பெரிய பீரங்கிகளையும் குண்டுகளையும் ஏராளமாய் செய்யத் தொடங்கினார்கள்.

நேசக்கக்ஷியின் புதிய நடவடிக்கைகள்.

1914-ம் வருஷம் செப்டம்பர் மீ 12-ந்தேதி ஜெர்மன் சேனை எய்ஸன் நதிக்கரையில் பூமியின் கீழ் தோண்டப்பட்ட அரண்களில் நிலை பெற்றது. அந்தப் போர் முனையை நேசக்கக்ஷியார் இரவும் பகலும் ஓயாமல் தாக்கினார்கள்; ஜெர்மானியரும் பதிலுக்குப்பதில் தாக்கினார்கள். முடிவில் எவ்வித பலனும் கிடைக்காதென்பதை ஜெனரல் ஜாப்ரே அறிந்து கொண்டார். ஆகையால், எய்ஸன் நதிக்கரையிலிருந்து தாக்குவதாக அவர் நிச்சயித்தார். மாரன் நதிச்சண்டை நடந்தபோது, 6-வது பிரஞ்சு சேனை மேற்கு திசையில் அவுர்க் நதிக்கரையில் தாக்கினதை 67 வது பக்கத்திலுள்ள படத்தில் காணலாம். அதே மாதிரியாக, எய்ஸன் நதிக்கரையிலிருந்த ஜெர்மன் படைகளை மேற்குதிசையில் பிரஞ்சுக்காரர் தாக்கினார்கள்; அதாவது பிரஞ்சுக்காரர் ஆய்ஸ் நதிக்கரையில் வந்து அந்நதி எய்ஸன் நதியுடன் சேர்கிற இடத்தில் தாக்கினார்கள். அவ்வாறு தாக்க வந்த பிரஞ்சு படையைத்தடுப்பதற்கு அதே திசையில் ஜெர்மன் படையுஞ் சென்றது. அவ்விதமாய் ஆய்ஸ் நதியும் எய்ஸன் நதியும் கூடுகிற இடத்திலிருந்து வடக்குதிசையில் இங்கிலீஷ் கடல் வரையிலும் பிரஞ்சுப்படைகளும் ஜெர்மன் படைகளும் ஒன்றையொன்று எதிர்த்து நின்றன. அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் அதன் விவரத்தை அறிந்துகொள்ளலாம்.

அவ்வாறு வடக்குக் கோடியில் இங்கிலீஷ் கடற்கரையிலிருந்து தெற்குக் கோடியில் ஸ்விட்ஜர்லாந்து தேசத்து எல்லை வரையிலும் இருகக்ஷி துருப்புகள் நிலை பெற்றனர். சுமார் 570 மைல் நீளமுள்ள அந்த போர் முனையெங்கும் இருகக்ஷியாரும் பூமிக்கடியில் வலுவான அரண்களைக் கட்டி நிலை பெற்றார்கள் ஜெர்மானியர் நேச




ள் முன் செல்லவிடாமல் தடு ற்பதற்காகவும் தாங்கள் படை துள்ள பூமியை இழந்துவிடா பதற்கும் அவ்வாறு அரண்களை க்கொண்டார்கள். நேசக்கக்ஷி ங்களும் வலுவான போர் முனை லை பெற்றிருப்பதற்காக அப் ட்ட அரண்களைக் கட்டிக்கொ ர்கள்.

றல் ஆய்ஸநதியும் எய்ஸன் நதி டு மிடத்திலிருந்து வடக்கு யில் இங்கிலீஷ் கடல் வரையில் னியர் புதிய படைகளை அனு ண்டியிருந்தது. பெல்ஜிய ஜனங் ாவல் செய்வதற்கும், பெல்ஜிய யை அடக்கி வைப்பதற்கும் ஜர்மன் படைகள் தேவையாயி ா. பெல்ஜிய சேனை ஆன்ட்வர்ப் துக் கோட்டைகளில் பந்தோ யிருந்தது. ஆகையால் ஜெர் ர் ஆன்ட்வர்ப் கோட்டைகளை ்து அங்குள்ள பெல்ஜிய சேனை ழித்து விட்டால், பெல்ஜியத்தி து சில ஜெர்மன் படைகளை பிரான்ஸுக்கு அனுப்பக்கூடு மென்று ஜெர்மானியர் எண்ணினார்கள். ஆகையால் அவர்கள் செப்டம்பர் 28-ந் தேதி ஆன்ட்வர்ப் கோட்டைகளைத் தாக்கி 10 தினங்களுக்குள் அவைகளைப்பிடித்துக்கொண்டார்கள். ஆனால் அங்கிருந்த பெல்ஜிய சேனை பிரான்ஸுக்குள் தப்பித்துச் சென்று பிரஞ்சு சேனையுடன் சேர்ந்துகொண்டது. அந்த பெல்ஜிய சேனையானது இங்கிலீஷ் கடல் கரைக்கு அருகிலுள்ள போர் முனையில் நிலை பெற்றது. அவ்வாறு பெல்ஜிய தேசமுழுவதும் ஜெர்மானியருக்கு சுவாதீனமாகி விட்டபடியால், அவர்கள் தங்களுடைய முழுகவனத்தையும் பிரஞ்சுப் போர் முனையிலே செலுத்தினார்கள்.

இங்கிலீஷ் கடற்கரையிலிருந்து தெற்கு நோக்கியிருக்கிற போர் முனையில் அடிக்கடி உக்கிரமான சண்டைகள் நடந்தன. அக்டோபர் மாசத்தில் லாபாஸி நகரத்துக்கருகிலும் இப்ரிஸ் நகரத்துக் கருகில் நடந்த சண்டைகள் மிக்க கடுமையாயிருந்தன.

பிறகு இருகக்ஷிகளும் அரண்களைப் பிடிப்பதற்காக ஓயாமல் கடுமையாய் சண்டை செய்து வந்தார்கள். நவம்பர் மாசத்தில் இப்ரிஸ் நகரத்திலிருந்த பிரிட்டிஷ் சேனையைப் பின் தள்ளுவதற்காக ஜெர்மானியர் மிக்கபிடிவாதத்துடன் போர் புரிந்தார்கள். மிகுந்த உயிர் சேதம் உண்டானதைத் தவிர வேறு முடிவான பலன் இருகக்ஷிக்கும் கிடைக்கவில்லை. அவ்வித சண்டைகள் அடிக்கடி நடந்த போதிலும் முக்கியமான மாறுதல்கள் உண்டாகவில்லை. வடக்கே இங்கிலீஷ் கடலிலிருந்து தெற்கே ஸ்விட்ஜர்லாண்ட் தேசம் வரையிலுள்ள அந்த நீண்ட போர் முனையானது இப்போது ஒன்றரை வருஷங்களாகியும் இரண்டொரு மைல் முன்னும் பின்னும் மாறுபாடடைந்ததைத் தவிர வேறெவ்வித வித்தியாசமுமில்லாமல் அதே நிலைமையில் இருந்து வருகிறது.

## கிழக்கரங்கம்.

மகாயுத்தம் தொடங்கியவுடன் ஜெர்மானியர் மேற்கரங்கத்தில் தொடங்கிய படையெடுப்பு பிரமாதமாயிருந்தபடியால், கிழக்கரங்கத்தின் யுத்த நடவடிக்கைகள் பிரபலமடையவில்லை. ஆயினும், கிழக்கரங்கத்தில் ருஷியரின் நடவடிக்கைகள் மிக முக்கியமான பலன்களை உண்டு பண்ணினவென்று ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கின்றது. ஜெர்மானியர் பாரிஸ் நகரத்துக்கருகில் சென்ற சமயத்தில், அநேக ஜெர்மன் படைகளை கிழக்கரங்கத்துக்கு அனுப்பும்படி நேரிட்டதென்று முன்பு சொல்லப்பட்டிருக்கிறது.




ஆஸ்டிரியாஹங்கேரி.

இந்த யுத்தம் தொடங்கிய உடன் எவரும் எதிர்பார்த்திருந்ததை விட சீக்கிரமாக ருஷியசேனை போர் முனையில் திரட்டப்பட்டது. கிழக்கரங்கத்தை மூன்று முக்கிய பாகங்களாகப்பிரித்துச் சொல்வோம். ஜெர்மன் மகாணமாகிய கிழக்குப் பிரஷ்யாவிலும், ருஷிய மாகாணமாகிய போலண்டிலும், ஆஸ்டிரிய மாகாணமாகிய காலிஷியாவிலும் யுத்தம் நடத்தப்பட்டது. அந்த மகாணங்களின் அமைப்பை கீழேயுள்ள படத்தில் காணலாம். பிரான்ஸின் மீது ஜெர்மன் சேனையின் பெரும்பாகமும் படையெடுத்துக்கொண்டிருந்தபடியால், கிழக்குப் பிரஷ்யாவில் சொற்பஜெர்மன் துருப்புகளே வைக்கப்பட்டிருந்தன. அவைகள் முக்கியமான ஜெர்மன் கோட்டைகளில் காவலாக இருந்து வந்தன. அதனால், அந்த மாகாணத்தை எளிதாய் சுவாதீனஞ்செய்து கொள்ளலாமென்று ருஷியர் நினைத்து, அதன் மீது சுமார் 5 லக்ஷம் ருஷியத் துருப்புகளைச் செலுத்தி படையெடுத்தனர். அந்தஜெர்மன் மாகாணத்தின் மீது அவ்வாறு ருஷியர் படையெடுப்பதால், பிரான்ஸிலுள்ள ஜெர்மன் துருப்புகளை அங்கு இழுத்துக்கொள்ளலாமென்றும் அதனால் பிரஞ்சுக்காரருக்கு சற்று சகாயமாயிருக்குமென்றும் ருஷியர் நினைத்தார்கள்.

### கிழக்குப்பிரஷ்யாவின்மீது ருஷியரின் படையெடுப்பு.

ருஷிய சேனாபதிகளாகிய ஜெனரல் ரென்னன்காம்ப், ஜெனரல் ஸாம்ஸ்னுப

ூகிய இவ்விருவரும் ருஷிய சேனையில்
ப்ர் பெற்ற பட்டாளங்களாகப் பொறு
கி யெடுத்து மொத்தம் 5 லக்ஷம் துரு
ப்புகளை கிழக்குப் பிரஷ்யாவில் செலு
த்தினார்கள். அந்த ஜெர்மன் மாகாணத்
துக்குக் கிழக்கிலிருந்து ஜெனரல் ரன்
னன் காம்பும், தெற்கிலிருந்து ஜென
ரல் ஸாம்ஸனும் புறப்பட்டார்கள்.

ஜெனரல் ரன்னன் காம்ப் மீமென் நதி
யைக் கடந்து கிழக்குப் பிரஷ்யாவுக்
குள் புகுந்து, ஆகஸ்ட் 24-ந் தேதி
கானிக்ஸ்பர்க் நகரத்திலுள்ள ஜெர்மன்
கோட்டைகளுக்கு முன்னால் ஒரு ருஷி
யப் படையைக் காவலாக வைத்துவிட்டு
மேற்கு திசையில் சென்றுகொண்
டிருந்தார். அங்கு சொற்ப ஜெர்மன்
துருப்புகளே இருந்த படியால் அவை
களை அவர் எளிதாக வென்று முன்
சென்றார்.

இதற்குள்ளாக, ஜெனரல் ஸாம்ஸ
னைப், அந்த ஜெர்மன் மாகாணத்துக்கு
த்தெற்கிலிருந்து புறப்பட்டு வடக்கு
நோக்கி முன் சென்றார். அந்தப்
பிரதேசம் சிறு ஏரிகளாலும் சேற்று
நிலங்களாலும் நிரம்பி யிருக்கின்றது.
அந்த பிரதேசத்தின் மீது எவரும்
படை யெடுக்காமலிருக்க அங்கு இய
ற்கையிலேயே அமைந்துள்ள காவல்
கள் போல, சேறும் சகதியும்
நிரம்பிய நிலங்களும் ஆழமான சிறு
ஏரிகளும் விஸ்தாரமாய் வியாபித்
திருக்கின்றன. அந்த ஏரிகளையெல்
லாம் தூர்த்து சேற்று நிலங்களை சம
னிட்டு சாகுபடி செய்வதற்குத் தகுந்
தவிதமாய் அந்த பிரதேசத்தை சீர்
படுத்த வேண்டுமென்று சில வருஷங்
களுக்கு முன்னால் ஜெர்மன் கவர்ன்
மெண்ட் ஆலோசனை செய்தார்கள்.
ஆனால் அந்த மாகாணத்துக்கு இயற்
கையாய் அமைந்துள்ள அந்தக் காவல்
களை அவ்வாறு அழித்து விடக் கூடா
தென்று ஒரு ஜெர்மன் சேனைத் தலைவ
ராகிய ஜெனரல் வான் ஹிண்டன்பர்க்
ஆக்ஷேபித்து அந்த யோசனையைத்
தடுத்து விட்டார்.

வான் ஹிண்டன்பர்க்.

இந்த மகா யுத்தம் தொடங்கிய போது, ஜெனரல் வான் ஹிண்டன்பர்க், ராணுவத்திலிருந்து பென்ஷன் பெற்று தமது விருத்தாப்பியத்தை சுகமாய்ப் போக்கிக்கொண்டிருந்தார். அவருக்கு 67 வயது நிரம்பி விட்ட போதிலும் கிழக்குப் பிரஷ்யா மாகாணத்தில் அவர் வாலிபத்திலிருந்தே வைத்திருந்த கவனமும் அக்கறையும் குறையாமலிருந்தது. அந்த மாகாணத்தின் இயற்கை அமைப்பில் அநேக விசேஷங்களிருப்பதாக அவர் அறிந்து, அங்கு விஸ்தாரமாய்ப் பரவியிருந்த சிறு ஏரிகளும் சதுப்பு நிலங்களும் ராணுவ உபயோகத்துக்கு எந்தெந்த விதங்களில் அனுகூலமாயிருக்குமென்று ஆராய்ச்சி செய்தார். ஏரிகளும் சேற்று பூமியும் நிறைந்த அந்தப் பிரதேசத்தில் ஜனங்கள் நடமாடுவது மிகவும் அபாயமாகும். அவைகளுக்கு இடையே சிற்சில பந்தோபஸ்தான பாதைகள் இருக்கின்றன. ஆழமில்லாத ஏரிகளையும் உறுதியான தரைகளையும் வேறு சில பந்தோபஸ்தான வழிகளையும் அவர் இரகஸ்யமாய் அறிந்துகொண்டார். ஆகையால் அந்த ஜெர்மன் மாகாணத்தில் யுத்தம் நடத்துவதற்கு ஜெனரல் வான் ஹிண்டன்பர்க் போன்ற திறமைசாலிகள் வேறெவரும் சேனையில் இல்லை. அதனால், இரண்டு ருஷிய சேனாதிபதிகள் அந்த மாகாணத்தின் மீது படை யெடுத்துச் சென்றபோது, ஆகஸ்ட் 22-ந் தேதி அந்த மாகாணத்தைக் காக்கும்படி ஜெர்மன் சக்ரவர்த்தி ஜெனரல் ஹிண்டன்பர்க்குக்கு தந்தி மூலமாய் உத்தரவு செய்தார். அந்த உத்தரவு கிடைத்து மூன்று தினங்களுக்குள்ளாக ஜெனரல் ஹிண்டன்பர்க் அந்த மாகாணத்திலுள்ள ஏராளமான ரயில் பாதைகளின் உதவியாலும் மோட்டார் வண்டிகளின் உதவியாலும் திடகாத்திரமுள்ள ஜனங்களைப் படைகளாகச் சேர்த்து, இன்னும் பலவிதமாய் மொத்

தம், ஒன்றரை லக்ஷம்பேருடன் போர்களத்துக்குச்சென்றார்.

ஜெர்மன் கோட்டைகளில் வைக்கப்பட்டிருந்த பீரங்கிகளேயும் போர்க்களத்துக்கு அனுப்பினர். காணிக்ஸ்பர்க் நகரத்துக் கோட்டைகளில் வைக்கப்பட்டிருந்த ஜெர்மன் துருப்புகளேயும் கடல்வழியாய்க் கொண்டுவந்தார். எவரும் எதிர்பாராத விதமாய் மிகுந்த விரைவும் வன்மையுங் கொண்டு தாக்குவதாலேயே வெற்றி பெறவேண்டுமென்ற ராணுவக்கொள்கையில் ஜெனரல் ஹின்டன்பர்க் பூரண நம்பிக்கை கொண்டவர். அந்தக் கொள்கையை நிறைவேற்றுவதில் அவர் விசேஷத் திறமைகொண்டவர். திடீரென்று சொற்ப காலத்துக்குள் ஆயிரக் கணக்கான துருப்புகளேக் குவித்து விடுவதற்கு அவர் ரயில் பாதைகளே மிகவும் சாமர்த்தியமாய் உபயோகிக்கும் விதமானது அதிசயமாயிருக்கின்றது. அந்த யுத்த தந்திரம் அவருக்கென்றே அமைந்துள்ளதோர் திறமையுடன் நடத்தப்படுகின்றது.

ஆகஸ்ட் 25-ந் தேதியிலிருந்து ஜெனரல் வான் ஹிண்டன்பர்க் தம்முடைய ஒன்றரை லக்ஷம் துருப்புகளேக்கொண்டு ருஷியப் படைகளேத் தாக்கினர். ஏரிகளும் சேற்று நிலங்களும் வியாபித்துள்ள அந்தப் பிரதேசத்தில் பந்தோபஸ்தான வழிகளில் மட்டும் சில துருப்புகளே வைத்து மற்றத் துருப்புகளேக் கொண்டு விஸ்தாரமான போர்முனையில் வளேந்துசென்று ருஷியரைத் தாக்கினர். செப்டம்பர் 1-ந்தேதியன்று டானன்பர்க் நகரத்துக்கருகில் ருஷியப் படைகள் நாலாபக்கங்களிலும் நெருக்கபட்டனர். அவர்கள், பந்தோபஸ்தான பாதைகளே இழந்து அபாயகரமான வழிகளில் சிக்கிக்கொண்டு அநேகமாய் அழிந்தும் சிதறுண்டும் போயினர். டானன்பர்க் சண்டையில் சுமார் 1½ லக்ஷம் ருஷியத் துருப்புகள் சேதமாயினர். ருஷிய சேனுபதி ஜெனரல் ஸாம்ஸனுப் போர்க்களத்தில் கொல்லப்பட்டார். மற்றொரு ருஷிய சேனுபதியாகிய ஜெனரல் ரன்னன்காம்ப் டானன்பர்கில் நேர்ந்த விபத்தை அறிந்ததும் மிக்க விரைவாயும் சாமர்த்தியமாயும் பின் வாங்கினர். ஜெனரல் ஹின்டன்பர்க் அவருடைய ருஷியப்படைகளே ருஷிய எல்லே வரையிலும் தாக்கிச்சென்றார். கிழக்குப் பிரஷ்யாவின் மீது ருஷியரின் படையெடுப்பு அவ்வாறு மிகுந்த சேதத்துடன் பயன் படாமற் போனுலும், அதற்கு ஈடாக அதே காலத்தில் அவர்கள் தெற்குத் திசையில் சிறந்த வெற்றிகளே அடைந்தார்கள்.

### காலிஷியாவின்மீது ருஷியரின் படையெடுப்பு.

ருஷியப்படைகள் ஆஸ்டிரிய மாகாணமாகிய காலிஷியாவுக்குக் கிழக்கிலிருந்து புறப்பட்டு அந்த மாகாணத்தின் மீது மேற்கு முகமாய்ப் படையெடுத்துச் சென்றன. அந்த மாகாணத்தின் முக்கிய ஸ்தலமாகிய லெம்பர்க் நகரத்துக் கருகில் செப்டம்பர் 2-ந் தேதி ருஷியர் அங்கிருந்த ஆஸ்டிரியப்படைகளே முறியடித்து அந்த நகரத்தையும் பிடித்துக்கொண்டார்கள். அந்த ஆஸ்டிரியப்படைகள் அலங்கோலமாய்ச் சிதறிப்போய், போலண்டின் மீது படையெடுத்துச்சென்ற வேறொரு ஆஸ்டிரிய சேனுபதியின் நிலைமையையும் ஆபத்துக்குள்ளாக்கின. அலங்கோலமடைந்த ஆஸ்டிரியப்படைகள் புதிய துணைப்படைகளேப் பெற்றுலெம்பர்க்நகரத்துக்குமேற்கே, கிராடக்ர ரவருஸ்கா ஆகிய இவ்விரு நகரங்களுக்கு மிடையில் நிலேபெற்று ருஷியரை மறுபடியும் எதிர்த்து நின்றன. ஏனெனில், அந்த ஆஸ்டிரியப் படைகள், தங்களுக்கு மேற்கே போலண்டின் மீது படையெடுத்துச்சென்ற வேறு பல ஆஸ்டிரியப் படைகளுக்கு காவலாயிருந்தனர். காலிஷியா மாகாணத்தின் மத்திய பாகத்திலிருந்து ஜெனரல் டாங்கல் என்ற ஆஸ்டிரிய தளகர்த்தர் புறப்பட்டு

வடக்கு நோக்கிச் சென்று ருஷிய மாகாணமாகிய போலண்டின் மீது படை யெடுத்தார். ஆஸ்டிரிய சேனைத் தலைவராகிய ஜெனரல் டாங்கல் லெம்பர்க் நகரத்துக்கு மேற்கிலிருந்து புறப்பட்டு ருஷிய மாகாணமாகிய போலண்டுக்குள் வடக்கு முகமாய்ச் சென்று கொண்டிருந்தார். ஆகையால் ருஷியர் லெம்பர்க் நகரத்தைப் பிடித்த பிறகு மேற்கே முன் சென்று, ஜெனரல் டாங்கலுக்குப் பின் புறத்தில் வந்து தாக்கக்கூடும். அதனால்போலண்டுக்குள் வெகு தூரம் வடக்கே போய்விட்ட ஜெனரல் டாங்கல் மிகுந்த ஆபத்தான நிலைமையிலிருந்தார். மேலும், அவர் செப்டம்பர் 4-ந் தேதி அநேக புதிய ருஷியப்படைகளால் தோற்கடிக்கப்பட்டார். ஆகையால் ஜெனரல் டாங்கல் செலுத்திய ஆஸ்டிரியப் படைகளும்,லெம்பர்க் நகரத்தில் தோல்வியடைந்த வேறு பல ஆஸ்டிரியப் படைகளும் அலங்கோலமாய்ப் பின் வாங்கிச் சென்றன. அந்த ஆஸ்டியப்படைகள் ஸான் நதிக் கரையிலுள்ள ரிஸமில், ஜரஸ்லா என்ற இரண்டு கோட்டைகளின் பலத்தைப் பெற்று ருஷியரைஎதிர்த்து நிற்க முயற்சிசெய்தன. ஆனல் ருஷியர் திடீரென்று ஸான்நதியைக் கடந்து ஆஸ்டிரியரைப் பின் வாங்கும்படிசெய்தார்கள். ருஷியர் ஜரஸ்லா கோட்டைகளைத் தாக்கிப் பிடித்தார்கள்; ரிஸமில் கோட்டைகளை முற்றுகை போட்டார்கள்; ஆஸ்டியப்படைகளை டார்னே நகரம் வரையில் தாக்கிச் சென்றார்கள். ஆஸ்டிரியப்படைகள் டார்னே நகரத்துக் கருகில் ஓடுகிற டுனஜக் நதிக்கரையில் நிலைபெற்றார்கள். டார்னே நகரத்துக்கு 50 மைல் மேற்கில்தான் முக்கியமான ஆஸ்டிரிய நகரமாகிய கிராகோ இருக்கிறது. ஆஸ்டிரியர் தங்களுடைய காலிஷியா மாகாணத்தின் பெரும்பாகத்தையும் இழந்துவிட்டதும் தவிர, தங்களுடைய சேனையின் வன்மையையும் கவுரவத்தையும் இழந்துவிட்டார்கள். அவர்கள் ஆபத்தான நிலைமை யிலிருந்து தப்பிப் பதற்காக அவர்களுக்கு எங்கிருந்தாவது தக்ஷணமே உதவி கிடைக்க வேண்டும். அச்சமயம் கிடைக்கவேண்டும். மேற்கரங்கத்தில் ஜெர்மன் படைகள் பாரிஸ் நகரத்துக் கருகில் சென்று பெரும் போர் விளைக்கத் தயாராயிருந்தது. அப்படிப்பட்ட சமயத்தில் அங்கிருந்து சில ஜெர்மன் படைகள் ஆஸ்டிரியருக்குத் துணை செய்வதற்காக விரைந்து வந்தன.

### ஆஸ்டிரியரின் நிலைமை.

1914-ம் வருஷம் செப்டம்பர் மாதக் கடைசியில் கிழக்கரங்கத்துப் போர்முனையின் நிலைமை எவ்வாறிருந்ததென்பது அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் விளங்கும்.

அந்தபடத்தில், * * * இம்மாதிரியான குறிகள் எல்லைப்புறத்தைக் குறிக்கின்றன. கனத்த கறுப்புக்கோடு கிழக்கரங்கத்துப் போர்முனையைக் குறிப்பிடுகின்றது. அந்த கோட்டுக்கு இடது பக்கத்தில் ஜெர்மன் துருப்புகளும் வலது பக்கத்தில் ருஷியத் துருப்புகளும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு யுத்தஞ்செய்வதாக பாவிக்கவேண்டும். அந்தக்கோடு நெடுகப் பார்த்துவந்தால் போர்முனை எவ்வாறு அமைந்திருந்ததென்பது விளங்கும். இந்தப் போர்முனையானது வடக்கே பால்டிக் கடற்கரையிலிருந்து, போலண்ட் மாகாணத்தின் வழியாய்ச் சென்று,காலிஷியா மாகாணத்தில்டார்னே நகரத்துக்கருகிலும் கார்ப்பேத்தியன் மலைகளுக்கு அருகிலும் அமைந்திருந்தது.




கிழக்குப் பிரஷ்யா மாகாணத்திலிருந்து சேதமடைந்து பின்வாங்கிய சொற்ப ருஷியத் துருப்புகள் நீமென் நதிக்கருகில் நிலைபெற்றன. போலண்ட் மாகாணத்தில் சொற்ப ருஷியத் துருப்புகளே காவலாயிருந்தன. காலிஷியா மாகாணத்தில்தான் ருஷிய சேனையின் பெரும்பாகமும் குவிக்கப்பட்டு அது சிறந்த வெற்றிகளை அடைந்தது. அந்த மாகாணத்திலிருந்த ஆஸ்டிரிய சேனை முழுவதும் டார்னோநகரத்துக்கு அருகில் பின் வாங்கிவிட்டது. அந்த ஆஸ்டிரிய சேனை இரண்டு மாதங்களாய் தோல்விகளை அடைந்து கடைசியில் டார்னோ நகரத்துக்கருகில் நிலைபெற்றது. அந்த நகரத்துக்கு மேற்கில் கிராகோ என்ற முக்கியமான ஸ்தலம் இருக்கின்றது. கிராகோ நகரத்துக்குக் கோட்டைகளின் ஆதாரவைப் பெற்று அந்த ஆஸ்டிரிய சேனை நிலைபெற்றது. ஸான்நதிக் கரையிலுள்ள பிரெமிஸில் நகரத்துக் கோட்டைகள் ருஷியரால் முற்றுகை யிடப்பட்டன. அக்கோட்டைகளுக்குள் அநேக ஆஸ்டிரியத் துருப்புகள் சண்டை செய்துகொண்டிருந்தன. ருஷியக் குதிரைப் படைகள் கார்ப்பேத்தியன் மலைகளின் அடிவாரத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தன.

அவ்வாறு ஆஸ்டிரிய மாகாணமாகிய காலிஷியாவின் கிழக்கு பாகத்தையும் மத்திய பாகத்தையும் ருஷியர் வசப்படுத்திக் கொண்டார்கள். அதன் மேற்கு பாகத்தைமட்டும் அவர்கள் இன்னும் வசப்படுத்திக் கொள்ளவில்லை. இந்த மேற்கு பாகத்தில்தான் கிராகோ நகரம் இருக்கின்றது. அந்த பாகத்திலிருந்த ஆஸ்டிரிய சேனைக்கு

அந்த நகரத்துக்குக் கோட்டைகள் உதவியாயிருந்தன.

இதுதான் செப்டம்பர் மாதக் கடைசியில் காலிஷியாவின் நிலைமையாகும். ருஷிய சேனை மேல் நடவடிக்கைகளைத் தொடங்குவதற்காக, துணைப் படைகளை எதிர் பார்த்துக் கொண்டிருந்தது.

**ருஷியரின் நோக்கம்.**

ருஷிய சேனை மேல் நடவடிக்கைகளை எந்தத் திசையில் தொடங்கும்? அதாவது ருஷிய சேனையின் நோக்கம் என்ன? கிழக்கரங்கத்தின் எல்லைப் புறத்திலுள்ள ஒரு விசேஷத்தை சற்று கவனிக்கவேண்டும். (74-ம் பக்கத்திலுள்ள படத்தைப்பார்க்கவும்.)

அதென்னவெனில், ருஷிய மாகாணமாகிய போலண்ட் சத்துருக்களின் பிரதேசத்துக்குள் வெகு தூரம் நீண்டிருக்கின்றது. போலண்டுக்கு வடக்கே ஜெர்மன் மாகாணமும், தெற்கே ஆஸ்டிரிய மாகாணமும் விசாலமாய் வியாபித் திருக்கின்றன. ஆகையால் ருஷியர் தங்களுடைய சொந்த மாகாணமாகிய போலண்டிலிருந்து புறப்பட்டு முன்புறம் சென்றால் இரண்டு பக்கங்களிலும் சத்துருக்கள் வந்து தாக்குவார்கள். அதன் விபரத்தை கீழேயுள்ள படத்தில் காணலாம்.

அந்தக் காரணத்தால், ருஷியர் போலண்டிலிருந்து முன்புறம் செல்வதற்கு முன்னால், தங்களுடைய பக்கவாட்டிலுள்ள ஜெர்மன் மாகாணத்தையாவது ஆஸ்டிரிய மாகாணத்தையாவது சுவாதீனஞ் செய்துகொள்ள வேண்டியிருந்தது. ஜெர்மன் மாகாணமாகிய கிழக்குப் பிரஷ்யாவை சுவாதீனஞ் செய்து கொள்வதற்காக அதன்மீது படை யெடுத்த ருஷியப் படைகள், ஏற்கனவே டானன்பர்க் சண்டையில் சேதமடைந்து பின் வாங்கும்படி நேரிட்டது. ஆனால் ஆஸ்டிரிய மாகாணமாகிய காலிஷியா மீது படை யெடுத்த ருஷியப் படைகள் வெற்றியடைந்து அம்மாகாணத்தின் பெரும் பாகத்தையும் வசப்படுத்திக் கொண்டன. அதன் பிறகு அந்த மாகாணத்தின் மேற்கு பாகத்தை மட்டும் ருஷியர் வசப்படுத்திக் கொள்ள வேண்டி வந்தது: ஆனால் அந்த மேற்கு பாகத்தில் மிக்க வன்மை கொண்ட கோட்டைகள் கிராகோ நகரத்தைச் சுற்றிலும் கட்டப்பட்டு காவலாயிருந்தன. ஆகையால் ருஷியர் அந்த கோட்டைகளைப் பிடித்தாலொழிய அந்தபிரதேசத்தை வசப்படுத்த முடியாது. அந்தக் கோட்டைகளுக்குக் கிழக்கே ஆஸ்டிரிய சேனை காவலாயிருந்தது. அச்சேனையை முறியடித்து அந்தக்கோட்டைகளையும்பிடிப்பதற்குக் காலதாமஸமாகும். ருஷியர் அவ்வாறு அந்தப் பெருமுயற்சியைத் தாமஸமாய்ச் செய்யும்போது, அவர்களுக்குப் பக்கவாட்டில் சத்துருக்கள் ஆபத்தை விளைவிக்கலாம். கீழேயுள்ள படத்தை கவனிக்கவும்.




ருஷியர் லெம்பர்க் நகரத்திலிருந்து புறப்பட்டு அங்கிருந்து மேற்கே செல்கிற அநேக பாதைகளின் வழியாய் கிராகோ நகரத்துக் கருகில் வந்திருந்தார்கள். அந்த பாதைகள் அனைத்துக்கும் தெற்கே, கார்ப்பேத்தியன் மலைகள் வெகுநீளமாய் வியாபித்திருக்கின்றன; அதனால் ஆஸ்டிரியர் அந்த மலைக்கணவாய்களின் வழியாய் வடக்கு நோக்கிச் சென்றால், ருஷியருடைய பாதைகளை யெல்லாம் பிடித்துக்கொள்ளலாம்; அவ்வாறு கிராகோ நகரத்துக்கருகில் இருந்துவந்த ருஷிய சேனை, தனக்கு ஆதாரமாயுள்ள பாதைகளை ஆபத்துக்குள்ளாக்கிக் கொள்ளக் கூடாது. ஆகையால் அந்த ஆபத்தைத்

தடுக்க ருஷியர், கார்ப்பேத்தியன் மலைகளிலுள்ள கணவாய்களைப் பிடிக்க முயன்றார்கள். அவைகளைப் பிடித்துக்கொண்டால் ஆஸ்டிரியர் அந்த மலைகளிலிருந்து வெளிக்கிளம்ப முடியாது. இந்த காரணங்களால், ருஷியர் கார்ப்பேத்தியன் மலைகளிலுள்ள கணவாய்களைபிடிக்கவும், பிறகு கிராகோ நகரத்துக்குக் கிழக்கிலிருந்த ஆஸ்டிரியா சேனையை நெருக்கித்தள்ளவும் முயர்சி செய்தார்கள் அதுதான் ருஷிய சேனையின் முதல் நோக்கம். அவர்கள் அவ்வாறு செய்தால்தான் காலிஷியா மாகாணத்தின் மேற்குபாகத்தை வசப்படுத்தல் சாத்தியமாகும்.

### ஜெர்மானியரின் உதவி.

ருஷியரின் முயற்சிகளைத் தடுக்க வேண்டுமென்பதே ஜெர்மானியரின் நோக்கமாயிருந்து, அது "ஜெர்மானியரின்" நோக்கம் என்று நாம் சொன்னோம் ஏனெனில், ஆஸ்டிரியா சேனை இரண்டு மாதங்களாய் பலமுறை தோல்வி யடைந்து பலஹீனப் பட்டவுடன், ஜெர்மானியரே அதற்குத் துணை செய்ய விரைந்து வந்த யுத்தத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள். (கிழக்கரங்கத்தில் ஆஸ்டிரியரும் ஜெர்மானியரும் கலந்திருந்த போதிலும், சௌகரியத்தை உத்தேசித்து அவர்களை இனி ஜெர்மானியரென்றே சொல்லி வருவோம்)

1914-ம் வருஷம் செப்டம்பர்மாதம் 25-ந் தேதி ஜெனரல் வான் ஹின்டன்பர்க் கிழக்கரங்கத்திலுள்ள எல்லா ஆஸ்டிரியப் படைகளுக்கும் ஜெர்மன் படைகளுக்கும் தலைமை வகித்தார். அவர் கிழக்கரங்கத்து சேனாதிபதியாக ஜெர்மன் சக்கரவர்த்தியால் நியமிக்கப் பட்டார். ஆஸ்டிரியப் படைகளுடன் ஜெர்மன் படைகளும் சேர்க்கப்பட்டு, ஆஸ்டிரியத் தலைவர்களும் ஜெர்மன் தலைவர்களுமாகக் கலந்து போர் நடத்தினார்கள். அவ்விதமாக ஆஸ்டிரிய ஜெர்மானிய சேனைக்கு புதுபலம் உண்டாக்கப் பட்டது.

### போலண்டின்மீது ஜெர்மானியரின் முதல் படையெடுப்பு.

காலிஷியா மாகாணத்தின் மேற்கு பாகத்தில், கிராகோ நகரத்துக்குக் கிழக்கிலுள்ள டார்னோ நகரத்துக்கருகில், ஆஸ்டிரிய சேனையின் பெரும்பாகமும் நிலைபெற்றிருந்ததென்று ஏற்கெனவே சொன்னோம். அந்த ஆஸ்டிரியப் படைகளைத் தவிர, ஏராளமான புதிய ஜெர்மன் படைகளும் கூட்டப்பட்டன. அந்தப் புதிய படைகள் ருஷிய மாகாணமாகிய போலண்டில் குவிக்கப்பட்டன. அவ்வாறு போலண்டில் மொத்தம் 15-லக்ஷம் துருப்புகளை ஜெனரல் ஹின்டன்பர்க் மிகவும் இரகஸ்யமாயும் சீக்கிரமாயும் திரட்டினார். அந்த 15-லக்ஷத்தில், 10-லக்ஷம் பேர் ஜெர்மானியரும் 5-லக்ஷம் ஆஸ்டிரியரும் இருந்தார்கள்.

### ஜெர்மானியரின் முக்கிய நோக்கம்.

ஜெனரல் ஹின்டன்பர்க் போலண்டின்மீது படையெடுக்க நிச்சயித்தபோது அவருடைய நோக்கம் என்ன? காலிஷியா மாகாணத்தில் கிராகோ நகரத்துக்கும் கார்ப்பேத்தியன் மலைக்கணவாய்களுக்கும் ருஷியர் விளைவித்து வந்த ஆபத்தை நீக்குவதே அவருடைய நோக்கம். ஜெர்மானியர் ருஷிய மாகாணமாகிய போலண்டின்மீது படையெடுத்தால் ருஷியர் அந்த மாகாணத்தைக் காக்கும் பொருட்டு, காலிஷியாவிலுள்ள ருஷியப் படைகளை போலண்டுக்கு அனுப்பி விடுவார்கள். அதனால் காலிஷியாவிலுள்ள ருஷியப் படைகளின் வன்மை குறைந்துபோய் ஆஸ்டிரியர் அங்கு வெற்றி பெறலாம். இந்த நோக்கத்துடன் அவர் போலண்டின்மீது படையெடுத்தார். ஓரிடத்திலுள்ள ஆபத்தை நீக்குவதற்கு மற்றோரிடத்தில் மிக்கக் கடுமையாயும் விரைவாயும் தாக்குவதே ஏற்ற உபாயமென்பது ஜெனரல் ஹின்டன்பர்க்கினுடைய கொள்கையாகும். அவர் அப்படிப்பட்ட யுத்த த

திரத்தை அனுசரிப்பதில் அவருக்கு எவ்வளவு பிரியமுண்டோ அவ்வளவு திறமையுமுண்டு. யுத்தம் ஆரம்பித்தது முதல், கிழக்கரங்கத்திலாகட்டும் மேற்கரங்கத்திலாகட்டும் ஜெர்மானியரின் யுத்த நடவடிக்கைகளில் காணப்படும் விசேஷமென்னவென்றால், அவர்கள் முடுக்கான சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தபடி தீவிரமான முயற்சிகளைச் செய்வதாகும். அவர்கள் பதிலுக்குப் பதிலாக வலுவில் சென்று தாக்கும்போது, அந்த தாக்குதல் மிக்க கடுமையான வேகமும் வன்மையும் பெற்று நடத்தப்படுகின்றது. அந்த யுத்த நடவடிக்கையில் மூர்க்கமான வலிமையும் மின்னல் போன்ற விரைவும் விசேஷமாக விளங்கும்படி அதை அவர் அவ்வளவு மேன்மையாய் நடத்துகின்றார். அவருக்கு இயல்பாயுள்ள சாமர்த்தியத்தைக் காண்பிக்கும்படியான சிறப்புடன் அந்த யுத்த தந்திரம் வெளிப்படுகின்றது.

ஜெனரல் ஹின்டன்பர்க் போலண்டின் மீது படையெடுக்க நிச்சயித்த போது, அதேசமயத்தில் ஆஸ்டிரியரும் காலிஷியாவிலுள்ள ருஷியப் படைகளைத் தாக்குவதாக நிச்சயித்தனர்.

15 - லக்ஷம் துருப்புகளும் திடீரென்று போலண்டின்மீது படையெடுக்குமென்று ருஷியர் எதிர்பார்க்கவில்லை. ஆகையால் அந்த மாகாணத்தில் அச்சமயம் இருந்த ருஷியத் துருப்புகள் சொற்பமாகவே யிருந்தனர். ஜெனரல் ஹின்டன்பர்க் அளவிறந்த தீவிரங் கொண்டு தமது படைகளைச் செலுத்தினர். அக்டோபர் மாதம் 14-ந் தேதிக்குள், ஜெர்மன் படைகள் விஸ்டுலா நதியின் மேற்குக் கரை வரையில் முன்னேறிவிட்டன, விஸ்டுலா நதிக்கரையிலுள்ள வார்ஸா, இவான்கிராட் இவ்விரண்டு நகரங்கள் நீங்கலாக அந்நதிக்கு மேற்கிலுள்ள மற்ற பிரதேச முழுவதையும் ஜெர்மானியர் வசப்படுத்திக் கொண்டார்கள். அவ்விரு நகரங்களிலும் ருஷியக் கோட்டைகளிருந்தன. விஸ்டுலா நதியைக் காப்பதற்காக காலிஷியாவிலிருந்த ருஷியப் படைகளில் சிலவை அங்கு அனுப்பப்பட்டன.

அதே சமயத்தில் காலிஷியாவில் துர்ப்பலமடைந்துவிட்ட ருஷ்யப்படைகளை, ஆஸ்டிரியப்படைகள் டார்னோ நகரத்திலிருந்து ஸான் நதிக்குப் பின் தள்ளின. இவைகளின் விவரத்தை அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் காணலாம்.

அந்த படத்தில் இரண்டு கறுப்புக்கோடுகள் இருக்கின்றன. அவைகள், முதலிலிருந்த போர்முனையையும், பின்பு ஜெர்மானியரின் படையெடுப்பால் மாறிவிட்ட போர்முனையையும் குறிப்பிடுகின்றன. இடதுபக்கமாயுள்ள கோடு, ஜெர்மானியரின் படையெடுப்புக்கு முன்னிருந்த போர்முனையைக் குறிப்பிடுகிறது. அதில், போலண்டிலும் காலிஷியாவிலும் அம்பு போன்ற குறிகள் இரண்டு இருப்பதைக் காணலாம். அவைகள் ஜெர்மானியரும் ஆஸ்டிரியரும் எந்தத் திசையை நோக்கித் தாக்கினார்களென்பதைக் குறிக்கின்றன. இந்தப் போர்முனையிலிருந்த ருஷியப்படைகள் கிழக்காய்ப் பின்வாங்கி நிலைபெற்றதை வலதுபக்கமாயுள்ள கோடு குறிப்பிடுகிறது. போர்முனையில் எந்தபாகம் மாறுபடவில்லையோ அங்கு ஒரே கோடுதான் இருப்பதைக் காணலாம்.

முதலில் போலண்டில் ஆரம்பித்த நடவடிக்கைகளைப் பற்றிச் சொல்லி பிறகு காலிஷியாவில் நடந்த சம்பவங்களைப்பற்றிச் சொல்வோம்.

### வார்ஸாவுக்கு ஆபத்து.

அக்டோபர் மாதம் 15-ந் தேதியன்று, ஜெர்மானியர் விஸ்டுலா நதிக்கருகில் வந்தவுடன், வார்ஸா நகரத்துக்கு 10-மைல் மேற்கில் நெருங்கிவிட்டார்கள். அதே சமயத்தில் அந்த நகரத்துக்குத் தெற்கேயுள்ள இவான்கிராட் நகரத்துக் கோட்டைகளையும் ஜெர்மானியர் தாக்கிக்கொண் டிருந்தார்கள். அவர்கள் விஸ்டுலா நதியைக் கடந்துவிடவும் முயற்சி செய்தார்கள், அக்டோபர் 16-ந் தேதியன்று ஜெர்மானியர் வார்ஸா நகரத்துக்கு 7-மைல் அருகில் வந்துவிட்டார்கள். ருஷிய சேனையைச் சேர்ந்த பேர் பெற்ற ஒரு சைபீரியப் படை, வார்ஸா நகரத்துக்கு மேற்கே உக்கிரமாய்ச் சண்டை செய்து ஜெர்மானியரைத் தடுத்துக்கொண்டே பின் வாங்கிக்கொண் டிருந்தது. 17-ந் தேதி ஜெர்மானியர் அந்த சைபீரியப் படைக்கு ஏராளமான சேதத்தை விளைத்து அதை வார்ஸா நகரத்துக்குள் பின் வாங்கச் செய்தார்கள். அதன் பிறகு ஜெர்மானியர் அந்த நகரத்தைத் தாக்காமல் நின்று விட்டனர். அவ்வாறு ஜெர்மானியர் அந்த நகரத்தைத் தாக்காமல் நான்குமணி நேரம் தாமதித்தனர். அந்த நான்கு மணி நேரத்துக்கு பிறகு, முதல்தரமான ருஷியப் படைகள் ஏராளமாய் வந்து அந்த பேர்பெற்ற நகரத்தைக் காத்துக்கொண்டன. ஜெர்மானியரின் தீவிரமான படை பெடுப்பால் சேர்ந்துவிட்ட

ஆபத்தை, ருஷிய சேனாதிபதியாகிய கிராண்ட் டியுக் நிகலஸ் அறிந்து ஏராளமாகத் துணைப்படைகளை அந்த நகரத்துக்கு அதிக விரைவாய் அனுப்பினார். அவ்விதம் சுமார் $2\frac{1}{2}$ லட்சம் ருஷியத் துருப்புகள் விரைவாய் அனுப்பப்பட்டு, விஸ்டுலா நதி முழுவதையும் அதன் கரையிலுள்ள நகரங்களையும் அவர்கள் காத்தனர்.

ஜெர்மானியர் 17-ந் தேதி யன்று வார்ஸா நகரத்துக் கருகில் வந்தவுடன் அதைத் தாக்கி நகரத்துக்குள் நுழையாமல் ஏன் தயங்கினார்களென்பதைப் பற்றி எல்லா தேசத்தாரும் அச்சமயம் விவாதஞ் செய்தார்கள். அன்று தினம் அந்த நகரத்தில் மிகுந்த சேதமடைந்த ஒரு சைபீரியப் படையைத் தவிர வேறெவ்வித காவலுமில்லை. அதை ஜெர்மானியர் பிடித்துக் கொள்ளாமல் ஏமாந்து போனார்களென்று சொல்லப்பட்டது. ஜெர்மானியர் வார்ஸா நகரத்துக்குள் நுழையாமலிருந்ததற்கு இரண்டு காரணங்களைக் கூறலாம். முதலாவது, அந்த நகரத்துக்கருகில் சென்ற ஜெர்மன் துருப்புகள் மிகவும் குறைவாயிருந்தனர். ஆகையால் அந்த ஜெர்மன் துருப்புகள் நகரத்துக்குள் நுழைந்தபோதிலும், ருஷியருக்குத் துணைப்படைகள் சீக்கிரத்தில் கிடைத்து விடுமாகையால் அந்த ஜெர்மன் துருப்புகள் நாசமாகி விடுவார்கள். இரண்டாவது, ஒருக்கால் அதிக ஜெர்மன் துருப்புகள் அனுப்பப்பட்டு வார்ஸாவை வசப்படுத்திக் கொள்வதாக வைத்துக் கொள்வோம். ஆனால் விஸ்டுலா நதிக்கரை முழுவதும் ருஷியரின் வசத்திலிருந்தபடியால் ஜெர்மன் சேனை வார்ஸா நகரத்தில் மட்டும் நிலைபெற்றிருக்க முடியாது. விஸ்டுலா நதிக்கரை நெடுகவே சண்டை செய்துகொண்டிருந்த ஜெர்மன் படைகள் தோல்வியடைந்து பின் வாங்கும்படி நேரிடுமானால், அந் நதிக்கரையிலுள்ள ஓர் ஸ்தலமாகிய வார்ஸாவில் மட்டும் எப்படி அவர்கள் நிலைத்திருக்க முடியும்? ஆகையால் ஜெர்மானியர் விஸ்டுலா நதிக்கரை முழுவதையும் வசப்படுத்திக் கொண்டாலொழிய அந்நதிக் கரையிலுள்ள எந்த நகரத்தையும் வசப்படுத்திக் கொள்ள முடியாது.

### ஜெர்மானியர் பின்வாங்கல்.

ருஷிய சேனாதிபதியாகிய கிராண்ட் டியுக் நிகலஸ் விஸ்டுலா நதிக்கரைக்கு பின்வாங்கிக் கடுமையாய் சண்டை செய்துகொண்டிருந்த சொற்ப ருஷியப்படைகளுக்கு $2\frac{1}{2}$ லக்ஷம் துணைத் துருப்புகளை வெகு விரைவாய் அனுப்பினாரென்று சொன்னோம். அந்தப் படைகளின் பெரும்பாகமும் காலிஷியா மாகாணத்திலிருந்து அனுப்பப்பட்டன. அந்தப் புதிய ருஷியத் துருப்புகளின் உதவி மிக்க சமயோசிதமா யிருந்தன. அந்த ருஷியத் துருப்புகளெல்லாம் விஸ்டுலா நதிக்கரை நெடுக நிலைபெற்று உக்கிரமாய் சண்டை செய்தனர். வார்ஸா, இவான் கிராட் இவ்விரண்டு நகரங்களைத் தாக்கிக் கொண்டிருந்த ஜெர்மானியர் மிகக் கடுமையாய்த் தாக்கப்பட்டனர். அக்டோபர் 21-ந் தேதி வார்ஸா நகரத்துக்கருகிலிருந்த ஜெர்மன் துருப்புகள் பின்தள்ளப் பட்டனர். 23-ந் தேதி யன்று, விஸ்டுலா நதிக்கரை யெங்கும் சண்டை செய்து கொண்டிருந்த ஜெர்மன் துருப்புகளெல்லாம் பின்வாங்கி மேற்கு நோக்கிச் சென்றனர். அவ்வாறு ஜெர்மானியர் பின் வாங்கினபோது, அவர்கள் போலண்டிலுள்ள ரயில் பாதைகளையும் ரோட்டுகளையும் பாலங்களையும் நாசஞ் செய்து கொண்டே போயினர். அதனால் அவர்களை ருஷியத் துருப்புகள் விரைவாய் பின் தொடர்ந்து செல்ல முடியவில்லை. அவ்வாறு அவர்கள் நவம்பர் 9-ந் தேதி வரையில் பின் வாங்கிச் சென்று போலண்டுக்கு மேற்கிலுள்ள ஜெர்மன் எல்லைப்புறத்தில் தங்கினார்கள். ருஷியக் குதிரைப் படைகள் ஜெர்மன்

தடுக்க ருஷியர், கார்ப்பேத்தியன் மலைகளிலுள்ள கணவாய்களைப் பிடிக்க முயன்றார்கள். அவைகளைப் பிடித்துக்கொண்டால் ஆஸ்டிரியர் அந்த மலைகளிலிருந்து வெளிக்கிளம்ப முடியாது. இந்த காரணங்களால். ருஷியர் கார்ப்பேத்தியன் மலைகளிலுள்ள கணவாய்களைபிடிக்கவும், பிறகு கிராகோ நகரத்துக்குக் கிழக்கிலிருந்த ஆஸ்டிரியா சேனையை நெருக்கித்தள்ளவும் முயர்சி செய்தார்கள் அதுதான் ருஷிய சேனையின் முதல் நோக்கம். அவர்கள் அவ்வாறு செய்தால்தான் காலிஷியா மாகாணத்தின் மேற்குபாகத்தை வசப்படுத்தல் சாத்தியமாகும்.

### ஜெர்மானியரின் உதவி.

ருஷியரின் முயற்சிகளைத் தடுக்க வேண்டுமென்பதே ஜெர்மானியரின் நோக்கமாயிருந்து, அது "ஜெர்மானியரின்" நோக்கம் என்று நாம் சொன்னோம் ஏனெனில், ஆஸ்டிரியா சேனை இரண்டு மாதங்களாய் பலமுறை தோல்வி யடைந்து பலஹீயனப் பட்டவுடன், ஜெர்மானியரே அதற்குத் துணை செய்ய விரைந்து வந்த யுத்தத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள். (கிழக்கரங்கத்தில் ஆஸ்டிரியரும் ஜெர்மானியரும் கலந்திருந்த போதிலும், சௌகரியத்தை உத்தேசித்து அவர்களை இனி ஜெர்மானியரென்றே சொல்லி வருவோம்)

1914-ம் வருஷம் செப்டம்பர்மாதம் 25-ந் தேதி ஜெனரல் வான் ஹிண்டன்பர்க் கிழக்கரங்கத்திலுள்ள எல்லா ஆஸ்டிரியப் படைகளுக்கும் ஜெர்மன் படைகளுக்கும் தலைமை வகித்தார். அவர் கிழக்கரங்கத்து சேனாதிபதியாக ஜெர்மன் சக்கரவர்த்தியால் நியமிக்கப்பட்டார். ஆஸ்டிரியப் படைகளுடன் ஜெர்மன் படைகளும் சேர்க்கப்பட்டு, ஆஸ்டிரியத் தலைவர்களும் ஜெர்மன் தலைவர்களுமாகக் கலந்து போர் நடத்தினர்கள். அவ்விதமாக ஆஸ்டிரிய ஜெர்மானிய சேனைக்கு புதுபலம் உண்டாக்கப் பட்டது.

### போலண்டின்மீது ஜெர்மானியரின் முதல் படையெடுப்பு.

காலிஷியா மாகாணத்தின் மேற்கு பாகத்தில், கிராகோ நகரத்துக்குக் கிழக்கிலுள்ள டார்னோ நகரத்துக்கருகில், ஆஸ்டிரிய சேனையின் பெரும்பாகமும் நிலைபெற்றிருந்ததென்று ஏற்கெனவே சொன்னோம். அந்த ஆஸ்டிரியப் படைகளைத் தவிர, ஏராளமான புதிய ஜெர்மன் படைகளும் கூட்டப்பட்டன. அந்தப் புதிய படைகள் ருஷிய மாகாணமாகிய போலண்டில் குவிக்கப்பட்டன. அவ்வாறு போலண்டில் மொத்தம் 15-லக்ஷம் துருப்புகளை ஜெனரல் ஹிண்டன்பர்க் மிகவும் இரகஸ்யமாயும் சீக்கிரமாயும் திரட்டினார். அந்த 15-லக்ஷத்தில், 10-லக்ஷம் பேர் ஜெர்மானியரும் 5-லக்ஷம் ஆஸ்டிரியரும் இருந்தார்கள்.

### ஜெர்மானியரின் முக்கிய நோக்கம்.

ஜெனரல் ஹிண்டன்பர்க் போலண்டின்மீது படையெடுக்க நிச்சயித்த போது அவருடைய நோக்கம் என்ன? காலிஷியா மாகாணத்தில் கிராகோ நகரத்துக்கும் கார்ப்பேத்தியன் மலைக் கணவாய்களுக்கும் ருஷியர் விளைவித்து வந்த ஆபத்தை நீக்குவதே அவருடைய நோக்கம். ஜெர்மானியர் ருஷிய மாகாணமாகிய போலண்டின் மீது படையெடுத்தால் ருஷியர் அந்த மாகாணத்தைக் காக்கும் பொருட்டு, காலிஷியாவிலுள்ள ருஷியப் படைகளை போலண்டுக்கு அனுப்பி விடுவார்கள். அதனால் காலிஷியாவிலுள்ள ருஷியப் படைகளின் வன்மை குறைந்து போய் ஆஸ்டிரியர் அங்கு வெற்றி பெறலாம். இந்த நோக்கத்துடன் அவர் போலண்டின்மீது படையெடுத்தார். ஓரிடத்திலுள்ள ஆபத்தை நீக்குவதற்கு மற்றோரிடத்தில் மிக்கக் கடுமையாயும் விரைவாயும் தாக்குவதே ஏற்ற உபாயமென்பது ஜெனரல் ஹிண்டன் பர்க்கினுடைய கொள்கையாகும். அவர் அப்படிப்பட்ட யுத்த தந்

திரத்தை அனுசரிப்பதில் அவருக்கு எவ்வளவு பிரியமுண்டோ அவ்வளவு திறமையுமுண்டு. யுத்தம் ஆரம்பித்தது முதல், கிழக்காங்கத்திலாகட்டும் மேற்கரங்கத்திலாகட்டும் ஜெர்மானியரின் யுத்த நடவடிக்கைகளில் காணப்படும் விசேஷ மென்னவென்றால், அவர்கள் முடுக்கான சந்தர்ப்பங்களுக்குத்தகுந்தபடி தீவிரமானமுயற்சிகளைச்செய்வதாகும். அவர்கள் பதிலுக்குப் பதிலாக வலுவில் சென்று தாக்கும்போது, அந்த தாக்குதல் மிக்க கடுமையான வேகமும் வன்மையும் பெற்று நடத்தப்படுகின்றது. அந்த யுத்த நடவடிக்கையில் மூர்க்கமான வலிமையும் மின்னல் போன்ற விரைவும் விசேஷமாக விளங்கும்படி அதை அவர் அவ்வளவு மேன்மையாய் நடத்துகின்றார். அவருக்கு இயல்பாயுள்ள சாமர்த்தியத்தைக் காண்பிக்கும்படியான சிறப்புடன் அந்த யுத்த தந்திரம் வெளிப்படுகின்றது.

ஜெனரல் ஹின்டன்பர்க் போலண்டின் மீது படையெடுக்க நிச்சயித்த போது, அதேசமயத்தில்ஆஸ்டிரியரும் காலிஷியாவிலுள்ள ருஷியப் படைகளைத் தாக்குவதாக நிச்சயித்தனர். 15-லக்ஷம் துருப்புகளும் திடீரென்று போலண்டின்மீது படையெடுக்குமென்று ருஷியர் எதிர்பார்க்கவில்லை. ஆகையால் அந்த மாகாணத்தில் அச்சமயம் இருந்த ருஷியத் துருப்புகள் சொற்பமாகவேயிருந்தனர். ஜெனரல் ஹின்டன்பர்க் அளவிறந்த தீவிரங்கொண்டு தமது படைகளைச் செலுத்தினர். அக்டோபர் மாதம் 14-ந் தேதிக்குள், ஜெர்மன் படைகள் விஸ்டுலா நதியின் மேற்குக் கரை வரையில் முன்னேறிவிட்டன, விஸ்டுலா நதிக்கரையிலுள்ள வார்ஸா, இவான்கிராட் இவ்விரண்டு நகரங்கள் நீங்கலாக அந்நதிக்கு மேற்கிலுள்ள மற்ற பிரதேச முழுவதையும் ஜெர்மானியர் வசப்படுத்திக் கொண்டார்கள். அவ்விரு நகரங்களிலும் ருஷியக் கோட்டைகளிருந்தன. விஸ்டுலா நதியைக் காப்பதற்காக காலிஷியாவிலிருந்த ருஷியப் படைகளில் சிலவை அங்கு அனுப்பப்பட்டன.

அதே சமயத்தில் காலிஷியாவில் துர்ப்பலமடைந்துவிட்ட ருஷ்யப்படைகளை, ஆஸ்டிரியப்படைகள் டார்னோ நகரத்திலிருந்து ஸான்நதிக்குப் பின் தள்ளின. இவைகளின் விவரத்தை அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் காணலாம்.

அந்த படத்தில் இரண்டு கறுப்புக்கோடுகள் இருக்கின்றன. அவைகள், முதலிலிருந்த போர்முனையையும், பின்பு ஜெர்மானியரின் படையெடுப்பால் மாறிவிட்ட போர்முனையையும் குறிப்பிடுகின்றன. இடதுபக்கமாயுள்ள கோடு, ஜெர்மானியரின் படையெடுப்புக்கு முன்னிருந்த போர்முனையைக் குறிப்பிடுகிறது. அதில், போலண்டிலும் காலிஷியாவிலும் அம்பு போன்ற குறிகள் இரண்டு இருப்பதைக் காணலாம். அவைகள் ஜெர்மானியரும்ஆஸ்டிரியரும் எந்தத் திசையைநோக்கித் தாக்கினார்களென்பதைக் குறிக்கின்றன. இந்தப் போர்முனையிலிருந்த ருஷியப்படைகள் கிழக்காய்ப் பின்வாங்கி நிலைபெற்றதை வலதுபக்கமாயுள்ள கோடு குறிப்பிடுகிறது. போர்முனையில் எந்தபாகம் மாறுபடவில்லையோ அங்கு ஒரே கோடுதான் இருப்பதைக் காணலாம்.

ஜூரா நதிக்கரையில் சண்டை.

தாரன் நகரத்திலிருந்து புறப்பட்ட ஜெர்மன் படைகள் விஸ்டுலா நதிக்கரையோரமாய் முன் சென்று வார்ஸா நகரத்தை நோக்கிப் போயின. 14-ந் தேதி புறப்பட்ட ஜெர்மன் படைகள் மிகவும் தீவிரமாய்ச் சென்று 16ந் தேதி யன்று வார்ஸாவுக்கு மேற்கிலுள்ள ஜூரா நதியை அடைந்தன. அந்த நதி வார்ஸா நகரத்துக்கு 30 மைல் மேற்கிலிருக்கிறது. ஜூரா நதிக் கரையில் ருஷியத்துருப்புகள் வலுவான அரண்களைக் கட்டி அவைகளில் நிலைபெற்று ஜெர்மானியாரைத் தடுத்து, சண்டை செய்தார்கள். ஜெர்மானியர் அந்த நதிக்கரையிலிருந்த அரண்களைத் தகர்த்து ருஷியரைப் பின் தள்ளுவதற்கு முன்னால், ருஷியருக்குத் துணைப் படைகள் வந்தன. ஆனால் ருஷிய சேனாதிபதி கிராண்ட் டியுக் நிகலஸ் புதிய ருஷியப் படைகளை காலிஷியாவிலிருந்து எடுத்து அனுப்ப வில்லை; அப்படைகள் ருஷியா தேசத்திலிருந்து புதிதாய்ச் சேர்த்து அனுப்பப் பட்டவைகளாகும். ஜெனரல் ஹின்டன்பர்க்கும் ஜூரா நதிக் கரையிலிருந்த தம்முடைய ஜெர்மன் படைகளுக்குத் துணைத் துருப்புகளை அனுப்பினார். அதனால் அந்த நதிக் கரையில் இரு கக்ஷித் துருப்புகளும் அநேக தினங்களாக மிகக் கடுமையான சண்டைகளைச் செய்தனர். முடிவில் டிசம்பர் 25-ந் தேதி இரண்டு கக்ஷிப் படைகளும் ஜூரா நதியின் இரு கரைகளில் வலுவான அரண்களைக் கட்டி நிலைபெற்று விட்டன.

கிராகோ நகரந்துக்கு ஆபத்து.

ஜெனரல் வான் ஹின்டன் பர்க் போலண்டிலிருந்த ருஷியப் படைகளை யெல்லாம் பின்னடையச் செய்து அவைகளை ஜூராநதிக்கரையிலும் அந் நதிக்குத் தெற்கேயும் நேர் ஒழுங்காய் நிறுத்தி வைத்துத் தாக்கிய போது, ருஷியா தேசத்தில் புதிதாய்ச் சேர்க்கப்பட்ட ருஷியப் படைகள் அங்குதானே செய்ய வந்தனவென்று சொல்லியிருக்கிறோம். ருஷிய சேனாதிபதி காலிஷியாவிலிருந்த ருஷியப் படைகளை போலண்டுக்கு அனுப்பவில்லை. அதனால் காலிஷியாவிலிருந்த ருஷியப் படைகள் சிறிதும் வன்மை குறையாதவைகளாய் கிராகோ நகரத்தைப் பயமுறுத்தி வந்தன.

கார்ப்பேதியன் மலைகளில் ஜெர்மானியர்.

காலிஷியாவில் ருஷியரால் நேரிட்ட ஆபத்து, ஜெர்மானியரின் படையெடுப்பால் எம்மட்டு குறைவுபட்டதென்று கவனிக்கவேண்டும். ருஷியர் விளைவித்து வந்த ஆபத்து அதிகப்பட்டதேயொழிய, குறையவில்லை. நவம்பர் 13-ந் தேதியிலிருந்து டிசம்பர் 4-ந் தேதி வரையிலும் ருஷியக் குதிரைப் படைகள் கிராகோ நகரத்தை நோக்கிக் கடுமையாய் சண்டை செய்து முன்னேறின. டிசம்பர் 4-ந் தேதி ருஷியக் குதிரைகள் அந்நகரத்தின் வெளிப் புறத்து மதில்களுக்கு அருகில் 3-மைலுக்கு நெருங்கி விட்டன.

ஜெனரல்வான் ஹின்டன்பர்க், தாம் போலண்டில் தொடங்கிய பெரு முயற்சி காலிஷியாவில் பலன்தராமல் வீணாயினதை அறிந்தார். பிறகு ஜெனரல் ஹின்டன்பர்க் மிகுந்த கடுமையும் தீவிரமுங் கொண்ட சண்டைகளை, திடீரென்று மற்றோரிடத்தில் தொடங்குவதாக நிச்சயித்து அதில் தமக்கு வழக்கமா யுள்ள துணிச்சலையும் திறமையையும் காட்டினார். அவர் ஜூரா நதிக்கரையில் போர் நடத்திக் கொண்டிருக்கையிலேயே, 1½ லக்ஷம் ஜெர்மன் துருப்புகளை மிக்க விரைவாயும் இரகஸ்யமாயும் கார்ப்பேத்தியன் மலைகளில் குவித்துவிட்டார். டிசம்பர் 20-ந்தேதிக் குள்ளாக, கார்ப்பேத்தியன் மலைக்கணவாய்களின் வழியாய் 1½ லக்ஷம் ஜெர்மன் துருப்புகள் வடக்கு நோக்கி வெளிக்கிளம்பினார்கள், டார்னோபிா தேசத்திலிருந்த ருஷியப்படைகள் மேற்குமுகமாய்த்திரும்பி தெற்கு வடக்காய் நிலைபெற்றிருந்தன. அந்த

ருஷியப் படைகள் அதற்குக் கிழக்கே யுள்ள லெம்பர்க் நகரத்திலிருந்து வருகிற பாதைகளை ஆதாரமாய்க் கொண்டிருந்தன. அந்தப் பாதைகளைக் கார்ப்பேத்தியன் மலைக் கணவாய்களிலிருந்து வடக்கு நோக்கிச் சென்ற ஜெர்மன் படைகள் தாக்க ஆரம்பித்தன. இதன் பலனாக, கிராகோ நகரத்துக் கருகில் சென்ற ருஷியப் படைகளெல்லாம் டார்னோ பிரதேசத்துக்குப் பின் வாங்கிக்கொண்டன.

ருஷியர் கார்ப்பேத்தியன் மலைக் கணவாய்களைக் காக்காமல் கிராகோவை நோக்கி வெகுதூரம் முன் செல்ல எத்தனிப்பது அபாயமென்று அதனால் அறிந்தார்கள். அதனால் ஏராளமான ருஷியப் படைகள் கார்ப்பேத்தியன் மலைக்கணவாய்களைத் தாக்கிப் பிடிக்க முயன்றன. ஆகையால், கிராகோவுக்கு நேரிட்ட ஆபத்து தற்சமயம் நீங்கிவிட்டது. ஆனால் கார்ப்பேத்தியன் கணவாய்களிலிருந்து புறப்பட்ட ஜெர்மன் படைகள் ருஷியரால் பின் தள்ளப்பட்டன. இது முதல் ருஷியர் அந்த மலைக் கணவாய்களைப் பிடிக்க வேண்டுமென்று பெருமுயற்சிசெய்து வந்தார்கள். ருஷியர் அந்த கணவாய்களைப் பிடித்தாலல்லது கிராகோ நகரத்தை நோக்கி முன் செல்வது சாத்தியமில்லை என்று நிச்சயித்து அக்கணவாய்களைப் பிடிப்பதாக உறுதி கொண்டுவிட்டார்கள்.

---

## மின்னல்போன்ற தாக்குதல்கள்.

1915-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் ஜெனரல் ஹிண்டன்பர்க் போர்முனையெங்கும் பற்பல திசைகளில் மின்னல் போன்ற விரைவுடன் தாக்கி வந்தார். ஜனவரி மாதக் கடைசியில் அவர் ஜுரா நதிக்கரையில் ஒருவாரம் ஓயாமல் தாக்கினர். ஆனல் ருஷியப் படைகளின் வன்மை அவருடைய தாக்குதலைத்தாங்கக் கூடியதாயிருந்தது.

அதே சமயத்தில் அவர் கார்ப்பேத்தியன் மலைகளில் ஏராளமான ஜெர்மன் படைகளைத் திரட்டினர். அந்த மலைக் கணவாய்களில் அந்த ஜெர்மன் படைகள் ஐந்து பெரிய கூட்டங்களாகப் பிரிந்து நீஸ்டர் நதிக்கரை நெடுகத் தாக்குவதற்காக முன் சென்றன. ஆனல் அவைகள் ருஷியரால் தடுக்கப்பட்டன.

சில தினங்களுக்குப் பிறகு அதாவது பிப்ரவரி மாதம் 7-ந் தேதி ஜெனரல் ஹிண்டன்பர்க், கிழக்குப் பிரஷ்யாவில் அநேக படைகளைக் குவித்து ருஷியரைத் திடீரென்று தாக்கினர். 1914-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் நடந்த டானன்பர்க் சண்டைக்குப் பிறகு, அந்த மாகாணத்தின் எல்லையிலிருந்த ருஷியத்துருப்புகள் நவம்பர் மாதத்தில்தான் மறுபடியும் அதிக பலத்தைத் திரட்டி அந்த மாகாணத்தின்மீது படையெடுத்துச் சென்றார்கள். 1915-ம்வருஷம் பிப்ரவரி மாதம் 7-ந்தேதி, அந்த ருஷியத்துருப்புகள் அந்த மாகாணத்தில் ஏரிகளும்சேற்று நிலங்களும் வியாபித்திருக்கிற அபாயகரமான பிரதேசத்துக்கு நெருங்கினர்கள். உடனே ஜெனரல்ஹிண்டன்பர்க்கு ரயில் பாதைகளின் உதவியால், அநேக ஜெர்மன் படைகளை, சீக்கிரமாயும் இரகஸ்யமாயும் திரட்டி, மிக்க உக்கிரமாய் ருஷியரின்மீது விழுந்து தாக்கினர். அப்போது நடந்த மிகக் கடுமையான சண்டையில் ருஷியத்துருப்புகள் நாலா பக்கங்களிலும் ஜெர்மானியரால் சூழப்பட்டுத் தாக்குண்டார்கள். அநேக ருஷியத் துருப்புகள் பின்வாங்கிச் செல்வதற்கு வழியில்லாமல், தங்களைச் சூழ்ந்துகொண்டிருந்த ஜெர்மன் படைகளுக்கு இடையே புகுந்து பயங்கரமான சண்டைகளால் வழியை வெட்டிக்கொண்டு சென்றார்கள். சுமார் 50 ஆயிரம் ருஷியத் துருப்புகள் சேதமானர்கள். இவ்வாறு கிழக்குப் பிரஷ்யாவிலிருந்த ருஷியத் துருப்புகளைப் பின் தள்ளிச் சென்ற

ஜெர்மானியர் நீமென் நதிக்கரையிலுள்ள கிராட்னோ நகரத்துக் கருகில் வந்து அந்த நதியைக் கடந்து செல்லவும் முயற்சி செய்தார்கள். ஆனால் கிராட்னோ நகரத்தில் வலுவான ருஷியக் கோட்டைகள் இருந்ததாலும், ருஷியருக்குத் துணைப்படைகள் வந்ததாலும் அவர்கள் ஜெர்மானியரைப் பின்னடையச்செய்தார்கள்.

அதன்பிறகு பிப்ரவரி மாதத்தின் பிற்பாதியில் மற்றொரு சண்டையை ஜெர்மானியர் நேரு நதியை நோக்கித் தொடங்கினார்கள். ஆனால் பிராஸ்னிஸ் நகரத்துக்கருகில் ருஷியர் மிகக்கடுமையாய்ச் சண்டை செய்து ஜெர்மானியரைத் தடுத்துவிட்டார்கள்.

ருஷியப் போர்முனையின் வன்மை.

ஜெனரல் ஹின்டன் பர்க் ஜனவரி-30-ந் தேதியிலிருந்து 25- தினங்களுக்குள்ளாக மேற்சொல்லிய வாறு பற்பல திசைகளில் தாக்கினார், ஜீராநதிக்கரையிலும், கார்ப்பேத்தியன் மலைகளிலும், நீமென் நதிக்கரையிலும், நேரு நதிக்கருகிலும் அவர் தொடங்கிய தாக்குதல்களெல்லாம் பயன்படவில்லை. கிழக்குப் பிரஷ்யா மாகாணத்திலிருந்த ருஷ்யரைப் பின்தள்ளினது தவிர, அவர்கள் வேறு சாதகம் பெறவில்லை. அதற்குக் காரணம் ருஷியப்படைகள் மிகுந்த பலத்தைப்பெற்றிருந்ததாகும் மேலும், அந்தப்படைகள் நிலைபெற்றிருந்த பிரதேசங்களும் இயற்கையமைப்பிலேயே வன்மை கொண்டிருந்தன. மேற் சொல்லிய நதிகளின் கரைகள் அந்தப்படைகள் நிலைபெற்று சண்டை செய்வதற்கு எல்லாவிதத்திலும் சாதகமாயிருந்தன. தவிர அந்நதிக் கரைகளில் பேர்பெற்ற ருஷியக் கோட்டைகளும் இருந்தன. ஆகையினால் ஜெனரல் ஹிண்டன்பர்க் மேற்சொல்லியவாறு தாக்கினபோது, போர்முனையின் பற்பல பாகங்கள் இயற்கையிலேயே எவ்வளவு நன்மைகொண்டிருந்தனவென்றும் அங்கங்கே யுள்ள ருஷியப்படைகள் எவ்வளவு பலத்தைப் பெற்றிருந்தன என்றும் அறிந்து கொண்டார். அந்த அனுபோகங்களெல்லாம் அவருக்கு சில மாதங்களுக்குப் பிறகு மிகவும் உபயோகமாயிருந்தன.

---

## ருஷ்யர் கார்ப்பேத்தியன் மலைகளைத் தாக்குதல்.

1915-ம் வருஷம் பிப்ரவரி மாதக் கடைசியில் ஜெர்மானியரின் பிரயத்னங்கள் வீணாகி ஓய்ந்து போனவுடன், ருஷியர் கார்ப்பேத்தியன் மலைக் கணவாய்களைத் தாக்க நிச்சயித்தார்கள். அந்தக் கணவாய்களைப் பிடிக்க வேண்டுமென்று அவர்கள் கொண்ட மன உறுதியும் பிடிவாதமும் வியக்கத் தக்கதாயிருந்தன. ருஷியர் காலிஷியாவின் மேற்கு பாகத்தை சுவாதீனஞ் செய்து கொண்டால்தான் ஜெர்மனியின்மீது படையெடுக்க சாத்தியப்படும். காலிஷியாவின் மேற்கு பாகத்தை வசப்படுத்திக் கொள்ளவேண்டுமானால், அங்குள்ள முக்கிய ஸ்தலமாகிய கிராகோ நகரத்துக் கோட்டைகளை அவர்கள் பிடிக்கவேண்டும். அவர்கள் அவ்வாறு கிராகோ நகரத்தை நோக்கி வெகுதூரம் மேற்கு திசையில் முன் செல்ல வேண்டுமானால், அவர்கள் தங்களுக்குத் தெற்கு பக்கத்தில் விஸ்தாரமாய் வியாபித்துள்ள மலைக் கணவாய்களைப் பிடிக்க வேண்டும். அவ்வாறு ருஷியர் மலைக்கணவாய்களைப் பிடிக்காவிட்டால், ஜெர்மானியர் மலைக்கணவாய்களின் வழியாக வெளிக்கிளம்பி ருஷியருக்குப் பின்புறத்தில்வந்து ஆபத்தை விளைவிப்பார்கள். இந்த அவசியமான காரணத்தால் ருஷியர் அம்மலைகளைப்பிடிக்க எத்தனித்தார்கள். அதனால் வேறொரு முக்கியமான சாதகத்தையும் அவர்கள் எதிர்பார்த்தார்கள். அவர்கள் மலைக்கணவாய்களைப் பிடித்து அம்மலைகளைக் கடந்து தெற்கே வந்த வுடன், ஹங்கேரி தேசம் முழுவதையும் எளிதாய்

சப்படுத்திக் கொள்ளலாம். ஆஸ்டியா ஏகாதிபத்தியத்திலுள்ள நாடுளில் ஹங்கேரி நாடு மிகவும் முக்கியானதால், அந்த நாடு வசப்பட்டடன் அந்த ஏகாதிபத்தியமே பணிதுவிடும்; அது போய்விட்டால் இந்த காயுத்தமே ஓய்ந்துவிடும்.

ஜனவரி மாதக் கடைசியில் ஜெர்மன் டைகள் ஐந்து கூட்டங்களாகப் ிரிந்து மலைக் கணவாய்களி லிருந்த ருஷியரைப் பின் தள்ளினார்கள் என்று ற்கெனவே சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த ஜெர்மன் படைகளெல்லாம் அம் மலைகளின் வடபுறத்து அடிவாரத்துக்கு அப்பால் முன் செல்ல முடியவில்லை. பிறகு ருஷியப் படைகள் ஜெர்மானியரைத் தாக்கி மறுபடியும் அக் கணவாய்களைப் பிடித்துக் கொண்டன. ஆனால் ஜெர்மானியர் மார்ச்சு மாத ஆரம்பத்தில் மறுபடியும் முன் சென்று ருஷியரை கணவாய்களினின்றும் பின் தள்ளினார்கள்.

### ருஷியரின் பெருமுயற்சி.

மார்ச்சு 19-ந் தேதிக்குப் பிறகு ருஷியர் அக்கணவாய்களைப் பிடிக்க பெரு முயற்சி செய்தார்கள். ருஷிய சேனாதிபதியாகிய கிராண்ட் டியுக் நிகலஸ் அக்கண்வாய்களைப் பிடித்தே தீர வேண்டுமென்று உறுதிகொண்டு விட்டார். தக்ஷணமே ருஷியக் கூட்டங்கள் மேன் மேலும் அம்மலைகளில் குவிந்த வண்ணமாய் இருந்தன. சுமார் 200 மைல் நீளமுள்ள அந்த மலைத் தொடர் எங்கும் ஒவ்வொரு கக்ஷியிலும் சுமார் 8 லக்ஷம் துருப்புகள் நிலை பெற்று சண்டை செய்தார்கள். ருஷிய சேனையிலுள்ள மிக்க தேர்ச்சி பெற்ற தளகர்த்தர்கள் அங்கு அனுப்பப்பட்டார்கள். ருஷிய சக்கரவர்த்தியின் நெருங்கின பந்துவாகிய கிராண்ட் டியுக் அலக்ஸாண்டிராவிச் முன்னொரு சமயம் சக்கரவர்த்தியின் கோபத்துக்கு இலக்காகி தேசபிரஷ்டம் செய்யப்பட, இந்த மகாயுத்தம் தொடங்கிய பிறகு அந்த கிராண்ட் டியுக் தமது தேசத்தைக் காப்பதற்காக உயிரையும் உடலையும் கொடுக்கத் தயாரா யிருப்பதாக அறிவித்தார். அவருக்கு விதிக்கப்பட் டிருந்த தேச பிரஷ்ட தண்டனையை ருஷிய சக்கர வர்த்தி நீக்கி அவரை போர் முனைக்கு அனுப்பினார். அந்த கிராண்ட் டியுக் மலைப் பிரதேசங்களில் சண்டை செய்வதில் மிகுந்த அநுபோகம் பெற்றவர். ருஷிய ஏகாதிபத்தியத்திலுள்ள மலைப்பிரதேசத்து ஜனங்கள் படைகளில் சேர்க்கப்பட்டு கார்ப்பேத்தியன் மலைகளுக்கு அனுப்பப்பட்டார்கள். மார்ச்சு 22-ந் தேதி பிரிஸமில் கோட்டைகளிலிருந்த ஆஸ்டிரியத் துருப்புகள் சரணமடைந்தனர். அதனால், அக் கோட்டைகளை முற்றுகை போட்டுக் கொண்டிருந்த இரண்டுலக்ஷம்ருஷியத் துருப்புகளும் கார்ப்பேத்தியன் மலைகளுக்கு அனுப்பப்பட்டனர்.

### பனிச்சிகரங்களில் பயங்கரமான சண்டை

மார்ச்சுமாதமும் ஏப்ரல்மாதமுழுவதும் அம்மலைக் கணவாய்களில் உக்கிரமான சண்டைகள் நடந்த வண்ணமா யிருந்தன. இரண்டுகக்ஷித்துருப்புகளும் ஏராளமா யிருந்தபடியால் கணவாய்களில்மட்டும் சண்டைசெய்யாமல்அவைகளுக்குப் பக்கங்களிலுள்ள மலைச் சிகரங்களிலும்போர் செய்தனர். அவ்வாறு அந்த சண்டைகள் மலைச்சிகரங்களெங்கும் பரவி விட்டன. அச்சமயம்மிகக் கடுமையான மாரிகாலமாகும்.

பனிகாலம் முடிவதற்குள் ருஷியர் அம்மலைகளை வசப்படுத்திக் கொள்ள வேண்டும்; ஏனெனில் வசந்த காலம் வருமானால் பனிக் கட்டிகள் உருகி நீர்ப் பிரவாகமாய் ஓட ஆரம்பிக்கும்; அப்போது அம்மலைகளில் நடமாட முடியாது. அதனால் அந்தக் கடுமையான குளிர்காலத்தில் ருஷிய சேனாதிபதி மலைச் சண்டைகளை ஓயாத உக்கிரத்துடன் நடத்தி வந்தார்.

மலைச் சிகரங்களும் கணவாய்களும் பாதைகளும் கனத்த பனிக்கட்டிக

ளால் மூடப்பட்டு ஒரே வெண்ணிறமாயிருந்தன. பனி மூடிய தரையில் வண்டிச் சக்கரங்கள் போகமுடியாவாகையால் பலகைகளின் மேல் சாமான்களை வைத்து இழுத்துச் செல்ல வேண்டியிருந்தது. முக்கியமான யுத்த ஆயுதமாகிய பீரங்கிகளை பனியடர்ந்த பாதைகளில் இழுத்துச் செல்வது மிகவும் சிரமமாயிருந்தது. முக்கியமாய் ஆஸ்டிரியருடைய பெரிய முற்றுகைப் பீரங்கிகளிற் சிலவை ஆஸ்டிரிய ராணுவத்திலுள்ள மிக்க நிபுணத்துவங் கொண்ட இஞ்ஜினியர்களால் மலைச்சிகரங்களின் மேல் தூக்கி வைக்கப்பட்டிருந்ததானது மிகவும் அற்புதமாயிருந்தது. பனியால் மூடப்பட்ட தரையின் மேல் துருப்புகள் நடப்பது வெகு சிரமம். மேலும் அத்துருப்புகள் பனியால் உறைந்த மலைச் சரிவின் மேல் ஏறுவது அசாத்தியமாகிவிட்டது. அதனால் துருப்புகள் பனித்தரையில் படுத்த வண்ணமாய் ஊர்ந்து செல்லவேண்டியிருந்தது. இந்த ஸ்திதியிலிருந்த மிகக் கடுமையான பனிகாலத்தில், ருஷியர் அம்மலைப்பிரதேசத்தின் மேல்படையெடுத்தார்கள். ருஷியத் துருப்புகளும் தளகர்த்தர்களும் காலநிலையின் கொடுமைகளையும் உயிர்ச்சேதத்தையும் லக்ஷியஞ்செய்யாமல் போர்புரிந்து அதிசயமான பராக்கிரமமும் பிடிவாதமும் காட்டினார்கள். சத்துருக்களின் இருப்பிடங்களை சீக்கிரமாய்ப் பிடிப்பதற்காக ருஷியத்துருப்புகள் நெருக்கமாய் அணிவகுத்து இடைவிடாமல் தாக்கிச் சண்டை செய்தார்கள். ஆஸ்டிரியரும் ஜெர்மானியரும் தங்களுடைய ஏகாதிபத்தியத்துக்கு நேர்ந்த ஆபத்து சாமான்யமல்லவென்று உணர்ந்து, அளவற்ற மனோவேகமும் மனோதிடனும் காட்டி எதிர்த்து நின்றார்கள். இருகக்ஷிப் பீரங்கிகள் குண்டுகளைப் பொழிந்து பனிப்பாறைகளையும் கற்பாறைகளையும் பெயர்த்து எறிந்துவிட, இருகக்ஷித் துருப்புகளும் வெள்ளை உடை உடுத்து பனித் தரையின் வெண்மையோடு வெண்மையாய்க்கலந்து கவிழ்ந்த வண்ணமாய்ச் சென்று பயங்கரமாய் நடத்திய போராட்டத்தால் இரண்டுமாத காலம் உதிர வெள்ளம் பெருக விட்டார்கள்.

### ருஷியரின் போர்த் திறமை.

மலைப் பிரதேசத்தில் பெரிய பீரங்கிகளை ஏராளமாய் உபயோகிக்க முடியாமல் இருகக்ஷித் துருப்புகளும் சமபலம்பெற்று மலைகளுக்கிடையில்ஓயாத கைச் சண்டைகளே செய்தபடியால், இந்த மகா யுத்தத்தில் நடந்துள்ள சண்டைகளிலெல்லாம் அந்த மலைச் சண்டைகளே மிகக் கோரமாயிருந்தன வென்பதில் சந்தேகமில்லை.

ருஷியர் அவ்வாறு சண்டை செய்து மலைப் பிரதேசத்தின் பெரும் பாகத்தையும் வசப்படுத்திக் கொண்டதானது, இம்மகா யுத்தத்தில் நடைபெற்ற அதிசயமான சம்பவங்களுள் ஒன்றாக மதிக்கவேண்டும். அச்சம்பவம் ருஷிய சேனையின் வன்மைக்கும் போர்த்திறமைக்கும் அற்புதமான அத்தாக்ஷியாக எந்நாளும் விளங்கும். ஏப்ரல் மாதக் கடைசியில் ருஷியத்துருப்புகள் மலைக் கணவாய்களையும், பாதைகளையும் பிடித்துக் கொண்டு மலைத் தொடருக்குத் தெற்கிலுள்ள அடிவாரத்தை அடைந்து விட்டார்கள். ருஷியத் துருப்புகள் தாங்கள் பிடித்துக்கொண்ட மலைச் சிகரங்களிலிருந்து கீழ் நோக்கின போது, ஹங்கேரி நாட்டின் சமபூமி யனைத்தும் விசாலமாய் பரவிக் கிடப்பதைக் கண்ணுற்றார்கள். ருஷியக் குதிரைப் படைகள் கணவாய்களைக்கடந்து ஹங்கேரி நாட்டில் வட்டமிடத் தொடங்கிவிட்டன. ஆஸ்டிரிய ஏகாதிபத்தியத்தின் மீது ருஷிய சேனைபடையெடுத்துச் செல்வதற்கு, சகல ஏற்பாடுகள் துரிதமாய் நடத்தப்பட்டன. 1915-ம் வருஷத்தில் சேர்க்கப்பட்ட புதிய ருஷியப் படைகள் அங்கு செல்வதற்குத் தயாராயிருந்தன.

ஆஸ்டிரிய ஏகாதிபத்தியத்துக்கு ஆபத்து.

ஹங்கேரி நாடு பணிந்துவிடும் தருண சொற்பகாலமே யிருப்பதாகத் தோன்றிற்று. ஆஸ்டிரியர் தங்களுக்குப் பேராபத்து நெருங்கிவிட்டதைக் கண்டார்கள்; அவர்கள் மறுபடியும் ஜெர்மானியரின் உதவியை நாடினார்கள்; ஜெர்மானியரும் அந்த ஆபத்தை நீக்கத் தயாராயிருந்தார்கள். ஜெனரல் வான் ஹின்டன்பர்க் அவ்வித ஆபத்து நேரக்கூடாதென்று, சென்ற 10-மாத காலமாய் பற்பல முயற்சிகளைச் செய்தும் தக்க பலன் அடையவில்லை என்பதை அறிந்தார். அதற்கு முக்கிய காரணம், ருஷியப் போர்முனையிலுள்ள ஸ்தலங்கள் மிக்க வன்மைகொண்டிருந்ததால் அங்கு நிலைபெற்று சண்டை செய்த ருஷியப் படைகளும் அதிக வன்மையைப் பெற்றன.

---

காலிஷியாவை ஜெர்மானியர் மீட்டல்.

ருஷியப் போர்முனையின் விசேஷம்.

ருஷியப்போர்முனையெங்கும் அநேக நதிகள் தொடர்ச்சியா யிருப்பதோடு அந் நதிக்கரைகளிலும் வலுவான ருஷியக்கோட்டைகள் கட்டப்பட்டிருந்தன. வடக்கே பால்டிக்கடலிலிருந்து, நீமன் நதி, பாபர்நதி, நேருநதி, விஸ்டுலாநதி, ஸான்நதி, நீஸ்டாநதி ஆகிய இந் நதிகளெல்லாம் அநேகமாய் ஒரே தொடர்ச்சியா யிருக்கின்றன. தவிர, போலண்டிலுள்ள நதிக்கரைகளில் ருஷியக்கோட்டைகளும் இருக்கின்றன. ஆகையால் ஆஸ்டிரிய ஏகாதிபத்தியத்துக்கு நேர்ந்த ஆபத்தை நீக்குவதற்கு ருஷியசேனையை அந்த வலுவான போர்முனையிலிருந்து அப்புறப்படுத்தி வெகுதூரம் பின் தள்ளிவிட வேண்டுமென்று ஜெர்மானியர் நிச்சயித்தார்கள். ருஷியப் படைகளை வெல்வதற்கு ஜெர்மன் படைகளின் வன்மையை ஏராளமாய் அதிகரிக்க வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்தார்கள். ஆனால் ருஷியப் படைகள் ஏற்கெனவே மிகுந்த வன்மைபெற்று தொகையில் ஏராளமாயிருந்ததோடு 1915-ம் வருஷத்துக்கென்றே சேகரிக்கப்பட்ட லக்ஷக்கணக்கான புதிய துருப்புகளையும் சேர்த்துக்கொள்ளத் தயாரா யிருந்தன. ஆனால் ஜெர்மன் ஏகாதிபத்தியத்தில் சேர்க்கக்கூடிய துருப்புகளுக்கு ஒரு அளவு உண்டு. ஆகையால் அங்கு ஆள் பலம் அவ்வாறு ஏராளமாய்க் கிடைக்கமுடியாது. அதனால் ஜெர்மன் ராணுவ நிபுணர்கள் வேறொரு உபாயஞ் செய்தார்கள்.

ஜெர்மானியரின் புதியயோசனை.

ஜெர்மானியர் ருஷிய சேனையின் வன்மையை, தங்களுடைய வன்மையின் மிகுதியால் வெல்ல நிச்சயித்தார்கள். அவர்களுடைய இந்த நூதன யோசனை மிகவும் சாமான்யமானது; ஆனால் அவர்கள் அதற்குச் செய்த பிரயத்தனமோ மிகப் பிரமாதமாயிருந்தது. அதிகத் துருப்புகளைச் சேர்ப்பதற்குப் பதிலாக அதிகப் பீரங்கிகளைச் சேர்த்து சேனையின் வன்மையை அதிகரிக்க வேண்டுமென்று ஜெர்மானியர் யோசனை செய்தார்கள். ஒரு படையில் துருப்புகள் குறைவாயிருந்தாலும் பீரங்கிகளை அதிகமாய்ச் சேர்ப்பதால் அதன் வன்மையை அதிகப்படுத்தலாம். ஆனால் அதற்கு பீரங்கிகளை ஏராளமாய்ச் செய்துகொண்டிருக்கவேண்டும். பீரங்கிகளை அதிகமாய்ச் சேர்ப்பதற்குத் தக்கவாறு ஏராளமான குண்டுகளும் சேகரிக்கவேண்டும். அந்த குண்டுகளும் பீரங்கிகளும் துருப்புகளோடுகூடவே விரைவாகக் கொண்டுபோகப்படவேண்டும். இதற்காக அநேக மோட்டார் வண்டிகள் அந்தந்த வேலைகளுக்குத் தக்கபடி புதிதாய்ச் செய்யப்பட்டன. இவ்வாறு ஜெர்மானியர் தங்கள் படைகளின் வன்மையைப் பலமடங்கு அதிகப்படுத்தினார்கள். நேசக் கக்ஷியைவிட ஜெர்மன் கக்ஷியின் ஆள் பலம் குறைவாயிருந்தபடியால், ஜெர்மானியர் அவ்வாறு துருப்புகளை மிதமாய் உபயோகித்து, பீரங்கிகளை ஏராளமாய் பிரயோ

கிக்க நிச்சயித்தார்கள். மேற் சொல்லிய சகல தளவாடங்களையும் ஏராளமாகவும் விரைவாகவும் செய்து வருவதற்காக சேனைக்குத் தகுதி யில்லாத ஜனங்களெல்லாரையும் உபயோகித்து விஸ்தாரமான ஏற்பாடுகளைச் செய்தனர்.

ஆஸ்டிரிய மாகாணமாகிய காலிஷியாவை ருஷியரின் வசத்திலிருந்து மீட்பதற்காக, ஜெர்மானியரின் யுத்த நடவடிக்கைகள் மே மாதம் 2-ந் தேதி ஆரம்பமாயின. அந்த நடவடிக்கைகளை மூன்று பாகங்களாகப் பிரித்து விவரிப்போம். காலிஷியாவிலிருந்த ருஷியப் போர்முனை முதலில் டார்னோநகரமுள்ள பிரதேசத்திலிருந்தது; பிறகு அது ஸான் நதிக்கரைக்குப் பின் வாங்கியது; பிறகு லெம்பர்க் நகரத்துக்குக் கிழக்கே பின்வாங்கிச் சென்று அமைந்தது. போர்முனையின் அந்த மூன்று வித நிலைமைகளும் கீழேயுள்ள படத்தில் குறிக்கப்பட் டிருக்கின்றன. கிழக்கு சரங்கத்துப் போர்முனையின் மற்ற பாகங்களில் மாறுதலில்லை என்பதும் படத்தில் குறிக்கப்பட் டிருப்பதைக் கவனிக்கலாம்.




மே மாதம் 2-ந் தேதியிலிருந்து 14-ந் தேதி வரையில் ஜெர்மானியர் டார்னோ நகரமுள்ள போர்முனையிலிருந்து ஸான் நதிவரையில் ருஷியரைப் பின்தள்ளினார்கள். பிறகு மே மாதம் 14-ந்தேதியிலிருந்து ஜூன் 3-ந் தேதி வரையில் ஜெர்மானியர் சண்டை செய்து ஸான் நதிக்கரையிலிருந்து லெம்பர்க் நகரமுள்ள போர்முனைவரையில் ருஷியரைப் பின்தள்ளினார்கள்.

றகு, ஜெர்மானியர் ஜூன் 3-ந்தேதி லிருந்து 22-ந்தேதிவரையில் சண்டை செய்து லெம்பர்க் நகரத்தைப்பிடித்து அதற்குக் கிழக்கே ருஷியரைப் பின் தள்ளினார்கள். இந்த மூன்று பெரிய சண்டைகளைப் பற்றி இனி வரிசையாய் சொல்வோம்.

---

## டார்னே சண்டை.

காலிஷியாவின் மேற்கு பாகத்தில் டார்னேநகரத்துக்கு வடக்கிலும் தெற்கிலும் ஜெர்மானியர் பெரும் போர் தொடங்கினார்கள். அப்போது ஆரம்பமான யுத்தமானது அதுவரையில் நடந்துள்ள யுத்த சம்பவங்களிலெல்லாம் மிகப் பிரமாதமான தென்றே கருத வேண்டும்.

ராணுவப் பிரயத்தனங்களை ஒழுங்காய்ச் செய்து முடிப்பதில் ஜெர்மானியர் தங்களுடைய ஒப்பற்ற திறமையைக் காண்பித்தார்கள். சகல தேவைகளை எதிர்பார்த் தறிவதிலும், அவைகளுக்குத் தக்க ஏற்பாடுகளை முன் யோசனையுடன் நிச்சயிப்பதிலும், அவைகளைத் தயாராய் செய்து முடிப்பதிலும் ஜெர்மானியர் காட்டின சாமர்த்தியத்துக்கு வேறெவரும் ஈடுகொடுக்கவோ மிஞ்சவோ சாத்தியப்படவில்லை. அவர்கள் சிருஷ்டித்துள்ள பிரமாண்டமான ராணுவ மானது எவ்வளவு வல்லமை கொண்டிருந்ததோ அவ்வளவு மனவுறுதியும் பெற்றிருந்தது.

## டார்னே போர்முனை.

ஏராளமான ருஷியத் துருப்புகள் கார்ப்பேத்தியன் மலைகளில் இருந்தபடியால், டார்னே போர்முனையிலிருந்த ருஷியத் துருப்புகள் சொற்பமாகவே இருந்தன. அந்தப் போர்முனையில் சுமார் 2½ லக்ஷம் ருஷியத்துருப்புகள் இருந்தன என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. முன்பு துருக்கி பால்கன் யுத்தத்தில் பல்கேரிய சேனைக்கு அதிபராயிருந்த ஜெனரல் டிமிட்ரீப் இந்த மகாயுத்தம் தொடங்கியவுடன் ருஷிய சேனையில் தளகர்த்தராய்ச் சேர்ந்து, பிறகு டார்னே போர்முனையிலிருந்த ருஷியத் துருப்புகளுக்குத் தலைமை வகித்திருந்தார். அந்த ருஷியசேனாபதியின் கீழிருந்த 2½ லட்சம் ருஷியத்துருப்புகளைத் தாக்குவதற்காக, 5 லக்ஷம் ஜெர்மன் துருப்புகள் திரட்டப்பட்டனர். அந்தத் துருப்புகளுக்கு ஜெனரல் வான் மாகென்ஸன் தலைமை வகித்தார். அவர் ஜெனரல் ஹிண்டன் பர்க்கிடம் தளகர்த்தராயிருந்து போலண்டில் பல முறை போர் நடத்தியிருக்கிறார். அந்த தளகர்த்தராகிய ஜெனரல் வான் மாகென்ஸன் காலிஷியா மாகாணத்தை மீட்குப்பொறுப்பு ஏற்றுக்கொண்டார். இந்தப்புதியநடவடிக்கைகள் ஆஸ்டிரிய ஜெர்மானிய யுத்த தந்திரிகளால் யோசிக்கப்பட்டவை. ஜெனரல் மாகென்ஸனிடம் வேறிரண்டு தளகர்த்தர்கள் அவருக்கு இரண்டு பக்கத்திலும் இருந்தார்கள். ஆர்ச் டியூக் ஜோசெப் பர்டினண்ட் அவருக்கு வடக்கிலும் ஜெனரல்போஜ்னு அவருக்குத் தெற்கிலும் படைகளைச் செலுத்தினார்கள். ஆர்ச்டியூக் ஜோசப் பர்டினன்ட், ஆஸ்டிரியப் படைகளுக்கெல்லாம் சேனாதிபதியாயிருந்தபோதிலும், காலிஷியாவில் அப்போது தொடங்கப்பட்ட நடவடிக்கைகளை ஜெர்மன் தளகர்த்தான ஜெனரல் மாகென்ஸன் நடத்தினர்.

## ஜெனரல் மாகென்ஸனுடைய படையணி.

டார்னே நகரத்துக்கு வடக்கே விஸ்டுலா நதியுடன் டுனைக் நதி கலக்கின்றது. அவ்வாறு இரு நதிகளும் சேர்கின்ற இடத்திலிருந்து தெற்கே கார்ப்பேத்தியன் மலைவரையிலும்சுமார் 60 மைல் நீளமுள்ள போர்முனையில் 5-லக்ஷம் ஜெர்மன்படை துருப்புகள் திரட்டப்பட்டனர். ஏப்ரல் மாதக்கடைசியில் ஜெர்மானியர் அத்தனை துருப்புகளையும் சேர்த்து, மிகப்பெரிய யுத்தத்தைத் தொடங்குவதற்குவேண்டிய சகல ஏற்பாடுகளையுஞ் செய்ததோடு, அந்தக் காரியங்கள் அனைத்தையும் மிக

வும் இரகஸ்யமாயும், சீக்கிரமாயும் செய்து முடித்ததானது ஆச்சரியமாயிருக்கிறது. அந்தப் போர்முனையில் ஜெர்மானியர் ஏராளமான பீரங்கிகளையும் தளவாடங்களையும் சேகரித்ததோ இன்னும் அதிசயமாயிருக்கிறது. முக்கியமாய் பீரங்கிகளில் பற்பல தினுசுகள், 4-அங்குல பீரங்கிகள் முதல் 17-அங்குல பீரங்கிகள் வரையில், ஏராளமாய்ச் சேர்க்கப்பட்டன. டார்னே போர்முனையில்மட்டும் சுமார் 4000-பீரங்கிகள் அநேக தினுசுகளாகச் சேர்க்கப்பட்டனவென்றால் அந்த ஜெர்மன் படைகளின் வன்மை இப்படிப் பட்டதென்று சொல்லத் தேவையில்லை. தவிர, அந்த 4000-பீரங்கிகளில் ஒருபாதி பெரிய தினுசுகளாகவே யிருந்தது; அதாவது 8-அங்குலத்துக்கு மேற்பட்ட பெரிய முற்றுகைப் பீரங்கிகளாகும். மேலும், அந்த டார்னெ போர்முனையிலுள்ள கார்லிஸ் என்ற ஸ்தலத்துக்கு அருகில் அதாவது ஜெர்மானியரின் முக்கியப் பிரயத்தனம் செய்யப்படுமிடத்தில் மட்டும் 1500-பீரங்கிகள் திரட்டப் பட்டன. தவிர, அத்தனை பீரங்கிகளுக்கும் தேவையான குண்டுகளும் கொண்டு போகப்பட்டன. இந்த சண்டைகளில் ஜெர்மானியர் குண்டுகளைக் கோடிக் கணக்காய் வாரிப்பொழிந்தார்களென்றால் அவர்களிடமிருந்த குண்டுகள் எவ்வளவு ஏராளமாயிருந்திருக்க வேண்டும். ஒரு சமயம் 4-மணி நேரத்தில் 7-லட்சம் குண்டுகள் சுடப்பட்டனவென்று தெரிகிறது. 7-லக்ஷம் குண்டுகளை எடுத்துக்கொண்டு செல்வதற்கு ஓராயிரம் வண்டிகள் தேவை. அப்படியானால் ஜெர்மன் படைகளோடுகூட எத்தனை லக்ஷம் மோட்டார் வண்டிகள் செல்ல வேண்டுமென்பதை ஒருவாறு அறிந்து கொள்ளலாம். ஜெர்மானியர் மொத்தம் 4000 பீரங்கிகளையும் அவைகளுக்கெல்லாம் தேவையான குண்டுகளையும் ஒரே ரோட்டில் இழுத்துச்சென்றால் அவைகளெல்லாம் அந்த ரஸ்தாவில் சுமார் 250-மைல் நீளத்துக்கு வியாபித்திருக்கும் என்பதை அறியவும். ஜெர்மானியர் காலிஷியாவில் இந்த புதிய யுத்தத்தைத் தொடங்கினதற்கு முன்னால், அவ்வளவு ஏராளமான ஏற்பாடுகளை யெல்லாம் செய்து முடித்து, மே மாதத்தில் ஆயிரக் கணக்கான பீரங்கிகளையும் லட்சக் கணக்கான துருப்புகளையும் கோடிக் கணக்கான குண்டுகளையும் டார்னே போர்முனையில் இரகஸ்யமாய் குவித்துவிட்டதானது அத்யாதிசயமான செய்கையென்று கருதப்படுகிறது.

ஜெர்மன் துருப்புகளின் வன்மை அவர்கள் பெற்றிருந்த ஏராளமான பீரங்கிகளால் அபாரமாயிருந்தது. காலாட்படைக்குப் பின்னும் இருபக்கங்களிலும் பலதினுசான பீரங்கிகளை அடுக்கி அவ்வாறு அந்தப் படைமுழுவதும் சதுர வடிவம்போல அணிவகுத்தது, எதிரிகளின் படை வரிசையைப் பிளந்து செல்ல வேண்டுமென்று ஜெர்மானியர் நூதனமாய் யோசனைசெய்தார்கள். மே மாதத்தில் அந்த முறையின்படி அவர்கள் யுத்தம் நடத்தினார்கள். அவ்விதம் ஏராளமான பீரங்கிகளின் பலத்தைப் பெற்ற படைகளை ஜெனரல் வான் மாகென்ஸன் முதன் முதலாக உபயோகித்தபடியால், "மாகென்ஸனுடைய படையணி" என்று அது முதல் பிரபலமாய் வழங்கிவருகின்றது. அந்தப் படையணியில் இரண்டு விசேஷங்கள் இருக்கின்றன. முதலாவது, அந்தப் படை மிதமிஞ்சிய பீரங்கி பலத்தைப் பெற்றிருந்தது. இரண்டாவது, அந்தப் படையின் இரு பக்கங்களும் வலுவாய்க் காக்கப்பட்டிருந்தது. சாதாரணமாய் படையின் முன்புறத்தில் அதன் வன்மை யெல்லாம் காட்டப்பட்டிருக்கும். அப்படிப்பட்ட படையானது சத்துருக்களுக்கு இடையில் பிளந்துகொண்டு முன் சென்றால் அவ்விதம் இரண்டாகத் துண்டிக்கப்பட்ட சத்துருக்கள் மறுபடியும் இடைவெளியில் வந்து ஒன்று

சேர்ந்துவிடுவார்கள். அதனால் முன் சென்றுவிட்ட படையானது சத்துருக்களால் சூழ்ந்துகொள்ளப் படலாம். அந்த ஆபத்து நேரிடாமலிருப்பதற்காக, அந்தப் படையின் இரு பக்கங்களிலுங் கூட அதன் பலம் திரட்டப்படுகிறது. அப்படிப்பட்ட படை சத்துருக்களைப் பிளந்துகொண்டு முன் சென்றால், அதன் பக்கவாட்டிலுள்ள பலமானது அந்த பிளப்பை வரவரப் பெரிதாக்கிக்கொண்டிருக்கும்.

**கார்லிஸ் நகரத்தில் கடுமையாய் தாக்குதல்.**

டார்னே நகரத்துக்கு வடக்கே விஸ்லொ நதியுடன் டுனேஜக் நதி கலக்கின்றது. அந்த இடத்திலிருந்து நேர் தெற்கே கார்ப்பேத்தியன் மலைகளின் அடிவாரம் வரையிலும் டார்னே போர்முனை என்று சொல்லப்படுகிறது. அது டுனேஜக் போர்முனை யென்றும் சொல்லப்படுவதுண்டு. அது சுமார் 60-மைல் நீளமிருக்கும். அந்தப் போர்முனை நெடுக ருஷியத் துருப்புகள் மேற்கு முகமாய்த் திரும்பி தெற்கு வடக்கு வரிசையில் நிலைபெற்றிருந்தார்கள். அத்துருப்புகளுக்கு எதிரே அதே வரிசையில் ஜெர்மானியர் கிழக்கு திசையைப் பார்த்துக்கொண்டு நிலைபெற்றிருந்தார்கள். ருஷியர் யுத்தத்தின் ஆரம்பத்தில் காலிஷியாவுக்குக் கிழக்கிலிருந்து புறப்பட்டு அம்மாகாணத்தின் மீது படையெடுத்து மேற்கே சென்று டார்னே போர்முனையில் வந்து நின்றார்கள் என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். சாதாரணமாய் படைகள் நிலைபெறுவதற்கு நதிக்கரைகள் மிகவும் சாதகமானவை. அவ்வாறு இயற்கை அமைப்பிலேயே பாதுகாப்புக்குச் சௌகரியமான இடங்களைத்தான் சேனைத் தலைவர்கள் தெரிந்தெடுப்பார்கள். அப்படிப்பட்ட இடங்களில்தான் படைகள் தங்கி நிற்கவேண்டும்.

ஆகையால் ருஷியர், விஸ்டுலா நதியும் டுனேஜக் நதியும் சேர்கிற இடத்திலிருந்து தெற்கே டார்னேநகரம் வரையிலும் டுனேஜக் நதிக்கரையில் நிலைபெற்றிருந்தார்கள். ஆனால் டார்னே நகரத்துக்குத் தெற்கே வலுவான ஸ்தலங்களில் ருஷியர் நிலைபெற்றிருக்கவில்லை. ஜெனரல்மாகென்ஸன் அவ்விஷயத்தை அறிந்து கொண்டார். ஆஸ்டிரிய ஆகாய விமானிகள் சிலமாதங்களாக டார்னே போர்முனையின் மேல் பறந்து சென்று ருஷியஸ்தலங்களையெல்லாம் புகைப்படமெடுத்தார்கள். ருஷியப் போர்முனையின் விவரங்களை அவ்வாறு ஜெர்மானியர் அறிந்துகொண்டார்கள். பிறகு ருஷியரின் முக்கியமானஸ்தலங்கள் எவ்வளவு தூரமிருக்கிறதென்று திட்டமாய்த் தெரிந்துக்கொண்டு ஜெர்மானியர் தங்களுடைய போர்முனையில் தங்கள் பீரங்கிகளை முன்னதாகவே அமைத்துக்கொண்டார்கள். டார்னே நகரத்துக்குத் தெற்கே கார்லிஸ் என்ற நகரமிருக்கிறது. இவ்விருநகரங்களும் ருஷியாவசமிருந்தன. கார்லிஸ்நகரம் அநேக குன்றுகளால் சூழப்பட்டு வலுவான ஸ்தானத்தில் அமைந்திருந்தது. கார்லிஸ் நகர்ப் பிரதேசத்துக்கு மேற்கில் ஜெனரல் மாகென்ஸன் நேராகப் போர் நடத்தினார். சுமார் 10 மைல் நீளத்துக்குள் 1500 ஜெர்மன் பீரங்கிகள் வரிசைமேல் வரிசையாக அடுக்கப்பட்டன. அவைகளில் 500 பீரங்கிகள் பெரிய முற்றுகைப்பீரங்கி தினுசைச் சேர்ந்தவை. குருப் யந்திரசாலையிலிருந்து பெரிய ஜெர்மன் பீரங்கிகளும், ஸ்கோடா யந்திரசாலையிலிருந்து பெரிய ஆஸ்டிரிய பீரங்கிகளும் வந்தன. 15 அங்குலம் வாயையுடைய பீரங்கிகளென்ன, I அங்குலம் பீரங்கிகளென்ன இப்படிப்பட்ட பூதம்போன்ற பீரங்கிகள் மோட்டார் வண்டிகளில் இழுத்துக்கொண்டு வரப்பட்டன. முக்கியமாய் ஆஸ்டிரியரின் பெரிய முற்றுகைப்பீரங்கிகள் ஜெர்மன் பீரங்கிகளைவிட மிக்க எளிதாய் இழுத்துக் கொண்டு போகும்படி புதுமாதிரியாய் செய்யப்பட்டிருந்தன. இந்த முற்றுகைப்பீரங்கியிலிருந்து சுடப்படும் ஒரு

குண்டானது பூமியைக் கெல்லியெடுத்து நூறு அடி உயரத்துக்குத் தூக்கி எறியுமானால் அதன் வன்மை ஒருவாறு விளங்கும்.

மேமாதம் 2-ந் தேதி காலை 6-மணிக்கு ஆரம்பித்த பீரங்கிப் பிரயோகமானது அதுவரையில் எவருமே பார்த்திராத உக்கிரத்தைக் கொண்டிருந்தது. கார்லிஸ் நகரத்துக்குத் தெற்கிலும் வடக்கிலும் இருந்த ருஷியப்படைகளின் மேல் நான்கு மணிநேரம் ஓயாமல் ஏழு லக்ஷம் குண்டுகள் பொழிந்த வண்ணமாயிருந்தன. முன்புறத்திலிருந்த ருஷியப்படைகளும் அரண்களும் இருந்தவிடந் தெரியாமல் மறைந்து போயின. அதற்குப் பின்புறத்தில் வேறிரண்டு அரண் வரிசைகளிருந்தன. அவ்விரண்டு வரிசைகளையும் ஒருவாறு அழித்த பிறகு ஜெர்மன் காலாட் படைவீரர்கள், அந்த அரண்களில் உயிர்தப்பியிருந்த ருஷியத் துருப்புகளைத் தாக்கினர். போர்முனைக்கு வெகுதூரம் பின்புறத்திலுள்ள ருஷிய தளகர்த்தர் சேதமடைந்த அந்த ருஷியத் துருப்புகளுக்குத் துணைப்படைகள் அனுப்பக்கூடும், ஆதலால் துணைப்படைகள் வராமலிருப்பதற்காக, ஜெர்மானியருடைய பீரங்கிகள் ருஷியப் போர்முனைக்கப்பால் வெகுதூரத்தில் நெருப்புமயமான திரைபோட்டுத் தடுத்தன. அந்தச் சண்டையில் புசற்காற்றுபோல இரும்பும் நெருப்புங் கலந்தமழை வீசியடித்தபோது அதைத் தாங்கிநிற்க ருஷியருக்கு, தங்களுடைய மனோதிடனும் பொறுமையுந் தவிர வேறு சகாயமில்லை. ருஷிய பீரங்கிப் படைகள் எவ்வளவு திறமையாய் நடத்தப்பட்டபோதிலும், ஜெர்மன் பீரங்கிகளும் குண்டுகளும் தொகையிலும் வன்மையிலும் அதிகமாயிருந்தன. பீரங்கிப்பிரயோகம் ஆரம்பமான 2-தேதியன்று மாலையிலேயே, ஜெனரல் மாகன்ஸன் சுமார் 10 மைல் நீளத்துக்கு ருஷியப் போர்முனையைப் பிளந்துகொண்டு முன்சென்றார். கார்லிஸ்நகரம் பாழடைந்தது, அதற்கருகிலிருந்த எண்ணெய்ச் சுரங்கங்களும் தீப்பற்றி எரிந்தன. அதேமாதிரியான பீரங்கிப்பிரயோகம் டார்னோ போர்முனை நெடுகச் செய்யப்பட்டது.

டார்னோ நகரமுள்ள பிரதேசத்திலிருந்த ருஷியப்படைகள் மட்டும் அசையாமலிருந்தன.

### ருஷியர் பின் வாங்கல்.

மற்றெல்லா இடங்களிலும், ருஷியப்படைகள் பின்வாங்கிச் சென்றன. ஜெனரல் மாகென்ஸன், கார்லிஸ்நகரத்திலிருந்து முன்சென்ற போது, நேர்கிழக்காகச் செல்லாமல் வடகிழக்காய்ச் சென்றார். அவருடைய நோக்கம் என்னவென்றால், அவ்வாறு வடகிழக்காய்ச் சென்று டார்னோ நகரத்துக்குக் கிழக்கிலுள்ள ரயில் பாதையை வசப்படுத்திக் கொள்ளவேண்டுமென்பது. ஜெர்மானியர் அந்த ரயில் பாதையை வசப்படுத்திக் கொண்டால் அந்த நகரத்திலுள்ள ருஷியப்படைகளை சூழ்ந்துகொள்ளலாம். தவிர, மற்றொரு ஜெர்மன் படைக்கூட்டம் கார்லிஸ் நகரத்திற்குத் தெற்கில் சண்டைசெய்து கொண்டிருந்தது. இந்தப் படைகள் கார்ப்பேத்தியன் மலைகளின் வடபுறத்து அடிவாரம் நெடுகச் சென்று அங்குள்ள பாதைகளையெல்லாம் பிடித்துக்கொண்டே சென்றன. அதனால், கார்ப்பேத்தியன் மலைகளுக்குள்ளே நுழைந்து தென்பக்கத்து அடிவாரத்திலிருந்த ருஷியப்படைகள் பின்வாங்கிச் செல்வதற்கு வழியில்லாமல் கஷ்டப்பட்டன. அவ்வாறு மே மாதம் 6 ந் தேதிக்குள், டார்னோ நகரத்திலிருந்த ருஷியப்படைகளும் கார்பேத்தியன் மலைகளிலிருந்த ருஷியப்படைகளும் பின்வாங்கிச் சென்றன. அவ்விதம் காலிஷியாவின் மேற்குபாகத்தை ருஷியர் காலிசெய்யும்படி நேரிட்டது. அந்த சண்டையில் வீரத்தைத் தவிர மற்றெல்லா அம்சங்களிலும் ஜெர்மானியர் ருஷியரைவிட மேம்பட்டிருந்தார்கள்.

### கார்ப்பேத்தியன் மலைகள் கைவிடப்பட்டன.

ஜெனரல் மாகென்ஸனுக்குத் தெற்கிலிருந்த படைக்கூட்டம், கார்ப் பேத்தியன் மலைகளின் அடிவாரம் நெடுக ஆச்சரியமான வேகத்துடன் முன் சென்று கொண்டிருந்தது. கார்லிஸ் சண்டை ஆரம்பித்து 3- தினங்களுக்குள்ளாக (அதாவது மே மாதம் 5-ந் தேதி) அந்த தெற்குப் படைகள் டக்லா நகரத்தைப் பிடித்து விட்டு அதற்குக் கிழக்கே செல்லத் தொடற்கின. மே மாதம் 2-ந் தேதி மாலைப் பொழுது முடிவதற்குள்ளாககார்லிஸ் பிரதேசத்துப் போர்முனையைருஷியப் படைகள் கைவிட்டுப் பின்வாங்குமென்று, ருஷிய தளகர்த்தர்கள் கூட எதிர்பார்க்கவில்லை. ருஷியப் போர் முனை சிதறிப்போன சம்பவமானது அவ்வளவு ஆச்சரியமாயும் திடீரென்றும் நேர்ந்து விடவே அது நம்பத் தகுந்ததாகக் கூடத்தோன்றவில்லை. அதனால், கார்லிஸ் நகரத்துக்குத் தெற்கில் கார்ப்பேத்தியன் மலைகளிருந்த ருஷிய தளகர்த்தர்கள், கார்லிஸ் நகரத்துச் சண்டையின் பிரமாதமான பலன்களையும் அபாயத்தையும் சமயத்தில் அறிந்து கொள்ள வில்லை. மலைகளிலிருந்த ருஷியப்படைகள் சாவகாசமாய்ப் பின்வாங்க ஏற்பாடுகளைச் செய்கையில், ஜெர்மானியர் மலைகளுக்கு வடக்கிலிருந்த கணவாய்களையும் பாதைகளையும் ஒவ்வொன்றாய்ப் பிடித்துக்கொண்டே சென்றார்கள். கடைசியில் ருஷியப் படைகள் தங்களுடைய அபாய நிலைமையை உணர்ந்த போது, சில ருஷியப் படைகள் வேறு வழியில்லாமல் சிக்கிக் கொண்டன. ஆயினும் எல்லா ருஷியப்படைகளும் அவ்வாறு அடைபட்டுப்போகவில்லை. விரைவாய்ப் பின்வாங்கின சில ருஷியப்படைகள் டக்லா கணவாய் வழியாய் தப்பிச்சென்றன, மற்ற ருஷியப் படைகள் ஜெர்மானியருக்குச் சரண மடையும்படியோ அல்லது ஜெர்மானியருக்கு இடையே வழியை வெட்டிக்கொண்டு செல்லும்படியோ நேரிட்டது. மே மாதம் 7-ந்தேதி டக்லா கணவாயில் நடந்த சம்பவமானது ருஷியரின் திறமையையும் தீரத்தையும் குறிப்பிடுகின்றது. அங்கு ஒரு ருஷியப்படை ஜெர்மானியரால் சூழ்ந்து கொள்ளப்பட்டது. அந்த ருஷியப்படைசத்துருக்களுக்கிடையே விழுந்தடித்து மிகவும் உக்கிரமான சண்டையால் சத்துருக்களை இருபுறங்களிலும் விலக்கிக்கொண்டு செல்லவே, அப்படை அதிகச் சேதமடைந்த போதிலும் அதன் ஒருபாகம் கடைசியில் தப்பிச் சென்று விட்டது. ஆனால் அவ்வளவு துணிச்சலும் நல்லதிர்ஷ்டமும் எல்லா ருஷியப்படைகளும் பெற்றிருந்தன என்று சொல்வதற்கில்லை.

மே 8 ந்தேதி டார்னோ போர் முனை நெடுகக் காலிசெய்து ஒழுங்காய்ப் பின்வாங்கிச் சென்ற ருஷியப்படைகள் இடையிடையே ஜெர்மானியரைத் தடுத்து நிற்க முடன்றன. ஆனால் பற்பல பாதைகளில் பின்சென்ற ருஷிப்படைகளை அங்கங்கே நிறுத்து வைத்து அவசரமாய்ச் சண்டை செய் செய்யும்படி நேரிட்டபடியால் ருஷிய தளகர்த்தர் அதிகப் பலனை அடையவில்லை. ஜெர்மன்படைகளெல்லாம் ஒவ்வொரு பாதையின் வழியாயும் பெரிய வெள்ளம் போலப்புரண்டு சென்றதால் அவசரமாய்ச் பின்வாங்கிச் சென்ற ருஷியத்துருப்புகள் ஜெர்மானியரைத் தடுத்து நிற்க முடியவில்லை. மே 12-ந் தேதிக்குள் சில்லரைச் சண்டைகளெல்லாம் ஓய்ந்துவிட்டன. டுனஜக் நதிக்கரையிலிருந்து பின்வாங்கிச் சென்ற ருஷியப்படைகள் மே 14-ந்தேதி ஸான் நதிக்கரையில் வந்து நிலைபெற்றன.

மே மாதம் 2-ந் தேதியிலிருந்து 4-ந் தேதிக்குள்ளாக அதாவது இரண்டு தினத்துச் சண்டையில், 30,000 ருஷியத் துருப்புகளைப் பிடித்ததாக ஜெர்மானியர் அறிவித்தார்கள். மே 2-ந் தேதியிலிருந்து 14-ந்

தேதிக் குள்ளாக, ஒருலக்ஷத்து 35 ஆயிரம் ருஷியத் துருப்புகளையும், 69 பீரங்கிகளையும், 255 மெஷின் பீரங்கிளையும் பிடித்துக் கொண்டதாக ஜெர்மானியர் அறிவித்தார்கள் ருஷியருக்கு அவ்வளவு சேதம் உண்டா யிராதென்றாலும் பலமான சேதம் உண்டாயிற்றென்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் அநேக படைகளைக் கொண்ட பெரிய சேனையொன்று பின்புறம் செலுத்தப்படும்போது அநேக துருப்புகள் சத்துருக்களின் கையில் அகப்படுவது சகஜமே. மேலும், டார்னோ போர்முனையில் நடந்தசண்டையில்ஜெர்மானியர் எல்லா பாதைகளுக்கும் குறுக்கேசென்றுவழி மறித்துச் சென்றார்கள். அதனால் ருஷியப்படைகள் முன்புறத்திலும் பக்கவாட்டிலும் தாக்கப்பட்டார்கள் அதனால் ருஷியத்துருப்புகள் அவசரமாய்ப் பின்னடையும்படி நேரிட்டபடியால் அவர்களில் பலர்சத்துருக்களால்பிடிக்கபட்டார்கள். தவிர, போர் நடந்த பிரதேசத்தில் அனேக குன்றுகள் இருப்பதால் அவைகளுக்குஇடையில் ருஷியப் படைகள் பின்வாங்கும்படி நேரிட்டபோது அந்தபடைகள் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்து போகாமல் எப்போதும் ஒழுங்காகவே செல்ல சாத்தியப்படவில்லை. அதனால் அநேக ருஷியத்துருப்புகள் தனித்தனியே பிரிந்து போய் தவறான வழிகளிற் சென்று சத்துருக்களுக்குச் சரணமடைந்தன. தவிர, டோர்முனை யெங்கும் ருஷியப் படைகளெல்லாம் அவசரமாய்ப் பின்வாங்கி விடும்படி நேரிட்ட போது, அவைகள் போர்க்களத்தில் காயம்பட்டு விழுந்த தங்களுடைய துருப்புகளைக் கொண்டு போவதற்கு சில சமயங்களில் சாத்தியப்பட வில்லை. அவ்வாறு காயப்பட்டருஷியத்துருப்புகளும் சத்துருவுக்குப்பிடி பட்டன. மேலும், ருஷியர் டுனஜக் நதியிலிருந்து ஸான் நதிவரையில் சுமார் 100 மைல் தூரமுள்ள பிரதேச முழுவதையும் 10 தினங்களில் காலி செய்துச் செல்லும்படியாயிற்று. அந்த விஸ்தாரமான பிரதேசத்தில் ருஷியர் ஒன்பது மாதகாலமாக யுத்தம் நடத்தியபடியால் அநேக தளவாடக் கிடங்குகளும் பெரிய ஆஸ்பத்திரிகளும் அங்கு ஸ்தாபிக்கப் பட்டிருந்தன. அவைகளை யெல்லாம் முற்றிலும் காலி செய்யச் சாத்தியப்பட வில்லை. ஜெர்மானியர் தங்களுடைய ஆஸ்பத்திரிகள் பெல்ஜியத்தில் எவ்வளவு பந்தோபஸ்தென்று கருதுகிறார்களோ அவ்வளவு ருஷியரும் காலிஷியாவிலிருந்த தங்களுடைய ஆஸ்பத்திரிகள் பந்தோபஸ்தென்று நினைத்திருந்தார்கள். ஆகையால் அந்த ருஷிய ஆஸ்பத்திரிகளைக் காலிசெய்யாத ருஷியத் துருப்புகளும் பிடிக்கப்பட்டார்கள். மேலும், ருஷியப்படைகளெல்லாம் பின்னடைந்தபோது அவைகளை ஜெர்மானியர் விரைவாயைப் பின்தொடர்ந்து செல்லாதபடி தடுக்கப்பட வேண்டும். அதற்காக ருஷியப்பின்படைகள் மட்டும் ஜெர்மானியரைத்தடுத்து நின்று சண்டை செய்து கொண்டிருக்க, மற்ற ருஷியப்படைகளெல்லாம் பந்தோபஸ்தாய் வழிநடந்து செல்லுவது வழக்கம் சாதாரணமாய் அந்த பின்படைச் சண்டைகளில், பின்படையிலுள்ள துருப்புகள் தங்களுடைய பீரங்கிகளைக் கைவிட்டுத் தாங்கள் தப்பித்துச் செல்வதுவழக்கம். ஆனால் அந்த காலத்தில் ருஷியருக்கு பீரங்கிகள் மிகவும் அருமையாய் இருந்தபடியால், பின்படைச் சண்டைகளில் ருஷியத்துருப்புகளைப் பலிகொடுத்து, பீரங்கிகள் காப்பாற்றப்பட்டன.

டார்னோ சண்டை அப்படிப்பட்டதாகும். மே மாதம் 2-ந் தேதி முதல் 14-ந் தேதி வரையில் நடந்த சண்டையின் பயனாக காலிஷியாவின் மேற்கு பாதி முழுவதும் ருஷியரால் காலிசெய்யப்பட்டது. கார்ப்பேத்தியன் மலைகளில் பலமா தங்களாக ருஷியர் உயிரை லக்ஷியஞ்செய்யாமல் பிரமிக்கத்தக்க பராக்கிரமத்துடன் சண்டை செய்து வசப்படுத்திக்கொண்ட மலைச்

கணவாய்களை அவர்கள் கடைசியில் கைவிட்டுச் செல்லும்படி நேர்ந்தது. டார்னோ போர்முனையிலிருந்து ஒழுங்காய் பின்வாங்கின ருஷியப்படைகள் ஸான் நதிக்கரையில் வந்து தங்கின.

### ருஷியரின் ஏராளமான படை பலம்.

அவ்வாறு ஜெர்மானியர் எவரும் எதிர்பாராதபடி பீரங்கிப் படைகளை திடீரென்று ஏராளமாய் அதிகப்படுத்தி ருஷியரைத் தாக்கி எளிதாய்ப் பின் தள்ளினார்கள். ருஷியரிடம் போதுமான பீரங்கிளும் குண்டுகளும் இல்லாத காரணத்தால்தான் அவர்கள் பின்வாங்கும்படி நேர்ந்ததேயொழிய மற்றப்படி அவர்களுக்கு போர்த்திறமையும் தீரமும் குறைந்திருந்ததால்ல. டார்னோ போர்முனையிலும் கார்பேத்தியன் மலைகளிலுமிருந்த ருஷியப்படைகள் அவ்வாறு தங்களைவிட பலமடங்கு அதிக பலங் கொண்ட சத்துருக்களால் திடீரென்று தாக்கப்பட்டதால் பலமான சேதமடையும்படி நேர்ந்தபோதிலும் அந்த சேதத்தை பொருட்படுத்தாமல் அவைகள் உடனே போதுமான துணைப்படைகளைப் பெற்று மறுபடியும் முழு பலத்துடன் சண்டை செய்யத் தயாராயிருந்தன. ருஷியப்படைகளை அடியோடு அழிந்து விடாலமென்ற எண்ணம் ஜெர்மானியருக்கு கைகூடவில்லை, ஏனெனில் டார்னோ போர்முனையிலிருந்து பின்வாங்கின ருஷியப் படைகள் மறுபடியும் ஸான் நதிக்கரையில் போர் விளைத்தபோது முன்னைவிட அதிக வன்மையை வெளிப்படுத்தின. அதை அறிந்த ஜெர்மானியர் ஏமாற்றமடைந்தனர். ருஷிய ராணுவத்தின் கட்டுப்பாடும் ஏற்பாடுகளும் அவ்வளவு சிறப்பாயிருந்தன; ருஷிய ஏகாதிபத்தியத்தின் மூலபலங்கள் அவ்வளவு அதிகமாயிருந்தன.

---

### ஸான் நதிச் சண்டை.

டார்னோ போர்முனையில் நடந்த சண்டையைக் காட்டிலும் ஸான் நதிக்கரையில் நடந்த சண்டை மிகப் பிரமாதமாயிருந்தது. அதற்கு மூன்று முக்கிய காரணங்களிருந்தன. முதலாவது, ஸான் நதிக்கரையானது ராணுவ நடவடிக்கைகளுக்கு மிக்க சாதகமான போர் முனையாகும். அந்நதிக்கரை இயற்கையமைப்பிலேயே துருப்புகள் நிலைபெற்று சண்டை செய்வதற்கு சௌகரியமானது. இரண்டாவது, ஸான் நதிப்போர்முனையில் வேறொரு விசேஷமுமிருக்கிறது. போலண்டிலுள்ள போர்முனையுடன் ஸான் நதிப் போர்முனையும் ஒரே தொடர்ச்சியாய் அமைந்திருப்பதால், ஸான் நதிக்கு ஒரு விசேஷம் ஏற்படுகின்றது. போலண்டிலுள்ள போர்முனை நதிப்பிரதேசங்களை ஒட்டியிருக்கின்றது. நீமன்நதி, பாபர் நதி, நேருநதி, விஸ்டுலாநதி ஆகிய இவைகள் வடக்கே பால்டிக்கடலிலிருந்து தெற்கே போலண்டின் எல்லை வரையில் ஒரே வரிசையாயிருக்கின்றன. போலண்டின் தெற்கெல்லையிலிருந்து தொடர்ச்சியாய் தெற்கு திசையில் அமைந்திருக்கிற ஸான் நதியே படை வரிசைகளின் இருப்பிடத்துக்கு சௌகரியமாகும். ஸான்நதி ஜெர்மானியருக்கு வசப்பட்டுவிட்டால் போலண்டிலுள்ள ருஷியப் போர்முனையை காலிஷியாவிலும் தொடர்ந்தாற்போல் நீட்டி அமைப்பதற்கு வேறு நதிகள் இல்லை. ருஷியர் ஸான் நதியைக் கைவிட்டால், போலண்டிலுள்ள ருஷியப்படைகளும் காலிஷியாவிலுள்ள ருஷியப்படைகளும் ஒன்றோடொன்று வலுவாய் சேர்ந்திருக்க முடியாது. சுருங்கச் சொன்னால். ருஷியர் ஸான் நதிப் போர்முனையை இழந்துவிட்டால். போலண்டிலுள்ள போர் முனையையும் இழக்கும்படி நேரிடும். இவ்வாறு ஸான் நதியின் முக்கியத்தை அறிந்த ருஷியர் அதைக்காப்பதற்கு மிகுந்த பிடிவாதத்துடன் போர் புரிந்தார்கள். மூன்றாவது காரணம், டார்னோ போர்முனையில் நடந்த சண்டையினால்

ருஷியப் படைகளெல்லாம் மிகவும் பலஹீனமடைந்து விட்டதைக் கண்டு ருஷிய சேனாதிபதி ஏராளமான துணைத் துருப்புகளை ஸான் நதிக் கரையில் திரட்டினர். மேமாதம் 2ந் தேதியிலிருந்து 14ந்தேதி வரையி லுள்ள 12 தினங்களில் புதிய ருஷியத் துருப்புகளை அனுப்புவதற்குப் போது மான சாவகாசம் இருந்தது. 1915-ம் வருஷத்துக் கென்றே ருஷிய ஏகாதி பத்தியத்தில் புதிதாய்ச் சேர்த்தனுப் பப்பட்ட ருஷியப் படைகளெல்லாம் ஸான்நதிக்கு விரைந்து சென்றன. அந் நதிக்கரையில் வலுவான அரண்களைக் கட்டுவதற்கும், அச்சமயம் கிடைக்கக் கூடிய எல்லா பீரங்கிகளைத் திரட்டுவ தற்கும் சாவகாச மிருந்தது. இந்த காரணங்களால் ருஷியர் ஸான் நதிக் கரையில் ஜெர்மானியரின் முன்னேற் றத்தைத் தடுத்துவிடலாமென்று நினை த்தார்கள். அந்தக் காரணங்களால் ஸான் நதிக்கரையில் நடந்த சண்டை யானது மிகப் பிரமாதமாயிருந்த தோடு மிகமுக்கிய மானதாயுமிருந் தது. கீழேயுள்ள படம் ஸான நதிக் கரையிலுள்ள ஸ்தலங்களைக் காண்பிக் கிறது.




மே மாதம் 14ந்தேதி ஜெனரல் மாகென்ஸன் ஜரஸ்லா நகரத்தைப் பிடி த்துக் கொண்டார். அந்நகரம் ஸான் நதியின் மேற்குக் கரையில் முக்கிய மான ரயில் பாதையின் மேல் இருக் கிறது. ஸான் நதிக்குக் கிழக்கே இர ண்டு ரயில்பாதைகள் லெம்பர்க் நகரத் துக்குச் செல்கின்றன. ஒன்று ஜரஸ்லா நகரத்தின் வழியாயும் மற்றொன்று ரிஸமல் நகரத்தின் வழியாயும் ஸான் நதிக்குக்கிழக்கே செல்கின்றன. ஜென ரல் மாகென்ஸனுடைய நோக்கமென்ன வென்றால், ஜரஸ்லா நகரத்தைப் பிடித்த பிறகு, தென் கிழக்காய்ச் சென்று ரிஸமில் நகரத்தைச் சூழ்ந்து கொள்ள வேண்டுமென்பது. ரிஸமில் நகரத்துக்குத் தெற்கில் வேறுபல ஜெர் மன் படைகள் வடகிழக்காய்ச் சென்று அந்நகரத்தைச் சூழ்ந்து கொள்ள முயன்றன. ரிஸமில் நகரத்திலிருந்த ஆஸ்டிரியக் கோட்டைகள் அழிந்து போன போதிலும் அது முக்கிய ஸ்தானத்தில் அமைந்திருக்கிற படியால் அங்கு ருஷியர் வலுவான அரண்களைக்கட்டி நின்றிருந்தார் கள்.

மே மாதம் 14-ந் தேதி ஜெனரல் மாகென்ஸன் ஸான் நதியின் மேற்குக் கரையிலுள்ள ஜரஸ்லா நகரத்தைப் பிடித்த பிறகு, அந்நகரத்துக்கு வடக்கே 15 மைல் தூரம் அந்நதியைக் கடந்து விட்டார்.

ஆனால் ஜரஸ்லா நகரத்துக்குத் தெற்கே ரிஸமில் நகரம் வரையில ருஷியர் அந்நதியின் இரு கரைகளிலுமிருந்தார்கள். ரிஸமில் கோட்டைகளை ஜெர்மானியர் தெற்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் தாக்கினார்கள்.

ஜெர்மன் படைகளின் வன்மையை ருஷியர் அப்போது செவ்வையாய் உணர்ந்தபடியால் அவர்கள் பின்வாங்கி விட நிச்சயித்தார்கள். ஸான் நதிக் கரைகளில் போர் முனை எவ்வாறு அமைந்திருந்ததென்று 92-வது பக்கத்திலுள்ள படத்தில் காணலாம்.

மே மாதம் 2-ந் தேதி டார்னே போர்முனையிலிருந்து பின்வாங்கின ருஷியப்படைகள் பலமான சேதம் அடைந்தது போல, இனி நேரிடாம லிருப்பதற்காக ருஷியர் முன்னதாகவே ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தார்கள். ரிஸமில் கோட்டைகளை ஜெர்மானியர் சூழ்ந்துகொள்ள முயற்சி செய்தபடியால், அந்நகரத்தில் சேகரிக்கப்பட்டிருந்த ஏராளமான யுத்த தளவாடங்களை ருஷியர் அப்புறப்படுத்த ஆரம்பித்தார்கள். தவிர, ஸான் நதிக்கரையிலிருந்து பின்வாங்கும் ருஷியப்படைகள், கிழக்கே லெம்பர்க் நகரம்வரையிலுள்ள பிரதேச முழுவதையும் காலியு செய்யவேண்டி யிருக்கும். ஆகையால் அந்த விஸ்தாரமான பிரதேசத்திலுள்ள தளவாடங்களை அப்புறப்படுத்த முன்னதாக ஆரம்பித்தார்கள். இவைகளுக்கெல்லாம் சாவகாசம் வேண்டுமாகையால், அது வரையிலாவது ஸான் நதிக்கரையில் ருஷியர் சண்டைசெய்ய வேண்டுமென்று நிச்சயித்தார்கள்.

ருஷியருக்கு ஏராளமான துணைப் படைகள் வந்தன. ஆகையால் ருஷியர் 21-ந் தேதியிலிருந்து 25 வரையில் ஸான் நதியின் வடக்குக் கோடியிலும் தெற்குக் கோடியிலும் வலுவில் தாக்க ஆரம்பித்தார்கள்.

ஜெனரல் மாகென்ஸனுடைய படைகள் ஜரஸ்லாவுக்கு வடக்கிலுள்ள ஸயனிவா நகரத்தில் ருஷியரால் மிகக் கடுமையாய்த் தாக்கப்பட்டன. ஜெனரல் இர்மனுப் என்ற ருஷிய தளகர்த்தர், 3-வது காகேஷியப் படையைச் செலுத்தி, ஸயனிவா நகரத்தையே பிடித்துக் கொண்டார். அந்நகரத்திலிருந்த 7000 ஜெர்மன் துருப்புகளும் 6 பெரிய பீரங்கிகளும் 6 சாதாரண பீரங்கிகளும் ருஷியரால் பிடிக்கப் பட்டன.

இந்த ருஷியரின் முன்னேற்றத்தைத்தடுப்பதற்கு ஜெனரல் மாகென்ஸன் ஏற்பாடு செய்ததோடு கூட அந்த சண்டையை வெற்றி யுடன் முடிப்பதற்கு வேறொரு யோசனையும் செய்தார். ஸயனிவா நகரத்துக்கு வடக்கில் தான் ருஷியப்படைகள் ஏராளமாய்க் குவிக்கப் பட்டிருந்தன. ஆகையால் அவர் அந்தத் திசையில் தாக்காமல் ஜரஸ்லா நகரத்துக்கும் ரிஸமில் நகரத்துக்கும் இடையில் திடீரென்று உக்கிரமாய்த் தாக்கி வெற்றியடைய நோக்கங்கொண்டார். அவ்விரு நகரங்களுக்கும் இடையில் ஸான் நதியைக் கடந்து ரிஸமில் கோட்டைகளுக்குக்கிழக்கே வந்து ருஷியரை வளைந்து கொள்ள நிச்சயித்தார். அவர் செய்த ஏற்பாடுகளெல்லாம் மிகவும் இரகஸ்யமாயும் சீக்கிரமாயும் நடந்தன. ஸான் நதிக்குக் குறுக்கே நான்கு தினங்களில் 15 பாலங்கள் கட்டப்பட்டன. இரவும் பகலும் ஓயாமல் அந்த பாலங்களின் வழியாய் ஜரஸ்லாவுக்கு வடக்கிலிருந்த படைகளில் அநேகம் ஜரஸ்லாவுக்குத் தெற்கே இரகஸ்யமாய்க் கொண்டுவரப்பட்டன. அநேக பீரங்கிகளும் காலாட்படைகளும் அவ்வாறு இரஸ்யமாய் திரட்டப்பட்டன. 25-ந் தேதி, அந்த ஜெர்மன் படைகள் ஜரஸ்லாவுக்கும் ரிஸமிலுக்கும் மத்தியிலுள்ள ராடிம்னோ நகரத்தைப் பிடி

த்து அங்குஸான் நதியைக் கடந்து மறுதினம் முடிவதற்குள் நான்கு மைல் தூரம் முன்சென்றன. அவ்வாறு ஜெர்மன்படைகள் ரிஸமில் நகரத்துக்குக்கிழக்குநோக்கி வளைந்து சென்றன. ஆகையால் ரிஸமில் கோட்டைகளிலிருந்த ருஷியப்படைகள் உடனே அந்த ரயில்பாதை வழியாய் கிழக்கே பின்வாங்கிச் செல்லாவிட்டால் அவைகள் சத்துருவின் பிடியில் அகப்பட்டுவிடும். ருஷியர் அந்த ரயில்பாதையைக் காப்பதற்கு மிகவும் உக்கிரமாய்ச் சண்டை செய்தார்கள். ரிஸமில கோட்டைகளில் ஜர்மானியர் புகுந்து தாக்கினர். ஜூன் 3-ந் தேதியில் அக்கோட்டைகளையெல்லாம் ஆஸ்டிரியத் துருப்புகள் பிடித்தனர்.

இந்த மகா யுத்தம் தொடங்கி ஒரு மாதத்துக்கெல்லாம் ரிஸமில் கோட்டைகள் ருஷியரால் முற்றுகை யிடப்பட்டனவென்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். அதன் பிறகு அவைகளிலிருந்த ஆஸ்டிரியப் படைகள் மார்ச்சு 22-ந் தேதி ருஷியரிடம் சரணமடைந்தன. அவ்வாறு முன்பு ரிஸமில் கோட்டைகளை இழந்த ஆஸ்டிரியர் 72 தினங்களுக்குப் பிறகு அந்த ஸ்தலத்தை மீளவும் பெற்றார்கள். ருஷியத் துருப்புகள் முன்பு அந்தக் கோட்டைகளைத் தாக்கிய காலத்தில் தங்களுடைய உபயோகத்துக்காக அநேக அரண்களைக் கட்டியிருந்தார்கள். அந்த அரண்களை அவர்கள் இடிப்பதற்குக்கூட சாவகாசமில்லாததால், அவர்கள்கட்டின அரண்களிலேயே ஆஸ்டிரியரும் மே மாதக் கடைசியில் தங்கி, சண்டை செய்தனர். ஜூன் 3-ந் தேதி, ரிஸமில் கோட்டைகளிலிருந்த ருஷியப் படைகள் அவைகளைக் காலி செய்தவுடன், ஸான் நதிக்கரை நெடுக இருந்த மற்றெல்லாப் படைகளும் பின்வாங்கின.

---

## லெம்பர்க் நகரத்துச் சண்டை.

ஜெனரல் மாகென்ஸன் ஸான் நதிப் போர்முனையிலிருந்து பின்வாங்கிய ருஷியப்படைகளையெல்லாம் லெம்பர்க் நகரத்துக் கப்பால் பின் தள்ளவேண்டுமென்று நிச்சயித்தார். ஏனெனில் ஆஸ்டிரிய மாகாணமாகிய காலிஷியாவில், மிகச் சௌகரியமான ரயில் பாதைகள் அநேகம் அந்நகரத்தில் விஸ்தாரமாய்ப் போடப்பட்டிருக்கின்றன. அந்தப் பாதைகளெல்லாம லெம்பர்க் நகரத்தில் கூடுகின்றன. ஆகையால் ருஷியர் அந்த ரயில் பாதைகளின் சௌகரியத்தைப் பெறாமல் இருக்கவேண்டுமென்பது ஜெர்மானியரின் கருத்து.

ருஷியப் போர்முனையானது லெம்பர்க் நகரத்துக்குச் சிறிது மேற்கே அமைந் திருந்தது. அப்போர்முனை தெற்கு நோக்கி நீஸ்டர் நதிக்கரை நெடுக வியாபித் திருந்தது.

ஜூன் 3-ந் தேதி ரிஸமில் நகரம் பிடிபட்ட பிறகு, 10 தினங்களாக ஜெர்மானியர் ஸான் நதிப்போர்முனையிலிருந்து முன் செல்லாமலிருந்தார்கள். அதற்குக் காரணம் அவர்களுக்குத் துணைப் படைகளும் ஏராளமான குண்டுகளும் மற்ற தளவாடங்களும் புதிதாகத் தேவையாயிருந்தன. ஜெனரல் மாகென்ஸன் ஜூன் 12-ந் தேதி லெம்பர்க் நகரத்துக்கு வடக்கிலுள்ள பிரதேசத்தை நோக்கிப் புறப்பட்டார்.

ஜூன் 18-ந் தேதி போர்முனை நெடுக சண்டை மிகக் கடுமையாய் நடந்துவந்தது. லெம்பர்க் நகரத்துக்கு மேற்கில் ஜெர்மானியர் பெருமுயற்சி செய்தும் பயன்படவில்லை. கடைசியில் 20-ந் தேதியன்று ஜெனரல் மாகென்ஸன் தமது படையணியைச்செலுத்தி லெம்பர்க் நகரத்துக்கு வடக்கேயுள்ள ரயில் பாதையை வசப்படுத்திக் கொண்டார். பிறகு அவர் அந்த நகரத்துக்குக் கிழக்கே போய்விட முயற்சி செய்தார்.

அதனால் லெம்பர்க் நகரம் அபாய நிலைமையிலிருந்ததைக் கருதி, அந்த நகரத்துக்கு மேற்கில் போர்முனை நெடுக இருந்த ருஷியப் படைகள் உடனே பின் வாங்கிவிட்டன.

லெம்பர்க் நகரத்துக்கருகில் இன்னும் இரண்டு தினங்கள் ருஷியர் சண்டைசெய்தபிறகே அந்நகரத்தைக்காலி செய்தனர். ஜூன் 22-ந் தேதி மாலை 4-மணிக்கு ஆஸ்டிரியரும் ஜெர்மானியரும் மிகவும் முக்கிய ஸ்தலமாகிய லெம்பர்க் நகரத்துக்குள் பிரவேசித்தார்கள். அந்த நகரத்தை முன்பு ருஷியர் 1914-ம் வருஷம் செப்டம்பர் 3-ந் தேதி வசப்படுத்தினார்கள். ருஷியர் 293 தினங்களாகத் தங்கள் வசத்தில் அதை வைத்திருந்து பிறகு இழக்கும்படி நேர்ந்தது.

காலிஷியா சண்டைகளின் பலன்.

அவ்வாறு ஜெர்மனியர் 50 தினங்களாக் ஓயாமற் போர்செய்து ஆஸ்டிரியா மாகாண மாகிய காலிஷியாவை மீட்டனர். மகாயுத்தம் ஆரம்பித்தபோது ருஷியருக்கு வசமாகி விட்ட அந்த மாகாணத்தை இப்போது ஜெர்மானியர் மறுபடியும் சுவாதீனஞ் செய்து கொண்டதால், அவர்கள் முன்பிருந்த நிலைமைக்கு வந்தார்களே யொழிய புதுப் பிரதேசங்களை பிடித்துக் கொள்ளவில்லை. ஜெர்மானியர் தங்களுடைய பீரங்கிகளால், ருஷிய சேனையைக் கடுமையாய்த் தகர்த்த போதிலும் அந்தசேனை வரவர அதிக பலத்தைக் காட்டிவந்ததே யொழிய துர்ப்பலமடையவில்லை. அதற்குமுக்கிய காரணம், ருஷியசேனை மிகவும் சாமர்த்தியமாயும் ஒழுங்காயும் பின்வாங்கியதாகும். தவிர, டார்னோ போர் முனையில் ஜெர்மனியரின் நூதனபலம் வெளிப்பட்டவுடன் ருஷியர் தங்கள் ஏகாதிபத்தியத்திலுள்ள மூலபலங்களை யெல்லாம் விரைவாய்ச் சேர்ப்பதற்கும் ஏராளமான தளவாடங்களைச் செய்வதற்கும் விஸ்தாரமான ஏற்பாடுகளைச் செய்தனர். இதனால் ருஷியசேனை ஜெர்மானியரின் பீரங்கிகளைத் துணிகரமாய் எதிர்த்து இடைவிடாமல்துணைத்துருப்புகளைப் பெற்று வந்தன. ஆயினும் ஜெர்மானியருடைய நோக்கம் காலிஷியா மாகாணத்தை மீட்டுக்கொள்வது மட்டுமல்ல, ருஷிய மாகாணமாகிய போலண்டையும் பிடிக்க வேண்டுமென்பது. போலண்டை பிடிப்பதற்கு முன்னால், காலிஷியாவைவசப்படுத்திக் கொள்வது அவசியமென்று அறிந்து ஜெர்மானியர் அவ்விதம் யுத்தம் தொடர்ந்தார்கள்.

தென்போலண்டில் சண்டை.

வார்ஸா நகரத்தைப் பிடிப்பதற்காக ஜெர்மானியர் மிகப் பிரமாதமான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தபடியால், அது சம்பந்தமான யுத்த நடவடிக்கைகளை அவர்கள் ஜூலை 15-ந் தேதிக்குப் பிறகே ஆரம்பிக்க சாத்தியப்பட்டது. ஆகையால்லெம்பர்க் நகரம் பிடிபட்ட ஜூன் 22-ந்தேதியிலிருந்து ஜூலை 15-ந் தேதி வரையில் ஜெர்மானியர் வேறு சில அவசியமான நடவடிக்கைகளைநடத்தினார்கள். அவைகள் முக்கியமாய், தெற்கு போலண்டில் நடத்தப்பட்டன.

ருஷியருக்கு ஸான் நதி அத்தியாவசியமானது என்று ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கிறது. ருஷியர் ஸான் நதியை வசப்படுத்திக் கொண்டிருந்த காலத்திலும், பிறகு அதை இழந்துவிட்ட காலத்திலும், போர் முனை எவ்வாறு அமைந்திருந்ததென்று 92-வது பக்கத்திலுள்ள படத்தில் காணலாம். அப்படத்தைப்பார்த்து பின்னால் சொல்லப்படும் விவரங்களை அறிந்து கொள்ளலாம். ருஷியர் ஸான் நதியை இழந்து விட்டால் போலண்ட் மாகாணத்தையும் இழக்கும்படி நேரிடும். ஏனெனில், போலண்டிலுள்ள ருஷியப் படைகளெல்லாம் அநேக நதிகளின் கரைக்கருகில் தொடர்ச்சியாய் நிலைபெற்றிருந்தன. போர்முனையை அமைப்பதற்கு

அந்த நதிகளின் கரைகளைவிட அதிக பலமான பிரதேசம் இல்லை. முன்பு போலண்டில் விஸ்டுலா நதிக் கரையிலிருந்த ருஷியப் படைகளும் காலிஷியாவில் ஸான் நதிக்கரையிலிருந்த ருஷியப் படைகளும் தொடர்ச்சியாயுள்ள வலுவான நதிப்பிரதேசத்தில் ஒன்றோடொன்று சேர்ந்தாற் போல நிலைபெற்றிருந்தன. ஜூன் மாதத்தில் ஸான் நதியிலிருந்து ருஷியர்விலகினபோது கிழக்காங்கத்திலுள்ள ருஷியப் போர்முனை பலஹீனமடைந்தது. ஏனெனில், போலண்டிலுள்ள ருஷியப்படைகளும் காலிஷியாவிலுள்ள ருஷியப்படைகளும், முன்னைப்போல தொடர்ச்சியாயுள்ள நதிப் பிரதேசத்தால் சேர்க்கப்பட்டிருக்கவில்லை. அதனால், போலண்டின் தெற்கு எல்லையோரமாக விஸ்டுலா நதிக்கும் பக் நதிக்கும் இடையிலுள்ள பிரதேசந்தான், அவ்விரண்டு பாகாணங்களிலுள்ள ருஷியப் படைகளைச் சேர்ந்திருக்கச் செய்தன. அவ்விரண்டு நதிகளுக்கிடையிலுள்ள பிரதேசத்தில் துருப்புகள் நிலைபெற்று சண்டைசெய்வது இயற்கை யமைப்பில் அவ்வளவு சாதகங்கள் இருக்கவில்லை. ஆகையாத் இந்த பலஹீனமான போர்முனையைத் தாக்க ஜெர்மானியர் நிச்சயித்தார்கள். ஆனால் அந்தப் போர்முனையைக் காப்பதற்காக ஏராளமான ருஷியத் துருப்புகள் நிலை பெற்றிருந்தன.

போலண்டின் எல்லைப்புறத்தை யொட்டி விஸ்டுலா நதிக்கும் பக் நதிக்கும் இடையில் ஜெர்மன் படைகள் முன்சென்று, அந்த ருஷிய பாகாணமாகிய போலண்டின்மீது படையெடுத்தன. விஸ்டுலா நதிக்கும் பக் நதிக்கும் இடையிலுள்ள போர்முனையை, கீழுள்ள படம் காண்பிக்கின்றது. அந்தப்போர்முனை ஆரம்பத்தில் எவ்வாறு இருந்ததென்பது சற்று கீழாக உள்ள கோடு குறிக்கின்றது; ஜெர்மானியர் போலண்டின்மீது படையெடுத்துமுன்னேறினபோது அந்தப் போர்முனை எவ்வாறு வடக்கு முகமாய் விலகியதென்பதை சற்று மேலாகவுள்ள கோடு குறிக்கின்றது. அந்தப் படையெடுப்பின் விவரங்கள் இனி சொல்லப்படும்.



அவ்விரண்டு நதிகளுக்கு மிடையி லிருந்த ஜெர்மன் படைகளை இரண்டு சேனுபதிகள் நடத்தினர்கள்; மேற்கு பாகத்தி லிருந்த படைகளுக்கு ஆர்ச் டியுக் ஜோசப் பர்டினன்ட் தலைமைவகித்தார்; கிழக்கு பாகத்திலிருந்த படைகளை ஜெனரல் வான்மாகென்ஸன் நேரில் செலுத்தினர்.

ஜெர்மானியரின் முன்னேற்றம் ஆரம்பத்தில் வெகு விரைவா யிருந்தது. ஜூன் 25-ந்தேதியிலிருந்து அவர்கள் முன் செல்லத் தொடங்கினர்கள். ஜூலை 1 தேதி கிராஸ்னிக் நகரத்தைப் பிடித்துக்கொண்டு மேற்கிலும் கிழக்கிலும் நிலைபெற்றுர்கள்.

ஜூலை 2-ந் தேதி கிராஸ்னிக் நகரத்தை ருஷியர் மறுபடியும் வசப்படுத்திக் கொண்டார்கள். ஜூலை 4- தேதி ஜெர்மானியர் அந் நகரத்தை மறுபடியும் பிடித்துக் கொண்டார்கள். இந்த சம்பவங்கள் அங்கு நடந்த சண்டையின் கடுமையைக் குறிக்கின்றன. அந்தப் போர்முனையிலிருந்த ருஷியப் படைகளுக்குத் தலைமை வகித்த ருஷிய தளகர்த்தர் அதிசயமான சாமர்த்தியமும் மனவுறுதியும் காட்டினர். அந்த ருஷிய தளகர்த்தராகிய ஜெனரல் லோயிஷே, ஜூலை 9-தேதி அந்த நகரத்துக்கு வடகிழக்கே திடீரென்று ஏராளமான ருஷியத் துருப்புகளைத் திரட்டி ஜெர்மானியரைத் தோற்கடித்தார். ஆனல் அந்தத் திசையில் ஜெர்மானியர் அநேகபீரங்கிகளையும்துணைத் துருப்புகளையும் பெற்று ருஷியரைத் தடுத்ததால், ருஷிய தளகர்த்தர் தாமடைந்த சிறந்த வெற்றியின் பலனுக வெகு தூரம் முன்செல்லக் கூடவில்லை. இதுபோன்ற வெற்றிகளைப் போர்முனையில் அநேக இடங்களில் ருஷியர் அடைந்தபோதிலும், அவர்களுக்குப் போதுமான பீரங்கிகளும் தளவாடங்களு மில்லாமையால், அந்த வெற்றிகள் நல்ல பலன் தரவில்லை. அதன்பிறகு ஜூலை 15-ந்தேதி வரையில் எவ்வித மாறுதலுமில்லாமல் சண்டையே ஓய்ந்திருந்தது. ஆனல் இந்த ஓய்வு, பெரும் புசற்காற்றடிப்பதற்கு முன்னல் தோன்றும் அமைதியைப் போன்றதாகும்.

---

வார்ஸா நகரத்துக்காகச் சண்டை.

ஜெர்மானியரின் படை வன்மை.

ஜூலை 15-ந் தேதி தொடங்கிய சண்டையானது, யுத்தங்களிலெல்லாம் மிகப் பெரிதாகிய இந்த மகா யுத்தத்திலுங்கூட அது வரையில் நேரிட்டிராத ஓர்பிரமிக்கத்தக்க சம்பவமாயிருந்தது. ஜெர்மானியர் புதுமாதிரியாய்த் திருத்திய தங்களுடைய படைகள் காலிஷியாவில் எத்தகைய பலன்கள் தந்தன வென்பதை அறிந்து மற்றப் படைகளின் வன்மையையும் பீரங்கிகளால் அதிகரித்தார்கள். ஏராளமான புதிய துருப்புகளும் புதிய பீரங்கிகளும் புதியகுண்டுகளும் தயார் செய்யப்பட்டன.

அடுத்தபக்கத்திலுள்ள படம்ருஷியப் போர்முனையையும் போலண்டிலுள்ள காவல் ஸ்தலங்களையும் காண்பிக்கின்றது. அவைகளின் விவரங்கள் பின்னல் சொல்லப்படும். ஜெர்மன் எல்லையை யொட்டி பால்டிக் கடலோரமாயுள்ள ருஷிய மாகாணத்துக்கு "பால்டிக் மாகாணம்" என்று பெயர். அந்த கிழக்கரங்கத்துப் போர்முனை முழுவதும் சுமார் 1000 மைல் நீளமாகும்.

வடக்குக்கோடியில் ஜெர்மானியர் பால்டிக் மாகாணத்தில் 2½-லக்ஷம் துருப்புகளை நிறுத்தினார்கள்; நீமன் நதிக் கரையில் 1½-லக்ஷம் துருப்புகளை வைத்தனர். பார், நேரு, இந்நதிகளை நோக்கி 3½-லக்ஷம் துருப்புகள் திரட்டப்பட்டனர்; விஸ்டுலா நதிக்கு மேற்கில் 2-லக்ஷம் துருப்புகள் நிலைபெற்றனர்; விஸ்டுலா நதிக் கரையிலிருந்து காலிஷியா மாகாணத்திலுள்ள நீஸ்டர் நதிக்கரையில் முன்பு காலிஷியாவை மீட்ட ஜெர்மன் படைகளெல்லாம் நிலைபெற்றிருந்தன. காலிஷியாவிலிருந்த அந்த ஜெர்மன் படைகளில் எல்லாம் 8½-லக்ஷம் துருப்புகளுக்குக் குறையாமலிருந்தனர். ஆகையால் வார்ஸா நகரத்தைப் பிடிப்பதற்காக ஜூலை 15-ந் தேதி ஆரம்பமான யுத்தத்தில், ஜெர்மன் கக்ஷியில் ஜெர்மன் துருப்புகளும் ஆஸ்டிரியத் துருப்புகளுமாகச் சேர்ந்து மொத்தம் 18½-லக்ஷம் பேர் போர்புரிந்தார்கள். அத்தனை லக்ஷம் மனிதர்கள் படைகளில் சேர்ந்து ஏராளமான பீரங்கிகளையும் குண்டுகளையும் மற்ற ஆயுதங்களையும் உபயோகித்து ஓயாமல் சண்டைசெய்யும்படி அவர்களை நிர்வகித்து யுத்தம் நடத்துவது சாமான்ய காரியமல்ல. ராணுவக் கட்டுப்பாட்டினால் மனிதக்கூட்டங்கள் எவ்வளவு வன்மை பெற்றதாய் சிருஷ்டிக்கப்படலாமென்பது பயங்கரமாய் விளங்கிற்று. யுக்தி புத்திக்கும் சாஸ்திர வித்தைக்

கும் கிட்டக்கூடிய மானிட சக்தி எப்படிப்பட்டதென்று அறியலாம்.

ருஷிய சேனையின் ஆள்பலம் எவ்வளவு இருந்தபோதிலும், பீரங்கிகளும் குண்டுகளும் மற்ற தளவாடங்களும் ஜெர்மானியருக்கிருந்த அளவு இல்லாமையால் அது பலஹீனமடைந்தது.

## ருஷியப் போர்முனையின் தன்மை.

வார்ஸா நகரத்தைப் பிடிப்பதற்காக ஜெர்மானியர் அந்த பிரயத்தன மெல்லாம் செய்தார்கள். வார்ஸாநகரத்தைப் பிடித்தால் அந்த மாகாண முழுவதும் பிடிபட்டதற்கு ஒப்பாகும். அந்த மாகாணத்தில் நான்கு திசைகளி லுள்ள காவல் ஸ்தலங்களைப் பிடித்தாலல்லது வார்ஸா நகரமும் பிடிபடாது. அந்த நகரம் அந்த மாகாணத்தின் மத்தியில் அவ்வளவு முக்கியமான ஸ்தானத்தில் அமைந்திருக்கிறது. அந்த மாகாணமானது நாற்புறங்களிலும் வலுவான காவல்களைப் பெற்றிருக்கின்றது. பால்டிக் கடலிலிருந்து வார்ஸா நகரம் வரையில் அநேக நதிகள் ஓடுகின்றன. அந் நதிக் கரைகளில் கோட்டைகளு மிருக்கின்றன. நீமன், பாபர், நேரு, இந் நதிகளும் அவைகளின் கரையிலுள்ள கோட்டைகளும் அந்த மாகாணத்தின் வடபுறத்தைக் காக்கின்றன. வார்ஸாவுக்கு நான்கு மைல் வடக்கில் விஸ்டுலா நதிக்கரையிலுள்ள நொவோ ஜார்ஜிவிஸ்க் கோட்டையிலிருந்து கோவ்னோ கோட்டை வரையில் வடபுறத்தில் காவல்களிருக்கின்றன. (நொவோ ஜார்ஜிவிஸ்க் நகரம் மேலேயுள்ள படத்தில் குறிக்கப்படவில்லை, பின்னால் பிரசுரிக்கப்பட்டிருக்கிற படத்தில் காணலாம்.) மேற்குப் பக்கத்தில் விஸ்டுலாநதி காவலாயிருக்கிறது; அந்த நதிப் பிரதேசத்தின் ஒரு முனையில் நொவோ ஜார்ஜிவிஸ்க் கோட்டையும் மற்றொரு முனையில் இவான்கிராட் கோட்டையும் இருக்கின்றன.

தெற்குபக்கத்துப் பிரதேசமானது, ஒரு முனையில் இவான் கிராட் கோட்டையாலும் மற்றொரு முனையில் பிரஸ்ட்லிடாவ்ஸ்க் கோட்டையாலும் காக்கப்பட்டிருக்கிறது. கிழக்குப் பக்கத்தில் பக் நதிக்கரையில் காவல் ஏற்படுகிறது.

இனி நாம் சொல்லப்போகிற புதிய நடவடிக்கைகளை ஜெர்மானியர் தொடங்கினதற்குமுன்னால்போர்முனை எவ்வாறுஇருந்ததென்று அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் கறுப்புக்கோடு காண்பிக்கிறது. ஜெர்மானியர் புதிய நடவடிக்கைகளை நடத்தி எந்தெந்த பாகங்களில் முன்னேறினார்களென்று, கறுப்பும் வெளுப்புமாயுள்ள கோடுகள் குறிக்கின்றன. அவர்கள் நான்கு பாகங்களில் முன்னேறினார்களென்பது தெரியவரும். வட புறத்தில் பால்டிக் மாகாணத்திலும், நேரு நதிப் பிரதேசத்திலும் முன்னேறினார்கள்; மேற்கு பக்கத்தில், விஸ்டுலா நதிப் பிரதேசத்திலும், தென்புறத்தில், லுப்லின் நகரத்தை நோக்கியும் முன்னேறினார்கள். இவைகளை யெல்லாம் படத்தில் குறித்திருப்பதைக் காணலாம். அவர்கள் தாக்கின திசைகளை அம்புபோன்ற குறிகள் காண்பிக்கின்றன. இந்த விவரங்களெல்லாம் பின்னால் சொல்லப்படும். முக்கியமான ரயில் பாதைகளும் குறிப்பிட்டிருக்கின்றன.




நான்கு பக்கங்களிலும் காக்கப்பட்டிருக்கிற போலண்ட் மாகாணத்திலுள்ள துருப்புகள் நான்கு முக்கிய ரயில் பாதைகளின் மூலமாய் தளவாடங்களையும் உணவுப் பொருள்களையும் துணைப் படைகளையும் பெற்றுவந்தன. வார்ஸாவிலிருந்து இரண்டு ரயில் பாதைகள் வடகிழக்காயும் இவான் கிராட்டிலிரு

ந்து இரண்டு ரயில் பாதைகளும் கிழக்கு முகமாயும் ருஷியா தேசம் நெடுகச் செல்லுகின்றன. வார்ஸாவிலிருந்து வடகிழக்காய்ச் செல்கிற இரண்டு ரயில் பாதைகள் பீட்ரோகிராட் நகரத்துக்குச் செல்லுகின்றன. வார்ஸாவிலிருந்து வில்னு வழியாய்ச் செல்கிற ரயில் பாதை வடக்கிலுள்ள ஜெர்மானியருக்கு அருகிலிருப்பதால் அதை அவர்கள் பிடித்துக் கொள்ளமுயன்றார்கள். இவான்கிராட் நகரத்திலிருந்து லுப்லின், கோம், இவைகளின் வழியாய்ச் செல்லுகிற ரயில்பாதை கீப் நகரத்துக்குச்செல்லுகிறது. போலண்டின் தென்பாகத்திலிருந்த ஜெர்மன் படைகள் தங்களுக்கு அருகிலுள்ள அந்த ரயில பாதையைப் பிடிக்க முயன்றன. அவ்வாறுபோலண்டின் வடபாகத்திலுள்ள ஜெர்மன் படைகள் ஒரு ரயில் பாதையையும் தென்பாகத்திலுள்ள ஜெர்மன் படைகள் மற்றொரு ரயில் பாதையையும்பிடித்துக்கொண்டால்ருஷியசேனைக்கு மிகுதி இரண்டு ரயில் பாதைகளே ஆதாரமாயிருக்கும். அதனால் ருஷிய சேனை பாதி பலத்தை இழந்து விடும். இவ்வாறு ஜெர்மானியர் யோசனை செய்து புதிய நடவடிக்கைகளை ஆரம்பித்தனர்.

### ஜெர்மானியர் மூன்று பக்கங்களிலும் சூழ்ந்து தாக்குதல்

ஜெர்மானியர் போலண்ட் மாகாணத்தின் மூன்று பக்கத்துக் காவல்களையும் ஏககாலத்தில் தாக்கினார்கள்; அந்த மாகாணத்தை மூன்று பக்கங்களிலும் காவல் செய்துகொண்டிருந்த ருஷியப் படைகளை அவ்வாறு எல்லாத் திசைகளிலிருந்தும் நெருக்கினாலன்றி அவைகளை வெல்வது சாத்தியமல்ல என்று ஜெர்மானியர் எண்ணினார்கள். போலண்டின் தெற்கு பாகத்தில் விஸ்லா நதிக்கும் பக் நதிக்கும் இடையிலுள்ள ருஷியப் படைகளை யெல்லாம் ஜெனரல் மாகென்ஸன் வடக்கு பக்கமாய்த் தள்ளிக்கொண்டே லுப்லின்நகரத்தை நோக்கிச் சென்றார். இந்த விவரங்களெல்லாம்மேலேயுள்ள படத்தில்குறிக்கப்பட்டிருப்பதை காணலாம். அவருடைய கருத்து என்ன வென்றால், இவான் கிராட் நகரத்துக் கோட்டைகளைப் பிடித்து அந்நகரத்திலிருந்து கிழக்கே லுப்லின், கோம் இந்நகரங்களின் வழியாய்ச் செல்கிற ரயில்பாதையையும் பிடிக்க வேண்டுமென்பது. போலண்டின் தெற்குப் பக்கத்துக் காவலானது, ஒரு முனையில் இவான் கிராட் கோட்டைகளையும் மற்றொரு முனையில் ப்ரஸ்ட் லிடாவிஸ்க் கோட்டைகளையும் ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. ஆகையால் ஜெர்மானியர் இவான் கிராட்டைப் பிடித்தால், தெற்குப் பக்கத்துக் காவல் ஊன்றி நிற்பதற்கு ஆதாரமற்றுப் போய்விடும்.

போலண்டின் மேற்கு பக்கத்தில் அநேக ஜெர்மன் படைகள் விஸ்லா நதிக் கரையை அணுகிச் சென்று நொவோ ஜார்ஜிவிஸ்க் கோட்டையிலிருந்து இவான் கிராட்வரையிலுள்ள பிரதேசத்தில் ருஷியப் படைகளைத் தாக்கிவந்தன.

போலண்டின் வடக்கு பக்கத்தில் நேரு நதிக் கரையை நோக்கித் தாக்கும்படி ஜெனரல் ஹிண்டன் பர்க் தம்முடைய தளகர்த்தர்களில் இருவரை அனுப்பினார். அந்த நதிக் கரையை நொவோ ஜார்ஜிவிஸ்க் கோட்டையிலிருந்து பாபர்நதி வரையில் அநேக ஜெர்மன் படைகள் தாக்கின. நேரு நதிக்கரையில் அநேக ருஷியக் கோட்டைகள் வரிசையாய்க் கட்டப்பட்டிருக்கின்றன. அந்த கோட்டைகளைப் பிடித்து அந்த நதியைக் கடந்து, அதற்கருகில் வார்ஸாவுக்கும் பீட்ரோகிராடுக்கும் செல்கிற பெரிய ரயில் பாதையை வசப்படுத்திக் கொள்ள வேண்டு மென்பது ஜெர்மனியரின் நோக்கம்.

நேரு நதிக்கரையிலிருந்து புறப்பட்டு அந்த பெரிய ரயில்பாதையைப் பிடிப்பது மேற்சொல்லியவாறு மிகவும் சிரமமா யிருக்குமாகையால், அந்த

நோக்கம் கைகூடாத பக்ஷத்தில், வேறு திசையில் அதை நிறைவேற்ற வேண்டுமென்று ஜெர்மானியர் வேறு ஏற்பாடுகளையும் செய்தார்கள். நேரு நதிக்கு வடகிழக்கில் நீமன் நதியைக் கடந்து அந்நதிக்கப்பால் அந்தபெரிய ரயில்பாதையைப் பிடிக்க ஜெர்மானியர் உத்தேசித்தார்கள். ஆனால் நீமன் நதிக்கரையில், கோவ்னோ, ஒலீடா கிராட்னோ ஆகிய இந்த மூன்று ஸ்தலங்கள் பெரிய கோட்டைகளால் காக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும் நீமன் நதிக் கரையைத் தாக்குவதற்காக அநேக ஜெர்மன் படைகள் தயாராயிருந்தன.

நீமன் நதிக்கரையிலுள்ள ஜெர்மன் படைகளின் நடவடிக்கைகளுக்குஉதவியாயிருக்கும்படி வேறு பல ஜெர்மன் படைகள் நீமன் நதிக்கு வடக்கில் அதாவது பால்டிக் மாகாணத்தில் சண்டைசெய்தன. இந்தப்படைகள் கோவ்னோ நகரத்திலிருந்து வடமேற்கே பால்டிக்கடலிலுள்ள லிபா நகரம் வரையில் சண்டை செய்தன. கிழக்கரங்கத்துப் போர்முனையானது சுமார் 1000 மைல் நீளத்துக்கு வியாபித்திருந்தபடியால், சௌகரியத்தின் பொருட்டு, வடக்கு திசையில் ஜெனரல் ஹிண்டன்பர்க்கும் தெற்குதிசையில் ஜெனரல் மாகென்ஸனும் யுத்தநடவடிக்கைகளில் மேற்பார்வைசெலுத்திவந்தார்கள்.

ஜெர்மானியர் செய்துள்ள பிரமாதமான பிரயத்தனங்களை ருஷியா ராணுவ அதிகாரிகள் செவ்வையாய் அறிந்து போர்முனை முழுவதையும் காப்பதற்காகப்பெருமுயற்சிசெய்தார்கள். ருஷிய சேனாதிபதி கிராண்ட் டியூக் நிகலஸ் அச்சமயம் கிடைக்கக்கூடிய எல்லாத் துணைத்துருப்புகளையும்எல்லாப்பீரங்கிகளையும் அவசரமாய்ப் போர்முனைக்கு அனுப்பினார்; குண்டுகளை ஏராளமாய்ச் செய்வதற்குக் கூடுமான பிரயத்தனங்களையெல்லாம் செய்தார். ருஷியப் படைகளுக்கு, குண்டுகள் வழக்கமாயுள்ள அளவு கிடைத்திருந்தன. ஆனால் ஜெர்மனியர் பீரங்கிப்பலத்தையேபிரதானமாகக் கொண்டு குண்டுகளைக் கணக்கில்லாமல் உபயோகித்தார்கள். ஜெர்மானியர் செய்தமாதிரி, பீரங்கியின் பலத்தை விருத்திசெய்ய ருஷியருக்குச் சாவகாசமில்லை.

போர்முனையில், ஜெர்மானியர் நான்கு முக்கியமான பாகங்களில் தாக்கி முன்னேறினார்கள். பால்டிக் மாகாணத்திலும், நேருநதிப் பிரதேசத்திலும், லுப்ளின் நகரத்தை நோக்கியும், விஸ்டுலா நதிப்பிரதேசத்திலும் அவர்கள் முன்னேறினார்கள். இவைகளை மேலே பிரசுரிக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம். இவைகளைப் பற்றி இனி சொல்லப்படும் யுத்த விவரங்களைப் படிக்கும்போது, ஜெர்மானியர் பழய போர்முனையிலிருந்து புதிய போர்முனையைநோக்கி எவ்வாறு முன்னேறினார்களென்று படத்தைப் பார்த்து அறிந்து கொள்ளலாம். அந்த நான்கு பிரதேசங்களில் நடந்த சண்டையை வரிசையாய்ச் சொல்லி வருவோம்.

### பால்டிக் மாகாணத்தில் சண்டை.

ஜூலை மாதம் மத்தியில் ஜெனரல் ஹிண்டன்பர்க் புதிய யுத்த நடவடிக்கைகளை பால்டிக் மாகாணத்தில் தொடங்கினார். அவர் தமக்கு வழக்கமாயுள்ள அளவுகடந்த வேகமும் விரைவுங்கொண்டு ஏராளமான ஜெர்மன் குதிரைப்படைகளை அந்த மாகாணத்தில் திரட்டினார். அந்தக் குதிரைப் படைகள் இரகஸ்யமாய்ப் புறப்பட்டு திடீரென்று ருஷியரைத்தாக்கி 5 தினங்களில் நீர்ப்பிரவாகம்போல 80 மைல் தூரம் பரவிச் சென்றன. அந்த மாகாணத்தில் சொற்ப ருஷியத் துருப்புகளே காவலாயிருந்தபடியால் ஜெர்மானியர் அவ்வளவு விரைவாய்ச்செல்ல சாத்தியப் பட்டது. ஜெர்மானியரின் கருத்து என்னவென்றால், ருஷியப் படைகளைக் கூடுமான அளவு பால்டிக் மாகாணத்தில் இழுத்துக்கொள்ள

வண்டுமென்பது. ஏனெனில், அவருடைய முக்கிய பிரயத்தனம் போலண்ட் மாகாணத்தில் செய்யப்படவேண்டுமே யொழிய பால்டிக் மாகாணத்திலல்ல.

ஜுலை 13-ந்தேதி அந்த மாகாணத்தில் ருஷியப்போர்முனையானது கோவ்னோ நகரத்திலிருந்து பால்டிக் கடலிலுள்ள லிபா துறைமுகம் வரையில் பரவியிருந்தது. ஜெர்மானியரின் எண்ணம் ரீகா நகரத்தை நோக்கிச்சென்று அந்த நகரத்தை பயமுறுத்தவேண்டுமென்பது. ஜெர்மன் குதிரைப் படைகள் லிபாநகரத்துக்கும் ஷாவ்லி நகரத்துக்கும் இடையிலிருந்து ஜுலை 13-ந்தேதி புறப்பட்டு வெகு விரைவாய் முன்சென்றன. அவைகள் 3 தினங்களில்50 மைல் தூரம் சென்றன. இன்னும் இருதினங்களில் (அதாவது17-ந்தேதி) பின்னும் 30 மைல் முன்புறஞ்சென்று ருஷியக் குதிரைகளைத் தோற்கடித்தன. ஜுலை 18-ந் தேதியன்று ஜெர்மானியர், மிடா நகரத்துக் கருகில் 6மைல் வரையில் நெருங்கிவிட்டார்கள். அதற்குள்ளாக ருஷியக்குதிரைப் படைகளும் காலாட்படைகளும் மிடா நகரத்துக்கு வந்து ஜெர்மானியரின் முன்னேற்றத்தைத் தடுத்துவிட்டன. பிறகு ஜெனரல் ஹிண்டன்பர்க், ஷாவ்லி நகரத்திலுள்ள ருஷியப்படைகளைச் சூழ்ந்துகொள்ள உத்தேசித்து, அவர் 20-ந்தேதி அந்நகரத்தைச்சுற்றி மூன்றுபக்கங்களிலிருந் தும்திடீரென்று தாக்கினர். 20-ந்தேதியிலிருந்து 23-ந்தேதிவரையிலும்ஜெர்மானியர் ஷாவ்லி நகரத்தை மூன்று பக்கங்களிலும் விஸ்தாரமாய்ச் சூழ்ந்துகொண்டுதாக்கினர்கள். ஆனால் அங்கிருந்த ருஷியப்படைகளின் பெரும்பாகமும் விரைவாய் பின்சென்று தப்பித்துக்கொண்டது. பால்டிக் மாகாணத்தில் அந்த 10 தினங்களாக நடந்த சண்டைகளில் 27,000 ருஷியத்துருப்புகளையும் 25பீரங்கிகளையும் 40 மெஷின் பீரங்கிகளையும்பிடித்ததாக ஜெர்மானியர் அறிவித்தார்கள். அந்த கணக்குகள் உண்மையென்று வைத்துக்கொண்டாலும், அந்த மாகாணத்திலிருந்த ருஷியப் படைகளுக்கு நேரிட்ட அபாயநிலைமையைக் கருதும்போது அந்தத் தொகை அவ்வளவு அதிகமென்று சொல்வதற் கில்லை. ஜுலை 31-ந்தேதி ஜெர்மானியர் பானிவேஷ் நகரத்தைப் பிடித்தார்கள். ஆகஸ்ட் 1.ந்தேதி மிடா நகரத்தையும் பிடித்தார்கள்.

அதற்குள்ளாக ருஷிய குதிரைப் படைகளும் காலாட் படைகளும் மிடா நகரத்துக்கு வந்து ஜெர்மானியரை எதிர்த்து அவர்களுடைய முன்னேற்றத்தைத் தடுக்க முயன்றன. (பால்டிக் மாகாணத்தில் ஜெர்மானியர் ஆரம்பத்திலிருந்த நிலைமையும் பின்பு முன்னேறிவிட்ட நிலைமையும் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டுள்ள படத்தில் இரண்டு விதக் கோடுகளால் குறிக்கப்பட்டிருக்கின்றன.

**நேரு நதிக்கரைச் சண்டை.**

அதேகாலத்தில் மின்னல் போன்ற விரைவு கொண்டு நேரு நதிக்கரையை நோக்கி அநேக ஜெர்மன் படைகள் முன் சென்றன. ஜெர்மானியர் திடீரென்று முன்வந்து சண்டை செய்தபடியால், ருஷியப் படைகள் ஜுலை 13-ந் தேதி யன்று ஜெர்மானியரைத் தடுக்க முயற்சி செய்யாமலே நேரு நதிக்கரைக்குப் பின் வாங்கின. அந்த நதிக்கரையில் ஜெர்மானியர் 6 தினங்களாக ஓயாமற் சண்டை செய்து ருஷியப் படைகளை கிழக்குக்கரைக்குப் போகும்படிச்செய்தார்கள். ஜுலை 19-ந் தேதி ஜெர்மன் படைகள் நோவோ ஜார்ஜி விஸ்க் கோட்டையிலிருந்து ஆஸ்டிரலன்கா கோட்டை வரையில் நேரு நதியின் வட கரையில் வலுவாய் நிலை பெற்றார்கள். ருஷியத் துருப்புகள் தங்களுக்கு வழக்கமாயுள்ள வீரமும் விடா முயற்சியும் காண்பித்ததோடு அந் நதிக்கரையிலிருந்த அநேக கோட்டைகளின் பலத்தையும் பெற்று ஜெர்மானி

யரை வலுவாய் எதிர்த்து நின்றார்கள். அந்நதிக்கரையில் லோம்ஸா, ஆஸ்டிராலன்கா, ரோஷான், புல்டார்ஸ்க், ஸீராக் முதலிய அநேக ஸ்தலங்கள் பத்து பத்து மைல்களுக்கிடையில் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு நகரத்திலும் சிறு கோட்டைகள் இருந்தன. ஜெர்மானியர் பெரிய மோட்டார் வண்டிகளில் தங்களுடைய முற்றுகை பீரங்கிகளைக்கொண்டு வந்து மிகவும் கடுமையாய்த்தகர்த்தார்கள். முக்கியமாய் புல்டார்ஸ்க் ஆஸ்டிரலன்கா இவ்விரு நகரங்களுக்கெதிரில் ஏராளமான பீரங்கிகள் திரட்டப்பட்டு அங்கிருந்த கோட்டைகளெல்லாம் மூன்று தினங்களில் பொடி செய்யப்பட்டன. 23-ந் தேதி ஜெர்மன் துருப்புகள் நேரு நதியைக் கடந்து செல்வதற்காக மிகவும் உக்கிரமாய் சண்டை செய்தார்கள். மூதல்தரமான ஜெர்மன் துருப்புகள் பொறுக்கியெடுக்கப்பட்டு அவர்கள் உயிர்ச்சேதத்தை லக்ஷியஞ்செய்யாமல் ருஷியப்படைகளைத் தாக்கிப் பின் தள்ளி அந்நதியையும் கடந்து விட்டார்கள். இரண்டு லக்ஷம் ஜெர்மன் துருப்புகள் புல்டார்ஸ்க் நகரத்திலிருந்து ஆஸ்டிராலன்கா நகரம் வரையில் நேரு நதியைக் கடந்து விட்டனர்.

ஜெர்மானியரின் முன்னேற்றம் தடைப்பட்டது.

அவ்விதம் நதியைக் கடந்து விட்ட ஜெர்மானியர் வார்ஸா நகரத்திலிருந்து அந்நதிக்கப்பால் செல்கிற ரயில்பாதையைப்பிடிக்க நோக்கங்கொண்டார்கள். அதனால் நேரிடக்கூடிய பெரிய ஆபத்தை ருஷிய சேனாதிபதி செவ்வையாய் அறிந்து அந்த நதியை நோக்கி ஏராளமான துணைப்படைகளை அனுப்பினர். ஜெனரல் அலக்ஸீப் என்ற மிக்க திறமைபெற்ற தளகர்த்தர் அந்நதிக்கரையிலிருந்த ருஷியப் படைகளை நேரில் நடத்தினர். அவரால் செலுத்தப்பட்ட ருஷியத் துருப்புகள் பேர்பெற்ற வார்ஸா நகரத்தைக் காப்பதற்கு அந்நதிக் கரையைக் காப்பது முக்கியமென்று அறிந்து அவர்கள் போர்க்களத்தில் காட்டிய பராக்கிரமம் அதிசயமாயிருந்தது. நேரு நதிக்குக் கிழக்கே சண்டை ஓய்வில்லாமல் நடந்தது. ருஷியரும் ஜெர்மானியரும் தேவையான அளவு துணைப் படைகளைப் பெற்று சாமர்த்தியங்கொண்ட தளகர்த்தர்களால் நடத்தப்பட்டு மிகக் கோரமாய்சண்டைசெய்தனர். ஜூலை 25-ந் தேதிவரையில் ஜெர்மனியர் நேரு நதியைக் கடந்தபிறகு மூன்று அல்லது நான்கு மைல் முன்சென்றதைத் தவிர வேறு பலன் அடைய சாத்தியப் படவில்லை. ருஷியர் அவ்வளவு கடுமையாய் சண்டை செய்தார்கள்.

லுப்லின் பிரதேசத்தில் சண்டை.

போலண்டின் தெற்கு பாகத்தில் ஜெனரல் மாகென்ஸனுடைய படைகளும் அவ்வாறே ருஷியரால் கடுமையாய் எதிர்க்கப்பட்டன. ஜூலை 17-ந் தேதி ஜெனரல் மாகென்ஸன் விஸ்டுலா நதிக்கும் பக் நதிக்கும் இடையே தமது படைகளை அணிவகுத்து, லுப்லின், கோம் இவ்விரு நகரங்களின் வழியாய்ச் செல்கிற ரயில் பாதையை நோக்கி முன் சென்றார். அந்த பிரதேசத்தில், வடக்கே நேரு நதிக் கரையிலிருப்பதுபோல ருஷியக் கோட்டைகளில்லை. ஆனால் ஜெனரல் மாகென்ஸனைத் தடுத்து சண்டைசெய்வதற்காக ருஷியசேனையிலுள்ள மிகச் சிறந்த படைகளெல்லாம் திரட்டப்பட்டன. ஏராளமான ருஷியப்படைகள் அந்தப் போர்முனையில் குவிக்கப்பட்டதற்குக் காரணங்களென்னவென்றால், அந்தப் பிரதேசத்தில் கோட்டைகள் நதிகள் இவைபோன்ற வலுவான காவல் ஸ்தலங்களில்லாததும், லுப்லின் நகரத்து ரயில்பாதை மிகவும் முக்கியமானதாயிருப்பதும், ஜெனரல் மாகென்ஸனுடைய படைகள் ஏராளமான பலத்தைப் பெற்றிருந்ததும் ஆகும். ஜெனரல் மாகென்ஸன் முதல்தரமான ருஷியத் துருப்புகளாலல்லாமல் மிக்க

றமை வாய்ந்த ருஷிய தளகர்த்தர்க ளாலும் எதிர்க்கப்பட்டார். ஜெனரல் லோயிஷே, ஜெனரல் இவர்ட் ஆகிய இவ்விரண்டு ருஷிய சேனுபதிகளும் லுப்லின், கோம் இவ்விரண்டு நகரங் களுக்குத் தெற்கே அந்த ருஷியப் படைகளைச் செலுத்தினர்கள். ஜென ரல் மாகென்ஸனுடைய உக்கிரத்தைத் தாங்கி அவருடைய முன்னேற்றத்தை ஆச்சரியான மனேதிடத்தினுல் தடு த்த் இரண்டு ருஷிய சேனுபதிகளும் அழியாப் புகழ்பெற்றூர்கள். தவிர, ஜெனரல் மாகென்ஸன், போக்கு வரத் துக்கு நல்ல போதுமான பாதைகளில் லாமலும் கஷ்டப்பட்டார். அவர் தம் முடைய ஏராளமான பீரங்கிகளைக் கொண்டு போவதற்கும் ஏரா ளமான குண்டுகள் தவறுமல் கொ ண்டுவரப் படுவதற்கும் நல்ல ரோ ட்டுகளும் ரயில் பாதைகளும் அவசிய மாகும். அவ்விதசெளகரியங்கள் அந்த பிரதேசத்தில் இல்லாமையால் நூற்றுக் கணக்கான மோட்டார் வண்டிகளை உபயோகித்துங்கூட ஜெனரல் மகென் ஸனுடைய வன்மை மிகவும் குறைவு பட்டது.

### ஜெர்மானியரின் முன்னேற்றம் தடைப்பட்டது.

ஜூலை 17-ந்தேதி ஜெனரல்மாகென் ஸன் ருஷியப் படைகளைத் தோற்கடி க்க பெரு முயற்சியொன்று செய்தார். கிராஸ்னெஸ்டா என்ற ஸ்தலத்துக்கரு கில் முதல்தரமான ஜெர்மன் படைக ளைத் திரட்டி பெரிய பீரங்கிகளையும் கோடிக் கணக்கான குண்டுகளையும் விரைவாய்க் குவித்தார். அன்று தின முழுவதும் பீரங்கிகளிலிருந்து நெருப் பும் இரும்பும் ருஷிய அரண்களின்மீது ஓயாமற் பொழிந்தன. அந்த அரண்க ளெல்லாம் நாசமாகி விட்டபோதிலும் அங்கிருந்த ருஷியத் துருப்புக ளெல் லாம் மடிந்தனரே ஒழிய இடம் விட் டுப் பெயரவில்லை. ஜெர்மன் துருப்பு கள் அவ்வாறு அழிக்கப்பட்ட அரண் களை யெல்லாம் பிடித்துக்கொண்டு மூன்றுமைல் தூரம் சென்றவுடன், ஜெனரல் இவர்ட் அவ்விடத்தில் மறு படியும் ருஷியப் படைகளைத் திரட்டி புதிய அரண்களில் நிறுத்தி போர் விளைத்தார். ஜெனரல் இவர்ட் மறுபடி யும் முன்போல உக்கிரமான போர் முனையை ஊன்றினர் அத்துடன் ஜெர்மானியரின் முன்னேற்றம் மறு படியும் தடைப்பட்டது. விஸ்டுலாநதி க்கும் பக்நதிக்கும் இடையிலுள்ள பிர தேசத்தில், ஒவ்வொரு மைல் தூரத்தி லும் வலுவான அரண்கள் கட்டப்பட் டிருந்தன. ருஷிய தளகர்த்தர்கள் ஜெர் மானியரின் முன்னேற்றத்தைத் தடுப் பதற்கு அப்படிப்பட்ட ஏற்பாடுகளை யெல்லாம்முன்னதாகவே தயார்செய்து வைத்தனர். ஜூலை 17-ந்தேதி மேற் சொல்லியவாறு கிராஸ்னஸ்டா நகரத் துக் கருகில் ஜெர்மானியர் ருஷியப் போர்முனையைப் பிளந்துவிட்டு முன் சென்றபிறகு ஜூலை 21-ந்தேதி மறு படியும் ருஷியப்படைகளால் தடைப் பட்டு நின்றனர். இந்தப் போர்முனை யில் நேருநப் போர்முனையைப்போல வே, இரண்டு கக்ஷிப் படைகளும் துணைத் துருப்புகளைப்பெற்று திறமை வாய்ந்த தளகர்த்தர்களால் நடத்தப் பட்டு ஓயாமற் சண்டைசெய்து வந்த ன. கிராஸ்னஸ்டா நகரத்திலிருந்து லுப்லின் நகரம், 15 மைல் தூரத்தில் தான் இருக்கிறது. அவ்வளவு அருகி லிருந்தும் அந்நகரத்தை விரைவாயும் எளிதாயும் பிடிக்கலாமென்ற எண் ணத்தை ஜெர்மனியர் கைவிட்டனர். ஆயினும் அவர்கள் இரவும் பகலும் சண்டை போட்டு ருஷியத் துருப்புக ளைக் களைக்கச் செய்து மெதுவாகவே னும் இடைவிடாமல் முன் செல்ல நிச் சயித்தார்கள்.

### ருஷியரின் மனத்தேன்பு.

அவ்வாறு ஜூலை மாதத்தின் பிற் பாதியில் ஜெர்மானியரின் முன்னேற் றம் மிகவும் மெதுவாக இருந்தது. அவர்களுடைய உயிர்ச் சேதத்துக்கும் அபாரமான பிரயத்தனத்துக்கும் தக்க

பலன் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. ருஷியர் தங்களுடைய அதிசயமான வீரத்தால் வடக்குப் போர்முனையிலும் தெற்குப் போர்முனையிலும் ஜெர்மானியரின் உக்கிரத்தைத் தாங்கி நின்றனர். அதாவது, நேரு நதிக்குத் தெற்கிலும், லுப்லின் நகரத்துக்குத் தெற்கிலும் ருஷியர் ஜெர்மானியரை வலுவாய் எதிர்த்துச் சண்டை செய்தனர். வார்ஸா நகரத்தை ஆபத்தினின்றும் நிவர்த்தி செய்து காக்கலாமென்றும் ருஷியர் தெம்பு கொண்டனர். ருஷியர் வடக்குப் போர்முனையிலும் தெற்குப் போர்முனையிலும் அதிக வன்மை பெற்றிருந்ததற்கு வேறொரு காரணம் இருந்தது. ருஷிய சேனாதிபதி, விஸ்டுலா நதிக் கரையிலிருந்த அநேக ருஷியப் படைகளை நேரு நதிப் போர்முனைக்கும், லுப்லின் நகரத்துப் போர்முனைக்கும் அனுப்பிக் கொண்டே வந்தார். அவ்விரண்டு போர்முனைகளிலும் ருஷியருக்கு உதவி செய்ய விஸ்டுலா நதியிலிருந்த ருஷியப்படைகளும் பீரங்கிகளும் அனுப்பப்பட்டன.

### விஸ்டுலா நதிச் சண்டை.

வார்ஸா நகரமுள்ள பிரதேசத்தில், விஸ்டுலா நதிப் போர்முனையின் நிலைமையைக் கவனிக்கவேண்டும். ஜூலை மாதமத்தியில் ஜெர்மானியர் நேரு நதிக் கரையிலும், லுப்லின் நகரத்துக்குத் தெற்கிலும் ருஷியப் படைகளை மிகவும் பலமாய் நெருக்கித் தாக்கிய போது, விஸ்டுலா நதிக்கு மேற்கே நிலைபெற்றிருந்த ருஷியப் படைகள் அந்நதிக் கருகில் நெருங்கிக்கொள்ளும்படி ருஷிய சேனாதிபதி உத்தரவு செய்தார். வார்ஸா நகரத்துக்கு மேற்கே ஜூலை 17ந்தேதி ஜூரா நதிக்கரையிலிருந்த ருஷியப் படைகள் பிளானி நகரத்துக்குப் பின் வாங்கின. அந்த நகரம் வார்ஸாவுக்குப் 15 மைல் மேற்கிலிருக்கிறது. அந்த நகரத்துக்குத் தெற்கே இவான்கிராட் வரையில் ருஷியப் படைகள் விஸ்டுலா நதியின் மேற்குக் கரையில் நிலைபெற்றன.

விஸ்டுலா நதிக்கரையில் வார்ஸா நகரமும், இவான்கிராட் நகரமும் 50 மைல் தூரம் விலகி இருக்கின்றன. அந்த நதியைக் கடப்பதற்கு அந்த இரண்டு நகரங்களிலுள்ள பாலங்களைத் தவிர அவைகளுக்கிடையே 50 மைல் தூரத்துக்குவேறுபாலங்களே இல்லை. ஆகையால் அந்நதியைக் கடப்பது ஜெர்மானியருக்குச் சாத்தியமல்லவென்று ருஷியர் நினைத்தார்கள். அந்த நதியால் ஏற்படுகிற காவலின் வன்மையை எண்ணி அங்குள்ள ருஷியப்படைகள் சொற்பமாக வைக்கப்பட்டிருந்தன. அங்கு அதிகமாயிருந்த ருஷியப் படைகள், போலண்டின் வடக்குப் போர்முனையிலும் தெற்குப்போர்முனையிலும் உதவி செய்யச் சென்றன என்று ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விஷயத்தை ஜெர்மானியர் அறிந்து கொண்டு, விஸ்டுலா நதிக்கரையில் திடீரென்று மிகப் பெரிய பிரயத்தனம் செய்தார்கள்.

### விஸ்டுலா நதியைக் கடந்துவிட்டனர்.

விஸ்டுலா நதிக்கரையில் இவான்கிராட் நகரத்துக்கு 20 மைல் வடக்கே அநேக ஜெர்மன் படைகளும் பீரங்கிகளும் இரகசியமாய்த் திரட்டப்பட்டன. ஜூலை 29ந் தேதி இரவு, அந்த நதிக்குக் குறுக்கே படகுகளால் அநேக பாலங்கள் கட்டப்பட்டு, அவைகளின் வழியாய் அந்த ஜெர்மன் படைகளெல்லாம் திடீரென்று நதியைக் கடந்து சென்றன. அந்த ஜெர்மன் படைகளைத் தாக்குவதற்கு அங்கிருந்த ருஷியப் படைகள் போதுமான பலத்தைப் பெற்றிருக்கவில்லை. ஆதலால் அந்த ருஷியப் படைகளுக்குத் துணையாக, வார்ஸா நகரத்துக்கு மேற்கிலிருந்த அநேக ருஷியப்படைகள் அவசரமாய்த் தருவிக்கப்பட்டன. விஸ்டுலா நதியைக் கடந்துவிட்ட ஜெர்மானியரை, மேற்குக் கரைக்குத் தள்ளிவிடுவதற்காக அங்கிருந்த ருஷியப் படைகள் துணைப்பலத்தைப் பெற்றவுடன் உக்கிரமாகப்போர்தொடங்கின.

ர்மானியரும் தங்கள் கைபிடிப்பில் ருந்த படைகளையெல்லாம் விஸ்டுலா ரிக்கப்பால் அனுப்பினார்கள் ஆயினும் ங்கு நடந்த சண்டை மிகவும் மையாயிருந்த போதிலும் அந்த க்கியமான சண்டையை, தாமஸமாய் த்தக் கூடாதென்று ஜெர்மானியர் ச்சயித்தார்கள்.

ருஷியரின் நெருக்கடியான நிலைமை.

. விஸ்டுலா நதிக் காவலை இழந்துவிடு தற்கு ருஷியர் இலேசாய் இணங்கிப் பாகமாட்டார்க ளென்பதை ஜெர்மா ரியர் அறிந்தனர். அபூர்வமாய் வாய்க் க்கூடிய அப்படிப்பட்ட அனுகூல ான சமயத்தை ஜெர்மானியர் கைவிடக் கூடியவர்களல்ல. அவர் ள் மிக்க அவசரமாக ஆஸ் ரிய ஏகாதிபத்தியத்தின் தெற்கு ல்லையிலிருந்த அநேக ஆஸ்டிரியப் படைகளைக் கொண்டு வர நிச்சயித்தார் ள். ஸெர்வியா தேசத்தின் எல்லையில் ண்டை செய்து கொண்டிருந்த அநேக ஆஸ்டிரியப்படைகள் விரைந்து வந்தன. அந்தப்படைகளில் ஒருபாகம் விஸ்டுலா நதிக்கப்பால் அனுப்பப்பட்டு ற்றொரு பாகம் ஜெனரல் மாகென்ஸ னுக்கும் அனுப்பப்பட்டது. ஜூலை 30ந்தேதி இவான்கிராட் நகரத்துக்கு வடக்கே 20மைல் தூரத்துக்கு விஸ் டுலா நதியைக்கடந்துவிட்ட $1\frac{1}{2}$ லக்ஷம் ஜெர்மன் துருப்புகள் அதன் கிழக்குக் கரையிலிருந்து முன்செல்ல ஆரம்பி த்துவிட்டனர். அதே தினத்தில் ஜென ரல் மாகென்ஸன் துணைப்படைகளைப் பெற்று அவர் விசேஷமாய்க் காட்டிய வேகத்தாலும் உக்கிரத்தாலும் ருஷியப் போர்முனையைப் பிளந்து லுப்லின் நகரத்தைப் பிடித்துக்கொண்டார்.

வார்ஸா பிடிபட்டது.

இவ்விரண்டு முக்கிய சம்பவங்களும் பேர்பெற்ற வார்ஸா நகரத்தின் கதியை நிச்சயித்துவிட்டன. ஆகஸ்ட் 1-ந்தேதி இவான்கிராட் கோட்டைகள் ஜெர்மன் பீரங்கிகளால் தகர்க்கப்பட்ட கோட் டைகளும் ஒவ்வொன்றாய்ப் பிடிபட்டுக் கொண்டிருந்தன. ருஷியர் போலண் டின் தெற்குபாகத்தில் லுப்லின் நகர த்தையும் ரயில்பாதையையும் இழந்து, பொடியாக நொறுங்கிக்கொண்டிருந்த இவான்கிராட் கோட்டைகளின் ஆதர வையும் இழந்து, மேற்குபாகத்தில் விஸ்டுலா நதியின் காவலையும் இழந்த னர்; வடக்குபாகத்தில் மட்டும் நேரு போர் முனையில் ஜெர்மானியரைத் தடுத்து நின்றனர். அவ்விதம் வடக்கு திசையில் ருஷியருக்கு ஏற்பட்ட பந் தோபஸ்தினால், போலண்ட் பாகா ணத்திலுள்ள எல்லா ருஷியப்படை களும் தாமஸமின்றிப் பின்வாங்க நிச் சயித்தன.

ஆகஸ்ட் 4-ந்தேதி ருஷியர் இவான் கிராட் நகரத்தையும் கோட்டைகளை யும் காலிசெய்தனர். ஆகஸ்ட்5-ந்தேதி வார்ஸா நகரம் காலி செய்யப்பட்டது. ஜெர்மன் ஏகாதிபத்தியத்திலுள்ள பவேரியாநாட்டு மன்னரின் சகோதரர் பிரின்ஸ் லியோபால்ட் அங்கு சிறப் பாய் நகரப் பிரவேசம் செய்தார்.

நோவோ ஜார்ஜிவிஸ்க் பிடிப்பட்டது.

ஆகஸ்ட் 7-ந் தேதி ஜெர்மானியர் நொவோ ஜார்ஜிவிஸ்க் நகரத்துக்குக் கிழக்கில் பக் நதியைக் கடந்து அந் நகரத்துக் கோட்டைகளை யெல்லாம் சூழ்ந்து கொண்டனர். ஆகஸ்ட் 7-ந் தேதிக்கு முன்னதாக, போலண்டுக்கு மூன்று பக்கங்களிலு மிருந்த ருஷியப் படைகளெல்லாம், பின் வாங்கிச் சென்றுகொண் டிருந்தன. ஆனால் ருஷிய சேனாதிபதி தம்முடைய வழக் கமான ராணுவ தந்திரத்துக்கு மாறாக, நொவோ ஜார்ஜிவிஸ்க் கோட்டை களில் அநேக ருஷியப் படைகளை வைத்தார். இவான் கிராட்கோட்டைக ளைக்காலிசெய்து கைவிட்டுச்சென்றது போல், நொவோஜார்ஜிவிஸ்க் கோட் டைகளைக் காலி செய்யவில்லை. அந் தக் கோட்டைகளில் அநேக ருஷியப் படைகள் நிலை பெற்று அவைகளைக்

கடைசி வரையில் காக்கும்படி உத்தர விடப் பட்டனர். அதற்குக் காரணம், அந்நகரம் முக்கியஸ்தானத்தில் இருப்பதாகும். ஜெர்மன் மாகாணமாகிய கிழக்குப்பிரஷ்யாவிலிருந்து ஒரு பெரிய ரயில்பாதை நொவோஜார்ஜிவிஸ்க் நகரத்தின் வழியாய் வார்ஸா நகரத்துக்கு வருகின்றது. அதனால் ருஷியப்படைகள் வார்ஸா நகரத்தைக் காலி செய்து பின் வாங்கினபோது, வழியிலுள்ள எல்லா ரயில் பாதைகளையும் பாலங்களையும் அழித்து ஜெர்மானியர் விரைவாய்ப் பின்தொடராதபடிச் செய்தனர். அவ்வாறு ருஷியப்படைகள் பின்வாங்கிச் செல்ல ஆரம்பித்த சமயத்தில், ஜெர்மானியர் நொவோஜார்ஜிவிஸ்க் நகரத்தைப் பிடித்துக்கொண்டார்களானால், அவர்கள் கிழக்குப் பிரஷ்யாவிலிருந்து ரயில் மார்க்கமாய் வார்ஸா நகரம் வரையில் புதிய அடுப்புகளையும் தளவாடங்களையும் விரைவாய்க் கொண்டு வந்து ருஷியரைக் கடுமையாய்ப் பின்தொடர்ந்து தாக்க ஆரம்பித்திருப்பார்கள். ஜெர்மானியர் வார்ஸா நகரத்திலிருந்து புறப்பட்டு ருஷியரைப் பின்தொடர்வதோடு, நொவோஜார்ஜிவிஸ்க் நகரத்தைப் பிடித்தார்களானால் அவர்கள் அந்நகரத்திலிருந்தும் பின்தொடர்ந்து செல்வார்கள்.

நொவோஜார்ஜிவிஸ்க் கோட்டைகளும் அவைகளிலிருந்த ருஷியப் படைகளும் ஆகஸ்ட் 9-ந் தேதிக்குப் பிறகு ஜெர்மானியரால் எல்லாபக்கங்களிலும் தாக்கப்பட்டன. அங்கிருந்த ஜெர்மன் படைகளுக்கு ஜெனரல் வான் பெஸிலர் தலைமை வகித்தார். ஜெனரல் வான் பெஸிலர் ஆண்ட்வர்ப் கோட்டைகளைப் பிடித்தவர். கோட்டைகளைத் தாக்கிப் பிடிக்கும் வித்தையில் நிபுணத்துவம் பெற்றவர். ஜெர்மானியரிடமுள்ள பூதம் போன்ற மிகப் பெரிய பீரங்கிகளை உபயோகிப்பதில் அவர் திறமை வாய்ந்தவர். நொவோஜார்ஜிவிஸ்க் கோட்டைகள் சிலவருஷங்களுக்கு முன்னால் நூதன காலத்து முறைகளின்படி திருத்திக் கட்டப்பட்டன. அவைகளைத் தகர்த்துப் பிடிப்பதற்கு, ஜெர்மானியரிடம் பெரிய முற்றுகைப் பீரங்கிகளில்லாமற் போயிருந்தால் சாத்தியப்படாதென்றே சொல்லலாம். ஜெர்மானியர் பெரிய பீரங்கிகளை நல்ல இடமாகப் பார்த்து அமைத்தனர். அவ்வாறு அந்த பீரங்கியை அமைத்தபிறகு அதை மூன்று பக்கங்களிலும் திருப்பிச் சுடலாம். பீரங்கியை இடம் விட்டு நகர்த்தாமலே எந்தத்திசையை நோக்கிச்சுட வேண்டுமானாலும் சுடலாம். ஆதலால் அந்த பீரங்கியை ஒவ்வொரு திசையிலும் கொண்டுபோய் நிறுத்திச் சுட வேண்டுமென்பதில்லை.

ஜெர்மானியர் மிக்கவன்மை கொண்ட அந்த நகரத்துக் கோட்டைகளை சீக்கிரமாய்ப் பிடிக்கவேண்டுமென்று முதல் தரமான பீரங்களில் பலவற்றை அங்கு கொண்டுவந்து நிறுத்தினர். அந்த நகரத்தைச் சுற்றிலுமிருந்த எல்லாக் கோட்டைகளையும் அவர்கள் 12 தினங்களில் பொடி செய்து விட்டனர். ஆகஸ்ட்டு 19-ந்தேதி அக்கோட்டைகளிலிருந்த எல்லா ருஷியத் துருப்புகளும் அந்நகரமும் ஜெர்மானியரிடம் சரணமடைந்தன. ஜெர்மன் சக்ரவர்த்தி அந்த நகரத்துக்கு விஜயஞ்செய்து அங்கு ஜெர்மன் வீரர்களையும் பீரங்கிகளையும் அணிவகுத்துப் பார்வையிட்டார்

### ருஷியர் பின்வாங்குதல்.

அந்த 12 தினங்களில் ருஷியசேனை முழுவதும் 80 மைல் கிழக்கே பின்வாங்கிச் சென்று கொண்டிருந்தது.

### பிரஸ்ட் லிடாவ்ஸ்க் போர்முனை.

ருஷியசேனை முன்பு விஸ்டுலா நதி வரையில் மேற்கு திசையில் நீண்டு கொண்டிருந்தது. அந்த வட்டத்தின் மூன்று பக்கங்களிலிருந்த ருஷியப் படைகள் நேர்வரிசையான ஒழுங்குக்

ப் பின்வாங்கிச் சென்றன. வடபுறத்தில் பால்டிக் மாகாணத்திலும் நீமன் நதிக்கரையிலும் ருஷியப் படைகள் பின்வாங்கவில்லை.

விசாலமான வட்டத்தில் நிலைபெற்றிருந்த படைகளை நேர் ஒழுங்கான நிலைமைக்குப் பின்வாங்கச் செய்வதற்கு அவைகளின் தளகர்த்தர் மிகுந்த சாமர்த்தியம் பெற்றிருக்க வேண்டும். இன்னின்ன படைகள் இன்னின்ன பாதைகளில் இன்னின்ன காலத்துக்குள் செல்ல வேண்டுமென்று தளகர்த்தர் திட்டஞ்செய்து அதன்படி செய்து முடிக்காவிட்டால் அந்தப் படைகளெல்லாம் ஒழுங்கீனமாய்ச் சிதறிப்போகும். முக்கியமாய், அந்தப் படைகள் சத்துருக்களால் தாக்கப்பட்ட வண்ணமாய் பின்வாங்கும்போது அவைகளை நிர்வகிப்பது எளிதான காரியமல்ல. அப்படிப்பட்ட காரியத்தை ஒழுங்காய் நடத்தி வைத்த ஜெனரல் அலக்ஸிப் மிகுந்த கீர்த்தி பெற்றார்.

ருஷியசேனை வார்ஸா பிரதேசத்திலிருந்து பின்வாங்கிப் புதிதாய் நிலைபெற்ற போர்முனையானது, அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் கறுப்புக்கோட்டினால் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் போர்முனையில் "பிரஸ்ட் லிடாவ்ஸ்க்" என்னும் முக்கியமான நகரம் இருப்பதால், அது "பிரஸ்ட் லிடாவ்ஸ்க் போர்முனை" என்று சொல்லப்படும். அந்தப் போர்முனையில் ஜெர்மானியர் சண்டைசெய்து முன்னேறினார்கள். அவர்கள் எந்தெந்த இடங்களில் முக்கியப் பிரயத்னங்கள் செய்தார்களென்று படத்தில் அம்புபோன்ற மூன்று குறிகள் குறிப்பிடுகின்றன. வடபுறத்தில் கோவ்னோ நகரத்திலும், தென்புறத்தில் கோம் நகரத்துக்கருகிலும் கோவல் நகரத்துக்கருகிலும் அந்த பிரயத்தனங்கள் செய்யப்பட்டன. இவைகளின் பலனாக அவர்கள் முன்னேறிச் சென்று நிலைபெற்ற போர்முனையானது, படத்தில் கறுப்பும் வெளுப்புமாயுள்ள கோடு காண்பிக்கிறது. ஜெர்மானியர் அந்த முக்கியப் பிரயத்தனங்களை எவ்வாறு செய்து முன்னேறினார்களென்று இனி சொல்லப்படும்.

வார்ஸா பிரதேசத்திலிருந்த ருஷியப் படைகள் பாபர் நதிக்கரையிலுள்ள ஒஸாவிஸ் நகரத்திலிருந்து நேர் தெற்கே புதிதாய் நிலைபெற்றன. புதிதாய்மாறிய அந்த ருஷியப்போர்முனையானது ஒஸாவிஸ் நகரத்திலிருந்து தெற்கே பிரஸ் ட்லிடாவ்ஸ்க் நகரத்தின் வழியாயும் பிறகு பக் நதிக்கரை யோர



மாயும் சென்று காலிஷியா மாகாணத்திலுள்ள போர்முனையுடன் சேர்ந்து கொண்டது. (பிரஸ்ட்வியாவ்ஸ்க் நகரத்தின் வழியாய் ஓடுகிற பெரியநதிதான் பக்நதியாகும்.) காலிஷியா மாகாணத்தில் லெம்பர்க் நகரத்துக்கு மேற்கிலிருந்து நீஸ்டர் நதிவரையில் முன்பிருந்த ருஷியரின் நிலைமையில் மாறுதலில்லை. ஜெர்மானியர் ஓஸாவிஸ் நகரத்திலிருந்து பிரஸ்ட்லிடாவ்ஸக் நகரத்துக்குத் தெற்கே பக்நதிக்கரை நெடுக தாக்கினார்கள். பிரஸ்ட்லிடாவ்ஸ்க் நகரத்தைச்சுற்றி அனேக ருஷியக்கோட்டைகள் இருக்கின்றன. அந்தநகரம்பக்நதிக்கரையிலும் ஐந்துரயில்பாதைகள் வந்து கூடுமிடத்திலும் அமைந்திருக்கிறது. அந்நகரத்தை மத்திய ஸ்தானமாகக் கொண்டு அதற்குவடக்கிலும்தெற்கிலும் ருஷியர் தங்களுடைய புதிய போர்முனையை ஏற்படுத்தினார்கள். அதாவது அந்த வரிசையில் ருஷியப்படைகளெல்லாம் நிலைபெற்றன. அந்த நகரத்தை ஆதாரமாகக்கொண்டும் அந்நகரத்துக்குத் தெற்கேயுள்ள பக்நதிக்கரையின்வன்மையைக்கொண்டும்ருஷியர் அந்தப் போர்முனையில் நிலைபெற்று ஜெர்மானியரைத் தடுத்து நிற்கத் தீர்மானித்தார்கள். பிரஸ்ட் நகரத்திலிருந்து வடக்கே பாபர் நதிவரையில் ருஷிய சேனையின் பெரும்பாகமுழுதிரட்டப்பட்டு ஜெர்மானியரை வலுவாய் எதிர்த்து நின்றன.

**ஜெர்மானியர் பக் நதியைக் கடந்தனர்.**

ஆனால் பிரஸ்ட்லிடாவ்ஸ்க் நகரத்துக்குத் தெற்கே ஜெனரல் மாகன்ஸன் ஆகஸ்ட் 15-ந்தேதி பக் நதிக்கரையிலுள்ள வலடோவா நகரத்தைப் பிடித்துக்கொண்டு அந்நதியையும் கடந்து சென்றார். அவர் அந்த நதியைக்கடந்துவிட்டதால், அந்நதியினால்ருஷியருக்கு ஏற்பட்டிருந்த பந்தோபஸ்து குறைந்துவிட்டது. ஆயினும்அவரால் விரைவாய் முன்செல்ல முடியவில்லை. ஏனெனில் வலடோவாநகரத்துக்குக்கிழக்கே ஏரிகளும் சேற்று நிலங்களும் நிரம்பியிருக்கின்றன. அந்தப் பிரதேசத்தில் அனேக ருஷியப்படைகள் நிலைபெற்று ஜெர்மானியரின் முன்னேற்றத்தை மட்டுப்படுத்தி வந்தார்கள்.

**வேறொரு யோசனை.**

அதன் பேரில் ஜெர்மானியர் சுமார் 300-மைல் வடகிழக்கிலுள்ள நீமன் நதியைக் கடந்துவிட உத்தேசித்தார்கள்; அந்த நதிக்கரையில் முக்கிய காவலாயிருந்த கோவ்னோ நகரத்தின் கோட்டைகளைப் பிடித்துவிடலாமென்றும் உறுதி கொண்டார்கள்.

ஆகஸ்ட் 6-ந் தேதியிலிருந்தே ஜெர்மானியர் கோவ்னோ கோட்டைகளை நெருங்கித் தாக்க ஆரம்பித்தார்கள். ஜெனரல்வான் லிட்ஸ்மான் அங்கிருந்த ஜெர்மன் படைகளுக்குத் தலைமை வகித்தார். நோவோ ஜார்ஜிவ்ஸ்க் கோட்டைகள் தகர்க்கப்பட்ட காலத்திலேயே கோவ்னோ கோட்டைகளும் தகர்க்கப்பட்டன என்பதை கவனிக்கவும். ஜெர்மானியர் அவ்விரண்டு நகரத்துக் கோட்டைகளைத் தகர்ப்பதற்காக வெவ்வேறு பீரங்கிக் கூட்டங்களைச் சேர்த்திருக்கவேண்டும். அதனால் பூதம் போன்ற பெரிய முற்றுகைப் பீரங்கிகள் ஜெர்மானியரிடம் சொற்பமாயிருந்தன வென்று நினைப்பதற்கில்லை.

**கோவ்னோ கோட்டைகள் பிடிபட்டன.**

ஆகஸ்ட் 6-ந் தேதியிலிருந்து ஆகஸ்ட் 17-ந் தேதிக்குள்ளாக அதாவது சரியாய் 11-தினங்களில், கோவ்னோ நகரமும் கோட்டைகளும் பிடிபட்டன. கோவ்னோ கோட்டைகள் நீமன் நதிக்கு முக்கிய காவலாகும். அந்த நதிக்கரையிலுள்ள கோட்டைகளிலெல்லாம் கோவ்னோ கோட்டைகளே மிக்க வன்மை கொண்டவை. அந்த நகரம் 17ந் தேதிக்குள் பிடிக்கப்படுமென்று ருஷியர் எதிர்பார்க்கவில்லை. ஆகையால் அந்நகரம் பிடிப்பட்ட பிறகு பிரஸ்ட் லிடாவ்ஸ்க் போர்முனையில் ருஷியசேனை நிலைபெற்றிருக்க முடியாது. ஏனெனில் ஜெர்மானியர்

கோவ்னேவைப் பிடித்து நீமென் நதிக் காவலை மீறிச் செறபடியால், அந்நதிக்குக் கிழக்கிலுள்ள ரயில் பாதைகளெல்லாம் ஆபத்துக் குள்ளாகி விட்டன. ஜெர்மானியர் கோவ்னே நகரத்திலிருந்து புறப்பட்டு வில்னு நகரத்தை நோக்கிச்சென்று அந்நகரத்தின் வழியாகச் செல்கிற முக்கியமான ரயில் பாதையைப் பிடித்து விடுவார்கள். அந்த ரயில் பாதை பீட் ரோகிராட் நகரத்திலிருந்து புறப்பட்டு வந்து போர்முனையிலிருந்த ருஷியப் படைகளை ஆதரித்து வந்தது. ஆகையால் ஜெர்மானியர் அந்த ரயில்பாதையை வில்னு நகரத்துக்கருகில்சென்று பிடித்துக் கொண்டால் பிரஸ்ட் லிடாவ்ஸ்க் நகரத்துக்கு வடக்கிலிருந்த ருஷியப் படைகள் தங்களுடைய ரயில் பாதையை இழந்து அபாய நிலையில் இருப்பார்கள். ஆகையால் கோவ்னே பிடிபட்டவுடன் ருஷிய சேனாதிபதி பிரஸ்ட் லிடாவ்ஸ்க் போர்முனை முழுவதையும் காலி செய்து பின்வாங்க நிச்சயித்து விட்டார். கோவ்னே நகரத்தைப் பிடித்த ஜெர்மன் படைகளைத்தடுத்து நிற்பதற்காக ருஷிய சேனாதிபதி அத்திசையில் அநேக ருஷியப் படைகளை அனுப்பினார். பிரஸ்ட் லிடாவ்ஸ்க் நகரத்துக்கு வடக்கிலும் தெற்கிலும் வரிசையாய் நிலைபெற்றிருந்த ருஷியப் படைகளெல்லாம் பின்வாங்கிச் செல்லத் தொடங்கின.

### மற்றொரு ரயில்பாதை பிடிபட்டது.

ஆனால் அதற்குள்ளாக மற்றொரு சம்பவமும் நடந்தது. பிரஸ்ட் லிடாவ்ஸ்க் நகரத்துக்குத் தென் கிழக்கே ஒரு ரயில்பாதை கோவல் நகரத்துக்குச் செல்கிறதைப் பார்க்கலாம். கோவல் நகரத்துக்கு மேற்கிலிருந்து புறப்பட்டுவந்த அநேக ஜெர்மன் படைகள், ஆகஸ்ட் 23-ந் தேதி அந்நகரத்தைப் பிடித்துக் கொண்டன. அதனால், பிரஸ்ட் லிடாவ்ஸ்க் போர்முனையிலிருந்த ருஷியப் படைகள் ஒரு ரயில்பாதையின் ஆதரவை இழந்துவிட்டன.

ஆகஸ்ட் 25-ந் தேதி பிரஸ்ட் லிடாவ்ஸ்க் நகரமும் கோட்டைகளும் காலி செய்யப்பட்டன. ருஷிய சேனை முழுவதும் வில்னு நகரத்துக் கருகிலிருந்து நேர் தெற்கே வரிசையாய் நிலைபெற்றது. இந்தப் போர்முனை மேலேயுள்ள படத்தில் கறுப்பும் வெளுப்புமாயுள்ள கோடு காண்பிக்கிறது.

### ருஷிய சேனாதிபதி மாறுதல்

வார்ஸா நகரத்தைக் காலிசெய்யும்படி நேர்ந்த தினத்திலிருந்து ருஷியப் படைகளெல்லாம் ஓயாமற் பின்வாங்கிச் செல்வதே உசிதமென்று ருஷிய சேனாதிபதியாகிய கிராண்டியுக் நிகலஸ், நினைத்தார். ருஷிய சேனை போதுமான பீரங்கிகளைப் பெற்று ஜெர்மானியரைத் தாக்குவதற்குத் தேவையான வன்மையை அடையும் வரையிலும், அது பின்வாங்கிக் கொண்டிருப்பதே நலமென்று அவர் எண்ணினார். தவிர, ஜெர்மானியர் தங்களுடைய சொந்த தேசத்திலிருந்து விலகி வெகுதூரம் செல்லச் செல்ல பலஹீனமடைவார்களென்றும் ருஷியர் தங்களுடைய சொந்ததேசத்துக்குள்ளே போகப்போக அதிக சௌகர்யங்களைப் பெறுவார்களென்றும் ருஷிய சேனாதிபதி நினைத்தார். ஆகையால் அவர் வலுவான நதிப்பிரதேசங்களையும் முக்கியமான ஸ்தலங்களையும் பலமான கோட்டைகளையும் கூடுமானவரையில் சீக்கிரமாகவே கைவிட்டுச்செல்லும்படி உத்தரவிட்டார்.

### போலண்டின் நிலைமை.

ருஷியர் போலண்ட் மாகாணத்துக்கு சுயஆட்சி கொடுப்பதாகவும், தங்களுக்கு அந்த மாகாணத்திலிருந்த போல்ஸ் ஜாதியார் இந்த யுத்தத்தில் உதவிசெய்ய வேண்டுமென்றும் அறிவித்திருந்தார்கள். ஜெர்மானியரும் அந்த ஜாதியாருக்கு சுயஆட்சி கொடுப்பதாக வாக்களித்தார்கள். ஆனால், ஜெர்மானியர் ருஷிய மாகாணமாகிய போலண்டை வசப்படுத்திக் கொள்ளும் போது, அவர்களுக்கு அங்கே

எவ்வித லாபமும் சாதகங்களும் கிடைக்காமலிருக்க வேண்டுமென்று எண்ணி, ருஷிய சேனுதிபதி மிக்க பயங்கரமான முறைகளை அனுஷ்டித்தார். ருஷியப்படைகள், தங்களுடைய போலண்ட் மாகாணத்தை காலி செய்துவிட்டுப் போவதற்கு முன்னால், அந்த பிரதேசத்திலுள்ள சகலவிதமான பாதைகளை அழிக்கும்படியும் கிராமங்களிலும் நகரங்களிலு மிருந்த சகல பொருள் பண்டங்களை நாசஞ் செய்யும்படியும் உத்தரவிடப்பட்டனர்.

போலண்ட் மாகாணத்திலிருந்த ஜனங்களில் அநேகர் கூட்டங்கூட்டமாக, தங்கள் இருப்பிடங்களைக் காலி செய்து ருஷியாவுக்குள் சென்றதாகத் தெரிகிறது. ஒரு நூற்றுண்டுக்கு முன்னுல் பிரஸித்திபெற்ற நெப்போலியன் ருஷியாவின் மீது படையெடுத்து, பிரபலம் பெற்ற மாஸ்கோ நகரத்தைப் பிடிப்பதற்கு அணுகினபோது, ருஷியர் அந்த நேர்த்தியான நகரத்துக்குத் தீவைத்துச் சென்றுவிடவே, நெப்போலியன் தாம் பிடிக்க வந்த மகா நகரம் பாழடைந்ததைக்கண்டு மனம் ஓடுங்கினர். முன்னேர்கள் அனுசரித்த அந்த முறையை கிராண்ட் டியுக் நிகலஸ் இக்காலத்திலும் அனுசரிக்க நிச்சயித்தார். ஆகஸ்ட் 25-ந் தேதியன்று ருஷியர் பிரஸ்ட்லிடாவ்ஸ் நகரத்திற்குத்தீவைத்த பிறகு அதைக்கண்டஒரு யுத்தநிருபர், அந்தநேர்த்தியான நகரம் அக்னிமயமான கடலைப்போல் கொதித்துக் கொண்டிருந்த தென்று தெரிவித்தார்.

ருஷ்ய சக்ரவர்த்தி சேனதிபதியாதல்.

செப்டம்பர் 5-ந் தேதி ருஷிய சேனுதிபதியாகிய கிராண்ட்டியுக் நிகலஸ் அந்தப் பதவியிலிருந்து விலகினர். ருஷியாவில் "கிராண்ட்டியுக்" என்ற பட்டம் ராஜ குடும்பத்தினருக்கு கொடுக்கப்படுகிறது. ருஷிய சக்கரவர்த்தி கிழக்கரங்கத்தில் சேனுதிபதி ஸ்தானத்தைத் தாமே வகித்து, கிராண்ட் டியுக் நிகலஸை துருக்கி தேசத்து எல்லையிலுள்ள காகஸஸ் போர் முனைக்கு அனுப்பினர்.

மிகுந்த அனுபோகமும் சாமர்த்தியமும் பெற்றவரும், நேரு நதிச் சண்டைகளில் கீர்த்தி பெற்றவருமான ஜெனரல் அலக்ஸீப் ருஷிய சக்கரவர்த்திக்கு உதவியாக இருந்து கிழக்கரங்கத்திலுள்ள ருஷியப் படைகளை யெல்லாம் நடத்தினர். அவ்வாறு சேனுதிபதி ஸ்தானத்தில் மாறுதல் ஏற்படவே ருஷியரின் ராணுவ தந்திரமும் கொள்கைகளையும் மாறுபட்டன. போர் முனையிலுள்ள முக்கிய ஸ்தலங்களை விடா முயற்சியுடன் கடைசிவரையில் காப்பதென்றும், தீராத நிர்ப்பந்தம் உண்டானுலொழிய ஒரு சாண் பூமியையும் கைவிடுவதில்லை யென்றும் ருஷிய சேனைத் தலைவர்கள் உறுதி கொண்டார்கள்.

ஜெர்மானியரின் ராணுவநோக்கம்.

ருஷிய சேனை முழுவதும் ஆகஸ்ட் 25-ந் தேதிக்குப் பிறகு மேற்சொல்லியவாறு கிழக்கே பின்வாங்கிச் சென்றது; அந்த சேனை வில்னு நகரத்துக்குத் தெற்கே வரிசையாய் காலிஷியாவில மாகாணம் வரையில் நிலைபெற்றதென்று ஏற்கெனவே வில்னு நகரத்துக்குத் தெற்கே ஒரு ரயில் பாதை வெகுதூரம் செல்வதை மேலே பிரசுரித்துள்ள படத்தில் கவனிக்க வேண்டும். அந்த ரயில் பாதை தெற்கு முகமாய்ச் சென்று காலிஷியா மாகாணத்துக்குக் கிழக்கிலுள்ள ரோவ்னே நகரம் வரையில் செல்கிறது. இந்த நீளமான ரயில் பாதைக்கு மேற்கில், அந்தரயில்பாதைநெடுக, ருஷியப் படைகளெல்லாம் வரிசையாய் நிலைபெற்றன. வில்னுநகரத்துக்கு வடபுறத்தில் இந்த ருஷியப் போர்முனையானது அந்த நகரத்திலிருந்து ரீகா நகரம் வரையில் வியாபித்திருந்தது.

இப்போது நாம் ஜெர்மானியரின் நோக்கம் இன்ன தென்பதை அறிந்து கொள்ள வேண்டும். ஜெர்மானியர்

ருஷிய சேனையை விஸ்டுலா நதிக் கரையிலிருந்து சுமார் 300 மைல் கிழக்கே பின் தள்ளிக் கொண்டே செல்வதின் கருத்து என்ன? அவ்வாறு ருஷிய சேனையை எவ்வளவு தூரம் எவ்வளவு மாதகாலம் பின் தள்ளிக்கொண்டே போவது? ஜெர்மானியர் வலுவான நதிப் பிரதேசத்தில் நிலைபெற்றிருக்க வேண்டுமென்று நோக்கங் கொண்டிருந்தால், அவர்கள் விஸ்டுலா நதியைப்பிடித்தபோது அங்கு தங்கிவிடலாம்; ஆனால் அவர்கள் அப்படிச் செய்யவில்லை; இன்னமும் முன்சென்று பக் நதிக்கரை நெடுக வசப்படுத்திக் கொண்டார்கள்; அந்த நதிக் கரையிலும் அவர்கள் தங்கி நிற்காமல் இன்னமும் முன்சென்றுகொண்டேயிருந்தார்கள். அவர்கள் ஏதாவதொரு பிரதான நோக்கத்தைக் கொள்ளாமல் அவ்வாறு முன்செல்லமாட்டார்களாகையால், அந்த நோக்கம் என்ன என்பதை விசாரிப்போம்.

சில யுத்த நிருபர்கள் ஜெர்மானியரின் நோக்கம் பீட்ரோகிராட் நகரத்தைப் பிடிப்பதென்றும், வேறு சிலநிருபர்கள், கீப் நகரத்தைப் பிடிப்பதென்றும்பலவிதமாய்ச் சொன்னார்கள். ஆனால் அவர்களுடைய நோக்கம், ருஷிய ஏகாதிபத்தியத்தின் தலைமை ஸ்தலமும் மிகப் பெரிய ராணுவ ஸ்தலமுமாகிய பீட்ரோகிராட் நகரத்தைப் பிடிப்பதல்ல; அந்த ஏகாதிபத்தியத்தின் முற்காலத்துத் தலைமை ஸ்தலமும் புராதன பட்டணமுமாகிய கீப் நகரத்தைப் பிடிப்பதுமல்ல. அவர்களுடைய எண்ணம் சாமன்ய ஜனங்களின் மனதைக் கவரக்கூடிய அப்படிப் பட்ட பகட்டான காரியத்தைச் செய்ய உத்தேசிக்கவில்லை. ராணுவ தந்திரிகளின் மனதைக் கவரக்கூடிய ஒரு ரயில் பாதையை வசப்படுத்திக் கொள்வதே அவர்களுடைய முக்கிய நோக்கம். வில்னா நகரத்திலிருந்து தெற்கு திசையில் சுமார் 300 மைல் நீளத்துக்கு ரோவ்னோ நகரம் வரையில் செல்கிற ரயில் பாதையைப் பிடிப்பதாகும். அந்த ரயில் பாதையில் வடக்கிலிருந்து தெற்கு வரையில் வரிசையாயுள்ள நகரங்கள், வில்னா, லிடா, பாரனாவிட்சி, லுனினட்ஸ், ஸார்னி, ரோவ்னோ. [இந்த நகரங்கள் ரயில் பாதையின் மேலிருப்பதை மேலேயுள்ள படத்தில் காணலாம்.) இந்த ரயில் பாதையில் இரண்டு பெரிய விசேஷங்க ளிருக்கின்றன. முதலாவது, அந்த பாதை வடக்கு தெற்காக ஒரே தொடர்ச்சியா யிருப்பதால் அதே வரிசையில் நிலைபெற்றுச் சண்டை செய்கின்ற சேனைக்கு அபாரமான வன்மை உண்டாகும்.

அந்த ரயில்பாதையிலிருந்து அந்த சேனைக்கு எவ்வித சௌகரியங்களும் எளிதாயும் சீக்கிரமாயும் போர்முனை நெடுகவே கிடைக்கும்படி செய்ய முடியும். மற்றொரு விசேஷந் தான் இன்னும் முக்கியமாய்க் கவனிக்கத் தக்கது. பாரனாவிட்சி, சார்னி இவ்விரு நகரங்களுக்கும் இடையிலுள்ள ரயில்பாதையை, ஜெர்மானியர் பிடித்துக் கொண்டால் ருஷியப் போர்முனையானது வடபாதிக்கும் தென்பாதிக்கும் சப்பந்தமற்றுப் போய் இரண்டாகப் பிரிந்துவிடும் ஏனெனில், அவ்விரண்டு நகரங்களுக்கும் கிழக்கே சுமார் 180 மைல் தூரத்துக்குவரிகளும் சேற்றுநிலங்களும நிரம்பிய பிரதேசம் வியாபித்திருக்கிறது. அந்த நிர்மானுஷ்யமான வனாந்தரத்தில படைக் கூட்டங்கள் நிலைபெற்று சண்டை செய்வதென்பது நினைக்கக்கூடாத காரியம். அப்படிப் பட்ட பிரதேசத்துக்குக் குறுக்கே, இரண்டொரு பெரிய பாதைகளே இருக்கின்றன. அந்த பாரனாவிட்சி, சார்னி இவ்விரு நகரங்களுக்குமிடையிலுள்ள ரயில் பாதையைத்தவிர, தெற்கு வடக்காய்ச் செல்லுகிற வேறு ரயில் பாதையே இல்லை. ஆனகயால் அந்த சேற்று பூமிக்கு வடக்கிலுள்ள ருஷியப்படைகளும அந்த பூமிக்குத் தெற்கிலுள்ள

ருஷியப் படைகளும் மேற்சொல்லிய ஒரு ரயில் பாதையால் சேர்க்கப்பட்டிருக்கலாம். அந்த ரயில்பாதையை ருஷியர் இழந்து விட்டு கிழக்கு திசையில் பின்வாங்கினல், பிறகு அந்த செற்று பூமிக்குவடக்கிலும், தெற்கிலுமுள்ள ருஷியப்படைகள் எவ்வித சம்பந்தமுமில்லாமல் பிரிந்திருக்க வேண்டியது தான். மேற்சொல்லியரயில்பாதைக்குக் கிழக்கே சுமார் 300 மைலுக் கப்பால் தான் தெற்குவடக்காக ஒருரயில்பாதை செல்கிறது. ஆகையால் ஜெர்மானியர் வில்னு நகரத்துக்குத் தெற்கே செல்கிற அந்த ரயில்பாதை முழுவதையும் பிடித்து ருஷிய சேனையை இரு துண்டாகப் பிரித்து வைக்கவேண்டுமென்று நோக்கங் கொண்டார்கள். இனி அங்கு நடந்த யுத்த நடவடிக்கைகளைப் பற்றிச் சொல்வோம்.

## வில்னு சண்டை.

ஆகஸ்ட் மாதக் கடைசியிலும் செப்டம்பர் மாத ஆரம்பத்திலும் கிழக்க ரங்கத்துப் போர்முனை எவ்வாறிருந்த தென்று 118-ம்பக்கத்திலுள்ள படத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த படத்தில் கறுப்பும் வெளுப்புமா புள்ள கோடு அந்த போர்முனையைக் குறிக்கிறது. வில்னுக்கு வடக்கே அந்தப் போர்முனை நீகா நகரம் வரையில் வியாபித்திருந்ததை கறுப்புக் கோடு காண்பிக்கின்றது.

ருஷியப் படைகள் துணைத் துருப்புகளைப் பெற்று அந்தப் போர்முனை நெடுக மிக்க பிடிவாதத்துடன் சண்டை செய்தன. ஜெர்மானியர் வில்னு நகரத்துக்குத் தெற்கே செல்கிற நீண்ட ரயில்பாதையை அணுகி அப்பாதை நெடுக மிக்க உக்கிரமாய்ச் சண்டை செய்தும் மிகவும் மெதுவாகத்தான் முன்செல்லச் சாத்தியப்பட்டது. ஏனெனில், வில்னுவையும் ரயில் பாதையையும் கடைசி வரையில் காப்பதாக ருஷியர் உறுதி கொண்டனர். அப்பாதை நெடுக ருஷியப் படைகள் ஏராளமாய்த் திரட்டப்பட்டிருந்தன. ருஷியஜனங்களால் தெய்வமெனக் கொண்டாடப்படும் ருஷிய சக்கரவர்த்தியே போர்முனைக்கு வந்திருக்க, அவருடைய பார்வையின் கீழ் ருஷியத் துருப்புகளெல்லாம் அளவு கடந்த நூதன உற்சாகமும் மனவெழுச்சியுமடைந்தனர், அப்படிப்பட்ட மனோவேகங் கொண்ட துருப்புகள் ஜெனரல் அலக்ஸீவைப் போன்ற கீர்த்தி பெற்ற தளகர்த்தர்களால் நடத்தப்பட்டபோது, அவர்கள் சண்டைகளில் காட்டின பிடிவாதமும் உக்கிரமும் சாமான்யமல்ல. ஜெர்மன் படைக் கூட்டமொன்று விடா நகரத்தை நோக்கிச் சென்றது; மற்றொரு கூட்டம் பாரனுவிட்சி நகரத்தை நோக்கிச் சென்றது; மற்றொன்று பின்ஸ்க் நகரத்தை நோக்கிச் சென்றது. ஆபினும் அப்படைக் கூட்டங்களின் முன்னேற்றம் மெதுவாயிருந்ததுபற்றி ஜெர்மானியர் வேறொரு உபாயத்தை அனுசரித்தார்கள்.

அடுத்தபக்கத்திலுள்ளபடம், பால்டிக்மாகாணத்தில் நடந்த யுத்தவிவரங்களைக் காண்பிக்கிறது. ஆரம்பத்திலிருந்த போர்முனை கறுப்புக்கோட்டால் காண்பிக்கப்பட்டிருக்கிறது. பிறகு அந்தப் போர்முனையில் ஜெர்மானியர் சண்டைசெய்து முன்னேறிச்சென்ற போர்முனை கறுப்பும் வெளுப்புமாயுள்ள கோடு குறிக்கின்றது. இனி சொல்லப்படும் விவரங்களைப் படிக்கும்போது, ஜெர்மானியர் கறுப்புக்கோட்டால் குறிக்கப்பட்டுள்ள போர்முனையி லிருந்துகொண்டு சண்டை செய்து எவ்வாறு புதிய போர்முனைக்கு வந்தார்களென்பதை கவனிக்கலாம்.




**டுவைனு நதியைத் தாக்குதல்.**

ஜெனரல் ஹிண்டன்பர்க் தமக்குள்ள விசேஷ சாமர்த்தியங் கொண்டு பற்பல திசைகளில் மின்னல் போன்ற விரைவுடன் தாக்கி வில்னு நகரத்தை விழச் செய்வதாக உத்தேசித்தார். அந்த நோக்கத்துடன் அவர் பால்டிக் மாகாணத்தில் (அதாவது, வில்னு நகரத்துக்கு வடபுறத்தில்) பானிவேஷ் நகரத்துக் கருகில் அநேக ஜெர்மன் படைகளைத் திரட்டினர்; அவர் ரீகா, டுவின்ஸ்க் இவ்விரு நகரங்களுக்கு இடையிலுள்ள பிரதேசத்தை நோக்கித் தாக்கினர். அவ்விரண்டு நகரங்களுக்கும் இடையிலுள்ள டுவைனு நதிக் கரையை நெருங்கினர்; அந்நதிக் கரையிலிருந்த பாலங்களை ருஷியர் உடைத்துவிட்டு அந்நதிக் கப்பால் சென்றார்கள். செப்டம்பர் 8-ந் தேதி அந்நதிக்கரையிலுள்ள சிலநகரங்களுக் கருகில் ஜெர்மானியர் சென்றனர். ஜெர்மானியரைப் பின்தள்ளும் பொருட்டு அந்நகரங்களில் அநேக ருஷியப்படைகள் வந்து தாக்கின. அவ்வாறு மற்றப் போர்முனையிலிருந்த ருஷியப் படைகளிற் சில, ரீகா பிரதேசத்துக்கருகில் இழுத்துக்கொள்ளப்பட்டன. ஜெர்மானியர் டுவைனு நதியைக்கடந்துவிடாதபடி தடுப்பதற்கு அந்த ருஷியப் படைகள் பெருமுயற்சி செய்தன. அந்த ருஷியப்படைகள் ஜெர்மானியரை அந்நதிக் கப்பால் சிறிது தூரம் பின்தள்ளின.

பால்டிக் மாகாணத்தில் அதே சமயத்தில் மற்றொரு திசையில் ஜெனரல் ஹிண்டன்பர்க், வேறுபல ஜெர்மன் படைகளை ஏவினர். மறுபடியும் அநேக படைகள் பானிவேஷ் நகரத்துக் கருகில் கூட்டப்பட்டன. அவருடைய நோக்கம் என்னவென்றால், வில்னுவுக்கும் டுவின்ஸ்க் நகரத்துக்கும் இடையிலுள்ள ரயில் பாதையைப் பிடிக்க

வேண்டுமென்பது. அந்த முக்கியமான ரயில்பாதை பீட்ரோகிராட் நகரத்திலிருந்து வருகிறதென்பதைக் கவனிக்கவும். அவர் அந்த ஜெர்மன் படைகளை பானிவேஷ் நகரத்திலிருந்து தென்கிழக்கே ஸ்வன்ஸியானி நகரத்துக்குச் செல்கிற ரயில்பாதை வழியாய்ச் செலுத்தினர். அந்தபடைகள் சென்ற விசையும் வேகமும் பிரமிக்கத் தக்கதாயிருந்தன. அந்த படைகள் அநேகமாய்க் குதிரைப் படைகளாயிருந்தன. சுமார் 1 லக்ஷம் குதிரைகள் அவ்வாறு விரைவாய்ப் புறப்பட்டன. அநேக காலாட் படைகளும் பீரங்கிப் படைகளும் மற்ற தளவாடங்களும் சாமான்களும் ஏராளமான மோட்டார் வண்டிகளில் விரைவாய்க் கொண்டுபோகப்பட்டன. செப்டம்பர் 11-தேதி பானிவேஷ் நகரத்திலிருந்து புறப்பட்ட குதிரைப் படைகள், மறுதினமே உட்ஸியானி நகரத்தைப் பிடித்துக்கொண்டன. அதற்கு மறுதினம் (அதாவது 13-ந் தேதி) ஸ்வன்ஸியானி நகரத்து ரயில்வே ஸ்டேஷனைப் பிடித்துக்கொண்டன. அவ்வாறு ஜெர்மானியர் இரண்டு தினங்களில் 70 மைல் தூரம் சென்று அந்த பெரிய ரயில்பாதையை வசப்படுத்திக் கொண்டார்கள். 16-ந் தேதி அந்த ஜெர்மன் குதிரைப் படைகள் வில்னுவுக்கும், மலடச்னு நகரத்துக்கும் இடையிலுள்ள ரயில்பாதையை அநேக இடங்களில் பிடித்துக் கொண்டன.

## வில்னு பிடிபட்டது.

வில்னு நகரத்திலும் அதற்குத்தெற்கிலுமிருந்த ருஷியப் படைகள் ஆபத்தான நிலைமையிலிருந்தன. அந்தநகரம் எவ்வாறு மூன்று பக்கங்களிலும் சூழ்ந்து கொள்ளப்பட்டதென்று முந்தின பக்கத்திலுள்ள படத்தில் காணலாம். வில்னுவுக்குவடக்கேசிலஜெர்மன் படைகள்ஏற்கெனவேதாக்கிக்கொண்டிருந்தன. வில்னுவுக்குத் தென்கிழக்கே ஜெர்மன் குதிரைப்படைகள் மலடச்னு வரையில் தாக்கிக் கொண்டிருந்தன. வில்னுவுக்குத் தெற்கே லிடா நகரம் வரையில் பலஜெர்மன் படைகள் தாக்கிக் கொண்டிருந்தன. ஆகையால் ருஷியர் முக்கியஸ்தலமாகிய வில்னுவை தாமஸமின்றிக் கைவிடும்படியாயிற்று. பேர் பெற்ற ருஷிய தளகர்த்தராகிய ஜெனரல் இவாட், வில்னு பிரதேசத்திலிருந்தருஷியப்படைகளுக்குத்தலைமை வகித்திருந்தார் செப்டம்பர் 19ந் தேதி அவர் மூன்று பக்கங்களிலும் சூழ்ந்து கொள்ளப்பட்டிருந்த போதிலும் மிகவும் துணிகரமாய்த் தப்பிச் செல்லுவதாக நிச்சயித்தார். அவர் தம்மிடமிருந்த ருஷியப் படைகளின் பெரும் பாகத்தையும் மலடச்னு நகரத்துக் கருகில் குவித்து, அங்கிருந்த சொற்ப ஜெர்மன் குதிரைகளை அப்புறப் படுத்தினர். மலடச்னு நகரம் ரயில்வே ஜங்க்ஷனாக இருக்கிறது. அந்த ரயில் பாதைகளின் உபயோகத்தால் வில்னுவில் சிக்கிக் கொண்ட ருஷியப் படைகள் தப்பித்துக்கொண்டு சென்றன. இதற்குள்ளாக ஜெர்மானியர் வேறு திசையில் முன்னேறி, டுவின்ஸ்க் நகரத்துக் கருகில் சென்று விட்டார்கள். அதனால் ருஷியசேனை முழுவதும் பின் வாங்கி டுவின்ஸ்க் நகரத்துத் தெற்கே வரிசையாக நிலைபெறவேண்டியிருந்தது.

மேற் சொல்லியவாறு அமைக்கப்பட்டிருந்த போர்முனை அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் கறுப்பும் வெளுப்புமாயுள்ள கோட்டால் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்தப் போர்முனையானது இன்றுவரையில் அதிக மாறுதலின்றி அதேவிதமாய் இருந்து வருகிறது. அந்தப் போர்முனையில் ஜெர்மானியர் அரண்களைக் கட்டி நிரந்தரமாய் இருப்பதற்குவேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். அந்த போர்முனையைப்பற்றி விவரங்கள் இனிமேல் சொல்லப்படும். தவிர, அடுத்த பக்கத்திலுள்ள படத்தில் காணப்படுகிற கறுப்புக்கோடு முன்பிருந்த போர்முனையைக் குறிக்கின்றது; அதாவது, ஜெர்மானியர் வார்ஸா நகரத்தைப் பிடிப்பதற்கு முன்னலிருந்த போர்முனையை அந்தக் கறுப்பு கோடு காண்பிக்கிறது.




ஜெர்மானியர் வில்னுவிலிருந்து தெற்கே பாரனுவிட்சி நகரம் வரையிலுள்ள ரயில் பாதையை வசப்படுத்திக்கொண்டார்கள்.

பாரனு விட்சி நகரத்துக்குத் தெற்கே ரோவ்னே நகரம் வரையில் செல்கிற ரயில்பாதையைப் பிடிக்கவேண்டுமென்று ஜெர்மானியர் செய்த முயற்சி பலிக்கவில்லை. பாரனு விட்சிக்குத் தெற்கே அந்த ரயில்பாதையில் மூன்று ஜங்க்ஷன்கள் இருக்கின்றன. அவைகள், லுனினட்ஸ், ஸார்னி, ரோவ்னே. லுனினட்ஸ் நகரத்துக்குச் சற்று மேற்கே பின்ஸ்க் நகரம் வரையில்தான் ஜெர்மானியர் முன் செல்லச் சாத்தியப்பட்டது. கோவல் நகரத்திலிருந்து புறப்பட்ட ஜெர்மன் படைகள் ஸார்னி நகரம் வரையில் முன் செல்ல முடியாமல், ஸ்டர் நதிக்கரையோடு நின்றுவிட்டன. கோவல் நகரத்திலிருந்து தென் கிழக்கே ரோவ்னே நகரத்தை நோக்கிச் சென்ற ஜெர்மன் படைகள், ரோவ்னேவுக்கு மேற்கிலேயே நின்றுவிடும்படி யாயிற்று. ரோவ்னேவுக்கு மேற்கிலுள்ள லட்ஸ் கோட்டைகளையும், டப்னே கோட்டைகளையும் செப்டம்பர் 7–ந் தேதிக்குள் பிடித்தார்கள். கடுமையான பனிகாலம் நெருங்கிவிட்டதால், மேற் சொல்லிய யுத்த நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்ளும்படி யாயிற்று. காலிஷியா மாகாணத்தில் லெம்பர்க்நகரத்துக்குக் கிழக்கிலும் ஸ்டர் நதிக்கரையிலும் ஜெர்மானியர் சிறிது முன்சென்றார்கள்.

1915–ம் வருஷ அக்டோபர் மாதம் 1–ந் தேதியில் மேற் சொல்லிய விவரங்களின்படி ருஷியசேனையானது ரீகாவிலிருந்து டிவின்ஸ்க் வரையிலும் டிவின்ஸ் நகரத்துக்கு நேர்தெற்கே ரொமேனிய தேசத்து எல்லை வரையிலும் புதிய போர் முனையில் நிலைபெற்றது. ஆஸ்டிரிய ஜெர்மன்சேனைகளும் ருஷிய சேனைக்கு எதிரே அதே வரிசையில் நிலைபெற்றன. ஜெர்மானியர் அந்த வரிசையிலிருந்து ருஷியரால் எளிதாய்ப் பின்தள்ளப்படாமலிருப்பதற்காக வலுவான அரண்களைக் கட்டினார்கள். ஜெர்மானியர் மேற்கரங்கத்தில் செய்ததுபோல, கிழக்கரங்கத்திலும், அபாரமான வன்மை கொண்ட அரண்களை போர் முனையெங்கும் விஸ்தாரமாய்க் கட்டி ஸ்திரமாய் ஊன்றி யிருப்பதற்கு சகல ஏற்பாடுகளையும் செய்து முடித்தார்கள்.

**கிழக்கரங்கத்தில் யுத்தத்தின் பலன்கள்.**

அவ்வாறு 1915-ம் வருஷத்தில் மே மாதத்திலிருந்து மிகப் பிரமாதமான யுத்தத்தை நடத்தி ஆஸ்டிரிய மாகாணமாகிய காலிஷியாவை ருஷியரிடமிருந்து மீட்டுக் கொண்டதோடு, ருஷிய மாகாணமாகிய போலண்டுக்கு சுய ஆட்சி தங்களால் கொடுக்கப்படவேண்டுமென்று ஜெர்மானியர் விரும்பி அந்த மாகாணத்தையும் இப்போது வசப்படுத்திக் கொண்டார்கள். மற்றொரு ருஷிய மாகாணமாகிய பால்டிக் பிரதேசத்தையும் வசப்படுத்திக் கொண்டார்கள். ஜெர்மானியர் யுத்தம் ஆரம்பித்த உடனே பூரண ராணுவபலம் பெற்றுத் தாக்குவார்களென்றும் அதன் பிறகு அவர்களுடைய ராணுவ பலம் நாளுக்குநாள் குறையத் தொடங்குமென்றும் ஒரு பொதுவான அபிப்பிராயம் இருந்து வந்தது. ஆனால் இந்த யுத்தத்தின் அனுபோகமோ அதற்கு நேர்மாறாயிருக்கிறது. யுத்தம் ஆரம்பித்து ஒரு வருஷம் முடிவாகிற சமயத்தில்தான் ஜெர்மானியரின் சேனுபலம் பிரமாதமாயிருந்தது. அவர்கள் அவ்வாறு கிழக்கரங்கத்தில் பூரண ராணுவபலத்தையும் சேகரித்து மே மாதத்திலிருந்து செப்டம்பர் மாதம் முடிய 5-மாத காலமாக பிரதிதினமும் ஆயிரக்கணக்கான பீரங்கிகளையும் கோடிக் கணக்கான குண்டுகளையும் உபயோகித்து ஓயாமற் போர் புரிந்து ருஷிய சேனையை இடைவிடாமல் பின் தள்ளினார்களென்றால், ஜெர்மன் ராணுவத்தின் கட்டுப்பாடும் நிர்வாகத் திறமையும் தளவாட ஏற்பாடுகளும் எப்படிப்பட்டவை என்பது விளங்கும். ஆனால் அவர்கள் ருஷியரைப் பின்தள்ளினதில் என்ன முடிவான பலனை அடைந்தார்கள்? எல்லா

யுத்த நடவடிக்கைகளின் பிரதான நோக்கமானது, எதிரிகளின் சேனு பலத்தை அழிப்பதாகும். அதுவே எல்லா ராணுவ தந்திரத்தின் முடிவான கருத்தாகும்.

ஆனால் 1915-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் ருஷிய சேனையானது ராணுவக்கட்டும் போர் வலிமையும் குறையாமல் கிழக்கரங்கம் நெடுக சுமார் 700 மைல் நீளத்துக்கு அணி வகுத்து நின்றது. ஆகையால் ஜெர்மானியர் ருஷிய சேனையை அழிக்க முடியவில்லை. ஆகையால் யுத்தத்தின் முடிவான பலனை அவர்கள் அடைய வில்லை என்று சொல்லலாம். ஆனால் நூதன காலத்து சாஸ்திர முறைகளின்படி சிருஷ்டிக்கப்பட்ட சேனையானது எவ்விதத்தாலும் அழிக்கமுடியாத கட்டும வன்மையும் பெற்றிருக்கின்றது. தற்காலத்து சாஸ்திரமுறையை அனுசரித்து நூதன காலத்து ஏற்பாடுகளையும் ஒழுங்குகளையும் கட்டுப்பாட்டையும் பெற்ற சேனையை இந்த காலத்தில் அழித்து விடுவதென்பது சாத்தியமில்லையென்றே நினைக்க வேண்டும். ஆகையால் வில்னுவிலிருந்து பாரனு விட்சிவரையிலுள்ள ரயில் பாதையை வசப்படுத்திக் கொண்டது தான் அவர்கள் அடைந்த சாதகம். தவிர, முன்பு சுமார் 1000 மைல் நீளமிருந்த கிழக்கரங்கத்துப் போர் முனை 700 மைல் நீளமாகக் குறைந்திருக்கிறதும் ஜெர்மனியருக்குச் சாதகமாகும். அந்த போர்முனை, முன்பு போலண்ட் மாகாணத்தைச் சுற்றிலும் வளைவாயிருந்தபடியால் அதிக நீளமிருந்தது. அக்டோபர் மாதத்தில், அந்தப் போர் முனை ரீகா, டுவின்ஸ்க் இந்நகரங்களின் வழியாய் நேர் ஒழுங்காக இருந்ததால் அதன் நீளம் குறைந்திருக்கிறது. இந்த விஷயத்தை 126-ம் பக்கத்திலுள்ள படத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

தவிர, முன்பு போலண்டில் ருஷியப் போர்முனை பெற்றிருந்த அபாரமான வன்மையைப்போல, புதிய ருஷியப் போர் முனை பெற்றிருக்கவில்லை. சமாதான காலத்திலேயே, ருஷிய ஏகாதிபத்தியத்தின் மேற்கு எல்லைப் புறமாகிய போலண்ட் மாகாணத்தைச் சுற்றிலும் அங்கு இயற்கை யமைப்பின் அற்புதமான வன்மை யெல்லாம், ராணுவத் தேவைகளுக்கு உதவுமாறு மனித புத்தியாலும் சாஸ்திர யுக்தியாலும் திருத்திவைக்கப்பட்டிருந்தது. போலண்டில், நதிப் பிரதேசங்களின் காவல்கள் ஒன்றன்பின் ஒன்றாய்ப் போர்முனை நெடுக அமைந்திருந்ததோடு, அந்நதிக்கரைகளில் முன்னதாகவே கட்டப்பட்டிருந்த பிரபலமான கோட்டைகளும், சௌகரியமாகப் பின்னிவைக்கப்பட்டிருந்த ரயில் பாதைகளும் இருந்தன. போலண்டின் மீது தொடங்கப்பட்ட ஜெர்மானியரின் படையெடுப்புகள் சமுத்திர அலைகள்போல மேன்மேலும் வந்து ருஷியப் போர்முனையின்மேல் மோதி பல தடவைகளில் பின்புறம் புரண்டோடினதைப் பார்த்தால், அந்த ருஷியப் போர்முனையின் வன்மை சாமான்யமானதென்று சொல்வதற்கில்லை. அப்படிப்பட்ட சாதகங்கள் புதிய ருஷியப் போர்முனையில் இல்லை.

ஆனால் ருஷியர் தங்கள் சேனையின் கட்டு குலையாமற் காத்ததோடு, பாரனு விட்சி நகரத்துக்குத் தெற்கிலுள்ள ரயில் பாதையையுங் காத்தார்கள். அதனால் அந்த ருஷியப் போர்முனையின் வடபாகத்துப் படைகளும் தென்பாகத்துப் படைகளும் பிரிந்து போகாமல் இருந்தன. பாரனு விட்சி நகரத்திலிருந்து சார்னி நகரம் வரையிலுள்ள ரயில் பாதைக்குக் கிழக்கே சுமார் 180 மைல் நீளத்துக்கு விசாலமான வனாந்தரம் இருக்கின்றது. அந்த அபாயகரமான பிரதேசத்தை, தெற்கு வடக்காய்க் கடப்பதற்கு அந்த ரயில்பாதையொன்றே இருக்கிறது; அது தவறினால், அதற்கு 300 மைல் கிழக்கில் தான் மற்றொரு ரயில்பாதை தெற்கு

வடக்காய் செல்கிறது. ஆகையால் ருஷியர் பாரனுவிட்சிக்கும் சார்னிக்கும் இடையிலுள்ள ரயில்பாதையை தங்கள் வசத்தில் வைத்துக்கொண்டது பெரிய சாதகமாகக் கருதவேண்டும். அந்த ரயில்பாதை அந்தவனுந்தரப்பிரதேசத்துக்கு வடக்கிலுள்ள ரயில் பாதையுடன் பாரனு விட்சி நகரத்தில் சந்திக்கின்றது. அந்த வனுந்தரத்துக்குத் தெற்கிலுள்ள ரயில்பாதையுடன் ஸார்னி நகரத்தில் சந்திக்கிறது. ஆனல் பாரனுவிட்சி நகரத்தை ஜெர்மானியர் வசப்படுத்திக் கொண்டதால், அந்த ரயில் பாதையானது அந்த வனுந்தரப் பிரதேசத்துக்கு வடக்கில் செல்லக் கூடாமல் தடைப்பட்டிருக்கிறது.

ஜெர்மானியரைப்போல ருஷியரும் ஏராளமான பீரங்கிகளைப் பெறவேண்டும் என்று தீர்மானித்தார்கள். ஜெர்மானியர் தங்களுடைய பீரங்கியின் பலத்தைக் காண்பித்து காலிஷியா மாகாணத்தைமீட்டுக்கொண்டஉடனே ருஷியர் அம்மாதிரியான பலத்தைப் பெற்றாலொழிய யுத்தத்தை வெற்றியுடன் முடிக்க முடியாதென்று அறிந்தார்கள். ருஷிய ஜனங்களும் அந்த அவசியத்தை உணர்ந்து ஏராளமான தள வாடங்களைச் செய்ய முன்வந்தார்கள். ராஜவம்சத்தைச் சேர்ந்த ஒரு சேனுதிபதிக்குப் பதிலாக ஜனுபிமானிகளென்று பேர்பெற்ற ருஷிய சக்கரவர்த்தியும் ஜெனரல் அலக்ஸீப் போன்ற சேனைத்தலைவர்களும் ருஷிய சேனையை போர்களத்தில் செலுத்தினார்கள்: அதனுல் ருஷிய ஏகாதிபத்திபத்திலுள்ள பொதுஜனங்கள் ராணுவத்திலும் யுத்த நடவடிக்கைகளிலும் அளவிறந்த அக்கரையும் அபிமானமுங்காட்டி தேசகைங்கரியங்களைச் செய்ய உற்சாகமாய் முன்வந்தார்கள். ஜெர்மானியர் தாங்கள் ஐந்து மாதகாலம் ருஷியசேனையை ஓயாமற் பின்தள்ளியதால், ருஷியசேனை இன்னும் ஒருவருஷகாலத்துக்குத் தன் பழைய பலத்தை பெறுதென்று பெருமை பேசினர்கள். ஜெர்மானியர் அந்த் நம்பிக்கையோடு கூட, தங்களுடைய வலுவான அரண்களிலும் அவைகளிலுள்ள மெஷின் பீரங்கிகளிலும் அவைகளுக்கு முன்னுள்ள இரும்புக்கம்பி வலைகளிலும் நம்பிக்கைவைத்து, ருஷிய சேனையை 1916-ம் வருஷம் முழுவதும் அடக்கி வைக்கலா மென்று நினைக்கிறார்கள், ஆனல் ருஷிய சேனையோ நாளுக்கு நாள் புதிய துருப்புகளையும் பீரங்கிகளையும் குண்டுகளையும் பெற்று வருகிறது. ருஷிய சேனை இப்போது நூதனமாகவே சிருஷ்டிக்கப்பட்டு வருகிறதென்றும் சொல்லப்படுகிறது. ருஷ்யர் ஜெர்மானியரின் அரண்களைப் பிளந்துகொண்டு முன்செல்லும் போது தான் அதன் அபாரமான வன்மை வெளிப்படும்.

---

## ஸெர்வியாவின்மீது படையெடுப்பு.

1915-ம் வருஷத்தில் ஜெர்மானியர் இரண்டு பெரிய காரியங்களைச் செய்தனர்; முதலாவது கிழக்கரங்கத்தில் அவர்கள் ருஷிய மாகாணமாகிய போலண்டிலிருந்து ரீகா நகரத்துக்குத் தெற்காயுள்ள போர்முனை வரையிலும் ருஷிய சேனையைப் பின் தள்ளி அந்த மாகாணத்தை வசப்படுத்திக் கொண்டனா. இதைப்பற்றி சொல்லிவிட்டோம். இரண்டாவது, ஜெர்மானியர் ஸெர்வியா தேசத்தின் மீது படையெடுத்து அத்தேசத்தை வசப்படுத்திக்கொண்டனர். கிழக்கரங்கத்தில் அக்டோபர் மாதத்தில் பனிகாலம் ஆரம்பித்துவிட்டபோது யுத்த நடவடிக்கைகள் நிறுத்தப்படவேண்டி வந்தன; உடனே அந்த மாதத்தில் ஜெர்மானியர் ஸெர்வியாவின் மீது படை யெடுக்க ஆரம்பித்து விட்டனர்.

முக்கியமான காரணங்கள்.

ஸெர்வியாவின் மீது படை யெடுக்கும் யோசனையை ஜெர்மானியர் செய்ததற்குச் சில காரணங்கள் இருக்கின்றன. முதலாவது, துருக்கியர் நேசக்கக்ஷியால் வெகு கடுமையாய் நெருக்கப்பட்டு வந்தனர். டார்டனல்ஸ் பிரதேசத்தில் பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் அதிக விஸ்தாரமாய்ப் பரவி நின்று மிகவும் உக்கிரமாய்த் தாக்கிக்கொண்டிருந்தன. காகஸஸ் பிரதேசத்தில் ருஷியப்படைகள் முன் சென்று கொண்டிருந்தன. மெஸபொடோமியா பிரதேசத்தில் பிரிட்டிஷ் படைகளும் இந்தியப்படைகளும் துருக்கியரைப் பின் தள்ளிக்கொண்டு சென்றன. ஆகையால் துருக்கியருக்கு எதிர்பாராத ஆபத்து நேரிடாம லிருப்பதற்காக அவர்களுக்கு ஜெர்மானியர் போதுமான பீரங்கிகளும் குண்டுகளும் மற்ற தளவாடங்களும் அனுப்பி உதவிசெய்வது அவசியமாகி விட்டது. அதனால் ஜெர்மானியர் துருக்கி தேசத்துடன் நேராகப் போக்கு வரத்து செய்ய நிச்சயித்தார்கள். அதற்காக ஸெர்வியாவின் மீது படையெடுக்க ஏற்பாடுகள் செய்தார்கள்.

இரண்டாவது காரணம், துருக்கியுடன் நேராகப் போக்குவரத்து ஏற்பட்டு விடுமானால், கீழ்த்திசையில் நேசக் கக்ஷியாருக்கு தொந்தரவு கொடுக்கலா மென்று ஜெர்மனியர் யோசனை செய்தார்கள். ஜெர்மானியர் துருக்கியிலிருந்து ஸூவெஸ்வாய்க்கால், ஈஜிப்ட், டிரிப்போலி, பெர்ஷியா முதலிய பிராந்தியங்களில் நேசக் கக்ஷிக்கு விரோதமான நடவடிக்கைகளைக் கிளப்பிவிடலாமென்று அவர்கள் நோக்கங் கொண்டனர். பால்கன் நாடுகளிலும், கீழ்த்திசையிலுள்ள பற்பல தேசங்களிலும் நேசக்கக்ஷியின் ராணுவ பலம் சிதறிக் கிடக்கும்படி செய்யலா மென்பதும் அவர்களுடைய உத்தேசம். அவ்வாறு செய்தால் ஜெர்மானியர் தங்களுடைய எல்லைகளை யொட்டியுள்ள கிழக்கரங்கத்திலும் மேற்கரங்கத்திலும் அதிகமாய் நெருக்கப்படாமலிருக்கலா மென்று நினைந்தார்கள்.

மூன்றாவது காரணம், நேசக்கக்ஷியின் கடலடைப்பால், ஜெர்மானியருக்குத் தேவையான பொருள் பண்டங்கள் கிடைக்காமலிருந்தன. அதனால் உணவுப் பொருள்கள் அரிதாகி விட்டதோடு, யுத்த தளவாடங்களைச் செய்வதற்கு அவசியமான பொருள்கள் இல்லாமையால் அளவற்ற கஷ்டங்களும் உண்டாகி விட்டன. இதை உத்தேசித்து, ஜெர்மானியர் தங்களுக்கு, பால்கன் நாடுகளிலும் துருக்கியிலும் போக்கு வரத்து ஏற்படுமானால் அங்குள்ள பொருள்களைச் சேகரித்து வைக்கலாமென்று எண்ணங் கொண்டார்கள்.

நான்காவது காரணம், இந்த மகா யுத்தத்துக்கு ஆதிகாரணமாகிய ஸெர்வியாவைத் தண்டிக்க வேண்டுமென்று ஜெர்மானியர் விரும்பினார்கள். ஸெர்வியாவை அடக்கிவைக்க வேண்டுமென்றே ஜெர்மானியரும் ஆஸ்டிரியரும் இந்த யுத்தத்தை ஆரம்பித்தார் களாகையால், யுத்தம் தொடங்கி ஒரு வருஷகாலம் கடந்த பிறகும் அவர்கள் ஸெர்வியாவைத் தண்டிக்க முடியாமலிருந்தது உலகத்தாருக்கு, தங்களைப்பற்றி இளப்பமான அபிப்பிராயத்தை உண்டு மென்று நினைந்தார்கள். அதனால் ஸெர்வியாவைப் போன்ற இதர பால்கன் நாடுகள் நேசக்கக்ஷிக்குச் சார்பான மனப்பான்மையைக் கொண்டு விடலாமென்றும் ஜெர்மானியர் அஞ்சினார்கள்.

ஆஸ்டிரியரின் ஆத்திரம்.

முக்கியமாய் ஆஸ்டிரியர்கள் தான் ஸெர்வியாவை அடக்கவேண்டுமென்று ஆத்திரங்கொண்டிருந்தார்கள். ஏனெனில் அவர்களுக்கும் ஸெர்வியாவுக்கும் ஆதியில் உண்டான விவகாரந்தான் இந்த மகா யுத்தத்தைக் கிளப்பியிருக்கிறது தவிர, ஆஸ்டிரியர் இந்த யுத்தம் ஆரம்பமானவுடன், ஸெர்வியாவின்

மீது படையெடுத்தார்கள். ஆனால், ருஷிய சேனை ஆஸ்டிரிய மாகாண மாகிய காலிஷியாவின் மீது விரைவாய்ப் படை யெடுத்துச் சென்றபடியால், ஸெர்வியாவுக்குள் சென்றிருந்த ஆஸ்டிரிய சேனையின் பெரும்பாகமும் ருஷியப்படைகளை எதிர்ப்பதற்காக விலகிச் சென்றது. அதனால் ஸெர்வியர்கள் ஆஸ்டிரியரைப் போர்க்களத்தில்முறியடித்துவெற்றி அடைந்தார்கள். பிறகு 1915-ம் வருஷ ஆரம்பத்தில் ஆஸ்டிரியர் மறுபடியும் ஸெர்வியாவின் மீது படையெடுத்தார்கள். ஆனால் இந்தத் தடவையும், ருஷியசேனை கார்ப்பேத்தியன் மலைகளில் வெற்றி அடைந்ததால், ஸெர்வியாவுக்குள் சென்றிருந்த ஆஸ்டிரியப் படைகளில் அநேகம் ருஷிய சேனையை எதிர்ப்பதற்காக அனுப்பப்பட்டன. ஸெர்வியர்கள் இரண்டாம் முறை வெற்றி அடைந்தனர். அவ்வாறு ஆஸ்டிரியர் மிகச்சிறிய நாடாகிய ஸெர்வியாவால் தோல்வியடைந்தபடியால், அவர்கள் தங்கள் கவுரத்தைக் காப்பதற்காகவாவது ஸெர்வியாவைத் தண்டிக்க வேண்டுமென்று உறுதி கொண்டார்கள். ஆகையால் அவர்கள் ஜெர்மானியரின் உதவியை நாடினார்கள். ஜெர்மானியரும் அதற்கிசைந்து கிழக்கரங்கத்து நடவடிக்கைகள் முடிந்தவுடன் ஸெர்வியாவில் யுத்தம் தொடங்கினார்கள். இதற்கு முன் ஆஸ்டிரியருக்கு இரண்டு முக்கியமான ஆபத்துக் காலத்தில் ஜெர்மானியர் உதவி செய்திருக்கிறார்கள். இந்த யுத்தம் தொடங்கின வுடன் ருஷிய சேனை ஆஸ்டிரியப் படைகளை முறியடித்து காலிஷியா மாகாணத்தை வசப்படுத்திக் கொண்ட போது, மேற்கரங்கத்தில் பாரிஸ் நகரத்தைப் பிடிபதற்காக அதற்கு அருகில் சென்றிருந்த ஜெர்மானிர் அந்நோக்கத்தைக் கைவிட்டு ஆஸ்டிரியருக்கு உதவி செய்ய வந்தார்கள். மறுபடியும், ருஷியர் கார்ப்பேத்தியன் மலைகளை வசப்படுத்திக் கொண்டு ஆஸ்டிரிய ஏகாதிபத்தியத்துக்குள் பிரவேசிக்கத் தயாராயிருந்தபோது, அதைத்தடுப்பதற்காக ஜெர்மானியர் ஏராளமான படைப்பலத்துடன் காலிஷியாவை மீட்டு ஆஸ்டிரியருக்கு உதவி புரிந்தார்கள். இப்போது ஸெர்வியாவின் மீது படையெடுப்பதற்காக ஜெர்மானியர் ஆஸ்டிரியருக்குத் துணை செய்ய முன்வந்தார்கள்.

### ஸெர்வியாவுக்கு நேசக்கக்ஷியின் உதவி.

ஆஸ்டிரியர் ஸெர்வியாவின் மீது இரண்டுமுறை படையெடுத்தபோது, ஏற்கெனவே பால்கன் யுத்தத்தில் மிகுந்த அநுபோகம் பெற்ற ஸெர்விய சேனை மிகச் சிறந்த வெற்றிகளைப் பெற்றது. ஸெர்விய சேனை புகழத்தக்க வெற்றிகளை அடைந்தபோதிலும், தற்கால நூதன யுத்த முறையாலும் இந்த மகாயுத்தத்தின் உக்கிரமான தன்மையாலும் ஆள்பலம் குறைந்து போன தோடு, பயங்கரமான சில தொத்து வியாதிகளாலும் பீடிக்கப்பட்டு அது மிகவும் மெலிவடைந்துவிட்டது. 1915-ம் வருஷத்தில் ஸெர்வியர்கள் நேசக்கக்ஷியின் சகாயத்தைக் கோரினதற்கிணங்கி, பிரஞ்சுக்காரரும் பிரிட்டிஷாரும் ஸெர்விய சேனையை வலுப்படுத்தவேண்டுமென்று விரும்பினார்கள். மேலும், ஆஸ்டிரியர் ஸெர்வியாவின் மீது படை யெடுக்கவேண்டுமென்ற உத்தேசத்தை அடுத்த சமயம் நேர்ந்த க்ஷணமே நிறைவேற்றத் தவறமாட்டார்களென்பதை நேசக்கக்ஷியார் அறிந்துகொண்டார்கள். இந்த காரணத்தை முன்னிட்டும், ஸெர்விய சேனையைத்திருத்தி அமைப்பதற்காக வெகு தீவிரமான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பிரஞ்சுக்காரரும் பிரிட்டிஷாரும் ஸெர்வியாவுக்கு அநேக பீரங்கிகளையும் குண்டுகளையும் மற்ற தளவாடங்களையும் உதவின தோடு, தேர்ச்சி பெற்ற இஞ்சினியர் முதலிய ராணுவ உத்தியோகஸ்தர்களையும் அனுப்பினார்கள். திடகாத்திர முள்ள ஒவ்வொரு ஸெர்வியப் பிரஜையும்

சேனையில் சேர்க்கப்பட்டு அவர்களுக்கெல்லாம் தேவையான துப்பாக்கி முதலிய ஆயுதங்களும் சேகரிக்கப்பட்டன 1915-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் ஸெர்விய சேனையில் சுமார் 4,50,000 துருப்புகள் (படைவீரர்கள்) இருந்தார்கள். அதைத் தவிர, ஸெர்வியர்களுக்கு உதவி செய்வதற்காக நேசக்கக்ஷியார் ஒரு பெரிய சேனையைத் தயார் செய்து கொண்டிருந்தார்கள்.

ஸெர்வியர்களுக்கு எவ்விதத்திலும் உதவி புரிய நேசக்கக்ஷியார் கடமைப்பட்டிருந்தனர். ஸெர்வியர்களின் சுயேச்சையைக் காப்பதற்காகவே நேசதேசங்கள் இந்த யுத்தம் செய்து வந்தன. தவிர, ஜெர்மானியர் பெல்ஜியத்தையாவரும் எதிர்பாராதவிதமாய் திடீரென்று தாக்கியதையும், அத்தேசத்தினரைப்படாதபாடு படுத்தியதையும் நேசக்கக்ஷியார் அனுபோகத்தில் அறிந்தவர்களானதால், ஸெர்வியர்களும் அந்த கதிக்கு உள்ளாகக்கூடாதென்று அவர்கள் தீர்மானித்துக்கொண்டார்கள். அதனால் ஸெர்வியாவுக்கு நேசப் படைகளை அனுப்புவதற்காக முன்னதாகவே யோசனை செய்யப்பட்டது. அந்த உத்தேசத்துடன், நேசக்கக்ஷியார், பல்கேரியா தேசத்தையும் ரொமோனியா தேசத்தையும் கிரீஸ் தேசத்தையும் தங்கள் கட்சியில் சேர்த்துக்கொள்ளவோ, அல்லது சத்துருவுடன் சேர்ந்து விடாமல் இருக்கச் செய்யவோ முயன்றார்கள்.

## மற்ற பால்கன் நாடுகளின் மனோ பாவம்.

துருக்கி பால்கன் யுத்தத்தில் ஸெர்வியாவுக்கும் பல்கேரியாவுக்கும் மனஸ்தாபம் உண்டாயிற்று. அந்த யுத்தத்தின் முடிவில், துருக்கிப் பிரதேசத்தை, பால்கன் நாடுகள் பங்கிட்டுக்கொண்ட போது, இப்போதுள்ள ஸெர்வியா தேசத்தின் தென் பாகத்தை பல்கேரியா அடைய வேண்டுமென்று விரும்பிற்று. ஆனல் அதற்கு ஸெர்வியா சம்மதிக்காததால், பல்கேரியா அத்தேசத்தினிடத்தில் விரோதங் கொண்டது இப்போது நேசக்கக்ஷியார் பல்கேரியாவின் சிநேகத்தைக் கோரின போது, ஸெர்வியாவின் தென் பாகத்தை அடைய வேண்டுமென்று பல்கேரியா விரும்பிற்று. ஆனல், நேச ராஜ்யங்கள் தங்களுடன் சேர்ந்து கொண்டிருக்கிற ஸெர்வியாவை அவ்வாறு நஷ்டப்படுத்தச் சம்மதிக்க வில்லை. ஆயினும் அவ்விஷயமாய் நேச ராஜ்யங்களெல்லாம் ஒன்றோடொன்று ஆலோசனை செய்து தீர்மானிப்பதற்குள்ளாக ஜெர்மனி பல்கேரியாவுக்குள்ள சகல விருப்பங்களையும் திருப்தி செய்வதாக அறிவித்தது. ஜெர்மனி தனது எதிரிகளுடைய பூமியை, தானஞ் செய்வதில் மிக்க தாராளமாயிருக்க சாத்தியப்பட்டது. இதனால், பல்கேரியா, ஜெர்மானியருடன் சேர்ந்து கொண்டது. கிரீஸ் தேசத்து முதன் மந்திரியாகிய மிஸ்டர் வெனிஜிலாஸ் நேசக்கக்ஷிக்கு உதவி செய்வதாக வாக்களித்தார். அவர் முன்பு டார்டனல்ஸ் பிரதேசத்தில் பிரிட்டாஷார் படையெடுத்த போது அவர்களுக்கு உதவி செய்வதாக வாக்களித்திருந்தார். ஆனல் கிரீஸ் அரசர் அதற்குச் சம்மதிக்காததால் அவ்வுதவி பிரிட்டிஷாருக்குக் கிடைக்கவில்லை. அதே மாதிரியாக, ஸெர்வியாவுக்கு உதவி செய்வதில் கிரீஸ் தேசத்து மந்திரி பிரிட்டிஷாருடன் சேர்ந்து கொள்வதாகச் சொன்ன வாக்குறுதி பயனற்றதாகிவிட்டது. கிரீஸ் தேசத்து அரசர் முதன் மந்திரியின் யோசனைக்கு சம்மதிக்கவில்லை.

ரொமேனியர் தேசம் நடுநிலைமையில் இருப்பதாகவே அறிவித்துவிட்டது.

இதனிடையில், ஸெர்வியாவுக்கு நேசக்கக்ஷியார் எவ்விதமாய் உதவி செய்யவதென்பதைப் பற்றி இரண்டு விதமான அபிப்பிராயங்கள் இருந்தன.

நேசக்கக்ஷியார் ஸெர்வியாவுக்கு நேராகப் படைகளை அனுப்பினால், அக்கக்ஷியாரின் படைப்பலம் பலவாறு பிரிந்து போகுமென்று சிலர் கருதினார்கள். அதனால் நேசக்கக்ஷியார் தங்கள் படைப்பலம் முழுவதையும் மேற்கரங்கத்தில் குவித்து ஜெர்மானியரைத் தாக்க வேண்டுமென்றும், அவ்வாறு அந்த முக்கியமான அரங்கத்தில் தாக்கினால், ஜெர்மானியர் ஸெர்வியாவின் மீது படையெடுக்கப் போதுமான ராணுவ பலத்தைப் பெறமாட்டார்களென்றும் சொல்லப்பட்டது.

ஸலோனிகா நகரத்தில் நேசக் கக்ஷியார்.

ஸெர்வியாவுக்கு எவ்வாறு உதவி செய்வதென்பதைப் பற்றி இரண்டு விதமான அபிப்பிராயம் இருந்தது. ஆயினும், சத்துருக்கள் ஸெர்வியர்களை உக்கிரமாகத் தாக்குவார்களானால், அப்போது நேசக்கக்ஷியார் தங்கள் படைகளில் சிலவற்றை ஸெர்வியாவுக்கு நேராக அனுப்பி, தாங்களும் சத்துருவின் தாக்குதலைத் தாங்கி நிற்பதே நியாயமென்று தீர்மானித்தார்கள். ஆகையால், கிரீஸ் கவர்ன்மெண்டார் நேசக்கக்ஷியுடன் சேர்ந்து யுத்தத்தில்கலந்துகொள்ளச் சம்மதிக்காமல் போனாலும், நேசக்கக்ஷியார், கிரீஸ் தேசத்துத் துறைமுகமாகிய ஸலோனிகா நகரத்தை, சுவாதீனஞ் செய்து கொண்டார்கள்.

ஸலோனிகா நகரமானது நேசக்கக்ஷியின் நடவடிக்கைகளுக்கு மிக்க அனுகூலமானது. ஏனெனில், ஸெர்வியா தேசத்துக்குள்ளே செல்கின்ற ரயில் பாதையையுடைய துறை முகப்பட்டணம் ஸலோனிகா ஒன்றுதான். ரயில் பாதையை யுடைய துறைமுகங்கள் பல்கேரியாவில் இருந்த போதிலும் அத்தேசம் சத்துருவுடன் சேர்ந்து கொண்டது. ஆகையால்நேசக்கக்ஷிக்கு விரோதமாயில்லாத கிரீஸ் தேசத்தில் தான் அக்கக்ஷியின் படைகள் வந்திறங்கக்கூடும். பிரான்ஸுக்காரரும் பிரிட்டிஷாரும் தங்கள் தேசங்களிலிருந்தாவது வேறு போர்முனைகளிலிருந்தாவது சில படைகளைக் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு வந்து, ஸலோனிகா துறைமுகத்தில் இறக்கி அங்கிருந்து ரயில் பாதை வழியாய் ஸெர்வியாவுக்குள் அப்படைகளை அனுப்ப வேண்டுமென்று உத்தேசித்தார்கள்.

நெருக்கடியான நிலைமை.

பல்கேரியா தேசம் கடைசியில் ஜெர்மன் கக்ஷியுடன்சேர்ந்துவிட்டதால் ஸெர்வியர்களின் நிலைமை மிகுந்த கவலைக் கிடமாகி விட்டது. கிரீஸ் தேசம் கடைசியில் நேசக் கக்ஷியுடன் சேர்ந்துகொண்டு யுத்தத்தில் கலந்து கொள்ளச் சம்மதிக்காததால், நேசக் கக்ஷியார் ஸெர்வியர்களுக்கு, முன்பு எதிர்பார்த்த அளவு ராணுவ உதவி செய்ய முடியாமற் போயிற்று. பல்கேரியர்களும், ஆஸ்டிரிய ஜெர்மானியர்களும் மும்முரமாயும் சீக்கிரமாயும் யுத்த முயற்சிகளைச் செய்து வந்தார்களென்று தெரிய வந்தது. பால்கன் நிலைமை மிகவும் நெருக்கடியாயிருந்தது. நேசக்கக்ஷியார் இனி யோசனையில் காலங்கழிப்பது பயனில்லை என்று ருஷியா நினைத்தது. 1915ஹு அக்டோபர் 4-ந் தேதி, ருஷியா, பல்கேரியாவுக்கு இறுதிக்கடிதம் அனுப்பி, பல்கேரியாவிலுள்ள ஜெர்மன் உத்தியோகஸ்தர்களை அத்தேசத்தினின்றும் விலக்காவிட்டால் அத்தேசத்தை சத்துருவென்று பாவிப்பதாக அறிவித்தது உடனே, ஆஸ்டிரிய ஜெர்மன் படைகள் ஸெர்வியாவின்மீது படையெடுக்கத் தொடங்கிவிட்டன.

இந்த முடுக்கான சமயத்தில் ஸெர்வியர்களுக்கு எவ்விதத்தாலும் உதவி புரிவதற்கு நேசக்கக்ஷியார் ஏற்பாடு செய்தார்கள். அக்டோபர் 5-ந் தேதியே, ஸலோனிகாவில் பிரஞ்சு பிரிட்டிஷ்படைகள் இறக்கப் பட்டன. (பிரஞ்சுப் படைகளும் பிரிட்டிஷ் படைகளும் கலந்திருப்பதால் அவைகளை நேசப்படைகள் என்று சொல்

லப்படுவது வழக்கம்.) அந்தநேசப் படைகள், ஸலோனிகாவுக்கு அருகிலுள்ள, டார்டனெல்ஸ், ஈஜிப்ட், முதலிய பிறதேசங்களிலிருந்து வெகு அவசரமாய்க் கொண்டு வரப்பட்டன. ஆனால் அவ்விடங்களிலிருந்து அனுப்பக்கூடிய படைகள் சொற்பமாகவே யிருந்தன. ஆகையால் பிரான்ஸ், பிரிட்டன் இவ்விரு தேசங்களிலிருந்தே சில படைகளை ஸலோனிகாவுக்கு அனுப்ப வேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டது. ஆனால், அவ்வளவு தூரத்திலிருந்து படைகளைக்கொண்டுவந்திறக்குவதற்கு எவ்வளவு அவசரமான ஏற்பாடுகளைச் செய்தபோதிலும் காலதாமஸமாகாமலிராது. அதற்குள்ளாக ஸெர்வியாவில் ஜெர்மானியரின் முன்னேற்றம் வலுத்து விட்டது.

சத்துருக்களின் படையெடுப்பு

ஸெர்வியசேனையில் சுமார் 4½ லக்ஷம் துருப்புகள் இருக்குமென்று சொல்லியிருக்கிறோம். அதைத்தவிர அதற்கு உதவியாகபிரஞ்சு, பிரிட்டிஷ்படைகள் ஸலோனிகாவிலிருந்து புறப்பட்டுக் கொண்டிருந்தன. ஆஸ்டிரிய ஜெர்மன் துருப்புகள் சுமார் 3 லக்ஷமும், பல்கேரியத்துருப்புகள் 3 லக்ஷமும் இருக்கலாம். சத்துருக்கள் ஸெர்விய சேனையை மூன்று திக்கில் வளைந்து தாக்கினார்கள். ஸெர்வியாவுக்கு மேற்கிலும் வடக்கிலும் அநேக ஆஸ்டிரியஜெர்மன் படைகள் ஆஸ்டிரிய எல்லையிலிருந்து புறப்பட்டுத்தாக்கின. ஸெர்வியாவுக்குக் கிழக்கில் பல்கேரியப் படைகள் தாக்கின. கிழக்கரங்கத்து யுத்தத்தில் பலமுறை பிரஸ்தாபிக்கப்பட்ட ஜெர்மன் சேனாபதியாகிய ஜெனரல்வான் மாகென்ஸன் சத்துருப்படைகளுக்குத் தலைமை வகித்தார். அந்த ஜெர்மானியரின் யுத்த நடவடிக்கைகள் முன்னதாகவே யோசனை செய்யப்பட்டது. அந்த நடவடிக்கைகளின் முக்கிய நோக்கமென்னவென்றால், ஸலோனிகாவிலிருந்து புறப்பட்டு வந்த நேசப்படைகள், ஸெர்விய சேனையுடன் சேர்ந்து கொள்ளாதபடி தடுக்கப்பட வேண்டுமென்பதாகும். அவ்விதம் ஆதரவற்றுப் போகிற ஸெர்விய சேனையை மேற்கேயுள்ள மலைப் பிரதேசத்தில் தள்ளி அழித்து விடவேண்டுமென்பதும் சத்துருவின் முக்கிய கருத்து.

அடுத்தபக்கத்திலுள்ளபடத்தில் கறுப்புக் கோடுகள் போர் முனைகளைக்குறிப்பிடுகின்றன. அவ்விதம் மூன்று போர்முனைகள் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஸெர்வியாவின் வடக்குஎல்லை நெடுகப்போடப்பட்டுள்ளகோடு ஆஸ்டிரிய ஜெர்மானியர்கள் அக்டோபர் 10-ந் தேதி சண்டை செய்து கொண்டிருந்த போர் முனையைக் காண்பிக்கிறது. ஸெர்வியாவின் கிழக்கெல்லை நெடுகப் போடப்பட்டுள்ள கோடு பல்கேரிய சேனை அதே தினத்தில் (அக்டோபர் 10-ந் தேதி) சண்டை செய்த போர்முனையைக் காண்பிக்கிறது. இந்த இரண்டு கோடுகளுக்கும் உள்ளடங்கி மற்றொரு கோடு போடப்பட்டிருக்கிறது. அது அக்டோபர் 30-ந் தேதி ஆஸ்டிரிய ஜெர்மானியர்களும் பல்கேரியர்களும் சேர்ந்து சண்டை செய்த போர்முனையைக் காண்பிக்கிறது. ஸெர்வியாவின் தென் பாகத்தில் பல்கேரியர்கள் ரயில் பாதையைக்கடந்து மேற்கே முன்னேறி விட்டதை அந்தப் போர் முனையில் காணலாம். இந்த போர்முனைக்கும் மேற்கே மற்றொரு கறுப்புக்கோடு போடப்பட்டிருப்பதைக் காணலாம். இது நவம்பர் 30-ந் தேதி யிருந்த போர்முனையைக்காண்பிக்கிறது. இந்தப் போர் முனையில், சத்துருக்கள் ஸெர்வியா தேசத்தைக் கடந்து மாண்டினிக்ரோ தேசத்தை வளைத்துக்கொண்டிருப்பது தெரியவரும். ஸெர்வியாவின் தென்பாகத்தில் சத்துருக்கள் நேசப்படைகளைத் தாக்கினார்கள்.

ஸெர்வியா தேசத்தின் மத்தியில் தெற்கு வடக்காய் அத்தேசம் நெடுக ரயில் பாதை செல்வதைக்காணலாம். அந்த ரயில் பாதையின் தெற்குக் கோடியில் ஸலோனிகா நகரம் இருக்கிறது. அந்த ரயில் பாதை அத்தேசத்துக்கு வடக்கே பெல்கிரேட் நகரம் வரையில் சென்று, பிறகு ஆஸ்டிரியா தேசத்துக்குள் நுழைகிறது. இந்த ரயில் பாதையின் மத்தியில் நிஷ் என்ற ரயில்வே ஸ்டேஷன் இருப்பதைக் காணலாம். அந்த நகரத்திலிருந்து கிழக்கே வேறொரு ரயில் பாதை பல்கேரியா தேசத்துக்குள் செல்கிறது.




ஸெர்வியத் தலைநகரம் பிடிபட்டது.

ஸெர்விய சேனையின் பெரும்பாகமும் வடக்கு எல்லையில் காவல் செய்தன. ஸெர்வியாவின் வடக்கு எல்லையில் டான்யுப் நதி ஓடுகிறபடியால், அந்த நதியின் காவலைப் பெற்று ஸெர்வியப்படைகள் வெகு பலமாய் நிலைபெற்றிருந்தன. இந்தப் படைகளைப் பின்தள்ளுவதற்கு அங்கு சத்துருப்படைகளின் பெரும்பாகமும் திரட்டப்பட்டிருந்தது.

ஆஸ்டிரிய ஜெர்மன் படைகள் மூன்று தினங்களாக ஓயாமற் சண்டைசெய்து அக்டோபர் 9-ந் தேதி டான்யுப் நதியைக் கடந்து விட்டன. ஸெர்வியத் தலைநகரமாகிய பெல்கிரேட்டை அன்று தினம் பிடித்துக்கொண்டன. (அந்த நகரம் ஸெர்வியாவின் வடக்கு எல்லைக்கு அருகில் இருக்கிறது.) பின்னும் இரண்டு தினங்கள் அந்த ஆஸ்டிரிய ஜெர்மன் படைகள் சண்டைசெய்து, பல்கேரியா எல்லையை அடைந்து பல்கேரிய சேனையுடன் சேர்ந்து கொண்டன. பல்கேரிய எல்லைக்கும் ஆஸ்டிரிய எல்லைக்கும் இடையில் குறுகிய ஸெர்வி பூமி இருக்கின்றது. அதை ஆஸ்டிரிய ஜெர்மன் படைகள் வசப்படுத்திக்கொண்ட

வுடன் அவைகள் பல்கேரிய சேனையுடன சேர்ந்து கொண்டன. இதனால் பல்கேரிய சேனைக்கு வேண்டிய அளவு பீரங்கிகளும் குண்டுகளும் மற்ற தளவாடங்களும் ஜெர்மானியர் அனுப்பிக்கொண்டிருக்கச் சாத்தியப்பட்டது.

### நேசப் படைகள் தனியாய் நின்றன.

நேசப்படைகள் ஸெர்விய சேனையுடன் சேர்ந்துகொள்ளாமல் தடுக்கப்படவேண்டுமென்பது ஜெர்மானியரின் முதல்நோக்கம் என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். ஜெர்மானியர் அந்த யோசனையை வெகு விரைவாய் நிறைவேற்றத் தொடங்கினார்கள். அந்தக் காரியத்தை பல்கேரியப் படைகள் ஏற்றுக்கொண்டன. நேசப்படைகள், ஸலோனிகாவிலிருந்து புறப்பட்டுரயில் மார்க்கமாய் ஸெர்வியாவின் தென்பாகத்தைநோக்கி வந்துகொண்டிருந்தன. ஸலோனிகாவிலிருந்து அந்த நேசப்படைகள் உபயோகித்த ரயில்பாதையானது, வடக்கே வெகுதூரத்தில் பெல்கிரேட் நகரத்துக்குச் செல்லுகிறது. ஆகையால் பெல்கிரேட்நகரத்துக் கருகிலுள்ளஸெர்விய சேனைக்கும், ஸலோனிகாவிலிருந்துபுறப்பட்டநேசப்படைகளுக்கும் இடையே ஒருரயில் பாதைதான், முக்கியமான போக்குவரத்து வழியாயிருந்தது. அவ்வாறு ஸெர்விய சேனையையும் நேசப்படைகளையும் சேர்க்கக்கூடிய அந்த ரயில்பாதையை பல்கேரியர்கள் துண்டித்துவிட நிச்சயித்தார்கள்.

### ரயில்பாதைக்குக் குறுக்கே பல்கேரியர்கள்.

அக்டோபர் 17-ந் தேதி அந்த ரயில் பாதையின் மத்தியிலுள்ள விரானியா என்ற ரயில்வே ஸ்டேஷனை, பல்கேரியர்கள் பிடித்துக்கொண்டனர். அந்த நகரம் பல்கேரிய எல்லைக்கு அருகில் இருந்தபடியால் அதை வெகுசீக்கிரத்தில் பல்கேரியர்கள்வசப்படுத்திக்கொண்டனர். 22-ந் தேதிக்குள் அதற்குத் தெற்கில், குமனோவோ, விலிஸ், உஸ்கப் முதலிய முக்கியமான ஸ்டேஷன்களையும் அவர்கள்வசப்படுத்திக்கொண்டனர். அவ்வாறு பல்கேரியர் அந்த ரயில்பாதையைக் குறுக்கேமறித்து, தெற்கு திசையில் அநேக மைல் தூரத்துக்கு அப்பாதையை வசப்படுத்திக்கொண்டே சென்றனர் பல்கேரியத் துருப்புகள் அவ்விதம் அந்த ரயில் பாதையைத் தாங்கள் உபயோகித்து ஸெர்வியாவின் தெற்கெல்லையை நெருங்கி நேசப்படைகளை எதிர்த்து நிற்க ஆயத்தமாயினர். அக்டோபர் 30-ந் தேதி பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள், ஸெர்வியாவின்மீது தெற்கு எல்லையை அடைந்தபோது, அங்கு பல்கேரியப் படைகள் வழி மறித்து நின்றன. ஸெர்வியாவின் தெற்கெல்லையிலிருந்து வடக்கே செல்லுகிற ஒரே ஒரு ரயில் பாதையை, பல்கேரியர்கள் வசப்படுத்திக் கொண்டதால் அந்த நேசப்படைகள் ஸெர்வியாவின் வடபாகத்திலிருந்தஸெர்விய சேனைக்குஉதவி அனுப்பவும் அதனுடன் போக்குவரத்து செய்யவும் சாத்தியப்படவில்லை.

### நேசப் படைகளுக்குத் துணைத் துருப்புகள்.

அந்த நேசப்படைகள் சொற்ப பலத்தையே பெற்றிருந்த படியால் வேறு புதிய துணைப் பலத்தை எதிர்பார்த்திருந்தன. நேசக்கக்ஷியார்கப்பல் மூலமாய் மிக்க விரைவாகத் துணைப் படைகளை அனுப்பிய வண்ணமாயிருந்தனர். அந்தத் துணைப்படைகளெல்லாம் ஸலோனிகா துறை முகத்தில் இறங்கி ஸெர்வியாவின் தென் பாகத்துப் போர் முனைக்கு விரைந்து சென்றன. ஆனால் ஸலோனிகாவிலிருந்து அந்தப் போர் முனைக்கு ஒரே ஒரு ரயில் பாதை செல்வதால், அதன் வழியாய் அனுப்பக்கூடிய தளவாடம் உணவுப் பொருள் இவைகளில் ஓர்

அளவுக்கு உட்பட்டதா யிருந்தன. அதனால் நேசக்ஷியார் ஏராளமான துருப்புகளை ஸெர்வியாவுக்கு அனுப்ப முடிய வில்லை. ஆயினும் நேசக்கக்ஷியார் அந்த ரயில் பாதையையும் அதன் பக்கத்திலிருந்த சில ரோட்டுகளையும் செவ்வையாய் உபயோகித்து தங்களால் கூடுமான துணைத் துருப்புகளையெல்லாம் அனுப்பி வந்தனர்.

ஸெர்வியசேனை பின்வாங்கிய விவரம்.

இதற்குள்ளாக ஸெர்வியாவின் வடபாகத்திலிருந்த பெரிய ஸெர்விய சேனையின் நிலைமை என்ன வாயிற்றென்பதைச் சொல்வோம். ஜெர்மானியர் ஸெர்விய சேனையைத்தாக்கி டான்யுப் நதியைக் கடந்து விட்ட பிறகு, அந்த ஸெர்விய சேனை கிரகு வாட்ஸ் என்ற ஸ்தலத்துக் கருகே மறுபடியும் போர் விளைத்தது. அச்சேனை கிழக்கு மேற்கு வரிசையில் நிலை பெற்று சண்டை செய்து தெற்கு திசையிலிருந்து நேசப்படைகளின் உதவியை எதிர் பார்த்திருந்தது. ஆனால் தெற்கே முக்கியமான ரயில்பாதையை, சத்துருக்கள் பிடித்துக்கொண்டு, நேசப்படைகளை வழி மறித்துத்தடுத்த படியால், ஸெர்விய சேனை இனிவிரைவாய்ப் பின்வாங்கிவிட நிச்சயித்தது. ஆஸ்டிரிய ஜெர்மானியர்கள் நவம்பர் 1-ந் தேதி ஸெர்விய சேனையை உக்கிரமாய்த் தாக்கி கிரகுவாட்ஸ் நகரத்தைப் பிடித்துக் கொண்டு, கிழக்கு மேற்காயிருந்த ஸெர்வியர்களை, தெற்கு வடக்காய்த் திருப்பிப் பின் வாங்கச் செய்தனர். நவம்பர் 5ந் தேதி சத்துருக்கள் நிஷ் நகரத்தைப் பிடித்தனர். அந்த நகரத்தில்தான் பல்கேரியா தேசத்திலிருந்து வருகிற ரயில்பாதை, ஸெர்வியாதேசத்து ரயில்பாதையுடன் சேர்கின்றது. அந்த ரயில்வே ஜங்ஷன் பிடிபட்டதால், ஆஸ்டிரிய ஜெர்மானியர் பல்கேரியா தேசத்துடன் ரயில் மார்க்கமாய் நேராகப் போக்குவரத்து வைத்துக்கொள்ளலாயிற்று. நிஷ் நகரத்தை மறுபடியும் பிடிக்க வேண்டுமென்று ஸெர்விய சேனை மிக்க உக்கிரமாய் முயற்சி செய்தும் பயன்படவில்லை. அதனால் ஸெர்விய சேனை மேற்கு முகமாய்ப் பின்வாங்கி 23-ந் தேதிக்குள் மாண்டினிக்ரோ நாட்டுக்குள்ளே புகுந்து விடும்படி நேரிட்டது.

ஆஸ்டிரியர்கள் மாண்டினிக்ரோ நாட்டை வளைத்துக்கொண்டு அந்த நாட்டுச் சேனையையும் ஸெர்வியசேனையையும் தாக்கினார்கள். மாண்டினிக்ரோவின் தலைநகரமாகிய ஸெடிஞ்சிக்கு அருகில் லாவ்சன் என்ற குன்றை ஆஸ்டிரியர்கள் வெகு கடுமையாய்த்தாக்கிப் பிடித்து விட்டனர். உடனே தலை நகரமும் பிடிபட்டது. மாண்டினிக்ர அரசர் தமது சேனையுடன் அநேகமாய் சூழ்ந்து கொள்ளப்பட்டார். சில படைகள் சத்துருக்களிடம் சரணமடையச் சம்மதங்கொள்ளாமல் சத்துருப்படைகளுக்கிடையே புகுந்து சண்டை செய்து வெளியே தப்பி வந்துவிட்டன. மாண்டினிக்ர அரசரும், ஸெர்விய அரசரும் கடல் மார்க்கமாய் கப்பலில் ஏறி இடாலிக்குச் சென்றார்கள்.

மாண்டினிக்ரோ நாடும், அதற்குத் தெற்கேயுள்ள அல்பேனியா நாடும் மலைப்பிரதேசமான படியாலும், அங்கு மலைப்பாதைகளைத் தவிர ரயில் பாதையே கிடையாதாகையாலும், அந்தப் பிரதேசத்தில் பின்வாங்கிச் சென்ற ஸெர்வியப்படைகளெல்லாம் நாலாபக்கங்களிலும் சிதறிப் போயின.

நேசப்படைகளின் உக்கிரமான சண்டை.

ஸெர்வியாவின் தென்பாகத்தில் நேசப்படைகளின் நிலைமையைப் பற்றிச்சொல்வோம். சில ஸெர்விய படைகள் ஸெர்வியாவின் தென்பாகத்திலுள்ள மொனஸ்டர் என்ற முக்கிய பட்டணத்தைக் காவல் செய்து நேசப் படைகளுடன் சேர்ந்து கொண்டு யுத்

தஞ்செய்தன. அந்த ஸெர்வியப்படைகள், ஸெர்வியாவின் வட பாகத்திலுள்ள பெரிய ஸெர்விய சேனையுடன் ரோட்டு மார்க்கமாகவே போக்குவரத்து செய்து வந்தன. ஏனெனில் ஸெர்வியாவிலுள்ள முக்கியமான ரயில் பாதை அதன் வசத்திலில்லை. அந்த நிலைமையில், பல்கேரியர்கள் அந்த ரயில் பாதையைக் கடந்து சென்று, வட பாகத்திலும் தென் பாகத்திலுமிருந்த ஸெர்வியர்களை மிகவும் எளிதாக வெவ்வேறாய்ப் பிரித்து விட்டார்கள். வடபாகத்திலிருந்து பெரிய ஸெர்விய சேனை, அல் பேனியா நாட்டுக்குள் பின்வாங்கிய பிறகு, பல்கேரியர்கள் தெற்கு திசையில் தங்கள் முக்கிய கவனத்தைத் திருப்பினார்கள். டிசம்பர் 2-ந் தேதி பல்கேரியர்கள் மொனுஸ்டர் நகரத்தைப் பிடித்துக் கொண்டு, அங்கிருந்த ஸெர்வியப் படைகளை வளைந்து கொள்ள எத்தனித்தார்கள். ஆனால் அந்த ஸெர்வியப் படைகள் அவசரமாய்ப் பின் வாங்கி, அல்பேனியா நாட்டின் தென்பாகத்துக்குப் பின்சென்றன. பிரெஞ்சு பிரிட்டிஷ் படைகளைத் தாக்குவதற்காக, பல்கேரியப் படைகள் அதிகமாகத் திரட்டப்பட்டன. செர்னு நதிக்கரையில் மிக்க கடுமையான சண்டை நடந்தது.

### நேசப்படைகள் ஸலோனிகாவுக்குத் திரும்பியது.

டிசம்பர் 8ந் தேதி, அந்த நேசப் படைகள் பல்கேரியர்களுக்கு அதிக சேதத்தை உண்டுபண்ணின போதிலும் கடைசியில் பின்வாங்கிவிட நிச்சயித்தன. அப்படைகள் ஸெர்விய பூமியை விட்டு அகன்று கிரீஸ் தேசத்துக்குள் பின் வாங்கின. அந்தப்படைகள் மறுபடியும் முன்போல கிரீஸ் தேசத்துத்துறைமுகப்பட்டணமாகிய ஸலோனிகாவில்வந்து தங்கின. அங்கு வலுவான அரண்களைக்கட்டி பந்தோபஸ்தாய் நிலை பெற்றிருந்தன. பல்கேரியர்கள் கிரீஸ் பூமிக்குள் நுழைந்து தங்களைத்தாக்கக்கூடாதென்று நேசப் படைகள் கிரீஸ் கவர்ன்மெண்டைக் கேட்டுக்கொண்டன.

### யுத்தத்தின் பலன்கள்.

ஜெர்மானியர் ஸெர்வியாதேசத்தை வசப்படுத்திக்கொண்டதால், அவர்கள் பல்கேரியா தேசத்துக்குள் சென்று அங்கிருந்து பல்கேரியா வழியாய் துருக்கிக்குச்செல்ல நேர்வழி ஏற்பட்டது. ஜெர்மன் தலைநகரமாகிய பெர்லினிலிருந்து துருக்கித் தலைநகரமாகிய கான்ஸ்டாண்டிநோபிள்வரையில் ஒரே தொடர்ச்சியாயுள்ள ரயில்பாதை அவர்களுக்கு வசமாகிவிட்டது. அதனால், ஜெர்மானியர் துருக்கியருக்குத் தேவையான அளவு பீரங்கிகளையும் தளவாடங்களையும், துருப்புகளையுங் கூட அனுப்பக்கூடிய நிலைமையிலிருந்தார்கள். அந்த காரணத்தை உத்தேசித்து, டார்டனல்ஸில் இனி யுத்தநடவடிக்கைகளை நடத்துவது பயனில்லை என்று நேசக்காக்ஷியார் உறுதிகொண்டார்கள். ஜெர்மானியர் ஸெர்வியாவின்மீது படையெடுக்க ஆரம்பித்து சில தினங்களானபிறகு, அதாவது அக்டோபர் 18ந்தேதி, டார்டனல்ஸில் நேசப்படைகளுக்குத்தலைவராயிருந்த ஸர் அயன் ஹாமில்டன், இங்கிலாந்துக்குத் திரும்பி வந்து விடும்படியும், அவருக்குப் பதிலாய் ஜெனரல் மன்ரோ டார்டனல்ஸுக்குச் செல்லும்படி உத்தரவு விடப்பட்டார். நவம்பர் 5-ந் தேதி அதாவது ஸெர்வியாவில் முக்கியமான ரயில்வே ஜங்க்ஷனாகிய நீஷ் நகரத்தை, சத்துருக்கள் பிடித்த தினத்தில் லார்ட் கிச்சனர் இங்கிலாந்தைவிட்டுப் புறப்பட்டார். அவர் டார்டனல்ஸுக்கு வந்து அங்குள்ள போர்முனையை நேரில் பார்வையிட்டு, ஜெனரல் மன்ரோவினுடைய அபிப்பிராயத்தை யொட்டி, அந்த பிரதேசத்கினின்றும் நேசப் படைகள் விலகிவிடவேண்டுமென்று தீர்மானித்தார். டிசம்பர் 19-ந் தேதி நேசப்படைகள் டார்டனல்ஸ் பிரதேசத்தைக் காலி செய்யத் தொடங்கின.

நேசப்படைகள் அவ்வாறு காலி செய்ததினால், துருக்கியருக்குப பெரிய ஆபத்து நீங்கினது உண்மையே ஆயினும், அதனால் ஜெர்மானியருக்கு முற்றிலும் சாதகம் உண்டாயிற்றென்று சொல்வதற்கில்லை. ஏனெனில், டார்டனல்வில் அநேக பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் தங்கி சண்டை செய்தபோது, அந்தப்படைகளெல்லாம் மேற்கரங்கத்தில் வராமலிருந்ததை ஜெர்மானியர் பெரிய சாதகமாகக் கருதினார்கள். நேசக்கக்ஷியரின் படைப் பலம் ஒரேபோர் முகத்தில் குவிக்கப்படாமல், பல திசைகளில் பிரிந்து கிடக்கவேண்டுமென்பது ஜெர்மானியருடைய முக்கிய நோக்கம். இப்போது டார்னல்விலிருந்து அந்த நேசப்படைகள் விலகி விட்டபடியால், அவைகள் மேற்கரங்கத்துக்குச் சென்று ஜெர்மானியரை நேரில் தாக்கத்தொடங்கின. ஆகையால் அதனால் ஜெர்மானியருக்கு எவ்வித சாதகமும் உண்டாகவில்லை. ஆயினும், ஸலோனிகா நகரத்தில் அநேக நேசப்படைகள் அரண்களைக்கட்டிக் கொண்டு அவைகளில் தங்கியிருப்பதைக்கருதி ஜெர்மானியர் முன்போலவேசாதகம்ஏற்பட்டதாக நினைக்கலாம். ஆனால்நேசக்கக்ஷியார் ஸலோனிகாவில் தங்கள்படைகளை வைத்திருப்பதுவேறுசில காரணங்களைக்கொண்டு முக்கியமென்று கருதினார்கள்.

### ஸலோனிகாவில் நேசக் கக்ஷியாரின் நிலைமை.

ஸெர்வியா தேசமும் சத்துருவுக்கு வசமாகி விட்டதாலும் அங்கிருந்து ஸெர்விய சேனை விலகி விட்டதாலும், இனி அத்தேசத்தாருக்கு நேசப்படைகள் செய்யக் கூடிய சகாயம் எதுவுமில்லை; ஆனபோதிலும், அத்தேசத்தை மீட்கவேண்டுமென்ற நோக்கம், நேசக்கக்ஷியாரின் மனதில் உறுதி கொண்டிருக்கிறதென்று வெளிப்படுத்துவதற்காக, ஸலோனிகாவில் நேசப்படைகள் தங்கியிருப்பது அவசியமாயிற்று, தவிர ஏற்ற சமயம் வாய்த்தவுடன் நேசப்படைகள் சத்துருக்களைத்தாக்குவார்களென்ற பயம் அவர்களுக்கு எப்போதும் இருந்து கொண்டிருக்கும்; மற்ற பால்கன்நாடுகளிடத்தில் நேசக்கக்ஷியாரின்கவுரவம் குறையாமலிருந்துவரும்.

### ஸெர்விய சேனையின் தீரம்.

ஜெர்மானியர் ஸெர்விய சேனையை அழித்து விடுவதாகநோக்கங் கொண்டிருந்தார்கள். ஆனால்அவ்வாறு அச்சேனை அழிந்து போகாமல் பின்வாங்கியது, ஸெர்வியத் துருப்புகளின் திறமையும் தீரமும் யாவராலும் புகழத்தக்கதாயிருந்தன. கொடுங் கோன் மன்னர்களின்ராக்ஷஸபலத்தைத் தனியாய் எதிர்ப்பதால் பயன்படாதென்பதைஅறிந்தும் அந்த ஸெர்வியசேனை மிக்கத் துணிகரமாய் சண்டைசெய்து பெல்ஜியர்களைப் போலவே அழியாப் புகழ்பெற்றுவிட்டனர் ஆயினும், $4\frac{1}{2}$-லக்ஷம் பேர் கொண்ட ஸெர்விய சேனை கடைசியில் $1\frac{1}{2}$ லக்ஷம் பேர்கொண்டதாகக்குறைந்துவிட்டது. அதன்பிறகு அதையொரு பெரிய சேனையாகக் கருதுவதற்கில்லை. ஆயினும்அல்பேனியாவிலுள்ள மலைப் பிராந்தியங்களில் பற்பல திக்குகளில் சிதறிக் கிடந்த அந்த $1\frac{1}{2}$ லக்ஷம் ஸெர்வியத் துருப்புகளை நேசக்கக்ஷியர் காப்பற்றி அவர்களுக்குத்தேவையான ஆயுதங்களையும் தளவாடங்களையும் கொடுத்து ஒரு சேனையாகச் சேர்த்தார்கள். இந்த ஸெர்விய சேனை, ஸலோனிகாநகரத்தில், மற்ற பிரஞ்சு பிரிட்டிஷ் படைகளுடன் சேர்க்கப்பட்டு யுத்தத்தில் உபயோகிக்கப்படும். சிறு ராஜ்யங்களின் சுயேச்சையைக் காப்பதற்காகவே இந்த யுத்தத்தைத் தொடங்கிய நேசக்கக்ஷியார், அதே உறுதியுடன் இருந்து வருவதாகவும் அதை நிறைவேற்றப் போவதாகவும் வெளிப்படுத்த விரும்பினார்கள். அந்த காரணத்தால் தான், பெல்ஜியத்தை ஜெர்மானியர் வசப்படுத்திக் கொண்ட போதிலும், பெல்ஜிய அரசரையும், படை

களாகச் சேர்க்கக்கூடிய பெல்ஜியத் துருப்புகளையும் சேர்த்து மேற்கரங்கத்தில் நேசக்கக்ஷியார் நிறுத்திவைத்திருக்கிறார்கள். அந்த பெல்ஜிய சேனை இப்போது ஒரு குறுகிய பெல்ஜியபூமியில் நிலை பெற்று சண்டை செய்கின்றது. அவ்விதமே, ஸெர்விய சேனையும் உருக்குலையாமல் இந்த யுத்தத்தில் கலக்கவேண்டுமென்ற நோக்கம்'' அவர்களுக்கு இருந்துவந்தது.

---

## டார்டனல்ஸ் நடவடிக்கைகள்.

ஜெர்மானியரின் தூண்டுதலின்மேல் துருக்கி கவர்ன்மெண்டு அவர்கள் கக்ஷியில் சேர்ந்துகொண்டது. 1914ம் வருஷம் ஆகஸ்ட் 11ந்தேதி அதாவது இந்த மகாயுத்தம் தொடங்கி 7 தினங்களுக்குப் பிறகு, இரண்டு ஜெர்மன் யுத்த கப்பல்கள் பிரிட்டிஷ் கப்பற்படையால் பின்தொடரப்படவே, அந்த ஜெர்மன் கப்பல்கள் டார்டனல்ஸ் ஜலசந்திக்குள் புகுந்து துருக்கியின் தலைநகரமாகிய கான்ஸ்டாண்டி நோபிள் துறை முகத்தைஅடைந்தன. துருக்கிதேசம் அப்போது இந்த மகாயுத்தத்தில் கலக்காமல் நடுநிலைமையிலிருந்த படியால், அத்தேசத்துக்கவர்ன்மெண்டார் அந்த ஜெர்மன் கப்பல்களிலுள்ள ஆயுதங்களை அப்புறப்படுத்தி அவைகளிலிருந்த ஜெர்மன் மாலுமிகளை அடைத்து வைக்கவேண்டுமென்று நேசக்கக்ஷியார் கேட்டார்கள். இந்த யுத்தம் ஆரம்பித்ததற்கு முன்பு, துருக்கி கவர்ன்மெண்டார் தங்களுக்கு இரண்டு யுத்த கப்பல்களை, கிரேட் பிரிட்டனில் கட்டுவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்த இரண்டு புதிய யுத்த கப்பல்கள் கட்டி முடிந்துவிட்டால் அவைகளை பிரிட்டனிலிருந்து துருக்கிக்குக் கொண்டுவருவதற்காக அநேகதுருக்கி மாலுமிகள் பிரிட்டனுக்குச் சென்றிருந்தார்கள். ஆனால் இந்த யுத்தம் திடீரென்று ஆரம்பமாகி விடவே, துருக்கிக்காகக் கட்டப்பட்டிருந்த அந்த இரண்டு புதிய யுத்த கப்பல்களை பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தங்களுடைய சொந்த உபயோகத்துக்கு எடுத்துக்கொண்டார்கள். பிரிட்டிஷ் சட்டப்படி, அந்த கவர்ன்மெண்டார் அவ்வாறு செய்தபிறகு, அக்கப்பல்களின் விலையைத் துருக்கிக்குக்கொடுத்து விடுவதாக அறிவித்தார்கள். பிறகு பிரிட்டனுக்குச் சென்றிருந்த துருக்கி மாலுமிகள் துருக்கி தேசத்துக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் திரும்பி வந்தபிறகு, அந்த இரண்டு ஜெர்மன் யுத்தகப்பல்களை அடைத்து வைப்பதாக துருக்கி கவர்ன்மெண்டார் நேசக்கக்ஷித் தூதர்களுக்கு அறிவித்தார்கள். ஆனாலும் துருக்கியர் அவ்விதம் செய்யாமலிருந்தார்கள்; மேலும் அந்த ஜெர்மன் கப்பல்களைத் தாங்கள் வாங்கிவிட்டதாகவும் அறிவித்தார்கள். துருக்கிக் கடற்படையிலிருந்த பிரிட்டிஷ் மாலுமிகளும் உத்தியோகஸ்தர்களும் நீக்கப்பட்டார்கள். இவ்வாறு ஜெர்மானியரின் செல்வாக்கு அங்கு அதிகரித்துக்கொண்டிருந்தது.

1914-ம் வருஷம் அக்டோபர் 29-ந் தேதி, துருக்கி யுத்த கப்பல்கள் ஜெர்மன் உத்தியோகஸ்தர்களால் செலுத்தப்பட்டு, கருங்கடலில் இரண்டு ருஷியத் துறைமுகங்களைத்தாக்கின. மறு தினமே, இங்கிலாந்து, பிரான்ஸ், ருஷியா இத்தேசங்களின் தூதர்கள் துருக்கித்தலை நகரத்தை விட்டுப் புறப்பட்டுவிட்டார்கள். அது முதல் துருக்கிக்கும் நேசக்கக்ஷிக்கும் யுத்தம் ஆரம்பமாகி விட்டது. சில தினங்களுக்கு முன்னதாகவே, துருக்கியர், டார்டனல்ஸ் ஜலசந்தியை அடைத்துவிட்டார்கள். கருங்கடலிலுள்ள ருஷியத்துறை முகங்களிலிருந்து புறப்படும் வியாபாரக்கப்பல்கள் டார்டனல்ஸ் ஜல சந்தி வழியாகத் தான் வெளியே வந்து மற்ற ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்ல முடியும்.

ஆகவே, அந்த ஜல சந்தியில் போக்கு வரத்துக்கு வழிவிடாமல் துருக்கியர் தடுத்தவுடன், ருஷியாவின் வியாபாரம் நின்று விட்டது.

கீழேயுள்ள படத்தில் துருக்கித்தலை நகரமாகிய கான்ஸ்டாண்டி நோபிள் நகரம் எந்த பிரதேசத்தில் அமைந்திருக்கிறதென்பது தெரியவரும். கருங்கடலிலிருந்து அந்த நகரத்துக்குச் செல்ல வேண்டுமானால், பாஸ்பரஸ் என்று சொல்லப்படுகிற குறுகிய ஜனசந்திவழியாய்ச் செல்லவேண்டும். ஏஜியன் கடலிலிருந்து அந்த நகரத்துக்குச் செல்லவேண்டுமானால், டார்டனல்ஸ் ஜலசந்தி வழியாய்ச் செல்ல வேண்டும்.




டார்டனல்ஸ் ஜல சந்தியை துருக்கியர் அடைத்து விட்டதனால், அதைத் தாக்க வேண்டுமென்று 1915-ம் வருஷம் ஆரம்பத்தில் நேசக்கக்ஷியார் யோசனை செய்தார்கள். முடிவில் வீண்பிரயத்தனமாய் முடிந்த அந்த யுத்த நடவடிக்கைகளை ஏன் அவர்கள் ஆரம்பிக்கத் தீர்மானித்தார்கள் என்பதற்கு சில முக்கிய காரணங்களிருக்கின்றன. பால்டிக் கடல் வழியாகவும் கருங்கடல் வழியாகவும் ருஷியர் ஐரோப்பாவில் தங்கள் வியாபாரத்தை நடத்தி வந்தார்கள். பால்டிக் கடலை ஜெர்மன் கடற்படை அடைத்து விட்டது. கருங்கடல் வியாபாரத்தையும் இப்போது துருக்கி தடுத்து விட்டது. ருஷியாவுக்கு அநேக அவசியமான பொருள்களெல்லாம் அந்நிய நாடுகளிலிருந்து வரவேண்டியிருக்கின்றன. தவிர பலவித யுத்த தளவாடங்களும் மற்ற தேசங்களிலிருந்து ருஷியாவுக்குச் செல்லவேண்டும். அந்த அத்யாவசியமான சாமான்களெல்லாம் கிடைப்பதானது தடைப்பட்டு விட்டது. மேலும், ருஷியாவில் வராளமான கோதுமை விளைகின்றது. இதையும் இன்னும் பல விளை பொருள்களையும் அந்நிய தேசங்களுக்கு அனுப்பியே விற்று முதல் செய்யவேண்டும். தவிர, மற்ற நேச தேசங்களுக்கு ருஷியாவிலிருந்து முன்போல கோதுமை கிடைப்பதற்கில்லை. ஆகையால் நேசக்கக்ஷியார் டார்டனல்ஸ் ஜலசந்தியைத் தாக்கத் தீர்மானிப்பதற்கு ருஷியாவின் வியாபார முடக்கு ஒருகாரணமாகும்.

மற்ருெரு காரண மென்ன வென்ருல், காகஸஸ் பிரதேசத்தில் ஏராளமான துருக்கித் துருப்புகள் குவிந்து கொண்டு ருஷியரைத் தாக்கி வந்தார்கள். அச்சமயம் ருஷிய சேனையின் பெரும்பாகமும் ஆஸ்டிரியாவிலுள்ள கார்ப்பேத்தியன் மலைகளில் பிரமாத்மான சண்டை தொடங்கி யிருந்தது. அதனுல், காகஸஸ் பிரதேசத்தில்ருஷியரை துருக்கியர் அதிகமாய் நெருக்காமலிருப்பது அவசிய மாயிற்று. பிரிட்டிஷ் பிரஞ்சு படைகள் டார்டனல்ஸ் பிரதேசத்தைத் தாக்கினுல் அத்திசையில் துருக்கியரின் ராணுவ பலம் பிரித்து அனுப்பப் படுமென்பது கருத்து.

டார்டனல்ஸ் பிரதேசத்தில் பிரிட்டிஷார் யுத்த நடவடிக்கைகளைத்தொடங்கியதற்கு, அவ்வாறு செய்யும்படியாக ருஷியர் கேட்டுக் கொண்டதே முக்கிய காரணமாகும்.

ருஷியத் தலைநகரமாகிய பிட்ரோகிராட்டில் பிரிட்டிஷ் தூதர் பின் வருமாறு ஒரு ருஷியப் பத்திரிகைக்கு அறிவித்தார் :—துருக்கி யுத்தஞ்செய்வதாக அறிவித்த போது, காகஸஸ் பிரதேசத்திலிருந்த துருக்கிப் படைகளைப் பிரித்து விடுவதற்காக பிரிட்டிஷார் வேருெரு திசையில் யுத்த முயற்சி செய்யவேண்டு மென்று ருஷியா கிரேட் பிரிட்டனைக் கேட்டுக்கொண்டது. இரண்டு நோக்கங்களுடன் டார்டனல்ஸில் யுத்த நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்பட்டன ; முதலாவது காகஸஸ் பிரதேசத்தில் துருக்கி யரால் உண்டாகும் நெருக்கடியைக் குறைக்க வேண்டும், இரண்டாவது டார்டனல்ஸ் ஜலசந்தியைத் திறந்துவிட்டு, ருஷியாவின் தான்யங்களை ஏற்றுமதி செய்வதும் அந்நிய நாட்டுப் பொருள்களை ருஷியாவுக்கு அனுப்புவதும் சாத்தியமாகச் செய்யவேண்டும்.

வேறு சில காரணங்களுமிருந்தன. துருக்கியர் 1915-ம் வருஷம் பிப்ரவரி 2-ந் தேதி ஸூவெஸ்கால்வாயைத் தாக்கினுர்கள். சொற்ப துருக்கித் துருப்புகளே அங்கு தாக்கினபடியால், அவர்களை பிரிட்டிஷ் படைகள் எளிதாய் அழித்துவிட்டன. ஆனுல் மறுபடியும் துருக்கியர் அதிக பலத்துடன் அந்த முயற்சி செய்யக்கூடுமென்று பிரிட்டிஷார் எண்ணி அதைத் தடுக்கவும் நிச்சயித்தார்கள். பிரிட்டிஷ் கடற் படை டார்டனல்ஸ் ஜலசந்திவழியாய் மார்மோரா கடலுக்குள் நுழைந்து துருக்கித் தலைநகரத்தைத் தாக்க வேண்டு மென்றும்; அவ்வாறு தாக்கினுல், துருக்கியரின் ராணுவ பலம் பெரும்பாகமும் அத்திசையில் குவிந்து விடுமென்றும், துருக்கியர் வேறு எந்த திசையிலும் யுத்த முயற்சிகள் செய்ய மாட்டார்களென்றும் நினைக்கப்பட்டது.

## யுத்த நடவடிக்கைகளின் விசேஷம்.

துருக்கித் தலைநகரத்தை அணுக வேண்டு மென்பதற்காக பிரிட்டிஷார் உபயோகித்த ஏராளமான கப்பல் பலமும் ராணுவ பலமும் அவர்கள் செய்த விஸ்தாரமான ஏற்பாடுகளும் சாமான்ய மல்ல. அந்த முயற்சியானது அவர்கள் மேற் கரங்கத்தில் பிரதான சேனையைக்கொண்டு செய்த பெரு முயற்சிக்கு அடுத்த படியானதென்றே சொல்லவேண்டும். அதனுல், துருக்கியர் தங்கள் தலை நகரத்துக்கே அதனருகாமையில் ஆபத்து நேரிடுவதைக் கண்டார்கள் ; அந்த ஆபத்து நேரிடுமானுல் ஜெர்மன் கக்ஷியின் வன்மைக்கே கேடு வரக்கூடு மென்றும் "ஜெர்மானியரும் உணர்ந்தார்கள் ; அப்படிப்பட்ட யுத்த முயற்சியை, பிரிட்டிஷார் தொடங்கினபோது, அதைத் தடுப்பதற்காக—ஜெர்மானியரின் உதவியைக் கொண்டு துருக்கியர் அதிசயமான வீரமும் வல்லமையும் காட்டினது ஆச்சரிய மல்ல.

## பிரிட்டிஷாரின் ஏற்பாடுகள்.

டார்டனல்ஸ் ஜலசந்தியின் இரண்டு கரைகளிலும் அநேக துருக்கிக்கோட்

டைகள் காவலாயிருக்கின்றன. அந்த ஜலசந்தி மிகவும் குறுகலாயிருப்பதால், இருகரையிலுமுள்ள கோட்டைகள் அந்த வழியை மிகவும் எளிதாய்க் காக்கலாம். டார்டனல்ஸ் ஜலசந்திக்கரையை நேசக்கக்ஷியார் தங்கள் யுத்த கப்பல்களால் தாக்குவதோடு துருப்புகளாலும் தாக்கலாமென்று யோசனை செய்தார்கள். கிரீஸ் தேசத்துத் துருப்புகளை அனுப்புவதற்கு அத்தேசத்து கவர்ன்மெண்டாருடன் நேசக்கக்ஷியார் ஏற்பாடு செய்தார்கள். ஆனால், கிரீஸ் அரசர் அதற்கு சம்மதிக்காததால் கிரீஸ் துருப்புகளின் உதவி கடைசியில் கிடைக்கவில்லை. அதனால், நேசக்கக்ஷியார் தங்களுடைய சொந்தத் துருப்புகளைத் தயார் செய்து டார்டனல்ஸுக்கு அனுப்புவதாகத் தீர்மானித்தார்கள். ஆனால் அந்தத் துருப்புகள் தயாராவதற்குள்ளாக, பிரிட்டிஷார் தங்கள் கடற்படையின் வன்மையைக்கொண்டு அக்கோட்டைகளை அழித்து ஜலசந்திவழியாய் புகுந்து விடலாமென்று நினைத்தார்கள்.

### கடற்படையின் முயற்சி.

அதாவது, தளவாடங்கள், உணவுப் பொருள்கள் முதலிய அவசியமான சாமான்களை. சேகரித்து வைப்பதற்கும், யுத்த கப்பல்கள் தேவையான காலங்களில் பந்தோபஸ்தாய்த் தங்கியிருப்பதற்கும் அந்தத் தீவுகள் உபயோகித்துக் கொள்ளப்பட்டன.

பிரிட்டிஷ் பிரஞ்சு யுத்த கப்பல்கள் ஜலசந்திக்கு அருகிலுள்ள சில தீவுகளைப் பிடித்துக்கொண்டு அவைகளை ஆதார ஸ்தலமாகவைத்துக்கொண்டன. அந்த யுத்த கப்பல்கள் 1915ஆ பிப்ரவரி 19ந் தேதியன்று ஜலசந்தியின் கரைகளிலிருந்த கோட்டைகளைத் தகர்த்தன. யுத்த கப்பல்களிலிருந்த பெரிய பீரங்கிகள் துருக்கிக் கோட்டைகளின் மேல் சில தினங்களாக ஓயாமல் குண்டுகளைப் பொழிந்தன. ஆனால் இடையில் புயற்காற்றும் கடல் கொந்தளிப்பும் உண்டானபடியால், யுத்த கப்பல்கள் தங்கள் பீரங்கிகளை, சரியானபடி உபயோகிக்க முடியவில்லை. யுத்த கப்பல்கள் அக்கோட்டைகளின் மேல் சுடுவதை நிறுத்திக் கொண்டபோது, துருக்கியர் அந்த கோட்டைகளை பழுதுபார்த்து மறுபடியும் வலுப்படுத்தினார்கள். துருக்கியர் தங்கள் பீரங்கிகளை கடற்கரைக் கருகில் மறைவாய் வைத்து பந்தோபஸ்து செய்திருந்தார்கள். அதனால், யுத்த கப்பல்கள் ஜலசந்திக்குள் நுழைய முயன்றபோது, துருக்கியரின் பீரங்கிகள் திடீரென்று உக்கிரமாய்ச் சுட்டன. அதன்பிறகு யுத்த கப்பல்கள் மறுபடியும் தாங்கள் பீரங்கிகளால் துருக்கிக் கோட்டைகளைத் தகர்க்க ஆரம்பிக்கவே அடிக்கடி புசற் காற்றடித்தபடியால் நல்ல பலன் கிடைக்கவில்லை.

### துருப்புகளின் தாமஸம்.

துருப்புகளைக் கடற்கரையில் இறக்கி டார்டனல்ஸ் ஜலசந்திக்கரையை வசப்படுத்திக்கொள்ளுவதே சரியானமுறை என்று தீர்மானிக்கப்பட்டது. பிரஞ்சு பிரிட்டிஷ் துருப்புகளும், பீரங்கிகளும், தளவாடங்களும், ஈஜிப்டிலிருந்து சாதாரண கப்பல்களில் ஏற்ற, டார்டனல்ஸுக்கு அருகிலுள்ள ஒரு தீவில் தயாராகக் காத்திருந்தன. பிரிட்டிஷ் தளகர்த்தர்களுள் ஒருவராகிய ஸர் அயன் ஹாமில்டன் அந்த நேசப்படைகளுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டார். அவர் லண்டனிலிருந்து மார்ச்சு 13-ந் தேதி புறப்பட்டு ஒரு புதிய பிரிட்டிஷ் யுத்தகப்பலில் அதி விரைவாய்ப் பிரயாணஞ் செய்து டார்டனல்ஸுக் கருகில் 17-ந் தேதிவந்து சேர்ந்தார். டார்டனல்ஸ் கரையில் இறக்கப்படுவதற்காக பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் கப்பல்களில் தயாராய் ஏற்றி வைக்கப்பட்டிருந்தன. ஆனால் ஸர் அயன் ஹாமில்டன் அந்த கப்பல்களைப் பார்வை யிட்ட போது அவைகளில் தளவாடங்களெல்லாம்

சரியானபடி அடுக்கிவைக்கப்படவில்லையென்று கண்டார். தளவாடங்களைக் கரையில் சீக்கிரமாய் இறக்கிவிடும்படியாயும், கரையிலிறங்கும் துருப்புகளுக்கு சாமான்கள் உடனே உபயோகப்படும் படியாயும் அவைகளெல்லாம் கப்பல்களில் கிரமமாய் அடுக்கிவைக்கப்படவேண்டுமென்று அவர் அபிப்பிராயப்பட்டார். ஆகையால் அவர் அந்தக் கப்பல்களையெல்லாம் மறுபடியும் ஈஜிப்டுக்கு அனுப்பி அங்கே சரியானபடி சாமான்களை ஏற்றிக்கொண்டு வரும்படி அறிவித்தார். இதற்கு சில தினங்களாகுமாகையால், இடையில், யுத்த கப்பல்கள் ஒரு பெரிய முயற்சி செய்து பார்க்கலாமென்று யோசனை செய்யப்பட்டது.

## கடைசியான கடற்படை முயற்சி.

மார்ச்சு 18ந்தேதி, பிரஞ்சு பிரிட்டிஷ் யுத்தகப்பல்களில் மூன்று கூட்டங்கள் புறப்பட்டன. அந்த கப்பல்கள் இரண்டு பக்கங்களிலும் தங்கள் பீரங்கிகளையெல்லாம் முழு உக்கிரத்துடன் சுட்டுக்கொண்டே டார்டனல்ஸ் ஜலசந்திக்குள் நுழைந்தன. துருக்கியரின் பீரங்கிகளும் கடுமையாய்ச் சுட்டன. இவ்வாறு பீரங்கிச் சண்டை சிறிது நேரம் கடுமையாய் நடந்தபிறகு, சில யுத்தகப்பல்கள் திடீரென்று வெடித்து முழுகிப்போயின. துருக்கியர் அந்த ஜலசந்தியில் கடற்சுரங்கங்களை மிதக்கவிட்டார்கள். அந்த ஜலசந்தியில் நீரோட்டம் வேகமாயிருப்பதால், அந்த சுரங்கங்கள் வேகமாய் மிதந்துவந்து யுத்தகப்பல்களின் மேல் மோதின. ஒரு பிரஞ்சு சண்டைக் கப்பலும் இரண்டு பிரிட்டிஷ் சண்டைக்கப்பல்களும் அவ்விதம் சுரங்கத்தில் மோதி முழுகிப்போயின. மற்றொரு பிரிட்டிஷ் சண்டைக் கப்பல் பலமாய்ச் சேத மடைந்தது. வேறொரு பிரஞ்சு சண்டைக்கப்பல் துருக்கியரின் பீரங்கியிலிருந்து சுடப்பட்ட குண்டுகளால் அடிபட்டு சேதமடைந்தது. அதன் பிறகு, யுத்த கப்பல்களால் தாக்குமெண்ணத்தை நேசக்கக்ஷியார் கைவிட்டார்கள். அதற்குள்ளாக பிரஞ்சு பிரிட்டிஷ் துருப்புகள் எப்ரல் 25ந் தேதி யன்று ஜல சந்திக்கரையில் இறக்கப்படுவதற்குத் தயாராகி விட்டன. பிப்ரவரிமாதம் முதற் கொண்டு அன்று தினம் வரையில் துருக்கியர் ஜெர்மானியரின் உதவியைப் பெற்று ஜல சந்திக்கரையைக் காப்பதற்கு பலவித ஏற்பாடுகளையெல்லாம் செய்திருந்தார்கள்.

## துருப்புகள் இறக்கப்பட்டனர்.

டார்டனல்ஸ் ஜலசந்திக் கரையில் இறக்கப்படுவதற்காக, மொத்தம் 1,20,000 பேர் கொண்ட பிரஞ்சு பிரிட்டிஷ் துருப்புகள் தயாராயிருந்தனர், பிரிட்டிஷ் குடியேற்ற நாடாகிய ஆஸ்டிரேலியாவில் சேர்க்கப்பட்ட துருப்புகளும் இந்தியத் துருப்புகளும், ஆப்பிரிக்காவிலுள்ள பிரஞ்சு குடியேற்ற நாட்டுத்துருப்புகளும் அதில் சேர்ந்திருந்தனர்.

அடுத்த பக்கத்திலுள்ள படத்தில், டார்டனல்ஸ் ஜலசந்தியானது பெரிய உருவத்தில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஜலசந்திக்கு வடக்கில் குறுகலாயும் நீளமாயுமுள்ள பிரதேசம் "கலிபோலி" என்று சொல்லப்படும், இந்த கலிபோலி பிரதேசத்தின் தெற்கு முனையில் பிரிட்டிஷ் படைகள் இறங்கி சுமார் ¼ மைல் நீளமுள்ள பூமியை வசப்படுத்திக் கொண்டன; இந்த பூமி கறுப்புப்புள்ளி போட்டு காண்பிக்கப் பட்டிருக்கிறது. இந்த பூமிக்கு சற்று வடக்கே, எஜியன் கடலோரமாக வேறு பல பிரிட்டிஷ் படைகள் இறங்கினதையும் அந்த மாதிரி கறுப்புப்புள்ளிகளால் காண்பிக்கப் பட்டிருக்கிறது. மற்ற விவரங்களெல்லாம் பின்னால் சொல்லப்படும்போது இந்தப் படத்தில் பார்த்து அறிந்து கொள்ளலாம்.




கலிபோலி தீபகற்பத்தில் கடலோரமாக இரண்டு முக்கியமான ஸ்தலங்களில் அந்தத் துருப்புகளை இறக்க வேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டது. ஆனால் துருக்கியரின் கவனத்தை மாற்றுவதற்காக வேறு சிலஇடங்களிலும் துருப்புகளை இறக்குவதுபோல் வெளிக்காட்ட வேண்டுமென்றும் யோசனை செய்யப்பட்டது. கலிபோலி தீபகற்பத்தின் மேற்கு முனையில், ஸெடில் பாஹர் என்ற கோட்டைக்கு அருகில் சில துருப்புகள் இறக்கப்பட்டன. அந்த கோட்டை பிரிட்டிஷ் யுத்த கப்பல்களால் ஏற்கெனவே அழிக்கப் பட்டிருந்தது. இதற்குச்சற்று வடகிழக்கில் சபாடேபே என்ற ஸ்தலத்துக் கருகில் ஆஸ்டிரேலியா நாட்டுத் துருப்புகளெல்லாம் இறக்கப்பட்டன. பிரிட்டிஷார் அந்தத் துருப்புகளை இறக்குவதற்காகச் செய்து வந்த ஏற்பாடுகளைப் பற்றி அதிக இரகஸ்யம் பாராட்டவில்லை. அதனால், கடலோரத்தில் இறங்க வந்த நேசப் படைகளைத் தாக்குவதற்கு துருக்கியர் தயாராயிருந்தனர். ஆயினும் யுத்த கப்பல்களிலுள்ள பீரங்கிகளின் உதவியால், பிரிட்டிஷ் துருப்புகள் மிக்க துணிகரமாய் கடற் கடையில் இறங்கி விட்டார்கள். மொத்தம் 60, 000 துருப்புகள் முதலெடுப்பில் இறங்கினார்கள்.

நேசப்படைகள் கலிபோலி தீபகற்பத்தில் இறக்கப்பட்டதற்கு காரணமென்னவென்றால், டார்டனல்ஸ் ஜலசந்தியின் ஒரு கரையை வசப்படுத்திக்கொள்ள வேண்டு மென்பதாகும். அந்த ஜலசந்தியானது நெடுகவே குறுகலாயிருந்த போதிலும் ஓரிடத்தில் அதிகமாய்க் குறுகி ஒன்றரை மைல் அகலங்கூட இல்லை. அவ்வளவு நெருக்கமான வழியில் யுத்த கப்பல்கள் துருக்கிக் கோட்டைகளை எதிர்த்துக்கொண்டு செல்வது சாத்தியமல்ல. ஆகையால், நேசத்துருப்புகள் கடற்கரையில் இறங்கி, கலிபோலி பிரதேசத்துக்குக் குறுக்கே சென்று, அந்த நெருக்கமான ஜலசந்திக்கரையிலுள்ள மெய்டாஸ் நகரம் வரையில் பூமியை வசப்படுத்திக் கொள்ள நோக்கங் கொண்டிருந்தன. அப்போது மெய்டாஸ் நகரம் வரையி

ளுள்ள ஜலசந்தியின் வடக்குக்கரை அவர்களுக்கு வசமாகி விடும்.

### துருப்புகளின் நோக்கம்.

ஸெடில் பாஹர், கபாடெபி, ஆகிய இவ்விரண்டு ஸ்தலங்களில் நேசப் படைகள் வெவ்வேருய் இறக்கப்பட்டன என்று சொல்லியிருக்கிறேம். அப்படைகளின் நோக்கம், மெய்டாஸ் நகரத்தை அணுக வேண்டுமென்பது. கபா டெபி என்ற ஸ்தலத்திலிருந்து மெய்டாஸ் நகரம் சுமார் 5 மைல் தூரம் கிழக்கே இருக்கின்றது. கபா டெபியில் இறக்கப்பட்ட ஆஸ்டிரேலியாநாட்டுத்துருப்புகள் அந்த 5மைல் தூரம் முன்னேறிச்சென்று மெய்டாஸ் நகரத்தை அடைய வேண்டுமென்று எண்ணங்கொண்டிருந்தது. அதற்குத் தெற்கே ஸெடில் பாஹர் என்னும் இடத்தில் இறக்கப்பட்ட பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் மெய்டாஸ் நகரத்தை அடைவதற்கு சுமார் 14-மைல் முன்னேறவேண்டும். இந்தப்படைகள், வடக்கே இறக்கப்பட்ட ஆஸ்டிரிலேயாத் துருப்புகளுடன் சேர்ந்துகொண்டு அவ்வாறுமுன்னேற வேண்டுமென்று நோக்கங்கொண்டிருந்தன.

### கடலோரத்தில் சண்டைகள்.

ஏப்ரல் 25-ந் தேதி கபாடெபியில் இறக்கப்பட்ட ஆஸ்டிரேலியாத்துருப்புகள் துருக்கியருடன் வெகு கடுமையாய் சண்டை செய்த பிறகே பூமியில் காலடி வைக்க சாத்தியப்பட்டது. கடலோரத்தில் சமுத்திர ஜலத்துக்கடியில்இரும்புக்கம்பிவலைகளை துருக்கியர் மறைவாய்க் கட்டியிருந்தனர்; தரையில் அநேக அரண்களையும் கட்டியிருந்தனர்; நல்ல மறைவான இடங்களில் பீரங்கிகளையும் அமைத்திருந்தனர். நேசக்கக்ஷியார் தங்கள் துருப்புகளை துருக்கியருக்குத் தெரியாமல்திடீரென்று இறக்க இல்லை. ஆகையால், அத்துருப்புகளை இறங்க விடாமல் துருக்கியர் தடுக்க முயற்சி செய்தார்கள். ஆயினும், ஆஸ்டிரேலியாத் துருப்புகள் கடற்கரையில் இறங்கி சுமார் ஒரு மைல் தூரத்துக்கு பூமியை வசப்படுத்திக்கொண்டார்கள். அதற்கப்பால் துருக்கியர் ஜெர்மானியரின் உதவியைக்கொண்டு மிக்க வன்மைகொண்ட அரண்களைக்கட்டியிருந்ததால், ஆஸ்டிரேலியத் துருப்புகளும், அந்த, ஒரு மைல் தூரத்தில் அரண்களைக் கட்டி நிலைபெற்று விட்டன.

தெற்கே ஸெடில் பாஹர் என்னும் இடத்தைச்சுற்றி பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் ஏப்ரல் 25ந் தேதி இறக்கப்பட்டன. அந்தப் படைகள் கரையில் இறங்கினபோது துருக்கியரை உக்கிரமாய் எதிர்க்க வேண்டியிருந்தபடியால் அப்படைகள் கடலோரத்தில் வெவ்வேருய்ப் பிரிந்திருந்தன. அடுத்த இரண்டு தினங்களில், அதாவது 26, 27ந் தேதிகளில், வெவ்வேருய்ப் பிரிந்திருந்த பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் ஒரே தொடர்ச்சியாய் நிலை பெறும்படி செய்யப்பட்டன. அந்தப்படைகள் இன்னும்கடற்கரை யோரமாகவே இருந்தபடியால், தளவாடங்களையும் மற்ற சாமான்களையும் இறக்கி வைப்பதற்குஅங்குபோதுமான இடமில்லை. ஆகையால், 28ந்தேதி, அந்த பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் வேறு பல துணைப்படைகளைப் பெற்று துருக்கியருடன் சண்டைசெய்து முன்னேறிச் சென்றன. ஆனல் துருக்கியர் உடனே முன் வந்து தாக்கினபடியால் கடலோரத்திலிருந்து ஒரு மைல்தூரம் வரையில் தான் பிரிட்டிஷார் வசப்படுத்திக்கொள்ளச் சாத்தியப்பட்டது. அந்தப் படைகள் மெய்டாஸ் நகரத்தை அடையவேண்டுமென்று நோக்கங்கொண்டிருந்தன என்று சொன்னேம். அந்த நகரத்துக்குச் செல்லுகிறபாதை கிரிதியா கிராமத்தின் வழியாய்ச் செல்கிறது. அந்த கிராமத்துக்குக்கிழக்கே, அச்சிபாபா என்ற பெரிய குன்றின்மேலுள்ள கோட்டைகள் காவலாயிருக்கின்றன. ஆகையால், நேசப்படைகள்

முன்னேறிச் செல்ல வேண்டுமானால், கிரிதியா கிராமத்தையும் அச்சிபாபா குன்றையும் பிடிப்பது அவசியமாயிற்று.

### கிரிதியா கிராமத்தில் நடந்த சண்டைகள்.

கடலோரத்திலிருந்து 4 மைல் தூரத்திலுள்ள கிரிதியா கிராமத்தைப் பிடிப்பதற்காக, மே மாதம் 1-ந் தேதியன்று முதற்சண்டை ஆரம்பமாயிற்று. அன்று தினம் இரவில் துருக்கியர் பிரிட்டிஷாரை உக்கிரமாய்த் தாக்கினார்கள். ஆனால் பிரிட்டிஷார் துருக்கியருக்கு அதிக சேதமுண்டுபண்ணி தங்களுடைய இருப்பிடத்தைக் காத்துக் கொண்டார்கள். மறு தினம் (2-ந் தேதி) பிரிட்டிஷார் முன்புறஞ்சென்று துருக்கியரைத் தாக்கினார்கள். பிரிட்டிஷ் துருப்புகள் வெகுதூரம் முன் சென்ற போதிலும், துருக்கியர் இடையிடையே மெஷின் பீரங்கிகளை மறைவாய் வைத்துச் சுட்டபடியால் பிரிட்டிஷ் துருப்புகள் முன்பிருந்த இடத்துக்குப் பின்வாங்கும்படி நேரிட்டது. துருக்கியர் தங்களுடைய மெஷின் பீரங்கிகளையும் சாதாரண பீரங்கிகளையும் இரகஸ்யமான இடங்களில் வைத்து திடீரென்று மிகக்கடுமையாய் உபயோகித்தார்கள். தவிர அவர்கள் செடி, மரங்கள் அடர்ந்த இடங்களில் இரும்புக்கம்பி வலைகளையும் விஸ்தாரமாய் கட்டிவைத்து நேசப்படைகளின் முன்னேற்றத்தைத் திடீரென்று இடையிடையே தடுத்து சேதப்படுத்தினார்கள்.

### இரண்டாவது சண்டை.

கிரிதியா கிராமத்தை அணுகுவதற்காக, பிரிட்டிஷார் இரண்டாம் முறை பெரிய சண்டை செய்தார்கள். அது மே மாதம் 6, 7, 8-ந் தேதிகளில் நடைபெற்றது. பிரிட்டிஷார் துணைப் படைகளைப்பெற்றார்கள். யுத்தக்கப்பல்களிலிருந்து பெரிய பீரங்கிகளெல்லாம் வெகு உக்கிரமாய் துருக்கியரின் ஸ்தலங்களின்மேல் குண்டுகளைப் பொழிந்தன. தரைப்படையைச் சேர்ந்த பீரங்கிகளும் நெடுநேரம் ஓயாமற் சுட்டன. அவ்வாறு துருக்கியரின் இருப்பிடங்களை யெல்லாம் கடுமையாய்த் தகர்த்தபிறகு பிரிட்டிஷ் பிரஞ்சுபடைகள் முன்புறஞ் சென்று தாக்கின. ஆனால், முன்போலவே, துருக்கியரின் பீரங்கிகளும் மெஷின் பீரங்கிகளும் அங்கங்கே பிரிட்டிஷ் பிரஞ்சு துருப்புகளின் மீது உக்கிரமாய் நெருப்புப் பொழிந்தன. அவ்வாறு, மூன்று தினங்களாக மிகுந்த விடா முயற்சியுடன் பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் சண்டை செய்து கிரிதியா கிராமத்தை அடைய முயற்சி செய்தன. கடைசியில் அப்படைகள் 500 கஜம் தூரம் முன்புறஞ் சென்று நிலைபெற்றன. ஆனால் கிரிதியா கிராமத்தை அணுகித் தாக்க முடியவில்லை.

கலிபோலி பிரதேசம் முழுவதிலும் குன்றுகளும் பள்ளத்தாக்குகளும் மரஞ்செடிகளும் நிரம்பியிருக்கின்றன ; அதனால் நேசக்கக்ஷியாரின் யுத்தக் கப்பல்களாவது பீரங்கிப்படைகளாவது துருக்கியருடைய இருப்பிடங்களை குறிப்பாய் அறிந்து தகர்க்க முடியவில்லை. மேலும், ஜெர்மன் ராணுவ உத்தியோகஸ்தர்கள் துருக்கியருக்கு உதவி செய்து, மிக்க வன்மை பெற்ற அரண்களை யுக்தியாய்க் கட்டியிருந்தார்கள். மேற்கரங்கத்தில் நேசக்கக்ஷியாரும் ஜெர்மானியரும் அகழ்களையும் குகைகளையும் தோண்டி, பூமிக்கடியில் மறைந்த வண்ணமாகவே போர் புரிவது போல, கலிபோலி பிரதேசத்திலும் துருக்கியர் போர் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அம்மாதிரியான சண்டைக்கு அந்த மலைப் பிரதேசம் வெகு அனுகூலமாயிருந்தது. அதனால், பெரிய கோட்டைகளை முற்றுகை போட்டு ஒவ்வொரு காவலையும் பிடித்து மெதுவாக முன்

செல்வது போலவே, கலிபோலியிலும் யுத்தம் நடத்தும்படியாயிற்று. இரண்டு கக்ஷிப்படைகளும் திறந்த வெளியில் பெரும் போர் விளைத்து வெற்றி பெறுவதென்பது அங்கு சாத்தியமில்லை.

## இன்னும் இரண்டு சண்டைகள்.

கிரிதியா கிராமத்தைப் பிடிப்பதற்காக பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் ஜூன்மீ 4-ந்தேதி மூன்றாவது சண்டையை ஆரம்பித்தன. துருக்கியரின் அரண்களுக்கு அடியில் பிரிட்டிஷார் அநேக சுரங்கங்களை அறுத்திருந்தார்கள். அந்த சுரங்கங்களை வெடிக்கச் செய்து பிரிட்டிஷார் முன்புறஞ் சென்று தாக்கினார்கள். அவ்வாறு அவர்கள் சில அரண்களைப் பிடித்து 500 கஜ தூரம் முன்னேறினார்கள். மேற்கரங்கத்தில் நடக்கும் சண்டையைப் போலவே, இங்கு துருக்கியரின் அரண்களை ஒவ்வொன்றாய்த் தாக்கிப் பிடிக்க வேண்டியிருந்தது. ஜூலை 12-ந் தேதி, மறுபடியும் பிரிட்டிஷார் சுரங்கங்களை வெடிக்கச்செய்தும் பீரங்கிகளால் தகர்த்தும் சில அரண்களைப் பிடித்தும் 400 கஜதூரம் முன்சென்றார்கள். கிரிதியா கிராமத்துக்காக இது நான்காம்முறை நடந்த சண்டையாகும். இடையிடையே துருக்கியரும் பிரஞ்சு பிரிட்டிஷ் துருப்புகளின் இருப்பிடங்களைக் கடுமையாய்த் தாக்கிக் கொண்டிருந்தார்கள். ஆயினும் பிரஞ்சு பிரிட்டிஷ் படைகள் கிரிதியா கிராமத்தைத் தாக்குவதற்குப் போதுமான தூரம் முன்னேறவில்லை.

ஆகவே ஜூலை மாதக் கடைசியில் டார்டனல்ஸ் பிரதேசத்தின் மேற்கு முனையில் இறங்கிய பிரஞ்சு பிரிட்டிஷ் படைகளின் நிலைமை அவ்வாறு இருந்தது. அவைகள் கடற்கரையிலிருந்து சுமார் $4\frac{1}{2}$ மைல் தூரம் முன்னேறியிருந்தன. ஆனால், கிரிதியா கிராமத்தைப் பிடிக்கவேண்டுமென்ற நோக்கம் நிறைவேறாமலிருந்தது.

## ஆஸ்டிரேலியாத் துருப்புகளின் சண்டை.

கபாடேபியில் இறக்கப்பட்ட ஆஸ்டிரேலியத் துருப்புகள் கடற்கரையிலிருந்து ஒரு மைல் தூரம் முன்னேறினார்கள் என்று சொன்னோம். ஜூலை மாதக் கடைசியில் அவர்களுடைய நிலைமையில் அதிக மாறுதல் ஒன்றுமில்லை. துருக்கியர் அந்த ஆஸ்டிரேலியத் துருப்புகளை அடிக்கடி தாக்கி வந்ததோடு, தாக்கும்போதெல்லாம் அதிக உக்கிரத்துடன் சண்டை செய்தார்கள். ஆயினும் ஆஸ்டிரேலியத் துருப்புகள் தாங்கள் நிலைபெற்றிருந்த இடத்தில் சிறிதும் அசையாமல், துருக்கியருக்கு ஒவ்வொரு சண்டையிலும் அதிக சேதத்தை உண்டுபண்ணினார்கள். அம்மாதிரியான சண்டைகளில், ஜூன் 29ந்தேதி யன்று என்வர்பாஷா துருக்கித் துருப்புகளை நேரில் செலுத்தி ஆஸ்டிரேலியாத் துருப்புகளைத் தாக்கினபோதும் அவருக்கு யாதொரு பயனும் கிடைக்கவில்லை.

## பிரிட்டிஷாரின் புதிய யோசனை.

துருக்கியர் துணைப்படைகளைச்சேர்ப்பதற்குள்ளாக, அவர்களைத் தாக்கிப் பின்தள்ள வேண்டுமென்று ஸர் அயன் ஹாமில்டன் தீர்மானித்தார். துருக்கியர் புதிய துருப்புகளைப்பழக்கி அவர்களுக்குத் தேவையான ஆயுதங்களையும் பீரங்கிகளையும் குண்டுகளையும் மற்ற தளவாடங்களையும் ஜெர்மனியிலிருந்து தருவித்துச் சேகரிப்பதற்குத் தாமஸமாகும். அதற்குள்ளாக பிரிட்டிஷ் படைகளை அதிகமாய்த் திரட்டி வெற்றிபெறுவதே சாத்தியமென்று ஸர் அயன் ஹாமில்டன் அபிப்பிராயப்பட்டார். ருஷியத் துருப்புகள் கருங்கடல்வழியாக துருக்கியின் கடற்கரையில் இறக்கப்படுமென்று எதிர்பார்த்தபடி நடைபெறாதென்று அவர் அறிந்துகொண்டார். ஆகையால் ஒரு லக்ஷம் பேர்கொண்ட புதிய பிரிட்டிஷ் படைகளை இங்கிலாந்திலிருந்து

அனுப்ப வேண்டுமென்று அவர் மே மாதத்தில் லார்ட் கிச்னருக்கு அறிவித்தார். அதன்படியே ஆகஸ்ட் மாத ஆரம்பத்தில் அனுப்பப் படுமென்று அவருக்குப்பதில் கிடைத்தது. அந்தப் புதிய படைகளைப் பெற்று, கலிபோலி பிரதேசத்தை வசப்படுத்திக் கொள்வதற்காக முடிவான சண்டை செய்து வெற்றி பெறவேண்டுமென்று ஸர்அயன் ஹாமில்டன் யோசனை செய்தார்.

## ஸாரிபேர் குன்றில் முக்கியமான சண்டை.

அந்த புதிய பிரிட்டிஷ் துருப்புகளை எவ்விதமாய்உபயோகிப்பதென்பதைப் பற்றி ஸர்அயன் ஹாமில்டன் முன்னதாகவே யோசனை செய்திருந்தார். பிரிட்டிஷ் படைகளின் நோக்கம் மெய்டாஸ் நகரத்தைப் பிடிப்பதென்று சொன்னோம். ஆஸ்டிரேலியாத் துருப்புகள் இறங்கியிருந்த கபாடேபி என்ற இடமானது மெய்டாஸுக்கு 5மைல் தூரத்தில் தான் இருக்கிறதென்றும் சொன்னோம். அந்த ஆஸ்டிரேலியத் துருப்புகள் கடலோரத்திலிருந்து சுமார் 1மைல் தூரம் ஏற்கெனவே முன்னேறியிருந்தனர். அத்துருப்புகளுக்கு எதிரே ஸாரிபேர் என்ற பெரிய குன்று இருக்கிறது. அதுசுமார் 300அடிஉயரமிருப்பதால், அதன் சிகரத்திலிருந்து மெய்டாஸ்நகரத்துக்குச் செல்லும் பாதையும் மார்மோரா கடலும், தென்படுவதைக் காணலாம். அந்த குன்றைப் பிடிக்க வேண்டு மென்று பிரிட்டிஷ் சேனாதிபதி தீர்மானித்தார். அதைப் பிடிப்பதற்கு அனுகூலமாயிருப்பதற்காக, அதற்கு வடக்கே, ஸூவ்லா குடாக்கரையில் புதிய பிரிட்டிஷ் படைகளை இறக்கவேண்டு மென்றும் யோசனை செய்யப்பட்டது. அந்தத் துருப்புகள் கரையில் இறங்கி ஆஸ்டிரேலியாத் துருப்புகளுக்குப் பக்கத்திற்சென்று உதவி செய்யவேண்டும்.

புதிதாய் வந்த பிரிட்டிஷ் துருப்புகளில் ஒரு பாகம் ஆஸ்டிரேலியாத் துருப்புகளுக்கு உதவியாக அனுப்பப்பட்டது. மற்ற துருப்புகளெல்லாம் ஸூவ்லா குடாக் கரையில் இறக்கப்படும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. ஆகஸ்ட் 4, 5, 6ந் தேதிகளில் ஆஸ்டிரேலியப் படைகளின் பீரங்கிகள் துருக்கியரின் இருப்பிடங்களைத்தகர்த்தன பிறகு, 7ந் தேதி யன்று அந்தத் துருப்புகள் ஸாரிபேர் குன்றின்மேல் வெகுதூரம் ஏறிச்சென்றன. 8ந்தேதி யன்று அந்தத்துருப்புகள் வெகு ஆச்சரியமானவீரத்துடன்சண்டைசெய்து அக்குன்றின் சிகரங்களில் ஒன்றைப் பிடித்துக்கொண்டனர். பிறகுஅதற்குப் பக்கத்திலிருந்த பாகத்தையும் பிடித்துக்கொண்டனர், அங்கிருந்த பிரிட்டிஷ் துருப்புகளுக்குவெகுதூரத்தில் மெய்டாஸ் நகரத்துக்கப்பாலுள்ள சமுத்திரம் புலப்பட்டது. ஆனால் துருக்கியர் புதிய படைகளைக் கொண்டுவந்து ஆஸ்டிரேலியப் படைகளைத் தாக்க ஆரம்பித்தன. பிரிட்டிஷ் துருப்புகள் குடி ஜலம் இல்லாமல் தாகத்தால் மிகவும்வருந்திக்கொண்டும்ஓயாத சண்டையால் களைத்துப் போயும் இருந்தனர். அந்தத்துருப்புகள் அந்த சமயத்தில் முன்பு ஏற்பாடு செய்தபடி ஸூவ்லா குடாவிலிறங்கிய புதிய பிரிட்டிஷ் படைகளின் உதவியை எதிர்பார்த்தனர். ஆனால் ஸூவ்லா குடாவில் இறங்கிய அந்த பிரிட்டிஷ் படைகள் அவ்விடத்துக் கருகில் காணப்படவில்லை; ஏனெனில் அந்தத் துருப்புகளின் நடவடிக்கைகளெல்லாம் தவறாய் நடத்தப்பட்டுப் போய் விட்டது. பிறகு, ஆகஸ்ட் 9ந் தேதி குன்றின் சிகரத்திலிருந்த பிரிட்டிஷ் படைகளை துருக்கியர்உக்கிரமாய்த்தாக்கினார்கள். அந்த பிரிட்டிஷ் படைகளுக்கு அனுகூலமாயிருக்கும்படி அனுப்பப்பட்ட வேறு சில பிரிட்டிஷ் படைகள் வழி தெரியாமல் சிக்கிக்கொண்டு மிகுந்த சேதத்துடன் பின் வாங்கின: இந்தத் துணைப்படைகள் பின் வாங்கி விட்ட பிறகு சிகரத்தின் மேலிருந்த படை

கள் நிலைத்திருக்க முடியாதென்று நிச்சயமாகி விட்டது. ஸாரிபேர் என்ற மகா முக்கியமான குன்றின் மேலுள்ள சிகரத்தில் பிரிட்டிஷார் நிலை பெற்று விடுவார்களானால், டார்டனல்ஸ் பிரதேச முழுவதையும் காலி செய்யும்படி வருமென்று துருக்கியர் அறிந்தார்கள். அதனால் துருக்கியர் துணைப்படைகளைப்பெற்று மிக்க உக்கிரத்துடன் சண்டை செய்து ஆகஸ்ட் 10-ந் தேதி அந்த சிகரத்தை, பிரிட்டிஷாரிடமிருந்து பிடித்துக் கொண்டார்கள்.

அதனால், ஸாரிபேர் குன்றைப்பிடிப்பதற்காக பிரிட்டிஷார் செய்த பிரயத்தனம் நிறுத்திவிடப்பட்டது. அந்த குன்றைத்தாக்கிக் கொண்டிருந்த பிரிட்டிஷ் துருப்புகளையெல்லாம் துருக்கியர் வெகுநேரம் உக்கிரமாய்த்தாக்கிப் பின் தள்ளினார்கள். பிரிட்டிஷ் துருப்புகள் துருக்கியருக்கு ஏராளமான சேதத்தை விளைவித்துப் பின் வாங்கி, கடைசியில் சௌகரியமான இடங்களில் நிலைபெற்றனர். அந்த ஸாரிபேர் குன்றின்மேல் கடைசியாக நடந்த சண்டையின் கடுமையைப்பற்றி ஸர் அயன் ஹாமில்டன் பின் வருமாறு அறிவித்தார் :— "துருப்புகளோடு சேர்ந்து நின்று சேனைத்தலைவர்களும் சண்டை செய்தனர்; துருப்புகள் தங்கள் யுத்த ஆயுதங்களைப் போட்டு விட்டு கைகலந்து தாக்கினார்கள். அவ்வளவு உக்கிரமான சண்டையை விவரிக்கமுடியாது. துருக்கியர் மேன்மேலும் வந்து மிகவும் சிறப்பாய் சண்டை செய்தனர். நம்முடைய துருப்புகள் நின்ற விடத்திலேயே நின்றன. அவர்கள் அநேக அற்புதமான வீரச் செயல்களால் தங்கள் ஜாதியாரின் பூர்வீகப் பெருமைகளைக்காத்தனர். அவர்கள் அசையவில்லை; நின்ற இடத்திலேயே சண்டைசெய்து மாண்டனர்." ஸாரிபேர் குன்றின் சிகரத்தை திரும்பிப் பிடிப்பதற்குள்ளாக துருக்கியர் பலமான சேதத்தை அடைந்து விட்டனர்.

## ஸுவ்லா குடாவில் புதியபிரிட்டிஷ் படைகள்.

ஸாரிபேர் குன்றின்சிகரத்தில் சண்டை செய்த பிரிட்டிஷ் துருப்புகளும் ஸுவ்லா குடாக்கரையில் இறங்கின வேறு பல பிரிட்டிஷ் துருப்புகள் உதவிசெய்திருக்க வேண்டுமென்றும், ஆனால் அவர்கள் தவறி விட்டார்களென்றும் சொல்லி யிருக்கிறோம். ஸுவ்லா குடாவில்நடந்த விஷயத்தைப்பற்றிச் சொல்வோம். இங்கிலாந்திலிருந்து புதிதாய் அனுப்பப்பட்ட பிரிட்டிஷ் துருப்புகளின் பெரும்பாகமும் ஸுவ்லா குடாக்கரையில் இறக்கப்படும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. ஆகஸ்ட் 6ந் தேதி இரவு அந்தத் துருப்புகள் துருக்கியருக்குத் தெரியாமல் குடாக்கரையில் பற்பல இடங்களில் இறங்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால் அந்தத் துருப்புகள் யுத்தத்தில் அனுபோகமில்லாமல் புத்தப்புதிதாய் இருந்தபடியாலும், நல்ல இருட்டாயிருந்தபடியாலும் சிற்சில படைகள் குறிப்பிட்ட இடங்களில் இறங்காமல் வேறிடங்களுக்குச் சென்றன. 7ந் தேதி அந்தப் படைகளெல்லாம் ஒழுங்கு செய்யப்பட்டன. ஆனால் பொதுவாய் அந்தப் படைகள் போதுமான சுறுசுறுப்புகாட்டாமல் மிகவும் தாமஸமாய் முன் செல்ல ஆரம்பித்தன. குடிஜல மில்லாமல் அவைகள் மிகவும் வருந்திக் கொண்டிருந்தன. அதனால் சிற்சில படைகள் தங்களுக்குக் குறிப்பிடப்பட்ட இடங்களைப் பிடித்துக் கொள்ளவில்லை, ஸுவ்லாகுடாவில்நடவடிக்கைகள் சரியானபடி நடைபெறவில்லை என்று ஸர் அயன் ஹாமில்டன் அறிந்து 8-ந் தேதி மாலை அக்குடாவுக்கு நேரில் வந்துவிட்டார். அன்று தினந்தான் ஸாரிபேர் குன்றின்மேல் கடுமையான சண்டை செய்துகொண்டிருந்த துருப்புகளுக்கு வேறு உதவி அத்தியாவசியமாய் வேண்டியிருந்தது. ஆகையால் ஸர் அயன் ஹாமில்

டன் ஸுவ்லா குடாவுக்கு நேரில் வந்து அங்கிருந்து துருப்புகளை விரைவாய் முன் செல்லும்படிச் செய்ய வேண்டுமென்று உறுதி கொண்டார். அவர் எழுதிய ரிபோர்ட்டில் பின் வருமாறு குறிப்பிடுகிறார்.

"(ஸுவ்லா குடாவில் இறங்கிய துருப்புகளுக்குத் தலைமை வகித்த) ஜெனரல் ஸ்டாபோர்ட், சத்துருக்கள் எதிர் பாராத விதமாய் தாம் வெற்றி பெறுவதே மிகவும் முக்கியமானதென்பதை அறிந்தார். ஆகையால் அவர் தமது படைத்தலைவர்களை முன்புறஞ் செல்லும்படிவற்புறுத்திச் சொன்னார். அவ்விதஞ் செய்யாவிட்டால்கடற்கரையில் அந்தத்துருப்புகளை சத்துருவுக்குத்தெரியாமல் இறக்கியதால் கிடைக்கக்கூடிய பலன்கள்போய் விடுமென்று உணர்ந்தார். ஆனால் படைத் தலைவர்கள் தாங்கள் முன்புறம் அசையமுடியாதென்று நம்பியிருந்ததாகத் தெரிகிறது. 6-ந் தேதி இரவிலும் 7-ந் தேதியிலும் பட்ட சிரமத்தால் துருப்புகள் களைத்துப் போயிருந்ததாக அவர்கள் சொன்னார்கள். குடிஜலமில்லாததால் அந்தப்புதிய துருப்புகள் வருந்தினார்கள். கடற்கரையில் குடிஜலம் கொடுப்பதற்காகச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகள் சரியானபடி நடக்கவில்லை, துருப்புகள் தங்களுடைய குவளைகளில் ஜலம்நிரப்பிக்கொள்வதற்காக, ஜலம் கொண்டுவரப்பட்ட தோல் பைகளை சில சமயங்களில் துளைத்தும் விட்டார்கள், துருப்புகளை ஏற்றிக் கொண்டுவந்த படகுகளிற் சில கடற்கரைக்கப்பால் சற்று தூரத்திலேயே கரை தட்டிப் போனபோது, அங்கிருந்து துருப்புகள் கடலில் நீந்திவந்து கரையிலிருந்த குடிஜலத்தைஎடுத்துக் கொண்டார்கள். துருப்புகள் இரவில் கடற்கரையில் இறங்கி சத்துருக்களோடு சண்டைசெய்வதால் உண்டாகக்கூடிய குழப்பத்தை மேற்சொல்லிய விஷயங்கள் அதிகமாக்கி விட்டன."

ஸர் அயன் ஹாமில்டன் ஸுவ்லா குடாக் கரையில் நேரில் சென்று, அங்கு சிதறிக் கிடந்த துருப்புகளையும் படைகளையும் ஒன்று சேர்த்துத் தீவிரமான நடவடிக்கைகளைத்தொடங்கினார். ஆனால், அதற்கு முன்பு நேர்ந்த காலதாமஸத்தால் துருக்கியர் அங்கு புதிய படைகளைக்கொண்டு வந்து பிரிட்டிஷாரைத் தாக்கினார்கள். ஆயினும் பிரிட்டிஷார் துருக்கியருக்கு மிகுந்த சேதத்தை விளைவித்து கொஞ்ச தூரம் முன்னேறினார்கள். ஆனால் அங்கு துருக்கியர் அரண்களைக் கட்டி பிரிட்டிஷாரின் முன்னேற்றத்தைத் தடுத்தார்கள். இதற்குள்ளாக, ஸாரிபேர் குன்றில் பிரிட்டிஷ் துருப்புகள் பின் வாங்கிவிடும்படி நேரிட்டதென்று சொல்லியிருக்கிறோம்.

ஆகஸ்ட் 16-ந் தேதி, அதுவரையில் நேர்ந்த சேதமெல்லாம்போக கலிபோலியிலிருந்த நேசப்படைகளின் தொகை பின் வருமாறு:—ஸுவ்லா குடாவில் 30,000 பேர்; கபாடெபியில் 25,000 பேர்; ஹெலிஸ் முனையில் 23,000 பிரிட்டிஷாரும் 17,000 பிரஞ்சுக்காரரும் இவர்களை எதிர்த்த துருக்கியரின் தொகை 1,10,000 பேருக்குக் குறைவில்லை.

## சிலமுக்கியமான காரணங்கள்

ஸர் அயன் ஹாமில்டன் புதியபிரிட்டிஷ் படைகளைப் பெற்று ஸாரிபேர் குன்றைப் பிடிக்கவேண்டுமென்றும், ஸுவ்லா குடாக்கரையிலிருந்து வெகு தூரம் முன்னேறிச் செல்லவேண்டுமென்றும் பெரிதாய் யோசனை செய்த ஏற்பாடு அறை குறையாகவே நிறைவேறிற்று. இதற்குச் சில முக்கியமான காரணங்கள் இருந்தன. புதிதாய் அனுப்பப்பட்ட பிரிட்டிஷ் துருப்புகளெல்லாம் அதற்கு முன் யுத்தத்தில் அனுபோகம் பெறுதவர்களாயிருந்தார்கள். அப்படிப்பட்ட துருப்புகள் இராக்காலத்தில் அந்நியருடைய பிரதேசத்தில் இறங்கி பற்பல முக்கியமான ஸ்தலங்களைப் பிடிக்கவேண்டுமென்று ஸர் அயன் ஹாமில்டன் ஏற்

பாடு செய்தபோது அது எளிதாய் நடக்கக்கூடிய காரியமாக இல்லை. மேலும், காலிபோலி பிரதேசத்தில் குன்றுகளும் பள்ளத்தாக்குகளும் மைதானங்களும் காடுகளும் நிரம்பியிருந்தபடியால், அங்குள்ள பூமி அமைப்பின் நுட்பமான விவரங்களை அந்தப் புதிய துருப்புகள் அறிந்து கொள்வதற்குக் கஷ்டமாயிருந்தது. முன் பின் தெரியாத பிரதேசத்தில் அந்தப் புதிய துருப்புகள் துருக்கியரை எதிர்த்து எப்படி கொஞ்சமேனும் முன்னேறிச் சென்றார்களென்பதே ஆச்சரியமாயிருக்கிறது. அது அந்தத் துருப்புகளின் வீரத்தையும் மனோதிடனையும் புகழத்தக்க விதமாய் வெளிப்படுத்துகிறது. மேலும் ஜல கஷ்டம் மிகவும் அதிகமாயிருந்ததென்று ஏற்கனவே சொல்லியிருக்கிறோம். ஸுவ்லாகுடாவில் இறங்கிய துருப்புகளுக்கு குடிஜலம் கொடுப்பதற்காக, சுமார் 5000 கோவேறு கழுதைகளும், 1700 வண்டிகளும் தயார் செய்ய வேண்டியிருந்ததென்றால், ஜல கஷ்டத்தை நாம் ஒருவாறு அறிந்துகொள்ளலாம். தவிர, காலிபோலி பிரதேசத்திலிருந்த ஆயிரக்கணக்கான துருப்புகளுக்கு சகல சாமான்களும் கடல் வழியாய் கப்பல்களில் கொண்டு வந்து கரையில் கொடுக்கப்பட்டுவரவேண்டியிருந்தது. கடல்களிலும் எதிர்பாராத ஆபத்துகள் நேர்ந்தன. மே மாதத்தில் டார்டனல்ஸ் ஜலசந்தியில் ஜெர்மன் சப்மரின் தோன்றி, 3 பிரிட்டிஷ் சண்டைக்கப்பல்களை சேதப்படுத்தி தொந்தரவு செய்தது. ஆனால் அதற்குப் பிரதியாக, ஒரு பிரிட்டிஷ் சப்மரின், மார்மோரா கடலில் புகுந்து துருக்கியரின் சாமான் கப்பல்களை சேதப்படுத்தியது. "ஒரு வனாந்தரத்தில் பெரிய சேனைக்குத் தேவையானவைகளையெல்லாம் கொடுப்பதற்காகச் செய்யப்பட்ட முயற்சிகளும் உபாயங்களும் உலகத்திலில்லாத அதிசயங் களாயிருந்தன" என்று ஸர் அயன்ஹாமில்டன் பிரிட்டிஷாரின் யுத்தமுயற்சியைப் பற்றிப் புகழ்ந்தது முற்றிலும் தகும்.

கலிபோலி பிரதேசத்தில் பிரிட்டிஷார் தங்கள் நோக்கத்தை நிறைவேற்ற முடியாமலிருந்ததற்கு மற்றொரு முக்கியமான காரணமும் உண்டு. அந்த மலைப்பிரதேசம், அரண் சண்டைகளுக்கு ஏற்றதாயிருந்தபடியால், ஜெர்மானியரின் உதவியால் துருக்கியர் வலுவான அரண்களைக் கட்டி அந்தப்பிரதேச முழுவதையும் பெரிய கோட்டைபோல் செய்து விட்டனர். அதனால் மேற்காங்கத்துச்சண்டையைப்போல, அவ்விடத்திலும் வெகுதாமஸமாய் யுத்தம் நடத்தும்படியாயிற்று. ஏராளமான பீரங்கிகளையும் குண்டுகளையும் சேகரித்து அரண்களை மெதுவாக ஒவ்வொன்றாய்ப் பிடித்து மேற்காங்கத்தில் யுத்தஞ் செய்வதுபோல, கலிபோலியிலும் தாமஸமாய் செய்வதில் பிரயோஜனமில்லை. ஆகஸ்ட் மாதத்தில் ஸர் அயன்ஹாமில்டன் ஸாரிபேர்குன்றில் பெரிய முயற்சி செய்து அதை அரைகுறையாய் நிறைவேற்றிய பிறகு அம்மாதிரியான வேறு பலமான முயற்சிகளைச் செய்யவில்லை. இன்னும் ஒரு லக்ஷம் புதிய துருப்புகள் அனுப்பினால் டார்டனல்ஸை வசப்படுத்திக் கொள்ளலாமென்று அவர் உறுதியாய் நம்பியிருந்தார். ஆனால், புதிய துணைப்படைகள் இங்கிலாந்திலிருந்து அவருக்கு அனுப்பப்படவில்லை. செப்டம்பர் மாதத்தில் புதிய பிரிட்டிஷ்படைகள் மேற்காங்கத்துக்கு அனுப்பப்பட்டு அங்கு பெரிய சண்டைகளைச் செய்தன. அக்டோபர் மாதத்தில், ஜெர்மானியர் ஸெர்வியா தேசத்தின் மீது படையெடுக்கவே, அத்தேசத்துக்கு உதவிபுரிவதற்காக புதிய பிரிட்டிஷ் படைகள் அங்கு அனுப்பப்பட்டன. பிறகு மிகக்கடுமையான பனிகாலம் வந்துவிட்டது. காலிபோலி பிரதேசத்தில், அரண்களில் நிலைபெற்றிருந்த துருப்புகளெல்லாம், பனி

யாலும் குளிராலும் பற்பல நோய்களாலும் வருந்திக் கொண்டிருந்தனர். கடைசியாக ஜெர்மானியர், பல்கேரியாதேசத்தை தன்கக்ஷியில்சேர்த்துக்கொண்டு ஸெர்வியா தேசத்தை வென்று, துருக்கி தேசத்துடன்நேராகப்போக்கு வரத்து செய்ய வழி ஏற்படுத்தி விட்டார்கள். அதனால் துருக்கியர் ஜெர்மானியரின் உதவியை ரயில் மார்க்கமாக பெற்றுக்கொள்வார்களாகையால், கலிபோலியில் அதன் பிறகு யுததஞ் செய்வதில் பயனில்லை என்று பிரிட்டிஷ் கவர்ன் மெண்டார் தீர்மானித்தார்கள். அக்டோபர் 11ந் தேதி அதாவது பெல்கிரேட் நகரம் பிடிபட்டு இரண்டு தினங்களுக்குப் பிறகு, லார்ட் கிச்சனர், ஸர்அயன் ஹாமில்டனுக்குதந்தி அனுப்பி கலிபோலியிலிருந்த நேசப்படைகளை அப்புறப்படுத்துவதாயிருந்தால் எவ்வளவு சேதமுண்டாகுமென்று கேட்டிருந்தார். அம்மாதிரியான நடவடிக்கையைப் பற்றி சிந்திக்கவும் முடியவில்லை என்று மறுதினம் ஸர்அயன் ஹாமில்டன் பதில் அனுப்பினார். அக்டோபர் 16-ந் தேதி ஸர் அயன்ஹாமில்டன் இங்கிலாந்துக்கு திரும்பி வரும்படி தந்தி மூலமாய் உத்தரவு செய்யப்பட்டார்; ஸர்சார்லஸ் மன்ரோ, சேனாதிபதியாய் நியமிக்கப்பட்டார். டிசம்பர் மாதத்திலும், 1916 வருஷம் ஜனவரி மாதத்திலும், கலிபோலியிலிருந்த எல்லா நேசக்கக்ஷிப்படைகளும் அனைதக்காலி செய்து விலகி விட்டன.

பிரட்டிஷார் டார்டனல்ஸ் பிரதேசத்தில் மிகப்பெரிதாய்த் தொடங்கிய யுத்த நடவடிக்கைகள் அவ்வாறு முடிவடைந்தன. அங்கு சென்ற பிரிட்டிஷ் படைகளில் 1916ம்-௵ ஜனவரி மாதம் வரையில் 1,17,549 பேர் சேதமானார்கள். அதில் 28,200 பேர் ராணுவ உத்தியோகஸ்தர்கள்; ஆயினும் அந்த மொத்த சேதத்தில் 78,000 பேர் காயம் பட்டவர்களாகையால் அவர்களில் பெரும் பான்மையோரும் மறுபடியும் படைகளில் சேரத்தக்கவர்களாவார்கள். ஆயினும், அந்த பெரிய முயற்சி முற்றிலும் பயனற்றதாய்ப்போய் விட்டதென்று சொல்வதற்கில்லை. பிரிட்டிஷார் தங்கள் கடற் படையின் வன்மையால் அந்நிய தேசத்தில் திடீரென்று பெரிய சேனையை இறக்கி பிரமாதமான யுத்த நடவடிக்கைகளைத் தொடங்கக் கூடுமென்று யாவருக்கும் தெரியவந்தது. துருக்கியர் தங்களுடைய தலை நகரத்துக் கருகில் நேர்ந்த பெரிய ஆபத்தை கவலையாய் சிந்தித்து, தங்கள் முக்கியமான ராணுவ பலத்தையும் தீவிரமான பிரயத்தனங்களையும் டார்டனல்ஸ் பிரதேசத்தில் செலுத்தினார்; அதனால் அவர்கள் காகஸஸ் பிரதேசத்திலும், மெஸபொடோமியா மாகாணத்திலும் ஸூவெஸ் கால்வாய்க்கருகிலும் சுறுசுறுப்பாய் யுத்தம நடத்த அசக்தர்களாயிருந்தார்கள்.

---

# யுத்த சம்பவங்களின் விவரங்கள்.

---

1914 அக்டோபர் 8 பிரிட்டிஷ் ஆகாய விமானிகள் டூஸ்ஸெல்டார்ப், ஆகாயவிமான கொட்டகையின்மேல் குண்டுகளை எறிகிறார்கள்.

,, ,, 9 ஜெர்மானியர்களால் ஆண்ட்வர்ப் கைவசப்படுத்திக் கொள்ளப் பட்டது.

,, ,, 12 லாபாசியில் ஜெர்மன் ஸ்தானத்தைத்திருப்ப பிரிட்டிஷ்காரர்கள் யத்தனிக்கிறார்கள்.

,, ,, 14 ஜெர்மானியர்களால் லில்லி கைவசப்படுத்திக் கொள்ளப் பட்டது.

,, ,, 16 வார்ஸா பெரிய சண்டை ஆரம்பமாகின்றது. அக்டோபர் இருபத்தைந்தில் ஜெர்மானியர்கள் பின் செல்வதோடு முடிகின்றது, கனடாத் துருப்புகள் இங்கிலாந்து சேருகிறது.

,, ,, 19 மேற்கரங்கத்தில் நேசத்துருப்புகள் சமுத்திரத்தில் சேருகின்றனர். எப்ரஸ் சண்டை ஆரம்பமாகிறது.

,, ,, 26 தென் ஆப்பிரிகாவில் டிவெட்டின் கலகம்.

,, ,, 27 நோவாசேபலை ஜெர்மானியர்கள் பிடிக்கிறார்கள். லாபாசியில் பிரிட்டிஷ்காரர் தாக்குவதில் தோல்வியடைகிறார்கள்

,, ,, 28 நோவதசாப்புலியை மறுபடியும் பிடித்துக்கொள்ள யத்தனித்ததில் இந்திய துருப்புகள் முதல் முதலில் போர்செய்கிறது. கிராமத்தின் ஒருபாகத்தை பிடித்துவிட்டார்கள்.

,, நவம்பர் 5 கிரேட் பிரிட்டன் துருக்கியுடன் சண்டை செய்வதாகத் தெரிவிக்கிறது.

,, ,, 7 ஆசியா கண்டத்தில் ஜெர்மானியருடைய கடற்படை முக்கிய ஸ்தலமாகிய ஸிங்டாவை ஜெர்மானியர்கள் பிடித்துக்கொள்ளுகிறார்கள். யூப்ரெடீஸ்நதி முகத்வாரத்தில் பிரிட்டிஷார் இறங்குகிறார்கள்.

,, ,, 11 ருஷ்யர்கள் பிரமிஸலை முற்றுகையை ஆரம்பிக்கிறார்கள்.

,, ,, 12 கார்பேதியின் மலைகளில் உள்ள டேக்ளா கணவாயை ருஷியர்கள் பிடிக்கிறார்கள்.

,, ,, 14 நேசத்துருப்புகளின் முன்னணிகளை பார்க்கப்போன லார்ட் ராபர்ட்சின் மரணம்.

,, ,, 15 வாட்டாலிலிருந்து ஜனரல் ருஸ்கியின் சேனை துரத்தியடிக்கப்பட்டது

,, ,, 17 எப்ரெஸ் சண்டையின் முடிவு, பிரிட்டிஷார் நாற்பதினாயிரம் துருப்புகளை இழந்து பயங்கரமான சண்டைக்குப் பிற்பாடு, ஜெர்மானியர்களுடைய தாக்கல்களை தோற்கடிக்கிறார்கள். முதல் பிரிட்டிஷ் யுத்தக்கடன் 350,000,000 பவுன் அதிக ஜயத்துடன் வாங்கப் பட்டது.

,, ,, 19 ஜூராவில், வார்சாவிற்காக இரண்டாவது சண்டை ஆரம்பமாகிறது.

,, ,, 21 மோட்டார் வண்டிகளில் இருந்த துருப்புகளினால் துரத்தப்பட்டு டிவெட், தன் ஆறு மனிதர்களுடன் ஓட்டம்பிடிக்கிறான். ப்ரீட்ரிச் ஷேபன் இல் உள்ள ஜெட்லின் வேலைக் கட்டடங்களின்பேரில் பிரிட்டிஷ் ஆகாயவிமானிகள் குண்டுகளை எறிகிறார்கள்.

,, ,, 22 மெஸபெடோமியாவில், பாஸ்ராவை பிரிட்டிஷார் கைவசப் படுத்திக்கொள்ளுகிறார்கள்.

,, ,, 26 வார்ஸாவிற்கு அருகிலிருந்து ஜெர்மானியர்கள் நீக்கப்பட்டார்கள்.

| | | | |
|---|---|---|---|
| ,, | டிசம்பர் | 1 | டிவெட் பிடிபட்டது. |
| ,, | ,, | 2 | ஆஸ்டிரியர்கள் பெல்கிரேட்டை பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| 1914 | டிசம்பர் | 3—5 | கொலுபாரா சண்டையில், ஸர்வியர்களால் ஆஸ்டிரியர்கள் பூராவாய் தோற்கடிக்கப் பட்டார்கள். 40000 பேர்கள் கைதி செய்யப்பட்டார்கள். |
| ,, | ,, | 6 | ருஷியர்கள். கிரேக்கோவில், தடை செய்யப்பட்டு பின்வாங்க கட்டாயப் படுத்தப் பட்டார்கள். ஜெர்மானியர்கள் வாட்ஸ் பட்டணத்தை பிடித்துக்கொண்டார்கள். |
| ,, | ,, | 7 | தென் ஆப்பிரிகா கலகம் அடங்கிற்று. வார்சாவின் மூன்றாவது சண்டை ஆரம்பமாகிறது. |
| ,, | ,, | 9 | குள்ளானாவைக் கொடுத்தானது பிரிடிஷாருக்கு டைக்ரிஸ் பள்ளத்தாக்கின் பேரில் ஆதீனத்தை உண்டுபண்ணுகிறது. |
| ,, | ,, | 12 | டுக்ளா கணவாயை, ஆஸ்டிரியர்கள் மறுபடியும் பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| ,, | ,, | 14 | செர்வியர்கள் பெல்கிரேட்டை மறுபடியும் பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| ,, | ,, | 18 | பிரின்ஸ் ஹூஸ்ஸேன் காமல் பாஷா ஈஜிப்டின் சுல்தான் ஆகிறார். |
| ,, | ,, | 19 | கிரவன்சி, குன்சியை இந்தியப் பட்டாளம் தாக்குகிறது, துரத்தி யடிக்கப்படுகிறது. |
| ,, | ,, | 20 | டுக்ளா கணவாயை ருஷியர்கள் பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| ,, | ,, | 25 | வார்சாவை ஜெர்மானியர்கள் பிடிக்கத் தவறினது. கக்ஸ்ஹேவன் என்றும் இடத்திலுள்ள, ஆகாய விமானக் கொட்டகையில், பிரிடிஷ் சமுத்திர விமானங்கள் குண்டுகளை எறிகின்றன. |
| 1915 | ஜனவரி | 3 | சரிகாமிஷில் துருக்கியர்கள் ருஷியர்களால் தோற்கடிக்கப் பட்டார்கள். |
| ,, | ,, | 4 | லண்டன் ஸ்டாக் எக்சேஞ்ஆபீசு மறுபடியும் திறக்கப்பட்டது. |
| ,, | ,, | 6 | புகோனாவின் மேற்கெல்லையண்டை ருஷியர்கள் நெருங்குகிறார்கள். |
| ,, | ,, | 8–14 | ஸாயிஸான்ஸ் சண்டையில் பிரெஞ்சுகாரர்கள் கொஞ்சம் பின் தள்ளப்பட்டார்கள். |
| ,, | ,, | 13 | ஆஸ்டிரோ ஹங்கேரி அன்னியதேச மந்திரியான கௌண்ட் பெர்ச்டோல்ட் இராஜினமா செய்துவிட்டார். பதிலாக கௌண்ட் பூரியான் நியமிக்கப்பட்டார். |
| ,, | ,, | 14 | தென்னாப்பிரிக்காத் துருப்புகள் ஸ்வாகாப்மண்ட் என்னுமிடத்தைப் பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| ,, | ,, | 17 | ஹங்கேரிக்குப் போகிற கிரலிபாபாகணவாயை ருஷியர்கள் பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| ,, | ,, | 25 | கிவென்சி லாபாசியை ஜெர்மானியர் தாக்குகிறார்கள். |
| ,, | ,, | 31 | ராகாவையும் ஜூராவையும் மெக்கென்ஸன் தாக்குவதினால் வார்சாவுக்காக 4-வது சண்டை ஆரம்பமாகிறது. |
| ,, | பிப்ரவரி | 2—3 | சூயெஸ் கால்வாயைத் தெரிந்துகொண்டிருந்த துருக்கியப் படை பின்னுக்கடிககப்பட்டார்கள். |
| ,, | ,, | 4 | வார்ஸாவை நோக்கி ஜெர்மானியர்கள் செல்வது தடுக்கப்பட்டது. |
| ,, | ,, | 6 | கிவென்சி லாபாசியின் சண்டை முடிவு. பிரயோசண மற்ற சண்டை. |
| ,, | ,, | 8 | வார்ஸா முன்னிருந்த ஜெர்மானியர்கள் பின்னுக்குத் துரத்தி யடிக்கப்பட்டார்கள். |
| ,, | ,, | 8–20 | கிழக்கு ப்ரஷியாவில் ஜெர்மானியர்கள் செல்லுகிறார்கள்; ருஷியர்களை துரத்துகிறார்கள்; 20-வது ருஷிய பட்டாளத்தின் ஒரு பாகத்தை பிடித்துக் கொள்ளுகிறார்கள். |

| | | | |
|---|---|---|---|
| ,, | ,, | 18–26 | பிராஸ்நிஷில் ஜெர்மானியர்கள் துரத்தப்பட்டதனுல் வார்ஸாவுக்காக செய்யப்பட்ட 5-வது சண்டை முடிவாயிற்று. |
| ,, | ,, | 19 | டார்டனெல்ஸ் கோட்டைகளை முதல் முதலில் சப்பல் படைகள் தாக்குகின்றன. |
| ,, | ,, 20 முதல் மார்ச்சு | 3 | புகோவினுவில் ஆஸ்டிரியர்கள் முன் செல்லுதல். |
| ,, | மார்ச்சு | 3–21 | ஆஸ்டிரியர்கள் முன் செல்வது தடுக்கப்பட்டது. ருஷியர்கள் கார்பேதியன் மலைக் கணவாய்களுக்குச் செல்கிறார்கள். |
| ,, | ,, | 8 | பெல்ஜியத்தில் டிர்லெமாண்டில் 28 ஜெப்ளின் சேதமடைந்தது |
| ,, | ,, | 10 | நோவாஷாயலியில் சண்டை பிரிடிஷாரின் சிறிய வெற்றி. |
| ,, | ,, | 14 | ஜெர்மானியர் செய்ன்ட் எலாயைத் தாக்குகிறார்கள். கனடாத் திருப்புகள் தீரத்தனத்தைக் காண்பிக்கிறது. சத்துருக்கள் துரத்தப்பட்டார்கள். |
| ,, | ,, | 18 | டார்டனெல்சைப் பிடிக்க சப்பல் படை பிரயத்தனமானது 3 கப்பல்கள் நாசமானது. |
| ,, | ,, | 22 | பிரெம்சில் பிடிக்கப்பட்டது. |
| ,, | ,, | 26 | கார்பேத்தியன் மலைகளில் ருஷியர்கள் லுப்கோ கணவாயை பிடித்துக்கொள்ளுகிறார்கள். |
| ,, | ,, | 27 | வாஸ் ஜெஸில் ஹார்ட் மான்ஸ் வெல்லர் காளவ பிரெஞ்சுக்காரர்கள் பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| ,, | எப்பிரல் | 6 | இங்கிலாந்தில் யுத்த தளவாடங்களின் நெருக்கடி பலமாய் உணரப்படுகிறது. |
| ,, | ,, | 17 | எப்பிரெசில் 60 நெ குன்றை பிரிடிஷார் பிடித்துக் கொள்ளுகிறார்கள். |
| ,, | ,, | 22 | எப்பிரெசுக்கு வடக்கில் திராவகத்தால் ஜெர்மானியர் தாக்குகிறார்கள். பயமானசண்டை. கனடாத் திருப்புகளின் தீரத்தனத்தால் ஒன்றும் அபாயமில்லை. |
| ,, | ,, | 25 | பயங்கரமான சண்டைக்குப் பிற்பாடு, ஆஸ்டிரேலியர்கள் வகையரா பிரிடிஷ் திருப்புகளும் நேசத் திருப்புகளும் டார்டினெல்சில் வந்து சேருகிறார்கள். |
| ,, | ,, | 28 | எப்பிரெசில் ஜெர்மானியர் தாக்குவதை நிறுத்தப்பட்டது. |
| ,, | மே | 3 | டுனஜெட்ஜ் சண்டையில் கிழக்கரங்கத்தில் ஜெர்மானியர்கள் பிரமாதமான பலத்துடன் ஆரம்பிக்கிறார்கள். |
| ,, | ,, | 8 | வீயாவை ஜெர்மானியர் கைவசப்படுத்திக் கொள்ளுகிறார்கள். |
| 1915 | மே | 9 | பெஸ்பேர்ட்டில் சண்டை. ஏராசுக்கு வடக்கில் பிரெஞ்சுக்காரர் தாக்குகிறார்கள். |
| ,, | ,, | 11 | எப்பிரசில் ஜெர்மானியர் தாக்குவதிலிருந்து துரத்தப்பட்டார்கள். |
| ,, | ,, | 12 | ஜெர்மன் தென்மேற்கு ஆபிரிகாவிலுள்ள விண்ட்ஹோக்கில் போதா பிரவேசிக்கிறார். |
| ,, | ,, | 14 | முன்னணியிலிருந்த டைம்ஸ்பேபரின் மிலிடெரி நிருபர் பின்வருமாறு தெரிவிக்கிறார். நம்முடைய ஜெயத்திற்கு உயரத்தில் வெடிக்கக்கூடிய குண்டுகளின் ஏராளமான சப்ளையில்லாதது ஒரு பெருங் குறைவாக இருக்கிறது. |
| ,, | ,, | 16 | ருஷியர்கள் கார்பேதியன் மலைகளிலிருந்து பின்னடைகிறார்கள் |
| ,, | ,, | 19 | கவர்ன்மெண்டின் புது அமைப்புத் தெரிவிக்கப்பட்டது. |
| ,, | ,, | 23 | இடாலிய தேசமானது ஆஸ்டிரியாவுடன் யுத்தம் செய்யப் போவதாய்த் தெரிவிக்கிறது. |
| ,, | ,, | 25 | கோஅலிஷன் மந்திரி சபை அமைக்கப்பட்டது. |
| ,, | ஜூன் | 3 | ஜெர்மானியர் பிரமிசிலை மறுபடி பிடித்துக்கொள்ளுகிறார்கள். |

,, ,, 4 நேசத்துருப்புகள் டார்டனெல்சில் கொஞ்சம் முன் செல்லுகிறார்கள்.

,, ,, 7 பெல்ஜியத்தில் சப் லெப்டினெண்ட் வார்னே போர்ட்டினால் ஒரு ஜெப்ளின் நாசமாக்கப்பட்டது. இரண்டாவது ஒன்று யெவெரேயில் நாசமாக்கப்பட்டது.

,, ஜூன் 15 பிரெஞ்சு ஆகாய விமானிகள் காரிஸ் ரூஹேயை முற்றுகை போடுகிறார்கள்.

,, ,, 16 யுத்த தளவாடங்களுக்கு மிஸ்டர் லாயிட் ஜியார்ஜ் மந்திரி யாகிறார்.

,, ,, 21 யுத்தத்திற்கு 2-வது கடன் வேண்டுமென்று தரிவிக்கப்பட்டது. 570,000,000 பவுன்கள் கிடைத்தது.

,, ,, 22 ஜெர்மானியர்களால் லெம்பர்க் மறுபடியும் பிடிக்கப்பட்டது.

,, ,, 26 ஜெனரல் பலிவானுப் ருஷியாவின் யுத்த மந்திரி யாகிறார்.

,, ,, 30 ஆரொகோனில் ஜெர்மானியர் தாசகுவதிலிருந்து துரத்தப் பட்டார்கள்.

,, ஜூலை 3 தென்னாப்பிரிக்கா துருப்புகளினால் ஒடாவி கைவசப்படுத்திக் கொள்ளப்பட்டது.

,, ,, 9 ஜெர்மானியரின் தென்மேற்கு ஆபிரிகாவை ஜெனரல் போதா பூருவும் பிடித்து ஜெயித்துவிட்டார்.

,, ,, 12 டார்டனெல்சில் சண்டை. நெசத்துருப்புகள் கொஞ்சம் ஜெயமடைகின்றன.

,, ,, 14 கனடா தேசத்து மந்திரியான ஸர் ஆர். பார்டன் மந்திரி சபையில் ஆஜரா யிருக்கிறார். இதுதான் முதல்தடவையாக ஒரு சார்பு தேசத்தின் மந்திரி மீட்டிங்கில் பிரசன்னமாயிருந்தது.

,, ஜூலை 23 ஜெர்மானியர் நாருவைத் தாண்டுகிறார்கள். (வார்ஸாவைப் பிடித்துவிட்டு.)

,, ,, 29 ஜெர்மானியர் லூப்லின் சோல்ம் ரெயில்வேயை விசாலப் படுத்துகிறார்கள்.

,, ,, 1 ருஷிய பால்டிக் மாகாணங்களிலுள்ள மீடாவை ஜெர்மானியர் பிடித்துக் கொள்ளுகிறார்கள்.

,, ஆகஸ்ட் 4 வார்ஸா பிடிப்பட்டது.

,, ,, 5 இவான்காரோட் ஜெர்மானியர்களால் பிடிப்பட்டது.

,, ,, 6 டார்டனெல்சில் புதுத் துருப்புகள் இறங்குகின்றன. பலமான சண்டைக்குப்பிறகு கொஞ்சம் ஜெயமுண்டாகிறது.

,, ,, 17 கோவ்னோவை ஜெர்மானியர் பிடித்துககொண்டார்கள்.

,, ,, 19 நோவோ ஜார்ஜ் விஸ்கை ஜெர்மானியர் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

,, ,, 20 துருக்கியுடன் இடாலி யுத்தம் செய்வதாகத் தெரிவிக்கிறது.

,, ,, 21 நேசத் துருப்புகள் டார்டனெல்சில் கொஞ்சம் ஜெயமடைகிறார்கள். நேச தேசத்தார்கள் பருத்தியை சமுத்திரத்தில் வியாபாரம் செய்யக்கூடாத வஸ்துவென்று தடை செய்கிறார்கள்.

,, ,, 25 ப்ரெஸட் லிடோவ்ஸ்கை ஜெர்மானியர் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

,, செப்டம்பர் 2 க்ராட்னோவை ஜெர்மானியர் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

,, ,, 7 ஜார் சக்கிரவர்த்தி ருஷிய சைனியத்தின் சேனாதிபதியாகிறார். கிராண்ட் டியூக் நிகலெஸ் காகெஸஸ் பிரதேசத்திற்கு மாற்றப்படுகிறார்.

,, ,, 10 ஆஸ்டிரிய தூதரான டாக்டர் டம்பாவை யூனைடேட்சிலிருந்து அழைக்கப்பட வேண்டுமென்று யூனைடெட் ஸ்டேட்ஸ் சொல்லுகிறது.

,, ,, 13 ஆகாய விமானங்கள் லண்டனை சேதப்படுத்தாமலிருக்க, பீரங்கிக் காப்புத் தலைவனாக ஸர், பி, ஸ்காட் நேமிக்கப்படுகிறார்.

,, ,, 15 ரிக்ரூட்டுகள் (சேனைக்குச் சேர்க்கப்படுகிறவர்கள்) போதா தென்று லார்ட் கிச்சனர் பார்லிமெண்டில் சொல்லுகிறார்.
,, ,, 17 ருஷிய சைனிய வரிசையை 50000 ஜெர்மன் குதிரைப்படை கலைத்து உள் செல்லுகிறது.
,, ,, 19 ஜெர்மானியரால் வில்னு பிடிக்கப்படுகிறது.
,, ,, 25 நேசத் துருப்புகள் பிரான்சில் வலுவில் தாக்குகின்றன. சத்துருக்களின் ஸ்தலங்களை பிடித்துக்கொள்ளுகிறார்கள்.
,, அக்டோபர் 1 நேசத் துருப்புகளுடன் பல்கேரியா யுத்தம்செய்கிறது.

ஜெர்மனியிழந்த யுத்த கப்பல்களின் விவரம் (சந்தேகமானவை இதில் சேரவில்லை.)

| | | | |
|---|---|---|---|
| நாசகாரிகள். 8 | | | |
| 1914 ஆகஸ்டு 28 V 187 | பீரங்கியினால். | ஹெலிகோலாண்டில். | பிரிட்டிஷ்கடற்படையினால். |
| ,, செப்டம்பர் டாகு | ஷை | கபாசோ. | ஜபானியர்களால் |
| ,, அக்டோபர் 6 S 116 | உடைக்கப்பட்டது. | வட கடலில். | E. 9. னால் |
| ,, ,, 17 S 115 S 117 S 118 S 119 | பீரங்கியினால் | ஷை | நாசகாரியினால் |
| 1915 ஜூலை 26 G 196 | உடைக்கப்பட்டது. | வட கடலில். | பிரிட்டிஷ் சப்மரீனால் |
| டார்பிடோ படகுகள் 4. | | | |
| 1914 நவம்பர் 20 S 90 | உடைக்கப்பட்டது. | கயோசாவில். | ஷை |
| 1915 மே 1 A B | பீரங்கியினால். | பெல்ஜியக் கரையில். | பிரிட்டிஷ் நாசகாரியினால் |
| ,, ஆகஸ்ட் 24 X | ஷை | ஷை | ப்ரெஞ்சு நாசகாரியினால் |
| சப்மரீன்கள் 10 | | | |
| 1914 ஆகஸ்டு 9 U 15 | தாக்கப்பட்டது. | வட கடலில். | பர்மிங் ஹாமினால் |
| ,, அக்டோபர் 23 U 2 | ஷை | ஷை | யாட்ஜரினால் |
| ,, நவம்பர் 23 U 18 | முழு கடிக்கப்பட்டது. | ஷை | பிரிட்டிஷ் கப்பல்களினால் |
| 1915 பிப்ரவரி 28 U 2 | தாக்கப் பட்டது. | இங்கிலீஷ் கால்வாயில். | தார்டிஸ் ஸ்டீமரினால் |
| ,, மார்ச்சு 4 U 8 | முழு கடிக்கப்பட்டது. | ஷை | பிரிட்டிஷ் நாசகாரியினால் |
| ,, ,, 10 U 12 | ஷை | ஷை | ஷை |
| ,, ,, U 29 | தாக்கப் பட்டது. | ஷை | பிரிட்டிஷ் யுத்த கப்பல் கூட்டத்தினால் |
| 1915 ஜூன் U 14 | முழுகடிக்கப்பட்டது | ஷை | ஷை |
| ,, ஆகஸ்ட் 26 U 2 | ஷை | ஷை | பிரிட்டிஷ் கப்பலால் |
| ,, செப்டம்பர் U 27 | ஷை | ஷை | ஷை |

# யுத்த கப்பல்களின் சேதம்.

பிரிட்டிஷ் தேசத்திற்கு நேர்ந்த யுத்த கப்பல் நஷ்டம் (கப்பல் சம்பந்தமான யாவற்றையும் மேல்பார்க்கும் அதிகாரியினால் தெரிவித்தபடி.)

| தேதி. | கப்பலின்பெயர். | எப்படி முழுகடிக்கப்பட்டது. | முழுகடிக்கப்பட்ட இடம். | முழுகடிக்கப்பட்ட காரணம். |
|---|---|---|---|---|
| 73-வது வகுப்பு யுத்தக் கப்பல்கள் | | | | |
| 1914 நவம்பர் 26 | பல்வார்க் | வெடிக்கப்பட்டது | ஷீர்னஸ் | தற்செயலாய் |
| 1915 ஜனவரி 1 | பார்மிடெபில் | உடைக்கப்பட்டது | காக்வாயில் | ஜெர்மன் சப்மரீனால் |
| ,, மார்ச்சு 18 | ஓஷன் | சுரங்கத்தினால் | டார்டினெல்ஸ் ஜலசந்தியில் | ஷை |
| ,, ,, | இரெஸிஸ்டெபில் | ஷை | ஷை | ஷை |
| ,, மே 12 | கோலியத் | உடைக்கப்பட்டது | ஷை | துருக்கி நாசகாரியினால் |
| ,, மே 25 | ட்ரையம்ப் | ஷை | ஷை | ஜெர்மன் சப்மரீனால் |
| ,, மே 27 | மாஜெஸ்டிக் | ஷை | ஷை | ஷை |
| ஆயுதந் தரித்த க்ரூஸர்கள். 5 | | | | |
| 1914 செப்டம்பர் 22 | ஹோக் | உடைக்கப்பட்டது | வடகடலில் | U. 9 னால் |
| ,, ,, | அபோகிர் | | | |
| ,, ,, | க்ரெஸி | | | |
| ,, நவம்பர் 1 | குட்ஹோப் | பீரங்கியினால் | சிலியன் கடற்கரையில் | வான்ஸ்பீயின் கப்பல் கூட்டத்தினால் |
| ,, ,, | மான்மௌத் | | | |
| க்ரூஸர்கள் 5. | | | | |
| 1914 ஆகஸ்டு 6 | ஆம்பியன் | சுரங்கத்தினால் | வடகடலில் | ஷை |
| ,, செப்டம்பர் 5 | பாத்பைண்டர் | உடைக்கப்பட்டது | ஷை | ஜெர்மனி சப்மெரினால் |
| ,, ,, 20 | பெகாஸஸ் | பீரங்கியினால் | ஜான்ஸிபாரில் | கோனிக்ஸ்பார்க் கப்பலினால் |
| ,, அக்டோபர் 15 | ஹாக் | உடைக்கப்பட்டது | வடகடலில் | ஜெர்மன் சப்மரீனால் |
| ,, ,, 31 | ஹெர்மஸ் | ஷை | ஷை | ஷை |
| நாசகாரிகள் 3 | | | | |

| தேதி. | கப்பலின்பெயர். | எப்படி முழு கடிக்கப்பட்டது. | முழுகடிக்கப்பட்ட இடம். | முழுகடிக்கப்பட்ட காரணம். |
|---|---|---|---|---|
| 1915 மே 1 | ரிக்ருட் | உடைக்கப்பட்டது. | வடகடலில் | ஜெர்மன் சப்மரீனுக் |
| ,, மே 7 | மோரி | சரக்கத்தினுல் | ஷை | ஷை |
| ,, ஆகஸ்டு 9 | லின்க்ஸ் | ஷை | ஷை | ஷை |
| டார்பிடோ படகுகள். 2 | | | | |
| 1915 ஜூன் 15 | கெ. 10ம் 12ம் | உடைக்கப்பட்டது. | வடகடலில் | ஜெர்மன் சப்மரீனுக் |
| சப்மெரீன்கள். 7 | | | | |
| 1914 செப்டம்பர் 14 | A. E. 1 | முழு கடிக்கப்பட்டது. | ஆஸ்டிரேலியாவில் | தற் செயலாய் |
| ,, அக்டோபர் 18 | E. 3 | தெரியவில்லை. | வடகடலில் | ஜெர்மன் கடற் படையால் |
| ,, நவம்பர் 3 | D. 5 | சரக்கத்தினுல். | ஷை | யார்மௌத்தின் பேரில் செய்யப்பட்ட கொள்ளையினுல் |
| 1915 ஏப்ரல் 17 | E. 15 | உடைக்கப்பட்டது. | டார்டினெல்ஸ் ஜல சந்தியில் | வெடிக்கப்பட்டது |
| ,, ஏப்ரல் 30 | A. E. 2 | பீரங்கியினுல். | ஷை | துருக்கியர்களால் |
| ,, ஆகஸ்ட் 19 | E 13 | உடைக்கப்பட்டது. | டென்மார்க் கடற்கரையில் | பீரங்கியினுல் சேதப்படுத்தப்பட்டது |
| ,, செப்டம்பர் | E. 7 | பீரங்கியினும் | டார்டினெல்ஸ் ஜல சந்தியில் | துருக்கியர்களால் |
| பீரங்கிப் படகுகள். 2 | | | | |
| 1914 செப்டம்பர் 3 | ஸ்பீடி | சரக்கத்தினுல். | வடகடலில் | ஷை |
| ,, நவம்பர் 11 | நைகர் | உடைக்கப்பட்டது. | டோவர் ஜலசந்தியில் | ஒரு ஜெர்மன் சப்மரீனுல் |
| 3-வது வகுப்பு யுத்தக்கப்பல் 1. | | | | |
| 1915 ஜூலை 2 | பொம்மெர்ன் | உடைக்கப்பட்டது. | பால்டிக் கடலில் | E 9 சப்மரீனுல் |
| ஆயுதந்தரித்த க்ரூஸர்கள் 5. | | | | |
| 1914 நவம்பர் 4 | யார்க் | சரக்கத்தினுல் | வடகடலில் | ஷை |
| ,, டிசம்பர் 8 | ஸ்கார்ன் ஹோர்ஸ்ட் | பீரங்கியினுல் | பால்க்லண்ட் தீவுகளில் | ஸ்டர்டியின் கப்பல் படையினுல் |
| ஷை | நீஸெனு | ஷை | ஷை | ஷை |
| ,, டிசம்பர் 11 | F கார்ல் | சந்தேகம் | பால்டிக் கடலில் | ருஷியக் கடற்படையால் முழுகடிக்கப்பட்டதாக சொல்லப் படுகிறது |

| தேதி. | கப்பலின் பெயர் | எப்படி முழுகடிக்கப்பட்டது. | முழுகடிக்கப்பட்ட இடம் | முழுகடிக்கப்பட்ட காரணம். |
|---|---|---|---|---|
| 1915 ஜனவரி 24 | ப்ளுசர் | பீரங்கியினால் | வடகடலில் | பீட்டியின் கடற்படையினால் |
| சிறிய க்ரூஸர்கள் 10. | | | | |
| 1914 ஆகஸ்ட் 27 | மாக்டெபர்க் | பீரங்கியினால் | பால்டிக் கடலில் | ருஷிய கடற்படையினால் |
| ,, ஆகஸ்ட் 28 | மெய்ன்ஸ் | டிெ | ஹெலிகோலாண்டில் | பிரிட்டிஷ்கடற்படையினால் |
| ,, டிெ | கோலன் | டிெ | டிெ | டிெ |
| ,, டிெ | ஏரியட்னே | டிெ | டிெ | டிெ |
| ,, செப்டம்பர் 13 | ஹீலா | உடைக்கப்பட்டது. | வடகடலில் | E. 9 னால் |
| ,, நவம்பர் | கார்ல்ஸ்ருஹே | துவாரம் செய்யப்பட்டது. | மேற்கு இந்திய தீவுகளில் | சொந்த கூட்டத்தினால் |
| ,, டிசம்பர் 8 | நூரன்பர்க் | பீரங்கியினு | பால்க்லண்ட் தீவுகளில் | ஸ்டர்டியின் கப்பற் கூட்டத்தினால் |
| ,, டிெ | லீப்ஜிக் | டிெ | டிெ | டிெ |
| 1915 மார்ச் 14 | ட்ரெஸ்டன் | முழுகடிக்கப்பட்டது. | ஜான்பெர்னண்டெசில் | பிரிட்டிஷ் க்ரூஸர்களினால் |
| 1915 ஜூலை 11 | கோனிக்ஸ்பர்க் | எரிக்கப்பட்டது | ரூபிஜி ஆற்றில் | பிரிட்டிஷ் மானிடர்களால் |

# யுத்தத்தில் நுதன சிருஷ்டிகள்.

## உருவந் தெரியாமலிருக்க உபாயங்கள்.

மகாயுத்தம் ஆரம்பித்து இரண்டொரு மாதங்களுக்குள்ளாக ஜெர்மானியர் பிரான்ஸின் மீது படையெடுத்து பாரிஸ் நகரத்துக்கருகில் சென்று, பிறகு பின்வாங்கும்படி நேர்ந்த போது, அவர்கள் தங்கள் படைகள் எல்லாவற்றையும் பூமிக்கடியில் மறைத்து வைத்துப் போர்புரிந்தார்கள். பூமியின் கீழ் அரண்களையும் குகைகளையும் தோண்டி மறைவாயிருந்து சண்டை செய்ததானது எவரும் எதிர்பாராத மிக்க ஆச்சரியமான யுத்த முறையென்றே சொல்லவேண்டும். அந்த அதிசயமான யுத்த முறையால் இந்த மகா யுத்தத்தின் நடவடிக்கைகளனைத்தும் புதுமாதிரியாக மாறியிருக்கின்றன. இனி, போர்க்களத்தில் உருவத்தை மாற்றுவதற்காகச் செய்யப்படும் அநேக உபாயங்களைப் பற்றிச் சொல்வோம்.

## காலாட்படைகளை மறைத்தல்.

வெகுதூரத்திலிருந்து பார்க்கும் போது, காலாட்படைகளின் நடமாட்டத்தை எளிதில் கண்டுகொள்ளாமலிருப்பதற்காக, துருப்புகளின் உடைகள் பளபளப்பாயிருக்கக்கூடாதென்று கருதப்படுகின்றது. ஆகையால் இக்காலத்தில் துருப்புகள் மங்கலான நிறமுள்ள உடைகளைத்தரித்துக் கொள்ளுகிறார்கள். தென் ஆப்பிரிக்காவில் நடந்த போவர் யுத்தத்தில் தான் முதன் முதலாக அந்த உபாயம் பிரிட்டிஷ் சேனையில் அனுசரிக்கப்பட்டது. அது முதல் பிரிட்டிஷ் படையில் சற்று கறுத்த மஞ்சள் நிறமான உடைகள் உபயோகிக்கப்படுகின்றன. அதற்கு முன் நல்ல சிவப்பு நிறமான உடைகளை சில பிரிட்டிஷ் படைகள் அணிந்தன. தவிர, துருப்புகள் பொன் வெள்ளி இரும்பு முதலியவைகளால் செய்யப்பட்ட பளபளப்பான ஆபரணங்களும் சரிகை சாமான்களும் முன்போல இப்போது உபயோகிப்பதில்லை. பிரஞ்சு சேனையில்மட்டும் முன்காலத்து அலங்காரங்களில் சிலவை இன்னும் வைததுக்கொள்ளப்பட்டு வருகிறது. பிரஞ்சுக்காரரும் நான்கு வருஷங்களுக்கு முன் தங்களுடைய உடைகளின் வர்ணத்தை மாற்றிக் கொண்டார்கள்.

## பனிப்பிரதேசத்தில் வெள்ளை உடைகள்.

இந்த யுத்தத்தில் உடைகளைப்பற்றி நூதனமான முறையொன்று அனுசரிக்கப்படுகிறது. ஜெர்மன் துருப்புகளும் ஆஸ்டிரியத் துருப்புகளும் காலநிலைக்குத் தக்கபடி உடைகளை மாற்றிக்கொண்டு வருகிறார்கள். பனிகாலத்தில் பூமியெங்கும் பனியால் உறைந்து வெண்மையாய்க் காணப்படும் போது, அந்தத்துருப்புகள் வெண்ணிறமான உடைகளை அணிந்து கொள்ளுகிறார்கள். அவ்வாறு செய்வதால் அவர்களுடைய உருவமும் நடமாட்டமும் தூரத்திலிருந்து பார்க்கிற சத்துருக்களுக்குத் தெரியவராமலிருக்கும்.

## தளவாட வண்டிகளை மறைத்தல்.

துருப்புகளை மட்டுமல்ல அவர்களோடு கூடச் செல்கிற சகல தளவாடங்களையும் மறைவாய்க் கொண்டு போவது அவசியமென்று நினைக்கப்படுகிறது. யுத்தத்துக்கு அவசியமான பீரங்கி, குண்டு, உடை, ஆகாரம் முதலிய சகல சாமான்களும் பலவிதமான வண்டிகளில் கொண்டுபோகப்படுகின்றன என்பதைக் கவனிக்கவேண்டும். ருஷிய ஜப்பானிய யுத்தத்தில், ஜப்பானியர் தங்கள் வண்டிகளின் மேல் இலைகளையும் செடிகளையும் கட்டி ரஸ்தாவின் ஓரமாய்க் கொண்டுபோனபோது சத்துருக்கள் ரஸ்தாவின் ஓரத்திலுள்ள மாஞ்செடிகளின் வரிசையைத் தவிர வேறெதையும் காணவில்லை. ஏனெனில் மரங்களின் வரிசைக்கும் மரக்கிளைகளால் மூடப்பட்ட வண்டிகளின் வரிசைக்கும் உள்ள வித்தியாசம் தூரத்திலிருப்பவர்களுக்குத் தெரியவராது. இந்த மகாயுத்தத்திலோ, சத்துருவைப்பற்றிய சகல விவரங்களை அறிந்துகொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடன் ஆகாயப் படைகள் சஞ்சரித்துக்கொண்டிருப்பதால், மேற் சொல்லிய உபாயங்களை அனுசரிப்பது மிக்க அவசியமாகி விட்டது. ஆகாய விமானத்திலிருந்து கொண்டு கீழே பூமியை நோக்கிப் பார்க்கும்போது, செடிகளால் மறைக்கப்பட்ட வண்டிகளின் கூட்டமானது ஒரு பெரிய தோட்டம் அல்லது காடு போலத் தோன்றும்.

## குதிரையின் வர்ணத்தை மாற்றுவது.

யுத்தத்தில் சிவப்பு நிறமுள்ள குதிரைகளே அதிகமாய் உபயோகிக்கப் படுகின்றன. ஏனெனில், அம்மாதிரியான சிவப்பு நிறமானது தூரப்பார்வைக்குப் பிரகாசமாய்த்தெரிய வராது. ஆகையால் மற்ற விதமான வர்ணமுடைய குதிரைகள் ராணுவத்தில் ஏற்றுக் கொள்ளப்படாமல் தள்ளிவிடப் படுகின்றன. ஆனல் ஜெர்மானியர் வெள்ளை கறுப்பு முதலிய வர்ணமுள்ள குதிரைகளின் மேல் சிவப்பு வர்ணம் பூசி ராணுவத்தில் சேர்த்துக் கொள்வதாகத் தெரிகிறது. குதிரைக்கு அசௌக்கியமும் இம்சையும் உண்டாக்காத ஓர் வகை திராவகத்தால் அந்த சிவப்பு வர்ணம் செய்யப்பட்டு உபயோகிக்கப்படுகிறது. அதனுல் சாதாரணமாய் ராணுவத்துக்கு லாயக்கில்லை யென்று தள்ளிவிடப்படுகிறகுதிரைகளில் அநேகம், ஜெர்மன் குதிரைப் படைகளில் சேர்க்கப்படுகின்றன.

## பொய்யான உருவங்களைச் செய்தல்.

சத்துருவின் ஆகாய விமானங்கள் உயரப்பறந்து பூமியில் அமைக்கப்பட்டுள்ள பீரங்கிகள், அரண்கள் இவைகளின் இருப்பிடங்களை அறிந்து கொள்ளுவது வழக்கம். அவ்வாறு அறிந்துகொள்ளப்பட்ட இடங்களின்மேல் சத்துருவின் பீரங்கிகள் குறிப்பாய்ச் சுட்டு அவைகளை நாசப்படுத்துகின்றன. இதைத்தடுப்பதற்காக, பீரங்கிகளைப்போன்ற உருவங்களை, தகரத்தினலோ மரத்தினலோ, வேறு சுலபமாய்க் கிடைக்கக்கூடிய வஸ்துக்களினுலோ, செய்து அவைகளைப் பற்பல இடங்களில் வைப்பதுண்டு. அவ்வாறு செய்தால், ஆகாய விமானங்களிலிருந்து பார்ப்பவர்களுக்கு நிஜமான பீரங்கி இன்னதென்றும் பொய்யான பீரங்கி இன்னதென்றும் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது. ஆகாய விமானியின் அறிவிப்பை நம்பி, பயனற்ற இடங்களின்மேல் சத்துருக்கள் தங்களுடையகுண்டுகளை விரயஞ் செய்வார்கள். அதேமாதிரி, தரையின்மேல் மேலாகப் பள்ளந்தோண்டி பெரிய அகழ் போலத் தோன்றும்படிச் செய்வது முண்டு. ஆகாய விமானிகளை ஏமாற்றுவதற்காக அவைகளெல்லாம் எளிதாய்ச் செய்யக்கூடிய உபாயங்களாகும்.

## ஆகாய விமானங்களை மறைத்தல்.

ஆகாய விமானம் வெகு உயரத்தில் பறந்தால் தரையிலிருப்பவர்களின் கண்களுக்குப் புலப்படாது. ஆனல் சத்துருவின் இருப்பிடத்தைப்பற்றிய விவரங்களை அறிந்து கொள்வதற்காக விமானம் சற்று கீழாகப் பறந்து செல்லவேண்டுமாகையால், அந்த சமயத்தில் தரையிலிருப்பவர்களுக்கு அது தெரியவரும். ஆனல் அவ்வாறு தெரியக்கூடாதென்பதற்காக ஜெர்மானியர் தங்களுடைய விமானங்கள் சிலவற்றை, கண்ணாடி போன்ற தெளிந்த வஸ்துவால் செய்கிறார்களாம். அவ்விதம் செய்வதால், அந்த விமானம் பறந்து செல்லும்போது ஆகாய ரூபமாகவே தோன்றும்.

"ஜெப்பளின்" என்று சொல்லப்படும் ஜெர்மன் ஆகாயக் கப்பல் மிகப் பெரிய உருவங் கொண்டதாகையால் அதை எளிதாய்க் கண்டுகொள்ளலாம், இராக்காலத்தில் சற்று மூடுபனியா யிருக்கும் சமயத்தில் அது உயரப்பறந்து நகரங்களின் மேல் வெடி குண்டுகளை எறிவதுவழக்கம்; அந்த சமயத்தில் அது தன்னுடைய உருவத்தை மறைத்துக் கொள்வதற்காக ஆகாயத்தில் பனிபோன்ற புகையை உண்டு பண்ணுகின்றது. அவ்வாறு செய்வதால் ஜெப்பளின் அந்த அடர்ந்தபுகையால் மூடப்பட்டு மறைத்துக்கொள்கின்றது.

## யுத்த கப்பல்களின் உருவத்தை மறைத்தல்.

யுத்த கப்பல் சத்துருவுக்குத் தன்னுடைய அடையாளம் தெரியாமலிருப்பதற்காக உருவத்தை மாற்றிக்கொள்வதுண்டு. "எம்டன்" கப்பல் தன் உருவத்தை மாற்றிக் கொள்வதற்காக அதிலிருந்த மூன்று புகைப்போக்கிகளுடன் மற்றொன்றும் துணியினுல் செய்து அமைக்கப்பட்டது புகைப்போக்கி என்பது புகைவெளியேபோவதற்காக அமைக்கப்பட்டிருக்கும் குழாய். அதனுல் எம்டன் கப்பலில் வழக்கமாய் மூன்று புகைப்போக்கிகள் இருக்கவேண்டுமாகையால், நான்கு குழாய்களை உடைய கப்பலைப்பார்த்து அது எம்டன் அல்ல என்று ஏமாந்து போகக்கூடும். அந்த உபாயத்தால் அந்த ஜெர்மன் குரூஸர் கப்பல் சில சமயங்களில் தப்பித்துக்கொண்டதென்று தெரிகிறது.

மற்றொரு விதமாகவும் யுத்தகப்பல் தன்னை மறைத்துக்கொள்ளக் கூடுமென்று தெரிகிறது. யுத்த கப்பல் திடீரென்று ஏராளமான புகையை உண்டுபண்ணி, சத்துருவின் கப்பலுக்குப் புலப்படாமல் அந்தப் புகையின் மறைவில் வேறொரு திக்கில் விரைவாய் ஓடி மறைந்துகொள்கின்றது. அவ்வாறு சில ஜெர்மன் யுத்த கப்பல்கள் செய்தன என்று சொல்லப்படுகிறது.

## ரதங்கள்.

இந்த மகாயுத்தத்தின் நடவடிக்கைகளில் எத்தனையோ நூதனவிஷயங்கள் காணப்பட்ட போதிலும், அவைகள் பழயகாலத்து ஆயுதங்களையும் ஞாபகப் படுத்துகின்றன. முற்காலத்தில் போர்க்களத்தில் ரதங்கள் உபயோகிக்கப்பட்டன. இப்போது ஆயுதம் ஏற்பட்ட மோட்டார் வண்டிகள் சண்டையில் உபயோகிக்கப் படுகின்றன. சத்துருவின் ஆயுதங்களால் எளிதில் நாசமாகாமல் விருப்பதற்காக அந்த மோட்டார்வண்டி முழுவதும் இரும்புக் கவசம் போடப்படுகின்றது. அப்படிப்பட்ட வண்டிக்குள்ளே ஆள்கள் உட்கார்ந்து கொண்டு அதில் மெஷின் பீரங்கிகளை ஏற்றிக்கொள்ளுகிறார்கள். அந்த ஆள்கள் அவ்வாறு பந்தோபஸ்தாய் ஏறிக்கொண்டு அதிகவிரைவாய்ப் பிரயாணஞ் சென்று சத்துருக்களுக் கிடையே புகுந்து ஏராளமான சேதத்தை உண்டுபண்ணுகிறார்கள்.



வேறு பற்பல வேலைகளைச்செய்வதற்கும் மோட்டார்வண்டிகள் தேவையா யிருக்கின்றன. முற்றுகைப்பீரங்கிகளை இழுப்பதற்கும், துருப்புகளையும் சாமான்களையும் கொண்டு போவதற்கும், காயம்பட்டவர்களை அப்புறப்படுத்துவதற்கும், ஆகாயவிமானங்களைப் பற்பல பாகங்களாகப் பிரித்து ஏற்றிக்கொண்டு போவதற்கும், பலவிதமான பழுது பார்க்குங் கருவிகளை ஏற்றி, தேவையான இடங்களுக்கெல்லாம் சென்றுகொண் டிருப்பதற்கும், சோதனை விளக்கை ஏற்றி உபயோகிப்பதற்கும், ஆகாய விமானங்களை நோக்கிச் சுடுகின்ற பீரங்கியை ஏற்றிச் செல்வதற்கும், யுத்தகளத்தில் தபால்களைக் கொண்டு போவதற்கும் இன்னும் பல வேலைகளுக்கும் மோட்டார்வண்டிகள் உபயோகிக்கப் படுகின்றன. இந்த மகா யுத்தத்தில் சுமார் 2½ லக்ஷம் மோட்டார் வண்டிகள் உபயோகத்திலிருப்பதாகச் சொல்லலாம்.

## இரும்புக் கவசம்.

முற்காலத்தில் துருப்புகள் இரும்புக்கவசம் பூண்டு யுத்தஞ்செய்தார்கள். துப்பாக்கியும் பீரங்கியும் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு அந்த வழக்கம் நின்றுவிட்டது. ஆயினும் இந்த யுத்தத்தில் பிரஞ்சுத் துருப்புகள் இரும்பினால் செய்த தலைத் தொப்பிகளை உபயோகிக்கிறார்கள். அரண்களுக்குமுன்புறத்தில் குண்டுகள் விழுந்து வெடிக்கும்போது, கல், மரம், இரும்பு முதலிய சாமான்கள் உடைந்து சிதறி யடிக்கிறபடியால், அந்தத் துண்டுகளால் அபாய முண்டாகாம லிருப்பதற்காக இரும்புத் தொப்பிகள் அணியப்படுகின்றன. துப்பாக்கியி லிருந்து பாயும் ரவைகளையும் பீரங்கியிலிருந்து சுடப்படுகிற குண்டுகளையும் அந்தத் தொப்பிகளால் தடுக்க முடியாது.

## அம்புகள்.

யுத்தகளத்தில் வில்லும் அம்பும் உபயோகிப்பதை நிறுத்தி, சுமார் 400 வருஷங்களாகின்றன. அத்தனை வருஷங்களாக துப்பாக்கியை உபயோகித்த போதிலும், இந்த மகா

யுத்தத்தில் கையாளப்படுகிற துப்பாக்கி இதுவரையிலில்லாத நூதன விசையைப் பெற்றுள்ளது. அதில் 5 அல்லது 6 ரவைகளை ஒரு ஸரம்போலக் கோர்த்து, துப்பாக்கியில் நுழைக்கப்படுவதால், இடைவிடாமல் ஐந்தாறுமுறை சுடுவது சாத்தியமாயிருக்கிறது. இந்த நூதனமுறை கண்டுபிடிக்கப்பட்டு 25 வருஷங்களுக்கு மேலாகவில்லை. ஆயினும், இரும்பினால் செய்யப்பட்ட அம்புகளை, பிரஞ்சு ஆகாய விமானங்கள் உபயோகப்படுத்துகின்றன. ஒரு சாண் நீளமுள்ள அந்த அம்புகளை பிரஞ்சு ஆகாய விமானிகள் உயரப்பறக்கும்போது தரையை நோக்கி குறிப்பாய் எறிகிறார்கள். ஒரு ஜெர்மன் தளகர்த்தர் தமது மோட்டார் வண்டியில் ஏறும் சமயத்தில் அப்படிப்பட்ட அம்பு ஒன்றால் அடிபட்டு இறந்து போனதாகச் சொல்லப்படுகிறது. ஜெர்மன் விமானங்களும் அம்மாதிரியான அம்புகளை உபயோகப் படுத்துவதாகத் தெரிகிறது.

## யானை முதலிய மிருகங்கள்.

முற்காலத்தில் யானைகள் படைகளாகச் சேர்க்கப்பட்டதுபோல இப்போதில்லை. ஆயினும் ஒரு சமயத்தில்மட்டும் யானை உபயோகிக்கப்பட்டதை ஒரு அபூர்வ சம்பவமாகச் சொல்லலாம். பெரிய பீரங்கி ஒன்றை அவசரமாய் இழுத்துக்கொண்டு வருவதற்காக பிரஞ்சுக்காரர்கள் பாரிஸ் நகரத்தில் மிருகக் காக்ஷியிலிருந்த ஒரு யானையை உபயோகித்தார்களென்று தெரிகிறது. பீரங்கிகளை வண்டிகளில் ஏற்றி அவற்றில் குதிரைகளைப் பூட்டி இழுப்பதே ஐரோப்பிய ராணுவத்தில் பொதுவான வழக்கமாயிருந்தபோதிலும் ஸெர்வியர்கள் தங்கள் பீரங்கி வண்டியில் மாடுகளையும் கட்டி இழுக்கிறார்களெனபதை இங்கு குறிப்பிடலாம். முற்காலத்தில் இந்தியா ஈஜிப்ட் அரேபியா முதலிய தேசங்களில் ஒட்டகப் படைகள் கூட்டப்பட்டன. இந்த யுத்தத்தில் ஸூவெஸ் வாய்க்காலுக்கருகில் நடந்த சண்டைகளில் ஒட்டகப்படை உபயோகிக்கப்பட்டது. அந்தப் படை, இந்தியாவிலுள்ள பிகானிர் சமஸ்தானாதிபதி உதவியதாகும்.

## ஆகாய ரதங்கள்.

ஆகாய விமானங்கள் மட்டும் முற்றிலும் புதிய கருவிகள் என்று ஐரோப்பியர் கருதுகிறார்கள். ஆனால் இந்தியர்கள் தங்களுடைய புராணங்களில்அவைகளைப்பற்றி சொல்லப்பட்டிருப்பதைக் கவனிக்கும்போது அவ்வாறு நினைப்பதற்கில்லை. ஆயினும் இந்த மகா யுத்தத்தில் பற்பல விதமான ஆகாய விமானங்களும் ஆகாயக் கப்பல்களும் யுத்தகளத்தில் உபயோகிக்கப்படுவதைப்போல முற்காலத்தி லில்லையென்றே சொல்லவேண்டும்.

## கைச்சண்டைகள்.

இக்காலத்தில் வெகுதூரஞ் சுடக்கூடிய பீரங்கிகளும் துப்பாக்கிகளும் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதால், யுத்தகளத்தில் சண்டை செய்கின்ற இரு கக்ஷிகளும் வெகுதூரம் விலகியிருந்து போர்புரிய நேரிடுமென்று இதுவரையில் நினைக்கப்பட்டது. ஆனால் இந்த யுத்தத்தில் முற்காலத்தைப்போல இருகக்ஷித்துருப்புகளும் மிகவும் அருகே இருந்துகொண்டும் அடிக்கடி பயங்கரமான கைச்சண்டைகளைச் செய்து கொண்டிருக்கிறார்கள். பெரியகற்களை எறிவது போல வெடிகுண்டுகளைத் துருப்புகள் கயிற்றில் மாட்டி வீசுவதுமன்றி கையிலெடுத்தும் எறிகிறார்கள். இருகக்ஷிகளும் பூமிக்கடியில் மறைந்த வண்ணமாய் நெருங்கிச் சென்று நிலைபெறுவதால் அவ்வாறு கைச் சண்டைகளைச் செய்யவேண்டியிருக்கிறது.




ஆச்சரியமான ஆகாய ரதங்கள்.

"பக்ஷிகளைப்போல் மனிதனும் ஆகாயத்தில் செல்லவேண்டுமென்று பற்பல முயற்சிகள் அநேக நூற்றாண்டுகளாகச் செய்யப்பட்டு வந்தன."

1660-ம் வருஷத்திலிருந்து பலபரிசைஷகள் செய்யப்பட்டன. மனிதன் ஆகாயத்தில் எழும்பிச் செல்வது எளிதாயிருந்தாலும், ஆகாயத்தில் இஷ்டப்படி பிரயாணஞ் செய்வதே கஷ்டமாயிருந்தது. இப்போது அதுவும் சாத்தியமாகி ஆகாயத்தில் வெம்போர் புரிந்து வருகிறார்கள்.

ஆகாய ரதங்களை இரண்டு தினுசாகப்பிரிக்கலாம். அவைகள் ஆகாயக் கப்பலென்றும் ஆகாய விமானங்களென்றும் இருவகைப்படும்.

## ஆகாயக் கப்பல்.

ஜலத்தைவிட இலேசான வஸ்து, அதில் எவ்வாறு மிதக்கின்றதோ அவ்வாறே காற்றைவிட இலேசான வஸ்துவும் காற்றில் மிதக்கக்கூடும். 'ஹைட்ராஜன்' என்ற வாயுவானது காற்றைவிட இலேசாயிருக்கிறது.

அந்த வாயுவை ஒரு கூண்டில் நிரப்பினால் அந்த கூண்டு ஆகாயத்தில் எழும்பும் அந்தக் கூண்டை அவ்வாறு ஆகாயத்தில் மிதந்திருக்கும்படிச் செய்யப்படுகிறது. பிறகு அதை ஓடும்படிச் செய்வதற்காக அதில் ஒரு எஞ்ஜின் அமைக்கப்படுகிறது. அந்த எஞ்ஜின் அந்தக் கூண்டிலுள்ள பலவித விசிறிகளைத் திருப்புவதால் அதை நமதிஷ்டப்படி செலுத்தலாம்.

## ஜெப்பளின்.

ஆகாயக் கப்பல்கள் பலவிதமாய்ச் செய்யப்பட்ட போதிலும் அவைகளுக்குள் "ஜெப்பளின்" என்பவைகளே மிகச் சிறந்தவையாகும். ஜெப்பளின் என்பது ஆகாயக்கப்பல் தினுசைச் சேர்ந்தது. ஜெப்பளின்கள் ஜெர்மானியிலும் ஆஸ்டிரியாவிலும் செய்யப்படுகின்றன. ஜெப்பளின் என்ற ஆகாயக்கப்பல் 500 அடி நீளமுள்ளது. அதன் பருமன் 157 அடியாகிறது. "ஜாண்டியுக்" என்ற மிகப்பெரிய பிரிட்டிஷ் சண்டைக்கப்பல் 575 அடி நீளமும் 89 அடி அகலமும் உள்ளது. ஆகையால் ஜெப்பளின் ஒரு பெரிய சண்டைக் கப்பலைப் போல பிரமாண்டமான உருவைத்தையுடையது. அவ்வளவு பெரியகூண்டு ஒன்று செய்யப்படுகின்றது. அது மிகவும் உறுதியாயிருப்பதோடு இலேசாயும் இருக்கவேண்டும். அலுமனியம் என்ற இலேசான உலகத்தோடு வேறுவித உலோகங்களையும் கலந்து சட்டங்கள் செய்யப்படுகின்றன. அந்த சட்டங்களைச் சுற்றிலும், பருத்தியும் ரப்பரும் கலந்த ஓர் வகைத் துணி மூடப்பட்டிருக்கிறது. இந்த பெரிய கூண்டுக்குள்ளே, 17 சிறு பைகள் இருக்கின்றன. ஒவ்வொரு பையிலும் ஹைட்ராஜன் என்ற வாயு அடைக்கப்படுகிறது. இதனால் அந்தப் பிரமாண்டமான கூண்டு ஆகாயத்தில் மிதந்து நிற்கும் தன்மையைப் பெறுகிறது. இந்தக் கூண்டின் அடிப்புறத்தில் இரண்டு தொட்டில்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் சுமார் 500 குதிரை யோட்டங்கொண்ட எஞ்ஜின்கள் வைக்கபட்டிருக்கின்றன. நீராவிக் கப்பலில் அதிலுள்ள எஞ்ஜின் துடுப்புகளைப்போன்ற அநேக விசிறிகளை விரைவாய்ச் சுற்றுவதால் அக்கப்பலை ஓடச் செய்கிறது போலவே, ஜெப்பளினில் இருக்கிற எஞ்ஜின் அநேக விசிறிகளை விரைவாய் சுழற்றி அதை ஆகாயத்தில் ஓடச்செய்கிறது. ஜெப்பளின் மணிக்கு 50-மைல் வீதம் வேகமாய் ஓடக்கூடியது.



இரண்டு தொட்டில்களுக்கும் இடையேயுள்ள பாகத்தில் அநேக பெரிய அறைகள்கட்டப்பட்டிருக்கின்றன. ஜெபளினைப் பார்ப்பவர்கள் அனைவரும் அந்த நேர்த்தியான அறைகளைக் கண்டு ஆச்சரியப்படுகிறார்கள். ஜெப்பளினைச் செலுத்துவதற்குத் தேவையான 30 பேர்கள் அந்த அறைகளில் இருந்துவருவார்கள். அந்த அறைகளில்தான், கம்பியில்லாத தந்தியின் தாமும் சோதனை விளக்கும் வெடி குண்டுகளும் பெட்ரோல் எண்ணெயும் பலவித இரும்பாயுதங்களும் உணவுப் பொருள்களும் மற்ற சாமான்களும் 30-பேர்களுக்குத் தேவையான படுக்கை யறைகளும் இருக்கின்றன. ஆகாயத்தில் பறந்துசெல்லும்போது அந்த அறைகளில் தான் உத்தியோகஸ்தர்களும் சிப்பந்திகளும் படுத்து உறங்குவார்கள். அந்த அறைகளில் தான் மின்சாரசக்தியால் அடுப்பு எரிக்கப்பட்டு சமையல் செய்யப்படுகிறது. ஜெப்பளினில் அமைக்கப்பட்டுள்ள எஞ்ஜின் மின்சார சக்தியை உண்டுபண்ணுகின்றது. ஒரு ஜெப்பளின் சுமார் ஐந்துடன் பளுவைச் சுமந்து செல்லக்கூடியது. அதாவது சுமார் 100 ஆள் பளுவு ஆகிறது. அது ஆகாயத்தில் வெகு தூரம் பிரயாணஞ் செய்யக்கூடியது.

ஏனெனில் எஞ்ஜினுக்குத் தேவையான எண்ணெயும் 30 பேர்களுக்குத் தேவையான ஆகாரமும் அதில் ஏராளமாய் ஏற்றிக்கொண்டுசெல்லலாம். ஆகாயக் கப்பலானது காற்றை விட இலேசான யந்திரம் என்பதைக் கவனிக்கவேண்டும். ஆனால் காற்றைவிடப் பளுவான யந்திரங்களும் உயரப்பறந்து செல்லும்படி கட்டப்படுகின்றன. அந்த பளுவான யந்திரங்களை ஆகாய விமானம் என்று சொல்லிவருவோம்.

## ஆகாய விமானம்.

### அது எவ்வாறு உயரச்செல்கிறது.
### ஆகாயத்தில் எவ்வாறு பிரயாணஞ் செய்கிறது.



காற்றாடி ஆகாயத்தில் பறந்து செல்வதை ஆதாரமாகக் கொண்டு ஆகாய விமானங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. காற்றாடியானது காற்றைவிடப் பளுவுள்ளதென்பதைக் கவனிக்கவேண்டும். காற்றாடியை உயரத்தூக்கி எறிந்தாலும் அது பிறகு தரையில் வந்து விழுந்துவிடுகிறது. காற்றாடி பளுவாயிருந்தாலும், அதை காற்றுக்கு எதிர்புறமாகக் கயிற்றால் இழுத்துப் பிடிப்பதால் காற்று அந்த படத்தின்மேல் மோதி அதை மேலே எழும்பச் செய்கிறது. காற்றாடியைக் கயிற்றால் இழுத்துப் பிடிப்பது தான் மிகவும் முக்கியமாகும், அவ்வாறு அதை யிழுத்துப் பிடித்தால்தான், காற்றின் விசை படத்தைத் தூக்கி விட்டுக்கொண்டே இருக்கிறது. கயிற்றால் இழுத்துப் பிடிக்காவிட்டால், படத்தின் மேல் காற்றுமோதி அதைக் கீழே தள்ளிவிடும்.

அதேமாதிரியாக ஆகாய விமானத்திலுள்ள எஞ்ஜின், விமானத்தை இழுத்த வண்ணமாய் ஓட்டுவதால், காற்றின் விசையானது விமானத்தில் மோதி அதைத் தூக்கி விட்டுக்கொண்டே யிருக்கிறது.

மோட்டார் வண்டிகளுக்காக மிகச் சிறியதும் அதிக பலங்கொண்டதுமான எஞ்ஜின்கள் செய்யப்பட்ட பிறகுதான், ஆகாய ரதங்களில் அவைகளை உபயோகிக்க சாத்தியப்பட்டதென்று சொல்லி யிருக்கிறோம். அந்த எஞ்ஜினுக்கு முன்புறத்தில் விசிறி போன்ற துடுப்புகள் பிணைக்கப்பட்டிருக்கின்றன. கப்பலிலுள்ள துடுப்புகளை ஜலத்தில் போட்டுத் தள்ளுவதால் கப்பல் ஓட்டப்படுகிறது. இந்த காலத்து நீராவிக் கப்பலில் அந்த துடுப்புகள் எஞ்ஜினுடைய விசையால் அதிவிரைவாய் ஜலத்தில் தள்ளப்படுவதால் கப்பல் விரைவாய் செல்லுகிறது. அதேமாதிரியாக, துடுப்புகளால் காற்றைத் தள்ளிக்கொண்டு ஆகாய விமானம் முன் செல்கிறது.

## கடல் விமானம்

சாதாரண ஆகாய விமானம் கடலில் மிதக்கும்படி செய்யப்பட்டிருப்பதற்கு ஸீப்ளேன் அல்லது கடல் விமானம் என்று பெயர். ஆகாய விமானத்துக்கு அடிப்பாகத்தில், சக்கரங்கள் அமைக்கப்படுவதற்குப்பதிலாக, ஜலத்தில் மிதக்கக்கூடிய சட்டைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. கடல்விமானத்தில் அதைத் தவிர வேறு விசேஷமில்லை. ஆகையால் கடல் விமானம் கடலின்மேல் வந்து இறங்கினால் அங்கு மிதந்து நிற்கும். கடல் விமானம் யுத்த கப்பல்களின் உபயோகத்துக்காக இருக்கிறது. அதுயுத்தகப்பலில் வைத்துக்கொண்டு போகப்படுகிறது. தேவையானபோது அந்த விமானம் கப்பலிலிருந்து சமுத்திர ஜலத்தில் இறக்கிவிடப்படுகிறது. பிறகு அந்த விமானத்தில் ஆள் ஏறி உட்கார்ந்துகொண்டு சமுத்திர ஜலத்திலிருந்து எழும்பி உயரப் பறந்து சத்துருவின் யுத்த கப்பல்

களைப் பற்றிய விஷயங்களை அறிந்துகொண்டு, திரும்பத் தன் சொந்தக் கப்பலுக் கருகில் கடலின்மேல் வந்து இறங்குவான். பிறகு கப்பலிலுள்ளவர்கள் அந்த விமானத்தை தூக்கி எடுத்து கப்பலுக்குள்ளே வைத்துக்கொள்வார்கள்.



ஆகாயக் கப்பலுக்கும் ஆகாய விமானத்துக்கும் உள்ள வித்தியாசங்களை செவ்வையாய் அறிந்து கொள்ள வேண்டும். ஆகாய விமானங்கள் ஜெப்பளின்களை விட அதிக உயரம் பறக்கக் கூடியவை அதிகவிரைவாய் ஓட கூடியவை. மிகச் சிறியவையானபடியால் சத்துருவின் கண்களுக்குத் தெரியாமல் பகற்காலங்களிலும் மறைந்திருக்கக் கூடியவை. ஜெப்பளின்கள், ஆகாயவிமானங்களை விட அதிக பளுவை சுமக்கக்கூடியவை; அதிக தூரம் பிரயாணஞ் செய்யக்கூடியவை. உருவத்தில் பெரியவை ஆகையால் இரவில் மட்டும் மறைவாய் சஞ்சரிக்கக்கூடியவை.

மேற்சொல்லிய விவரங்களிலிருந்து, யுத்த நடவடிக்கைகளுக்கு ஆகாயவிமானங்களே பயனுள்ளவை யென்று தெரியவரும். போர்க்களங்களின் மேல் சுற்றித் திரிந்து சத்துருவைப்பற்றிய விவரங்களை அறிந்துகொண்டு வருவதற்கு அவைகள் மிகப் பிரயோசனமுள்ளவை. ஜெப்பளின்கள் இது வரையில் போர்முனையில் சஞ்சாரஞ் செய்ததாகத் தெரியவில்லை. இரவில் மட்டும் பறந்து சென்று அநேக ஸ்தலங்களைத் தாக்கி இருக்கின்றன.

## ஸப்மரின் கப்பல்.

ஸப்மரின் கப்பலும் கடற்சுரங்கமும் டார்பிடோவெடியும் கடற்படையிலுள்ள நூதனமான கருவிகள் என்பதில் ஐயமில்லை. அவை மூன்றும் கடலின் கீழேமறைந்த வண்ணமாய் நாசத்தை விளைவிக்கின்றன. அவைகளைப்பற்றி விஸ்தாரமான விவரங்கள் நமது ஆபீஸில் பிரசுரமான ஐரோப்பிய யுத்த சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பற்றிய முக்கிய விஷயங்களையும் சில நூதன விவரங்களையும் இங்கு குறிப்பிடுவோம்.

மனிதன் ஜலத்துக்கடியில் மூழ்கி யிருப்பதற்கு ஒரு பெருந்தடை, அவன் அங்கு சுவாசிக்க முடியாததாகும். கப்பலுக்குள் மனிதர்கள் உட்கார்ந்துகொண்டு ஜலத்துக்கடியில் சென்றால் அந்த கப்பலுக்குள் ஜலம் போவதற்கு வழி யிருக்கக்கூடாது ; ஜலம் போவதற்கு வழியில்லாவிட்டால் காற்று போவதற்கும் வழியிராது. ஆகையால் ஸப்மரின் கப்பலுக்குள் நல்ல காற்று அநேக குழாய்களில் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறது. அந்த காற்றை சிறிது சிறிதாக கப்பலுக்குள் பரவச்செய்கிறார்கள். கப்பலில் இருப்பவர்கள் வெளியே மூச்சு விடுவதால் கப்பலிலுள்ள காற்று கெட்டுப் போகிறது. அதை ஒரு பம்புக் கருவியால் அப்புறப்படுத்துகிறார்கள். சப்மரின் கப்பலி லிருப்பவர்கள் அவ்வாறு நல்ல காற்றை அடைத்து வைத்துக்கொண்டு, கடலுக்கடியில் இரண்டு தினங்கள் தொடர்ச்சியாய் அமுங்கி யிருக்கலாம். பிறகு கடலின்மேல் எழும்பிவந்து புதிய காற்றை மறுபடியும் அடைத்துக் கொள்ளலாம்.

சப்மரின் கப்பல் ஜலத்துக் கடியில் எவ்வாறு அமுங்குகிறது ? அந்த கப்பலுக்குள் சில அறைகள் கட்டப்பட்டிருக்கின்றன ; அந்த அறைகளில் சமுத்திர ஜலத்தைவிட்டு

நிரப்பினால், ஜலத்தின் பளுவால் கப்பல் அமுங்கிவிடுகிறது. பிறகு கப்பல் மிதக்கவேண்டுமானால், இந்த அறைகளில் நிரம்பியிருக்கிற ஜலத்தை ஒரு பம்புக்கருவி மூலமாய் வடித்துவிடுகிறார்கள். ஜலத்தின் பளுவு குறைந்தவுடன் கப்பலானது மேலே எழும்பத் தொடங்கும்.



சப்மரின் கப்பல் ஜலத்துக்கடியில் அமுங்கிய பிறகு, கடலின் மேலேயுள்ள வஸ்துக்களை, கப்பலில் இருப்பவர்கள் எவ்வாறு அறிந்துகொள்வது? அதற்கு ஓர் ஆச்சரியமான கண்ணாடிக் குழாய் இருக்கிறது. சப்மரின் கப்பலுக்கு மத்தியில் உயரமான ஸ்தம்பம் போன்ற குழாய் இருப்பதைக் கவனிக்கவும். அந்தக் குழாயின் உச்சியில் பெரிஸ்கோப் என்று சொல்லப்படுகிற விசித்திரமான கண்ணாடி அமைக்கப்பட்டிருக்கிறது. சமுத்திரத்தின் மேலுள்ள தோற்றத்தை அக்கண்ணாடி காண்பிக்கும்; அந்த தோற்றத்தின் பிரதிபிம்பம் கப்பலுக்குள்ளே யிருப்பவர்களுக்குத் தெரியவரும். ஆனால் கடலின் மேலே இரண்டு மூன்று மைல் விஸ்தீரணத்தின் தோற்றத்தை மட்டும் அந்த கண்ணாடி காண்பிப்பதால் வெகு தூரத்திலுள்ள வஸ்துக்களைப் பார்ப்பதற்கு சப்மரின் கப்பல் கடலின்மேல் எழும்ப வேண்டும்.

சப்மரின் கப்பல் கடலின்மேலே சாதாரண கப்பலைப்போல ஓடும்போது எண்ணெயினால் வேலை செய்கிற எஞ்ஜின் அதை ஓட்டுகிறது. அந்த எஞ்ஜின் வேலை செய்துகொண்டிருக்கும்போது மின்சார சக்தியையும் உற்பத்தி செய்கிறது. ரயில் எஞ்ஜின் ஓடும்போது அதனால் மின்சார சக்தி உற்பத்தியாகி ரயில்வண்டியிலுள்ள மின்சார விளக்கும் விசிறியும் வேலை செய்வதைப் பார்க்கிறோமல்லவா? அம்மாதிரி சப்மரின் கப்பலில் மின்சார சக்தி உற்பத்தி செய்யப்படுகிறது. அந்த மின்சார விசையால் சப்மரின் கப்பல் கடலில் கீழே அமுங்கிய வண்ணமாய் ஓடுகிறது. கடலின் மேலே செல்லுவதற்கும் கடலின் கீழே செல்லுவதற்கும் வெவ்வேறு யந்திரங்கள் தேவையாயிருக்கின்றன. ஆயில் எஞ்ஜின் வேலை செய்வதற்கு நல்ல காற்று வேண்டும்; ஆனால் கப்பலை கடலின் மேலே ஓட்டுவதற்கு அந்த எஞ்ஜின் உபயோகிக்கப்படுகிறது; மின்சார விசையால் வேலை செய்வதற்கு காற்று தேவையில்லையாகையால் கடலின் கீழே ஓடுவதற்கு அந்த யந்திரம் உபயோகப்படுகிறது.

சப்மரின் கப்பலின் விசேஷமென்னவென்றால், அது கடலின்கீழ் மறைந்த வண்ணமாயிருந்து சத்துருவின் கப்பலைத் தாக்குவதாகும். கடலின் கீழே இருந்துகொண்டு கடலுக்கடியில் பிரயோகிக்கக் கூடிய ஆயுதம் ஒன்றுதானிருக்கிறது. அதற்கு "டார்ப்பிடோ" என்று பெயர். அந்த ஆயுதத்தை ஜலத்துக்கடியில் தள்ளியவுடன் அது தானாகவே ஜலத்தின் கீழே பாய்ந்து சென்று வழியிலுள்ள வஸ்துவின் மேல் மோதி வெடிக்கிறது. ஆனால் இந்த மகா யுத்தத்தில் சப்மரின் கப்பல் செய்து வருகிற முக்கிய காரியம் வேறுவிதமாயிருக்கிறது. அந்த கப்பலைக்கொண்டு நடத்திவருகிற சண்டையின் முக்கிய நோக்கத்தை ஜெர்மானியர் மாற்றிவிட்டார்கள். யுத்தகப்பல்களைத் தாக்காமல் வியாபாரக் கப்பல்களையும் துருப்புகள் தளவாடங்கள் முதலியவைகளை ஏற்றிச் செல்லும், கப்பல்களை

யும் சாகஞ் செய்யவேண்டுமென்ற நோக்கத்தை ஜெர்மானியர் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் ஜெர்மானியர் இந்த யுத்தம் ஆரம்பித்த பிறகு கட்டியிருக்கிற ஸப்மரீன் கப்பல்களில் பீரங்கிகளை அமைத்திருக்கிறார்கள். வழக்கமாய் ஏற்பட்டுள்ள "டார்ப்பிடோ" வெடிகளை அக்கப்பல்களில் அதிகமாய் ஏற்றவில்லை. இதற்குச் சில காரணங்களிருக்கின்றன. யுத்த கப்பல் திணுசைச் சேராத ஸாதாரண கப்பலை அழிப்பதற்கு "டார்ப்பிடோ"வைப் போன்ற பயங்கரமான வெடி தேவையில்லை. சிறிய பீரங்கியிலிருந்து சுடப்படுகிற குண்டுகளே போதுமானவை. தவிர, "டார்ப்பிடோ" வெடியானது பெரியதாயும் கனமாயும் பளுவாயுமிருப்பதால், ஸப்மரீன் கப்பலில் அவைகளை அதிகமாய் எடுத்துக்கொண்டு போக முடியாது. மேலும், "டார்ப்பிடோ" வெடி ஒன்றைச் செய்வதற்கு ஏராளமாய் செலவாகிறது. ஆகையால் புதிதாய்க் கட்டப்பட்டுள்ள ஜெர்மன் ஸப்மரீன் கப்பலில், சிறிய பீரங்கியும் அதில் சுடக்கூடிய ஏராளமான குண்டுகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் பீரங்கியை ஜலத்துக்கடியில் வைத்துச்சுட முடியாது. இதைச் சுடும்போது ஸப்மரீன் கப்பலானது கடலின் மேலே எழும்ப வேண்டும். பிறகு அந்தக் கப்பல் கடலின் கீழ் அமுங்க வேண்டுமானால், அந்த பீரங்கியை கப்பலுக்குள்ளே இழுத்து வைத்து கப்பலிலுள்ள எல்லா துவாரங்களும் அடைக்கப்படுகின்றன

எல்லா யுத்த நடவடிக்கைகளுக்கும் எப்படி ஓர் ஆதார ஸ்தலம் அவசியமாயிருக்கிறதோ, அப்படியே ஸப்மரீன் சண்டைகளை நடத்துவதற்கும் ஆதார ஸ்தலம் இருக்கவேண்டும். அதாவது ஆதார ஸ்தலத்தில் யுத்த நடவடிக்கைகளுக்குத் தேவையான சகல வஸ்துக்களையும் சேகரித்து வைக்கவேண்டும். ஸப்மரீன் கப்பலிலுள்ள சுமார் 30-மனிதர்களுக்கு ஆகாரமும், அக்கப்பலை யோட்டுவதற்கு எண்ணெயும், அதிலுள்ள பீரங்கியில் சுடப்படுவதற்கு குண்டுகளும் அந்தக் கப்பலிலேயே வைக்கப்பட்டிருக்கும். ஆனால் அவைகளெல்லாம் செலவழிந்த பிறகு மறுபடியும் அவைகளைக் கப்பலுக்குள் நிரப்பவேண்டு மல்லவா? அந்த சாமான்களெல்லாம் அந்த கப்பலுக்கு எங்கிருந்து கிடைக்கும்? அதற்காக ஓர் ஆதார ஸ்தலமிருந்தால் அந்தக் கப்பல் அந்த இடத்துக்குச் சென்று தனக்குத் தேவையான சாமான்களை எடுத்துக்கொள்ளும். ஜெர்மானியர் இப்போது மிகப் பெரிய ஸப்மரீன் கப்பலைக் கட்டியிருப்பதற்குக் காரணம் அதில் ஏராளமான சாமான்களை எடுத்துக்கொண்டு போவதாகும். அப்படியிருந்தும் ஓர் ஆதார ஸ்தலம் இல்லாமல் அக்கப்பல்கள் வெகு காலம் சஞ்சரிக்க முடியா. ஆகையால் ஸப்மரீன் கப்பல்கள் நினைத்த இடங்களுக்குச் சென்று இஷ்டப்படியெல்லாம் சண்டை செய்யக் கூடுமென்று எண்ணுவது பிசகு. ஜெர்மன் கப்பல்கள் இப்போது மத்தியதரைக் கடலில் சஞ்சாரம் செய்வதால், கிரேக்கர்களுக்குச் சொந்தமான ஒரு தீவில் அவைகளுக்கு வேண்டிய வசதிகள் கிடைப்பதாகச் சொல்லப்படுகிறது.

ஜெர்மானியரின் ஸப்மரீன் கப்பல்கள் நேசக் கக்ஷியாரின் வியாபாரக் கப்பல்களை அழிக்க முயன்றபோது, நேசக் கக்ஷியார் பற்பல உபாயங்களைச் செய்து அந்தத் தொந்தரவை இங்கிலீஷ் கடலில் முற்றிலும் நிறுத்திவிட்டார்கள். அந்த உபாயங்கள் வெகு இரகஸ்யமாயிருந்துவந்தாலும், இரண்டொன்றுமட்டும் வெளியாகி யிருக்கிறது. வியாபாரக் கப்பல்கள் அதிக விரைவாயும் பாம்புபோல் வளைந்தும் சென்றால், அவைகளை ஸப்மரீன் கப்பல்கள் குறி பார்த்துத் தாக்க முடியாது. ஸப்மரீன் கப்பல் கடலின் கீழ் அமுங்குவதற்கு முன்னால் அதன்மேல் வியாபாரக்கப்பல் வந்து மோதவுமுண்டு. "டெஸ்டிராயர்" திணுசைச் சேர்ந்த யுத்தகப்பல்கள் அதிவிரைவாய் ஓடக்கூடியவையாகையால் அவைகள் ஸப்மரீன் கப்பல்களைத் துரத்தித் தாக்குவதே முக்கியமான உபாயமாகும். மற்றொரு உபாயமிருப்பதையும் கவனிக்கவேண்டும். ஆகாய விமானங்கள் ஆகாயத்தில் பறந்துகொண்டு, கீழே சமுத்திர ஜலத்தை உற்றுக் கவனித்தால் கடலின்கீழே ஸப்மரீன் கப்பலுடைய கறுத்த உருவம் மிதப்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். ஆகாயத்திலிருந்து பார்த்தால் சமுத்திர ஜலமானது ஸ்படிகம்போல தெளிவாய்க் காணப்படுமென்பதை மறக்கக்கூடாது. இவ்வாறு ஜெப்பலின் என்ற ஒரு ஜெர்மன் ஆகாயரதம் கடலின் கீழே மறைந்துகொண்டிருந்த பிரிட்டிஷ் ஸப்மரீன் கப்பலைக் கண்டுகொண்டு அழித்துவிட்டது. அம்மாதிரியாக ஒரே ஒரு சம்பவம்தான் நடந்திருப்பதாகத் தெரிகிறது.

ஸப்மரீன் கப்பல்கள் ஒன்றோடொன்று சண்டை செய்ய முடியாது. ஏனெனில் அவைகள் எளிதாய் மறைந்து கொள்ளலாமாகையால், கண்களுக்குப் புலப்படாத வஸ்துக்கள் ஒன்றோடொன்று சண்டையிடுவது சாத்தியமல்ல. ஆயினும், ஒரு இடாலிய ஸப்மரீன் கப்பலும் ஒரு ஆஸ்டிரிய ஸப்மரீன் கப்பலும் தற்செயலாய் சந்திக்கவே இரண்டு கப்பல்களும் ஒன்றையொன்று நோக்கி 'டார்ப்பிடோ' வெடியைப் பிரயோகித்து கடலின்கீழ்

மறைந்துவிட்டன. ஆஸ்டிரியக் கப்பல் தப்பித்துக்கொண்டது; இடாலியக் கப்பல் மறுபடியும் மேலே எழும்பவில்லை. குருட்டுத்தனமான சண்டையில் இன்ன கக்ஷிக்குத் தான் வெற்றியென்பது நிச்சயமல்லவாகையால், அவ்வித சம்பவங்கள் நேரிடுவது மிகவும் அபூர்வம்.

## கடற் சுரங்கம்.

இரும்பினால் செய்யப்பட்ட ஒரு பெரிய பாத்திரத்துக்குள்ளே வெடி மருந்து வைத்து அதை ஜலத்தில் வெடிக்கும்படி உபாயஞ் செய்யப்பட்டிருக்கிற கருவிக்கு, கடற் சுரங்கம் என்று பெயர். அந்த சுரங்கங்கள் கடலின்மீது மிதக்கும்படியும் அல்லது கடலின் கீழே மறைந்திருக்கும்படியும் வைக்கப்படுகின்றன. கடலில் செல்லும் கப்பல் அந்த சுரங்கத்தின்மீது மோதியவுடன் அந்த சுரங்கத்துக்குள்ளே வைக்கப்பட்டிருக்கிற வெடி மருந்து தானாகவே தீப்பற்றி வெடிக்கும்படியாக அதற்குள்ளே ஓர் உபாயஞ் செய்யப்பட்டிருக்கிறது. அவ்வித கடற்சுரங்கங்கள் கடலில் மிதந்து கொண்டிருக்கும்படி விட்டுவிடப்படுகின்றன. அவைகள் அலைகளாலும் காற்றாலும் எங்காவது அடித்துக்கொண்டு போகப்படலாமாகையால், சத்துருவின் கப்பலானாலுஞ் சரி நேசர்களின் கப்பலானாலுஞ் சரி தற்செயலாய் சுரங்கத்தின் மேல் மோதக்கூடும். ஆகையால் சாதாரணமாய் அவ்வாறு சுரங்கங்களை மிதக்கும்படி விட்டுவிடுவது வழக்கமல்ல. ஆனால் டார்டனெல்ஸ் ஜலசந்தியில் நீரோட்டமானது நேசக்கப்பல்களிருந்த திசையை நோக்கிச் சென்றதால் துருக்கியர் ஏராளமான கடற் சுரங்கங்களை கடலில் விட்டுவிட்டார்கள். நேசக்கப்பல்கள் அந்த சுரங்கங்களை ஜாக்கிரதையாய்த் தேடி எடுத்து விட்டபோதிலும் இரண்டொரு சுரங்கங்கள் தப்பிச் சென்று இரண்டு பிரிட்டிஷ் யுத்த கப்பல்களையும் இரண்டு பிரஞ்சு யுத்த கப்பல்களையும் சேதப்படுத்திவிட்டன.



மற்றொருவிதமாய் கடற் சுரங்கம் வைக்கப்படுகிறது. அந்த சுரங்கம் கடலுக்கடியில் அமுங்கிய வண்ணமாய் அசையாமலிருக்கும்படி செய்யப்படுகின்றது. அந்த சுரங்கத்துக்கு அடியில் பளுவுக்காக ஓர் இரும்புக்குண்டும் வேறொரு கொக்கியும் ஒரு நீளமான கம்பியில் மாட்டி வைக்கப்படுகின்றன. அந்த சுரங்கத்தை, கடலில் போட்டவுடன் அதற்கடியிலுள்ள இரும்புக் குண்டும் கொக்கியும் கடலின் கீழேசென்று தரையில் சிக்கிக்கொள்ளுகின்றன. அதனால் அந்த சுரங்கம் கடலின்கீழே சிறிது அமுங்கி அசையாமல் நிற்கின்றது. அவ்வாறு சுரங்கங்கள் வைக்கப்பட்டிருக்கிற இடங்கள் இன்னவை யென்று தெரியுமாதலால் சொந்த தேசத்துக் கப்பல்கள் அவ்வழியாய்ப் போகாமலிருக்கும். ஆனால் சத்துருவின் கப்பல்கள் அபாயத்தை யறியாமற் சென்று நாசமாகிவிடும். இவ்வாறு வடகடலில் ஜெர்மானியர் வைத்திருந்த சுரங்கங்களை யெல்லாம் பிரிட்டிஷ் கப்பல்கள் எடுத்துவிட்டன. அதன் பிறகு கடல் வழிகளை, பிரிட்டிஷ் கப்பல்கள் ஓயாமல் காத்துவருவதால் அங்கு ஜெர்மானியர் சுரங்கம் வைக்கமுடியவில்லை. வடகடலிலுள்ள பிரிட்டிஷ் கடற்படையானது பால்டிக் கடலுக்குள் நுழையாமலிருப்பதற்காக பால்டிக் கடலுக்குள் செல்லும் வழிகளில் ஜெர்மானியர் கடற் சுரங்கங்களை வைத்திருக்கிறார்கள். ஆயினும் அந்தஆபத்துகளுக்குத் தப்பித்துக்கொண்டு சில பிரிட்டிஷ் சப்மரீன் கப்பல்கள் இப்போது பால்டிக் கடலில் நுழைந்திருக்கின்றன.

கடற்கரையிலுள்ள பட்டணங்களை சுரங்கங்களை வேறொரு விதமாய் கடலில் வைத்துக் காக்கப்படுகின்றன. கடற்கரைக்கு அப்பால் சற்று தூரத்தில் அநேக கடற் சுரங்கங்கள் வரிசையாய் வைக்கப்படுகின்றன. கடற்கரையிலுள்ள மனிதர்கள் நினைத்தபோது அந்த சுரங்கங்களுக்குத் தீ வைக்கும்படியாக உபாயஞ்செய்யப்படுகிறது. கடற்கரையிலிருந்து அந்தசுரங்கங்களுக்கு, கம்பிகட்டி, அக்கம்பி வழியாய் மின்சாரம் செலுத்தப்படுவதால்

அந்த சுரங்கம் தீப்பற்றி வெடிக்கின்றது. ஜெர்மானியர் தங்கள் கடற்கரையோரத்திலுள்ள பிரதேச முழுவதிலும் அவ்வாறு விஸ்தாரமான ஏற்பாடுகள் செய்து, நேச ராஜ்யங்களின் யுத்த கப்பல்களால் சேதமுண்டாகாதபடி காத்து வருகிறார்கள்.

‘டார்ப்பிடோ’ என்ற பயங்கரமான வெடி

கடலுக்கடியில் மறைந்திருந்து அசைத்தவுடன் நொடியொன்று வெடிக்கக்கூடிய கடற் சுரங்கத்தைப்பற்றிச் சொல்லிவந்தோம். அனேக மனிதர்கள் ஒரு கப்பலுக்குள் புகுந்து கொண்டு கடலின் கீழே பிரயாணஞ் செய்து போர் விளைக்கக்கூடிய சப்மரின் கப்பலைப் பற்றியும் சொல்லியிருக்கிறோம். இப்போது மனித சகாயமில்லாமலே கடலுக்கடியில் தானாகவே ஓடிச்சென்று சத்துருவின் கப்பலைத் தாக்கி நாசஞ் செய்யக்கூடிய மிக்க பயங்கரமான ஆயுதம் இருக்கிறது. அது டார்ப்பிடோ என்று சொல்லப்படும். அதை பூலோக விநோதங்களுள் ஒன்றாக மதிக்கவேண்டும். ஏனெனில் அதை சமுத்திரத்தில் பிரயோகித்தவுடன் அது தானாகவே வெகுதூரம் விரைவாய் ஓடுகிறது. கடலுக்கடியில் குறி தவறாமல் சரியாகப் பாய்கிறது. அது ஜலத்தின்கீழே பாயும்போது எள்ளளவு திரும்பாமலும் சாயாமலும் உயிருள்ள ஜீவன் போலச் செல்கிறது. அதனுள்ளே அவ்வளவு அதிசயமான யந்திரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அதன் பின்புறத்தில் மீன்வாலைப்போல விசிறிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அலைகளாலும் காற்றாலும் பாதிக்கப்படாமல் குறித்த திசையில் தானாகவே ஓடிக்கொண்டிருக்கும். அதன் சுற்றளவு $5\frac{1}{2}$-அடி நீளம் 21, அடியாகும். அது 2000-பவுண்ட் பளுவுள்ளது. ஆகையால் டார்ப்பிடோ வெடியை ஒரு நீண்ட மீனுக்கு ஒப்பிடலாம் அதன் உருவம் மீனைப்போன்றது.




டார்ப்பிடோவுக்குள்ளே நான்கு அறைகள் இருக்கின்றன.

(1) முதல் அறையில் அதாவது முன்புறத்திலுள்ள அறையில் வெடி மருந்து வைக்கப்பட்டிருக்கிறது. டார்ப்பிடோவின் முன்புறம் எதன் மேலாவது மோதினாலும் அந்த முனையிலுள்ள ஒரு கொக்கி மடங்கிக் கொண்டு வெடிமருந்தாக்குத் தீவைத்து வெடிக்கச் செய்கிறது.

(2) அந்த அறைக்குப் பக்கத்திலுள்ள இரண்டாவது அறையில் காற்று பலமாய் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறது. ஏராளமான காற்றை இறுக அடைத்திருப்பதால் அந்த காற்றை வெளியே போகவிடும்போது அதிக விசையுடன் வீசுகிறது. இந்த காற்றின் விசையால் மற்ற பாகத்திலுள்ள யந்திரங்கள் ஓட்டப்படுகின்றன.

(3) மூன்றாவது அறையில் டார்ப்பிடோவைச் செலுத்துகிற சிறிய எஞ்ஜின் இருக்கிறது. மேலே சொல்லிய காற்று விசையால் இந்த எஞ்ஜின் வேலை செய்கிறது.

(4) டார்ப்பிடோவுக்குப் பின்புறத்து முனையில் மீன்வாலைப் போன்றுள்ள விசிறிகளைச் சுற்றுவதற்காக 4-வது அறையில் சில உபாயங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. 3-வது அறையிலுள்ள எஞ்ஜினிலிருந்து இரண்டு இரும்புக் கழிகள் 4-வது அறையில் நீட்டப்பட்டுக் கடைசியிலிருக்கிற விசிறிகளோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. அதாவது அந்த இரும்புக் கழிகள் ஒரு முனையில் எஞ்ஜினோடும் மற்றொரு முனையில் விசிறிகளோடும் பிணைக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் எஞ்ஜின் அந்த இரும்புக் கழிகளைச் சுற்றினால் முனையிலுள்ள விசிறிகளும் சுழலும். ஜலத்தில் டார்ப்பிடோ அமிழ்ந்து செல்லும்போது அதனுள்ளே இருக்கிற எஞ்ஜின் வேலை செய்வதால், அந்த விசிறிகள் ஜலத்தில் சுழலுகின்றன. அதனால் டார்ப்பிடோ முன் செல்லுகிறது. சாதாரணமாய் ஒரு படகு ஜலத்தில் எவ்வாறு செல்லுகிறது? படகின் இரண்டு புறங்களிலும், துடுப்புகளைப் போட்டுத் தள்ளுவதால், அது ஜலத்தில் ஓடுகிறது. டார்ப்பிடோவிலுள்ள விசிறிகளின் இலைகள் துடுப்புகளைப்போல வேலை செய்கின்றன. எல்லா நீராவிக் கப்பல்களும் அம்மாதிரியான விசிறிகளால்தான் தள்ளப்படுகின்றன, எஞ்ஜினுடைய விசையால் அந்த விசிறிகள் மிகவும் விரைவாய்ச் சுற்றப்படுவதால் கப்பல்கள் விரைவாய் ஓடுகின்றன. டார்ப்பிடோவின் பின்புறத்தில் இரண்டு விசிறிகளிருக்கின்றன. ஒன்று டார்ப்பிடோவை முன்னால் ஓடும்படி செய்யும். மற்றொன்று மேலும் கீழும் பக்கங்களிலும் அசைக்கப்பட்டால் டார்ப்பிடோவை அந்தத் திசைகளில் திருப்பும். ஒரு படகைப் பல திசைகளில் திருப்புவதுபோல டார்ப்பிடோவையும் திருப்பலாம்.

டார்ப்பிடோ கடலுக்கடியில் ஒரே அளவாய் அமிழ்ந்து செல்வதற்கு அதனுள்ளே சில உபாயங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. சத்துருவின் கப்பலை இவ்வளவு ஆழத்தில் தாக்கவேண்டுமென்று நிச்சயித்தால் அதில் ஒரு கருவியை முடுக்கிவைத்து அதை ஒரே ஆழத்தில் பாய்ந்து செல்லும்படிச் செய்யலாம். அது ஜலத்தில் ஓடும்போது மேலும் கீழுமாய்ப்போகாமல் ஒரே ஆழத்தில் செல்வதோடு அந்த ஆழத்தில் அது இரண்டு பக்கங்களிலும் திரும்பாமல் ஜலத்தின்கீழ் நேராகச் செல்ல வேண்டும்; இதற்கும் சில உபாயங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அது கடலின்கீழ் மிகவும் விரைவாய்ப் பாய்கின்றதென்பதைக் கவனிக்க வேண்டும். ஆறு நிமிஷத்துக்குள் 4 மைல் தூரம் கடந்துவிடுகிறது. பிரிட்டிஷ் கடற்படையில் உபயோகிக்கப்படுகிற டார்ப்பிடோ எழு மைல் தூரம் ஓடக் கூடியது; அது மற்ற தேசத்து வெடிகளை விட அதிக தூரம் செல்கிறது. பிரிட்டிஷ் டார்ப்பிடோவில் அதிகக்காற்று அடைத்து வைக்கப்படுகிறபடியால் அதின் விசையால் அதிக தூரஞ் செல்லுகிறது. ஜெர்மானியர் தங்கள் டார்ப்பிடோவில் காற்றைக் குறைத்து வெடி மருந்தை அதிகமாய் வைப்பதால் வெகு தூரம் செல்வதில்லை; ஆனால் ஜெர்மன் டார்ப்பிடோவால் தாக்கப்பட்ட கப்பல்கள் எதிவும் அறை குறையாய்ச் சேதமடைவதில்லை. பிரிட்டிஷ் டார்ப்பிடோவை வெகு தூரஞ் செல்லும்படிச் செய்வதற்கு ஒரு முக்கிய காரணமிருக்கிறது. கடற் சண்டை நடக்கும்போது பிரிட்டிஷ் கப்பல்கள் வெகு தூரத்தில் விலகியிருந்து தங்கள் டார்ப்பிடோவைப் பிரயோகித்துச் சத்துருவின் கப்பலைச் சேதப்படுத்தலாம்; ஆனால் அவ்வளவு தூரத்தில் சத்துருவின் டார்ப்பிடோவானது பிரிட்டிஷ் கப்பலுக்கருகில் வரமுடியாது. இந்த மகா யுத்தத்தில் இதுவரையில் பெரிய கடற்சண்டைகள் நடக்கவில்லையாகையால், டார்ப்பிடோவின் உபயோகத்தைப்பற்றி நாம் அடிக்கடி கேள்விப்படுவதில்லை. யுத்த ஆரம்பத்தில் மூன்று பிரிட்டிஷ் யுத்த கப்பலுக்கருகில் ஒரு ஜெர்மன் சப்மரின் கப்பல் நெருங்கிவந்து டார்ப்பிடோ வெடிகளைப் பிரயோகித்தபோது, அம்மூன்று யுத்த கப்பல்களும் சில நிமிஷங்களில் முழுகிப்போயின. ஆயிரக் கணக்கான பிரயாணிகளை ஏற்றிக்கொண்டு சென்ற "லூசிடேனியா" என்ற பிரயாணிக் கப்பலை ஒரு ஜெர்மன் ஸப்மரின், டார்ப்பிடோவால் தாக்கி முழுகடித்தது. ஆனால் பிறகு ஜெர்மன் ஸப்மரின் கப்பல்கள் அந்த வெடியை உபயோகிப்பதை நிறுத்தி பீரங்கியில் குண்டுகளை உபயோகிக்கத் தொடங்கியிருக்கின்றன.

## பூகம்போன்ற பீரங்கிகள்.

மகா யுத்தம் தொடங்கிய தக்ஷணமே லீஜ் நகரத்துக் கோட்டைகளை ஜெர்மானியர் இரண்டொரு தினங்களில் பொடி செய்து விட்டார்களென்ற செய்தி உலகெங்கும் பரவியது. அதுவரையில் யுத்த காலத்தில் சத்துருவின் நடமாட்டத்தைத் தடுப்பதற்கும் சத்துருவின் ஆயுத வன்மைக்கும் அசையாமல் தாங்கி நிற்பதற்கும் கோட்டைகள் கட்டிவைப்

பதே மிகச் சிறந்த உபாயமென்று கருதப்பட்டது. 10-வருஷங்களுக்கு முன்னால் போர்ட் ஆர்தர் கோட்டையை ஜப்பானியர் பிடிப்பதற்கு ஒன்பது மாதகாலமாயிற்று. தருக்கிய பால்கன் யுத்தத்தில் அட்ரியா நோபிள் கோட்டையானது ஆறு மாதங்களாய் பணியாமல் நின்ற சம்பவம் நடந்து மூன்று வருஷங்கள் ஆகவில்லை. ஆகையால் லீஜ் நகரத்துக் கோட்டைகளை சத்துருவின் பீரங்கிகள் ஐந்தாறு மணி நேரத்தில் நாசஞ் செய்துவிடக் கூடுமானால் அது மிக்க ஆச்சரியமான சம்பவமென்றே கருதப்படவேண்டும். இந்த மகா யுத்தத்தில் உபயோகிக்கப்பட்டுள்ள நூதனகருவிகளுள் மிகப்பெரிய முற்றுகைப்பீரங்கியை ஒன்றாக மதிக்கவேண்டும். இந்த மகா யுத்தத்தில் பீரங்கியின் வன்மையே மிகப் பிரதானமென்று விளங்கியிருக்கிறது. யுத்தந் தொடங்கியவுடன் ஜெர்மன் படைகள் பெல்ஜியத்திலிருந்து புறப்பட்டு, தடுக்க முடியாத வேகமும் விரைவுங் கொண்டு பிரான்ஸின் வடமேற்கு பாக முழுவதையும் வீசிச் சென்ற விஷயம் ஆச்சரியத்தை உண்டு பண்ணியிருக்கின்றது. அதற்கு ஒரு முக்கிய காரணம் ஜெர்மானியரின் பீரங்கி வன்மையாகும். பிறகு நேசராஜ்யங்கள் தங்கள் பீரங்கிகளையும் குண்டுகளையும் அதிகரித்து வெற்றி பெற்றன.

பீரங்கியில் அநேக நூதன முறைகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. எவ்வளவு பளுவான பீரங்கியானாலும் எவ்வளவு வேகத்துடன் சுடக்கூடிய பீரங்கியானாலும், அது தானிருந்த இடத்தைவிட்டு மயிரிழை அசையாமல் நிலைத்திருப்பதற்கு இப்போது உபாயஞ் செய்யப்பட்டிருக்கிறது. அதனால் ஒருமுறை குறிபார்த்தபிறகு நிமிஷத்துக்கு ஒன்றிரண்டு குண்டுகள்வீதம் பீரங்கியைச் சுட்டவண்ணமாயிருக்கலாம். தவிர இக்காலத்தில் பீரங்கியிலிருந்து சுடப்படுகிற குண்டுகள் நாம் நினைத்த நேரத்தில் அந்தரத்தில் பாய்ந்து கொண்டிருக்கும்போதே வெடிக்கும்படிச் செய்யலாம். இவைகள் எல்லாவற்றையும்விட சத்துருவினிடத்திலுள்ள பெரிய முற்றுகைப் பீரங்கிகளில் மிக்க ஆச்சர்யமான உபாயங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த யுத்தத்தில் உபயோகிக்கப்பட்ட பீரங்கிகளுக்குள் 12 அங்குல பீரங்கியும் 17 அங்குல பீரங்கியும் மிகப் பெரியவை. பெரிய பீரங்கிகளைச் செய்வது ஒரு கஷ்டமல்ல. ஆனால் ஏராளமான பளுவுடைய பீரங்கியை சாதாரண ரோட்டிலும் பாலத்திலும் இழுத்துச் செல்வதே சாத்தியமில்லாத காரியம். சர்தாரணமாய் பெரிய பீரங்கிகளை ரயில் பாதையின்மேல் ரயில் எஞ்ஜினைக்கொண்டு இழுத்துச் சென்று கோட்டைகளில் நிரந்தரமாய்ப் பதியவைத்திருப்பது வழக்கம். ஆனால் 50 டன் பளுவுள்ள 17-அங்குல பீரங்கியை எவ்வாறு இழுத்துச் செல்வது? அதை இழுப்பதற்கு மிக்க பலங்கொண்ட மோட்டார் எஞ்ஜின்கள் செய்யப்படுகின்றன. கரடுமுரடான ரோட்டுகளில் அவைகள் ஓடுவதற்காக அவைகளின் சக்கரங்கள் புதுமாதிரியாய் செய்யப்பட்டிருக்கின்றன. சக்கரத்தைச் சுற்றிலும் இரும்பு உருளை போடுவதற்குப் பதிலாக, தனித்தனியான இரும்புப் பலகைகள் சக்கரத்தைச் சுற்றிலும் கோர்த்துக் கட்டப்பட்டிருக்கின்றன. மேடுபள்ளமான ரோட்டுகளில் அவைகள் அதிக ஆட்டங் கொடுக்காமலும் சேற்றுப் பூமியில் புதைந்துவிடாமலும் செல்லுகின்றன. அவ்வளவு பளுவான பீரங்கியை இழுப்பதற்குத் தக்க வன்மை கொண்ட எஞ்ஜின்கள் இருந்த போதிலும், பீரங்கியும் எஞ்ஜினும் சேர்ந்து சாதாரண பாலத்தின் மேல் ஓடினால், அந்த வாராவதிகள் பளுவைத் தாங்காமல் இடிந்து விழும். சத்துருவின் பிரதேசத்தில் போர் நடக்கும்போது, போர்க்களத்தை நோக்கி அந்த பளுவான பீரங்கிகள் விரைந்து சென்று சாதாரண ரோட்டுகளின் மீதும் பாலங்களின்மீதும் அபாயமின்றி இலகுவாய்ச்செல்வது அத்தியாவசியமாகும். ஆகையால் அதற்கு ஒரு உபாயஞ் செய்யப்பட்டிருக்கிறது. பீரங்கியையும் அதைச்சேர்ந்த உபகரணங்களையும் தனித்தனியாய்ப்பிரித்து வெவ்வேறுவண்டிகளில் ஏற்றிக்கொண்டு போவதால், ஒவ்வொரு வண்டியின் பளுவும் குறைவாகிறது.

## அரண்களும் குகைகளும்

பலவித பந்தோபஸ்துகள்செய்து காக்கப்பட்ட அகழ்களுக்கு அரண்களென்று பெயர். அந்த அரண்களுக்கு மேல் இரும்புப் பலகைகளால் கூரை அமைத்து அந்தக் கூரையின் மேல் மணல் மூட்டைகள் அடுக்கி வைக்கப்படும். கற்கட்டடத்தைவிட மணல் மூட்டைகளை அடுக்குவதே விசேஷமானது. ஏனெனில் சாதாரண பீரங்கியிலிருந்து சுடப்படுகிற குண்டு கற்சுவரை உடைத்துவிடும். ஆனால் மணல் மூட்டையின் மேல் அந்த குண்டு விழுந்தால் அது மணலில் புதைந்து விடுமே யொழிய மணற் குவியலைப் பிளந்துவிட முடியாது. அவ்வாறு அரண்களுக்கு மேல் கூரைபோடப்படுகிறது. அதிலும் கொஞ்சம் இடைவெளி இருக்குமானால் அதைக் கம்பி வலையால் மூடிவிடுகிறார்கள். அரண்களுக்கு முன்புறத்தில் விஸ்தாரமாய் ஆப்புகள் அடித்து அவைகளில் இரும்புக் கம்பி

அகழ்

அரண்

குகைகள்

பெரியவலைபோல் பின்னிவைக்கப்படுகிறது. அந்தக் கம்பியில் இடையிடையே இரும்பு முள்களும் அமைக்கப்பட்டிருக்கும். சத்துருக்கள் அரண்களுக்கருகில் வந்தா. அந்த இரும்பு வலையை அறுத்த பிறகே காலடி வைக்கமுடியும் அவர்கள் அந்தவலையை அறுத்து சால்களில் சிக்கிக்கொள்ளாதபடி அதை அப்புறப் படுத்துவதற்குள்ளாக நாசமாக்கப்படுவார்கள். இவ்வாறு கட்டப்படுகிற அரண்களுக்குள்ளே சிறிய குகைகள் பூமியில் தோண்டப்படுகின்றன. அந்த குகைகளுக்குள்ளே துருப்புகள் மறைந்து கொண்டால் அவர்கள் எவ்வித ஆபத்துக்கும் உள்ளாகமாட்டார்கள். சத்துருவின் பீரங்கிகள் போர்க்களமெங்கும் உக்கிரமான நெருப்பைப் பொழிந்து கொண்டிருக்கும் போது, முன்புறத்திலுள்ள அகழ்களிலிருக்கிற துருப்புகள் பள்ளத்தின் வழியாய்ப் பின்புறத்துக்கு ஓடிச்சென்று அரண்களிலும் குகைகளிலும் பந்தோபஸ்தாய் ஒளிந்து கொள்வார்கள். சத்துருவின் பீரங்கிகள் ஓய்ந்த பிறகு, சத்துருக்கள் நேரில் வந்து தாக்குவார்கள்; அச்சமயம் அரண்களிலும் குகைகளிலும் ஒளிந்துகொண்டிருக்கிற துருப்புகள் பள்ளத்தின் வழியாய் முன்புறத்துக்கு ஓடிச்சென்று அகழ்களில் நிலைபெற்று சத்துருக்களை எதிர்ப்பார்கள். அவ்வாறு இந்த மகா யுத்தத்தில் துருப்புகள் பள்ளங்களில் நடமாடுவதும் அரண்களில் காலங்கழிப்பதும குகைகளில் படுத்துறங்குவதும் அகழ்களில் சண்டை செய்வதுமாய் இருக்கிறார்கள். துருப்புகளும் குதிரைகளும் பீரங்கிகளும் அவ்வாறு பூமிக்கடியிலே நடமாடுகின்றன. துருப்புகளுக்கும் குதிரைகளுக்கும் அவசியமாயுள்ள பலவித உணவுப்பொருள்களும் குண்டு முதலிய தளவாடங்களும் அந்த பள்ளங்களின் வழியாகவே கொண்டுபோகப்படுகின்றன. காயப்பட்ட துருப்புகளும் சேதமடைந்த தளவாடங்களும் பள்ளத்தின் வழியாகவே கொண்டுவரப்படுகின்றன; புதிய துருப்புகளும் தளவாடங்களும் அவ்வழியாகவே அனுப்பப்படுகின்றன. தந்திகளும் டெலிபோன் யந்திரங்களும் அந்த பள்ளங்களில் இரவும் பகலுமாய் பேசிக்கொண்டிருக்கும். இத்தனை நடவடிக்கைகளைப்பற்றிய சின்னங்கள் எதுவுமே தரைமட்டத்துக்குமேல் தெரியவராது. இந்த மகா யுத்தத்தில் பூமிக்கடியில் அவ்வாறு லக்ஷக்கணக்கான துருப்புகள் போர்விளைக்கிறார்கள்.

## பூமிக்கடியில் போர் விளைத்தல்.

பீரங்கியின் வன்மையை ஆதாரமாகக் கொண்டு மற்றொரு நூதனமான யுத்தமுறை அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. பாரிஸ் நகரத்துக்கருகில் சென்ற ஜெர்மானியர் திடீரென்று பின் வாங்கிச் செல்லும்படி நேர்ந்தபோது, அவர்கள் எய்ஸன் நதிக்கப்பால் பூமியின்கீழ் மறைந்துகொண்டு போர்விளைத்ததானது மிக்க ஆச்சரியத்தை உண்டுபண்ணியிருக்கிறது. அப்போது ஜெர்மானியரைத் துரத்திச் சென்ற நேசத் துருப்புகள் எய்ஸன் நதிக்கருகில் வந்ததும் தடைப்பட்டு நின்றார்கள். போர்முனையெங்கும் பூமியைக் குடைந்து தோண்டி அதில் தங்கள் ராணுவத்தை ஜெர்மானியர் ஊன்றிய நாள் முதல் இன்றுவரையில் அந்தப் போர்முனை அநேகமாய் மாறாமலிருந்து வருகிறது. ஜெர்மானியர் தங்கள் சத்துரு பூமியின் மீது படையெடுத்துச் சென்று தங்கள் சத்துருக்களை வலுவில் தாக்குவதில் மிகுந்த சாமர்த்தியம் கொண்டவர்களென்றும் ஆனால் அவர்கள் தங்கள் சத்துருவால் தாக்கப்படும்போது அதைத் தடுத்து நிற்பதில் அவ்வளவு திறமைகொண்டவர்களல்லவென்றும் பொதுவாய் ஒரு அபிப்பிராயம் இருந்து வந்தது. ஜெர்மானியரைப் பற்றிய அநேக அபிப்பிராயங்கள் எதிர் பாராதவிதமாய் மாறியிருப்பதற்கு மேற் சொல்லிய இது ஒரு திருஷ்டாந்தமாகும். ஏனெனில் இந்த மகா யுத்தத்தில் ஜெர்மானியரின் படையெடுப்புகளெல்லாம் தவறிப்போய்விட்டனவென்று சொல்லக்கூடுமானாலும், ஜெர்மானியர் அரண்களால் தடைகட்டியிருப்பதானது முற்றிலும் பலித்திருக்கிறதென்பத்தி மறுக்க முடியாது. அவ்வாறு கிழக்கரங்கத்திலும் மேற்கரங்கத்திலும் இடாலிய அரங்கத்திலும் இப்போது போர் நடக்கிறது.

## பூமியைக் குடைந்து செல்லல்.

வாய்க்கால்போல, தரையில் வெகு நீளமான பள்ளங்களை ஒரு ஆள் ஆழத்துக்குத் தோண்டி அவைகளில் துருப்புகள் நிலைபெற்று சண்டை செய்கிறார்கள். இதில் அநேக சாதகங்கள் இருக்கின்றன. துருப்புகள் பூமிக்கடியில் பள்ளத்தில் மறைந்து

கொண்டால் அவர்கள் வெகு தூரத்திலுள்ள சத்துருவின் கண்களுக்குத் தென்பட மாட்டார்கள். வெகு தூரத்திலிருந்து தரை மட்டத்தைப் பார்க்கும்போது அதில் யாதொரு விசேஷமுமிருப்பதாகத் தெரியவராது. தவிர அந்த பள்ளங்களில் பீரங்கிகளை சாமர்த்தியமாய் மறைத்து வைக்கலாம். ஆகையால், சத்துருக்கள் சற்று அஜாக்கிரதையாய் முன்புறத்துக்குச் சென்றால், பூமிக்கடியில் எதிர் பாராத இடங்களிலிருந்து குண்டுகள் பாய்ந்து அவர்களை நாசஞ் செய்துவிடும். மற்றொரு சாதகமென்னவென்றால், அகழ்களில் மறைந்துகொண்டிருக்கிற துருப்புகள் சத்துருவின் நெருப்பாயுதங்களால் நாசமாகாமலிருப்பார்கள். துருப்புகள் மறைந்துகொண்டிருக்கிற இடங்கள் தெரியாமற் போனால் அவர்களை எவ்வாறு நாசஞ் செய்வது? அகழ்களுக்கருகில் செல்ல முயன்றாலோ, திடீரென்று பல திநுசான குண்டுகள் எங்கிருந்தோ வந்து பாயும். ஆனால் சேனைகள் அகழ்களில் நிலைபெற்றால் எவ்வாறு நடமாட முடியும்? லக்ஷக்கணக்கான துருப்புகளும், குதிரைகளும், பீரங்கிகளும் எவ்வாறு பூமிக்கடியிலேயே இருந்து நடவடிக்கைகளை நடத்துவது? அகழ்களுக்குப் பின்புறத்தில நீளமான பள்ளமொன்று தோண்டி, சற்று தூரத்தில் பந்தோபஸ்தான இடத்தில் வலுவாய்க் கட்டப்பட்ட அரண்களோடு அந்த பள்ளத்தைக் கொண்டு போய்ச் சேர்க்கிறார்கள். அந்த நீளமான பள்ளந்தான் துருப்புகள் நடமாடுவதற்கு வழியாகும். முன்புறத்திலுள்ள அகழ்களில் இருக்கிற துருப்புகள் அந்த பள்ளத்தின் வழியாய்ப் பின்புறத்துக்கு நடந்து சென்று அரண்களில் பந்தோபஸ்தாய்த் தங்கியிருக்கலாம்.

## ஓர் ஆள் உயரமுள்ள குண்டு.

அந்த 17 அங்குல பீரங்கியில் நுழைத்துச் சுடப்படுகிற குண்டானது 5 அடி நீளமிருக்கிறதென்பதை அறியவேண்டும். ஒரு குண்டின் பளுவு சுமார் 2500 பவுண்ட் (திடகாத்திரமுள்ள ஒரு மனிதன் சுமார் 150 பவுண்ட் பளுவுக்கு மேலிருக்கமாட்டான்) அவ்வளவு பளுவான குண்டை அந்த பீரங்கி 10 மைல் தூரம் குறிப்பாய் எறியக்கூடும். அந்த குண்டு பீரங்கியிலிருந்து கிளம்பி ஆகாயத்தில் வட்டமிடும்போது 3½ மைல் உயரம் கிளம்புகின்றது. அப்படிப்பட்ட குண்டு ஒன்றைச் செய்வதற்கு 18 ஆயிரம் ரூபாய் செலவாகிறது. பத்து மைல் தூரம் பாயக்கூடிய வேகத்துடன் அந்த 5 அடி நீளமுள்ள குண்டானது ஆகாயத்தில் உரக்கக் கூவிக்கொண்டு சென்று, இடி விழுந்தாற்போல் வெடித்தவுடன், அது பூமியை ஆழக் குடைந்தெடுத்து கல்லையும் மண்ணையும் கறுத்தபுகையும் நெருப்பு மயமாய் அந்தரத்தில் சுழற்றி அடிக்குமானால், அங்கு ஜீவராசிகள் இருப்பதும் சாத்தியமோ? அவ்விடத்துக்கருகிலுள்ள ஆள்கள் குண்டிலிருந்து கிளம்புகிற இரும்புத் துண்டுகளாலும் பூமியிலிருந்து கிளம்புகிற கற்பாறைகளாலும் வீழ்த்தப்படுவதோடு, வெடி மருந்தின் அதிர்ச்சியையும் நெருப்பையும் தாங்கமுடியாமலும் இறந்துபோகிறார்கள். அந்த குண்டின் வேகமும் உக்கிரமும் இப்படிப்பட்டதென்பதை அறியவும். இவ்வளவு பளுவான குண்டைச் சுடுகிற பீரங்கியில் மிகவும் சிக்கலான யந்திரங்களும் கருவிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றனவென்று சொல்லத் தேவையில்லை. அதைச் சுடும்போது எள்ளளவு தவறுதலுண்டானாலும் அளவற்ற ஆபத்துவிளையும். ஆகையால் அந்தபீரங்கியை சாதாரண பீரங்கிக்காரர்கள் சுடுவதில்லை. ஆயுதச் சாலையிலுள்ள பீரங்கி நிபுணர்களே அதை உபயோகிக்கிறார்கள். அதிலுள்ள கருவிகளெல்லாம் மின்சாரத்தால் வெகு தூரத்திலிருந்து வேலைசெய்யப்படுகின்றன. அதைச் சுடும்போது ஆட்கள் கால் மைல் தூரத்தில் விலகியிருக்கவேண்டும். பீரங்கியிலிருந்து குண்டு வெளிப்பாயும்போது பூமியிலும் காற்றிலும் உண்டாகிற பயங்கரமான அதிர்ச்சியை மனிதன் தாங்கமுடியாது. இப்படிப்பட்ட பயங்கரமான பூதங்களை ஆஸ்டிரியரும் ஜெர்மானியரும் போர்க்களத்தில் ரோட்டுகளின் வழியாக அலக்ஷியமாய் இழுத்துச் செல்வதே மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது. ஜெர்மனியிலுள்ள குருப் யந்திரசாலை மிகப் பேர்பெற்றதாயினும், இந்த 17-அங்குல பீரங்கியானது ஆஸ்டிரியாவிலுள்ள 'ஸ்கோடா' யந்திரசாலையில்தான் செய்யப்படுகிறதென்பதை குறிப்பிடுகிறோம்.



ருஷியர்கள் ரிஸமிவில் கோட்டையை முற்றுகைபோட்டு அந்த கோட்டைக்குள்ளே ஆகாரமும் தளவாடங்களும் போகாதபடி தடுத்தபடியால், அதிலிருந்த ஆஸ்டிரியத் துருப்புகள் அந்த கஷ்டங்களைச் சகிக்கமுடியாமல் சரணமடைந்தார்கள். அவ்விதமாய் ருஷியர்கள் அந்தக் கோட்டையை முற்றுகைபோட்டு ஒன்பது மாதங்களுக்குப் பிறகு பிடித்ததற்கும், ஜெர்மானியர் லீஜ், ஆண்ட்வர்ப், கோவ்னோ, நோவோ ஜார்ஜிவிஸ்க் முதலிய கோட்டைகளை இரண்டொரு வாரங்களில் பிடித்ததற்கும் காரணம் இன்னதென்று இப்போது தெரியவரும். ஜெர்மானியரிடமுள்ள முற்றுகைப்பீரங்கிதான் இக்காலத்து யுத்தமுறையை மாற்றிவிட்டது.

## மெஷின் பீரங்கிகள்.

இவ்வாறு பூமியைக் குடைந்து அதற்கடியிலிருந்து போர்புரிவதால் என்ன சாதகங்களிருக்கின்றன? பூமியின் கீழுள்ள துருப்புகள் தங்கள் சத்துருவின் கண்களுக்குத் தெரியாமல் மறைந்துகொண்டிருப்பதால், தங்களுக்கு சேதமுண்டாகாமல் காத்துக் கொள்வதோடு, சத்துருவுக்கு ஏராளமான சேதத்தை உண்டுபண்ணலாம். அவ்விதமாய் சண்டை செய்கிற துருப்புகள் தங்கள் வன்மையை அவ்விதமாய் அதிகரித்துக்கொள்வதால், போர்முனையைக் காப்பதற்கு சொற்ப துருப்புகளே போதுமானவை. பீரங்கிகளை நமக்கிஷ்டமானபடி மறைத்து வைத்து சத்துருக்களை நெருங்கவிடாமல் எளிதாய் தடுத்துவிடலாம். ஆகையால் இந்த அரண்களின் சண்டையில் ஜெர்மானியர் ஏராளமான "மெஷின் பீரங்கிகளை" உபயோகிக்கிறார்கள். மெஷின்பீரங்கியானது அநேக துப்பாக்கிகளை ஒருங்கே சுடுவதற்கும் ஒப்பாகும். துப்பாக்கியில் ஒரு தடவையில் ஐந்து ரவைகளை நுழைத்து அந்த ஐந்தையும் ஒன்றின்பின் ஒன்றாய் இடைவிடாமல் சுடலாம். ஆனால் மெஷின் பீரங்கியில் நூற்றுக்கணக்கான ரவைகள் ஒரே ஸரம்போலக் கோர்த்து நுழைக்கப்படுகின்றன. ஆகையால் ஒருவன் அந்த பீரங்கியிலுள்ள சக்கரத்தை சுற்றிக்கொண்டேயிருந்தால் நூற்றுக் கணக்கான ரவைகளை ஒன்றின் பின் ஒன்றாய் சுட்டவண்ணமாயிருக்கலாம். சுமார் நூறு துருப்புகள் செய்யக்கூடிய வேலையை ஒரு மெஷின் பீரங்கி செய்து விடுவதால் ஜெர்மானியர் தங்கள் அரண்களில் ஏராளமான மெஷின் பீரங்கிகளை வைத்து விட்டு, துருப்புகளைக் குறைத்து விட்டார்கள்.



## வேறு பல உபாயங்கள்.

இரண்டு கக்ஷித்துருப்புகளும் ஒருவரையொருவர் நோக்கி மிகவும் அருகில் நெருங்கி விடுகிறார்கள். ஆகையால் வெடி குண்டுகளைக் கையினால் எறிவதும் வழக்கமாகி விட்டது. அவைகளைக் கயிற்றில் மாட்டி கவண்போல வீசி எறிவதும் உண்டு. அவ்வாறு எறியப்படுகிற வெடி குண்டுகள் விழுந்து சேதப்படுத்துவதோடு மற்றொரு விதமாயும் அந்தச் சேதம் அதிகரிக்கின்றது. அந்த குண்டுக்கற்களின்மீதும் மரங்களின் மீதும் மற்ற சாமான்களின் மீதும் விழுவதால் அவைகள் பல துண்டுகளாக உடைந்து அந்தத் துண்டுகள் உடம்பில் பட்டு சேதப்படுத்துகின்றன. அதற்காக இப்போது பிரஞ்சுத் துருப்புகள் முகத்துக்கு இரும்புக் கவசம் போட்டுக்கொள்ளுகிறார்களென்று சொல்லப்படுகிறது. இம்மாதிரியான பழைய காலத்து யுத்தமுறைகள் நடுவில் சிலகாலமாய் நிறுத்தப்பட்டு இப்போது மறுபடியும் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன.

## மலைகளே மறைந்துபோயின.

மற்றொரு பழையகாலத்து முறை கோட்டைகளில் மட்டும் இதுவரையில் அனுஷ்டிக்கப்பட்டிருக்க, இப்போது போர்க்களத்திலும் உபயோகிக்கப்படுகிறது. பூமிக்கடியில்

சுரங்கம் தோண்டி சத்துருவின் இருப்பிடத்துக்கு அடியில் செல்லும் வரையில் குடைந்து சென்று பிறகு அங்கு வெடிமருந்து வைத்து வெடிக்கச் செய்வது வழக்கம். பெரிய கோட்டைகளைச் சேதப்படுத்துவதற்காக அவ்வாறு கோட்டைக்கடியில் வெடி வைத்து உடைப்பது வழக்கம் ஆனால் இந்த மகா யுத்தத்தில் இருகக்ஷித் துருப்புகளும் பூமிக்கு அடியில் எவராலும் நெருங்க முடியாதபடி நிலை பெற்றிருப்பதால், அவர்களின் இருப்பிடங்களை சுரங்க [illegible]த்தே உடைக்கப்படுகின்றன. அவ்வித சம்பவங்கள் இப்போது சர்வ சாதாரணமாகிவிட்டன. சுரங்கமானது வெடித்து பூமியைப் பிளந்தவுடன், அதனால் உண்டாகிற பெரிய பள்ளத்தை ஸ்வாதீனஞ் செய்து கொள்வதற்காக கடும்போர் நடந்து வருகின்றது. இப்போது பிரான்ஸில் பிரிட்டிஷ் துருப்புகள் நிலைபெற்றிருக்கிற இப்ரிஸ் நகரத்துக்கருகில், "60-வது நெம்பர் குன்று" என்று பெயரிடப்பட்ட ஸ்தலமொன்றிருந்தது. அங்கு பிரிட்டிஷாரும் ஜெர்மானியரும் அடிக்கடி சுரங்க மறுத்து போர்செய்ததால் அது பிரபலமடைந்துவிட்டது. அந்தக் குன்றைச் சுற்றிலும் இருகக்ஷித் துருப்புகளும் அரண்களைக் கட்டித் தங்கி வந்தார்கள்; பிறகு ஒருவர் மற்றொருவருடைய அரண்களுக்கு அடியில் வெடி வைத்து நாசஞ் செய்தவண்ணமாயிருந்தபடியால் கடைசியில் அந்தக் குன்று இருந்தவிடம் தெரியாமலே மறைந்து போய்விட்டது. அவ்வாறு அனேக குன்றுகளும் கிராமங்களும் நகரங்களும் இந்த யுத்தத்துக்கு இரையாகிவிட்டன

### நெருப்புப் புசல்.

அரண்களை அழிப்பதற்காக சுரங்கம் வெட்டுவதென்றால் அதுவெகு தாமஸமாவதோடு சொற்ப விஸ்தீரணத்தையே அழிக்கக்கூடும். ஆகையால் பூமிக்கடியில் போர்விளைக்கும் முறையை ஜெர்மானியர் நூதனமாய் அனுஷ்டித்தபோது, அதே முறையை நேசக்கக்ஷியாரும் அனுசரிப்பார்களென்பதை ஜெர்மானியர் அறிந்து கொண்டிருப்பார்கள்; அப்படியிருக்க நேசக் கக்ஷியாரின அரண்களை ஜெர்மானியர் எவ்வாறு அழிப்பதாக உத்தேசித்தார்கள்? மிக்க பலங்கொண்ட முற்றுகைப்பீரங்கிகளில் அவர்கள் முழுநம்பிக்கையும் வைத்திருக்கிறார்கள். பீரங்கிகளின் வன்மையால் எப்படிப்பட்ட அரண்களையும் கோட்டைகளையும் அழித்துவிட வேண்டுமென்ற கொள்கையை ஜெர்மன் சேனாதிபதியாகிய ஜெனரல் மாகென்ஸன் விருத்தி செய்தார். சிறிதுமெஷின் பீரங்கியிலிருந்து பூதம்போன்ற பீரங்கிகள் வரையில் பலதினுசுகளை வரிசைமேல் வரிசையாக அடுக்கிவைத்து மகா உக்கிரமான நெருப்பை புசல்போல வீசி, விஸ்தாரமான பிரதேசத்தை ஆழமாய்க் கெல்லி புரட்டித் தள்ளுவதால் அந்த பிரதேசத்திலுள்ள சகல துருப்புகளும் அரண்களும் தளவாடங்களும் நாசமாக்கப்படுகின்றன. இந்த யுத்த முறைக்குத் தேவையுள்ள கோடிக்கணக்கான குண்டுகளைச் செலவழிப்பதில் ஜெர்மானியர் அஞ்சவில்லை. அவ்வாறு தான் கிழக்கரங்கத்தில் ஜெர்மானியர் விசாலமான பிரதேசத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

### விஷக்காற்றை உபயோகித்தல்.

அரண்களிலும் குகைகளிலும் புகுந்துகொண்டிருக்கிற துருப்புகளை அழிப்பதற்காக ஜெர்மானியர் விஷக்காற்றை உண்டுபண்ணினார்கள். சுமார் 2300 வருஷங்களுக்கு முன்னால், கிரீஸ் தேசத்தில் நடந்த சண்டைகளில் விஷக்காற்று உபயோகிக்கப்பட்டது. கோட்டைகளில் நிலைபெற்றுள்ள துருப்புகளை மயங்கி விழும்படிச் செய்வதற்காக கந்தகமும் தாரும் சேர்ந்து எரிக்கப்பட்டன.

கோட்டைகளுக்குப் பக்கத்தில் அவைகளை எரிப்பதால் அதனாலுண்டாகும் புகையானது மயக்கத்தை உண்டுபண்ணுகிறது. விஷப்புகை உண்டுபண்ணும் விதத்தை பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் ரகஸ்யமாய் வைத்திருக்கிறார்களென்றும் அந்த தேசத்துக்கே ஆபத்து நேரிட்டாலொழிய அதை உபயோகிக்க மாட்டார்களென்றும் ஒரு ஆங்கில நிருபர் அறிவித்தார். ஆனால் இப்போது ஜெர்மானியர் அந்த கொடிய முறையை முதன் முதலாக உபயோகிக்கத் தொடங்கி விட்டார்கள். ஜெர்மானியர் பலவித உப்பையும் திராவகத்தையும் கலப்பதால் அந்த விஷப்புகையை உண்டுபண்ணி அதைக் குழாய் வழியாய் முன்புறத்தில் விட்டு விடுகிறார்கள். பிறகு முன்புறமாய்க் காற்றடிக்கும்போது அந்த விஷப்புகையையும் சேர்த்து அடித்துக்கொண்டு போகிறது. சத்துருக்களிருக்கிற திசையை நோக்கி காற்றடித்தாலொழிய அந்த விஷப்புகையை வெளியே விடக்கூடாது. அதைச் சுவாசிக்கிறவர்கள் மிகுந்த வேதனையுடன் இறந்து போகிறார்கள். அந்தப் புகையானது, அரண்களிலும் குகைகளிலும் பள்ளங்களிலும் வியாபித்து அங்கு ஒளிந்துகொண்டிருக்கிற துருப்புகளைச் சேதப்படுத்துகிறது. சமீபத்தில் பிரிட்டிஷாரும் விஷப்புகையை உண்டுபண்ணி சத்துருக்களைத் தாக்கினார்கள்.

அந்தப்புகையின் விஷத்தன்மையை நீக்குவதற்கு இரண்டுவித உபாயங்க ளிருக்கின்றன. துணிக்குள் சில திராவகங்களை வைத்து வாயையும் மூக்கையும் சுற்றிக் கட்டிக் கொண்டால் அதன் வழியாய் இழுக்கப்படும் காற்றானது விஷத்தன்மை யற்றதாய் விடுகிறது. ஜெர்மானியர் விஷப்புகையை வெளியே அனுப்பியவுடன் நேசத்துருப்புகளைத் தாக்குவதற்கு முன்புறஞ் செல்லுகிறார்கள்; அப்பொழுது அந்த ஜெர்மானியர் தங்கள் முகத்தை துணியால் மூடிக்கொண்டே செல்லுகிறார்கள்.

### நெருப்புக் குழம்பு

ஜெர்மானியர் எண்ணெயைப்போன்ற ஓர் திராவகத்துக்குத் தீவைத்து அதைக்குழாய் வழியாய் நேசத்துருப்புகளின் மீது பீச்சுகிறார்கள். அந்த திராவகமானது நேசத் துருப்புகளின் அரண்களில் நெருப்புக் குழம்பாகவந்து கொட்டுகிறது. தாரைக் கொதிக்கக் காச்சி குழாய் வழியாய்ப் பீச்சுவது முண்டு.

### நெருப்புப் பந்தங்கள்.

ஜெர்மானியர் இராக்காலத்தில் நேசத்துருப்புகளின் அரண்களைத் தாக்கும்போது, நேசத் துருப்புகள் நிலைபெற்றுள்ள பிரதேசத்தில் குறிப்பான ஓரிடத்தைத் தெரிந்து கொள்வதற்காக் நெருப்புப் பந்தங்களை எறிகிறார்கள். பீரங்கியிலிருந்து சுடப்படுகிற நெருப்புப் பந்தங்கள் விழுகிற இடத்தில் சிறிது தூரத்துக்குப் பிரகாசமாயிருக்கும். சாதாரண குண்டுகளிலும் பிரகாசிக்கத்தக்க வஸ்துக்கள் சேர்த்து செய்யப்படுகிறதுண்டு. அந்த குண்டுகள் வெடிக்கு மிடத்தில் மிகுந்த பிரகாசத்தை உண்டுபண்ணுகின்றன. ஆகாயத்தில் மெல்ல மிதந்து செல்லக்கூடிய விளக்குகள் பறக்க விடப்படுகின்றன. யுத்த கப்பல்களில் உபயோகிக்கப்படுகிற சோதனை விளக்குகள் போர்க்களத்திலும் உபயோகிக்கப்படுகின்றன.

### நூதனமான கண்ணாடிக்குழாய்.

துருப்புகள் பூமியில் அகழ் தோண்டி அதில் மறைந்துகொண்டிருந்தால், சத்துருக்கள் சண்டை செய்வதற்காக வெளியே வரும்போது சத்துருக்களின் நடமாட்டத்தை எவ்வாறு அறிந்துகொள்வது? அதற்காக நூதனமான கண்ணாடிக் குழாய் உபயோகிக்கப்படுகிறது. அது ஜலத்தில் முழுகிச் செல்லும் (சப்மரின்) கப்பல்களில் வைக்கப்பட்டிருக்கிற கண்ணாடிக் குழாயைப் போன்றது. சப்மரின் கப்பல் ஜலத்துக்கடியில் முழுகிச் செல்லும்போது, அக்கப்பலுக்குள்ளே யிருப்பவர்கள் கடலின்மீது நடமாடக்கூடிய கப்பல்களைப் பற்றி அறிந்து கொள்ளுவதற்காக அந்தக்குழாய் அமைக்கப்பட்டிருக்கின்றது. இப்போது அரண்களில் மறைந்துகொண்டிருப்பவர்கள் அந்தக் குழாயை அரண்களுக்குமேல் சற்று உயரத்தூக்கிப் பிடித்துக்கொள்கிறார்கள். அந்தக் குழாயின் இரண்டு முனைகளிலும் ஓர் வகைக் கண்ணாடிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அரண்களுக்குமேலே சற்றுத் தூக்கப்பட்டிருக்கிற முனையில் தரைமட்டத்திலுள்ள தோற்றமனைத்தும் விழுகிறது. அந்த குழாய்க்குள்ளிருக்கிற சில கண்ணாடிகளின் வழியாய் அந்தத் தோற்றம் பிரதிபலிக்கப்பட்டு, அந்தக்குழாயின் அப்புறத்திலுள்ள கண்ணாடியில் தெரியவருகிறது.

---

சேண்ட்டுகளுக்கெல்லாம் ராஜா.

# ஆட்டோ மோஹினி

ரிஜிஸ்டர் செய்தது.

மிகவும் மேன்மை பொருந்திய சந்தோ ... காமாக நீடித்திருக்கின்ற பரிமளம்.

இந்த அத்தரில் ஒரு துளி கைகுட்டையில் தெளித்துக்கொண்டால் சுபாவ சிருஷ்டியின்படி சூரியாஸ்தமனமான பிற்பாடு வாசனை மாறக்கூடிய நிஜமல்லி கையைப்போலல்லாமல் சூரியாஸ்தமனமான பிற்பாடும்கூட உத்ஸாஹமான வாசனையைத் தரக்கூடிய ஒரு கொத்து மல்லிகைப் புஷ்பம் உமது கையிலிருப்பதாகத் தோன்றும். அதுவுமல்லாமல் இதன்வாசனை 4-நாட்கள் வரையில் இருக்கும்.




இந்த ஆட்டோமோஹினியை முழு பிரயத்தனம் செய்த பிற்பாடு அநேக பொருட்காட்சிச் சாலைகளில் அது தன்னுடைய மனோஹரமான நீடித்த வாசனைக்காகவும், மல்லிகைப் பூவுக்குச் சமானமான வாசனைக்காகவும் பொன்வெள்ளி மெடல்கள் பரிசு பெற்று கீர்த்தி பெற்றிருக்கின்றது. யாராகிலும் இதன் வாசனை நீடித்திருக்காதென்று ருஜுப்படுத்தினால் 100 ரூபாய் இனாமளிக்கப்படும்.

| | |
|---|---|
| ½ அவுன்ஸ் சீசா 1-க்கு விலை ரூ. 2—0—0 | ½ டிராம் சீசா 1-க்கு விலை ரூ. 0—8—0 |
| 1 டிராம் சீசா 1-க்கு விலை ரூ. 0—12—0 | சாம்பில்புட்டி 1-க்கு விலை ரூ. 0—?—0 |
| | வாசனைக் கார்டு 1-க்கு விலை ரூ. 0—1—0 |

---

அத்தர்களின் ஊற்று என்றால் வேறொன்றுமல்ல ஆனால் உலகப் பிரசித்தி பெற்ற

(ரிஜிஸ்டர் செய்தது)

# ரோபீனியா

என்னும் கூந்தல் தைலம்.

இந்தப் பரிமளமான கூந்தல்தைலத்தை உங்கள் கூந்தலுக்கு உபயோகித்தால் இது கூந்தலை மிருது வாக்கி மினுமினுப்புக்கொடுத்து நீண்டதாக வளரச் செய்யும். ஒரு தட்வை உபயோகிப்பதினாலேயே மிக்க உத்ஸாஹமாகும் அநேக வித மலர்களின் வாசனையைத் தரக்கூடியது.

ஆகையால் இந்தத் தைலத்தை ஒரு புட்டி வாங்கி உபயோகித்தால் இதனுடைய உண்மை நன்கு விளங்கும்.

ஒரு புட்டியின் விலை ரூபாய் 1—0—0

**சோல் ஏஜெண்ட்டுகள்—**

**ஷா. பகவான் தாஸ் சுனிலால் அண்டு கம்பெனி,**

நெ. 177, சைனாபஜார் ரோட், மதராஸ்.

# தாக்ஷிணாத்ய கானம்.

## தியாகராஜ ஸ்வாமிகள் அருளிச்செய்த

## கீர்த்தனங்கள்.

மேற்படி கீர்த்தனங்கள் ஸரியான பாடத்துடனும் தமிழ் மொழி பெயர்ப்புடனும் விசேஷார்த்தங்களுடனும் ஸ்வரங்களுடனும் மாதாந்தர ஸஞ்சிகை ரூபமாக பிரசுரிக்கப் படுகின்றன.

முதல் மூன்று பாகங்கள் வெளியாயின, ஒவ்வொரு ஸஞ்சிகையிலும் டபிள் கிரௌன் 8-பக்க அளவில் 64 பக்கங்கள் அடங்கியிருக்கின்றன விலை அணா 12 தான். வி. பி. தபால் சார்ஜு வேறு. வேண்டியவர்கள் அடியிற்கண்ட விலாஸத்திற்கு எழுதிப்பெற்றுக் கொள்ளலாம்.

பக்தி ரஸத்துடன் கூடின ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி கீர்த்தனங்களை பலவித விகாரங்களுடன் பாடுவதைக் கேட்டிருப்பீர்கள். அவைகளின் நிஜஸ்வரூபம், மேற்படி புஸ்தகத்தைப் பார்த்தால்தான் தெரியவரும். ஒவ்வொரு ஸஞ்சிகையிலும் 12 கீர்த்தனங்களுக்கு குறையாமலும் அவருடைய சரித்திரத்தைப் பற்றி சில பாகங்களும் அடங்கியிருக்கும்

தாக்ஷிணாத்ய கான ஆபீஸ்,
117, அரமனைக்காரத்தெரு, சென்னை.

**SOUTH INDIAN MUSIC OFFICE,**
**117, Armenian Street, Madras.**

